திருச்சிற்றம்பலம்.

ஸ்ரீ தத்துவராய சுவாமிகளால்

மொழிபெயர்த்தருளிய

"சொரூபானந்த சித்தி" எனும்

# பிரமகீதை மூலமும்,

வித்தியாரணிய சுவாமிகளருளிச் செய்த

வடநூல் வியாக்கியானத்துக்கியைய

திருநெல்வேலியைச்சார்ந்த கோடகநல்லூரில் எழுந்தருளிய

ஸ்ரீ சுந்தர சுவாமிகள்

அருளிச்செய்த உரையும்.

திருத்துருத்தி இந்திரபீடம் கரபாத்திர சுவாமிகள் ஆதீனம்

ஸ்ரீமான் தண்டபாணி சுப்பராய ஆச்சாரிய சுவாமிகள்

மாணாக்கரில் ஒருவரான வேதாந்த பூஷணம்

மதுரை, எஸ். கந்தசாமி பிள்ளை யவர்களாலும்

தமிழ் வித்வானும் அத்வைத ஆராய்ச்சியாளருமாகிய

மதுரை, நா. கிருஷ்ணசாமி நாயுடவர்களாலும்

புதுக்கியும், திருத்தியும் விளக்கப்பெற்று,

மதுரை, புத்தக வியாபாரம்,

இ. மா. கோபாலகிருஷ்ணக் கோனாரால்

மதுரை, ஸ்ரீ மீனம்பிகை பிரஸில்

பதிப்பிக்கப்பெற்றது.

1936.



[விலை ரூ. 2

உ

ஓம் தத் ஸத்:

சாஸ்த்ர ரத்னமும், ப்ரம்ம நிஷ்டருமான,

# ப்ரம்மஸ்ரீ தேதியூர், ஸுப்ரமண்ய சாஸ்த்ரியவர்

# அவர்களின் அபிப்ராயம்.

## ஆஸ்திகர்களே! அத்வைதாபிமானிகளே!!

அறம், பொருள், இன்பம், வீடு என்ற நான்குவிதமான புருஷார்த்தங்களுள் தென்மொழியில் வீடு என்று சொல்லப்படும் மோக்ஷமே மேலான புருஷார்த்தமாகும். பரமார்த்தமான ப்ரம்ம ஸ்வரூபமாகத் தான் இருக்கும் நிலைமைதான் அந்த மோக்ஷமென்ற புருஷார்த்தமாகும். எப்பொழுதும் ஜீவன் பரமார்த்த ப்ரம்மந்தான். அவித்யையால் அது மறைந்ததுபோல் அனுபவத்திற்கு வராமல் இருந்துவருகிறது. வேதாந்த விசாரத்தால் உண்டாகும் ஜீவ ப்ரம்ம ஐக்கிய ஞானம் என்று சொல்லப்படும் அபரோக்ஷானுபூதியானது அந்த ஆவரணசக்தி ரூபமான அஞ்ஞானத்தை நாசம் செய்தவுடன் அந்த ப்ரம்ம பாவமானது ப்ரத்யக்ஷமாக ஸ்புரிக்க ஆரம்பித்துவிடும். அதுதான் பரம புருஷார்த்தமான மோக்ஷமெனச் சொல்லப்படும். அவ்விதமான மஹிமையுள்ள மோக்ஷத்தை அடைய ஐக்ய போதமே அந்தரங்க ஸாதனமாகும். ஐக்யபோதத்தை அடைகிறதற்கோ உபநிஷத் வாக்யங்களை விசாரிக்கவேண்டும். உபநிஷத்துக்களில் கடோபநிஷத்து மிகவும் முக்யமானது. அந்த கடோபநிஷத்தையும் ஸ்காந்த புராணத்தில் அடங்கிய ஸூதஸம்ஹிதையில் ஸ்ரீ வ்யாஸ பகவான் இலகும்படி எடுத்துரைத்துச் செவ்வனே அலங்கரித்திருக்கின்றார். முற்பாகங்களிலது முடிவுரையின்படி வடமொழியிலிருந்து தமிழில் மொழிபெயர்க்கப்பெற்ற அத்வைத கிரந்தங்கள் அநந்தமாயினும் அவற்றுள் மாத்துவப் பிராமணகுலத்தில் உதித்தருளிய ஸ்ரீ தத்துவராய சுவாமியவர்கள் செய்யுள் வடிவமாய் யாத்தருளிய கிரந்தங்களே பூர்வ ருஷிகளின் கருத்துக்களை ஒருசிறிதும் விடாமல் "இஃதோ வஃதோ" வென்று ஐயுறுதற்கொள்ளுமாறு அமைந்திருப்பனவாகும். அவற்றுள் இப்பிரமகீதையும் ஒன்றே. இதற்குத் தமிழில் உரைகள் அநேகம் இருக்கின்றன. ஆயினும் வித்யாரண்யஸ்வாமிகள் எழுதிய வடமொழி வ்யாக்யானத்தை அனுஸரித்தும் குருஸம்ப்ரதாய க்ரமத்தில் நழுவிவிடாமலும் ஸ்ரீ சங்கர பகவத் பாதாள் அவர்கள் பாஷ்ய மர்யாதையைப் புஷ்டித்துக்கொண்டும் விளங்கிவரும் தென்மொழி வ்யாக்யானமோ நமதாசார்யரான ஸ்ரீ அனுபூதி ஸ்வரூப ஸுந்தர ஸ்வாமி

உ

ஓம் தத் ஸத்:

# சாஸ்த்ர ரத்னமும், ப்ரம்ம நிஷ்டருமான,
# ப்ரம்மஸ்ரீ தேதியூர், ஸுப்ரமண்ய சாஸ்த்ரியவர்
# அவர்களின் அபிப்ராயம்.



## ஆஸ்திகர்களே! அத்வைதாபிமானிகளே!!

அறம், பொருள், இன்பம், வீடு என்ற நான்குவிதமான புருஷார்த்தங்களுள் தென்மொழியில் வீடு என்று சொல்லப்படும் மோக்ஷமே மேலான புருஷார்த்தமாகும். பரமார்த்தமான ப்ரம்ம ஸ்வரூபமாகத் தான் இருக்கும் நிலைமைதான் அந்த மோக்ஷமென்ற புருஷார்த்தமாகும். எப்பொழுதும் ஜீவன் பரமார்த்த ப்ரம்மந்தான். அவித்யையால் அது மறைந்ததுபோல் அனுபவத்திற்கு எட்டாமல் இருந்துவருகிறது. வேதாந்த விசாரத்தால் உண்டாகும் ஜீவ ப்ரம்ம ஐக்கிய ஞானம் என்று சொல்லப்படும் அபரோக்ஷாநுபூதியானது அந்த ஆவரணசக்தி ரூபமான அஞ்ஞானத்தை நாசம் செய்தவுடன் அந்த ப்ரம்ம பாவமானது ப்ரத்யக்ஷமாக ஸ்புரிக்க ஆரம்பித்துவிடும். அதுதான் பரம புருஷார்த்தமான மோக்ஷமெனச் சொல்லப்படும். அவ்விதமான மஹிமையுள்ள மோக்ஷத்தை அடைய ஐக்ய போதமே அந்தரங்க ஸாதனமாகும். ஐக்யபோதத்தை அடைகிறதற்கோ உபநிஷத் வாக்யங்களை விசாரிக்கவேண்டும். உபநிஷத்துக்களில் ஈசோபநிஷத்து மிகவும் முக்யமானது. அந்த ஈசோபநிஷத்தையும் ஸ்காந்த மஹாபுராணத்தில் அடங்கிய ஸூதசம்ஹிதையில் ஸ்ரீ வ்யாஸ பகவான் திலகம்போல் எடுத்தமைத்துச் செவ்வனே அலங்கரித்திருக்கின்றார். முமுக்ஷுக்களின் முறைமையின்படி வடமொழியிலிருந்து தமிழில் மொழிபெயர்க்கப்பெற்ற அத்வைத க்ரந்தங்கள் அநந்தமாயினும் அவற்றுள் மாத்துவப் பிராமண குலத்தில் பூத்தருளிய ஸ்ரீ தத்துவராய சுவாமியவர்கள் செய்யுள் வடிவமா யாத்துதவிய கிரந்தங்களே பூர்வ ஸூத்திரங்களின் கருத்துக்களை ஒருசிறிதும் விடாமல் "இஃதோ வஃதோ" வென் றிரும்பூதுகொள்ளுமாறு அமைந்திருப்பனவாகும். அவற்றுள் இப்பிரமகீதையும் ஒன்றே. இதற்குத் தமிழில் உரைகள் அனேகம் இருக்கின்றன. ஆயினும் வித்யாரண்யஸ்வாமிகள் எழுதிய வடமொழி வ்யாக்யானத்தை அனுஸரித்தும் குருஸம்ப்ரதாய க்ரமத்தில் நழுவிவிடாமலும் ஸ்ரீ சங்கர பகவத் பாதாள் அவர்கள் பாஷ்ய மர்யாதையைத் தழுவிக்கொண்டும் விளங்கிவரும் தென்மொழி வ்யாக்யானமோ நமது மஹான் ஸ்ரீ அனுபூதி நிகம ஸுந்தர ஸ்வாமி

கள் அவர்கள் இயற்றிய வ்யாக்யானந்தான் என்பதில் ஸந்தேஹமே இல்லை. அந்த வ்யாக்யானத்தைத் திருத்துருத்தி இந்த்ரபீடம் கரபாத்ர ஸ்வாமிகள் ஆதீனம் ஸச்சிதானந்த ஸ்வாமிகள் பரம்பரையைச் சார்ந்த ஸ்ரீமான் தண்டறை சுப்பராய ஆசார்யஸ்வாமிகள் மாணுக்கர்களில் ஒருவரான வேதாந்தபூஷணமும் அனுபவநிஷ்டருமான மதுரை ஸ்ரீ எஸ். கந்தசாமி பிள்ளை அவர்களும், மதுரைத் தமிழ்வித்வானும் அத்வைத ஆராய்ச்சியாளருமான ஸ்ரீ. நா. கிருஷ்ணசாமி நாயுடு அவர்களும் சோதித்து வெளியிட்டிருக்கும் ஸூதஸம்ஹிதை ப்ரமகீதை மூலமும் விளக்க உரையும் என்ற புஸ்தகத்தை நான் நன்ருய்ப் பார்வையிட்டேன். அதிலுள்ள விஷயங்கள் பிரத்தியட்சம் சாஸ்த்ர மர்யாதையை ரக்ஷிக்கிறதாயும் சோதித்தவர்களின் அனுபூதி நிலைமையை விளக்கிக்காட்டுகிறதாயும் லோகத்திற்கு ஒருவிதமான பரமோபகாரரூபமாயும் இருப்பதாக இந்த நூலை நான் தீர்மானம் செய்தேன். சாஸ்த்ர ஆராய்ச்சி இல்லாத மந்தாதிகாரிகளும் இதைப் படித்து மோக்ஷாநந்தத்தை ஸுலபமாய்ப் பெறலாம். என் பார்வைக்கு இந்தப் புஸ்தகம் வந்ததும் என் புண்ய கர்மாவின் பரிபாகமென்றே நான் நினைத்தேன். இந்தக் கலிகாலத்தில் விவேகம் குறைந்து சாஸ்த்ர ஆராய்ச்சி இல்லாமல் ஜநநமரண ஸாகரத்தில் முழுகித் தபித்துவருகிற ப்ராணிகளுக்கு ஸம்ஸாரஸாகரத்தைத்தாண்டி மோக்ஷமென்ற கரையை அடைய இந்தநூல் ஒரு தெப்பமென்றே நான் கருதுகிறேன். ஒவ்வொரு மானிடரும் இந்தப் புஸ்தகத்தைப்படித்து ஜந்ம ஸாபல்யத்தை அடையவேண்டியது அவச்யமாகும். ஆகையால் புண்ய ஜனங்கள் இந்தப் புஸ்தகத்தைத் தவருமல் வாங்கிப்படித்து விவேகத்தை ஸம்பாதித்துக்கொண்டு பரமபுருஷார்த்தத்தையும் அடைய முன்வர வேண்டும். இத்தகைய அரிய ஞானநூலை அது அருகிப்போகாவாறு பெரியமனது வைத்துப் பொருட்செலவையும் பாராமல் வல்ல பண்டிதர்களைக்கொண்டு மறைபொருளை விளக்கியும், நிறைபொருளைத் துலக்கியும் நல்ல காகிதங்களில் சுத்தப்ரதியாக அச்சிட்டு உதவிய மதுரை, பிரபல புத்தக வர்த்தகர், ஸ்ரீமான் இ. மா. கோபாலகிருஷ்ணக் கோனுர் அவர்களது நன்றியை நந்தமிழ்நாடு என்றும் மறவாதென்பது ஒருதலை.

அறம்பொரு ளின்பம்வீ டாயவோர் நான்கின்
றிறந்தெரிந்திங் கோன்றக்கிச் சிந்தை—கறங்கென்ன
வாடாது நிற்றற் கருநெறியேல் லாமறையிற்
கோடா தளிப்போன் தரு.

சாஸ்த்ர ரத்னம்,
தேதியூர், ஸுப்ரமண்ய சாஸ்த்ரியர்.

ஸ்ரீ

ஓம் தத்சத்.

# முகவுரை.

மதுரைத் தமிழ்ச்சங்கத் தலைமைத் தமிழாசிரியரும்
செந்தமிழ்ப் பத்திராதிபரும் மஹா வித்வானுமாகிய,

## பிரம்மஸ்ரீ. திரு. நாராயணையங்கார் அவர்கள் எழுதியது.

பூவுலகத்திற் பிறந்திறந்துழலும் ஜீவராசிகளுள் மக்கட்பிறப்பிற் புண்ணிய மிகுதியுடையார் அவரவர் தகுதிக்கேற்றவாறு கடவுள்வழி பாடு புரிந்து நன்ஞானங் கைவந்துய்யு நெறிகளை வைதிக சமயாசாரி யர்கள் பலவழியாக வகுத்து விரித்துரைத்திருக்கின்றனர். அந்நெறி களெல்லாம் ஒருவரால் ஆராய்ந்தறிந்து சீர்தூக்கி இந்நெறியே நன் னெறியென்று கடைப்பிடித்தற் கியலாதன வென்றும், அவை யொவ் வொன்றும் ஓரோராற்றால் உய்வடைதற்குரிய நன்னெறி யென்றும் உயர்ந்தோரால் கொள்ளப்பட்டன.

கல்வியிற் பெரிய கம்ப நாடரும்

"ஒன்றே யென்னி னொன்றேயாம் பலவென் றுரைக்கிற் பலவேயாம்
அன்றே யென்னி னன்றேயாம் ஆமென் றுரைக்கி னாமேயாம்
இன்றே யென்னி னின்றேயாம் இலதென் றுரைக்கி னிலதேயாம்
நன்றே நம்பி குடிவாழ்க்கை நமக்கிங் கென்னோ பிழைப்பம்மா."

என்று எல்லா நெறிகளையும் உய்யுமுபாயமாகக் கூறியுள்ளார்.

ஆயினும் அவற்றுள் முதலாவதாக எண்ணப்பட்ட அத்வைத சித்தாந்தத்தின் உண்மையுணர்வை அளித்தற்குரிய எத்துணையோபல ஞான நூல்கள் தமிழ் மொழியிற் பண்டு இருந்து விளங்கின வென் பதைச் சிவப்பிரகாசப் பெருந்திரட்டில் எடுத்தாளப்பட்ட நூல்களின் பெயர்களால் அறியலாம். அவற்றுள் எஞ்சி நின்றனவாகிய சிற்சில நூல்களில் பிரமகீதை, ஞானவாசிட்டம் முதலிய சில நூல்களின் அச்சுப்புத்தகங்கள் அகப்படாது மறைதற் கடியெடுத்துவைக்கும்

இத்தருணத்தில் பிரமகீதை என்னும் இந்நூலைப் புத்தகவர்த்தகத் திற் பெயர்பெற்றவரும் பலநூற் பதிப்பாளருமான மதுரை ஸ்ரீமாந். இ.மா.கோபாலகிருஷ்ணக்கோனாரவர்கள் தக்கபண்டிதர்களைக்கொண்டு பரிசோதித்து அச்சிட்டு வெளியிட்டிருப்பது பாராட்டத்தக்கது.

இந்நூல், வடமொழியினின்றும் பிராமணகுலத் துதித்த அத்வைத சித்தாந்த சீலரான வீரமாநகர் தத்துவராய சுவாமிகளால் தமிழில் ஐந்நூறு செய்யுட்களுடையதாக மொழிபெயர்க்கப் பெற்றது. அதற்கு அந்தணர் குலத்தில்வந்த கோடகநல்லூர் ஸ்ரீ சுந்தரசுவாமிகள் வரைந்தருளிய உரையும் சேர்க்கப்பெற்றிருக்கிறது. இந்நூலும் உரையும் உபநிடதப் பொருள்களை யுட்கொண்டிருத்தலால் வைதிகத்தில் சிரத்தையுடைய பேறிவாளர்களால் மிகவும் பாராட்டத்தக்கனவாகவும், பாராட்டி வருவனவாகவும் இருக்கின்றன.

இந்நூலை அச்சிடுங்கால் செய்யுட்களைச் சீர்பிரித்துப் பதப் பொருள்களை எளிதிலறியுமாறு அவ்வப் பதங்களின் நேர்முகமாகப் பிரதிபதங்களை யமைத்து யாவரும் எளிதிலுணரும் வண்ணம் ஆங்காங்கு விசேட விளக்கமும் பல செய்யுட்களுக்கு விரிந்த அவதாரிகையும் செவ்விதினியந்து சேர்ப்பித்த மதுரை, வேதாந்த பூஷணம் ஸ்ரீமான் எஸ். கந்தசாமி பிள்ளை யவர்களும், மதுரை, தமிழ்வித்துவானும் அத்வைத ஆராய்ச்சியாளருமான திரு. நா. கிருஷ்ணசாமி நாயுடு அவர்களும் இப்புத்தகப் பதிப்பிற்கு உதவிபுரிந்த பரோபகாரம் பாராட்டற்பாலது. நாயுடவர்கள் பல அத்வைத நூல்களில் தெளிந்த ஆராய்ச்சியுள்ள ஓர் பேரறிவாள ரென்பது அவர் எழுதியுள்ள ஞானத்திருக்குறளுரை, பகவற்கீதையின் அவதாரிகை முதலிய நூல்கள் நன்கு புலப்படுத்தும்.

இன்னும் இவ்வாறே இவர்கள் ஞானவாசிட்டம் முதலிய பிறநூல்களையும் ஆராய்ந்து செப்பஞ்செய்து வெளியிடுமாறு எல்லாம் வல்ல இறைவன் திருவருள் பாலிப்பதாக.



ஓம்தத்சத்.

# சிறப்புரை.

வடமொழியிலிருந்து தமிழில் மொழிபெயர்க்கப்பெற்ற அத்வைத நூல்கள் அனந்தம். அவற்றுள் மாத்துவப் பிராமண குலத்தில் ஞானமூர்த்தியாய் அவதரித்தருளிய ஸ்ரீதத்துவராய சுவாமிகளால் வடமொழிச் சூதசம்கிதையிலிருந்து தமிழில் செய்யுள் வடிவமாக மொழிபெயர்க்கப்பெற்று அந்தணர் குலத்தில் வந்துதித்த ஸ்ரீ சுந்தர சுவாமிகளால் வியாப்பிய வடிவமாக உரைகாணப்பெற்ற பெரிய நூலாகிய பிரமகீதையைப்பற்றி இப்பிரபஞ்சம் நன்குணரும்.

உலகநூற் பெருங்கடலாகிய தொல்காப்பியம் முதல் கம்பர் காப்பியம் வரை கரைகண்ட தமிழ்ப்பெரும் புலவரேனும் அறிவுநூற் பெருங் கடலாகிய அத்வைத ஞானநூல்களை ஆராய்வதென்றால் அவர்களுக்கும் அது சிறிது அரிதென்றுதான் முடிவுரைத்தல் வேண்டும். அங்ஙனம் உலகநூல் கற்பதோடுமாத்திரம் நின்றுவிடாமல் அறிவுநூல் கற்று ஐயத்தினீங்கியோர் பெருமையை விளக்குதற்கு

"அலகுசால் கற்பி னறிவுநூல் கல்லாது
உலகநூ லோதுவ தெல்லாம்—கலகல
கூஉந் துணையல்லாற் கொண்டு தடுமாற்றம்
போஒந் துணையறிவா ரில்."

என்னும் நாலடிச் செய்யுளே சாலச்சிறந்த சான்றாகும்.

இந்நூல் சிரவணமனன நிதித்தியாசன ஆன்மவிசார அதிகாரிகளே அன்றி அனான்மவிசார சமுசாரிகள் விரும்பாதுபோன காரணத்தால் விக்கிரயமாதல் மிக்கரிதாகவே பதிப்பாளர்களில் இதனை மதிப்பாரில்லாமல் வாசிட்டத்தைப்போன்றே இதுவும் கிடைத்தற்கரிதாய் மறைதற் கடிகோலிவிட்டது. இவ்வாறு அடிகோலி அருகுந் தறுவாயிலிருந்த இந்நூலை மீண்டும் உலகிற் பெருகி மிளிருமாறு செய்த பெற்றியும் புனிதமும் மதுரைப் பிரபல புத்தக வர்த்தகரும் பன்னூற் பதிப்பாளருமாகிய ஸ்ரீமான் இ. மா. கோபாலகிருஷ்ணக் கோனார் அவர்களைச்சாரும். இன்னார் பேருதவி என்றும் மறக்கற்பாலதன்று.

இந்நூலை அச்சிடுங்கால் செய்யுட்களைச் சீர்பிரித்து உரைகளை அவ்வப் பதங்களுக்கு நேர்முகமாக எழுதி எவரும் எளிதிலுணரும் வண்ணம் ஆங்காங்கே விசேஷ விளக்கமும் சிலபல செய்யுட்களுக்கு விரிந்த அவதாரிகையும் சேர்ப்பித்துச் சுத்தப்பிரதியாம் புத்தமாக்கிய ஸ்ரீமான்கள் வேதாந்த பூஷணம் மதுரை ஸ்ரீ. எஸ். கந்தசாமி பிள்ளை அவர்களையும், தமிழ் வித்வானும் அத்வைத ஆராய்ச்சியாளருமாகிய ஸ்ரீ. நா. கிருஷ்ணசாமி நாயுடவர்களையும் நின்று நிலவும் நமது ஞான பூமி என்றும் மறவா தென்பது ஒருதலை.

இத்தகை அரியபொருள் நிறைந்த அத்வைதக் கிரந்தங்களில் ஒன்றாகிய, முமுட்சுக்கள் பாராயணஞ் செய்தற் கத்தியாவசியமான இந்நூலில் இலைமறை காய்போல் தெளிதற் கரிதாயிருக்கும் இடங்கள் தோறும் அவற்றை அறிதற்கெளிதாமாறு ஆங்காங்கே துலக்கிவைத்த நமது பிள்ளையவர்கள், நாயுடவர்களது மனப்பாங்கும் மதிநுட்பமும் அறிஞரறிந்து அகமகிழத்தக்கன. நாயுடவர்கள் பல அத்வைத நூல் களில் நன்கு ஆராய்ச்சிபெற்ற ஓர் பேரறிஞரென்பது அவர் எழுதி யுள்ள ஞானத்திருக்குறளுரை, பகவற்கீதையின் அவதாரிகை முதலிய நூல்கள் நன்கு புலப்படுத்தும்.

இதுபோலவே இவர்கள் வாழ்விற்குரிய வாசிட்டத்தையும் புத்துயிர் தந்து புதுப்பிக்கும் வண்ணம் அத்தன் அருள்புரிவாராக.

இங்ஙனம்,

பிரம்மஸ்ரீ பிரம்மானந்த சுவாமிகள் பாதசேவை

சிவானந்த சுவாமி,

ஸ்ரீகாசி.



உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# சிறப்புப்பாயிரம்.



## வையை - இராமஸ்வாமி ஐயரியற்றிய செய்யுட்கள்.

சீர்வளருங் கயிலையினிற் சிவபிரான் றிருவருளாற் றிகழ்வன் றொண்ட
ரேர்வளரு முனைப்பாடி நாடுபுகழ் நீடவுதித் தின்றேன் மல்கு
மார்வளருந் தொடைச்சோழ நாடோங்க வாரூரி லமர்ந்து பன்னாட்
கார்வளரும் பொழிற்சேர நாடுநலம் பெறப்பலநாட் களிப்பின் வைகி.

திகழ்பாண்டி நாடுமிசை பெறப்பலநா
ளமர்ந்தருளாச் செயலை யெண்ணிப்
புகழோங்க மீண்டுமவ தரித்தாங்கந்
நாடதனிற் பொருளை நீத்து
நிகழ்வோங்கு மலைக்கையாற் றாளமணி
நிரைகரையி னிறைக்கக் கண்டார்
மகிழ்வோங்க விளங்குதிருக் கோடகநல்
லூர்செய்த மாதவத்தால். (2)

சுருதிமுடி வின்பொருடான் பரமாத்து
விதமென்றே துணிந்தெல் லாருங்
கருதிமுடி வில்லாத பேரின்ப
நிலையடைந்து களிக்க மேன்மை
தருதிருநீற் றின்மகிமை யுலகெலாந்
தழைந்தோங்கச் சாரஞ் ஞானம்
வருதிமிரங் கதிர்கண்டாங் கிரிந்தொழிய
வந்தணர்த மரபிற் றோன்றி. (3)

மான்காட்டி மான்பிடித்தன் மானவே
நம்போலோர் வடிவந் தன்னைத்
தான்காட்டிக் காண்பவெலாந் தனிற்பிறிதன்
றெனவெவர்க்குந் தகவாற் காட்டி
யூன்காட்டு முடல்பொய்யென் றுணர்விலே
னுணரும்வகை யுணர்த்த வந்து
தேன்காட்டு மொழிகாட்டுஞ் சுந்தரதே
சிகனெனவத் திருப்பேர் தாங்கி. (4)

களமருவுங் களமுடையான் புராணமோ
ரீரைந்துட் காந்தந் தன்னில்
வளமிகுசங் கிதையாறுட் சூதசங்
கிதைதன்னின் மகிழ்ந்து முன்ன
மளவுறுமண் டர்க்கயன்சொல் லியவாறே
தத்துவரா யப்பேர் பூண்டான்
கிளர்வுறுதண் டமிழ்ச்சொல்லால் விளங்கவுரைத்
தருள்பிரம கீதை தன்னை. (5)

அம்புயா தனனமரர்க் குரைக்கும்போ
தமலனெழுந் தருளிச் செய்தாங்
கும்பர்கா ளிப்பொருண்மெய் யெனத்திருவாய்
மலர்ந்தந்நா ளுகந்த தொப்ப
இம்பர்யா வருமெளிதி னுணர்ந்தையந்
தீர்ந்தின்ப மெய்து மாறு
பம்புசீர் வடநூலுக் கியைந்திடவே
நயந்தவுரை பண்ணி னானே. (6)



திருச்சிற்றம்பலம்.

# மோக்ஷ சாதனக் கிரமம்.

---

## சோபான பஞ்சகம்.

வேதநித்த மோத வேண்டும் அதுவிதித்த கன்மமே
விருப்ப மோடு செய்ய வேண்டும் அது கொடீசன் பூசனை
நீதிலா தியற்ற வேண்டும் காம்ய கன்ம புத்தியைத்
தெகிக்க வேண்டும் பாவபுஞ்சம் உதற வேண்டும் பவசுக
மீதனித்த மாதிதோட மிகவுங் காண வேண்டும்பின்
மெய்யுணர் வனந்த வின்ப ஆன்மரூபம் அடையமெய்க்
காதல்செய்ய வேண்டுந்தன் மனையை விட்டு வெளியிலே
கடுகவோட வேண்டும் நடன ராசனருளை வேண்டியே. (க)

சாதுசங்கம் பண்ணவேண்டும் சாம்ப மூர்த்தி பத்தியைச்
சலனமின்றிச் செய்யவேண்டும் சாந்தி தாந்தி யாதியைக்
கோதிலாமற் பழக வேண்டும் பின்புகன்ம மியாவையுங்
குற்ற மென்று நீக்கவேண்டும் குறைநிறைந்த தேசிகன்
பாத பத்மஞ் சாரவேண்டும் அவன்ற னேவற் பணிவிடை
பத்தியோடு பண்ணவேண்டும் பிரண வாக்க ரந்தனை
ஆதரத்தோ டடைய வேண்டும் சுருதி யீறின் வாக்கியம்
அனைத்துங் கேட்கவேண்டும் நடனராச னருளை வேண்டியே. (உ)

அந்தவாக்கி யார்த்தமே விசாரஞ் செய்ய வேண்டும்பின்
ஆரணுந்த பட்சங்கைப் பிடிக்க வேண்டும் பின்புநற்
புந்தியால் குதர்க்கந் தன்னைத் தள்ளவேண்டும் சுருதிக்குப்
பொருந்து தர்க்க மேவவேண்டும் பின்பு சத்ய ஞானவான்
அந்தப்பிரமம் நானே யென்று நினைக்கவேண்டும் நாடொறும்
நவில்கருவங் கெடுக்க வேண்டும் தேகம்நா னெனும்மதி
சந்தியாதே மாற்ற வேண்டும் அறிஞரோடு வாதமும்
சாந்தமாக்க வேண்டும் நடன ராசனருளை வேண்டியே. (ங)

பின்னுஞ் சுற்று ரோகந்தன்னைத் தீர்க்கவேண்டும் நாடொறும்
பிச்சையன்ன அவுடதத்தை உண்ண வேண்டும் இட்டமாம்
அன்னவிச்சை நீக்கவேண்டும் ஆரம்பித்த கன்மத்தால்
அத்தம்வந்த அன்னமாதி கொடுமகிழ வேண்டும்பின்

மன்னுதாசி னத்துவம் விரும்ப வேண்டும் லோகத்தின்
மருவு நிட்டூ ரந்தயைகண் மாற்றவேண்டுஞ் சீதமும்
பன்னுதாப மாதியும் சகிக்கவேண்டும் வீண்சொலும்
பரிகரிக்க வேண்டும் நடன ராசனருளை வேண்டியே. (௪)

சுத்தமான தேசத்தில் சுகாதனத் திருக்க வேண்டும்
சூக்கவத்து வின்மனத்தைச் சேர்க்க வேண்டும் பின்புநம்
அத்தனும் நடேசன் தந்த அருளினு லகண்டமாம்
ஆன்மரூபங் காணவேண்டும் அவற்றினல் சகத்தைவா
தித்ததாக நோக்கவேண்டும் சஞ்சித மனைத்தையும்
தீர்க்கவேண்டும் ஞானவலியி னுலேபாவி கன்மமோ
டொத்த சங்கம் விடுக்கவேண்டும் இங்ஙனே பிராரத்தம்
உண்ண வேண்டும் பின்புபிரம மாயிருக்க வேண்டுமே. (௫)

## குரு கீதை.

நித்யா நந்தம் பரம ஸுகதம் கேவலம் ஜ்ஞாந மூர்த்திம்
விஸ்வா தீதம்ககந சதருஸம் தத்வமஸ்யாதி லக்ஷ்யம். 1

ஏகம் நித்யம் விமல மசலம் ஸர்வதீ ஸாக்ஷிபூதம்
பாவா தீதம் த்ரிகுண ரஹிதம் ஸத்குரும் தம்நமாமி. 2

அஜ்ஞாந திமிராந் தஸ்ய ஜ்ஞாநா ஞ்ஜந ஸலாகயா
சக்ஷுருந் மீலிதம் யேந தஸ்மை ஸ்ரீகுரவே நம: 3

அகண்ட மண்டலா காரம் வ்யாப்தம் யேந சராசரம்
தத்பதம் தர்சிதம் யேந தஸ்மை ஸ்ரீகுரவே நம: 4

த்யாநமூலம் குரோர் மூர்த்திம் பூஜாமூலம் குரோ: பதம்
மந்த்ர மூலம் குரோர் வாக்யம் முக்திமூலம் குரோர் க்ருபா. 5

மந்நாத: ஸ்ரீஜகந் நாதோ மத்குரு: ஸ்ரீஜகத் குரு:
ஸ்வாத் மைவ ஸர்வபூ தாத்மா தஸ்மை ஸ்ரீகுரவே நம: 6

சைதந்யம் ஸாஸ்வதம் ஸாந்தம் வ்யோமா தீதம்நி ரஞ்ஜநம்
நாதபிந்து களா தீதம் தஸ்மை ஸ்ரீகுரவே நம: 7

குருர் ப்ரஹ்மா குருர் விஷ்ணு: குருர் தேவோ மஹேஸ்வர:
குருஸ் ஸாக்ஷாத் பரப்பிரஹ்ம தஸ்மை ஸ்ரீகுரவே நம: 8



சிவமயம்.

# விவேக சட்கம்.

அனித்திய பூதத் தேகநா னன்று விந்தியத் தாங்கநா னன்று
நனித்தவாங் கார பிராணவர்க் கங்க ளன்றுநற் புத்தியு மன்று
தொனித்திடுந் தார மனைசெல்வங் களுக்குத் தூரமாஞ் சாட்சிநா னென்றுந்
தனித்துநித் தியமாய்ப் பிரத்தியகான் மாவாந் தற்பதப் பொருளதாஞ்சிவோகம்.

உற்பவன் விருத்த னன்றுநா னோர்கா லத்தினும் நசிப்பவ னன்று
அற்பமாந் தேக காரிய மான அவையெலா மகங்காரத் தல்லால்
தற்பத வடிவாஞ் சின்மய மான எனக்கிலை சகளநிஷ் களமா
யெப்புறத் தேனு மெல்லையற் றிருக்கும் இன்பசிற் சொரூபமாஞ் சிவோகம். (2)

சத்திய ஞான னந்தமாம் பிரமத் துதித்திடு மாயையிற் சனித்த
மெத்துமிவ் வுலகஞ் சேதனத் திடையே நசிக்கும தேதென விளம்பிற்
தத்துசொப் பனமுஞ் சுழுத்தியி லசத்தாந் தன்மைபோற் சத்திலா திருக்குஞ்
சுத்தபூ ரணமாய் நித்திய மாகித் துலங்கிய சொரூபமாஞ் சிவோகம். (3)

பழுதைதன் னிடத்திற் பாம்புதோன் றுதல்போற் பரப்பிர மத்திடை யதனிற்
கழிதரு மஞ்ஞா னத்தினுற் சீவ னுதித்திடக் கண்டவ னொருவன்
பழுதையென் றதனுற் சர்ப்பமோ கமும்போய்ப் பழுதையாய்க் கண்டது போல
வழுவில்தே சிகனூர் சீவனீ யன்றென் றறைந்திட வாகினேன் சிவோகம். (4)

எமக்குமன் னியமா முலகமொன் றில்லை யெவ்வுல கங்களெம் மிடத்திற்
சமித்துவுற் பவமா மாதலான் மாயை வடிவம தேதெனிற் சாற்ற
வமைத்தகண் ணாடி விம்பமா நிழல்போல் அடங்கியெம் மிடத்தினில் விளங்குந்
தமத்துவ மில்லாச் சச்சிதா னந்த தற்பத விமலமாஞ் சிவோகம். (5)

சாக்கிர மதனி லிந்திரியங்கள் தமக்குமேற் சாட்சியாஞ் சிவோகம்
தேக்குசொப் பனத்தி லுலகரு பமதாய்ச் செய்மனச் சாட்சியாஞ் சிவோகம்
தாக்கிய சித்த நாசமாஞ் சுழுத்தி யவத்தையிற் சாட்சியாஞ் சிவோகம்
நீக்கமில் துரியா னந்தமாஞ் சர்வ நிர்மல சாட்சியாஞ் சிவோகம். (6)

விவேக சட்கம் முற்றிற்று.



சிவமயம்.

# சொரூபானு சந்தான துதி.

தானந்த வழியாக மாதியி னாலே தன்மனச் சுத்தியைப் பெற்றுச் சமஸ்த
ஆன சுகத்திலுந் துச்ச மதியால் ஓதும் விராக மடைந் திந்தப் பந்த
மான வினைக ளனைத்துந் துறந்திங் கந்தண ராதிக ளியாதொன்றைப் பெற்றார்
மோன சதானந்த பூரண நித்த முத்த பரப்பிர மம்மது நானே. (1)

சத்துப் பிரமத்தி னிட்டை யடைந்து சாந்த மதியாய்த் தயாநிதி யான
உத்தமவாசானை யாராதித் தன்பால் உள்ள சொரூபத்தை யோர்ந்தவன் முன்பாய்ச்
சுத்த மதியாலே தியானித்து மேலோர் சொச்சொ ரூபமாக யாதை யடைந்தார்
சத்துச் சித்தானந்த பூரண நித்த சாந்த பரப்பிர மம்மது நானே. (2)

நித்த நிரூபாதி யானந்த மாகி நின்மல ஞான சொரூப வொளியாய்
இத்தனை யாகிலு மிச்சக மென்னும் இயம்பலு மில்லாத பூரண மான [னாலே
அத்தன்மைத் தாகின யாதொன்றை மேலோர் அகம்பிர மம்மென்னும் விர்த்தியி
தொத்தர வில்லாச் சொரூபமாய்ப் பெற்றார் துரிய பரப்பிர மம்மது நானே. (3)

யாதை யறியாத தாலிச் சகத்து யாவையுந் தோன்றிடுஞ் சத்தியம் போல
யாதைத்தற் சொரூப மாக வறிந்தால் யாவு முடனிங்ஙன் தோன்றிட மாட்டா
ஓதுமனோவாக்கு யாதொன்றி னாலும் உன்னி யுணர்ந்தோத வொண்ணாததான
தீதிலாப் பூரண சுத்த விமுத்த திவ்விய பரப்பிர மம்மது நானே. (4)

எந்தம கானந்த வாரிதி தன்னில் எழுந்திவ லைகொண் டெல்லாச் சகத்துஞ்
சந்தத மாகச் சுகமுறு மற்றுஞ் சலியா விளங்கிடு மியாதொன்றைப் பற்றி
இந்தச் சடசக மியாவும் விளங்கும் இயாதை விசாரிக்கும் போதுமற் றெல்லாத்
தொந்தமுந் தள்ளத் தகுவதே யாகுந் தூய பரப்பிர மம்மது நானே. (5)

எந்த மகானந்த சிந்துவி லெப்போ தீனமில் லாத சமாதிப லத்தாற்
சிந்தனை யாதொன்று மில்லாமற் சீவன் சீரோதகம் போல லீனனு மப்போ
தந்தமி லாத வவித்தை விலாச மாகின விச்சக மியாவையுந் தோன்று
விந்தவி சித்திர மியாதொன்றி னாலாம் என்றும் பரப்பிர மம்மது நானே. (6)

இந்தச் சொரூபானு சந்தான ரூப வின்பத் துதிதனை யாதர வோடும்
எந்தப் புருடனற் பத்தியி னோடும் ஏகாக் கிரசித்த னாகப் படிப்பான்
எந்தப் புருடனு மந்தப் படியே இந்தத் துதிதனை நித்தமுங் கேட்பான்
அந்தப் புருட னகண்டப் பிரம மாகுவ னப்படி வேதம் பிரமாணம். (7)

சொரூபானு சந்தான துதி முற்றிற்று.



ஓம்
தத் சத்.
கணபதி துணை.
திருச்சிற்றம்பலம்.

# பாயிரம்.

## கணபதி துதி.

அத்தி முகவனை மத்தன் மதலையை
நித்த நினைபவர் முத்தி பெறுவரே. (1)

## சுப்பிரமணியர் துதி.

ஆறு முகவனை நாறு மலர்கொடு
கூறு மடியவர் பேறு பெறுவரே. (2)

## குரு வணக்கம்.

### வெண்பா.

அடியேனை யாள அருண்மேனி சாத்திப்
படிமீது வந்த பரனே—கொடியேனென்
றெண்ணா திமைப்பளவி லிங்கனே வீடளித்த
கண்ணாரு கடைபோகக் கா. (3)

இரவியும் மதியும் வானும் வாயுவு மனலு மப்பு
முரவிய மண்ணு மற்றை யுணர்பவன் றானு மாகிப்
பரவிடுங் காணம் பன்னான் காயுமன் றாயு நின்றே
யுரைமன மிறந்து ளோங்கு மொளியினை வணங்கல் செய்வாம். (4)

கண்முதற் புலன்க ளந்தக் கரணங்கள் விளங்கு மெத்தாற்
றண்மதி யருக்க னங்கி தாரகை விளங்கு மெத்தால்
விண்முதற் பூதமியாவும் விளங்கிடு மெத்தா லந்த
உண்மையைச் சிவப்ரகாச வொளியினை யுளத்துள் வைப்பாம். (5)

முன்னைநற் சுருதி யோதி முடிவுறற் கரிய தாக
வின்னமத் தேவர் மூவ ரெய்துதற் கிடரே மேவத்
தன்னையிப் படியே காணத் தாளளித் தெனக்கோர் வார்த்தை
சொன்னநற் சொரூபா னந்தச் சோதியைத் தொழுதல் செய்வாம். (6)

வேறு.

நித்த னிர்க்குண னின்மல னீடொளிச்
சுத்த னேகன் சுருதித் தொடர்பிலா
னத்த னென்னையு மாண்ட வருளினன்
தத்துவன் றிருத் தாளை வணங்குவாம். (7)

நூற் பெயர்.

மயலில் வானவர் கேட்ப மயக்கற
வயன்மு னுட்சொன வாரணத் துட்பொரு
ளியலு மாசொரூ பானந்தச் சித்தியென்
பெயரி னற்றமி ழாலிங்குப் பேசுவாம். (8)

அவையடக்கம்—வேறு.

தானு காதி யாவையுமாந் தன்மைத் தாய வொரு பொருளை
யூனு மென்றன் வாக்கதனு லுண்மை யறிய வுரைத் திடுதன்
மானா கந்தான் மலர்தலையில் வையந் தரிப்ப மற்ற துபோற்
பூநா கந்தான் பொறுப்பனெனும் புன்சொற் போலும் புகலுங்கால். (9)

## அத்தியாய முறை.

வேறு.

மன்னிய கமலத் தோன்றுள் வானவர் வணங்கி யெல்லாம்
பண்ணரு மறை யருத்தம் பகரென வினவு மாறு
முன்னதின் மொழிந்து பின்னர் முளரியந் தவிசின் மேலோ
னின்னிய விருக்கி லேத ரேயம தியல்பு மாறும் (10)

வேறு.

வான்முன் முதலா மனைத்துலகும் வானோர் முதலாம் வருபிறப்பு
மீன்று னெசுரிற் றைத்திரிய மியல்பும் பரிசை யியம்பிடுவார்
மூன்று மோத்தி லுரைத்தாதி மூலப் பிரமந் தனைத்தேடச்
சான்றோர் சொன்ன நெறியைவிடாச் சதுர்த்தத் தாலே சாற்றியபின்

சந்தோ கத்திற் சட்டந்தா னுரைக்கும் பரிசைச் சதுர்முகத்தோ
னேந்தா மோத்தி லுரைத்தாறி லேழு மெட்டு மாங்கறைந்தான்
மைந்தார் முண்டங் கைவல்லிய மறையின் பொருளை வையமெலாந்
தந்தான் சத்த மத்தாலு மட்ட மத்துஞ் சாற்றியபின் (12)

வேறு.

அன்பினு லகில லோகம் படைத்தவ னமரர் தங்கட்
கின்பமார் பிரக தாரண் யத்திசை மைத்திரி யத்தை
யொன்பதா லுரைத்துப் பத்தா லுடத்தமுங் கார்க்கி தானும்
பின்பதா யந்தரி யாமிப் பிராமண விடயம் பேசி (13)

வேறு.

தாதா வேகா தசந் தன்னிற்
றக்கோர் சொல்லுங் கடவல்லி
சுவேதா சுவதா மெடுத் துரைத்துச்
சொன்ன தெல்லாந் தொகுத் தொன்றாய்த்
தூய்தா யருளிச் செய் தத்தி
னீரா றேழுத்தாற் சொல்லின்பப்
போதா லயத்தோன் புகன்ற பொருள்
யானுந் தமிழாற் புகல்கின்றேன். (14)

**பாயிரம் முற்றிற்று.**

ஆகத் திருவிருத்தம் 14.



# தத்துவாமிர்தம்.



## கலிச்சந்த விருத்தம்.

நித்தமொடு முத்தநிம லந்திகழ் பரத்தை
யுய்த்தகா முத்தமணி யத்திநிக ரொப்ப
மெய்த்திடவெ வர்க்குமுண ரத்திகழுவிக்கும்
தத்வமஸி தத்வமஸி தத்வமஸி சத்யம். 1

சத்தமுறு பித்தினலை தட்டறவு ளத்தே
முத்தியெனு மப்பதமு முத்திட நினைக்கிற்
கைத்தலநெ லிக்கனியெ னப்பொருள் விளக்கும்
தத்வமஸி தத்வமஸி தத்வமஸி சத்யம் 2

பத்தியதின் மெய்க்குரவ னற்பதம துற்றே
சித்தமொரு மித்துறவி னிற்றுறவி யற்றின்
மெய்த்துமுய ரத்துவப ரர்க்கதுவி ளக்கும்
தத்வமஸி தத்வமஸி தத்வமஸி சத்யம் 3

கத்ததுறு பித்தசம யக்கவலை விட்டு
நித்தபர மத்தையுணர் தற்றகநி னைக்கின்
மெய்த்தொருக ணத்தினில்வெ ளிப்படநி கழ்த்தும்
தத்வமஸி தத்வமஸி தத்வமஸி சத்யம். 4

மத்தமுறு பொய்ப்பவம யக்கறவு ளத்தே
மெய்த்தபர தத்துவம்வெ ளிப்படவெ வர்க்கும்
சுத்தமணி நற்சுடர்வி ளக்கதுவெ ரிக்கும்
தத்வமஸி தத்வமஸி தத்வமஸி சத்யம் 5

முத்தமொடு நித்தமுறு சுத்தமது புத்த
வத்துவித மப்பரம மத்தினை யுளத்தே
யித்திறனெ னத்திகழு வித்திட விளக்கும்
தத்வமஸி தத்வமஸி தத்வமஸி சத்யம் 6



உ

ஓம் தத் சத்.

# பிரமகீதை.

## மூலமும் உரையும்.

### முதலாவது அத்தியாயம்.

### தேவர்கள் பிரமாவைத் தரிசித்து வேதார்த்தம் வினவும் அத்தியாயம்.

### அவதாரிகை.

பூருவ பாகத்தில் உபநிஷத்தொன்றினாலேயே பிரமான்ம ஏகத்துவ விஞ்ஞானமே முத்திசாதனமெனக் கூறப்பட்டது. சகல வேதங்களுக்கும் இக்கருத்தே உடன்பாடு எனத் தெரிவிக்கும் பொருட்டு ஐதரேயம், தைத்திரியம் முதலிய எல்லா உபநிஷத்துக்களின்பொருளை விரித்துரைக்கும் பிரமகீதையைச் சொல்லவேண்டுமென்று முனிவர்கள் சூதமகாமுனிவரைக் கேட்கின்றார்கள்.

சூதனை முனியை நோக்கித் தொல்லைமா முனிவர் சொல்வார்
மாதவ வினவிற் றெல்லாம் வகுத்துநீ தொகுத்துஞ் சொன்னாய்
ஆதிநான் முகத்தோன் கீதை யறியவா தரித்தோ மின்றென்
றோதிமா முனிவ ரெல்லா மீளவு முரைக்க லுற்றார்.

**இதன் பொருள்.**

தொல்லைமா முனிவர் —பழமையான பெருமையையுடைய முனிவர்கள்

சூதனை முனியை நோக்கிச் சொல்வார் } சூதனென்னும் திருநாமமுடைய முனிவரரைப் பார்த்துச் சொல்லுவார்கள்

மாதவ —சிறந்த தவத்தை யுடையவனே

வினவிற்றெல்லாம் —(சிறியேங்களாகிய யாங்கள்) கேட்டவைகள் அனைத்தையும்

வகுத்துநீ தொகுத்துச் சொன்னாய் } நீ விரித்தும் சுருக்கியும் சொல்லியருளினாய் (இனி)

ஆதிநான் முகத்தோன் கீதை } ஆதியாயுள்ள சதுர்முகத்தை யுடையவனாகிய பிரமதேவனாற் சொல்லப்பட்ட கீதையை

இன்று அறிய ஆதரித்தோம் என்று ஓதி } இன்று தெரிந்துகொள்ள ஆசை கொண்டவராயிருக்கின்றோம் என்று விண்ணப்பித்து

மாமுனிவர் எல்லாம் —பெருமை பெற்ற முனிவர்கள் அனைவரும்

மீளவும் உரைக்கலுற்றார் —மேலும் சொல்லத் தொடங்கினார்

**கருத்துரை.** முனிவர்கள் எல்லாம் சூதமாமுனிவரை வணங்கி "ஸ்வாமி! தாங்கள் எங்களுக்கு வேண்டியவற்றைத் தொகுத்தும் விரித்தும் கூறினீர்கள். இனி, பிரமகீதையையும் கட்டளையிட்டருள வேண்டும்" என்று வேண்டிக் கொண்டார்கள். (1)

வேதநூ றெரிந்தோ னாலே விஞ்சையும் விளங்கப் பெற்றாய்
ஆதலா லியாது முன்னா லறியலா காத தில்லை
மேதையான் மிக்கா யெங்கண் மேலுனக் கன்புண் டாகி
லோதுவாய் போதோன் சொன்ன உபநிடப் பொருளை யென்றார்.

**இதன் பொருள்.**

| | |
|---|---|
| வேதநூல் தெரிந்தோனாலே | வேத சாஸ்திரங்களை ஆராய்ந்து அறிந்தோனாகிய வியாச பகவானாலே |
| விஞ்சையும் விளங்கப் பெற்றாய் | (சிறந்த) ஞானத்தையும் சிறக்க உபதேசிக்கப் பெற்றவன் ஆயினாய் |
| ஆதலால் உன்னால் அறியலாகாததில்லை | ஆனபடியினாலே உனக்குத் தெரியாத விஷயம் எதுவுமில்லை |
| மேதையால் மிக்காய் | —அறிவாற் சிறந்த பிரம ஞானியே |
| எங்கள் மேல் உனக்கு அன்பு உண்டாகில் | எங்களிடத்தில் உனக்குக் கிருபையிருக்குமேயானால் |
| போதோன் சொன்ன | தாமரை மலரில் வசிக்கின்ற பிரமதேவன் (தேவர்களுக்கு) உபதேசித்த |
| உபநிடப்பொருளை ஓதுவாய் என்றார் | வேதாந்த அர்த்தத்தை அருளிச் செய்வாயாக என்று முனிவர்கள் கேட்டுக் கொண்டார்கள் |

**கருத்துரை.** முனிவர்கள் மேலும் சூதமாமுனிவரைப் பிரமதேவன் தேவர்களுக்குச் சொல்லியருளிய பிரமகீதையைத் தங்களுக்கு உபதேசிக்க வேண்டுமெனக் கேட்டுக்கொண்டார்கள். (2)

வேறு.

இன்ன பரிசே முனிவரெலா மியம்பக் கேட்டங் கிமையவர்கள்
முன்ன மொருநான் மறையோதி முடிந்த பொருளோர்ந் துணராம
லன்ன மிசையோன் றனைக்கேட்ப வண்டத் தவர்கட் கவனருளாற்
சொன்ன பரிசே கேளுமெனச் சூதன் சொல்லத் தொடங்கினனால்.

**இதன் பொருள்.**

| | |
|---|---|
| முனிவரெலாம் இன்ன பரிசே இயம்பக்கேட்டு | முனிவர்கள் அனைவரும் இவ்வாறு இரந்து கூறியதைக் கேட்டு |
| சூதன் அங்கு இமையவர்கள் முன்னம் | சூதமாமுனிவன் ஆங்கே தேவலோகவாசிகளாகிய தேவர்கள் முற்காலத்தில் |

| | |
|---|---|
| ஒருநான் மறைஓதி | —ஒப்பற்ற நான்கு வேதங்களையும் ஓதி |
| முடிந்த பொருள் ஓர்ந்து உணராமல் | அவ்வேதங்களின் முடிவான பொருள் இன்னதென ஆய்ந்தறியும் ஆற்றல் அற்றவராய் |
| அன்னமிசையோன் தனைக்கேட்ப | அன்ன வாகனத்தின்மேல் எழுந்தருளியிருக்கும் பிரமதேவனைக் கேட்க |
| அவன் அருளால் | —அப்பிரமதேவன் கருணையினால் |
| அண்டத்தவர்கட்கு | —தேவர்களுக்கு |
| சொன்ன பரிசே | —இயம்பியருளிய முறையே (சொல்கிறேன்) |
| கேளுமென | —கேட்பீர்களாக என |
| சொல்லத்தொடங்கினான் | —கூறத் தொடங்கினான் |

**கருத்துரை.** தேவர்கள் நான்மறை முழுதும் ஓதியும் முடி பொருள் உணராராய் மயங்கிப் பிரமதேவனைக் கேட்க அவன் அவர்களுக்குச் சொன்ன முறையே உங்களுக்கும் சொல்கின்றேன் கேளுங்களெனச் சூதமாமுனிவர் மற்றைய முனிவர்களுக்குச் சொல்லத்தொடங்கினார். (3)

வேறு.

பண்டொரு கற்பந் தன்னிற் பழமறைப் பொருளை யெல்லா
வண்டருங் கூடி யாய்ந்தங் கறியலா காமை யாலே
யெண்டரு மாத வத்தை யெய்தியே யிதனைக் கேட்பப்
புண்டரீ கத்தில் வாழும் புனிதனை நோக்கிப் போனார்

**இதன் பொருள்.**

| | |
|---|---|
| பண்டு ஒரு கற்பந்தன்னில் | —முன்னொரு கற்பாந்தரத்தில் |
| எல்லா அண்டரும் கூடி | —தேவர்கள் எல்லோரும் கூடி |
| பழமறைப் பொருளை | —பழமையாகிய வேதார்த்தத்தை |
| ஆய்ந்து | —வெகுகாலம் ஆராய்ந்து |
| அங்குஅறியலாகாமையாலே | —அங்கு அவர்களால் அறியக்கூடாமையினால் |
| எண் தரும் | —மதிக்கத்தகுந்த |
| மாதவத்தை எய்தி | —சிறந்த தவத்தைச் செய்து |
| இதனைக் கேட்ப | —இவ் வேதப்பொருளைக் கேட்டுணரும் பொருட்டு |
| புண்டரீகத்தில் வாழும் | —தாமரைத் தவிசில் வீற்றிருந்தருளப்பெற்ற |
| புனிதனை | —பரிசுத்தனாகிய பிரமதேவனை |
| நோக்கிப் போனார் | —கருதிச் சென்றார்கள் |

**கருத்துரை.** முன்னொரு கற்பாந்தரத்தில் தேவர்களெல்லாம் கூடி வேதப் பொருளை ஆராய்ந்தும் அறிய முடியாதவர்களாய் அருமையான தவத்தைச்செய்து அப்பொருளை அறிய வேண்டிப் பிரம்மாவை நோக்கி யடைந்தார்கள். (4)

### வேறு.

பாபவே ரறுக்குந் தீர்த்தமென் றெண்ணப்
 பட்டன யாவையும் பரப்பித்
தேவரோ டியக்க ராக்கர்கந் தருவர்
 சித்தர்சாத் தியர்களுஞ் செறிந்து
நாவினு லறியு மறுவகைப் பட்ட
 விரதமு நலம்பெற வுடைத்தா
யோவிலா தொழுகு மருவிக ளுடைத்தா
 யொருபொரு ளொழிவற வுடைத்தாய்

### இதன் பொருள்.

பாபவேர் —பாவத்திற்குக் காரணமான காமக்குரோதாதிகளை
அறுக்கும் தீர்த்தம் என்று—முற்றிலும் ஒழிக்கவல்ல தீர்த்தமாக
எண்ணப்பட்டன யாவையும் பரப்பி } மதிக்கப்படுகின்ற புண்ணியதீர்த்தங்கள் அனைத்தையும் பரப்பிக்கொண்டும்
தேவர்களோடு இயக்கர் —தேவர்களோடு இயக்கர்களும்
அரக்கர் கந்தருவர் சித்தர் —இராக்கதர்களும் கந்தருவர்களும் சித்தர்களும்
சாத்தியர் செறிந்து —சாத்தியர்களும் நெருங்கி (சேவிக்கப்பட்டதாயும்)
நாவினால் அறியும் —நாவினால் அறியக் கூடிய
அறுவகைப்பட்ட இரதமும் } (கைப்பு, தித்திப்பு, புளிப்பு, உவர்ப்பு, துவர்ப்பு, கார்ப்பு) என்னும் அறுவகைப்பட்ட இரசபதார்த்தங்களையும்
நலம்பெற உடைத்தாய் —நன்மைபெற உடையதாயும்
ஓவிலாது ஒழுகும் —இடைவிடாது ஒழுகுகின்ற
அருவிகளுடைத்தாய் —அருவிகளை யுடையதாயும்
ஒரு பொருள் ஒழிவற உடைத்தாய் } ஒன்றொழியாமல் சகல பொருள்களையும் உடையதாயும்

**கருத்துரை.** பாவவிமோசனம் செய்யக்கூடிய புண்ணிய தீர்த்தங்களையும், தேவர் முதலானவர்கள் நெருக்கத்தையும் அறுசுவைகளையும், பல அருவிகளையும், சகல பதார்த்தங்களையும் உடையதாய். (5)

### வேறு.

சகல யோகிகளு மேவவினி தான தனிசேர்
குகைகள் கோடிபல கூடியுள கோடி பலவாய்ச்
சிகர மேவுதவ மாமணிகள் சிந்தி யுளதாய்
திகரி லாமனிகழ் மேருகிரி நீண்முடி யின்மேல்.

### இதன் பொருள்.

| | |
|---|---|
| சகல யோகிகளும் | —யோகிகள் அனைவரும் |
| மேவ இனிதான | —தங்கியிருப்பதற்கு இன்பமாயுள்ள |
| தனிசேர் குகைகள் கோடி பல | ஏகாந்தமாயிருக்கத்தக்க பலகோடி குகைகள் |
| கூடியுள கோடி பலவாய் | —நெருங்கியுள்ள மூலைகள் அநேகம் அமைந்ததாயும் |
| சிகரம் மேவும் | —கொடுமுடிகளில் பொருந்திய |
| நவமணிகள் | —ஒன்பது வகை ரத்தினங்கள் |
| சிந்தியுளதாய் | —சிதறப் பெற்றதாயும் |
| நிகரில்லாமல் நிகழ் | —ஒப்பில்லாமல் பிரகாசிக்கின்றதாயுமுள்ள |
| மேருகிரி நீண்முடியின் மேல் | —மகாமேரு மலையின் உயர்ந்த சிகரத்தின்மேல் |

**கருத்து.** யோகிகள் அனைவரும் ஏகாந்தமாயிருப்பதற்கு ஏற்ற அநேகம் குகைகளையுடையதாயும், நவரத்தினங்கள் சிதறப்பெற்றதாயும், இணையற்றதாயும் விளங்குகின்ற மகாமேருபருவதத்தின் உச்சியிலே. (6)

### வேறு.

ஐம்பதிற் றிரட்டி யோசனை நீண்டாங்
கத்தொகை யோசனை யகன்று
கம்பநற் கரியை முதல்வரு மிருக
கணங்களா லாகுலங் கனத்துச்
செம்பொருள் கொழிக்குந் தீர்த்திகை யுடைத்தாய்த்
திரண்டபுள் ளினங்களு முடைத்தாய்ப்
பைம்பொழிற் செழுந்தே னருந்திய வறுகாற்
பறவையி னொலியினாற் பரம்பி.

### இதன் பொருள்.

| | |
|---|---|
| ஐம்பதிற்றிரட்டி யோசனை நீண்டு | நூறு யோசனை நீளமுடையதாயும் |
| கம்பநல் கரியை முதல் வருமிருக கணங்களால் | தறியில் கட்டப்படும் நல்ல யானை முதலாக வருகின்ற மிருகங்களின் கூட்டங்களால் |
| ஆங்கு அத்தொகை யோசனை யகன்று | அதுபோலவே அந்த நூறு யோசனை அகலமும் உடையதாயும் |
| ஆகுலங் கனத்து செம்பொருள்கொழிக்கும் | ஆரவாரம் மிக நிறைந்ததாயும் செந்நிறமுடைய பொன்னைக் கொழித்துச் செல்லுகின்ற |
| தீர்த்திகையுடைத்தாய் | —நதிகளையுடையதாயும் |
| திரண்ட புள்ளினங் களும் உடைத்தாய் | நெருங்கிய பக்ஷிசாலங்களை உடையதாயும் |

| | |
|---|---|
| பைம்பொழில் | —பசுமை வாய்ந்த சோலையிலுள்ள |
| செழுந்தேனருந்திய | —செழிப்பாகிய தேனையுண்ட |
| அறுகால் பறவையின் | —வண்டுகளினுடைய |
| ஒலியினால் பரம்பி | —ஓசையினாலும் நிறையப்பெற்று |

**கருத்து.** நூறு யோசனை நீளமும், நூறு யோசனை அகலமும் உடையதாயும், யானை முதலான மிருகங்களின் ஆரவாரம் மிக நிறையப் பெற்றதாயும், பொன்னைக் கொழித்துச் செல்லும் பல நதிகளை உடையதாயும், அநேகம் பக்ஷிசாலங்களை உடையதாயும், சோலையிலுள்ள புஷ்பங்களின் தேனையுண்டு திரியும் வண்டுகளின் ஓசை நிறையப் பெற்றதாயும். (7)

வேறு.

இந்து பானுவென் றிருவரு நிலவினோ டிளவெயில் பாரிப்பக்
கொந்து பாய்தரு சோலையின் கிழங்குகாய் கொழுங்கனி வழங்கத்தண்
சந்த ருடவி புகுந்துவன் டுலவுதண் டாமரைத் தடந்தோய்ந்து
மந்த மாருதந் திரிதரு பிரமமா வன்முள ததன்கண்ணே.

இதன் பொருள்.

| | |
|---|---|
| இந்து பானுவென்றிருவரும் | —சந்திரன் சூரியன் என்கிற இருவர்களும் |
| நிலவினொடு இளவெயில் | —சந்திரிகையுடனே இளவெயிலையும் |
| பாரிப்ப கொந்து | —வீசப் பூங்கொத்துக்களிலிருந்து |
| பாய்தரு சோலைகள் | —(தேன்) பாயப்பெற்ற சோலைகள் |
| இன் கிழங்கு காய் | —உண்ணற்கினிய கிழங்குகளையும் காய்களையும் |
| கொழுங்கனி வழங்கத் தண் தாமரைத்தடந்தோய்ந்து | பழுத்த பழங்களையும் கொடுக்கக் குளிர்ச்சி பொருந்திய தாமரைத் தடாகத்திற்படிந்து |
| மந்தமாருதம் திரிதரும் | —தென்றற் காற்றானது உலாவுகின்ற |
| மா பிரமவனம் | —பெரிய பிரமவனம் என்னும் ஒருவனம் |
| உளது அதன் கண்ணே | —அதனிடத்தில் இருக்கின்றது |

**கருத்து.** சந்திர சூரியர்கள் நிலவையும் இளவெயிலையும் முறையே வீசப் பெற்றதும் உண்ணுதற்கினிய கிழங்கு, காய், பழங்களைக் கொடுக்கக்கூடியதும் தென்றற்காற்று வீசப்பெற்றதுமான ஒரு சோலையுண்டு அதனிடத்தில். (8)

வேறு.

வளமாமதி லொன்பதோ டெண்பது வாசலாகி
யிளஞாயிறு போல்விளங்கி யிலங்கு மொள்வாள்
வளநேமிகொ டுஞ் சிலைதண்டு மழுக்கள் வல்லோ
ரளவோதவி லாதவர் காப்புடைத் தாகியெங்கும்.

### இதன் பொருள்.

வளமாம் மதில் ஒன்பதோடு—வளப்ப மிகுந்த ஒன்பது மதிலோடு
எண்பது வாசலாகி —எண்பது வாசல் உடையதாகி
இளநாயிறு போல —பால சூரியனைப்போல
விளங்கி இலங்கும் —பிரகாசித்து விளங்குகின்ற
ஒள்வாள் —அழகுபொருந்திய வாளாயுதம்
வளநேமி கொடுஞ்சிலை —சங்கு, நேமி, சக்கரம், கொடியவில்
தண்டு மழுக்கள் —தண்டாயுதம், மழுவாயுதம் முதலியவற்றில்
வல்லோர் —வல்லமையுடையவர்களில்
அளவோத விலாதவர் —அளவு சொல்லக் கூடாதவர்களால்
எங்கும் காப்புடைத்தாகி —எவ்விடத்திலும் காக்கப்பட்டதாகி.

**கருத்து-** ஒன்பது மதிலையும், எண்பது வாசலையும் உடையதாகி, வாள் முதலிய ஆயுதங்களில் வல்லவர் பலரால் காக்கப்பட்டதுமாகி. (9)

### வேறு.

பூரண கும்ப மெங்கணு நிறைத்துப் பொன்றிகழ் நித்திலம் புணர்ந்த
தோரண முயர்த்தித் தூய்மலர் துதைந்த சுகந்தமா லைகள்பல தூக்கி
யேரணிதீப மேற்றியெம் மருங்கு மேழிசை யாழிலெங் கெங்கும்
வாரணி கொங்கை மடந்தையர் பாடு மாடமா ளிகைவரம் பிலதாய்.

### இதன் பொருள்.

பூரண கும்பம் எங்கணு நிறைத்து } எவ்விடத்திலும் பூரண கும்பங்கள் நிறைத்து
பொன்திகழ் நித்திலம் புணர்ந்த } பொன் கம்பியிற் கோக்கப்பட்டு விளங்குகின்ற முத்து மாலைகள் தொங்கப்பெற்ற
தோரணமுயர்த்தி —தோரணங்கள் உயரக்கட்டி.
தூய்மலர் துதைந்த சுகந்த மாலைகள் பலதூக்கி } பரிசுத்தமாகிய மலர்களால் தொடுக்கப்பெற்ற நல்ல வாசனையுடைய பலமாலைகள் தூக்கி
ஏரணி தீபமேற்றி யெம்மருங்கும் } எவ்விடங்களிலும் அழகுபொருந்திய விளக்குகளை ஏற்றி
ஏழிசை யாழி லெங்கெங்கும் } எல்லா விடங்களிலும் ஏழிசையோடு கூடிய வீணையைப்போல
வாரணி கொங்கை மடந்தையர் பாடும் } கச்சு அணிந்த தனங்களோடு கூடிய மாதர்கள் பாடுகின்ற
மாடமாளிகை வரம்பிலதாய் } மண்டபங்களோடு கூடிய அளவற்ற மனைகள் உள்ளதாகி.

**கருத்து.** எங்குப் பார்த்தாலும் பூரண கும்பமும் முத்துமாலைத் தோரணங்களும், புஷ்பமாலைகளும், தீபங்களும் நிறையப் பெற்றவும், பெண்களிருந்து இசைபாடப் பெற்றவுமான மாளிகைகள் பலவும் உடையதாகி. (10)

சித்திர மமைத்த பித்திகோ டிகளாற் சீர்பெற விளங்கிமா ணிக்க
வுத்திரம் வயிரப் போதிகை பவள வொளிமணித் தூணிரை பொதிந்து
நித்திலத் தாம மெங்கணுந் தூக்கி நித்தில விதானமே யெங்கும்
வித்தரித் தோங்கி வியனெடுங் கொடிகள் விண்ணள வெறிந்து மீண்டுளதாய்.

**இதன் பொருள்.**

| | |
|---|---|
| சித்திரம் அமைந்த | —சித்திரங்கள் எழுதப் பெற்றுள்ள |
| பித்தி கோடிகளால் | —பல சுவர்களினாலே |
| சீர்பெற விளங்கி | —சிறப்புற விளங்கி |
| மாணிக்க உத்திரம் | —மாணிக்கத்தால் செய்யப்பட்ட உத்திரங்களும் |
| வயிரப் போதிகை | —வச்சிரத்தால் செய்யப்பட்ட தாழ்வாரங்களும் |
| பவள ஒளிமணித் தூணிரை பொதிந்து | பவளத்தால் ஆக்கப்பெற்று அழகுடன் விளங்கும் தூண்வரிசைகளும் நெருங்கி |
| நித்திலத்தாம மெங் கணுந் தூக்கி | எவ்விடத்திலும் முத்துமாலைகள் தொங்கவிட்டு |
| நித்தில விதானமே யெங்கும் | எவ்விடத்திலும் முத்தினுற் செய்யப்பட்ட மேற் கட்டிகளே |
| வித்தரித் தோங்கி | —விரித்து உயர்ந்து |
| வியனெடுங் கொடிகள் | —பெருமை வாய்ந்த நீண்ட துவசங்கள் |
| விண்ணள வெறிந்து | —ஆகாயமளவும் வீசி |
| மீண்டுளதாய் | —திரும்புகின்றதாகி |

**கருத்து.** சித்திரமெழுதிய மதில்கள் பலவும், மாணிக்க உத்தரமும் வயிரப் போதிகையும், பவளத்தூண்களும், முத்துமாலைகளும், முத்தினுலாய மேற்கட்டிகளும், ஆகாயம்வரை அளாவிய துவசங்களும் நிறைந்துள்ளதாகி. (11)

வெடிபட வுச்ச மந்தமத் திமமாய்
விளங்குகா களவொலி யொருசார்
இடிபடு முரச முழக் கொலி யொருசார்
ரியம்புவாச் சியவொலி யொருசார்
வடிவுடை மகளிர் கூத்தொலி யொருசார்
மறையவ ரோத்தொலி யொருசார்
முடிவறு மிருதி புராணவா கமங்கண்
மொகுமொகென் றெழுமொலி யொருசார்.

### இதன் பொருள்.

வெடிபட வுச்சமந்த மத்திமமாய் விளங்கு காகளவொலி யொருசார் — உயர்வாயும், மிருதுவாயும், மத்தியமமாயும், விளங்குகின்ற எக்காளத்தின் வாத்தியத்தினுடைய ஓசை ஒரு பக்கத்தில் முழங்கவும்

இடிபடு முரச முழக்கொலி யொருசார் — முரசம் ஒலிக்கும் ஓசை ஒரு பக்கத்திலும்

இயம்பு வாச்சிய வொலி யொருசார் — சொல்லாநின்ற வாத்தியங்களினுடைய சப்தம் ஒரு பக்கத்திலும்

வடிவுடை மகளிர் கூத்தொலி யொரு சார் — அழகுபொருந்திய பெண்களினுடையநடன ஒலியானது ஒரு பக்கத்திலும்

மறையவரோத்தொலி யொரு சார் — வேதங்களில் வல்ல பிராமணர்கள் வேதத்தைப் (பாராயணம் செய்கின்ற) ஒலி ஒருபக்கத்திலும்

முடிவறுமிருதி — முடிவில்லாத ஸ்மிருதிகளும்

புராணவாகமங்கள் — புராணங்களும் ஆகமங்களும்

மொகு மொகு என்று — மொகு மொகு என்னுந் தொனியுடன்

எழுமொலி ஒருசார் — கிளம்புகின்ற ஓசை ஒரு பக்கத்திலும்

**கருத்து.** ஒரு பக்கத்தில் எக்காள வாத்தியத்தின் ஓசையும், ஒரு பக்கத்தில் முரசவாத்தியத்தின் ஓசையும், ஒரு பக்கத்தில் வாத்தியங்களினுடைய சப்தமும், மற்றொரு பக்கத்தில் பெண்களின் நடன ஒலியும், இன்னொரு பக்கத்தில் பிராமணர்கள் வேதபாராயணம் செய்யும் ஓசையும், இன்னொரு பக்கத்தில் ஸ்மிருதி, புராணம், ஆகமம் இவற்றைப் படிக்கும் ஓசையும். (12)

மேவிய சகலா கமங்களின் பொருளும் விருப்புட னுய்பவ ரொருசார்
காவிய மென்னுங் கனியினை நுகர்ந்து களித்திடு முளத்தவ ரொருசார்
ஆவியோ டாக்கை யுறவறி யிருநா லங்கத்து யோகிய ரொருசார்
ஓவியம்போல விருந்துணர் விறந்த வுணர்வுகொண் டுறங்கின ரொருசார்.

### இதன் பொருள்.

மேவிய சகலா கமங்களின் பொருளும் — பொருந்திய சகல ஆகமங்களினுடைய அர்த்தங்களையும்

விருப்புடனுய் பவரொரு சார் — ஆசையுடன் ஆராய்ந்து கொண்டிருப்பவர் ஒரு பக்கத்திலும்

காவிய மென்னும் கனியினை நுகர்ந்து — காவிய மென்று சொல்லப்படும் பழத்தை உண்டு

களித்திடு முளத்த வரொரு சார் — ஆனந்தமடைகின்ற உள்ளத்தையுடையவர்கள் ஒரு பக்கத்திலும்

ஆவியோடாக்கை — உயிரோடு சரீரமானது

உற அறி — அழியாதிருக்கும்படி உணருகின்ற

இருநால் அங்கத்து — அஷ்டாங்கத்தையுடைய

யோகிய ரொருசார் —யோகிகள் ஒரு பக்கத்திலும்
ஓவியம்போல —சித்திரம்போல அசைவற
இருந்துணர் விறந்த —இருந்துவிருத்தி ஞானமில்லாத
உணர்வுகொண்டு —சொரூப ஞானத்தை அடைந்து
உறங்கின ரொருசார் —காஷ்ட சமாதிசெய்கின்றவர்கள் ஒருபக்கத்திலும்.

**கருத்து.** ஆகமங்ககளின் பொருளை ஆராய்ந்து கொண்டிருப்பவர்கள் ஒரு பக்கத்திலும், காவியரசங்களை அனுபவித்துக்கொண்டிருப்பவர்கள் ஒரு பக்கத்திலும், அஷ்டாங்க யோகங்களைப் புரிந்துகொண்டிருப்பவர்கள் ஒரு பக்கத்திலும், விருத்தி ஞானமில்லாது சொரூப ஞானத்தையடைந்து காஷ்ட சமாதியிலிருந்து கொண்டிருப்பவர்கள் ஒரு பக்கத்திலும். (13)

மத்தநற் களிறும் வயிர நற்றேரும் வாசியும் வரம்பில வாகி
யத்திரத் தாலும் சத்திரத் தாலும் மளவறு வீரர்காப் புடைத்தாய்
மெய்த்தவர்க்கெளிதாயல்லவர்க்கரிதாய் வேண்டியபொருளெலாமீண்டி
யித்தகைத் தான விடத்திலா யிரக்கா லிலங்கிய விரத்னமண் டபத்தே.

இதன் பொருள்.

மத்தநற்களிறும் —மதநீரைப் பெருக்குகின்ற நல்ல யானைகளும்
வயிர நற்றேரும் —வயிரத்தாற் செய்யப்பட்ட அழகிய ரதங்களும்
வாசியும் வரம்பிலவாகி —குதிரைகளும் கணக்கற்றனவாகி
அத்திரத்தாலும் —பாணங்களாலும்
சத்திரத்தாலும் —கைவிடாப்படைகளாலும் (விளங்குகின்ற)
அளவறு வீரர் காப்புடைத்தாய் —அளவற்ற வீரர்களால் காக்கப்பட்டதாகி
மெய்த்தவர்க்கு —உண்மையான தவத்தையுடையவர்க்கு
எளிதாய் —அடைவதற்குச் சுலபமாயும்
அல்லவர்க்கு அரிதாய் —அவத்தினையுடையவர்க்கு அடைதற்கு முடியாததுமாகி
வேண்டிய பொருளெலாம் ஈண்டி —இச்சித்த பதார்த்தங்களனைத்தும் நெருங்கி
இத்தகைத்தான இடத்தில் —இவ்வளவு பெருமை வாய்ந்த அவ்விடத்தில்
ஆயிரக்காலிலங்கிய —ஆயிரங்கால்கள் பொருந்திய
இரத்தினமண்டபத்து —இரத்தின மண்டபத்திலே.

**கருத்து.** இரதம் கஜம் துரகம் பதாதி என்னும் அஸ்திர சஸ்திரப் படை வீரர்களான நால்வகைச் சேனைகளும் அளவில்லாதனவாய் நிறையப் பெற்றதும், மெய்த்தவத்தோர்கள் அடைவதற்கு எளியதும், மற்றையோர்க்கு அரிதுமாய், வேண்டிய பொருளெலாம் நிறையப்பெற்றதுமான பெருமைபெற்ற அந்த இடத்தில் ஆயிரக்கால் இரத்தின மகாமண்டபத்தில். (14)

கற்பக தருவு மகரதோ ரணமுங் கவின்பெற வமைத்துள தாகி
யற்புத மான வரிமுகத் துறுகா லாசனத் தம்பஞ்சி யணைமேற்
சொற்பத வடிவாந் தோகையோ டெல்லாப் பொருளுமாய் விளங்கிய தோன்ற
லுற்பவ மறுப்பா னுகவீற் றிருந்தா னும்பருங் கோயிலுட் புகுந்தார்.

இதன் பொருள்.

கற்பக தருவும் —கற்பக விருக்ஷங்களையும்
மகர தோரணமும் —மகர தோரணங்களையும்
கவின்பெற அமைத்துளதாகி —அழகு அமையப் பொருந்தியிருக்கின்றதாயும்
அற்புதமான அரிமுகத்து —அதிசயிக்கத் தகுந்த சிங்க முகத்தையும்
உறுகால் —அதற்குரிய கால்களையும் கொண்டுள்ள
ஆசனத்து அம்பஞ்சியணைமேல்—ஆசனத்தில் அழகிய பஞ்சணை மீது
சொற்பத வடிவாம் —சொல்லும் பொருளுமே சொருபமாக உடைய
தோகையோடு —கலைமகளோடு
எல்லாப் பொருளுமாய் —தானே சகல பொருள்களுமாய்
விளங்கிய தோன்றல் —பிரகாசிக்கின்ற பெருமையிற் சிறந்தவனாகிய பிரம்மா
உற்பவ மறுப்பானுக —தன்னை வந்தடையும் ஆன்மாக்களது பிறப்பை ஒழிக்கும் பொருட்டு
வீற்றிருந்தான் —எழுந்தருளியிருந்தான் (அச்சமயத்தில்)
உம்பரும் கோயிலுட் புகுந்தார்—தேவர்களும்அந்தக்கோயிலுள்ளேசேர்ந்தார்கள்.

**கருத்து.** கற்பக விருக்ஷங்களும், மகர தோரணங்களும் அமையப் பெற்றதும், சிங்கமுகத்தையும் கால்களையும் கொண்டுள்ளதுமாகிய சிம்மாசனத்தின்மீது பிரம்மதேவன் கலைமகளுடனே எழுந்தருளியிருந்தான். அச்சமயம், தேவர்களும் அங்கு வந்தடைந்தார்கள். (15)

வேறு.

ஆரமணி குண்டலமொ டாழிகட கங்கே
யூரமபி டேகமுத லொப்பினைக ளுஞ்செய்
தாரமகி லுவிபனி நீரொடள வுங்கற்
பூரமது கொண்டுதிரு மேனிநனிபூசி

இதன் பொருள்.

ஆரமணி குண்டலமொடு —முத்துமாலைகளும் இரத்தினங்களும் இழைக்கப் பட்ட குண்டலங்களோடு
ஆழிகடகம் —மோதிரங்களும் கங்கணங்களும்

| | |
|---|---|
| கேயூரம் அபிடேக முதலொப் பனைகளுஞ்செய்து | தோளணிகளும், கிரீட முதலாகிய அலங்காரங் களும் புரிந்து |
| ஆரம் அகில் நாவிபனி நீ ரோடளாவும் | சந்தனமும் அகிற்குழம்பும், கஸ்தூரியும் பனி நீரோடு கலந்த |
| கற்பூர மதுகொண்டு | —பச்சைக் கற்பூரமும் கொண்டு |
| திருமேனி நனிபூசி | —திருமேனியில் மிகவு மணிந்து |

**கருத்து.** முத்தாரம், குண்டலம, மோதிரம், கங்கணம், கேயூரம், கிரீட முதலிய ஆபரணங்களை அணிந்துகொண்டும், கஸ்தூரி பச்சைக் கற்பூர முதலிய வைகள் கலந்து பனிநீரில் குழப்பப்பட்ட சந்தனத்தைப் பூசிக்கொண்டும். (16)

வேறு.

நித்தமான தன் னொளியினு லனைத்தையு நிகழ்த்துநின் மலனோட
வைத்தசெம்பொனிற் றிகழ்திரு மேனியின் மாலிகை பலசாத்தி
யுத்தரீயம்வெள் ளெக்கியோ பந்திக ழுதாரபந் தனத்தோடு
சுத்தமானவெண் கலிங்கமுஞ் சாத்திநற் சுராசுரர் றொழுதேத்த.

இதன் பொருள்.

| | |
|---|---|
| நித்தமானதன் னொளியினல் | நித்தியமாய் விளங்குகின்ற தனது சுயம் பிரகாசத்தால் |
| அனைத்தையு நிகழ்த்து நின்மலன் | எல்லாவற்றையும் விளங்கச் செய்கின்ற மலரகி தனை பிரமன் |
| ஓடவைத்த செம்பொனிற் றிகழ் | (உருக்கி) ஓடவிட்ட செம்பொன்னைப்போல் விளங்குகின்ற |
| திருமேனியில் மாலிகை பலசாத்தி | அழகான தனது சரீரத்தினிடத்தில் அநேக மாலைகளை அணிந்துகொண்டு |
| உத்தரீயம் | —அங்கவஸ்திரமும் |
| வெள்ளெக்கியோபம் | —வெண்மையான எக்கியோபவீதமும் (பூணூல்) |
| திகழ் உதாரபந்தனத்தோடு | —உதாரபந்தனத்துடனே விளங்குகின்ற |
| சுத்தமான வெண் | —பரிசுத்தமான வெள்ளை |
| கலிங்கமும் சாத்தி | —வஸ்திரமும் தரித்து |
| நல் சுராசுரர் | —நல்ல தேவர்களும் அசுரர்களும் |
| தொழுதேத்த | —வணங்கி வாழ்த்த |

**கருத்து.** என்றும் அழியாமல் நித்தியமாய் விளங்குகின்ற சுயம்பிரகாசத்தால் சகல பொருள்களையும் விளங்கச் செய்கின்ற நிமலனுகிய பிரமதேவன் பொன்போன்ற தனது திருமேனியில் பல மாலைகளை அணிந்து வெண்மையான பூணூலையும் தரித்து உதாரபந்தனத்தோடு வெள்ளை வஸ்திரத்தையும் கட்டிக் கொண்டு நல்ல தேவர்களும் அசுரர்களும் வணங்கி வாழ்த்துமாறு. (17)

தமத்தை யப்புறங் கடந்துநின் றறிவுறு சான்றதாய் மதனெல்லா
மமைத்தொ ருத்தரா லமைத்திடப் படாதுள வமூலனு யிருப்பானை
யிமைத்தி டப்படா விழியினு லிமையவ ரியாவருங் கண்டிந்தச்
சுமைக்கி ளைத்தன மென்பவர் போலவன் றுணையடி களில்வீழ்ந்தார்.

இதன் பொருள்.

தமத்தையப் புறங் கடந்து நின்று — மாயை என்னும் இருளுக்கு அப்பாலே கடந்து நின்று

அறிவுற்று சான்றதாய் —அறிகின்ற சாக்ஷியாகி

மதனெல்லாமமைத்து —அழகையெல்லாம் ஒன்றுசேர்த்து

ஒருத்தராலமைத்திடப் படாது உள — ஒருவராலும் சிருஷ்டிக்கப்படாமல் இயற்கையாயுள்ள

அமூலனுயிருப்பானை—தனக்கு ஒருகாரணமும் இல்லாதிருக்கின்ற பிரமதேவனை

இமைத்திடப் படாவிழியினுல்—கொட்டுதல் இல்லாத தம் கண்களால்

இமையவர் யாவரும் கண்டு —தேவர்கள் அனைவரும் தரிசித்து

இந்தச் சுமைக்கு —இந்த உடற்சுமையைத் தாங்குவதற்கு

இளைத்தன மென்பவர்போல் —இளைத்தோம் என்று சொல்லி அதைக் கீழே போடுகிறவர்கள் போல

அவன் —அப்பிரம தேவனுடைய

துணையடிகளில் வீழ்ந்தார் —உபய சரணுரவிந்தங்களில் வணங்கினுர்கள்.

**கருத்து.** மாயை என்னும் அந்தகாரத்தினின்றும் நீங்கினவனுயும் சர்வ சாக்ஷியாயும், சுந்தரனுயும், சுயமாய்த் தனக்கொரு காரணமும் இல்லாதிருக்கின்ற பிரமதேவனைத் தேவர்கள் தங்கள் கொட்டுதல் இல்லாத கண்குளிரக் கண்டு தரிசித்துத் தாங்கள் உடற்சுமையைத் தூக்கமுடியாது கீழேபோடுவார் கள்போல விழுந்து நமஸ்கரித்தார்கள். (18)

கஞ்ச நற்பதம் பணிந்தெழுந் தமலனைக் கண்டுகண் களிகூர்ந்து
மஞ்செ னச்சொரி தாரயிர்ப் புளகிதம் வரமகிழ்ச் சியினேடு
நெஞ்ச நெக்குற நிமலரா யவாவெலா நீங்கிநீண் முடிமேலே
யஞ்ச லித்தகை யினர்களா யானந்த வாரியிற் படிந்தாடி.

இதன் பொருள்.

கஞ்ச நற்பதம்பணிந்தெழுந்து—நல்ல செந்தாமரை மலர்களுக்கு ஒப்பாகிய திருவடிகளில் நமஸ்கரித்து எழுந்து நின்று

அமலனைக்கண்டு —நிர்மலனுகிய பிரமதேவனைக்கண்டு

கண்களிகூர்ந்து —கண்களிப்பு அடைந்து

மஞ்சுஎனச் சொரிதார —(ஆனந்தக் கண்ணீரானது) மேகங்களைப் போலவே பொழிய

மயிர்ப் புளகிதம் வர —ரோமம் சிலிர்ப்ப
மகிழ்ச்சியினோடு —ஆனந்தத்தோடு
நெஞ்சம் நெக்குற —மனமானது உருக்கமடைய
நிமலராய் அவாவெலா நீங்கி —நிர்மலராய் ஆசைகளனைத்தும் ஒழிந்து
நீள்முடிமேலே —உயர்ந்த சிரசினிடத்தில்
அஞ்சலித்த கையினர்களாய் —கூப்பிய கரங்களையுடையவர்களாய்
ஆனந்தவாரியில் —பேரானந்தப் பெருங்கடலில்
படிந்தாடி —மூழ்கி ஆனந்தக் கூத்தாடி.

**கருத்து.** தேவர்கள் பிரமதேவனைக்கண்டு ஆனந்தங்கொண்டு, கண்களில் ஆனந்தபாஷ்பம் பொழியவும் உரோமம் சிலிர்ப்பவும், மனம் நெக்குருகவும், ஆசையெலாம் ஒழியவும், சிரசின்மீது கூப்பிய கரத்தினர்களாய்ப் பேரானந்தப் பெருங்கடலில் மூழ்கி ஆனந்தக் கூத்தாடி. (19)

## வேறு.

அழுத்தமிக்கதி பத்தியாலவ சத்தராயுள வண்டர்தங்
குழுப்புவிக்கண்வி ழுந்து மீளவெ ழுந்துதங்கள் குரல்களுந்
தழுத்தழுத்தெம துற்பவங்கட விர்க்கையேதக வென்றுதாம்
வழுத்தலுற்றனர் வல்லவாமறை சொன்னவாறுதம் வாய்மையால்.

## இதன் பொருள்.

அழுத்தமிக்கதி பத்தியால் —திடமிகுந்த விசேஷ பத்தியினாலே
அவசத்தராயுள்ள —மெய்மறந்தவராய் உள்ள
அண்டர்தம் குழு —தேவர்களுடைய கூட்டங்கள்
புவிக்கண் விழுந்து —பார்மிசை படிந்து
மீள எழுந்து —மறுபடியும் எழுந்து நின்று
தங்கள் குரல்களும் —தங்களுடைய சொற்களும்
தழுத்தழுத்து —தழுதழுத்து (குளறி)
எமது உற்பவங்கள் —எங்களுடைய பிறப்புக்களை
தவிர்க்கையே தகவென்று —ஒழித்தலே நீதியென்று
தாம் வல்லவா —தம்மால் கூடியவரை
மறை சொன்னவாறு —வேதம் சொன்ன பிரகாரம்
தம் வாய்மையால் —தங்களுடைய சத்தியமான வாக்கினால்
வழுத்தலுற்றனர் —தோத்திரஞ்செய்யத் தொடங்கினார்கள்.

**கருத்து.** தேவர்கள் மிகுந்த பக்தியினால் பார்மிசை விழுந்து படிந் தெழுந்து தங்கள் நாவுகுளற வேதம் சொல்லியவாறு தங்கள் தங்கள் வல்லமைக் குத் தக்கபடி பிரமாவைத் தோத்திரஞ்செய்யத் தொடங்கினார்கள். (20(

வேறு.

பரம ஞானமாம் பாற்கடல் பண்ணிய பரமனே யடிபோற்றி
கரத லாமல கத்தினேர் பரவொளி காட்டிடுங் கழல்போற்றி
ஒருப ராபர மன்றிநீ யொருவனு மாகிய வொளிபோற்றி
பிரம நாரண சங்கர போற்றியெம் பெருமநின் பதம்போற்றி

இதன் பொருள்.

பரமஞானமாம் பாற்கடல் —பிரமஞானமாகிய பால்கடலை
பண்ணியபரமனே —செய்த மேலானவனே
அடிபோற்றி —பாதங்களுக்கு நமஸ்காரம்
கரதல ஆமலகத்தின் நேர் —உள்ளங்கை நெல்லிக்கனிபோல
பரவொளி காட்டிடும் —பரவஸ்துவைக் காட்டியருளுகின்ற
கழல்போற்றி —பாதங்களுக்கு நமஸ்காரம்
ஒரு பராபரமின்றி —ஓர் உயர்வு தாழ்வு இல்லாமல்
நீ ஒருவனுமாகிய ஒளிபோற்றி—நீ ஏகனுமாகிய சுடரே நமஸ்காரம்
பிரம நாரண சங்கர போற்றி } பிரமனும், விஷ்ணுவாயும, சங்கரமூர்த்தியாயும் (இருக்கின்றவனே) நமஸ்காரம்
எம்பெருமநின்பதம்போற்றி—எங்கள் நாயகனே உன்திருவடிகளுக்கு நமஸ்காரம்

**கருத்து.** பிரமஞானமாகிய பால்கடலை உண்டுபண்ணியவனும் உள்ளங்கை நெல்லிக்கனிபோல் பரவஸ்துவைக் காட்டுகின்றவனும், உயர்வு தாழ்வின்றி ஏகனாய இருக்கப்பட்டவனும், பிரமா விஷ்ணு சங்கரராயுமுள்ளவனுமாகிய எங்கள் பெருமானே நமஸ்காரம். (21)

அடைய நீயறிந் தொருவரா லுன்னையிங் கறிவரி யாய்போற்றி
தொடைய தாமுல கனைத்தையுந் தரித்தொரு துவக்கறு சுடர்போற்றி
முடிவு மாதியுங் கண்டுநீ முதன்முடி வின்றிய முதல்போற்றி
வடிவி யாவையு முடையையா யுனக்கொரு வடிவிலா தாய்போற்றி

இதன் பொருள்.

அடைய நீ யறிந்து —அனைத்தையும் நீ அறிந்து
ஒருவரால் உன்னை —எவராலும் உன்னை
இங்கு அறிவரியாய்போற்றி —இவ்விடத்தில் அறிதற்கு அரியவனாய் இருக்கின்றவனே நமஸ்காரம்

| | |
|---|---|
| தொடையதாம் | —கோவையான |
| உலகனைத்தையும் தரித்து | —சர்வ ஜகத்தையும் தாங்கியும் |
| ஒருதுவக்கறுசுடற்போற்றி | —ஒருபந்தமுமில்லாத ஜோதிஸ்வரூபனே நமஸ்காரம் |
| முடிவு மாதியும் கண்டு நீ | —நீ ஆதியும் அந்தமும் பார்த்தும் |
| முதல்முடிவின்றியமுதல்போற்றி | —ஆதியும்அந்தமும்இல்லாதமுதலே நமஸ்காரம் |
| வடிவுயாவையும்உடையையாய் | —சகல வடிவங்களையும் உடையவனாகி |
| உனக்கொரு வடிவிலாதாய் போற்றி | உனக்கு யாதொரு வடிவமும் இல்லாதவனே நமஸ்காரம். |

**கருத்து.** தான் யாவும் அறிந்தவனாய்த் தன்னை ஒருவரும் அறியமுடியாதவனும், சர்வசகத்துக்களையும் தான் தாங்கிக்கொண்டவனாயிருந்தும், தனக்கொரு பந்தமில்லாதவனும், ஆதி அந்தங்களைத் தான் கண்டிருந்தும், தனக்கொரு ஆதி அந்தம் இல்லாதவனும், தான் சகல வடிவங்களையும் உடையவனாகியும் தனக்கு ஒரு வடிவும் இல்லாதவனுமிருக்கின்றவனே நமஸ்காரம். (22)

அகில மாயகி லத்தினுக் கதிபனா யகிலமு மொன்றின்றி
நிகழு ஞானமா நிமலனே போற்றிநீ நினைந்திடு மிடமெல்லா
முகம தாயொரு முகமுனக் கின்றியே யிருக்குநான் முகபோற்றி
திகழு முன்னொளி யாற்றிகழ்ந் திலங்கிய சின்மய வொளிபோற்றி

## இதன் பொருள்.

| | |
|---|---|
| அகிலமாய் | —சர்வ சகத்தாயும் |
| அகிலத் துக்கதிபனாய் | —சர்வ சகத்துக்கும் அதிபதியாயும் |
| அகிலமு மொன்றின்றி | —ஒரு சகமும் இல்லாமல் |
| நிகழும் ஞானமாம் | —விளங்குகின்ற ஞானமாயும் (உள்ள) |
| நிமலனே போற்றி | —நிர்மலனே நமஸ்காரம் |
| நீ நினைந்திடுமிடமெல்லாம் முகமதாய் | நீ நினைக்கும் இடங்களெல்லாம் முகமாயும் |
| ஒருமுகம் உனக்கின்றியே | — ஒரு முகமும் உனக்கு இல்லாமலே |
| இருக்கு நான் முகபோற்றி | —இருக்கின்ற நான்கு முகங்களை உடையவனே நமஸ்காரம் |
| திகழு முன்னொளியால் | —விளங்குகின்ற உனது சுயம்பிரகாசத்தால் |
| திகழ்ந்திலங்கிய | —பிரகாசித்து விளங்குகின்ற |
| சின்மய ஒளிபோற்றி | —ஞானப்பிரகாசனே நமஸ்காரம். |

**கருத்து.** சர்வசகத்தாயும், சர்வத்துக்கும் அதிபனாயும், ஒரு சகத்தும், இல்லாதவனாயும், நினைக்கும் இடங்களெல்லாம் முகமாயும், தனக்கு ஒரு முகமும் இல்லாதவனாயும், நான்கு முகங்களை உடையவனாயும், சுயம்பிரகாசனாய் விளங்கிக் கொண்டிரானின்ற ஞானப்பிரகாசனே நமஸ்காரம். (23)

வேத மோதிய விமலனே போற்றிவே தாந்தமெய்ப் பொருள்போற்றி
காது மாபிற விக்கடல் கடத்துநின் கழலிணைப் புணைபோற்றி
சாத லானதும் பிறப்புமற் றிருந்துள சம்புவே கழல்போற்றி
யேது மாயினுய் போற்றியோ ரளவிலா வின்பமே கழல்போற்றி

இதன் பொருள்.

| | |
|---|---|
| வேதம் ஓதிய | —வேதங்களைச்சொல்லி அருளிய |
| விமலனே போற்றி | —மலமற்றவனே நமஸ்காரம் |
| வேதாந்த மெய்ப் பொருள் போற்றி | } வேதமுடிவான உண்மைப் பொருளே நமஸ்காரம் |
| காதுமா பிறவிக்கடல் கடத்தும் | } வருத்துகின்ற பெரிய பிறவியாகிய கடலினின்றும் கரையேற்றுகின்ற |
| நின்கழலிணைப் புணைபோற்றி | —உன் திருவடிகளாகிய தெப்பத்துக்கு நமஸ்காரம் |
| சாதலானதும் பிறப்புமற்று | —பிறப்பும் இறப்பும் இல்லாமல் |
| இருந்துள | —என்றும் நித்தியமாயுள்ள |
| சம்புவே கழல்போற்றி | —சம்புவே உனது திருவடிகட்கு நமஸ்காரம் |
| ஏதுமாயினுய் போற்றி | —எல்லாம் தானானவனே நமஸ்காரம் |
| ஓரளவிலாவின்பமே | —அளவற்ற இன்பமாயிருக்கின்றவனே |
| கழல்போற்றி | —உன் திருவடிகட்கு நமஸ்காரம். |

கருத்து. வேதங்களைச்சொல்லி அருளியவும் வேதாந்தப் பொருளாயும், பிறவிப் பெருங்கடலைத்தாண்டிக் கரையேற்றுவிக்கின்ற தெப்பமாகிய திருவடிகளை உடையவனாகியும், பிறப்பு இறப்பு அல்லாதவனாயும், எல்லாமாயும், அளவற்ற ஆனந்தமயமாயும் இருக்கின்றவனே உனது திருவடிகட்கு நமஸ்காரம். (24)

தோத்தி ரஞ்செயப் படுபவ னாகியத் தோத்திரந் தானாகி
ஏத்தி நிற்பவ னாகியே யிருந்துள விறைவனே கழல்போற்றி
காத்தி ரந்தனை யெடாவகை மெய்யினைக் காணவே நினைவோர்க்கு
நேத்தி ரங்கொடுத் தருளியங் கவர்துயர் நீக்குநின் மலபோற்றி

இதன் பொருள்.

| | |
|---|---|
| தோத்திரம் செய்யப்படுபவனாகி | —துதிக்கப்படுகின்றவனாயும் |
| அத்தோத்திரம் தானாகி | —அத்தோத்திரமாயும் |
| ஏத்தி நிற்பவனாகியே | —துதித்து நிற்கின்றவனாகவே |
| இருந்துள இறைவனே | —இருக்கின்ற கடவுளே |
| கழல்போற்றி | —(உனது) திருவடிகட்கு நமஸ்காரம் |
| காத்திரந்தனை யெடாவகை | —உடலை இனி அடையாவண்ணம் |

மெய்யினைக் காணவே —உண்மைப் பொருளைத்தானாகத் தெரிசிக்கவே
நினைவோர்க்கு —நினைக்கின்றவர்களுக்கு
நேத்திரம் கொடுத்தருளி —ஞானக்கண்ணைக் கொடுத்தருளி
அங்கு அவர் தம் துயர் தீர்க்கும் } அவ்விடத்திலே அவர்களுக்கு உற்றதான துன்பத்தைப் போக்குகின்ற
நின்மல போற்றி —நிர்மலனே நமஸ்காரம்.

**கருத்து.** துதிக்கப்படுபவனும், துதியும், தானேயாகியும் தானே துதிக்கின்றவனாகியும் இருக்கின்றவனே உனக்கு நமஸ்காரம். உடலை இனி எடுக்காவண்ணம் உண்மைப் பொருளைக்காண ஞானக்கண்ணைக் கொடுத்தருளி அவர்கள் துன்பத்தைப்போக்கும் நிமலா நமஸ்காரம். (25)

வேறு.

ஈசனுக் கன்ப ரானேர்க் கன்பனு மிறைவ போற்றி
நாசமற் றிருப்பாய் போற்றி நாரணற் கினியாய் போற்றி
யாசையற் றவர்க்கு ஞான மருளுவாய் போற்றி யல்லற்
பாசமுற் றவரை வெய்ய பவத்திடும் பகைவ போற்றி

இதன் பொருள்.

ஈசனுக்கு அன்பர் ஆனேர்க்கு —சிவனுக்குத் தொண்டரானவர்களுக்கு
அன்பனு மிறைவபோற்றி —தொண்டனாகிய தேவனே நமஸ்காரம்
நாசமற்றிருப்பாய் போற்றி —(என்றும்) அழியாமல் (ஏககபாவமாய்) இருக்கின்றனே நமஸ்காரம்
நாரணற்கினியாய் போற்றி —விஷ்ணுவுக்கு அன்புடையவனே நமஸ்காரம்
ஆசையற்றவர்க்கு —நிராசையுள்ளவர்களுக்கு
ஞானம்அருளுவாய்போற்றி—ஞானத்தைக் கொடுத்தருளுகின்றவனேநமஸ்காரம்
அல்லல் பாசமுற்றவரை —துன்பமாகிய பாசம் பொருந்தினவர்களை
வெய்யபவத்திடும் —கொடியதான பிறவியி (கடலி) ல் தள்ளும்
பகைவ போற்றி —சத்துருவே நமஸ்காரம்.

**கருத்து.** சிவனுடைய தொண்டர்களுக்குத் தொண்டனும், அழிவற்றவனும், விஷ்ணுவுக்கு அன்புடையவனும், ஆசையற்றவர்களுக்கு ஞானத்தைக் கொடுப்பவனும், பாசபந்தமுடையாரைப் பிறவிப் பெருங்கடலில் தள்ளுகின்ற சத்துருவாயுமிருக்கின்றவனே நமஸ்காரம். (26)

அண்டருக் கதிப ராலு மறிந்திடற் கரியாய் போற்றி
பண்டுடைப் புவன மெல்லாம் படைத்திடும் பரனே போற்றி
கண்டிடப் படாதே யெல்லாங் கண்டிருக் கின்ருய் போற்றி
புண்டரீ கத்தில் வாழும் புனிதனே போற்றி போற்றி

### இதன் பொருள்.

அண்டருக்கு அறியாராலும் —தேவர்கட்குத் தலைவர்களாலும்
அறிந்திடற் கரியாய்போற்றி —உணர்தற்கு அரியவனே நமஸ்காரம்
பண்டுடைப் புவனமெல்லாம் —பழமையான உலகங்கள் அனைத்தையும்
படைத்திடும் பரனேபோற்றி —சிருஷ்டிசெய்யும் ஆதிப்பொருளே நமஸ்காரம்
கண்டிடப்படாதே —உன்னை (எவ்வளவைகளாலும் காணமுடியாமல்
எல்லாம் கண்டு இருக்கின்றாய் போற்றி } யாவற்றையும் (சாக்ஷியாக) இருந்து பார்த்துக்கொண்டிருப்பவனே நமஸ்காரம்
புண்டரீகத்தில் வாழும் —தாமரை மலரில் வசிக்கின்ற
புனிதனே போற்றி போற்றி—பரிசுத்தமானவனே உனக்கு அநேக நமஸ்காரம்.

**கருத்து.** தேவர்களுக்குத் தலைவராலும் அறியமுடியாதவனும், பழமையான உலகங்களையெல்லாம் படைத்தவனும், யாவராலும் எவ்வளவைகளாலும் காணமுடியாமலிருப்பவனும், தான் மாத்திரம் சாக்ஷியாயிருந்துகொண்டு சகல பொருள்களையும் பார்ப்பவனும், தாமரைமலரில் வசிக்கும் சுத்தமான புண்ணியனுமிருக்கின்றவனே உனக்கு அநேக நமஸ்காரம். (27)

பத்தியா லிமையோ ரிங்ஙன் பங்கயத் தவனைப் போற்றிச்
சுத்தவே தங்க ளோதித் துணிந்தமெய்ப் பொருளை யெங்கட்
கத்தனே யருள்செய் யென்ன வவர்களா தரத்தைக் கண்டே
புத்தியாற் போதோ னுண்மைப் பொருளையே புகல லுற்றான்

### இதன் பொருள்.

பத்தியால் இமையோர் இங்ஙன் பங்கயத்தவனைப் போற்றி } அன்பினால் தேவர்கள் இவ்வாறு தாமரைமலரில் வசிக்கின்ற பிரமனை நமஸ்கரித்து ஸ்துதி
சுத்த வேதங்கள் ஓதி —பரிசுத்தமாகிய வேதங்களைச் சொல்லி
துணிந்த மெய்ப்பொருளை —நிச்சயித்த சத்தியப்பொருளை
எங்கட்கு —அடியோங்களுக்கு
அத்தனே அருள்செய் என்ன } ஐயனே! சொல்லி அருள்வாயாக என்று வினவுதலும்,
அவர்கள் ஆதரத்தைக்கண்டு—அத்தேவர்கள் கொண்டுள்ள அன்பைக்கண்டு
போதோன் புத்தியால் உண்மைப் பொருளையே } தாமரை மலரில் வசிக்கின்ற பிரமதேவன் அறிவினால் சத்தியப் பொருளையே
புகலலுற்றான் —சொல்லத் தொடங்கினான்.

**கருத்து.** இவ்விதம் பத்தியுடன் தேவர்கள் பிரமதேவனைத் தோத்திரஞ் செய்து ஆதரவுடன் வேதங்களின் உண்மைப்பொருளைக் கேட்டார்கள். பிரமதேவனும் அவர்கள் அன்பைக்கண்டு அதனைச் சொல்லலுற்றான். (28)

முதலாவது அத்தியாயம் முற்றிற்று.

# இரண்டாவது

## ஐதரேய உபநிடத தாற்பரியம் உரைத்த அத்தியாயம்.

### அத்தியாய அவதாரிகை.

மேலே சொன்னவாறு வணங்கித்துதித்து வினவிய தேவர்கட்குப் பிரமதேவன் சகல வேதார்த்தங்களேயும் சொல்ல இச்சையுடையவனாய், பரமாத்வைத நிற்குண சொருபமான வேதார்த்தம் லக்ஷணாவிருத்தி (அனுபவத்து)க்கன்றி அபிதாவிருத்தி (வாச்சியார்த்தத்து)க்கு விஷயமாகாதது என்பது தோன்ற வேதபாகிய மத நிச்சயமும், கண்டனமும்செய்து வேதார்த்தத்துக்குச் சத்தியத்துவ ஹானி வாராதபடி சங்கை சமாதான பூர்வம் சாதிக்கின்றார்.

### பாட்டு அவதாரிகை.

வேதப்பொருளாயுள்ள பிரம்மம் வாச்சியார்த்தத்து (சொல்லு)க்கு விஷயம் ஆகாது என்பதைக் கூறுகின்றார்.

மறைக ளோதுபொரு டன்னை யெவ்வழியி னாலு மெக்கலேயும் வல்லரா
மறிஞ ராலுமறை யப்ப டாதறிய வாத ரிக்குமிகு மன்பினீர்
செறித லாலதனை நான்வி ளங்கவுரை செய்வ னொன்றுபடு சிந்தையா
னெறிய தாகவிது கேண்மி னென்றயனு நேர்மை யானபொரு ளோதுவான்.

### இதன் பொருள்.

மறைக ளோதுபொருள் தன்னை—நான்கு வேதங்களாலும் சொல்லப்படுகின்ற தானாகிய பொருளை

எவ்வழியினாலும் —எந்தவிதத்தினாலும்

எக்கலேயும் வல்லராம் அறிஞராலும் } எவ்வகைப்பட்ட கலேகளிலும் தேர்ந்தோராகிய சத்துக்களாலும்

அறையப்படாது —சொல்லமுடியாது (அப்பொருளை)

அறியஆதரிக்குமிகு அன்பினீர்—தெரியவேண்டி விரும்புகின்ற மிகுந்த அன்புடைய தேவர்களாகிய நீங்கள்

செறிதலால் —(உபதேசிக்கவேண்டுமென்று இங்கு) குழுவியதால்

அதனை நான் விளங்க உரை செய்வன் } அப்பொருளை (சொல்ல முடியாததாயினும்) நான் உங்களுக்குத் தெரியும்படி உபதேசிக்கின்றேன்.

ஒன்றுபடு சிந்தையால் —(சிரத்தை பொருந்திய) ஒருமித்த மனதுடனே

நெறியதாக —ஒழுங்காக

இது கேண்மின் என்று —இவ்வுபதேசத்தைக் கேளுங்களென்று

அயனும் நேர்மையான பொருள் ஓதுவான் } பிரமதேவனும் உள்ளபடியாயுள்ள உண்மைப் பொருளைச் சொல்லலுற்றான்

**கருத்து.** எவ்வித சேதனர்களினாலும் ஒருபொழுதும் வேதார்த்தமானது நிற்குணமாய் ஜாதி, குணம், கிரியை முதலிய சப்தங்களால் குறிப்பிட்டுக் காட்டமுடியாததலாலும், அபிதாவிருத்தியா (பதங்களின் வாச்சியார்த்தத்தா) ல் தெரிவிக்கமுடியாததலாலும், அப்படியாயினும், பக்தர்களாகிய நீங்கள் வேண்டுகின்றமையால் லக்ஷ்ணா (அனுபவ) விருத்தியால் நான் சொல்லுகிறேன். சிரத்தையுடன் கேளுங்கள் என்று சொல்லத்தொடங்கினார்.

**பதசாரம்**—கூறப்படும் பிரமான்ம லக்ஷணமுடைய இவ்வேதப் பொருளானது நிற்குணமானதுபற்றியும், அதில் சப்தவிருத்தி நிமித்தங்களான ஜாதி, குணம், கிரியை முதலியவைகள் இல்லாமையாலும் அபிதாவிருத்திக்கு விஷயமாகாதெனத் தெரிவிப்பான். **'அறையப்படாது'** எனவும், ஆயினும் லக்ஷணா விருத்தியால் உபதேசிக்கின்றேன் எனத் தெரிவிப்பான் **'அதனை நான் விளங்க உரைசெய்வேன்'** எனவும் கூறினார். (1)

### அவதாரிகை.

ஜலத்தின் விகாரங்களான அலை, திவலை, நுரை முதலியவைகள் காரணமான ஜல சொரூபத்துக்கு அன்னியமில்லை. அதுபோல நாமரூப விகாரத் தன்மையுடைய காரிய ஜகமும் இரண்டற்ற பிரமத்துக்கு அன்னியமில்லை எனச் சாதிக்கவேண்டிப் பிரமத்தினின்றும் சிருஷ்டி கூறத் தொடங்குவார் சிருஷ்டிக்கு முன் உலகனைத்தும் காரண பிரம மாத்திரமாக இருந்தது என்று கூறுகின்றார்.

### வேறு.

சின்மாத் திரமா யுள்ளவெறுஞ் சிவனே திகழ்வா னியாதுக்கு
முன்மாத் திரமும் வேறில்லை முற்று மவனே மொழிவுற்ற
நன்மாத் திரமா யான்மாவென் றுரைக்கு நாமத் தினையுடையான்
றன்மாத் திரமே யாகியவத் தன்மை யான சங்கரன்றான்.

### இதன் பொருள்.

சின் மாத்திரமாயுள்ள —அறிவு மாத்திரமாயிருக்கின்ற
வெறுஞ்சிவனே திகழ்வான் —சிவன் (பிரமம்) ஒருவனே பிரகாசிக்கின்றான்
யாதுக்கு முன்மாத்திரமும் வேறில்லை } (எப்பொழுதும் இரண்டல்லாத அந்தப் பிரம சொரூபத்தைத்தவிர இந்த உலகம் சிருஷ்டிக்கு) முன்னமே அன்னியமாகக் கொஞ்சங்கூட இல்லை.
முற்றும் அவனே —இவையெல்லாம் அவனேதான்
மொழிவுற்ற நன்மாத்திரமாய் —சொல்லப்பட்ட சத்மாத்திரமாகி
தன்மாத்திரமேயாகிய —தான் (சொரூப)மாத்திரமேயாகிய
அத்தன்மையான சங்கரன்தான்—அத்தன்மையுடைய சங்கரனவன்
ஆன்மா என்று உரைக்கு நாமத்தினை உடையான் } ஆன்மா என்று உரைக்கும் பெயரை உடையவன்

**கருத்து.** சிருட்டிக்குமுன் இச்சகமெல்லாம் சந்மாத்திரமான ஆன்மா என்னும் பெயரையுடைய சேதனமாத்திரமாயிருந்தது.

**பதசாரம்**—சுழுத்தியில் ஞானேந்திரிய, கர்மேந்திரிய அந்தக்கரணமுதலிய வியாபாரங்களை நீங்கி, ஜீவன் அதிட்டான மாத்திரமாய் வாசனை சேஷிதனை (மிச்சமா)க அடங்கியிருப்பதுபோல் சகல ஜீவர்களும் நாமரூப பிரதீதிய (தோற்ற) மற்று வாசனைமாத்திர சேஷிதர்களாய் சுத்தமாகிய ஆன்மா என்ற அதிஷ்டான பரமசிவ சைதன்யத்தில் அவ்வியாகிரு (வெளிப்படா) த ரூபமாய் அடங்கியிருந்தார்கள் என்பதைக்காட்ட **'முன் மாத்திரமும் வேறில்லை'** என்றார்.

சிவம் என்பது மங்களம். ஆநந்தமே மங்களமாதலால் எது நாசமுடையதோ அது அமங்களமான துக்கமாகும். அத்தன்மை இல்லாதது ஆனந்தம் எனப்படும். அவ்வானந்தமும் விளங்காவிடில் சூனிமாய்விடும். விளங்குவது சித்து. அந்தச்சித்து அழியுந்தன்மை இல்லாததனால் சத்துஎனப்படும். அவ்விதம் சச்சிதானந்தமாகிய (சத்து × சித்து × ஆனந்தம்) சிவம் நிர்மலமாதலால் சுத்தம் எனப்படும். சுத்தம் என்றதனால் சுழுத்தியானந்தம் அஞ்ஞானமாகிய மல் முடையது ஆதலால் அதை அநிர்த சடதுக்கமென்றும், ஆன்மசுகம் அத்தன்மை இல்லாதது என்றும், அச்சுழுத்தி ஆனந்தம் சிவா (பிரம்மா) னந்தத்தைத் தவிர வேறில்லையாயினும், அஞ்ஞானத்தோடும் கூடியதாக விளங்குதலால் அதைஅசுத்தமெனவும், அந்தச் சுழுத்தி ஆனந்தத்தைத்தவிர ஜீவர்களுக்குத் துக்க நிவர்த்தியின்பொருட்டுப் பிரமானந்தம் வேறு இருக்கிறதெனவும் கொள்க.

அவ்வித சிவம் சுத்தமாதலால் மலமில்லாத் தன்மையினால் நிராவரணமாதலால் ஒன்றேதான். எப்படி ஒன்றாகுமென்னில் எக்காலத்திலும் இரண்டாவது வஸ்துவை உடையது எதுவோ அது துக்கமெனப்படும். எது துக்கரூபமோ அது அநிர்த சடமெனப்படும். அது சச்சிதானந்தம் ஆகாது. ஆகையால் புறமதங்களிற் சொல்லிய சடங்களான பிரதானம், பரமாணு இவை முதலியவைகள் காரணமன்று எனத் தெரிவிப்பான், சஜாதீய, விஜாதீய, சுகத பேதரகிதமாகிய ஆன்மவஸ்துவை **"சின்மாத்திரமாயுள்ள வேறுஞ் சிவனே"** எனவும் கூறினார். எல்லாவற்றிலும் தன்சுபாவத்தால் வியாபித்துச் சகலங்களையும் இல்லாமல் புசித்து, தான்மாத்திரமாய் விளங்கிய சைதன்னியத்தை **"ஆன்மா என்றுரைக்கு நாமத்தினையுடையான்"** எனவும் கூறினார். (2)

## அவதாரிகை.

அசங்க உதாசீனனாகித் தன்னிலேயுள்ளவனான அத்துவிதீய அசரீர ஆன்ம வஸ்துவுக்கு ஜகத் சிருஷ்டியைச் செய்யவேண்டுமென்ற பரியாலோசனைரூபமான பார்வை எவ்விதமாகப் பலிக்கும் எனச் சங்கைவர, அதில் ஆரோபிதமாகச் சகல சக்தியும் உண்டு என்பது பற்றி அவ்வீக்ஷண (பார்வை) ப் பிரகாரத்தைக் கூறுகின்றார்.

---

× பேதமடையாததாம். பேதம் பயத்துக்குக் காரணம். பயம் துக்கமாகும்.

வேறு.

அந்தத்துள தன்சத்தியை யடைவுற்றுள தாமிச்
செந்துக்கள்செய் கருமந்திகழ் காலம்பரு வஞ்செய்
தெந்தப்பொருள் களுமாக்குவ னெனவேயிறை யுன்னுப்
பந்தப்பட முன்போற்பல வுலகங்கள்ப டைத்தான்.

இதன் பொருள்.

| | |
|---|---|
| அந்தத்துள தன் சத்தியை | —முடிவிலுள்ள தனக்கு (அபின்னமாயுள்ள) சத்தியின் விளங்குதலை |
| அடைவுற்றுள தாமிச் செந்துக்கள் | பொருந்தி (விவகார சித்தியின் பொருட்டுத்) தன்னிலுள்ளடங்கினவா (யொப்பி) ய இச்சீவர்கள் |
| செய் கருமம் திகழ்காலம் பருவம் செய்து | புரிந்த கர்மங்கள் பலத்தை முன்னிட்டு விளங்கும் காலத்தில் பக்குவப்படுத்தி |
| எந்தப்பொருள்களுமாக்குவன் எனவே | எவ்வகைப்பட்ட பொருள்களையும் சிருஷ்டிப்பேன் என்று |
| இறை உன்னு | —பரமசிவன் திருவுள்ளம்கொண்டு |
| பந்தப்பட | —ஜீவர்கள் பந்தம் அடையும்படி |
| முன்போல் | —முன் கல்பத்தில் உள்ளபடி |
| பலவுலகங்கள் படைத்தான் | —பல உலகங்களையும் சிருஷ்டித்தான். |

**கருத்து.** சென்ற கல்பத்தில்போல காலபரிபாகத்தாலும் தன்னிடம் லீனமாயிருந்த பிராணிகளின் கர்ம வாசனைவசத்தாலும் தன் மாயா சக்தியிலுள்ள சத்துவகுணத்தால் இறைவன் இந்த சகத்தனைத்தையும் சிருஷ்டிப்போம் என்று எண்ணிச் சிருஷ்டித்தான்.

பதசாரம்—முந்திய கல்பத்தில் சஞ்சிதங்களான பிராணி கருமங்கள், தங்கள் காரணமான மாயையோடுங்கூடச் சங்கார சமயத்தில் வாசனை அவசேஷங்களாகப் பரசிவ சொரூபத்தில் லயித்து, காலவசத்தால், தங்கள் தங்கள் பலத்தைக் கொடுப்பதையே முக்கிய லக்ஷணமாயுள்ள அதிசயத்தை அவைகள் அடைகின்றன எனத் தெரிவிக்க, **'திகழ்காலம்'** எனவும், அக்காலபாகத்தால் சிருஷ்டாவாகிய பரமசிவத்துக்குச் சிருஷ்டிவிஷய இச்சா காரணமான முன் பின் என்ற பரியாயமுடைய சம்ஸ்காரம் உதிக்க, அதனால் திரிகுணமுடைய மாயாசக்தியானது இராஜஸ தாமஸ குணங்களின் சம்பந்தமில்லாத காலத்தில் சுத்த சத்துவமாய் விளங்குதலால் அவ்வுபாதிபலத்தால் சிருஷ்டி செய்ய இச்சாரூப நோக்கமுண்டாயிற்று எனத் தெரிவிக்க **'தன்சத்தியை அடைவுற்று'** எனவும் கூறினர். (8)

(அவதாரிகை)

முந்திய பாடலில் உலகங்கள் படைத்தான் என்பது உலக சிருஷ்டியை முன்னிட்டிருத்தலால் அச்சிருஷ்டி விராட்டைப் பற்றியதாகும். அஃதெங்ஙன மெனில், சுருதியில் பசுவை வரவழைத்தல் முதலானவைகள் காண்பதனாலும் அவைககள் அபாணி பாதனான ஈசுவரனுக்குத் தகாததனாலும், பூதசிருஷ்டியைச் சொல்லாததனாலும் தனது விகாரமான ஜகத்தை முன்னிட்டுத் தனக்கு அத்துவிதம் கூடுதலாலும், விராட்டே சிருட்டா என்று பூர்வபக்ஷம்வர, இவ்விடத்தில் பூத சிருஷ்டியும் சொன்னதாகவே சேர்த்துக்கொள்ளத் தக்கது. எங்ஙனமெனில், உபசங்கார வாக்கியத்தில் பூத பௌதிகங்கள் அனைத்துக்கும் பிரஞ்ஞையே ஆதாரவு. பிரஞ்ஞானம் பிரமமென்று பிரஞ்ஞான பிரம விஷய சிரவணம் காணப்படுவதனால் ஈசுவரனே சிருஷ்டா. இங்ஙனமாயின் சுருதியில் காரியமனைத்தும் பிரஞ்ஞா நேத்திரமென்று சொல்லியபடி ஏகத்துவமும் கூடிவருமென்றும், பசு முதலிய வரவழைத்தல் துதியென்றும் ஆகும் சித்தாந்தத்தால், ஈசுவர சொரூபத்தைத் தடஸ்த லக்ஷணத்தால் காண்பித்துச் சுருதியிற் சொல்லிய லோகபாலாதி சிருஷ்டிக்கும் சிருஷ்டாவைக் காண்பிப்பதே பிரயோசனமாதலால், சொன்னதுபோலவே கொண்டும், அவன் இந்த எல்லையைப் பிளந்தென்றது முதலிய வாக்கியங்களும் பிரஞ்ஞையே பிரதிஷ்டை, பிரஞ்ஞானமே பிரமமென்ற பிரமான்ம வாக்கியத்தைக் கூறுகின்ற வாக்கியத்துக்குச் சேஷமாதலால் அவ்வனைத்தையும் நீக்கி யார் ஆன்மா என்றது முதலான வாக்கிய சம்பந்தத்தால் கூறப்பட்ட பொருளைச் சொல்ல வேண்டிக் கால்கட்டை விரல்களாலும், பிரமரந்திரத்தாலும், சரீரத்தை அடைந்தான் என்ற சுருதிபலத்தால் அவ்வித பிரவேசமுடைய கிரியாசத்தி, ஞானசத்தி இவைகளையுடைய பிரமங்களுக்குள் யார் ஆன்மா என உண்டாகும் சமுசயம்போலவே வாதிகளின் விவாதத்துக்கும் அதுவே காரணமாதலால் அவ்விவாதத்தைக் கூறுகின்றார்.

பரமன்செய லறியாதுப டைத்தானுல கெல்லா
மரனென்பவ ரரியென்பவ ரயனென்பவர் சிலரிந்
திரனென்பவன் முதற்றேவர்கள் செயலென்பவர் சடமா
மருவுங்குண வடிவென்பவ ரணுவென்பவர் மயலால்.

இதன் பொருள்.

| | |
|---|---|
| பரமன் செயல் அறியாது | —பரமசிவத்தின் கிருத்தியத்தினது இயல்பை அறியாமல் |
| மயலால் உலகெல்லாம் படைத்தான் | } மயக்கத்தினால் சகல ஜகத்தையும் சிருஷ்டித்தவன் |
| (சிலர்) அரனென்பவர் | —உருத்திரனென்று (சிலர்) சொல்லுவார்கள் |
| (சிலர்) அரியென்பவர் | —திருமாலென்று (சிலர்) சொல்லுவார்கள் |

(சிலர்) அயனென்பவர் —பிரம்மாவென்று (சிலர்) சொல்லுவார்கள்

(சிலர்) இந்திரன் என்பவன் முதற்றேவர்கள் செயலென்பவர் } இந்திராதி தேவர்களின் தொழில் என்று சாதிப்பவர்கள் (சிலர்)

(சிலர்)சடமா மருவும் குணவடிவு என்பவர் } திரிகுணத்தின் சமுதாயம் பொருந்திய சுதந்தரமாயுள்ள ஜடமான மாயை என்று கூறுகின்றவர்கள் (சிலர்)

சிலர் அணு என்பவர் —சிலர் அணுக்கள் என்பார்கள்.

**கருத்து.** இப்படி சிருஷ்டாவான ஆத்மாவை மோகத்தினால் சிலர் ருத்திரனென்றும், சிலர் விஷ்ணுவென்றும், சிலர் பிரமன் என்றும், சிலர் இந்திராதி தேவர்கள் என்றும் மற்றும் சிலர் (சாங்கியர்கள்) முக்குணமுடையதும் ஸ்வதந்திரமானதும் (வேதாந்தமதத்தில் கூறிய மாயையைப்போல் பரதந்திரமன்று) கேவலம் ஜடமானதுமான பிரதானம் என்றும், சிலர் அணுக்கள் என்றும் சொல்லுகிறார்கள்.

**பதசாரம்**—சேதனம் ஜகத்துக்குப் பிரதானகாரணமாயின் ஜகத்தில் ஜடத்துவம் காணக்கூடாது. அதனால் அதற்கு அனுகுணமான சேதனா சேதன ரூபமாகிய சத்துவரஜோதமோ குணசமுதாயம் பொருந்திய மாயையைப் பிரதானம் என்று சாங்கியர் கூறுகின்றார்கள் என்பது காட்ட **'மருவுங்குணவடிவேன்பவர்'** என்றார். அற்பமான பரிமாணங்களையுடைய மிருத்தினவயவங்களால் பெரிதான பரிமாணங்களை உடைய கடாதிகளின் ஆரம்பம் காணப்படுதலால் பிரிதிவி முதலியவற்றின் பரமாணுக்கள் துவியணுவாதிகளின் சேர்க்கை வியாபாரத்தால் பிராணிகளின் அதிஷ்டத்தை முன்னிட்டு ஜகத்தை உற்பத்திசெய்கின்றன என்பது தார்க்கிகர்கள் வாதம் தோன்ற **'அணுவேன்பவர்'** என்று கூறினர். (4)

## வேறு.

வானிலா மோசை யென்பார் வந்தொரு கணத்திற் றோன்றி
யானியாம் புந்தி யென்பா ரடையவுங் கெட்டு நின்ற
சூனிய மென்பார் பூத மென்னவே சொல்லா நிற்ப
ரானவா றுருவ ராலன் றடையவு மியல்பே யென்பார்.

## இதன் பொருள்.

(சிலர்) வானிலாம் ஓசை என்பார் —(சிலர்) பெருமைபொருந்திய நாதமே பிரமம் என்பார்கள்.

வந்தொரு கணத்தில்தோன்றி ஆனியாம் புந்தி என்பார் } (சிலர்) க்ஷணிக விஞ்ஞானம் என்பார்கள்

அடையவும் கெட்டு நின்ற சூனியம் என்பார் } சத்து, அசத்து, சதசத்து என்னும் இலக்கணமெல்லாமிறந்த சூனியம் என்பார்கள்.

பூதம் என்னவே சொல்லா நிற்பர்—பூதங்களென்றே சொல்லுகின்றார்கள்.
ஆனவாறு ஒருவராலன்று —உற்பத்தியானவிதம் ஒருவராலும் அல்ல
அடையவும் இயல்பே என்பார் —எல்லாம் சுபாவம்தான் என்பார்கள்

**கருத்து.** சிலர் சப்தம் என்றும், சிலர் பிராந்தியடைந்த புத்தியுள்ளவர்கள் க்ஷணத்தில் நசிக்கக்கூடிய விஞ்ஞானம் என்றும் சொல்லுகிறார்கள். சிலர் ஒன்றுமில்லாத சூனியமென்றும், சிலர் பிரமையால் ஜகத்தே சிருஷ்டியற்றதெ (சுபாவமெ) ன்றும் நினைக்கிறார்கள்.

**பதசாரம்**—சத்தப் பிரமமே அருத்தரூபமான பிரபஞ்சமாக விவர்த்திக்கின்றது என்ற சத்தகாரண வாதிகள் வையாகரிணிகள் என்பார் "**வானிலாம் ஓசையென்பார்**" என்றார். (5)

(அவதாரிகை)

சுருதிகள்; காலம், சுபாவம், நியதி, சகசம், பூதங்கள் முதலியவற்றை உலககாரணங்களாக விகற்பிக்கின்றன. அதையே உலககாரண வாதிகள் ஆதாரவாகக் காண்பிக்கின்றார்கள். ஆயினும், அவன் இச்சித்தான் என்றும், வெகு பிரஜைகளாக ஆவோமென்றும், தானே தன்னை ஜகமாகச் செய்தான் என்றும், கூறும் சுருதியாலும், எனக்கு வேறாகக் கிஞ்சித்தும் இல்லை; கயிற்றில் மணிகள்போல என்னிடத்தில் பிரபஞ்சங்களனைத்தும் கோக்கப்பட்டிருக்கின்றன, முக்கியனான அதிஷ்டானப் பொருளாகிய என்னாலேயே பிரகிருதியானது சராசரமான அனைத்தும் சிருஷ்டிக்கின்றது என்னும் ஸ்மிருதியாலும், அம்மதவாதங்கள் கண்டிக்கப்படுகின்றன. ஆகையால் அம்மதவாதங்கள் சுருதி ஸ்மிருதிகளுக்கு விருத்தமெனக் கூறுகின்றார்.

தத்தமா லான பெத்தவா தியர்தாந் தங்களிற் றாங்கடார்க் கங்கள்
கத்திடா நிற்கும் பரிசெலாஞ் சுருதி மிருதிகள் கருதிய தழிக்குஞ்
சுத்தமா விருத்த மாகுமென் றேயென் றுணிவுதொல் பிறவியிற் சுழல்வார்
சித்தமா னதுபோ யிவற்றிலே காதல் செய்யுமுன் செய்ததீ வினைபால்.

இதன் பொருள்.

| | |
|---|---|
| தத்தமாலான | —தங்கள் தங்களால் இயன்றமட்டும் |
| பெத்தவாதியர்தாம் | —அவிவேகிகளான பந்தமுடையவாதியர்கள் |
| தங்களில் தாங்கள் | —தங்கள் தங்களுக்குள்ளே |
| தார்க்கங்கள் கத்திடா நிற்கும் பரிசெலாம் | பலம்போல அதற்குத் தகுந்த யுக்திகளைச் சொல்லிக் கதறுகின்ற தன்மையெல்லாம் |
| சுருதி மிருதிகள் கருதியது அழிக்கும் | சுருதி ஸ்மிருதிகளின் அபிப்பிராயத்தைக் கெடுக்கும், (ஆகையால்) |
| சுத்தமா விருத்தம் ஆகுமென் றே என் துணிவு | முற்றிலும் மாறுபாடாகும் என்பதே எனது நிச்சயமான அபிப்பிராயம். |

| | |
|---|---|
| தொல்பிறவியில் சுழல்வார் | —அநாதியான பிறவியிற்கிடந்து சுழல்கின்றவர்களுடைய |
| சித்தமானது | —மனமானது |
| முன்செய்த தீவினையால் | —முன்செய்துள்ள கொடிய கர்ம வாசனையினால் |
| இவற்றிலே போய் | —இவைகளிற் சென்று |
| காதல் செய்யும் | —விரும்பிப் பற்றிநிற்கும் |

**கருத்து.** அவிவேகிகளான பந்தமுடைய மதவாதியர்கள் கொள்கைகளுக்குத் தக்கபடி தங்களால் கூடியவரையில் யுக்திகளையும் சொல்லுகிறார்கள். ஆனால், இந்த வாதங்களெல்லாம் சுருதி ஸ்மிருதிகளுக்கு முற்றிலும் விரோதமென்பது என்னுடைய அபிப்பிராயம். பாவிகளுக்குப் பூர்வசமஸ்கார வாசனையால் இவற்றில் ருசி ஏற்பட்டு மனம்பற்றி நிற்கின்றது.

**பதசாரம்**—இவ்வாறு சாங்கியாதி மதக்கொள்கைகள் சுருதி ஸ்மிருதிகளுக்கு விரோதமாயிருத்தலால் அவைகள் அப்பிரமாணங்கள் ஆகும். அப்படியிருக்கப் பெரியோர்களுக்கு அதில் பிரவிருத்திவரக் காரணம் யாதெனில் அவர்கள் முன்செய்த பாவமேதான் எனக்காட்ட **"சித்தமானது போய் இவற்றிலே காதல்செய்யு முன்செய்த தீவினையால்"** என்றார். (6)

## அவதாரிகை.

வேத விருத்தமான அம்மதங்களில் புகுந்தவர்களும் காலாந்தரத்தில் வேத மார்க்கத்தைச் சார்ந்து மோக்ஷம் அடைவார்களெனக் கூறுகின்றார்.

காதலாற் றத்தங் கடவுள ருளாற் காலபா கத்தின லறத்தாற் [வே
போதரா தலினல் வேதவா தத்தைப் பொருந்துவர் புகன்றவவ் வடை
வேதவா தத்தை மேவுநல் வினையால் விருப்பின லங்குமே வினருஞ்
சாதலா னதுவும் பிறத்தலு மில்லாத் தற்பதந் தன்னையே சார்வார்.

## இதன் பொருள்.

| | |
|---|---|
| காதலால் | —(உண்மையை அடைய வேண்டுமென்னும்) ஆசையால் |
| தத்தம்கடவுளாருளால் | —தாங்கள் உபாசித்துவந்த கடவுளர்களின் திருவருள் பிரசாதத்தாலும் |
| காலபாகத்தினல் | —வெகுகாலத்தின் பின்பு அடையத்தக்க பரிபக்குவத்தாலும் |
| அறத்தால் | —தாங்கள் புரிந்துள்ள புண்ணிய விசேஷத்தாலும் |
| போதர் ஆதலினல் | —தகுந்த விவேகிகளாவதனாலும் |
| வேத வாதத்தைப் பொருந்துவர் | —சோபானக் கிரமமாக வைதிக மார்க்கத்தை அடைவார்கள் |

மேவுநல் வினையால் —பொருந்திய நல்ல பூர்வபுண்ணியத்தாலும்
விருப்பினுல் —(முத்தி) ஆசையினுலும்
புகன்ற அவ்வடைவே —முன் சொன்ன அவ்வண்ணமே
அங்குவேதவாதத்தை மேவினரும் } அவ்விடத்தில் வைதிக மார்க்கத்தை அடைந்தவர்களும்
சாதலானதுவும் பிறத்தலும் இல்லா—இறப்பதும் பிறப்பதும் இல்லாத
தற்பதந்தன்னையே சார்வார் —மோக்ஷத்தையே அடைவார்கள்

**கருத்து.** அம்மதவாதிகளும் தங்கள் நூல்களின் பலாபலத்தை விசாரித்துத் தங்கள் நூல்கள் துர்ப்பலமுடையதென்றும், வேதம் அபௌருஷேயமாதலா (மனிதராற் செய்யப்படாததா) ல் குற்றமற்ற பிரமாணமென்றும் நிச்சயஞ்செய்து அம்மார்க்கங்களை விட்டொழித்து சன்மார்க்கமாகிய வைதிக மார்க்கத்தை அடைந்து படிப்படியாய் வேதத்தாற் சொல்லப்பட்ட முத்தியை வெகு காலத்துக்குப் பிறகு அடைவார்கள்.

**பதசாரம்**—தங்கள் நூல்களின் ஆராய்ச்சியால் சாமானியமாக ஆன்மானுன்ம விவேகத்தை அடைந்தவர்கள் அவ்விவேகத்தைச் சிறப்பித்துக் கூறுகின்ற மேலான வைதிக மார்க்கத்தைச் சோபான முறையில் அடைவார்கள் என்று கூற "போதாதலினுல் வேதவாதத்தைப் பொருந்துவர் புகன்ற அவ்வடைவே" என்ருர். (7)

### அவதாரிகை.

அடுத்த இரண்டு செய்யுள்களால் வேதநெறியை விட்டுப் புறநெறியிற் செல்பவரைப் பழித்துக் கூறுகின்ருர்.

### வேறு.

வான் கருதிய மறைவழியை விட்டுமேற்
ருன் கருதுதல் சதுரன்று தன்கையிற்
றேன் கமழ் திரளையைச் சிந்திச் சந்தியாற்
கூன் கையில் விழுந்துளி கொண்ட தன்மையே.

### இதன் பொருள்.

வான்கருதிய மறை வழியைவிட்டு—மேலாகிய வேதமார்க்கத்தைத் தள்ளி
மேல்தான் கருதுதல் சதுரன்று } அன்னிய மார்க்கங்களைத் தான்கொண்டு ஒழுகுதல் அறிவாளிகளுக்கு அழகன்ரும் (அங்ஙனம் ஒழுகுதல்)
தன் கையில் தேன் கமழ் திரளையைச் சிந்தி } தன் உள்ளங்கையிலுள்ள தேன் மணக்கும் பாயசத்தைச் சிந்திவிட்டு
சந்தியான் கூன்கையில் விழும் துளிகொண்ட தன்மை } இடைவழியே முழங்கையில் ஒழுகிய துளியை நக்கும் தன்மைபோலாகும்.

**கருத்து.** வைதிகமார்க்கத்தை விட்டுவிட்டு அன்னிய மார்க்கங்களை அநுசரித்தல் கையகத்துள்ள பாயசத்தைச் சிந்துமாறுவிட்டுவிட்டு முழங்கையில் ஒழுகும் பாயசத் துளியை நக்குவதுபோலாம். (8)

### வேறு.

பொருள்கொண்ட மறைநின்று புகல்கின்ற துணரார்
மருள்கொண்ட சமயங்கள் மதிகொண்டு கதியா
வருள்கொண்ட பரவின்ப மடைகின்ற வவர்பே
ரிருள்கொண்டு பொருள்கொண்ட வவரன்றி யிவரார்.

### இதன் பொருள்.

| | |
|---|---|
| பொருள்கொண்ட | —உண்மைப் பொருளைத் தன்னுள் கொண்டுள்ள |
| மறைநின்று புகல்கின்ற துணரா | —வேதங்கள் பிரதி பாதிப்பதை அறியாது |
| மருள்கொண்ட சமயங்கள் | —மயக்கத்தைத் தரக்கூடிய அன்னிய மதங்களை |
| மதிகொண்டு கதியா | —நற்கதியைக் கொடுக்கக்கூடியன என எண்ணி |
| அருள்கொண்ட பர இன்பம் அடைகின்ற அவர் | அருள்பொருந்திய பேரின்பத்தை அடைகின்ற அவர்கள் |
| பேர் இருள்கொண்டு | —(பிரகாசத்தின் உதவியைக் கொள்ளாமல்) பெரிய இருளைக்கொண்டே |
| பொருள் கொண்ட அவரன்றி இவரார் | கடபடாதி பதார்த்தங்களைப் பார்க்கின்ற அவர்களல்லாமல் வேறு இவர் யார். |

**கருத்து.** வைதிகமார்க்கத்தைவிட்டு வேறு மார்க்கங்களால் முத்தி அடையலாமென நினைக்கின்றவர்கள், வெளிச்சத்தைக்கொண்டு பொருள்களைக் காணாது இருட்டைக்கொண்டு காண்பாரைப் போன்றவர்களாவார்கள். (9)

### (அவதாரிகை)

வேதம் கூறுவதே சத்தியம். ஏனைய சமயநூல் கூறுவது அசத்தியமாகும். வேதம் கூறியபொருள் சத்தியமாயின் கிரியாகாரக முதலிய பேதங்களால் பின்னமான ஜகத்தும் ஆத்ம வஸ்துவைப்போல் வேதப் பொருளாதலால் சத்தியமாக வேண்டுமெனச் சங்கிக்க அச்சங்கையால் நேரிட்ட ஜகத்தின் சத்தியத்தை வியாவகாரிகமாகக் கூறவேண்டி, ஞானகாண்டம், கர்மகாண்டம் என்று வேதார்த்தம் இருவகைப்படும். அதில் ஞானகாண்டத்தில் சத்தியஞானாதி லக்ஷணமுடைய பொருள் பரமார்த்தம் என்றும், கருமகாண்டத்தில் சுவர்க்க அபூருவ தேவாதி லக்ஷணமுடைய பிரபஞ்சம், பரமான்மாவினிடத்தில் மாயையாற் கற்பிதம் என்றுங்கூற, அக்கர்மகாண்டம் கற்பிதத்துவித விஷயமாயின் வேதார்த்தம் அனைத்தும் சத்தியம் என்ற நியமம் சித்தியாது என்று சங்கிக்க அதற்குச் சமாதானம் கூறுகின்றார்.

### வேறு.

வேதமோ தியதே மெய்ப்பொருண் மற்றைப்
பொருளெலா மித்தையே வேத
மோதமே வுற்ற பொருளிரு வகையா
மதனிலொன் றென்றுமுண் மையதாய்ப்
போதவா னந்த மாகிய சிவனும்
பொருளது மற்றதப் பொருளி
லேதமே வாமற் கற்பித மாகு
மற்றத னியல்பையு மிசைப்பாம்.

### இதன் பொருள்.

| | |
|---|---|
| வேதமோதியதே மெய்ப்பொருள் | வேதங்களாற் சொல்லப்பட்ட பொருளே சத்தியம் |
| மற்றைப் பொருளெலா மித்தையே | புறமதங்களில் கூறப்பட்ட பொருளெல்லாம் அசத்தியமே |
| வேதம் ஓதமேவுற்றபொருள் இருவகையாம் | வேதம் நிரூபிக்கத் தொடங்கிய பொருள் இரு வகையாகும் |
| அதனில் ஒன்று | —அவ்விரண்டில் ஒருபொருள் |
| என்றுமுண்மையதாய்ப் போதவானந்தமாகிய சிவனும்பொருளது | எக்காலத்தும் சத்திய ஞானனந்த சொரூபமுடைய சிவன் என்னும்பொருளேயாகும் |
| மற்றது | —மற்ற பொருள் |
| அப்பொருளில் ஏதம்மேவாமல் கற்பிதமாகும் | அந்தப் பரமசிவனுகிய வஸ்துவில் குற்றத்துக்கு இடமின்றி அத்தியாசத்தால் தோன்றிய மாயையால் கற்பிக்கப்பட்டதாகும் |
| அதனியல்பையும் இசைப்பாம் | அந்தக் கற்பிதப் பொருளின் தன்மையையும் சொல்வாம். |

**கருத்து.** வேதத்தாற் கூறப்பட்டதே உண்மைப் பொருள்ஆகும். மற்றைய புறமதங்கள் கூறுவன எல்லாம் பொய்யேயாம். வேதத்தாற் கூறப்பட்ட பொருள்கள் இரண்டு. அவற்றுள் ஒன்று சத்திய ஞானனந்த சொரூபமாகிய சிவன். மற்ருென்று அத்தியாசத்தால் தோன்றிய மாயா கற்பிதமாம். அதன் இயல்பையும் இனிச்சொல்வாம், (10)

### (அவதாரிகை)

ஜகத்தின் வியாவகாரிக சத்திய இலக்கணத்தையும், வியாவகாரிகம், பாரமார்த்திகம் இரண்டையும் வேதம்கூறும் எனவும் கூறுகின்ருர்.

சொல்லுறு நின்ற கற்பிதப் பொருளிற்
சொல்லள வுள்ளதா யுண்மைக்
கில்லையா யிருக்குஞ் சிலபொருள் சொல்லி
லில்லையாஞ் சிலபொரு ளவைதான்
எல்லைதீர் வானு திகளுஞ்சுத் திகையி
லிரசதா திகளுமா முன்னைத்
தொல்லையாம் பொருளுங் கற்பிதத் துண்மைப்
பொருளையுஞ் சொல்லுகற் சுருதி.

இதன் பொருள்.

| | |
|---|---|
| சொல்லுறு நின்ற | —கூறப்படுகின்ற |
| கற்பிதப் பொருளில் | —கற்பிதமான வஸ்துக்களுள் |
| சொல் அளவுள்ளதாய் | —(சில பொருள்கள்) கற்பிதமாக விவகாரத்தில் மட்டும் இருக்கின்றனவாயும் |
| உண்மைக்கு இல்லையாயிருக்கும் சிலபொருள் | சிலபொருள் பரமார்த்தத்தில் இல்லாதனவாயும் இருக்கும் |
| சொல்லில் இல்லையாஞ் சிலபொருள் | சிலபொருள்கள் விவகாரத்திலும்கூடச் சத்தியமாயில்லாதனவாகும் |
| அவைதான் | —அவ்விருவகைகளும் |
| எல்லை தீர்வானுதிகளும் | —அளவற்ற ஆகாய முதலிய ஜகங்களும் |
| சுத்திகையில் இரசதாதிகளுமாம் | இப்பியிற் காணப்படும் வெள்ளி முதலியவைகளுமாம் |
| முன்னை | —முன்சொன்ன |
| தொல்லையாம் பொருளும் | —பழமையான சித்கனப் பொருளையும் |
| கற்பிதத்து உண்மைப்பொருளையும் | —விவகாரத்தில் ஒப்பிய சத்தியப்பொருளையும் |
| சொல்லுகற் சுருதி | —நல்லவேதங்கள் கூறும். |

**கருத்து.** கற்பிதப் பொருள்களில் சில விவகாரத்தில்மட்டும் இருக்கின்றனவாயும், பரமார்த்தத்தில் இல்லாதனவாயுமிருக்கும். சிலபொருள்கள் விவகாரத்திலும்கூட இல்லாதனவாயிருக்கும். அவை ஆகாய முதலிய சகமும் இப்பியிற் றோன்றும் வெள்ளியுமாகும். வேதமானது பழமையான சித்கனப் பொருளையும் விவகாரத்தில் ஒப்பிய சத்தியப் பொருளையும் கூறும்.

**பதசாரம்**—சுருதியில் சொல்லிய ஞானகாண்டத்தின் பயனான பரமார்த்தப் பொருளாகிய பரமசிவனும், கர்மகாண்டத்தின் பயனான பரமார்த்தம் அபரமார்த்தம் என்ற இருவகைப் பேதமுடைய வேதத்தின் கெவுணப் பொருளாகிய இகபரமாகிய ஜகமும் ஆகிய இரண்டில் பரமசிவம் சத்தியம்

என்றும் வியாவகாரிகப் பிராதிபாசிக ஜகத்து பிராந்தியால் தோன்றியதென் றும் தெளியும்பொருட்டு "எல்லை தீர்வானுதிகளும் சுத்திகையிலிரசதாதிகளு மாம்" எனவும், பிரமாதா (ஜீவன்) இருக்கும் அளவில் அபாதிதமாயுள்ளது வியாவகாரிக சத்தியம் என்றுகாட்ட "சொல்லளவுள்ளதாயுண்மைக் கில்லை யாயிருக்கும் சிலபொருள்" எனவும் பிரமாதா இருக்கும் காலத்தே பாதித மாயுள்ளது பிராதிபாசிக சத்தியம் எனக்காட்ட "சொல்லிலில்லையாஞ் சில பொருள்" எனவும் பிரமாதா இருக்கும் காலத்தும் இல்லாக்காலத்தும் வாதிக் கப்படாத பாரமார்த்திக சத்தியத்தைத் "தொல்லையாம் பொருளும்" எனவும் கூறினர். (11)

அவதாரிகை.

அன்னிய மதங்கள் இவ்விருவகைச் சத்தியங்களையும் கூறாமல் வேதாந்தத் தில் விவகாரத்தின்பொருட்டு மாத்திரம் ஒப்பிய வியவகாரிக சத்தியத்தையே பரமார்த்த சத்தியமாகக்கொண்டு பஞ்சபூத பாஞ்ச பவுதிக திரவிய குணாதி களையன்றி மற்றொன்றுங் கூறுவனவல்ல. ஆதலால் பரமார்த்த சித்கனப் பிரதிபாதனப் பிரசத்தியே அவற்றிற் கிடையாதெனவும், சத்தியத்தை ஒரு திருஷ்டியாற் கூறினும் அன்னியமாகச் சொன்னால் அவைகள் பிராந்தங்கள் எனவும் கூறுகின்றார்.

வேறு.

கனவிற் கற்பிதப் பொருள்போல் வாதக் கலக்கங்கள்
நனவிற் கற்பிதப் பொருளை நவிலா ரினியச்சிற்
கனவத் துவிதத் தினிலென் னுற்றவ ரொருகண்ணாற்
சொனவத் தகவும் மெய்யே மெய்யிற் றோன்றாதே.

இதன் பொருள்.

| | |
|---|---|
| வாதக்கலக்கங்கள் | —மயக்கமுற்ற பௌத்தர், வைசேடியர் என்னும் மதவாதியர்கள் |
| கனவில் கற்பிதப்பொருள் போல் | சொற்பனத்தில் கற்பிதமாயுள்ள பொருள்களைப் போல |
| நனவிற் கற்பிதப் பொருளை நவிலார் | சாக்கிரத்தில் கற்பிதமாயுள்ள வஸ்துக்களைப் பொய்யென்று கொள்ளாமல் மெய்யென்று கூறு கின்றார்கள். |
| இனியச் சிற்கனவத்து விதத்தினில் என்னுற்றவர் | அவர்கள் இனிமேல் அந்தச் சத்திய சித்கன மாகிய அத்துவிதத்தினில் எதனை அடைந்த வர்கள் ஆவார்கள். |
| ஒரு கண்ணால் | —வியாவகாரிகம் என்னும் ஒரு திருஷ்டியால் |
| சொன அத்தகவும் மெய்யே | —சொல்லிய அந்த நீதியும் மெய்யே |
| மெய்யில் தோன்றாதே | —ஆயினும் பரமார்த்திக திருஷ்டியால் நிலையாகாது |

**கருத்து.** பௌத்தர், வைசேடிகர் முதலானவர்கள் சொப்பனத்தில் காணும் பொருள்கள் எப்படி கற்பிதமோ அதுபோல் சாக்கிரத்தில் காணும் பொருள்களையும் கற்பிதமென்று எண்ணாது மெய்யெனக் கூறுகின்றார்கள். விவகார தசையில் மெய்யாயுள்ளதையே மெய்யெனக் கூறுவார்களாயின் சத்திய சித்கனமாகிய அத்துவிதத்தில் எவ்வாறு பிரவிர்த்திப்பார்கள். விவகாரதசையில் அந்த நீதி மெய்யேயாயினும் பரமார்த்திகத்தில் அது பொய்யேயாகும். (12)

(அவதாரிகை)

வியாவகாரிக சத்தியமே பாரமார்த்திக சத்தியம் அன்றேல் ஒரு வஸ்துவே சத்தியமாகவும், அசத்தியமாகவும் எவ்விதம் பவிக்கக்கூடுமெனில், மிருத்திகை (மண்) இருக்கும் காலத்திலேயே கடாதிகள் அழியக் காணப்படுவதனால் காரண காரிய உபாதி பேதங்களால் கூடும் எனக் கூறுகின்றார்.

போதக் கண்ணிற் பூதம் பொய்யே மெய்யேயாம்
பேதக் கடகுட் டியமா நிகழ்விற் பேதந்தா
னோதப் படுசுத் திகைவெள் ளியின்மெய் யுணர்காலம்
சேதப் படுமக் கனவிற் பெரிதுந் திடனுண்டே.

இதன் பொருள்.

| | |
|---|---|
| போதக் கண்ணில் பூதம் பொய்யே | ஞானதிருஷ்டியில் ஆகாசாதி பூதங்கள் எல்லாம் அசத்தியமேயாகும் |
| பேதக்கட குட்டியமா நிகழ்வில் | —வேறாகிய கடம், சுவர் முதலியவைகளின் விளங்குதலை அபேக்ஷித்து |
| மெய்யேயாம் | —அவ்வாகாசாதிகளும் சத்தியமேயாகும் |
| பேதந்தான் ஓதப்படு சுத்திகை வெள்ளியின் மெய் | பேதமாகிய கடாதிகளும் சொல்லப்படுகின்ற கிளிஞ்சில் வெள்ளியைப்பார்க்கினும் சத்தியமே யாகும் |
| உணர்காலம் | —சாக்கிராவஸ்தையானது |
| சேதப்படும் அக்கனவில் பெரிதும் திடன்உண்டு | அழிகின்ற அக்கனவைப் பார்க்கிலும் மிகவும் சத்தியமாகும். |

**கருத்து.** ஞானதிருஷ்டியில் ஆகாசாதிபூதங்கள் பொய்யே. வேறாகிய கட முதலியவைகளை அபேக்ஷித்து ஆகாசாதி பூதங்கள் மெய். அக்கடாதிகளும் கிளிஞ்சில் வெள்ளியைப் பார்க்கிலும் மெய். சாக்கிராவஸ்தையானது சொற்பனத்தைப் பார்க்கிலும் மெய். (13)

(அவதாரிகை)

அசத்தியத்தில் சத்தியபுத்தி செய்தது பற்றிப் பரமார்த்த திருஷ்டியில் புறமதங்கள் பிராந்தங்களாயின் மித்தைகளான அம்மார்க்கங்கள் எங்ஙனம் வேதமார்க்கத்தால் பரமார்த்த சத்திய சித்கன பரமசிவத்தை அடைவிக்கக் காரணமாகும்

எனில், அசத்தியமாயினும் சொப்பனத்தில்கண்ட சில பொருள் சாக்கிரத்தில் சத்தியமான சிலபொருளை அடைவிப்பது போலாகுமெனக் கூறுகின்றார்.

வேறு.

கனவிற் கண்ட பொரு ளனவிற் காணும் பொருளைக் காட்டலா
னினைவிற் சமய நெறி வேத நெறிக்கு நிமித்த மாநினைமின்
வினவிற் சமய நெறிவிட்டு மேலாம் வேத நெறி நின்றோன்
பினையச் சமயத் தவன் குறுகிற் பிராயச் சித்தஞ் செயல்வேண்டும்.

இதன் பொருள்.

| | |
|---|---|
| கனவில்கண்ட பொருள் | —சொப்பனத்தில்கண்ட வஸ்துவானது |
| நனவில் காணும் பொருளைக் காட்டலால் | சாக்கிரத்தில் இனிக்காணும் பொருளைச் சூசிப்பிக்கின்றதனால் |
| நினையில் | —நினைக்குங்கால் |
| சமயநெறி | —இச்சமய மார்க்கங்கள் (பிராந்தங்களாயினும்) |
| வேதநெறிக்கு நிமித்தமா நினைமின் | வேதமார்க்கத்தை அடைவித்தற்குக் காரணமாகுமென நினையுங்கள் (அப்படியாயினும்) |
| வினவில் சமயநெறிவிட்டு | —ஆராயுமிடத்து அந்நியமார்க்கங்களைத் தள்ளி |
| மேலாம் வேதநெறி நின்றோன் | —உயர்வாகிய வேதமார்க்கத்தில் நிற்கின்றவன் |
| பினை அச்சமயத்து | —பிற்பாடு அம்மார்க்கங்களில் |
| அவன் குறுகில் | —அவன் (மறந்தேனும்) சேருவானேயாகில் (திரும்ப இந்த வைதிகமார்க்கத்துக்கு வந்தால்) |
| பிராயச் சித்தம் செயல்வேண்டும் | —பிராயச் சித்தம் பண்ணவேண்டும். |

**கருத்து.** கனவிற்கண்ட பொருளானது இனி சாக்கிரத்தில் காணும் பொருளை எவ்வாறு சூசிப்பிக்கின்றதோ அவ்வாறு புறமதமார்க்கங்கள் பிராந்தங்களாயினும், வைதிக நெறியை அடைவித்தற்குக் காரணங்களாகும். வைதிக மார்க்கத்திலிருந்து அந்நிய நெறிக்குச் சென்று மீண்டும் அந்நெறிக்கு வருவானாயின் அவனுக்குப் பிராயச் சித்தம் பண்ணவேண்டும். (14)

(அவதாரிகை)

இதுமுதல் எட்டுக் கவிகளால் புறமத வாதியர்களைப் பாஷண்டிகளென்றும், அவர்களுடன் சம்பந்தம் முதலியன கூடாதென்றும் கூறுகின்றார்.

வேறு.

தன்னிய சமயிக டங்கள் பந்தியி
லுன்னுத லவர்களோ டுறவு பண்ணுதல்
புன்னிய மறந்திடப் புகுதல் செய்திடிற்
பன்னுக சாந்தி ராயணம் பகர்ந்தவா.

### இதன் பொருள்.

தன்னிய சமயிகள் தங்கள்பந்தியில் — (வேதமார்க்கத்திலுள்ளவர்கள்) இழிந்த மதத்திலுள்ளவர்களுடைய பந்தியிலே

உண்ணுதல் —(மறந்தேனும்) இருந்து புசித்தலும்

அவர்களோடு உறவு பண்ணுதல்—அவர்களோடு உறவாடிச் சிநேகித்தலும்

புண்ணியமறிந்திடப் புகுதல் செய்திடில் — ஓமம், தானம், வேதாத்தியயனம், தருமா தருமங்கள் முதலியவற்றையும் அவற்றைப்பற்றி வரும் விவேக ஞானத்தையும் தெரிந்துகொள்ளப் புகுதலும் செய்தால்

பண்ணுக சாந்திராயணம் பகர்ந்தவா — ஒவ்வொன்றிற்கும் சுருதியிற் சொல்லிய முறைப்படியே சாந்திராயண விருதம் அநுஷ்டிக்க வேண்டும்.

**கருத்து.** வைதிகமார்க்கத்திலுள்ளவர்கள் புறமதஸ்தர்களினுடைய பந்தியிலிருந்து உண்டாலும், அவர்களோடு உறவுகொண்டாலும், விவேகஞானத்தைத் தெரிந்துகொள்ளும்பொருட்டு அம்மதங்களில் பிரவேசித்தாலும் சுருதி சொல்லிய பரிகாரப்படி சாந்திராயண விருதம் அனுஷ்டிக்கவேண்டும். (15)

### வேறு.

வேதஞ் சொன படியொழிய வேறுஞ் சில கலைகளினை
யோதுந் திற மருவிமறை யோதுஞ் சிவ னிருகமலப்
பாதந் தொழ நினைவிலர்கள் பாடண் டிக ளெனவறிக
தீதொன் றிய வவர்களொடு சேருங் கலர் களுமவர்கள்.

### இதன் பொருள்.

வேதஞ் சொனபடி யொழிய —வேதம் கூறிய மார்க்கத்தைவிட்டு

வேறுஞ் சில கலைகளினை —அன்னிய மார்க்கங்களிலுள்ள சில சாஸ்திரங்களை

ஓதுந்திறமருவி —அப்பியாசிக்கும் திறமடைந்து

மறையோதுஞ் சிவனிரு கமலப் பாதந்தொழ நினைவிலர்கள் — வேதங்களாற் சொல்லப்படும் சிவபெருமானுடைய உபய சரணாரவிந்தங்களைத்தொழ நினைவில்லாதவர்களும்

பாடண்டிகள் என அறிக —பாஷாண்டிகளெனவே அறியக் கடவீர்

தீது ஒன்றிய —குற்றம் பொருந்திய

அவர்களொடு சேரும் கலர்களும் அவர்கள் — அவர்களோடு சேருகின்ற கீழ்மக்களும் அந்தப் பாஷாண்டிகளேயாம்.

**கருத்து.** வைதிக மார்க்கத்தைவிட்டு அன்னிய மதநூல்களைக் கற்றுணர்ந்து வேதங்களால் ஓதப்படுகிற சிவபெருமானை நினையாதவர்கள் பாஷாண்டிகளாம். அவர்களோடு சேரும் கீழ்மக்களும் பாஷாண்டிகளே. (16)

எனில், அசத்தியமாயினும் சொப்பனத்தில்கண்ட சில பொருள் சாக்கிரத்தில் சத்தியமான சிலபொருளை அடைவிப்பது போலாகுமெனக் கூறுகின்றார்.

வேறு.

கனவிற் கண்ட பொரு ணனவிற் காணும் பொருளைக் காட்டலா
னினைவிற் சமய நெறி வேத நெறிக்கு நிமித்த மாநினைமின்
வினவிற் சமய நெறிவிட்டு மேலாம் வேத நெறி நின்றோன்
பினையச் சமயத் தவன் குறுகிற் பிராயச் சித்தஞ் செயல்வேண்டும்.

இதன் பொருள்.

| | |
|---|---|
| கனவில்கண்ட பொருள் | —சொப்பனத்தில்கண்ட வஸ்துவானது |
| நனவில் காணும் பொருளைக் காட்டலால் | சாக்கிரத்தில் இனிக்காணும் பொருளைச் சூசிப்பிக்கின்றதனால் |
| நினையில் | —நினைக்குங்கால் |
| சமயநெறி | —இச்சமய மார்க்கங்கள் (பிராந்தங்களாயினும்) |
| வேதநெறிக்கு நிமித்தமா நினைமின் | வேதமார்க்கத்தை அடைவித்தற்குக் காரணமாகுமென நினையுங்கள் (அப்படியாயினும்) |
| வினவில் சமயநெறிவிட்டு | —ஆராயுமிடத்து அந்நியமார்க்கங்களைத் தள்ளி |
| மேலாம் வேதநெறி நின்றோன் | —உயர்வாகிய வேதமார்க்கத்தில் நிற்கின்றவன் |
| பினை அச்சமயத்து | —பிற்பாடு அம்மார்க்கங்களில் |
| அவன் குறுகில் | —அவன் (மறந்தேனும்) சேருவானேயாகில் (திரும்ப இந்த வைதிகமார்க்கத்துக்கு வந்தால்) |
| பிராயச் சித்தம் செயல்வேண்டும் | —பிராயச் சித்தம் பண்ணவேண்டும். |

கருத்து. கனவிற்கண்ட பொருளானது இனி சாக்கிரத்தில் காணும் பொருளை எவ்வாறு சூசிப்பிக்கின்றதோ அவ்வாறு புறமதமார்க்கங்கள் பிராந்தங்களாயினும், வைதிக நெறியை அடைவித்தற்குக் காரணங்களாகும். வைதிக மார்க்கத்திலிருந்து அந்நிய நெறிக்குச் சென்று மீண்டும் அந்நெறிக்கு வருவானாயின் அவனுக்குப் பிராயச் சித்தம் பண்ணவேண்டும். (14)

(அவதாரிகை)

இதுமுதல் எட்டுக் கவிகளால் புறமத வாதியர்களைப் பாஷண்டிகளென்றும், அவர்களுடன் சம்பந்தம் முதலியன கூடாதென்றும் கூறுகின்றார்.

வேறு.

தன்னிய சமயிக டங்கள் பந்தியி
லுன்னுத லவர்களோ டுறவு பண்ணுதல்
புன்னிய மறிந்திடப் புகுதல் செய்திடிற்
பன்னுக சாந்தி ராயணம் பகர்ந்தவா.

### இதன் பொருள்.

தன்னிய சமயிகள் தங்கள்பந்தியில் — (வேதமார்க்கத்திலுள்ளவர்கள்) இழிந்த மதத்திலுள்ளவர்களுடைய பந்தியிலே

உண்ணுதல் —(மறந்தேனும்) இருந்து புசித்தலும்

அவர்களோடு உறவு பண்ணுதல்—அவர்களோடு உறவாடிச் சிநேகித்தலும்

புண்ணியமறிந்திடப் புகுதல் செய்திடில் — ஓமம், தானம், வேதாத்தியயனம், தருமா தருமங்கள் முதலியவற்றையும் அவற்றைப்பற்றி வரும் விவேக ஞானத்தையும் தெரிந்துகொள்ளப் புகுதலும் செய்தால்

பண்ணுக சாந்திராயணம் பகர்ந்தவா — ஒவ்வொன்றிற்கும் சுருதியிற் சொல்லிய முறைப்படியே சாந்திராயண விருதம் அநுஷ்டிக்க வேண்டும்.

**கருத்து.** வைதிகமார்க்கத்திலுள்ளவர்கள் புறமதஸ்தர்களினுடைய பந்தியிலிருந்து உண்டாலும், அவர்களோடு உறவுகொண்டாலும், விவேகஞானத்தைத் தெரிந்துகொள்ளும்பொருட்டு அம்மதங்களில் பிரவேசித்தாலும் சுருதி சொல்லிய பரிகாரப்படி சாந்திராயண விருதம் அனுஷ்டிக்கவேண்டும். (15)

### வேறு.

வேதஞ் சொன படியொழிய வேறுஞ் சில கலைகளினை
யோதுந் திற மருவிமறை யோதுஞ் சிவ னிருகமலப்
பாதந் தொழ நினைவிலர்கள் பாடண் டிக ளெனவறிக
தீதொன் றிய வவர்களொடு சேருங் கலர் களுமவர்கள்.

### இதன் பொருள்.

வேதஞ் சொனபடி யொழிய —வேதம் கூறிய மார்க்கத்தைவிட்டு

வேறுஞ் சில கலைகளினை —அன்னிய மார்க்கங்களிலுள்ள சில சாஸ்திரங்களை

ஓதுந்திறமருவி —அப்பியாசிக்கும் திறமடைந்து

மறையோதுஞ் சிவனிரு கமலப் பாதந்தொழ நினைவிலர்கள் — வேதங்களாற் சொல்லப்படும் சிவபெருமானுடைய உபய சரணாரவிந்தங்களைத்தொழ நினைவில்லாதவர்களும்

பாடண்டிகள் என அறிக —பாஷாண்டிகளெனவே அறியக் கடவீர்

தீது ஒன்றிய —குற்றம் பொருந்திய

அவர்களொடு சேரும் கலர்களும் அவர்கள் — அவர்களோடு சேருகின்ற கீழ்மக்களும் அந்தப் பாஷாண்டிகளேயாம்.

**கருத்து.** வைதிக மார்க்கத்தைவிட்டு அன்னிய மதநூல்களைக் கற்றுணர்ந்து வேதங்களால் ஓதப்படுகிற சிவபெருமானை நினையாதவர்கள் பாஷாண்டிகளாம். அவர்களோடு சேரும் கீழ்மக்களும் பாஷாண்டிகளே. (16)

## வேறு.

மையறு வேத மார்க்க மறந்துபா டண்ட மார்க்கக்
கையரான் மயக்கப் பட்டுக் கலியுகந் தன்னி லுள்ளோர்
மெய்யுணர் வனந்தா னந்த மேனியாஞ் சிவனைப் பூசை
செய்யவா தரியார் செய்வார் தம்மையுஞ் செய்ய வொட்டார்.

### இதன் பொருள்.

கலியுகம் தன்னில் உள்ளோர் —கலியுகத்தில் உள்ளவர்கள்
மையறு வேதமார்க்கம் மறந்து—குற்றமற்ற வைதிக மார்க்கத்தை மறந்து
பாடண்டமார்க்கக் கையரான் மயக்கப்பட்டு — பாஷண்ட மார்க்கத்தைப் பின்பற்றுகின்ற கீழ்மக்களால் மோகம் செய்யப்பட்டு
மெய்யுணர் வனந்தானந்த மேனியாஞ் சிவனை — சத்திய ஞான அனந்தானந்தமே திருமேனியாக உடைய சிவபெருமானை
பூசைசெய்ய ஆதரியார் —வேதமார்க்கத்தால் பூசிக்க அன்புகொள்ளார்
செய்வார் தம்மையும் —அப்படிப் பூசிக்கின்றவர்களையும்
செய்யவொட்டார் —பூசிக்காதபடி தடுப்பார்கள்.

**கருத்து.** கலியுகத்தில் பாஷண்டமார்க்கத்தைப் பின்பற்றுகிறவர்களுடைய துர்ப்போதனையால் வைதிகமார்க்கத்தை மறந்து சத்திய ஞானானந்த வடிவமாய்த் திகழ்கின்ற சிவபெருமானைப் பூசிக்கமாட்டார்கள். அத்துடன் அமையாது அவர்கள் அவ்வாறு பூசை புரிவாரையும் புரியாது தடுப்பார்கள். (17)

காதும்வா தியர்க ளாலே கலியுகத் துள்ளோர் கெட்டு
வேதமோ தியவா செய்யார் மிருதிசொல் வதுவுஞ் செய்யார்
பூதியு மணியார் ஞான சாதன பூதமாக
வோதுவ தொன்றும் செய்யா ரொழிந்ததே யுகந்துசெய்வார்.

### இதன் பொருள்.

காதும் வாதியர்களாலே—(வேத மார்க்கத்தைக்) கெடுக்கும் பாஷண்டிகளாலே
கலியுகத்துள்ளோர் கெட்டு—கலியுகத்திலுள்ளவர்கள் கெட்டு
வேதம் ஓதியவா செய்யார்—வேதம் கூறியபடி (சத்காரியங்களைச்) செய்யமாட்டார்கள்
மிருதி சொல்வதுவுஞ் செய்யார் — ஸ்மிருதிகளால் நியமிக்கப்பட்ட (தேவ பிதிர்கரும முதலிய) வைகளையுஞ் செய்யமாட்டார்கள்
பூதியும் அணியார் —(வேதத்திற் சொல்லியபடி) விபூதியால் உத்தூளண திரிபுண்டரமும் தரிக்கமாட்டார்கள்

| | |
|---|---|
| ஞானசாதன பூதமாக ஓதுவதொன்றுஞ் செய்யார் | ஞானசாதன காரியமாகச்சொல்லியவைகளில் ஒன்றையேனும் அனுஷ்டிக்கமாட்டார்கள் |
| ஒழிந்ததே உகந்துசெய்வார் | —(வேதத்தில்) விலக்கப்பட்டவைகளையே மிகவும் பிரியத்தோடு செய்வார்கள். |

**கருத்து.** கலியுகத்திலுள்ளவர்கள் பாஷண்டிகளுடைய துர்ப்போதனையால் கெட்டு வேதங்களால் விதிக்கப்பட்ட கர்மாக்கள் ஒன்றையும் செய்யமாட்டார்கள். பூதிசாதனங்களை அணியமாட்டார்கள். வேத விருத்துவமான காரியங்களையே மிகவும் பிரீதியாகச் செய்வார்கள்.

**பதசாரம்**—"**ஞான சாதனபூதமாக ஓதுவதொன்றும் செய்யார்**" என்பதனுல் தினந்தோறும் சிவபூசை சிவாலயதரிசனம், உத்தம சிவ க்ஷேத்திரங்களிற்சென்று வசித்தல் முதலாயுள்ள நற்காரியங்களைச்செய்யமாட்டார் என்பது விளங்கும். அன்றி வடமொழி மூல சுலோகங்களில் சொல்லிய "வேத பாஹ்யமான மார்க்கத்தால் விஷ்ணுவைப் பூசித்து மோகத்தால் சங்கரனை நிந்திப்பார்கள். பரமன், விஷ்ணு, ருத்ரன் இவர்களைப் பேதபாவத்துடன் பார்ப்பார்கள். ஒன்றாக அறியமாட்டார்கள். தக்ஷிணையில்லாமலும், எண்ணெய் தேய்த்துக்கொள்ளுதல் இல்லாமலும், பாதசுத்தி இல்லாமலும், ஓமம் இல்லாமலும் சிரார்த்தம் செய்வார்கள். ஏகாதசி, அஷ்டமி, விசேஷமாக சதுர்த்தசி இத்திதிகளில் உபவாசம் இருக்கமாட்டார்கள். சதருத்ரம், சமகம், புருஷசூக்தம் இவற்றால் ஈசுவரனை அபிஷேகம் செய்யமாட்டார்கள்" ஆகிய இத்தியாதி விஷயங்களைக்காட்ட "**ஞானசாதன பூதமாக ஓதுவதொன்றும் செய்யார்**" என்றார்.

## வேறு.

தருமம தறிவில்பா டண்டர் தங்களை
மருவலால் வேதமா வாக்கியப் பொருள்
கருதிடா ரதுகர மணியிற் காட்டிடும்
குருவையும் வழிபடார் குதர்க்க மேவலார்.



## இதன் பொருள்.

| | |
|---|---|
| தருமமதறிவில் | —தருமாதருமங்களை அறிய அறிவில்லாத |
| பாடண்டர் தங்களை மருவலால் | —பாஷாண்டிகளைச் சேர்தலால் |
| வேதமா வாக்கியப்பொருள் கருதிடார் | வேதாந்த மகா வாக்கியார்த்தத்தை நினைக்கமாட்டார்கள் |
| அது | —அந்த அர்த்தத்தை |
| கரமணியில் காட்டிடும் | —கையில் மணிபோல்காட்டி அருள்கின்ற |
| குருவையும் வழிபடார் | —அருள்வடிவமான சற்குரு நாதனையும் வழிபடமாட்டார்கள் |
| குதர்க்க மேவலார் | —குதர்க்கங்களையே பேசவல்லமையுள்ளவர்களாயிருப்பார்கள் |

**கருத்து.** தருமா தரும வேறுபாடுகளை அறியக் கூடிய அறிவில்லாத பாஷாண்டிகளைச்சேர்ந்தவர்கள் அத்தருமாதருமங்களை அறிந்து கொள்ளாமலும் வேதாந்த மகாவாக்கியப்பொருளை உணராமலும், அப்பொருளைக் கையில் மணி போல் காட்டக்கூடிய குருநாதனை வழிபடாமலும் குதர்க்கமே பேசுவார்கள்.

**பதசாரம்—"தரும மதறிவில்"** என்றதனால் வடமொழி மூல சுலோகங்களில் கூறிய அடியிற்கண்டவைகளையும் குறிக்கும். அவையாவன:—மற்று முன்ன வேதத்திற்சொல்லிய கர்மங்களை ஆசரிக்கிறதில்லை. ஸ்மார்த்த கருமங்களையும் செய்கிறதில்லை. நெற்றியில் ஊர்த்துவ புண்டரமாயும், வர்த்துலமாயும், அர்த்த சந்திராகாரமாயும் மோகத்தால் தரித்துக்கொள்ளுகிறார்கள். மனுஷ்யனுடைய நாமத்தையும், ஆகாரத்தையும் தரித்துக் கொள்வார்கள். (19)

**வேறு.**

முன்னநான் மறைக ளோதி முடிந்திடும் பரம மான
சன்னியா சத்தைச் சாரார் சார்ந்தவர் தமக்குந் தீங்கு
பன்னிடா நிற்பர் வேறு பலபல சொல்லி யென்னை
மன்னும்வீ டெய்தா தான வழிகளே மருவா நிற்பார்.

**இதன் பொருள்.**

| | |
|---|---|
| முன்ன நான் மறைகள் ஓதி முடிந்திடும் | முன்னமே சதுர்மறைகளாலும் முடிவாகக்கூறப்பட்ட |
| பரமமான சன்னியாசத்தைச் சாரார் | பரமஹம்சமான சந்நியாசத்தை அங்கீகரிக்க மாட்டார்கள் |
| சார்ந்தவர் தமக்கும் | —அதை அங்கீகரித்த மகான்களுக்கும் |
| தீங்கு பன்னிடா நிற்பர் | —(துன்பந்தரக்கூடிய வசைச் சொற்களைச்சொல்லி நிந்தித்துக்) கேடுபுரிவார்கள் |
| வேறு பல பல சொல்லி யென்னை | மேலும் மேலும் பல்வேறு வகைப்பட்டவைகளைக் கூறுவதால் வருபயன் யாது |
| மன்னும் வீடு எய்தாதான வழிகளே மருவா நிற்பர் | நித்தியமான முத்தியை அடைவதற்கு இடையூறான மார்க்கங்களையே அனுஷ்டிப்பார்கள். |

**கருத்து.** அப்பாஷண்டிகள், வேதங்களால் முடிவாகக் கூறப்பட்ட பரமஹம்ச சந்நியாசத்தை அங்கீகரிக்கமாட்டார்கள். அதைக்கொண்ட பெரியோர்களையும் நிந்திப்பார்கள். பல பல சொல்லி என்ன பிரயோசனம். அவர்கள் மோக்ஷமடையாததற்கு என்ன என்ன வழிகளுண்டோ அவற்றையே ஆதாரமாகவும் பிரீதியாகவும் கருதிக் கைக்கொள்வார்கள். (20)

துட்டமா மார்க்க நூலிற் றுவக்கிலாப் பெரிய ராகிச்
சிட்டராய்த் தீர ராகிச் சிவனரு ளுடைய ரானோர்
கட்டமாம் பிறவிதீரக் காதலால் வேதஞ் சொல்லப்
பட்டதே செய்யா நிற்பார் பரமமாம் பதத்தை யுன்னி.

### இதன் பொருள்.

துட்டமாம் மார்க்க நூலில் —வேத விரோதமான சமய நூல்களில்
துவக்கிலாப் பெரியராகி —கட்டுப்படாத பெரியவராகியும்
சிட்டராய்த் தீரராகி —(வேதத்திற் சொல்லிய பிரகாரம் முத்திசித்திக்கும்பொருட்டு நல்ல) சிஷ்டாசார முடையவர்களாகியும் வைராக்கிய முடையவர்களாகியும்
சிவனருள் உடையரானார் —சிவப்பிரசாதம் பெற்றவர்களாகியும் உள்ளவர்கள்
கட்டமாம்பிறவி தீரக் காதலால்—துன்பத்துக்கிடமாகிய பிறப்பு நீங்க ஆசையினால்
பரமமாம்பதத்தை உன்னி —உயர்வாகிய மோக்ஷத்தைக் கருதி
வேதம் சொல்லப்பட்டதே செய்யா நிற்பர் —வேதத்தில் விதிக்கப்பட்ட நியமப்படியே செய்வார்கள்.

**கருத்து.** வேத விரோதமான சமய நூல்களில் கட்டுப்படாத சிஷ்டாசார முடையவர்களாய், வைராக்கியதீரர்களாய் சிவனருள் பெற்றவர்களாயிருப்பவர்கள் பிறவிப் பெருங்கடலினின்றும் நீங்கி மோக்ஷத்தை அடையவேண்டும் என்னும் அவாவினால் வேதம் விதித்தபடியே நின்று ஒழுகுவார்கள். (21)

### வேறு.

அவத்த மேபிதற் றப்படுங் கலையெல்லா மல்லற்
பவத்தை வேரறுத் திடுவது பழமறைப் பொருளே
யுவப்பி னாலொரு கணத்திலப் பொருள்பெற வுரைப்பான்
சிவப்ர காசனே யென்றனன் றிசைமுகன் றெளிய.

### இதன் பொருள்.

திசைமுகன் —நான்முகனான பிரமதேவன்
கலையெல்லாம் —(வேத விரோதமான) சர்வ சாஸ்திரங்களும்
அவத்தமே பிதற்றப்படும் —மித்தையாம் வஸ்துக்களையே உறுதியென்று சொல்லிக் கொண்டிருக்கும்
அல்லல் —துன்பத்துக்கிடமான
பவத்தை வேர் அறுத்திடுவது—பிறப்பினுடைய வினைகளை வேரறக்கெடுப்பது
பழமறைப் பொருளே —அநாதியான வேதார்த்தமே
உவப்பினால் —சந்தோஷத்தினால்
ஒரு கணத்தில் —க்ஷணிக மாத்திரத்தில்
அப்பொருள் பெற —அந்தப்பொருளை அடையும்படி
சிவப்பிரகாசனே உரைப்பான்—(அருள்வடிவமாகிய மங்களஸ்வரூபியான) பரமசிவனே அனுக்கிரகிப்பான்
என்றனன் தெளிய —என்று (தேவர்கள்) தெளியும்படி கூறினான்.

**கருத்து.** வேத விரோதமான சமயநூல்கள் எல்லாம் மித்தையாகிய வஸ்துக்களையே சத்தியமென்றுகூறும். துன்பத்துக்கு இடமான பிறப்பை ஒழிக்கக்கூடியது வேதப்பொருளேயாகும். க்ஷணிகமாத்திரத்தில் அப்பொருளை அடையும்படி சிவபெருமானே உரைத்து அருள்வார் எனப் பிரமன் தேவர்களுக்குத் தெளிவுண்டாகும்படி கூறினான். (22)

ஐதரேய உபநிடததாத்பரியமுரைத்த அத்தியாயம் முற்றிற்று.
ஆகத் திருவிருத்தம் 50.



## மூன்றாவது

## ஐதரேய உபநிஷதார்த்த சேஷமும், தைத்திரிய உபநிஷதார்த்த தாற்பரியமும் உரைக்கும் அத்தியாயம்.

### அத்தியாய அவதாரிகை.

முந்திய அத்தியாயத்தில் நிமித்தோபதான வடிவ ஜகத் கர்த்தாவாகிய புருஷனை வாதிகள் தத்தம் மோகத்தால் பலவிதங்களாகக் கூறுகின்றார்கள் என்று அவர்களின் விபரீதமான கொள்கைகளைச் சாமானியமாகக் காண்பித்து அவ்வாதங்கள் அனைத்தும் சுருதி ஸ்மிருதிகளுக்கு விரோதமென மறுத்து உபநிஷத்துக்களால் பிரதிபாதிக்கப்பட்ட புருஷனே பிரத்தியகான்மா என்றும், நிமித்தோபதான ஜகத் கர்த்தாவென்றும் நிர்ணயிக்கப்பட்டது. இவ்வத்தியாயத்தால் விசேஷமாகச் சில சங்கை சமாதானமூலமாகக் காண்பிக்க இச்சைகொண்டு ஜகசிருஷ்டாவான ஆன்மா தனது மாயையின் காரியமான தேகங்களில் கிரியா சத்தி சம்பந்தத்தால் பிராணரூபமாக பாதாக்கிரகங்களால் பிரவேசித்தானென்றும், சிற்சத்தி சம்பந்தத்தால் * பிரமரந்திரவழியாக இருதயத்தில் பிரவேசித்துச் சேதனனாக விளங்குகின்றானென்றும் சுருதிகள் கூறுகின்றமையால் அவ்விருவரில் முக்கிய ஆன்மா யாவன் என்று பரியாலோசனைசெய்து சர்வத்திலும் பிரத்தியக்காக இருப்பவனே முக்கிய ஆன்மா என்று உறுதிப்படுத்தும்பொருட்டு இந்த லோகமானது எந்தப் பிரகாசத்தால் காண்டல் கேட்டல் முதலிய சர்வ விவகாரங்களையும் செய்கிறதோ, அதுவே முக்கியமான பிரத்தியக ஆன்மா ஆகுமென்று கூறுகின்ற மூல சுருதியின் தாற்பரியத்தைக் கூறுகின்றார்.

### வேறு.

தற்பரன்ற னுருவுஞ்ச யம்புவா
முற்பவம்ம தருவையு முண்மையி
லற்பமுமதி லன்னிய மின்மையும்
பொற்பமைந்தநற் பூமக ளோதுவான்.

* பிரமரந்திர வழியாக—சிரசினது உச்சித்துவார வழியாக

இதன் பொருள்.

சயம்புவாம் —சயம்புவான
தற்பரன் தன் உருவும் —பரமசிவத்தின் சொரூப ஸ்வபாவத்தையும்
உற்பவம்மது உருவையும் —உற்பவிக்கின்ற பசுக்களின் ஸ்வரூபத்தையும்
உண்மையில் அற்பமும் —பாரமார்த்திகத்தில் கிஞ்சித்தேனும்
அதில் அன்னிய மின்மையும் —அவ்வஸ்துவினிடத்தில் வேறில்லாமையையும்
பொற்பு அமைந்த —அழகு பொருந்திய
நற்பூமகன் ஓதுவான் —நல்ல மலரிலுறைகின்ற பிரமதேவன் சொல்லலுற்றான்

கருத்து. பிரமதேவன் பரமசிவத்தின் சொரூப ஸ்வபாவத்தையும், பசுக்களின் சொரூபத்தையும் அவைகள் அவ்வஸ்துவுக்கு அன்னியமில்லையென்பதையும் சொல்லத் தொடங்கினான். (1)

அவதாரிகை.

அரனென்பவர் சிலர் என்ற செய்யுள் முதலாகச் சில பாடல்களால் வாதிகளின் சங்கையை நிராகரித்துச் சுருதிப் பிரசித்த ஆன்மாவே சிருஷ்டா எனக் கூறப்பட்டான். அவ்வான்மா தான் சிருஷ்டித்த தேகங்களில் கால் கட்டை விரல்களின் வழியால் கிரியாசத்திருபனாகவும், பிரமரந்திரத்தின் வழியால் ஞான சத்திருபனாக்வும் பிரவேசித்தான் என்ற சுருதியால் அவர்களுக்குள் யார் பிரத்தியகான்மாவாக அறியத்தக்கவன் எனக் கேள்விவர, எதனால் பார்க்கின்றானோ, எதனால் கேட்கின்றானோ என்பது முதலான உத்தரமாகும் சுருதிகளின் பொருளைச்சொல்ல, இச்சைகொண்டு அவ்வான்மாவைச் சித்பான (விளக்க) மாகவே ஒப்பவேண்டும், இல்லாவிடில் சாட்சியம் விளங்காது. அது சடமாதலால், ஜகத்து சடாசடமான இருதன்மை உடையதனால் சடமான ஒரு பாகத்தால் மற்றொருபாகம் விளங்கலாமெனில் அதுவும் சாட்சியாலேயே கூடல் வேண்டுமெனக் கூறுகின்றார்.

வேறு.

சான்றதே யெவைக்குஞ் சருவவான் மாவாஞ்
சங்கர நாமன்சான் றிலதேற்
றோன்றிடா துலகந் தோன்றிடா வாறு
தனக்கெனத் தோற்றமின் மையினாற்
றான்றனக் குலகந் தோற்றமி லாமை
சடத்துவத் தாற்சட மாகை
யென்றுதா னறியா தொன்றினு லறியப்
படும்பொரு ளாகிய வியல்பால்.

### இதன் பொருள்.

| | |
|---|---|
| சருவ ஆன்மாவாம் | —எல்லாச் சரீரங்களிலும் ஆன்மாவாக விளங்குகின்ற |
| சங்கரநாமன் | —சங்கரன் என்னும் பெயரையுடையவன் |
| அவைக்கும் சான்று | —அனைத்துக்கும் சாட்சியாவான் |
| இலதேல் | —(அந்தச்சாட்சி) இல்லையாயின் |
| உலகம் தோன்றிடாது | —ஜகத்து விளங்கமாட்டாது |
| தோன்றிடாவாறு | —அப்படி ஜகத்து விளங்காத தன்மை |
| தனக்கெனத் தோற்றமின்மையினால்தான் | தான் தானே விளங்கக்கூடிய தன்மை தன்னிடத்தில் இல்லாததனாலேயாம் |
| தனக்கு உலகம் தோற்றம் இலாமை சடத்துவத்தால் | அப்படித் தான் தானே ஜகத்து விளங்காததற்குக் காரணம் சடமாயிருப்பதேயாம் |
| சடமாகை என்றுதான் அறியாது ஒன்றினால் | சடமாதலும் பொருந்தித் தன்னைத்தான் அறியாமல் (வேறு) ஒன்றினால் |
| அறியப்படும் பொருளாகியஇயல்பால் | —உணரப்படும் பொருளாம் தன்மையினால் |

**கருத்து.** சகல சரீரங்களிலும் ஆன்மாவாக விளங்கிக்கொண்டிருக்கிற சங்கரன் என்னும் பெயரையுடையவன் அனைத்துக்கும் சாட்சியாவான். அந்தச் சாட்சி இல்லையாயின் ஜகத்து விளங்கமாட்டாது. ஏனெனில் ஜகத்து சடமாதலால் தானாக விளங்கக்கூடிய சக்தி அதற்குக்கிடையாது. ஏன் அது சடமென்றால் அது தன்னைத்தான் அறியாமல் மற்றொன்றினால் உணரப்படுவதாலேயாம்.

**பதசாரம்**—ஜகத்து சடமாதலால் ஜகத்துக்குச் சுயம் விளக்கம் இல்லையென்பதுகூடாது. எங்ஙனமெனில் ஜகத்து கேவலம் சடமாயின் அதுசரி. ஜகத்தோ சடா சடமாகையால் அவற்றுள் ஞானதாரமான அசடமாகிய தனது ஆன்மபாகத்தால் சடமாகிய அனான்மாவான ஒருபாகம் விளங்கப்படுகிறது எனவா, சடாசடமான இரண்டுபாகமும் சாட்சிப் பிரகாசத்தினாலேயே விளங்க வேண்டுவதனால் எது வேறொரு பிரகாசத்தினால் விளங்குகின்றதோ அது சடமேயாதலால் ஜகத்து சுயம் பிரகாச மற்ற சடமேதான் என்பது தோன்ற "தானறியா தோன்றினலறியப்படும் பொருளாகிய இயல்பால்" என்றார். (2)

### அவதாரிகை.

இவ்விஷயத்தில் கண் முதலியவற்றில் விலீனமான விஞ்ஞானத்தால் பான (விளக்க)மானது தனது விஷய வஸ்துவில் ஜனிக்கப்படுகின்றது என்ற பாட்ட மதத்தைச் சங்கித்து அப்படி ஜனித்தல் கடாதிகளுக்கன்றிப் பானத்திற்குக் கூடாதெனவும், மண்ணிலுண்டான கடத்திற்கும் பானத்திற்கும் ஜனிக்கும் தன்மை சமானமாக இருத்தலால் கடம்போல் பானமும் பிரகாசியாது எனவும் கூறுகின்றார்.

உலகெலாம் விளங்க வுறுமொளி யுணர்வி
 லுற்பவ மெனச்சிலர் சொல்வர்
அலகில்பே ரொளிதான் பிறக்குமேற் சடமா
 மாதலாற் பிறக்கைகூ டாது
கலவறு நாச முள்ளது சடங்க
 ளாங்கடா திகடனக் கேயா
முலேவிலா வொளிவிஞ் ஞானமுண் டாக
 வாக்குகை யுள்ளவா றன்றே.

## இதன் பொருள்.

| | |
|---|---|
| உலகெலாம் விளங்க உறுமொளி | சகமனைத்தும் விளங்கும்படி இருக்கின்ற பானமானது |
| உணர்வில் உற்பவம் எனச் சொல்வர் | விஞ்ஞானத்தினின்றும் ஜன்னியமென்று சில (பக்ஷத்தா) ர் சொல்வார்கள். |
| அலகில் பேரொளி தான் பிறக்குமேல் சடமாம் | அளவற்ற உயர்ந்த பானமானது ஜன்னியமானல் சடமாய்விடும் |
| ஆதலால் பிறக்கைகூடாது | —ஆகையால் (அப்பானத்துக்கு) ஜனிக்குந் தன்மை கூடாது |
| கலவறு நாசமுள்ளது | —அவயவச் சேர்க்கையின் பிரிவாகிய நாசமுடையது |
| சடங்களாம் | —சடங்களாகும் |
| கடாதிகள் தனக்கேயாம் | —(அது) கடாதிகளுக்கே பொருந்தும் (இங்ஙனமாக) |
| உலேவிலா ஒளி | —சலனமற்ற பானத்தை |
| விஞ்ஞானம் | —விஞ்ஞானமானது |
| உண்டாக ஆக்குகை | —உற்பத்தியாகும்படி செய்வது |
| உள்ளவாறு அன்று | —உண்மையாகாது. |

**கருத்து.** ஜகமனைத்தும் விளங்கும்படி இருக்கின்ற பானமானது விஞ்ஞானத்தினின்றும் ஜன்னியமென்று பாட்டமதஸ்தர்கள் சொல்வார்கள். அப்பானமானது ஜன்னியமானல் சடமாய்விடும். ஆகையால் அப்பானத்துக்கு ஜனிக்குந் தன்மைகூடாது. சடங்கள் அவ்வச் சேர்க்கையின் பிரிவாகிய நாசத்தை உடையன. அது கடாதிகளுக்கே பொருந்தும் ஆகையால் விஞ்ஞானத்தினிடத்திலிருந்து சலனமற்ற பானம் ஜனித்தது என்பது உண்மையாகாது.

## அவதாரிகை.

விஞ்ஞானமானது பானமாகப் பரிணமிக்கின்றதா? அல்லது பானத்தை உற்பத்தி செய்கின்றதா? அவ்வாறெனில் பால் முதலிய சடப் பொருள்களைப் போல் விகாரப்பட்டுச் சொரூபம் இல்லாததாம் எனக் கூறுகின்றார்.

## வேறு.

பானரூபத் தால்ஞானம் பரிணாமத்தை யடையாது
ஞானரூப மவிகாரி யாதலாலே விஞ்ஞானம்
தானும்விகாரப் படுமேற்பா றன்னை முதலாஞ் சடப்பொருள்போ
லானியாகி யறிபொருளா மறிவுமறியும் பொருளாமே.

### இதன் பொருள்.

| | |
|---|---|
| ஞானம் பானரூபத்தால் | —ஞானமானது விளக்கரூபமாக |
| பரிணாமத்தை அடையாது | —பரிணமித்தலைப் பொருந்தாது |
| ஞானரூபம் | —ஞானத்தின் சுபாவம் |
| அவிகாரியாதலாலே | —விகாரத்தன்மை இல்லாததனால் |
| விஞ்ஞானம் தானும் | —அவ்வித விஞ்ஞானமும் |
| விகாரப்படுமேல் | —விகாரத்தை அடையுமாயின் |
| பால் தன்னை முதலாம் சடப் பொருள்போல் ஆனியாகி | பால் முதலாகிய சடவஸ்துக்களைப்போல் தன் சுபாவம் கெட்டு |
| அறிபொருளாம் | —காட்சிப் பொருளாம் |
| அறிவும் அறியும் பொருளாமே | —ஞானமும் காட்சிப்பொருளாகத் தகுமே |

**கருத்து.** ஞானத்திற்கு இயற்கையில் விகாரத்தன்மை இல்லாததால் பரிணமிக்கமாட்டாது. அவ்விதம் அது விகாரப்படுமாயின் பால் முதலிய சடப்பொருள்களைப்போல் தன் சுபாவம்கெட்டுக் காட்சிப்பொருளாகும். ஞானம் அப்படி அன்று.

**பதசாரம்**—ஞானம் மற்றைப் பொருள்களைப்போல் சுட்டறியும் பொருள் ஆகாதெனக்காட்ட "**அறிவு மறியும் பொருளாமே**" என்றார். (4)

### அவதாரிகை

ஆரம்பகம் எனில் திரவியம் இன்மையானும் குணமாகாமையானும் கூடாதெனக் கூறுகின்றார்.

அறிவுபானந் தனக்குத்தா னாரம்பகமு மாக்கூடா
தறிவுதானே ரறியவுறும் பொருளாயிராத வதனானு
மறிவைக்குணமா கப்பிறரு மங்கீகரித்த வதனானு
மறிவிங்கசத்தாம் பானத்துக் காரம்பகமு மாகாதே.

### இதன் பொருள்.

| | |
|---|---|
| பானம் தனக்கு அறிவு | —விளக்கத்திற்கு விஞ்ஞானமானது |
| தான் ஆரம்பகமும் ஆக்கூடாது | —தானும் ஜனகமாகத்தகாது |
| அறிவுதான் | —(ஏனெனில்) ஞானமானது |

அறிய உறும் ஓர் பொருளா யிராத அதனலும் — திரிசியமாயறியத்தக்க ஒரு திரவிய வஸ்துவா யிராமையாலும்
அறிவைக் குணமாகப் பிறரும் அங்கீகரித்த அதனலும் — அந்தஞானத்தைக் குண வஸ்துவாக (தார்க்கீகர்களால்) அங்கீகரிக்கப்பட்டிருப்பதனலும்
இங்கு அசத்தாம் பானத்திற்கு—இவ்விடத்தில் அசத்துரூபமான பானத்திற்கு
அறிவு ஆரம்பகமுமாகாது —ஞானமானது ஜனகமாகமாட்டாது

**கருத்து.** ஞானமானது திரிசியமாக அறியத்தக்க வஸ்து வல்லாதபடியாலும் அதனை ஓர் குணப்பொருளாகத் தார்க்கீகர்கள் அங்கீகரித்திருப்பதாலும் அசத்துரூபமான பானத்திற்கு ஞானம் ஆரம்பகமுமாகாது. (5)

அவதாரிகை.

ஆரம்பவாதத்தில் அசத்தாகிய காரியமே உற்பவிக்கின்றது என்று கொள்கின்றார். இல்லாப்பொருளை உண்டாக்குமாயின் வந்தி (மலடி) மகனையும் உண்டுபண்ணும் எனவும், காரியம் முன் அசத்தாயினும், சத்தா சம்பந்தம் சத்தாதலால் அந்தியந்த பாவத்திற்குப் பேதமாகிச் சனிக்கலாமென்னினும் அச்சம்பந்தமும் சத்துக்கே அன்றி அசத்துக்குக்கிடையாது எனவும், பானம் எப்போதும் உள்ளதெனவும் கூறுகின்றார்.

தொல்லையசத்தாம் பானத்தைத் தோற்றுவிப்ப தொருஞான்று
மில்லையில்லாப் பொருளுக்குப் பண்டின்றென்ன வியம்பவரும்
சொல்லுமில்லை யாதலினற் றோற்றப்படுதல் விஞ்ஞானத்
தில்லையெல்லாப் படியாலு மென்றுமுள்ள திவ்வொளிதான்.

இதன் பொருள்.

தொல்லையசத்தாம் பானத்தை—பிராக் அபாவமாகிய பானத்தை
தோற்றுவிப்பது —உண்டுபண்ணுகின்றது
ஒருஞான்றுமில்லை —ஒருநாளுமில்லை
இல்லாப்பொருளுக்கு —இன்மைப்பொருளு (வந்திமகனு)க்கு
பண்டு இன்று என்ன —காரிய உற்பத்திக்கு முன்னை இருக்கத்தக்க கருவி விசேஷங்கள் இல்லையென்று
இயம்பவரும் சொல்லுமில்லை —சொல்லவரும் வார்த்தையுமில்லை
ஆதலினல் எல்லாப்படியாலும்—ஆதலால் சருவவிதத்தாலும்
தோற்றப்படுதல் —உண்டாகுதல்
விஞ்ஞானத்து இல்லை —விஞ்ஞானத்தினின்றும் இல்லை
இவ்வொளிதான் —இந்தப் பானமே
என்றும் உள்ளது —எப்பொழுதும் சுயமாய் உள்ளது

கருத்து—அசத்துருபமான பானத்துக்கு ஞானம் ஆரம்பகமாகாது. ஏனென்றால் காரிய உற்பத்திக்கு முன்னுகை இருக்கத்தக்க கருவி விசேஷணங்கள் அசத்திற்குக் கிடையா. (6)

## அவதாரிகை.

ஞானமும் ஜனிக்காது. ஜனித்திடில் ஜன்னியமெல்லாம் சடமாதலால் ஸ்வரூப நாசத்தை அடையும், கடஞானத்திற்குப் பிறகு படஞானம் வரக்காணப் படுகின்றது, ஏனெனில் விருத்தி ஞானம் இவ்விரண்டினையும் பிரித்தறியாமையால் விருத்தியினுற்பத்தியைக்கண்டு ஞானத்தின் உற்பத்தியாகக் கொள்கின்றது பிராந்தி எனவும், ஞானமும் விளங்காவிடில் அறியாது ஆதலால் ஞானமும் பானமும் ஒன்றுதான் எனவும் சத்து எனவும் கூறுகின்றார்.

## வேறு.

ஓதுநெறி யானுணர்வு முற்பவ முறாதே
பேதமைய தேயதுபி றக்குமெனு மாறிங்
கோதிவரு பானமதி லுற்பவமு மற்றே
நீதிபிற வாமலுள தாலவொளி நித்தம்

## இதன் பொருள்.

| | |
|---|---|
| ஓதும் நெறியால் | —முன்சொன்ன நியமத்தால் |
| உணர்வும் உற்பவமுறாது | —ஞானமும் ஜனிக்கமாட்டாது |
| அது பிறக்குமெனுமாறு பேதமையதே | அந்த ஞானம் உற்பவிக்கும் என்று சொல்லுகின்ற வழியும் பிராந்திதான் |
| இங்கு ஓதி வருபானம் | —இவ்விடத்தில் சொல்லிவருகின்ற விளக்கமும் |
| அதில் உற்பவமுமற்றே | —அவ்விஞ்ஞானத்தினின்றும் பிறக்கும் என்பதும் அப்படியே பிராந்திதான் |
| நீதிபிறவாமல் | —மெய்ம்மையாய் ஜனிக்காமல் |
| உளதால் அவ்வொளி நித்தம் | —இருப்பதால் அந்தபானம் நித்தியமாகும். |

கருத்து—ஞானம் ஜனிக்கமாட்டாது. ஜனிக்கும் என்பது பிராந்தியாம். அதுபோலவே விஞ்ஞானத்தினின்றும் பானம் ஜனிக்குமென்பதும் பிராந்தியாகும். பானம் உண்மையில் ஜனிக்காமலிருப்பதால் அது நித்தியமாகும். (7)

## அவதாரிகை.

பானம் நித்தியமென நிச்சயித்துப் பானரூபனுகிய பரமசிவன் சாட்சி சின்மாத்திரன் என்று பிரதிஞ்ஞை செய்தபடி அத்தன்மையைச் சகல லோக பிரகாசக பானமே சாட்சி எனவும், அச்சாட்சி பானமாகிய சங்கரன் அசங்கனுதலால் அஞ்ஞான முதலிய ஜகத்துக்கும் தனக்கும் பிரகாசி அப்பிரகாசக சம்பந்தம் கூடாததனுல் எங்ஙனம் அஞ்ஞானம் முதலியவை அவனுல் விளக்கமுறும் எனவும் வரக் கற்பித சம்பந்த விஷயமாக விளங்குகின்றதெனக் கூறுகின்றார்.

## வேறு.

நிகிலலோகந் தனைநிகழ்த்து நித்தவொளியே தவ்வொளியே
சகலலோகந் தனக்கென்றுஞ் சான்றாய்நின்ற சங்கரன்றான்
துகளிலிறையாற் கற்பிதமாஞ் சம்பந்தத்தாற் றோற்றமுறுந்
தகவிலஞ்ஞா னமுமன்றித் தானுத்தோற்றந் தாராதால்.

## இதன் பொருள்.

நிகில லோகந்தனை —சர்வ ஜகத்தையும்
நிகழ்த்து நித்த ஒளியேது —அழிவில்லாத சுயம்பிரகாசமான வஸ்து எதுவோ
அவ்வொளியே —அந்தப்பானமாகிய வஸ்துவே
சகல லோகம் தனக்கு —சர்வ ஜகத்துக்கும்
என்றும் சான்றாய் நின்ற —எக்காலத்தும் சாட்சியாய் விளங்குகின்ற
சங்கரன்றான் —சங்கரன் என்னும் பெயருடையவன்
துகளில் இறையால் —குற்றமற்ற அந்தச் சங்கரனால்
கற்பிதமாம் சம்பந்தத்தால் —கற்பிதமாகிய சம்பந்தத்தைப்பற்றி
தகவில் அஞ்ஞானமும் —தெளிவில்லாத அஞ்ஞானம் என்பதும்
தோற்றமுறும் —விளங்குகின்றது
அன்றி —அஃதன்றி
தானுத்தோற்றம் தாராது —தானாகவே விளங்கமாட்டாது

**கருத்து.** சர்வ ஜகத்தையும் விளக்குகின்ற சுயம்பிரகாசமான வஸ்து எதுவோ அதுதான் சர்வஜகத்துக்கும் சாட்சியாயிருக்கின்ற சங்கரன் என்னும் பெயரையுடையதாகும். அச்சங்கரனால் கற்பிதமாகிய அஞ்ஞானமும் விளங்குகின்றது. அந்த அஞ்ஞானம் தானாகவே விளங்கமாட்டாது. (8)

## அவதாரிகை.

சாட்சியால் கற்பித சம்பந்தமுடைய அஞ்ஞானம் விளங்குவதுபோல, அஞ்ஞானத்தில் தோன்றிய சத்துவ பரிணாமமான அந்தக்கரணம் அதன் விருத்திகளான காமாதிகள், பிராணன், புறக்கரணம், உடல், விஷயம் என்னும் இவைகளும், இவற்றின் உபாதானமாகிய அஞ்ஞானத்தில் பிரதிபிம்பித்த சைதன்யத்தை முன்னிட்டுச் சித்தோடுங்கூடிய சித்தவிருத்தியால் வியாபிக்கப்பட்டு, நிருக்குருப சாட்சி சைதன்னிய சம்பந்த பலத்தாலேயே பிரகாசிக்கின்றன எனவும், கடபடாதி விஷய ஞானமும் தனது சம்பந்தமுடைய நேத்திரேந்திரிய முதலிய இந்திரிய சம்பந்தமுடைய சித்தோடும்கூடிய அவ்விஷயாகாரமான அந்தக்கரண விருத்தி வியாப்தமாகக்கொண்டு பரம்பரா சாட்சி சம்பந்த பலத்தாலேயே பிரகாசிக்கின்றது எனவும் கூறுகின்றார்.

## வேறு.

தெரிவிலாமையிற் செனித்திடுஞ் சித்தமுஞ் செற்றமார் வழுமெல்லாந்
தெரிவிலாமையைத் திகழ்த்திய சேதனச் செறிவினாற் றிகழ்கின்ற
புரிவதாம்பிரா ணன்றிகழ் வதும்புறக் கரணங்க ளுடலந்தான்
விரிவதாம்விட யங்களெல் லாஞ்சித்த விருத்திசே ருணர்வாலே.

## இதன் பொருள்.

| | |
|---|---|
| தெரிவிலாமையில் | —அஞ்ஞானத்தினின்றும் |
| செனித்திடும் சித்தமும் | —உற்பத்தியாகின்ற மனமும் |
| செற்றமார்வமும் | —இராகத்துவேஷாதிகளும் |
| எல்லாம் | —இவை அனைத்தும் (அப்படியே) |
| தெரிவிலாமையை | —அஞ்ஞானத்தை |
| திகழ்த்திய | —(ஸ்பரிசித்து) விளக்குகின்ற |
| சேதனச் செறிவினால் | —சைதன்னியத்தின் பலத்தினால் |
| திகழ்கின்ற | —விளங்குகின்ற |
| புரிவதாம் பிராணன் | —தொழிற்படுகின்ற பிராணன் |
| திகழ்வதும் | —விளங்குவதும் |
| புறக்கரணங்கள் | —(இந்திரியம் முதலான) புறக்கரணங்களும் |
| உடலம் தான் | —உடலமும் |
| விரிவதாம் விடயங்கள் | —விஸ்தாரமான விஷயங்களும் |
| எல்லாம் | —இவையனைத்தும் |
| சித்தவிருத்தி சேர்உணர்வாலே | சித்தவிருத்தி சம்பந்தத்தை முன்னிட்ட ஞானத்தினாலேயாம். |

கருத்து—மனமும், இராகத்துவேஷங்களுமாகிய இவைகள் அஞ்ஞானத்தினின்றும் உற்பத்தியாகி விளங்குகின்றன. அவ்வாறே பிராணன் இந்திரியம் முதலான புறக்கரணங்கள், சரீரம், விஷயங்கள் இவையனைத்தும் அஞ்ஞானத்தை ஸ்பரிசித்து விளக்குகின்ற சைதன்னியத்தின் பலத்தினால் சித்தவிருத்தி சம்பந்தத்தை முன்னிட்ட ஞானத்தினாலே விளங்குகின்றன. (9)

## அவதாரிகை.

பிரத்தியக்ஷங்களான பொருள்களை விளங்கச்செய்தலால் அவைகளுக்கு வேண்டுமானால் சாட்சியாகட்டும், பரோக்ஷங்களாகிய பொருள்களை எங்ஙனம் விளக்குவிக்கின்ற சாட்சியாவன் எனக்கேட்க, அனுமானாதி விருத்திகளிலிருந்து பரோக்ஷ வஸ்துக்களையும் விளக்கவே செய்கிறான் எனக் கூறுகின்றார்.

வேறு.

அன்றியனு மானமுதற் றன்னிலறி யறிவு
நின்றுசில சில்பொருளை நிகழ்த்திவிடு மதனு
லென்றுமிறை யெப்பொருள்க ளியாவுநிகழ்விப்பா
னொன்றுமவ னொழிய வென்று நிகழாதால்.

இதன் பொருள்.

| | |
|---|---|
| அன்றி அனுமான முதல் தன்னில் அறிவறிவு | அல்லாமலும் அனுமானாதிகளிலிருந்து அறிகின்ற சைதன்னியமானது |
| நின்று சில சில்பொருள் நிகழ்த்திடும் அதனால் | நிலைபெற்றுச் சில சில பொருள்களை விளங்கச் செய்யும் அதனாலே |
| என்றும் இறை | —எக்காலத்தும் (அவ்வித சைதன்னிய ஸ்வரூபனான) சங்கரன் |
| எப்பொருள்கள் யாவும் | —எவ்வளவைப் பொருள்கள் உளவோ அவைகள் அனைத்தினையும் |
| நிகழ்விப்பான் | —விளக்குவிக்கின்றான் |
| அவனொழிய | —அச்சங்கரனலன்றி |
| ஒன்றும் என்றும் நிகழாது | —யாதொன்றும் எக்காலத்தும் விளங்கமாட்டாது |

**கருத்து**—சைதன்னிய ஸ்வரூபனான சங்கரன் ஜகத்திலுள்ள சகல பொருள்களையும் விளக்குவிக்கின்றான். அவனன்றி யாதொன்றும் விளங்கமாட்டாது.

**பதசாரம்**—புகை காணப்படுதலைப் பர்வதத்தில் அக்கினி உண்டு என்பது பெறப்படும். எதனாலெனில் எங்கெங்கே புகை காணப்படுகின்றதோ அங்கங்கே அக்கினியும் காணப்படுகின்றதனால் என்றவிதமாய் கூடியிருக்கும் நியமம் என்னும் வியாப்தியால், அவ்வித வியாப்தி என்னும் ஏதுவால் உண்டாகிய ததாகார விருத்தியில் முன்சொன்ன பிரகாசம் உள்ளபடி வியாபித்து விளங்கிய சைதன்னியம் தனக்காசிரயமான அந்தக்கரணவிருத்தியை உண்டுபண்ணுகின்ற புகையுடையது என்றது முதலான ஏதுக்களுக்கு வியாபகங்களான அக்கினியுடையது என்றது முதலான சில பொருள்களைப் பரம்பராசம்பந்தத்தால் விளக்குவிக்கின்றது எனக்காட்ட "அனுமான முதன்னில்" எனவும் அபரோக்ஷ ஞான விஷயங்களிலே அதிஷ்டான ஸ்புரணம் உண்டாதலால் விருத்தி வியாப்பியத் தன்மை இருப்பதுபோல் இந்திரிய வியாப்பியத்தன்மை எப்படி இருக்கின்றதோ அப்படி அனுமானம் முதலிய பரோக்ஷ ஞான விஷயங்களில் இந்திரிய வியாப்பியத்தன்மை இல்லை என்பது தோன்ற 'அறியறிவு நின்று' எனவும் கூறினர். (10)

அவதாரிகை.

ஜீவரூபனாக அனுப்பிரவேசித்திருக்கின்ற பரமசிவன் சாட்சி சின்மாத்திரன் என்று சித்தாந்திக்கப்பட்டது. அப்படியே சுருதியில் இருவர்களுக்குள் யார் ஆன்மா என்ற கேள்விக்கும் சர்வ சாட்சியான சித்துரூபனே ஆன்மா. பிராணன் அன்றெனக் கூறப்பட்டது. முந்திய கவிகளால் இந்தப்பொருளையே எவனாற் பார்க்கின்றானோ, எவனாற் கேட்கின்றானோ, எவனாற் கந்தத்தை நுகர்கின்றானோ, எவனால் வாக்கைக்கொண்டு பேசுகின்றானோ, எவனால் ருசி, அருசி இவற்றை அறிகின்றானோ அவன் என்று உத்தரமாகச் சொல்கின்ற சுருதியின் பொருளைக் கூறுகின்றார்.

வேறு.

ஆதலா லுருவங் காண்பது மொலிதா னழகுறக் கேட்பது மொருவன்
காதலாற் கந்தங் கொள்வது மினிதின் றெனவிர தங்காண் பதுவு
மோதலாம் பரிச முணர்வது மிறையா லுரைத்தசங் கரனெனு முணர்வை
மேதையான் மிகுத்தோர் வேறுவே றாக விளம்புவா ரதுவிளம் பிடுவாம்.

இதன் பொருள்.

| | |
|---|---|
| ஆதலால் ஒருவன் | —ஆகையால் ஒருவன் |
| உருவங்காண்பதும் | —உருவங்களைப் பார்க்கின்றதும் |
| ஒலிதானழகுறக் கேட்பதும் | —சத்தங்களை அழகாகக் கேட்பதும் |
| காதலால் கந்தம் | —பிரியத்தால் வாசனைகளை |
| கொள்வதும் | —ஆக்கிராணம் செய்கின்றதும் |
| இனிது இன்றெென | —ருசிஉடையது ருசி இல்லாதது என்று |
| இரதம் காண்பதும் | —இரசத்தை அறிகின்றதும் |
| ஓதலாம்பரிசம் | —சொல்லப்பட்ட ஸ்பரிசத்தை |
| உணர்வதும் இறையால் | —அறிகின்றதும் சர்வான்மாவாகிய சங்கரனாலேதான் |
| உரைத்த | —இப்படிச் சொல்லப்பட்ட |
| சங்கரன் என்னும் உணர்வை | —சங்கரன் என்னும் பெயரையுடைய விஞ்ஞானத்தை |
| மேதையான் மிகுத்தோர் | —புத்தியால் விசேஷம் பொருந்திய வித்வான்கள் |
| வேறு வேறாக விளம்புவார் | —வெவ்வேறாகச் சொல்லுவார்கள் |
| அது விளம்பிடுவாம் | —அதனைச் சொல்லுவோம். |

**கருத்து**—ஒருவன் உருவங்களைப்பார்ப்பதும், சத்தங்களைக் கேட்பதும், வாசனைகளை அறிவதும் உருசிகளை உணர்வதும், ஸ்பரிசத்தைத் தெரிந்து கொள்வதும் சர்வான்மாவாகிய சங்கரனாலேயேயாகும். அப்படிப்பட்ட சங்கரன் என்னும் பெயருடைய விஞ்ஞானத்தை விவேகிகள் வெவ்வேறாகச் சொல்வார்கள். அதனையாம் கூறுவாம்.

## அவதாரிகை.

கண், செவி முதலிய பேதங்களான கரணத்தால் உண்டாகிய ரூபாதி ஞானங்களில் இடைவிடாமல் இருக்கின்ற சிற்பிரகாசம் எதுவோ அதுவே ஆன்மாவாம் எனக்கூறப்பட்டது. ஆயினும் இவன் அல்லவா பார்க்கிறவன், இவன் அல்லவா கேட்கிறவன் முதலான சுருதியால் எவன் இடைவிடாத சிற்பிரகாசனுகக் கூறப்பட்டானே, அவனே உபலப்தாவாகக் காணப்படுகின்றான். அவனைப் பார்க்கின்றான் என்று கருத்தாவாகச் சொல்லியிருக்க இறையால் என்ற மூன்றாம் வேற்றுமை எங்ஙனம் கூடுமெனில் அது தோஷம் அல்ல; ஏனென்றால், அந்தக்கரணம், அதன்விருத்தி இவைகளால் கற்பிக்கப்பட்ட பேதத்தை அனுசரித்து உபசாரமாகக் கரணத்தன்மை கூடலாம். இங்ஙனமே கடவல்லியிலும் கூறப்பட்டிருக்கிறது. 'எதனால் ரூபம், ரசம், கந்தம், சப்தம், ஸ்பரிசம் இவைகளை அறிகின்றான்? இதில் எது சேடிக்கின்றதோ அதுவே தான் அல்லவா' என்றும், கவுஷீதகீ சுருதியில் 'பிரஞ்ஞையால் வாக்கை அடைந்து வாக்கால் சருவநாமங்களையும் அடைகின்றான். பிரஞ்ஞையால் நேத்திரத்தை அடைந்து சருவ ரூபங்களையும் அடைகின்றான், எனவும், பிரஞ்ஞை என்னும் நாமமுடைய ஓர் அந்தக்கரணமே வாய், கண் முதலான நானாவித கரண பாவத்தை அடைந்திருப்பதனால், யாதொன்று பிராணனே அதுவே பிரஞ்ஞை, யாதொன்று பிரஞ்ஞையோ அதுவே பிராணன் என அவற்றிற்கு ஏகத்துவம் கூறிய சுருதிப்படி அந்தக்கரணம் உபலப்த காரணமானதுகொண்டு அப்பிரதானமாதலால், பிராணனை அனான்மா எனக்கூறவேண்டி எதனால் பார்க்கின்றானோ என்றது முதலான இடங்களில் ஸ்ரீ பாஷியக்காரர்கள் மூன்றாம் வேற்றுமையாய் முடிந்த பதத்தைக் கண்முதலிய பேதமுடைய அந்தக்கரண விஷயமாக உரைசெய்து சுருதியில் இந்த இருதயம், மனம் என்ற பதங்களால் நிச்சயரூபமாகவும், சங்கற்ப விகற்ப ரூபமாகவுமுள்ள அந்தக்கரணமானது சகல இந்திரிய சாதாரணமாகப் பிரதிபாதிக்கப்படுகின்றதெனக் கண் முதலியவற்றாலுண்டான மனோவிருத்தி லக்ஷணமான உபாதிப் பிரதானமாக விவேகித்து, இந்த ஓர் அந்தக்கரணமே கண்ணாகப்பவித்து ரூபத்தைப்பார்க்கின்றது, காதாகப் பவித்துக் கேட்கின்றது, நாசியாகப்பவித்து ஆக்கிராணிக்கின்றது, வாக்காகப்பவித்து வசனிக்கின்றது, நாவாகப்பவித்து ருசி அறிகின்றது, தானே கற்பனாரூப மனமாகக்கொண்டு சங்கற்பிக்கின்றது. இதயரூபமாகப்பவித்து அத்தியவசாயம் செய்கின்றது. ஆதலால் எல்லா விஷய வியாபகமாயுள்ளது இந்த அந்தக்கரணம் ஒன்றே என்றுரைத்தனர். இந்த விஷயத்தில் இருதயம், மனம் என்ற இரண்டு பெயர்களும் சம்ஞானம் முதலிய சப்தங்கள்போல நாமங்களாகச் சுருதியில் இருக்கின்றன. எவ்வாறெனில், இருதயம், மனம், சம்ஞானம், ஆஞ்ஞானம், விஞ்ஞானம், பிரக்ஞானம், மேதை, திருஷ்டி, மதி, திருதி, மநீஷை, ஜூதி, ஸ்மிருதி, சங்கற்பம், கிருது, அசு, காமம், வசம் என்ற சர்வநாமங்களும் பிரஞ்ஞானத்தின் நாமங்களாகப் பவிக்கின்றன என அவ்வப்படி விவகரிக்கின்ற அந்த அந்தப் புருஷர்களின் சம்பந்தத்தால் அந்த அந்த நாமங்களைக் கூறுகின்றார்.

சிலவர் தாமிதயமென்பர்கண்மனமேயென்பர்கள் சிலவர் தாஞ்சிலர்கள்
நலமதா ஞான மென்பர்க ளெல்லா நாடிடு ஞானமென் பர்யளா
மிலகுவிஞ் ஞான மென்பர்கண் மிகுத்தே யிலங்கிய ஞானமென் பர்களாஞ்
சொலவரு மேதை யென்பர்கள் வேறு சொல்லிடும் பரிசையுங் கேண்மோ

## இதன் பொருள்.

சிலவர்தாம் இதயமென்பர்கள்—சிலர்கள் அந்த விஞ்ஞானத்தை இருதயம் என்று சொல்லுவார்கள்.

சிலவர்தாம் மனமே என்பர்கள்—இன்னும் சிலர்கள் மனமென்று சொல்லுவார்கள்

சிலர்கள் நலமதாம் ஞானம் என்பர்கள் } மற்றும் சிலர்கள் நன்மையாகிய சம்ஞானம் என்று சொல்லுவார்கள்

எல்லாம் நாடிடு —அனைத்தையும் நாடுகின்ற

ஞானம் என்பர்கள் —ஆஞ்ஞானம் என்பார்கள்

இலகு விஞ்ஞானம் என்பர்கள்—பிரகாசிக்கின்ற விஞ்ஞானம்என்று கூறுவார்கள்

மிகுத்தே இலங்கிய —மிகுதியாய்ப் பிரகாசிக்கின்ற

ஞானம் என்பர்கள் —பிரஞ்ஞானம் என்பார்கள்

சொலவரும் —சொல்லப்படுகின்ற

மேதை என்பர்கள் —மேதை என்று சொல்லுவார்கள்

வேறு சொல்லிடும் —மற்றும் பகர்ந்திடும்

பரிசையும் கேண்மோ —விதத்தையும் கேளுங்கள்.

**கருத்து**—அந்த விஞ்ஞானத்தைச் சிலர் இருதயம் என்றும், சிலர் மனம் என்றும், சிலர் சம்ஞானம் என்றும், சிலர் ஆஞ்ஞானம் என்றும், சிலர் விஞ்ஞானம் என்றும், சிலர் பிரஞ்ஞானம் என்றும், சிலர் மேதை யென்றும் சொல்வார்கள். இன்னும் வேறுவிதமாகவும் சொல்வார்கள். அதையும் சொல்லுகிறேன் கேளுங்கள். (12)

## இதுவும் அது.

யாதையுங் காணுங் கண்ணென மொழிவார்
எழின்மிகு திருதியா மென்பார்
சூதிய தென்பார் மிருதியென் றுரைப்பார்
சொல்லுஞ்சங் கற்பமென் றுரைப்பார்
நீதியாங் கிருது காமமே யென்பார்
நிகழ்வுறும் வசமென வுரைப்பார்
ஓதிய விந்த நாமதே யங்க
ளுணர்வதாஞ் சிவனது பெயரே.

இதன் பொருள்.

| | |
|---|---|
| யாதையுங் காணும் | —சகலத்தையும் பார்க்கின்ற |
| கண் என மொழிவார் | —கண் என்று சொல்லுவார்கள் |
| எழில் மிகு திருதியாம் என்பார் | —அழகு மிகுந்த திருதி என்பார்கள் |
| சூதியது என்பார் | —ஜூதி என்பார்கள் |
| மிருதி என்று உரைப்பார் | —மிருதி என்று சொல்லுவார்கள் |
| சொல்லும் | —சொல்லப்பட்ட |
| சங்கற்பமென்றுரைப்பார் | —சங்கல்பம் என்று சொல்லுவார்கள் |
| நீதியாம் கிருது | —நீதியாகிய கிருது என்பார்கள் |
| காமமே என்பார் | —காமந்தான் என்பார்கள் |
| நிகழ்வுறு வசம் என உரைப்பர் | —விளங்குகின்ற வசம் என்று சொல்லுவார்கள் |
| ஓதிய இந்த நாமதேயங்கள் | —சொல்லப்பட்ட இந்த நாமங்கள் (எல்லாம்) |
| உணர்வதாம் | —பிரஞ்ஞானரூபனாகிய |
| சிவனது பெயரே | —சிவனுடைய நாமங்களாகும். |

**கருத்து**—இதைச் சிலர், கண் என்றும், திருதி என்றும், ஜூதி என்றும், மிருதி என்றும், சங்கல்பம் என்றும், கிருது என்றும், காமம் என்றும், வசம் என்றும் சொல்வார்கள். இந்த நாமங்கள் எல்லாம் பிரஞ்ஞானரூபனாகிய சிவனுடைய நாமங்களாகும். (12)

**பதசாரம்**—அகங்கார முதலிய அனைத்தையும் விருத்தியின் ஏகதேசத்தால் அடக்கித் தோற்றுவிக்கின்ற உள்ளத்தில் பிரதி பிம்பித்துவிளங்கிய அறிவை இருதயம் எனவும், கற்பனாவிருத்தியால் தோற்றிய நாமரூபமாகிய கற்பித விருத்தியிற் பிரதிபிம்பித்த சைதன்னியத்தை மனம் எனவும், எந்த விருத்தியின் சம்பந்தத்தால் இவன் சேதனன் எனப்படுவானோ அந்த விருத்தியில் பிரதிபிம்பித்த சைதன்னியத்தை சம்ஞானம் எனவும், அஞ்ஞானவிருத்தியில் பிரதிபிம்பித்து விளங்கிய சைதன்னியத்தை ஆஞ்ஞானம் எனவும், லௌகிக சூக்குும வஸ்து விஷயமான விருத்தியில் பிரதிபிம்பித்த சைதன்னியத்தை விஞ்ஞானம் எனவும், முக்காலங்களையும் அறிகின்ற விருத்தியில் பிரதிபிம்பித்த சைதன்னியத்தைப் பிரஞ்ஞானம் எனவும், சாஸ்திரதாரண சாமர்த்தியமுடைய விருத்தியில் பிரதிபிம்பித்த சைதன்னியத்தை மேதை எனவும், கண்வழியாகக் கடபடாதியாகாரமாய்ப் பரிணமித்த விருத்தியில் பிரதிபிம்பித்த சைதன்னியத்தைக் கண் எனவும், தேகேந்திரியாதிதாரண சாமார்த்தியமான விருத்தியில் பிரதிபிம்பித்த சைதன்னியத்தைத் திருதி எனவும், வியாதி முதலியவற்றால் நான் துக்கி என்ற பாவனாவிருத்தியில் பிரதிபிம்பித்த அறிவை ஜூதி எனவும், ஒருபொருளின் அனுபவவிருத்தி மறந்து இருக்கினும் அதை வெளிப்படுத்தக் காரணமாய் நின்ற விருத்தியில் பிரதிபிம்பித்த சைதன்னியத்தை ஸ்மிருதி எனவும், பொருள்களின் அனுபவத்தை முன்னிட்டு ஏற்பட்ட நாமரூபங்களைக்

கற்பிக்க வல்லதாயுள்ள கற்பனாவிருத்தியில் பிரதிபிம்பித்த சைதன்னியத்தைச் சங்கற்பமெனவும், இப்பொருள் இவ்வாறே என்ற அத்தியவசாய விருத்தியில் பிரதிபிம்பித்த சைதன்னியத்தைக் கிருது எனவும், தூரத்திலிருக்கின்ற விஷய இச்சாவிருத்தியில் பிரதிபிம்பித்த சைதன்னியத்தைக் காமம் எனவும், சமீபத்தில் இருக்கின்ற மாலை சந்தனம் முதலிய விஷய இச்சாவிருத்தியில் பிரதிபிம்பித்த சைதன்னியத்தை வசம் எனவும் கூறினார். மேற்சொல்லியவைகளை விஷயீகரிக்கும் விருத்தியை மதி எனவும், மனத்தின் வழிச்செல்லாத விருத்தியை மனீஷையெனவும் வடமொழி நூலிற் கூறப்பட்டிருக்கின்றது. அவ்வட நூலாற் சுருதியில் சொல்லிய அசு என்னும் நாமத்தைக் கூறாதுவிட்டது யாதுகாரணம்பற்றியோ எனில் அது பிராணவாசகமாகப் பிரசித்தமாயிருத்தலாலும், அந்த உபாதியை உடைய பிரம்மமும் பிரசித்தமாகையாலும் என்று அறிக.

## அவதாரிகை.

இதுகாறும் அந்தக்கரணம், அதன்விருத்தி இவற்றில் உபகிதமாயும், சத்தாதி சகல வஸ்துக்களையும் விளங்கச்செய்கின்றதாயுமுள்ள நித்திய சயம்பிரகாச சாட்சி சைதன்னியமே ஆன்மா எனப் பிரதிபாதிக்கப்பட்டது. இனி, பிரமன் முதல் ஸ்தம்பம் வரை ஸ்தாவர ஜங்கமரூபமாயுள்ள ஜகத்தில் எங்கும் ஜீவரூபனாகவும், உபாதானரூபனாகவும் இருக்கின்றான் என்ற அபிப்பிராயத்தால் அவனைப் பற்றிய பரிச்சேத பிராந்தியை நீக்குதற்காகச் சுருதியிற் சொன்ன சர்வ ஆன்ம சொரூபத்தைக் கூறுகின்றார்.

## வேறு.

பிரம னிவனே யிந்திரனும் பிரசா பதியு மிவனிவனே
யுரம துடைய வும்பர்கள்பூ தங்க ளுலகங் களுமெல்லா
முரைசெய் திடுமண் டசமுதலா மியோனி பேதங் களுமிவனே
குரக தங்கோ மானிடமுங் குஞ்ச ராதி களுமிவனே.

## இதன் பொருள்.

| | |
|---|---|
| பிரமன் இவனே | —இரண்ய கர்ப்பனும் இந்தச் சிவசைதன்னியமே |
| இந்திரனும் பிரசாபதியும் | —இந்திரனும் விராட்டும் |
| இவன் | —இச்சிவ சைதன்னியமே |
| உரமது உடைய | —வலிமையுடைய |
| உம்பர்கள் பூதங்கள் | —தேவர்களும் பூதங்களும் |
| உலகங்களும் எல்லாம் இவனே | —புவனங்களும் அனைத்தும் இந்தப் பரமசிவனே |
| உரை செய்திடும் | —சொல்லா நின்ற |
| அண்டசம் முதலாம் | —அண்டச, சராயுச, சுவேதச, உற்பீச முதலாகிய |
| யோனி பேதங்களும் இவனே | —பலவகை உற்பத்திகளும் இச்சிவசைதன்னியமே |
| குரகதம் கோ மானிடமும் | —குதிரைகளும் பசுக்களும் மானிடர்களும் |

குஞ்சராதிகளும் —யானை முதலானவைகளும்
இவனே —இச்சிவ சைதன்னியமேதான்.

**கருத்து**—இரண்யகர்ப்பன், இந்திரன், விராட்டு, தேவர்கள், பூதங்கள், புவனங்கள், அண்டச, சராயுச, சுவேதச, உற்பீச முதலாகிய யோனி பேதங்களும், குதிரை, பசு, மானிடர், யானை முதலானவை யாவும் இச்சிவ சைதன்யமே.

**பதசாரம்**—முற்கூறிய சாட்சியான சித்ரூப ஆன்மாவை '**இவனே**' எனவும், அபஞ்சீகிருத பஞ்சமகா பூதத்தும், அதன் காரியமான லிங்கசரீர சமஷ்டியினும் உபகித சைதன்னியமாம் இரண்ய கர்ப்பனை '**பிரமன்**' எனவும், மேலான ஐசுவரிய யோகமுடையவனையும், இது கடம் என்று காண்டல்போல அச்சாட்சி ஸ்வரூபமுடைய தானுகிய பிரம்மத்தை எவன் அபரோக்ஷீகரிக்கின்றனே அவனையும், தேவர்களுக்கு இறைவனையும் '**இந்திரன்**' எனவும், பஞ்சீகிருத ஸ்தூல பூதத்தாலுண்டாகிய பிரமாண்டந் தன்னிருக்கின்ற மூர்த்திய சரீரியான விராட்டை '**பிரசாபதி**' எனவும் கூறினர். (14)

## அவதாரிகை.

சர்வசாட்சி பூதமாயிருக்கின்ற பிரஞ்ஞை ஆதேயப் பிரதானமாகக் கூறப்பட்டதுகொண்டு அப்பிரதானமாதலால் சுருதி எல்லாம் பிரஞ்ஞானத்தில் வைக்கப்பட்டிருக்கின்றதென அந்தப் பிரஞ்ஞையை ஆதாரமாகக்கூறி அதனை முக்கியவிருத்தியால் ஆதாரமாகவே அறியத்தக்கதென்று தெரிவித்தற்பொருட்டு, சிவருத்திராதி நாமங்களையுடைய பிரம்மமே பிரஞ்ஞானமென்று ஆதாரப் பிரதானமாகக் கூறுகின்றார்.

ஏனை மற்று மியம்பாத வியங்க நிற்கப் படுவதெல்லா
ஞான கனமா மிறையவனே நலமாஞ் சிவனு மரனுமுத
லான நாமங் களையுடைய பிரம மறிவு மெய்ப்பரம
னீன மில்லா வறிவுருவே யெல்லாப் பொருட்கும் பதிட்டையதாம்

## இதன் பொருள்

ஏனைமற்றும் இயம்பாத —ஒழிந்த இன்னமும் சொல்லாத
இயங்க நிற்கப்படுவது எல்லாம்—சரம் அசரம் ஆகிய அனைத்தும்
ஞான கனமாம் இறையவனே—பிரஞ்ஞான கனமான இச்சிவனே தான்
நலமாம் சிவனும் —நன்மையான சிவனும்
அரனும் முதலான —உருத்திரனு முதலாகிய
நாமங்களையுடைய —பெயர்களை உடைய
பிரமம் அறிவு —பிரம்மமே பிரஞ்ஞானமாம்

| | |
|---|---|
| மெய்ப்பரமன் | —கூடஸ்தன் சத்திய சைதன்னியமாகிய ஈசனுடைய |
| ஈனமில்லா அறிவுருவே | —கெடுதல் இல்லாத பிரஞ்ஞான ஸ்வரூபமே |
| எல்லாப் பொருட்கும் | —சகல வஸ்துக்களுக்கும் |
| பதிட்டையதாம் | —பிரதிஷ்டையாகும். |

**கருத்து**—இன்னும் கூறாது விட்டொழிந்த சராசரமாகிய சகல வஸ்துக் களும், பிரஞ்ஞானகனமான இச்சிவனேதான். இந்தப் பிரஞ்ஞானமே சிவன், ருத்திரன் என்ற பெயரையுடைய பிரம்மம். சத்திய சைதன்னியமாகிய ஈசுவர னுடைய அழிவற்ற பிரஞ்ஞான ஸ்வரூபமே எல்லா வஸ்துக்களுக்கும் பிரதிஷ் டை (ஆச்ரயம்) ஆகும்.

**பதசாரம்**—**'ஜகமனைத்தும் பிரஞ்ஞையை நேத்திரமாக உடையது'** என்ற சுருதி வாக்கியத்தின் பொருள் பிரஞ்ஞான பிரம்மரூபமாம் சர்வ சாட்சியாகிய அதிஷ்டானத்தில் ஜகமனைத்தும் கற்பிதமாதலாலும் அவ்வதிஷ்டானமாம் நேத் திரத்தினாலேயே விளங்குதலாலும், உண்மையாகச் சொரூபத்துக்கு வேருக இல்லாமையாலும், நிரந்தர பிரஞ்ஞான லக்ஷணனுன பரமசிவனேதான் அவனு க்கு வேருக இல்லை எனத்தெரிவிக்க, **'எல்லாம் ஞான கனமாம் இறை வனே'** எனவும், அஞ்ஞான கற்பிதமான ஜகத்தைப்படைத்து அளித்தழித் தற்கு அதிகரணமாதலால் சிவமே ஜகமனைத்திற்கும் ஆசிரியம் என்பது விளங்க **'எல்லாப் பொருட்கும் பதிட்டையாம்'** எனவும், தடஸ்தலக்ஷணத்தால் எதினின்றும் ஜகத்து உண்டாயிருந்து லயிக்கின்றதோ எது சாதகர்களின் இருதயத்தில் சகல கற்பனாதீத சாட்சி சித்தாய் விளங்கப்படுகின்றதோ அவ் வஸ்துவே சிவருத்திராதி சம்ஞையுடைய உலககாரணப் பிரம்மமாம். எது பிரம் மவஸ்துவோ அதுவே சிருஷ்டிக்கு முன் இச்சகமனைத்தும் ஆன்மா ஒருவன் மாத்திரமாகவே இருந்தது என்று ஆன்ம சப்தத்தால் சுருதியில் நிரூபிக்கப் பட்டிருப்பது கொண்டு சோயம் தேவதத்தன் என்பதுபோல் சுயம்பிரகாசமான அவஸ்தாத்திரய சாட்சியாகிய பிரஞ்ஞானத்திற்கும் ஜகத்துக்குக் காரணமான சிவமென்னும் பிரம்மத்திற்கும், பிரஞ்ஞானம் பிரம்மம் என்னும் பதங்களால் சாமானாதி கரணியமன்றி ஐக்கியம் கூடாததனால் சமுசார சாட்சித்துவ ஜககருத் திருத்துவாதி சகல தருமங்களையும் தள்ளி இரண்டிடத்தும் ஏகரசமாயுள்ள நிர்விசேஷத் தன்மையே பிரத்தியக்குப் பிரம்மங்களுக்கு உண்மையான சொரூப ஐக்கியத்தைக்காட்ட **'பிரமமறிவு'** எனவும் கூறினார். (15)

அவதாரிகை.

பிரம்மான்ம விஞ்ஞானம் மோட்ச சாதனமென்பதையும், சுருதியில் கர்மத் தால் பிரஜையால் தனத்தினால் மோட்சம் இல்லை என்றபடி கர்மம் மோட்ச சாதனம் இல்லை என்பதையும் கூறுகின்றார்.

## வேறு.

மையலொன் றறவிவ் வறிவினை யறியின் மானுடன் முத்தனு மன்றித்
துய்யகன் மத்தான் மைந்தரான் மற்றோர் பொருளினு லுற்பவந் துடையான்
வையகம் பிரம வேதனந் தன்னின் மாத்திரத் தாற்பிர மந்தா
னையமொன் றறவே யாமென முக்கா லாணையிட் டறைந்தன னலரோன்

### இதன் பொருள்.

மையல் ஒன்று அற —மயக்கம் ஒன்றும் இல்லாமல்
இவ்வறிவினை அறியில் —இந்தப்பிரகாசமான ஞானத்தை அறிந்தால்
மானுடன் முத்தனும் —மனிதனானவன் அமிர்தனுவான்
அன்றித் துய்யகன்மத்தால் —இது அல்லாமல் பரிசுத்தமுடைய கர்மத்தினுலும்
மைந்தரால் —சற்புத்திரராலும்
மற்றோர் பொருளினுல் —மற்றை யாதொரு திரவியத்தினுலும்
உற்பவம் துடையான் —பிறவியை நீக்கமாட்டான்
வையகம் —உலகத்தோர்
பிரமவேதனம் தன்னின் மாத்திரத்தால்—பிரம்மஞான மாத்திரத்தினுலேயே
ஐயம் ஒன்று அறவே பிரமந் தான் ஆமென } சந்தேகம் ஏதுமின்றிப் பிரம்மம் ஆவாரென்று
அலரோன் —பிரமதேவன்
முக்கால் ஆணையிட்டு —மூன்றுதரம் சபதம்செய்து
அறைந்தனன் —சொன்னுன்.

**கருத்து**—இந்த ஞானத்தை அடைந்தவனே மனிதனுவான். அவன் மோட்சத்தையும் அடைவான். ஞானத்தால் அல்லாமல், கர்மத்தாலோ சற்புத்திரராலோ, திரவியத்தாலோ, பிறவியை நீக்கமுடியாது. உலகத்தவர் பிரம்ம ஞானத்தினுலேயே பிரம்மம் ஆவார். சந்தேகமே இல்லை.

**பிதசாரம்**—அஞ்ஞான கற்பிதரூபத்தை நீக்குதற்பொருட்டு அவ்வித ஐக்கிய ஞானம் வேண்டற்பாலதாய் அதுவே ஜீவனுக்கு மோட்சத்தைக் கொடுப்பதனுல், அதனை '**மையலொன்றறவிவ் வறிவினையறியின் மானுடன் முத்தனும்**' எனவும், தீபத்தாலன்றி இருளை இருப்புலக்கை முதலியவற்றுல் எவர்களாலும் நீக்கத்தகாது. அதுபோல் சொரூப யதார்த்தத்தைத் திரோதானம் செய்யக் காரணமான அஞ்ஞானம் இஞ்ஞானத்தினுலேயே நிவர்த்தி அடையவேண்டியதனுல் அவ்வித ஞானமே பிரத்யக்குப் பிரமைக்கிய விலக்கணமுடைய முத்திக்குச்சாதனம். மற்ற ஜடங்களான கர்ம முதலிய எவைகளும் சாதனங்கள் ஆகா எனக்காட்டத் '**துய்யகன்மத்தால் மைந்தரால் மற்றோர் பொருளினுலுற்பவந் துடையான்**' எனவும், கேவலம் கர்மமாத்திரத்தால் முத்தி சித்தியாவிடினும்,

ஞானம் கர்மம் இரண்டும்கூடியே சித்திக்கவேண்டும். கேவலம் ஞானத்தால் அதுகூடாது என ஞானகர்ம சமுச்சயவாதி சங்கிக்க இருளும் பிரகாசம்போல இரண்டும் ஒன்றுகூடி இருக்கத்தகாததனுலும், கேவலம் ஞானத்தினுலேயே முத்தி சித்தித்தலாலும் ஞானத்தோடு கர்மமுங்கூடி முத்தி சித்திக்கவேண்டு மென்பதில் பயனில்லாமையாலும், அவ்வாதம் பிரயோசனம் இல்லையெனக் காட்ட 'பிரம வேதனந்தன்னின் மாத்திரத்தால்' எனவும் கூறினர். (16)

அவதாரிகை.

ஐதரேய உபநிஷதத்தின் பரியாலோசனையால் கர்மத்தின் உதவி இல்லாமல் பிரமான்ம ஐக்கிய சாக்ஷாத்காரமே முத்தி சாதனமெனக்கூறித் தைத்திரிய உபநிஷதத்தின் தாற்பரியமும் அதுவேயெனச் சொல்லத் தொடங்குகின்றுர்.

அந்தவிச் சைக்கு விடயமாஞ் சச்சி தானந்த மாம்பிர மத்தைப்
பந்தமாங் குகையின் மாயையஞ் ஞான மென்பதிற் பரவியோ மத்தில்
அந்தவங் கத்துப் பிரமரூ பமதா வறிந்தவ னவனொருக் காலே
சிந்தைசெய் காம மியாவையும் பெற்றுத் தீரவே சீவன்முத் தனுமாம்.

இதன் பொருள்.

அந்த விச்சைக்கு விடயமாம் —அந்த ஞானம் ஒன்றிற்கே விஷயமாகிய
சச்சிதானந்தமாம் பிரமத்தை —சச்சிதானந்தமான பிரம்ம ஸ்வரூபத்தை
மாயை அஞ்ஞான மென்பதில் பரவியோமத்தில் } மாயை, அஞ்ஞானம், என்பனவற்றுடன் பரமாகாசம் என்னும் பெயர்களை உடைய
பந்தமாம் குகையில் —சமுசாரமாகிய குகையினிடத்திலிருக்கின்ற
அந்த அங்கத்துப் பிரமரூபமதா—முன்சொன்ன இலக்கணமுடைய பிரத்தியக்கு ஸ்வரூபமாக
அறிந்தவன் அவன் —எவன் அறிகின்றுனே அவனே
ஒருக்காலே —ஏககாலத்திலேயே
சிந்தைசெய் காமம் யாவையும்பெற்று—கருதிய காமம் அனைத்தையும் அடைந்து
தீரவே சீவன் முத்தனுமாம்—உண்மையாகவே ஜீவன் முத்தனுகவும் பவிப்பான்.

கருத்து—சத்தியமாயும் ஞானமாயும் ஆனந்தமாயுமுள்ளது பிரம்மம். அதைச் சமுசாரம் என்னும் குகையில் வைக்கப்பட்டிருக்கின்ற பிரத்தியக பின்னமாக யாவன் அறிகின்றுனே அவன் அறிந்த பிரம்மரூபமாகிய தன்னுல் சகல காமியங்களையும் அடைகின்றுன்.

பதசாரம்—சர்வசாட்சியாகிய பிரஞ்ஞையே பிரம்மம், அதுவே மோட்ச சாதனமான பரஞானத்திற்கு விஷயமென்று காணப்படுதலால், அந்தப் பிரம்மத்தைச் சத்தியஞானுதி இலக்கணமுடையதாகச் சொல்வதில் பிருஹிவிருத்தியில் வரும் என்ற தாதுவின் அர்த்தப்படி, பிரதியோகி விசேஷமாகிய இரண்

டாவது வரக் காரணம் இல்லாததனால், வேற்றுப்பொருளால் பரிச்சேதம் இல்லாததுபற்றி இலக்கணையால் நிரதிசயமாகக் கூறப்படுதலால், அந்தப்பிரம்மம் தேசகால வஸ்து பரிச்சேதமில்லாததாகும். விகாரத்தில் காலாதிகள் காணப்படுதலால் பிரம்மம் பரிச்சேதம் ஆகாதோ எனில் அவைகள் கற்பிதங்களாதலால் கற்பிதங்கள் எல்லாம் தனது அதிஷ்டான சத்தையால் விளங்கியும், பாதிக்கப்பட்டும் பாதிக்கப்படாத அதிஷ்டானத்துக்கு வேறின்மையால் மூன்று பரிச்சேதமும் இல்லையென்பது விளங்கப் 'பிரமம்' என்றார். ஆரோப சர்ப்பாதிகளுக்கு ஆதாரமாகிய பழுதை முதலியவைகள் அதிஷ்டானப் பொருளாகக் காணப்படினும், உண்மையாக அனித்தியங்களே அன்றி அதிஷ்டானமாகாது. திரிசியம் எல்லாம் அனித்தியமாதலாலும், உபாதானகாரணமாகிய மண்ணை முன்னிட்டே கடம் விளங்குவதுபோல் ஜகத்து இருக்கின்றதென்று இருக்கும் தன்மையை முன்னிட்டே சித்தித்தலாலும், அழியாததே இருக்கின்றதனாலும், ஆரோபிதமான சர்ப்பம் இருக்கின்றது என்ற இருக்குகை ரச்சுவின் இருக்குகையேபோல, ஆரோபித அதிஷ்டேயமான சகல ஜகத்தினிருக்குகையும் பிரம்மத்தின் இருக்குகையாதலாலும், பிரம்மமே ஏகமாகிய அதிஷ்டானம். அதுவே அழியாதது என்பது விளங்கச் 'சத்து' என்றார். அதுவே விளங்காவிடில் சூனியமாய்விடும். ஆதலால் அது சுயம்பிரகாசம் என்பது விளங்கச் 'சித்து' என்றார். அதுவும் சுகரூபம் ஆகாவிடில் சுக இச்சையுடைய ஜகம் அனைத்தும் தானைக்கொள்ள உபகாரப்படாது என்பது விளங்க 'ஆனந்தம்' எனவும் கூறினார். ஜீவர்களுக்கு எப்போதும் ஜனன மரணங்களான போக்குவரவுகளைச் செய்கின்ற சமுசாரத்தைப் 'பந்தம்' எனவும், காரியப்பொருள்கள் அனைத்தும் முக்காலங்களிலும் கிடையாதனவாயும், கிடைக்கப்படுவனவாயும், கிடைத்திருக்கின்றனவாயும் இதில் இருத்தலால், இந்த அவ்வியாகிருதத்தை இவ்விதமான பொருள் உடையது எனத் தெரியவேண்டிக் 'குகை' எனவும், விசித்திரமாகச் செய்யமுடியாத காரியங்களைச் செய்தலாலும் சுயம்பிரகாச நிஷ்பிரபஞ்ச பிரம்மஸ்வரூப ஞானத்தால் நீக்கப்படுதலாலும் 'மாயை அஞ்ஞானம்' எனவும், அந்த அவ்வியாகிருதமே ஆகாயாதிகளை அபேக்ஷித்துப் பரம் என்பதையும், வியோம சமுக்கினை உடையது என்பதையும் தெரிவிக்கப் 'பரவியோமம்' எனவும், பிரம்மம் சர்வ வியாபகமாயிருந்திடினும் பஞ்சகோசமாய்ப் பரிணமித்து விளங்கிய முக்குணரூபமான அவ்வியாகிருதத்தினிடமாகவே ஆன்மப்பிரகாசம் கிரகிக்கப்படுதலால் அந்த அவ்வியாகிருதமே ஆன்மலாப பூமி என்பதையும், அவ்விடத்தில் விளங்குகின்ற பிரகாசமே அவ்வியாகிருத தத்துவம், அதன் காரியமான பிரபஞ்சம் என்னும் இவைகளின் சங்கோச விகாசங்களைப் பிரகாசிப்பித்துத் தான் ஸ்வபாவமாய்ப் பாதிக்கப்படாமல் அனைத்திற்கும் ஆன்ம வஸ்துவாய் விளங்குவதனால் அது சத்திய ஞானானந்த ஏகரசம் என்பதையும் தெரிவிக்கும்பொருட்டுப் 'பரவியோமத்தில் அந்தரங்கத்து' எனவும் கூறினார். சிரவணமனனாதி சாதனத்தாலுண்டாகிய பிரம்மாகார அகண்ட மனோவிருத்தியில் பிரதிவிம்பித்த சைதன்யத்தால் ஜீவேச பேதமற்ற பிரம்ம ஸ்வரூபமாகப் பிரத்தியகான்மாவை அபரோக்ஷீகரிக்கின்ற அபரோக்ஷ அனுபவத்தை உடைய

வனைப் 'பிரம்மரூபமதாவறிந்தவன்' எனவும், ஆரோபித சகல ஜகங்களிலுமுள்ள மனுஷானந்த முதல் சதா சிவானந்தம் வரை சகலானந்தமும் அதிஷ்டான பிரம்ம ஸ்வரூபனாகிய தன்னாலேயே ஏககாலத்தில் அவ்வவ் விடத்தும் வியாபித்துப் புசிக்கப்படுவதை 'ஒருக்காலே சிந்தை செய் காமமியாவையும் பெற்று' எனவும் கூறினர். (17)

அவதாரிகை.

சத்தியமாயும், ஞானமாயும், ஆனந்தமாயும் உள்ளது பிரம்மம். அதைப் பரவியோமா என்னும் குகையில் வைக்கப்பட்டிருக்கின்ற பிரத்தியக பின்னமாக யாவன் அறிகின்றானோ அவன் அறிந்த பிரம்மரூபமாகிய தன்னால் சகல காமியங்களையும் அடைகின்றான் என்ற சுருதிவாக்கிய அக்ஷரானுசாரமாக முன் கவியில் பொருள்கூறி இக்கவியில் பலிதார்த்தமாகப் பிரம்மத்தை அறிந்தவன் பிரம்மத்தை அடைகின்றான் என்றபடி பிரத்தியக்கை மறைக்கும் அஞ்ஞானம், அந்தக்கரணம், மாயை இவைகளுக்குச் சாட்சியான அத்துவித பிரம்மத்தை அபரோக்ஷமாக அறிகின்றவன் உத்தம பிரம்மவித்தெனவும், சுருதியில் சூத்திரம் போல் கூறிய வாக்கியார்த்தத்தைச் சுருதி தானே சுருக்கமாக உரைசெய்ததின் பிறகு, அவ்விடத்துண்டாகிய சங்கா நிவிர்த்திசெய்யவேண்டி, இவ்வான்மாவினிடத்தினின்று என்றதுமுதல், இப்படி உபநிடதம் என்றது வரைக்கும் விரிவாக உரையும் செய்யப்பட்டிருக்கின்றது. அதனைச் சங்கிரகித்துச்சொல்ல வேண்டி இவ்விடத்தில் பிரம்மம் சச்சிதானந்தம் என்பது கூடாது, என்னெனில் பரிச்சேதமாயுள்ள விண்முதலிய பூத பௌதிகப் பிரபஞ்சம் இருத்தலால் என்ற சங்கையை நீக்குதற்பொருட்டு அந்தப் பிரம்மத்தினின்றும் சிருஷ்டியைக் கூறுகின்றார்.

அஞ்ஞான மாயா சத்திக்குச் சான்று யகத்துறை யசலவான் மாவை
மெய்ஞ்ஞான பரத்தின் வேறறக் காணு மவன்பிரம வித்தினின் மிக்கான்
மெய்ஞ்ஞான பரத்தில் வேறறுஞ் சத்தி மிச்சிர மித்தவான் மாவிற்
பைஞ்ஞாக மாலை போலவே தோன்றப் படும்பஞ்சீ கரித்திடா வானம்.

இதன் பொருள்.

| | |
|---|---|
| அஞ்ஞானமாயா சத்திக்கு | —அஞ்ஞானமாகிய மாயா சத்திக்கு |
| சான்றாய் அகத்து உறை | —சாட்சியாய் உள்ளத்தில் உறைகின்ற |
| அசல ஆன்மாவை | —அசைவற்ற பிரத்தியகான்மாவை |
| மெய்ஞ்ஞான பரத்தில் | —மெய்யுணர்வாகிய பிரம்மத்துக்கு |
| வேறறக்காணும் அவன் | —அபின்னமாக அறிகின்றவன் |
| பிரம்மவித்தினில் மிக்கான் | —பிரம்மவித்துக்களில் மேலானவன் |
| மெய்ஞ்ஞான பரத்தில் | —சத்திய ஞானமாகிய பிரம்மத்திற்கு |
| வேறு அறும்சத்தி | —அபின்னமாகிய கற்பிதசத்தியினுடன் |
| மிச்சிரமித்த ஆன்மாவில் | —கூடியிருக்கின்ற ஆன்மாவினிடத்திலிருந்து |

மாலை பைஞ்ஞாகம்போலவே—மாலையினிடத்தில் தோற்றுகின்ற விஷப்பையை யுடைய சர்ப்பம்போலவே
பஞ்சீகரித் திடாவானம் —பஞ்சீகரிக்கப்படாத ஆகாயம்
தோன்றப்படும் —தோற்றப்படும்.

**கருத்து**—அஞ்ஞானமாகிய மாயாசத்திக்குச் சாட்சியாய் உள்ளத்திலுறைகின்ற பிரத்தியகான்மாவை மெய்யுணர்வாகிய பிரமத்துக்கு அபின்னமாக எவன் ஒருவன் அறிகின்றானோ அவனே பிரம்மவித்துக்களில் சிறந்தவனாவான். மாலையினிடத்துத்தோன்றும் சர்ப்பம்போல பஞ்சீகரிக்கப்படாத ஆகாயம் சத்திய ஞானமாகிய பிரம்மத்திற்கு அபின்னமாகிய கற்பித சத்தியுடன் கூடியிருக்கின்ற ஆன்மாவினிடத்திலிருந்து உண்டாயிற்று. (தோன்றிற்று)

**பதசாரம்**—அசங்க உதாசீன நிற்குண ஆன்மாவுக்குச் சிருஷ்டி கருத்திருத்துவம் எப்படிக்கூடும் என்ற சங்கைக்குச் சமாதானமாகச் '**சத்தி மிச்சிர மித்தவான்மா**' எனவும், இங்ஙனம் உற்பத்தி ஒப்பப்படினும், ஆரம்பம், பரிணமம் என்னும் இரண்டினொன்றிற்குள் ஒன்று ஒப்பவேண்டும். அங்ஙனம் ஒப்பிடில் பிரம்மம் அனித்தமாகும் என்னும் மதத்துக்குக் கண்டனமாகப் '**பைஞ்ஞாக மாலைபோல்**' எனவும், சிலமதத்தில் ஆகாயத்திற்கு நித்தியத்துவம் ஒப்பப்பட்டிருத்தலால் அதுபற்றி பிரம்மம் பரிச்சேதம் உடையது என்ற மத கண்டனமாக '**தோன்றப்படும் பஞ்சீகரித் திடாவானம்**' எனவும் கூறினர். (18)

### இதுவும் அது—வேறு.

வாயு வென்று பெயருடைய பரிசம் வானத் துண்டாகித்
தேயு வதிலே தோன்றிற்றவ் வனலி லப்பு முண்டாயத்
தோய மதின்மண் ணுதித்தது சூக் குமமைந் தையும்பஞ் சீகரிக்கத்
தூய விறைவ னாக்கினையாற் றூல பஞ்ச பூதமுமாம்.

### இதன் பொருள்.

வானத்து —அவ்வாகாயத்திலிருந்து
வாயுவென்று பெயருடைய பரிசம் உண்டாகி } வாயு என்னும் நாமமுடைய பரிசமானது தோன்றி
அதிலே தேயு தோன்றிற்று —அதில் நின்றும் அக்கினியானது உண்டாயிற்று
அவ்வனலி லப்பும் உண்டாய்—அந்த அக்கினியிலிருந்து ஜலமும் உண்டாகி
அத்தோயம் அதில் —அந்த ஜலத்தினின்றும்
மண் உதித்தது —பிருதிவி உண்டாயிற்று
சூக்குமம் ஐந்தும் —இவ்வித சூக்கும பஞ்சபூதங்களையும்
பஞ்சீகரிக்க —பஞ்சீகரணம் செய்ய
தூய இறைவன் ஆக்கினையால்—பரிசுத்தம் பொருந்திய சிவாக்கினையால்
தூல பஞ்சபூதமும் ஆம் —ஸ்தூலமான பஞ்ச பூதங்களுமுண்டாகும்

கருத்து—ஆகாயத்திலிருந்து வாயுவும், வாயுவிலிருந்து அக்கினியும், அக்கினியிலிருந்து ஜலமும், ஜலத்திலிருந்து பிருதிவியும், உண்டாயின. இந்தச் சூக்கும பூதங்களையும் பஞ்சீகரணம்செய்யச் சிவாக்கினையினுல் ஸ்தூலமான பஞ்சபூதங்கள் உண்டாயின.

பதசாரம்—மண்ணில்தோன்றிய கடாதிகள் மண்ணிற்கு வேறு இல்லாமைபோல, காரியங்களான உலகங்கள் காரண பிரம்மத்திற்கு வேறில்லாததினுல் பிரம்மத்துக்கு அவற்ருல் பரிச்சேதம் இல்லை. (19)

இதுவுமது—வேறு.

பரமனுக் கினையி னுலே பஞ்சபூ தங்க ளாலே
பிரமாண்டம் படைத்தே னந்தப் பிரமாண்ட மத்தி னுள்ளே
திரமுறு முலகுந் தேவ சாதியுந் தாந்தாம் பண்ணுங்
கருமரு பத்தால் வானோ ராதியும் பிறவுங் கண்டேன்.

இதன் பொருள்.

பரமன் ஆக்கினையினுலே —சிவாக்கினையினுலே
பஞ்சபூதங்களாலே —பஞ்சபூதங்களைக்கொண்டு
பிரமாண்டம் படைத்தேன் —பிரமாண்டத்தை நான் சிருஷ்டித்தேன்
அந்தப் பிரமாண்டத்தினுள்ளே—அந்தப் பிரம்மாண்டத்தினிடத்தே
திரம் உறும் உலகும் . . —நிலைபெற்றிருக்கின்ற புவனங்களையும்
தேவசாதியும் —தேவவர்க்கங்களையும்
தாம் தாம் பண்ணும் —தாங்கள் தாங்கள் செய்த
கருமருபத்தால் —கர்மருபமாக வந்த
வானோர் ஆதியும் —தேவர் முதலானவர்களையும்
பிறவும் கண்டேன் —மற்றுமுள்ள அனைத்தையும் நான் சிருஷ்டித்தேன்.

கருத்து—நான் (பிரம்மன்) சிவாக்கினையின்படி பஞ்சபூதங்களைக்கொண்டு பிரம்மாண்டத்தைப் படைத்தேன். அதில் புவனங்களையும், தேவ ஜாதிகளையும் அவர் அவர்கள் செய்த கர்மத்துக்குத் தக்கபடி தேவர் முதலானவர்களையும் மற்றுமுள்ளவர்களையும் படைத்தேன். (20)

அவதாரிகை.

அன்ன பரிணமமான புருஷசரீரத்தில் தாதான்மியம் உடைய ஆன்மாவைச் சருவாந்தரமான பிரம்மமாகக்கூறவேண்டி ஒன்றற்கொன்று வெளியாகவும், ஆந்தரமாகவும் (உள்ளாகவும்) அன்னமயம், பிராணமயம், மனோமயம், விஞ்ஞானமயம், ஆனந்தமயம் என்னும் பெயருடைய பஞ்சகோசங்கள் அதிகாரிகளின் சவுகரியத்தின்பொருட்டுச்சுருதியினுல் உரைக்கப்பட்டன எனக்கூறுகின்ருர்.

வேறு.

பாதொன் றெலும்பு நரம்புமுத லிந்த வுடம்ப தெனத்தோன்று
மோது பிராண மயனதுக் குள்ளாய் வேறு யேயொளிரு
மோது பிராண மயற்கயலா யுள்ளா யொளிரு மனோமயனந்
நீதி யுறவிஞ் ஞானமய னவனுக் குள்ளாய் நிகழுமால்

இதன் பொருள்.

பாது ஒன்று எலும்பு நரம்புமுதல்—எது எலும்பு நரம்பு முதலிய
இந்த உடம்பது எனத்தோன்றும்—இந்தச் சரீரமென்று விளங்குகின்றதோ
ஓது பிராணமயன் —சொல்லப்பட்ட பிராணமயனனவன்
அதுக்குள்ளாய் வேறுயே ஒளிரும்—அதற்குள்ளாகிப் பின்னமாக விளங்குவான்
ஓது பிராணமயற்கு —இப்பொழுது கூறிய பிராணமயனுக்கு
அயலாய் உள்ளாய் —வேறுயும் ஆந்தரமாயும்
மனோமயன் ஒளிரும் —மனோமயனனவன் விளங்குவான்
விஞ்ஞானமயன் —விஞ்ஞானமயன் என்பவன்
அந்நீதியுற அவனுக்கு உள்ளாய்—அந்தக்கிரமாக மனோமயனுக்கு உள்ளாகி
நிகழுமால் —பிரகாசிப்பான்.

கருத்து—எது எலும்பு நரம்பு முதலிய சரீரமென விளங்குகின்றதோ அதற்கு உள்ளாகிப் பின்னமாக விளங்குகின்றவன் பிராணமயன், இந்தப் பிராண மயனுக்கு வேறுயும் ஆந்தரமாயும் விளங்குகின்றவன் மனோமயன், அப்படியே மனோமயனுக்கு உள்ளாகி விளங்குகிறவன் விஞ்ஞானமயன்.

இந்த ஆத்மா அன்னமயன். எது எலும்பு நரம்பு முதலிய ரூபத்துடன் தேகிகளுக்குச் சரீரமென்று விளங்குகின்றதோ (அதை உபாதியாயுடைய அன்ன மய ஆத்மாவிற்கு) அதற்குள்ளாகிப் பிராணமய ஆத்மா பின்னமாக விளங்குவான். எந்தக்காரணத்தால் இந்த உள்ளிருக்கிற பிராணமயன் தேகமத்தியத்தில் இருப் பதாக அனுபவிக்கப்படுகிறதோ அந்தக் காரணத்தால் பாகிய தேகத்தைக்காட்டி லும் பிராணமய ஆத்மா பின்னமென்று அறிந்துகொள்ளவேண்டும். (கத்தி உறைபோல் உள்ளிருப்பதை மறைப்பதால் அன்னமய தேகம் கோசம் என்று சொல்லப்படுகிறது) எல்லா மனிதர்களிடமும் விளங்குகிற இந்தப் பிராணமய கோசத்திற்குள்ளும், வேறுயும் மனோமய ஆத்மா விளங்குகிறது. (இதுவும் அனாத்மா என்று விவேகத்தால் அறிந்துகொள்ளவேண்டியது) விளங்காநின்ற இந்த மனோமய கோசத்திற்குள்ளும், வேறுயும், விஞ்ஞானமய ஆத்மா விளங்குகின்றது. (இந்த விஞ்ஞானமயமும் அனாத்மாவேயாகும்)

**பதசாரம்**—பிராணன் கேவலம் ரஜோகுணப் பரிணாமமாதலால் அதற்குச் சித்பிரகாச அபிவியஞ்சகத்தன்மை (லக்ஷணத்துவம்) இல்லாமையாலும் மனத்திற்கு அஃது இருத்தலாலும், 'உள்ளாய்' எனவும், ஆகாய முதலிய சூக்கும பஞ்சபூத வியஷ்டி சத்துவாங்கிசங்களால் உண்டானவை பஞ்சஞானேந்திரியங்கள் அவ்வித சத்துவாங்கிச சமுதாய பரிணாமரூபம் அந்தக்கரணம், அவ்வந்தக்கரண உபாதானமாகிய சத்துவத்திற்கு ஆன்ம ஸ்வரூபமாகிய சுகம், பிரகாசம் என்னும் இவற்றை வெளிப்படுத்தும் சாமர்த்தியம் இருப்பதனால் அதன் காரியமாகிய அந்தக்கரணமும் சுகப்பிரகாசாதி வியஞ்சகவிருத்தியும், கொஞ்சம் ராஜச குண சம்பந்தத்தால் சங்கற்ப விகற்பரூபமான மனம் என்னும் பெயரை அடைகின்றது. ராஜசத்தின் சம்பந்தமின்றி நிர்மலமாய்பவித்து நிச்சய ரூபமான புத்தியென்னும் பெயரை அடைகின்றது. இப்படியே மனோபுத்தி விருத்திபேதத்தால் பின்னங்களான விருத்திகளோடும்கூடிய அந்தக்கரணத்தைச் சகாயங்களாயுடைய நேத்திராதி இந்திரியங்களும், விமர்சனம், நிச்சயம் என்னும் இருவகை விளக்கத்தைக் கொடுப்பதனால் இரண்டு வகுப்புடையதாகும். இவ்விடத்தில் விமர்சனஞானத்தை உண்டுபண்ணும் பஞ்சஞானேந்திரியங்களோடுங்கூடிய மனமென்னும் பெயருடைய விருத்தியோடுங்கூடிய அந்தக்கரண உபாதியுடைய ஆன்மாவை '**மனோமயன்**' எனவும் அனுஷ்டிக்கத்தக்க பதார்த்த விஷயமான நிச்சய ஞானவானுக்கே வித்தியாகர்மங்களில் அதிகாரமாதலால் முற்கூறிய மூன்றுகோசமும் அனான்மா எனத்தெரிவிக்க '**விஞ்ஞானமயன் அவனுக்குள்ளாய்**' எனவும், நிச்சய ஞானத்தை உண்டுபண்ணுகின்ற நேத்திராதி இந்திரியங்களோடுங்கூடிய புத்தி விருத்தியுடைய அந்தக்கரண விசிட்ட ஆன்மாவை '**விஞ்ஞானமயன்**' எனவும் கூறினர். (21)

**இதுவுமது—வேறு.**

அன்னியமாய் விஞ்ஞான மயனுக் குள்ளா
மானந்த மயனன்ன மயன்றன் னுள்ளா
மன்னியவப் பிராணமய னாலே பூர்ணன்
மனோமயனாற் பூர்ணனவன் மனோ மயன்று
னன்னவகை விஞ்ஞான மயனாற் பூர்ணா
னனந்த மயனாலே யவன்றான் பூர்ணன்
றன்னிகாற் றனைத்தினுக்கு முள்ளாய் வேறாந்
தற்பரத்தாற் பூர்ணனது தானே பூர்ணம்

**இதன் பொருள்.**

| | |
|---|---|
| ஆனந்தமயன் அன்னியமாய் | —ஆனந்த மயனான் ஆன்மா விபின்னனாய் |
| விஞ்ஞானமயனுக்குள்ளாம் | —விஞ்ஞானமயனுக்கு ஆந்தரத்தன்மை ஆவான் |
| அன்னமயன் | —அன்னமயனானவன் |
| தன்னுள்ளாமன்னிய | —தனக்குள்ளாகப் பொருந்துகின்ற |

அப்பிராணமயனாலே பூர்ணன்—அந்தப் பிராணமயனாலே வியாபிக்கப்பட்டவன்
மனோமயனால் —மனோமயன் என்பவனால்
அவன் பூர்ணன் —அப்பிராணமயனும் வியாபிக்கப்பட்டவன்
மனோமயன்தான் —மனோமயனானவனும்
அன்னவகை —அத்தன்மையாகவே
விஞ்ஞானமயனால் பூர்ணன்—விஞ்ஞானமயன்என்பவனால் வியாபிக்கப்பட்டவன்
அவன்றான் —அவ்விஞ்ஞானமயனும்
ஆனந்தமயனாலே பூர்ணன் —ஆனந்தமயனால் வியாபிக்கப்பட்டவன்
தன் நிகர் அற்று —தனக்கு ஒப்பில்லாததாயும்
அனைத்தினுக்கும் உள்ளாய் —எல்லாவற்றிற்கும் ஆந்தரனாயும்
வேறும் தற்பரத்தால் —தனக்கு அன்னியமாயுமுள்ள பிரம்மமாகிய சாட்சியால்
பூரணன் —(அவ்வானந்தமயனும்) வியாபிக்கப்பட்டவன்
அது —அப்பிரம்மமோவெனில்
தானே பூர்ணம் —(மற்றொன்றினாலும் வியாபிக்கப்படாமல்) தானே பூர்ணமாய் இருக்கின்றது.

கருத்து—விஞ்ஞானமயனுக்குள்ளாய் அன்னியமாய் விளங்குகின்றவன் ஆனந்தமயன், அன்னமயன் பிராணமயனால் வியாபிக்கப்பட்டிருக்கிறான். பிராணமயன் மனோமயனால் வியாபிக்கப்பட்டிருக்கிறான். மனோமயன் விஞ்ஞானமயனால் வியாபிக்கப்பட்டிருக்கிறான். விஞ்ஞானமயன் ஆனந்தமயனால் வியாபிக்கப்பட்டிருக்கிறான். அவ்வானந்தமயனும் தனக்கு ஒப்பில்லாததாயும் எல்லாவற்றிற்கும் உள்ளாயும், அன்னியமாயுமுள்ள பிரம்மமாகிய சாட்சியால் வியாபிக்கப்பட்டிருக்கிறான். பிரம்மமோ எனில் ஒன்றினாலும் வியாபிக்கப் படாமல் தானே பூர்ணமாயிருக்கின்றது.

பதசாரம்—விஞ்ஞானத்தால் சம்பாதிக்கப்பட்ட வித்தியா கர்மங்களுக்குப் பலம் சுகமாதலால், அச்சுகமும் ஆனந்தஸ்வரூபம் ஆகையால், அவ்வானந்தத்தை அபிவியஞ்சிக்கும் உபாதியுடைய ஆன்மாவை 'ஆனந்தமயன்' என்றும், இந்த ஐந்து கோசங்களும் கிரமமாய் ஒன்றற்கொன்று சித்தின் அபிவியத்தின் பலத்தால் வியாபகமாகப் பவித்து பிம்பமான கூடஸ்த சித்தால் வியாபிக்கப்பட்டு அவற்றின் சித்துவல்லமை பிரதிபிம்பத்தின் வல்லமையாயிருப்பதாலும், பிரதி பிம்பம் வஸ்துவாகத்தகாததனாலும், அந்த ஐந்து கோசங்களையும் அனான்மா என்று காட்டவேண்டித் 'தன்னிகரற் றனைத்தினுக்கு முள்ளாய்வேறுந் தற்பரத் தாற் பூர்ணன்' என்றும், பஞ்சகோசாதீதனே குறைவு நிறைவற்ற அசகாய சுயம் பிரகாச பூரணவஸ்துவான பிரம்மம் எனக்காட்ட வேண்டி 'அதுதானே பூர்ணம்' என்றும் கூறினார். (22)

## அவதாரிகை.

முந்திய கவியில் பஞ்சகோசங்களையும் ஆன்மாவியாபித்து ஸ்வயம் பூர்ணனுயிருக்கின்ருன் என்றதனால் அன்னமயமாகிய ஸ்தூல சரீரமும், பிராணமனோவிஞ்ஞானமயமாகிய சூக்ஷ்ம சரீரமும், ஆனந்தமயமாகிய காரணசரீரமும், அனுன்மா எனக்கூறியதாகும். ஆனந்தமயனையே ஆன்மாவாக உபாசிக்க வேண்டி, பிரியம், மோதம், பிரமோதம் இவைகள் சிரம் சிரகுகளாகவும், ஆனந்தம் உடலாகவும், பிரம்மம் புச்சமாகவும், சுருதியிற் காணப்படுவதனுல் ஆனந்தமயன் எப்படி அனுன்மா ஆவான் எனச்சங்கிக்க, மயன் என்பது விகாரமாதலாலும்,மற்றெவ்விதத்தாலும் ஆனந்தமயன் சோபாதிகனுகவே சித்திப்பதனுல் பிரியமோதாதிகளை அவயவங்களாக வர்ணித்திடினும் அவனுக்குப் பிரம்மம் புச்சமாகாது. அங்ஙனமாயின் சுருதிகூறிய பிரம்மம் பிரம்மசத்தார்த்தம் உடையது ஆகாது. நிருபாதிகப் பிரம்மமே ஆன்மா ஆதலால் ஆனந்தமயன் சோபாதிகனுனதுபற்றி அவன் அனுன்மா என்பது சித்தம். ஆனுல் பிரியமோதாதிகள் உபாதி விகாரங்கள் ஆனுலும் ஆனந்தம் ஆன்மா என்று ஆனந்தத்தை உடலாகக்கூறி இருக்கின்றதே எனில் அதாவது ஆன்ம சொரூப சுகாபி வியஞ்சகமாயுள்ள சாத்துவிகாந்தக்கரண பரிணமவிருத்தியாகும். அதுவே பிரியமோதாதி பேதத்தால் பின்னப்படுகின்றது. எங்ஙனமெனில், நற்கருமத்தால் சமீபிக்கப்பட்ட இஷ்டர், புத்திரர், வித்தம், களத்திரம் முதலிய தரிசன லாப போகங்களால் உண்டாகிய பிரியமோதாதி சமுக்கினையுடைய அந்தக்கரணவிருத்தி விசேஷங்களால் இவற்றில் நிரதிசயமான ஆன்மானந்தம் பிரகாசிக்க அவ்வானந்தமே விஷயானந்தமெனப்படும். ஆனுல் விஷயானந்தம் கணப்போதுடையதே எனில், அது உபாதியைப்பற்றியதாம். அப்படிப்பட்ட விருத்திகள் சுழுத்தி, பிரளயம் முதலிய காலங்களில் தங்கள் காரணமான சத்துவத்தில் இலயிக்கின்றன. அப்படிக்காரண சத்துவாகாரமாக இருக்கின்றதாயும், மலினசத்துவப் பிரதானமாயும் அவித்தையென்னும் பரியாயம் உடையதாயுமுள்ள பாவரூபமான அஞ்ஞானமே ஆனந்தமயனது உபாதியாதலால், அவன் அனுன்மாவேதான் என்னும் தாற்பரியத்தால் நிரூபித்து, இக்கவியில் புச்சம் என்பது சச்சிதானந்தமான பஞ்சகோசாதீத அதிஷ்டான ஆன்மாவாகிய பிரம்மம் எனவும், பஞ்சகோசத்திற்கு அதீதமாயின் அவிஷயமாதலால் சூனியமாவான் எனச்சங்கிக்க, பிரம்ம நிஷ்டர்களால் அபரோக்ஷமாக ஆன்ம சுகம் அனுபவிக்கப்படுவதுகொண்டு சத்தென்னவேண்டி இரசம் எனவும் கூறுகின்ருர்.

## வேறு.

சச்சி தானந்த மாகியொன் ருய்பரப் பிரமம்
புச்ச மென்றுரைத் திடப்படு மிதமப் பொருளே
யிச்ச தானந்த மெய்தினே னியாவனெவ் விடத்துந்
துச்ச வாக்கையின் றுயாறுத் தவன்சுகம் பெறுமால்

இதன் பொருள்.

சச்சிதானந்தமாகி ஒன்றும் —சச்சிதானந்தமாயும், அத்துவிதமாயுமுள்ள
பரப்பிரமம் —பரப்பிரம்மமானது
புச்சம் என்று உரைத்திடப்படும் } புச்சம் (ஆதார அதிஷ்டானம்) என்று சொல்லப்படும்
அப்பொருளே இரதம் —அந்தப் பிரம்மமே (எக்காலத்திலும்) ரசவஸ்துவாகும்
இச்சதானந்தம் —இந்தச் சதானந்த ரசவஸ்துவை
எய்தினேன்யாவன் —அடைந்த சனுதனன் எவனோ
அவன் —அன்னவனே
துச்ச ஆக்கையின் துயர்அறுத்து—இழிவானஉடலைப்பற்றிய துன்பத்தைஒழித்து
எவ்விடத்தும் சுகம்பெறுமால் —எங்கும் சுகத்தைப்பெறுவான்.

**கருத்து**—சச்சிதானந்தமாயும் அத்துவிதமாயும் உள்ள பிரம்மமானது புச்சம் என்று சொல்லப்படும். அந்தப் பிரம்மமே ரசவஸ்துவும் ஆகும். இந்தச் சதானந்த ரசவஸ்துவை அடைந்த சனுதனன் எவனோ அவனே இச்சரீரதுன்பத்தை எல்லாம் ஒழித்துச் சுகத்தைப் பெறுவான்.

**பதசாரம்**—இவ்வானந்தமயனே ஆன்மாவா? அல்லது அன்னியனா? எனில் அவனே ஆன்மா. என்னெனில் 'பிரியம் முதலியவற்றைச் சிரம் முதலிய அவயவங்களாயுடையவனுகச் சுருதியில் கூறப்பட்டிருப்பதனுல், அவ்வானந்தமயனே அப்பியாசத்தால் பிரம்மமாகக்காணப்படுவதனுலும் அவ்வானந்தமயனது உபாசனையின்பொருட்டு, பிரிய முதலியவைகள் சிரம் முதலிய அவயவங்கள் ஆனதுபோல் பிரம்மமும் புச்சரூப அவயவமாகச் சொல்லப்பட்டிருப்பதனுலும், அவனுக்கு அன்னியமாயொருபொருள் கிரமபடிதமாகக் காணப்படாததனுலும்' என்று பூர்வபக்ஷம் ஏற்பட 'ஆனந்தமயன் என்பதில் மயன் என்ற பொருள் விகாரமாதலால் ஆனந்தம் மிகுதியென்னில் மிகுதியாயினும் சிறிது துக்கமுடையதாகும். அஃதெங்ஙனமெனில் பிராம்மணர் அந்தக் கிராமத்தில் மிகுந்திருக்கின்றார் எனினும் இதரஜாதிகள் இல்லையென்று நிஷேதிக்கத்தகாமல் கொஞ்சம் உண்டென்பதுபோலவும், பிரசுரப்பிரகாசன் சூரியன் என்பதுபோல் எனினும் மேகாவரணுதிகளால் பிரகாசமாந்தியம் இருந்ததாகக் காணப்படுதலாலும், நக்ஷத்திராதிகளை அபேக்ஷித்துச் சூரியன் பிரசுரப்பிரகாசனுகக் காணப்படுவதில் பிரசுரார்த்தத்தால் நேரிட்ட பிரகாசமாந்தியம் நட்சத்திராதிகளைச் சாருதலால் ஆனந்தமயற்கு வேருயுள்ள விஞ்ஞானமயாதிகளிடத்தில் சிறிது துக்கம் சாருமென்றிடினும் அதுவும் சொப்பிரகாச நிராவரணனுகிய ஸவிதாவை ஒப்ப வேண்டும். இங்ஙனமாயின் ஆனந்தமயனையும் நிராவரண சொப்பிரகாசசித்தாக ஒப்பவேண்டும். அப்படி ஒப்பிடில் அவன் நிருபாதிக கூடஸ்தன் ஆவான். அவனைக் கோசாதீதனுன கூடஸ்தனுக ஒப்புங்கால் ஆனந்தமயத்துள் அடங்கினவனுகக்கூற உபகாரப்படாது. மேலும் உபசங்கிரமணகாலத்தில் ஆனந்தமயனையும் உபசங்கிரமித்துச் சொல்லுவதனுலும், அவனது உபசங்கிரம

அதிஷ்டானமாகிய கூடஸ்தனே ஆன்மா ஆவான் எனவும், புச்சமாகிய பதம் பிரம்ம சமாநாதிகரணமாயிருப்பனுல் புச்சமென்பதின் பொருள் கூடுபோல் ஆதாரவாயுள்ள அதிஷ்டானமாம்' என்று சித்தாந்தம் செய்யச் 'சச்சிதானந்த மாகியோன்றும் பாப்பிரமம் புச்சமேன்றுரைத்திடப்படும்' எனவும், சுருதியில் சில இடத்தில் அன்னமயாதி உபாசனை காணப்படுவது எங்ஙனமெனில், அன் னத்திலிருந்தே அனைத்துமுண்டாகிப் பாலிக்கப்பட்டு அதில் லயிப்பதினுல் அது வே பிரம்மம் என உபாசனுவிதி, அப்படி இதுவும் ஆகலாமன்றிப் பஞ்சகோச விவேக உபதேசம் அன்று எனவர, ஆங்கு உபாசனை சொல்லப்பட்டிருப்பது போல இவ்விடத்தில் அது சொல்லப்படாததனுல் கோசாதி உபாசனுவிதி இங்கில்லை. கோசவிவேக உபதேசமேதான் என்னும் உத்தரத்தின்மேல், பஞ்ச கோசாதீத ஆன்மா ஒருவன் இருந்திடில் அவைகளை விவேகத்தால் அநுன் மாவாகத்தள்ளி அதீதத்தை ஆன்மாவாகக்கொள்ளலாம். அப்படிக் காணப் படாததனுல் இல்லையெனலாம். என்னெனில், பஞ்சகோசமே அனுபவத்துக்கு வருவதனுலும், அவைகடந்த இடம் பாழாயிருப்பதனுலும், மேலும் அதீத மாக ஒருபொருள் இருப்பதாக ஒப்பிடில் அது அனுபவத்திற்குவருமா? வரக் கூடாதா? அதுவும் வித்துவான் அவித்துவான் அனைவருக்கும் வரத்தகாதா? என்று சுருதியிற்கண்ட சங்கைக்குச் சுருதி தானே உத்தரமாகக் கூறியபடி வித்துவான்களாகிய யோகியர்களால் உள்ளத்தின்கண்ணே பஞ்சகோசாதீத மாக காலத்திரயாபாதித ஆனந்தவடிவாய்ப் பிரத்தியக்குத் திருஷ்டியைக் கொண்டு அமிர்தரசம்போல் பிரம்மம் அபரோட்சமாக அனுபவிக்கப்படுவது என் பது விளங்க 'இரதமப்பொருளே' எனவும், பிராகிருத ரசவஸ்துக்கள் ரசமாகத் தகாது. புசிக்குங்கால் பிராந்தியால் அவைகளில் சுகம்தோன்றினும் மறுகணத் தில் துக்கத்தைக் கொடுப்பதினுல் அன்னியங்கள் ரசவஸ்துக்கள் ஆகா. இதுவே ரசவஸ்து. இதனை அடைந்தவனே எக்காலத்தும் சம்சாரதுன்பம் நீங்கிச் சுகியாவான் எனக்காட்ட 'இச்சதானந்தம் எய்தினேன் யாவ னேவ்விடத்தும் துச்சவாக்கையின் றுயாறுத்தவன் சுகம்பேறும்' எனவும், கூறினுர். (23)

அவதாரிகை.

வியதிரேகமுகமாகவும் சுருதியில் யாதொரு இந்தச் சிதாகாசமான ஆனந்தம் இல்லாவிடில் எவன் சேட்டித்திடுவான்? எவன் ஜீவித்திடுவான்? எனவும் முற் கூறிய ஆன்மா சுதந்தர அஸ்தித்துவத்தை அங்கீகரிக்கத்தக்கதாகக்கூறி, அவ் வான்மரூபமான பிரம்மம் எந்த இருதயங்களிலும் ஆனந்தரூபமாக விளங்குந்தன் மையையுங்கூறி, எங்ஙனம் பிரம்மம் ஆனந்தரூபம் ஆகுமெனில், துயரப்படுகின்ற ஜீவர்களைத் தனது கருணையினுல் சுகப்படச்செய்தலினுல் எனக்கூறுகின்றுர்.

வேறு.

இன்ப மாம்பா மிலதெனி லியாவனுண் டாகுமே தெவன் செய்வான்
றுன்ப மேதனக் கியல்பதாய்த் துயர்க்கட லிடைப்படு முயிர்தன்னைத்
தன்ப ரம்பெருங் கருணையா லிரதமாய்ச் சார்ந்தவ னுளத்தேநின்
றின்ப மேவுற வளித்திட லிறைவனுக் கியல்பதெப் படியாலும்

### இதன் பொருள்.

| | |
|---|---|
| இன்பமாம் பரம் | —பரமானந்த சொரூபனாகிய பரமன் ஒருவன் |
| இலதெனில் யாவனுண்டாகும் | —இல்லாமற்போனால் எவன் உண்டாகும் |
| எவன் ஏது செய்வான் | —யாவன் எதனைச் செய்யக்கூடும் |
| துன்பமே தனக்கியல்பதாய் | —துக்கமே தனக்குச் சுபாவமாக |
| துயர்க்கடலிடைப்படும் உயிர்தன்னை | துக்கசாகரத்தில் முழுகுகின்ற ஜீவான்மாவை |
| தன் பரம்பெருங் கருணையினால் | —தன்னுடைய உயர்வாகிய பெரிய கிருபையால் |
| இரதமாய்ச்சார்ந்து | —இரசஸ்வபாவமாகக் கலந்து |
| அவன் உளத்தே நின்று | —அந்த ஜீவன் இருதயத்தில் நின்று |
| எப்படியாலும் | —எவ்விதத்தாலும் |
| இன்பம் மேவுற அளித்திடல் | —ஆனந்தமுண்டாகும்படி கொடுத்தல் |
| இறைவனுக்கு இயல்பது | —பரமசிவனுக்குச் சுபாவமாகும் |

**கருத்து**—பரமானந்த சொரூபனாகிய பரமன் ஒருவன் இல்லாவிடில் எவன் உண்டாவன்? எவனால் எந்தக்காரியம் செய்யமுடியும்? துக்கமே தனக்கு இயல்பாகக்கொண்டு துயர்க்கடலில் ஆழ்ந்துகிடக்கும் ஜீவர்களை அப்பரமன் தன் பெருங்கருணையினால் அந்த ஜீவர்களின் உள்ளத்திலே இரசசுபாவமாகக் கலந்து எவ்விதத்திலும் ஆனந்தம் அடையும்படி செய்தல் அவனது இயற்கையாம்.

**பதசாரம்**—பஞ்சகோசம் நீங்கியவிடம் பாழ் என்றதுகூடாது. பஞ்சகோசம் கடந்த பாழான சூனியத்தை அறியச் சாட்சிவேண்டும். அந்தச் சாட்சியும் சுயம்சித்தாக இருக்கவேண்டும். அவ்வித சுயம்சித்தாக ஒருவஸ்து இல்லாவிடில் சரீரத்திரயங்களினுள்ளடங்கிய பஞ்சகோசமுடைய சடமான இப்பிரபஞ்சம் எப்படி ஜீவிக்கின்றதாக விளங்கும். எவ்வாறு சேஷ்டிக்கும். அவனன்றிச் சேஷ்டிக்குமெனில் சுழுத்தியில் பிராணவாயுவுடன் தேகேந்திரியாதிகள் இருந்தும் பிரேதம்போல் உபகாரம் இல்லாததனாலும், அவைகளைத் திரும்பவும் தனது பிரதிபிம்ப சத்தையால் ஜீவித்துச் சேஷ்டிக்கச் செய்வதனாலும், பிரதிபிம்பத்தால் விளங்குகின்றவைக்கும், பிரதிபிம்பத்திற்கும் பிம்பமே ஆதாரவாதலாலும், பிம்பமாகிய பஞ்சகோசாதீத கூடஸ்த ஆன்மாவை அசத்தென்றவன் கர்ம யோக பக்தி ஞானமென்னும் எம்மார்க்கங்களை அனுசரித்தும் அவன் அசத்துத்தான் எனவும், அவ்வித கூடஸ்தன் இருப்பதாக ஒப்பிடில் அவனையே சுருதிகளும், பெரியோர்களும் சத்தெனக் கூறுதலால் சுருதி, யுக்தி, அனுபவங்களாலும் நிருணயிக்கப்பட்டிருப்பதாயும், எவர்களாலும் நான் இல்லையென்று நிஷேதிக்கத்தகாததாயும், அஞ்ஞர்கள்கூடப் பிரதிதினம் சுழுத்தியுத்தான காலத்தில் நான் தூங்கினேன் என்று அகங்காரமற்ற சென்ற காலத்துள்ள ஆன்மாவை அகம்பொருளாகப் பிரயோகிப்பதனாலும், அறிஞர், அஞ்ஞர் அனைவர்களாலும் அவசியம் ஒப்பத்தக்கதாகப் பஞ்சகோசாதீத ரசசொரூ

பனான கூடஸ்தன் இருக்கவே செய்கின்றான். அவனே அஸ்திபதார்த்தம் என்று விளங்க 'இன்பமாம் பாமில தேனிலியாவனுண்டாதும் ஏதவன் செய்வான்' எனக் கூறினர். சித்துருபனாகிய கூடஸ்தன் ஒருவன் பஞ்சகோசாதீதனாகச் சித்தித்திருந்திடினும் அவன் ரசரூபன் என்பது எங்ஙனம் கூடுமெனவும், யோகிகளால் ரசமாக அனுபவிக்கப்பட்டாலும் மற்றவர்களால் அப்படி அனுபவிக்கப்படாதுகொண்டு அவ்விதமாகாதெனச் சங்கிக்க, அனைவர்களும் 'நான் சுகமாகத் தூங்கினேன்' என்று அகங்காரமற்ற சென்ற காலத்துள்ள ஆன்மாவைச் சுகரூபனாகப் பிரயோகிப்பதனாலும், வியாவகாரிகனாகிய அகங்காரியான ஜீவத்துவம் அவனிடத்தில் அபேதமாகச் சுழுத்தியிலும் சமாதியிலும் அடங்கிய ஆவரண விக்ஷேபாதிகளால் தோற்றிய துக்கசாகரம் ஒழிந்திடக் காண்பதனாலும் 'சுகமாகத் தூங்கினேன்' என்பதனோடு ஒன்றும் தெரியாமை காணப்படுவதனால், அந்தத் தெரியாமை தமோகுணத்தின் இயல்பாதலால் அந்தத் தமோகுணத்தின் வல்லமையாம் ஆவரணமும் சமகாலத்தில் அனுபவிக்கப்படுதலாலும், தமோகுணம் இருக்குமிடத்தில் சுகம் இருக்காது, இருப்பதாக ஒப்பிடில் இரண்டும் இருக்கின்றதாக ஒப்பவேண்டும், அங்ஙனம் ஒப்பிடில் தமோகுணம் துக்கத்தையே கொடுக்கத்தக்கதனால் அந்தத் துக்கமும் விழித்தபின் காண்பதனால் வாதிக்கப்படாத அனுபவமாதலாலும், அகங்காரமில்லாத சென்றகாலத்துள்ள ஆன்மாவைத் துக்கரூபனாகவே சொல்லவேண்டும். உபயரூபத்தையும் சொல்வதில் ஒருவஸ்து இரண்டு சுபாவமுடையதாகாது. அவைகளில் ஒன்று சுபாவமாயும், ஒன்று கற்பிதமாயும் ஆகவேண்டும். இங்ஙனமாயின் ஆனந்தத்தை மாத்திரம் ஆன்மாவுக்குச் சொரூபமாக ஒப்பிடில் துக்கமே தான் சொரூபம் என ஏன் ஒப்பக்கூடாதெனக்கேட்கின் நியாயம், அங்ஙனம் ஒப்பிடில் ஒன்றும் தெரியாமையான தமோகுணவல்லமையாம் அஞ்ஞானம் சித்தா? ஜடமா? சித்து என்றால் பிரகாசத்தால் ஆவரணமாகிய தமத்தை நீக்குமே அன்றி மறைக்கமாட்டாது. ஜடம் என்னில் தானே விளங்காமல் தனக்கு அன்னியமான சித்தினாலேயே விளங்கவேண்டும். ஆன்மப்பிரகாசத்தால் தெரியாமையாம் துக்கப்பிரயோசன தமோகுணமான ஆவரணமாகிய இருள் விளங்குவதெனில், பிரகாச சந்நிதானத்தில் இருள்போல், சித்சந்நிதானத்தில் தெரியாமை யென்னும் ஆவரணம் விளங்காது. ஆவரணமாகிய தமோகுணமில்லாவிடில் தமோகுண பிரதிபிம்பத்துக்கமும் ஆன்ம சுபாவமாகாது. விழிக்குங்கால் அனுபவத்தில் காணப்படுகிறதே எனில் அவ்விடத்தில் பிரபஞ்சம் காணப்படாததினால் பிரபஞ்சானுபவ ஞானமில்லாமலும் கூடஸ்தன் சிற்சுகனாதலால் சுகமாயென்றும், இவ்வனுபவத்தைப் பகிர்முகப்படுத்துவதற்கு முன்னமே தன்னுடைய இயல்பாயுள்ள ஆஸ்திக்கியத்தைத் தூங்கினேன் என்றும், தூங்கினேன் என்றால் தூங்கி இருந்தேன் எனப்படுமாதலால் பிரபஞ்சானுபவரகித சிற்சுகமாத்திரமாயிருப்பதனால் சர்வஜன சமுதாயமாகக் கூடஸ்த ஆன்மா சுகசாகரமான ரசசொரூபம் என்றும், கூடஸ்தனாகிய ஈசனிடத்திலிருந்தே இச்சா, ஞான, கிரியாசத்திகளைப் பெற்றிருந்தும் கிருதக்கின (நன்றிகெட்டவ)னாகி அவனை மறந்திடினும் இவனைக் காக்கும்பொருட்(

இவனுளத்தில் நீங்காமலிருந்து இரட்சிக்கிறான் என்றும், அவனாலேயே சாக்கிர சொப்பனமான பிரபஞ்சவாசனையில் தோற்றிய துக்கங்களைச் சுழுத்தியாகிய அவிவேகதிசையினும் கூடஸ்தனாகிய தன்னை அடைந்திடும்படிசெய்வித்து, அவர்களுக்கு இயல்பதாகவே சகிக்கமுடியாத துக்கத்தை நீக்கியும், உபநிஷத மார்க்கமாய்த் தன்னை அறிந்து உள்ளபடி அடைய ஆத்தியந்திய சமுசாரதுக்க நிவர்த்தியோடு நித்தியானந்தமாகத் தன்னைத்தவிர வேறு இல்லாமல் சுகமுற ச்செய்கிறான் என்றும், புண்ணிய பாவத்துக்குத் தகுந்தபடி பலத்தைக்கொடுத் துச் சுகப்படுத்துகிறான் என்றும், கூறவேண்டித் 'துன்பமே தனக்கியல்பதாய்த் துயர்க்கடலிடைப்படு முயிர்தன்னைத் தன் பரம்பெருங் கருணையா லிரதமாய்ச் சார்ந்தவ னுளத்தேநின் றின்பமேவுறவளித்திட லிறைவனுக் கியல்படுதேப்படி யாலும்' எனவும் கூறினர்.

(24)

அவதாரிகை.

பிரம்மமானது பயம் அபயம் இவ்விரண்டிற்கும் காரணமாக இருத்தலால் உண்மைப்பொருள் என்று சாதித்த சுருதியின் பொருளைக் கூறுகின்றார்.

வேறு.

யாதொரு பொழுது காட்சி முதலில தாம்ப ரத்திற்
பேதம தறவுணர்ந்தா னப்பொழு தபய னாகிக்
கோதிலா வமுத மெய்துங் கூடுமேற் சிறிது பேதஞ்
சாதலும் பிறப்பு மச்சஞ் சார்தலுஞ் சங்கை யில்லை

இதன் பொருள்.

யாதொரு பொழுது —எப்பொழுது (இந்தச் சீவன்)
காட்சி முதலிலதாம் —திரிசியத்தன்மை முதலானவை இல்லாத
பரத்தில் பேதமது அற —(சொரூபனான) அரனிடத்தில் பேதமில்லாமல்
உணர்ந்தான் —அறிகின்றானோ
அப்பொழுது அபயனாகி —அக்காலத்தே பயமில்லாதவனாகி
கோதிலாவமுதம் —குற்றமில்லாத (பரமாமிர்தமாயும், கலியாணமாயும், தற்சொரூபமாயும், முன்னமே தானாய் அடையப் பட்டிருப்பதாயுமுள்ள) பரப்பிரம்மத்தை
எய்தும் —அடைவான்
சிறிது பேதம் —(பிரம்மம் வேறு சமுசாரியாகிய நான் வேறு என்று) அற்பமேனும் பேதபுத்தி
கூடுமேல் —(இந்த ஜீவன்) கொள்ளுவானாயின்
சாதலும் பிறப்பும் —இறப்பதும் சனிப்பதும்
அச்சம் சார்தலும் —பயம் பொருந்துவதும்
சங்கையில்லை —அளவில்லாததாகும்

**கருத்து**—எப்பொழுது இந்த ஜீவன் தான் வேறு பிரம்மம் வேறு என்ற பேதபுத்திகொள்ளாமல் இருக்கிறானோ அப்பொழுது அவன் பயமில்லாதவனாகிப் பரப்பிரம்மத்தை அடைவான். எவன் பேதமாக நினைக்கின்றானோ அவன் பயத்தையுடையவனாய் அளவற்ற சன்மங்களை எடுப்பான். (25)

அவதாரிகை.

**'இவ்வான்மாவை எவன் அறிகின்றான் அவனுக்குத் தனது ரூபத்தைப் பிரகாசப்படச் செய்கின்றான்'** என்ற உபநிஷத்தின் பிரகாரம் எவ்விடத்தும் பிரம்மம் ஒன்றுபோல் பட்சபாதமின்றி இருக்கவும், பெத்தர்களுக்கு மாத்திரம் என் பயம்வருமென்று சங்கைவரச் சகல இருதயங்களிலும் சமமாய் இருந்திடினும் பிரம்ம சிஞ்ஞாசையில் பராமுகனாயிருக்கின்றவனிடத்தில் உள்ளபடி விளங்காமல் அம்மூர்க்கனைத் தள்ளிவிடுவதெனவும், ஞானநிஷ்டர்களுக்கு அடையத்தக்க பரமபதமான பிரம்மம் சாட்சாத்கார சமயத்தில் தானாவே கருணையால் பிரகாசிக்கின்றதெனவும் கூறுகின்றார்.

வேறு.

தானென லாவிடத் திலுமுள தாகிலுஞ் சாங்கரி யஞ்சேர்ந்த
வீன சாதியைக் குறித்தது வெளிப்படா திருக்குமே யெப்போதும்
ஞான மேமுயல் பவர்க்குநற் பரம்பர நற்பரம் பரமேதா
னான வாறறிந் திடும்படி கேவல மருளினால் வெளியாமால்

இதன் பொருள்.

| | |
|---|---|
| தான் | —தானாகிய (அந்தப் பிரம்மம்) |
| எலாவிடத்திலு முளதாகிலும் | —எவ்விடத்தும் இருந்தபோதிலும் |
| சாங்கரியம் சேர்ந்த | —வரம்பு தப்பிச் சேர்ந்திருக்கின்ற |
| ஈனசாதியைக் குறித்து | —அஞ்ஞர்களாகிய இழிந்த ஜாதியைக்கருதி |
| அது | —அந்தப் பிரம்மம் |
| வெளிப்படாதிருக்கும் | —(உதாசீனமாய்) வெளித்தோன்றாதிருக்கும் |
| எப்போதும் ஞானமே | —எக்காலத்தும் ஞானத்தையே |
| முயல்பவர்க்கு | —முயலுகின்ற ஞானிகளுக்கு |
| நற்பரம்பரம் | —நல்ல பிரம்மமானது |
| நல்பரம்பதமே தான் ஆன வாறு அறிந்திடும்படி | நன்மையாகிய பிரம்மமே தானான வண்ணம் தெரிந்திடும்படி |
| கேவலம் அருளினால் | —கேவலம் கிருபையினால் |
| வெளியாமால் | —(தானாகவே) வெளிப்படும். |

**கருத்து**—தானாகிய பிரம்மம் எங்கும் உளதாகிலும் அஞ்ஞானிகளாகிய மூர்க்கர்களுக்கு வெளிப்படாது எப்போதும் ஞானத்தையே முயலுகின்ற ஞானிகளுக்குத் தானே பிரம்மம் என விளங்கும்படி கிருபையால் வெளிப்படும்.

பதசாரம்—கூடஸ்த பரமசிவம் அனைவர்களுக்கும் பொதுவாகி எவ்விடத்துமிருக்க அபேதவான்களிடத்தில் அபயமாயும், பேதவாதிகளிடத்தில் பயங்கரமாயும் இருக்குமானால், பட்சபாதமாகுமெனச் சங்கிக்க, தாணுவை (கட்டையை)த் தாணுவாக அறிந்தவனுக்கு அத்தாணுவே அபயங்கரமாயும் சோரன் (திருடன்) என்று அறிந்தவனுக்குப் பயங்கரமாயும் பவித்தும், எப்படி அது பட்சபாதமாகாதோ அப்படியே பட்சபாதமுடையதாகாதென்றும், வித்தியாதிகாரமான மானுட சரீரத்தை அடைந்தவன் ஆன்மாவையே விசாரிக்கவேண்டும், அவனையே மனனம் செய்யவேண்டும், அவனையே நிதித்தியாசிக்கவேண்டும், அவனுக்கு வேறாய் இரண்டாம்பொருள் இல்லை. இருக்கின்றதாகப்பார்க்கில் துன்பத்தை அடைவான் என்ற பரமசிவனுக்கினையாகிய சுருதி நீதியைத் தப்பினவர்களைச் சிட்சிக்கின்றது, தன்னுக்கினையைக் கடந்தவர்களைச் சிட்சிப்பதால் அரசனுக்குப் பட்சபாதமில்லாததுபோலப் பட்சபாதமாகாதென்பதும் விளங்கத் 'தானெலாவிடத்திலு முளதாகிலுஞ் சாங்கரியஞ்சேர்ந்த ஈனசாதியைக் குறித்தது வெளிப்படாதிருக்கும்' என்றார். (26)

## அவதாரிகை.

அந்தப் பிரம்மம் தானே வித்துவானுக்கும் மனனமில்லாவிடில் பயமாகப் பவிக்கும் என்ற சுருதியின் பொருளைக்கூறி அதனையே திடப்படுத்தவேண்டிச் சுருதியில் இவ்வீசனிடத்தில் வாயு, சூரியன், அக்கினி, இந்திரன், இயமன் இவர்கள் பயப்பட்டு நடக்கின்றார்கள் என்ற பொருளைக் கூறுகின்றார்.

## வேறு.

அங்கமா றினையும் வேதநான் குடனே யறியினு மனனமில் லவனுக்
கெங்குமெப் பொழுதும் பயத்தினுக் கேது வாயிடு மிறைவனிந் திரன்கால்
செங்கதிர்ச் செல்வன் தீயமன் றத்தஞ் செய்தொழில் களிலொரு காலும்
பங்கியா தொழுகும் பரிசது பரனைப் பற்றியுண் டாகிய பயத்தால்.

## இதன் பொருள்.

| | |
|---|---|
| வேதநான்குடனே | —நான்கு வேதங்களுடனே |
| அங்கமாறினையும் அறியினும் | —ஆறு அங்கங்களையும் உணர்ந்தபோதிலும் |
| மனனமில்லவனுக்கு | —மனனமில்லாதவனுக்கு |
| எங்கும் எப்பொழுதும் | —எவ்விடத்திலும் எக்காலத்திலும் |
| இறைவன் | —பரமசிவனானவன் |
| பயத்தினுக்கு ஏதுவாயிடும் | —அச்சத்துக்கு ஏதுவாகவே பவிப்பான் |
| இந்திரன்கால் | —இந்திரன், வாயு |
| செங்கதிர்ச் செல்வன் தீயமன் | —சூரியன், அக்கினி காலன் (என்னும் இவர்கள்) |
| தத்தம் செய்தொழில்களில் | —தங்கள் தங்கள் செய்கின்ற தொழில்களில் |

ஒருகாலும் பங்கியாது —ஒருபோதும் பங்கம் (குறைவு)வராமல்
ஒழுகும் பரிசு அது —நடக்கும் தன்மையானதும்
பரனைப்பற்றி —அந்தப் பரமசிவனைப்பற்றி
உண்டாகிய பயத்தால் —விளைந்த அச்சத்தினுலேதான்.

**கருத்து**—ஒருவன் நான்குவேதம் ஆறு அங்கங்களையுங்கற்று உணர்ந்தாலும் மனனம் இல்லாவிடில் ஈசுவரன் அவனுக்குப் பயத்துக்கு ஏதுவாவான். இந்திரன் வாயு, அக்கினி, சூரியன், யமன் முதலானவர்கள் தங்கள் தொழிலில் சிறிதும் வழுவாமல் நடந்துவருவது அவனிடத்துண்டாகிய பயத்தினுலேதான்.

**பதசாரம்**—வாயு, சூரியன், சந்திரன், அக்கினி, காலன் இவர்கள் பூர்வ கர்ப்பத்தில் உள்ளபடி பரமசிவமாகிய கூடஸ்தனை அறிந்தும், மனத்தாழ்வால் பலத்தைவேண்டிக் கிஞ்சித்து பேதபுத்தியுடன் உபாசித்ததுபற்றிச் சிவாக்கினை யென்னும் காலவசத்தால் பயத்தினேடு அவ்வதிகாரங்களில் கோணமல் செய் கின்ருரென்பது விளங்க '**இந்திரன் கால்சேங்கதிர்ச் சேல்வன் தீயமன்தத்தம் சேய்தோழில் களிலோருகாலும் பங்கியாதோழுகும் பரிசது பரனைப்பற்றி யுண்டாகிய பயத்தால்**' என்ருர். (27)

### அவதாரிகை

சுருதியில் மானுஷானந்தமுதல் இரணிய கருப்பானந்தம் வரை உத்த ரோத்தரம் நூறு அங்கிசம் தாரதம்மியம் உடையதாகக்கூறி அவ்வதிகார ஆனந் தம் நச்வரமெனத் தெரியவேண்டி அவைகளில் ஆசையற்ற சிரவணமனன நிதித்தியாசனமென்னும் சாதனங்களையுடையவனைச் சுரோத்திரியன் எனக்கூறி அந்தச் சுரோத்திரியனுகிய பிரம்ம நிஷ்டனுக்குக் கன்மசாதனங்களன்றி அவ் வதிகார ஆனந்தங்கள் கற்பிதங்களாதலால் தன்னுனந்தத்தின் லேசங்களாகிய அவைகளும் அதிஷ்டானமாகிய தனக்கு வேறில்லாமல் தானுகவே விளங்கு கின்றன என்றபடி கூறுகின்ருர்.

### வேறு.

தந்த மளவி லரியாதி * தம்ப மீரு சகத்தெல்லா
மிந்த விறைவ னுனந்த விலேசத் தாலே யின்புறுமா
லந்த வந்தப் பதத்தாசை யற்ருேற் கருளா லுள்ளபடி
தொந்த மறுதன் சொரூபமதா மின்பந் தானே தோன்றுமால்

### இதன் போருள்.

அரியாதி தம்பம் ஈரு —மாயோன்முதல் தம்பாந்தமுள்ள

---

* தம்பமென்பது ஒருபூச்சி, ஒன்றன்மேல் ஒன்று அடுக்காக ஏழுபானையில் ஜலம்வைத்திடில் அந்த ஜலம் பொசியாமலிருக்கவும் ஏழுபானையும் நீங்கி வெளி வரும். அதற்கு மூன்று அவஸ்தைகளுமுண்டு.

சகத்து எல்லாம் —உலகத்திலுள்ள உயிர்களெல்லாம்
இந்த இறைவன் —இந்தக் கூடஸ்த பிரம்மமாகிய பரமசிவனுடைய
ஆனந்த லேசத்தாலே —ஆனந்தத்தின் ஒரு திவலையினலே
தம் தம் அளவில் —தங்கள் தங்களுக்கு இயன்ற அளவின்படி
இன்புறும் —சுகத்தை அடைவார்கள்
அந்த அந்தப் பதத்தாசை அற்றோற்கு } அந்த அந்தப் பதவிகளில் இச்சையில்லாதவனுக்கு
அருளால் உள்ளபடி —சிவனருளால் மெய்யாகவே
தொந்தமறு தன் சொரூபமதாம்—துவிதமில்லாது தனது சொரூபமதாகிய
இன்பம் தானே தோன்றுமால்—ஆன்மானந்தம் தானகவே உண்டாகும்.

**கருத்து**—விஷ்ணுமுதல் தம்பமீருக உள்ள உயிர்கள் அனுபவிக்கும் இன்பம் பரப்பிரம்மத்தினுடைய ஆனந்தலேசத்தாலேயாகும். எவன் ஒருவன் இப்பதங்களில் ஆசையற்றவனு யிருக்கிருனே அவனுக்குச்சிவனருளால் உண்மையாகவே இரண்டற்ற தனது சொரூபமாகிய ஆன்மானந்தம் தானகவே உண்டாகும்.

**பதசாரம்**—மாயோன்முதல் தம்பமீருயுள்ள சகலப்பிரபஞ்சத்தின் கண்ணே விளங்கிய உயர்வு தாழ்வுகளையுடைய அதிகாரங்களால் ஏற்படும் ஆனந்தம் சோபாதிகமாதலால், சமுத்திரம்போல் கானல்நீர் தோன்றினும் அதில் ஈரங்கூட இராதாகையால் மித்தையேதான் என்றும், பிராந்தியினல் மிகுந்த தவம் புரிந்து அவ்வானந்தம்கிடைக்கினும் அதுவும் அதிஷ்டானனந்தத்தின் அணுமாத்திரமான ஆபாசமேயாகுமென்பது விளங்கத் '**தந்தமளவி லரியாதி தம்பமீறச் சகத்தேல்லாம், இந்த இறைவனனந்த விலேசத்தாலே இன்புறுமால்**,' எனவும், அவ்வதிகார ஆனந்தங்கள் துக்கரூபங்கள் தாமென்றும் விஷத்தைப் பிராணபயமுள்ளவன் தள்ளுவதுபோல, அதிஷ்டான சுகத்தையடையக் கெடுதல்செய்யுமென்று அவைகளில் இச்சையில்லாமல் துச்சமென்றும் விடுத்த மகாவைராக்கியமுடைய அதிகாரியை '**அந்தவந்தப் பதத்தாசையற்றோர்க்கு**' எனவும், வைராக்கிய முதலிய சாதனம் இருந்திடினும் சிவப்பிரசாதமின்றி ஐக்கிய ஞானம் கிடையாதாதலால் அதுவும் சிவனது திருவருளாலே கிடைப்பதென்றும், அப்படிக் கிடைத்திடினும் அதுவும் தனது சுபாவமேயாதலால் சுதந்திரமென்றும், தன் சொரூபம் ஆனந்தவடிவமாக எப்போதும் இருந்திடினும் அவித்தையால் துக்கரூபமாகக் காணப்பட்டதனல் அபரோட்சத்தில் அதுவும்மாறிச் சுயஆனந்தமாக விளங்குமென்பதுபற்றி '**அருளாலுள்ளபடி தொந்தமறுதன் சொரூபமதா மின்பந்தானே தோன்றுமால்**' எனவும் கூறினர். (28)

அவதாரிகை.

சாகரத்தில் அலை, நுரை, குமிழி முதலியவைபோல், இரணியகர்ப்பாந்தமாயுள்ள இவ்வதிகார ஆனந்தங்கள் எதில் ஒடுங்குகின்றனவோ அந்தப் பிரம்மம் பரிச்சேதமில்லாததனல் நிரதிசயானந்தமாகப் பவிக்கின்றதெனத் தாற்பரியங் கொண்டு அதனைச்சாதிக்கவேண்டி எவன் அதிகாரியாகிய புருஷன் இருதயத்

தில் இருக்கின்றானோ எவன் ஆதித்தன் இருதயத்தில் இருக்கின்றானோ அவன் ஒருவனே எனவும்; அவனை விவேகத்தால் சர்வக்கிய, கிஞ்சிக்ய உபாதிகளைத் திரிசியங்களாகத்தள்ளி எவன் அபரோட்சமாக அறிகின்றானோ அவன் அறிகின்றான் எனவும் கூறுகின்றார்.

## வேறு.

பருதி நெஞ்சினு மொழிந்தவர் நெஞ்சினும் பரனே
கரிய தாகிநின் றறிபவன் காயமே முதலாம்
பொருளை மாய்வுறத் தத்துவ விவேகத்தாற் போக்கிக்
கரிய தாகிய வீசனைக் கண்டவன் கண்டான்.

## இதன் பொருள்.

பருதிநெஞ்சினும் —ஆதித்தன் இருதயத்திலும்
ஒழிந்தவர் நெஞ்சினும் பரனே—ஏனையவர் இருதயத்திலும் பரமசிவனே
கரியதாகி நின்று —சாக்ஷியாகவே நின்று
அறிபவன் —தானே அறிகின்றவன் (ஆகையால்)
காயமே முதலாம் பொருளை—சாட்சியமாகிய தேகமுதல் மாயையீறான அனைத்தையும்
தத்துவவிவேகத்தால் —தத்துவவிவேகத்தினால்
மாய்வுறப்போக்கி —மடியும்படிதள்ளி
கரியதாகிய ஈசனை —சர்வசாட்சியாகிய பரமசிவனை
கண்டவன் கண்டான் —(எவன்) பார்த்தானோ (அவனே) பார்த்தவனாவான்.

**கருத்து**—ஆதித்தன் இருதயத்திலும் மற்றோர்களுடைய இருதயத்திலும் சாட்சியாக நின்று அறிபவன் பரமசிவனே. சாட்சியங்களாகிய தேகமுதல் மாயையீறான சகலத்தையும் தத்துவ விவேகத்தால் மடியும்படி தள்ளி, சர்வ சாட்சியாகிய பரமசிவனை எவன் அறிகிறானோ அவனே உண்மையை அறிந்தவன்.

**பதசாரம்**—இரணியகர்ப்பன் தன்னை மூன்று பாகமாக்கி அதில் ஆதித்தனை இரண்டாவதாயும், வாயுவை மூன்றாவதாயும் கொண்டான் என்ற சுருதியினால் முந்திய சரீரியான இரணியகர்ப்பனது இருதயத்தில் சுத்த சத்துவப் பிரதான மாயோபாதிகனாகவும், அனுவிருத ஞானனாகவும் ஈசன் விளங்குவதைப் **'பருதி நெஞ்சினும்'** என்றார். (29)

## அவதாரிகை.

பரமசிவத்தின் லீலாவிக்கிரகதாரிகளான அவதார விசேஷங்களாகிய மும்மூர்த்திகளுக்கும், மற்றனைத்திற்கும் சாட்சியாகத் தன்னைத் தர்க்கப் பிரமாணங்களால் அறிந்தவன் ஆன்மதரிசியென நிரதிசய, நிருவிகார சச்சிதானந்த ஏகரச பிரம்மாஸ்தித்துவம் கூறப்பட்டதனால், அது உண்டோ இல்லையோ

என்ற சங்கையை நிராகரித்து, அவித்துவானும் அதனை அடைகின்றானா இல்லையா என்ற கேள்விக்கு உத்தரமாக இந்தப்பிரகாரம் அறிந்தவன் எவனோ அவன் ஒருவனே அறிந்தவன் என்றதுமுதல் ஆனந்தமயனை உபசங்கிரமிக்கின்றான் என்றது ஈறாகச் சொன்ன சுருதியின் பொருளைக் கூறுகின்றார்.

## வேறு.

உருத்திரன்மான் முதலாகத் தம்ப மீறு
யுளபொருட்குச் சான்றாகு மொருவன் றன்னைக்
கருத்துறத்தர்க் கத்தாலு மானத் தாலுங்
கண்டவன்கண் டவன்றர்க்க மான ஞானங்
கருத்துறவுள் ளவனுலகி னின்றுந் தன்னைத்
தன்னாலே வேறுபடக் கழற்றிக் கற்றோ
னுருத்துவரு மன்னாதி கோச மெல்லா
முட்பகிரு மிறைவனரு ளொன்றி னாலே.

## இதன் பொருள்.

உருத்திரன் மால்முதலாக —உருத்திரன் நாரணன் முதலாக
தம்பம் ஈறுயுள பொருட்கும்—ஸ்தம்பாந்தமுள்ள பொருள்கள் அனைத்திற்கும்
சான்றாகும் ஒருவன் தன்னை —சாட்சியான பரமசிவனை
கருத்துறத் தர்க்கத்தாலும் —இருதயத்திற்பொருந்தத் தருக்கத்தினாலும்
மானத்தாலும் கண்டவன் கண்டவன் } பிரமாணத்தினாலும் (எவன்) பார்த்தவனோ (அவனே) அபரோட்சமாகப் பார்த்தவன்
தர்க்க மான ஞானம் —யுக்தியோடும், சுருதியோடும்கூடிய விஞ்ஞானம்
கருத்துற உள்ளவன் —(எவன்) சித்தத்தில்பொருந்த இருக்கின்றானோ (அவனே)
உலகில் நின்றும் —இவ்வுலகத்தினின்றும்
தன்னாலே தன்னை —தன்னாலேயே (கூடஸ்தனாகிய) தன்னை
வேறுபடக்கழற்றிக் கற்றோன் —வேறாகப்பிரித்து அறிந்தவன்
இறைவன் அருள் ஒன்றினாலே—சிவப்பிரசாதம் ஒன்றினாலேயே
உருத்துவரும் —(ஆபாசமாகத்) தோற்றிவருகின்ற
அன்னாதிகோசமெல்லாம் —அன்னமயாதி கோசங்களையெல்லாம்
உட்பகிரும் —ஆந்தரமாகப் பிரித்தறிவான்.

கருத்து—எவன் ஒருவன், ருத்திரன், நாராயணன் முதல், ஸ்தம்ப மீறாக வுள்ள சகல பொருள்களுக்கும் சாட்சியாயுள்ளவன் பரமசிவன் என்று தர்க்கத்தாலும் சுருதிப் பிரமாணத்தாலும் அறிகிறானோ அவனே உண்மையை அறிந்தவனாவான். யுக்தியோடும் சுருதிப்பிரமாணத்தோடும் கூடிய விஞ்ஞானத்

தை எவன் ஒருவன் கொண்டிருக்கிறானோ அவனே இவ்வுலகத்தினின்றும் தன்னாலேயே கூடஸ்தனாகிய தன்னை வேறாகப்பிரித்து அறிந்தவன் அவன் சிவப்பிரசாதம் ஒன்றினாலேயே ஆபாசமாகத்தோன்றிவருகின்ற அன்னமயாதி கோசங்களையெல்லாம் ஆந்தரமாகப் பிரித்தறிவான்.

**பதசாரம்**—எப்படிச் சாதகனிடத்தில் அவன் அவஸ்தைகளுக்குக் கூடஸ்தன் சாட்சியாயிருக்கின்றானோ அப்படியே மும்மூர்த்திகளது தொழில்களுக்கும் விசேஷமின்றிச் சாட்சியாகவே இருக்கின்றானென்றும் அப்படியே ஸ்தம்பம் வரையிலும் சாட்சியாயிருக்கின்றானென்றும் விளக்க **'உருத்திரன் மான்முதலாகத் தம்பமீறுள பொருட்கும் சான்றதும் ஒருவன்'** எனவும், ஐக்கிய சுருதிப் பிரமாணத்தாலும் அதனையனுசரித்த உத்தியாலும் சந்தேகமில்லாமல் அபரோட்சமாக அறிந்தவனே ஆன்மதரிசி என்பது விளங்கக் **'கருத்துறத் தர்க்கத்தாலுமானத்தாலுங் கண்டவன்'** எனவும், சுருதியுக்தி அனுபவமுடையபிரமவித்தினைத் **'தர்க்கமான ஞானங் கருத்துறவுள்ளவன்'** எனவும், காணப்பட்டதாயும் பிருதிவி அந்தரிக்ஷ சுவர்க்காதி பேதமாயுமுள்ள நிகிலமான அனான்மப் பிரபஞ்சத்தை **'உலகு'** எனவும், அனான்மாவாகிய பிரபஞ்சசாட்சியான கூடஸ்த சைதன்யத்தைத் **'தன்னை'** எனவும் இஃது அனான்மா இஃது ஆன்மா எனப் பகுத்தறிகின்ற புத்தியால் என்பதைத் **'தன்னால்'** எனவும், மற்றனைத்தையும் அனான்மாவாகக்கருதி அன்னமய ஆன்மாவாகப் பவித்து என்பதை **'வேறுபடக்கழற்றி'** எனவும், அப்படியே ஆனந்தமயன் வரைக்கும் அனான்மாவாகத் தள்ளுங்கால் அவ்வைந்து கோசங்களுக்கும் வேறுபட ஆந்தரமாகிச் சர்வ ஜகக்கற்பனைக்கும் அதிஷ்டான புச்சம் என்ற சத்தியஞானனந்த ஏகரசமாம் பிரம்மத்தைக்கண்டகதசாமீகரம் போல் தானாக அடைகின்றான் என்பதை **'அன்னாதிகோச மெல்லாமுட்பகிரும்'** எனவும் சிவார்ப்பணபுத்தியால் அனுஷ்டிக்கப்பட்ட யஞ்ஞம், தானம், தவமுதவியவற்றால் பிரசன்னனாயிருக்கின்ற பரமசிவத்தின் கிருபையினாலேயே ஆன்மப் பிராப்தி உண்டாகுமென்பதை **'இறைவனருள் ஒன்றினால்'** எனவும் கூறினார். (30)

## அவதாரிகை.

இவ்வாறு அறிந்தமாத்திரத்தால் பிரம்மப் பிராப்தியைக் கூறியதனால் பிரம்மவித்து பரத்தை அடைகின்றான் என்ற சுருதியின் சூத்திரவாக்கியமும், அதன் உரையாகிய **'எவன் அறிகின்றானோ'** என்றதுமுதல் **'புசிக்கின்றான்'** என்றது ஈறாயுள்ளமந்திரபாகமும் மூற்கவி வரைக்கும் உரைசெய்யப்பட்டது. அத்து விதீய நிரதிசயானந்த அபயப் பிரம்மப் பிராப்தியானது ஞானமாத்திர சாத்தியமென்று தன்னாற் கூறப்பட்ட பொருளில் சம்வாத நிமித்தமாக எதில் நின்றும் வாக்குகள் மனத்தோடும் எட்டமாட்டாமல் திரும்பிவிடுகின்றனவோ, அந்தப் பிரம்மானந்தத்தை அறிந்தவன் ஓரிடத்தினின்றும் பயமடையான் என்று சுருதியில் மந்திரவாக்கியமாயிருக்கின்றது. அவ்வாக்கியப்பொருளைக் கூறுகின்றார்.

## வேறு.

விளம்பும் வாக்கு யாதொன்றின் பக்கற் செல்லா தேமீளும்
விளம்பும் வாக்குத் தான்விளம்ப விசேட மொன்றும் பெறுமையினால்
விளம்பும் வாதஞ் சிறிதில்லை விசேடம் பெறிலே விசேடமாம்
விளம்ப லாவ தறுஞ்சிவனை யுரையால் விளம்பும் பரிசென்னே.

## இதன் பொருள்.

| | |
|---|---|
| விளம்பும் வாக்கு | —சொல்லப்பட்ட வாக்கானது |
| யாதொன்றின்பக்கல் | —எதனிடத்தில் |
| செல்லாதே மீளும் | —போகாமல் திரும்பிவிடும் |
| விளம்பும் வாக்குத்தான் | —சொல்லப்பட்ட (அந்த) வாக்கானது |
| விளம்ப விசேடம் ஒன்றும் பெறுமையினால் | நிரூபிக்க விசேடம் ஒன்றும் அடையாமையினால் |
| விளம்பும் வாதம் சிறிதில்லை | —சொல்லத்தக்கவாதம் கொஞ்சமும் இல்லை |
| விசேடம் பெறில் | —விசேடத்தை அடைந்திடுமானால் |
| விசேடமாம் | —(நிர்விசேஷமாகிய பிரம்மம்) சவிசேஷமாய்விடும் |
| விளம்பலாவது அறும் சிவனை | —சொல்லலாகும் தன்மை இல்லாத (நிர்விசேஷ) பரமசிவத்தை |
| உரையால் | —வாக்கால் |
| விளம்பும் பரிசு என்னே | —சொல்லும் தன்மை என்னிருக்கின்றது. |

**கருத்து**—பரமசிவன் வாக்குக்கெட்டாதவராயிருப்பதால் வாக்கு அவரிடம் போகாமல் திரும்பிவிடுகிறது. நிர்விசேஷமாகிய பரமசிவனிடத்தில் சப்தம் எப்படிச்செல்லும்? ஆகையால் பரமசிவனைப்பற்றிச் சொல்லுந்தன்மை ஒன்றுமில்லை.

## இருவுமது.

யாதொன் றின்பா லெங்குங்கோ சரமா மிந்த மனஞ்செல்லா
தியாதொன் றின்பாற் செவிமுதலிந் திரியங்கள் விடயங் களுஞ்செல்லா
தோதுஞ் சச்சி தானந்த வொன்றும் பிரம மதுதன்னைப்
பேத மறத்தன் வடிவாகப் பெற்றா னச்ச மற்றானால்.

## இதன் பொருள்.

| | |
|---|---|
| யாதொன்றின்பால் | —எந்த வஸ்துவினிடத்தில் |
| எங்குங்கோசரமாம் | —எவ்விடத்தையும் விஷயீகரிக்கின்ற |
| இந்தமனம் செல்லாது | —இந்த மனமானது அடையமாட்டாதோ |
| யாதொன்றின் பால் | —எந்த வஸ்துவினிடத்தில் |

| | |
|---|---|
| செவிமுதல் இந்தியங்கள் | —சுரோத்திர முதலான ஞானேந்திரியங்களும் |
| விடயங்களும் செல்லாது | —விஷயங்களும் சேரமாட்டாதோ (அதுவே) |
| ஓதும் சச்சிதானந்தம் ஒன்றும் பிரம்மம் | சொல்லப்பட்ட சச்சிதானந்த அத்துவிதமாகிய பிரம்மமாகும் |
| அது தன்னைப் பேதம் அற | —அந்தப் பிரம்மத்தைத் துவிதம் நீங்கும்படி |
| தன்வடிவாகப் பெற்றான் | —தன் சொரூபமாக அடைந்தவனே |
| அச்சமற்றான் | —பயம் நீங்கினவன் ஆவான் |

கருத்து—எந்த வஸ்துவானது வாக்குமனங்களுக்கும், சுரோத்திர முதலிய இந்திரியங்களுக்கும், விஷயங்களுக்கும் எட்டாததாயிருக்கின்றதோ அதுவே சச்சிதானந்த அத்துவிதமாகிய பிரம்மமாகும். அந்தப் பிரம்மத்தைத் துவிதம் நீங்கும்படி தன் சொரூபமாக அடைந்தவனே அச்சமற்றவனாவான்.

பதசாரம்—சப்தப்பிரவிர்த்திக்கு எதுவான ஜாதி, குண, கிரியா சூனியம் என்பது தோன்ற 'விசேடமொன்றும் பெறுமையினால்' என்றார். பிரம்மம் வாக்குமனங்களுக்கு எட்டாதெனில் பிரமாணத்திற்கு அவிஷயமானதுபற்றி நரசிருங்கம்போல அசத்தாகுமெனில் இது தோஷமாகாது. பிரம்மம் அவிஷயமாயினும் அதனை லட்சியப்படுத்தக்கூடும். எங்ஙனமெனில், சத்தியஞானம் முதலிய வாக்கியம் உலக சித்த சத்திய முதலியவற்றைச் சொல்லிய வழியே முன்சொல்லிய விசேஷணமுடைய பிரம்மத்தை விதிமுகமாக இலக்கணையாற் கூறிற்று. நேதிவாக்கியமோ எனில் பிரம்ம பின்ன சகல வஸ்துவின் நிஷேதனத்தால் பிரபஞ்சாபாவச் சின்னமாகக்கொண்டு வியதிரேகமுகமாக லட்சணையாற் கூறுகின்றது. ஆனால் இந்த வேதார்த்தம் அறியப்படாத பொருளை அறியப்படுத்துவதனால் உற்பத்திவிதியாகும். ஆனால் பூர்வ மீமாம்சர்கள் நியாயப்படி லட்சணைகூடாதெனில் வஸ்துக்களையிட்டு நியமமாயுள்ள வாச்சியார்த்தத்தைத்தள்ளி லட்சணை அங்கீகரிக்கப்பட்டிடில், லட்சியார்த்தம் நியமமாகாததுபற்றி அநேகார்த்தமாகச் சந்தேகம் வருமென்று தாற்பரியம்கொண்டல்லவா விதியினிடத்தில் இலக்கணைகூடாது என்றது. எவ்விடத்தில் பிரகாராந்தரத்தால், சந்தேகம் நீங்கப்படுமோ அவ்விடத்தில் லட்சணை தூஷிக்கப்படாது. எப்படிப்பாதி உள்வேதி என்பதில் பரிதிவெளி வேதியென விதியின் நியாயலட்சணையோ அப்படியே பிரம்ம பின்னமான சகலத்தையும் நிஷேதிப்பதனால் அநேகார்த்த சந்தேகமின்மையால் மிஞ்சினதாகக்கொண்டு பிரம்மமே லட்சியமாகச் சித்திப்பதனால் விதியினும் லட்சணை கூடும். இதனாலும், லட்சியத்தன்மையுடையதாகவே கிரகிக்கப்படுதலால் நிருபாதிகம் சத்தத்திற்கு அவிஷயமென நினைக்கத்தக்கதல்ல, லட்சியத்தன்மை உபலட்சணமானதுபற்றி, கிராகிய கோடியில் பிரவேசம் இல்லாமையின் வாக்கிற்கு அவிஷயம் என்பது அபிதாவிருத்தி அபிப்பிராயம். அதனாலேயன்றோ சுருதியும் அவ்வுபநிஷத புருஷனைக் கேட்கின்றேன் எனக்கூறிற்று. விதி என்றும், நிஷேதம் என்றும் வாக்கியம் இரண்டு பிரிவுடையதாதலால், அதனாலுண்

டாகியபிரம்மாகாரமனோ விருத்தியும், இரண்டு பிரிவுடையதாகும். அவைகளில் விதிவாக்கியத்தாலுண்டாகிய மனோவிருத்தியானது உபாதியுடையதாயினும் தனதாசிரியபலத்தால் நிருபாதிகப் பிரம்மத்தைத் தெரியும்படியே செய்கின்றது. இதனால்பிரம்மம், மனோவிருத்திக்கு விஷயம் என்பது பங்கப்படாது. மனோவிருத்தி இருப்பதுபற்றிச் சோபாதிகமாதலால் வஸ்துத்தன்மை இல்லாததாயும் ஆகாது, உபாதி உபலட்சணமானதுகொண்டு விஷயகோடியைச்சாராமையின் இப்படியே நிஷேதவாக்கிய ஜனிதமனோவிருத்தியும் வியதிரேகாவச் சின்னமாகக்கொண்டு பிரம்மத்தைக் கோசரிப்பித்து அவச்சேதமான பிரபஞ்சம் இன்மையெனும் வியதிரேகத்தையும் விருத்தியாந்தன்னையும் கதகரேணு நியாயமாக நிவர்த்தியாகும்படி செய்கின்றது. இந்த அபிப்பிராயம்கொண்டு சுருதியும் மனத்தினாலேயே அடையத்தக்கதெனக் கூறியது. இந்தப் பிரகாரம், உபாதி சம்பந்தமில்லாத நிருபாதிகமாகிய அத்தியந்த நிர்விகற்பமாம் பிரம்மம் வாக்குமனங்களுக்கு அவிஷயமென்பது தோன்ற (முன் செய்யுளில்) 'விளம்பும் வாக்குயாதோன்றின் பக்கல் செல்லாதேயீளும்' எனவும், (இந்தச்செய்யுளில்) 'யாதோன்றின்பாலெய்தும் கோசரமாமிந்தமனஞ் செல்லாது' எனவும், தனக்கு வேறாகப் பயத்திற்கேதுவான இரண்டாம் வஸ்து இல்லாததனால் 'பயமில்லை' என்பது தோன்ற 'அச்சமற்றான்' எனவும் கூறினார். (32)

அவதாரிகை.

சுருதியில் பிரம்மவித்து என்பவனைச் சுபாசுப கருமங்கள் தபிக்கச்செய்யா என்ற பொருளையும், நற்கருமத்தை நான் செய்யவில்லை என்று முடியும்போது பாவகருமத்தைத்தான் நான் எவ்வாறு செய்தேன் என்ற பொருளையும், சுருதியில் இந்தப் பிரகாரமாக அறிந்தவனுக்குப் புண்ணிய பாவங்கள் ஆன்மாவாக விளங்குமென்ற பொருளையும் கூறுகின்றார்.

வேறு.

அன்புறு குரவ னருளினு லிங்ஙன் அறிந்தவ னயர்ந்திரு வினையாற்
றுன்புறான் றுன்பஞ் செய்வதுந் துன்பந் துய்ப்பது மாகிய தோற்ற
முன்பதாம் வேத முடிவுவாக் கியத்தான் முனைத்தஞா னத்தினுன் முற்று
மின்பமாந் தன்ன துருவமா யிலங்கு மிறைமிகு திருவரு ளதனால்.

இதன் பொருள்.

| | |
|---|---|
| அன்புறு குரவனருளினால் | —கிருபை பொருந்திய குருவினுபதேசத்தினால் |
| இங்ஙன் அறிந்தவன் | —இத்தன்மையாக எவன் அறிகின்றானே (அப்பிரபுவாகிய அவனே) |
| இருவினையால் அயர்ந்து | —புண்ணிய பாவங்களால் தளர்ந்து |
| துன்புறான் | —துயரடையமாட்டான் |
| துன்பம் செய்வதும் | —துக்கப்படச் செய்கின்றதும் |

துன்பம் துய்ப்பதுமாகிய —துக்கத்தை அனுபவிப்பதுமாகிய
முற்றும் தோற்றம் —அனைத்தும் காட்சிப்பொருள்
முன்பதாம் —முந்தியதான
வேதமுடிவு வாக்கியத்தால் —வேதாந்த மகாவாக்கியத்தால்
முளைத்த ஞானத்தினல் —உண்டாகிய அறிவினலும்
இறைமிகு திருவருளதனல் —பரமசிவனது பரிபூரண பிரசாதத்தினலும்
இன்பமாம் —பிரத்தியகான்மானந்தமாகிய
தனது உருவமாய் இலங்கும் —தன்னுடைய ஸ்வரூபமாக விளங்கும்.

**கருத்து**—சற்குரு உபதேசத்தால் எவன் இப்படிப் பிரம்மத்தை அறிகின்ருனே அவன் புண்ணியபாவங்களால் துயரம் அடையமாட்டான். துக்கப்படச் செய்கிறதும் துக்கத்தை அனுபவிப்பதுமாகிய காட்சிப்பொருள் அனைத்தும் வேதாந்த மகாவாக்கியத்தால் உண்டாகிய ஞானத்தால் பிரத்தியகான்மாவாகிய தனது சொரூபமாக விளங்கும்.

**பதசாரம்**—அஞ்ஞன் அல்லவா மரணவஸ்தையில் யஞ்ஞதானதி சுபகருமங்களைச் செய்யாததுகொண்டு சொர்க்கத்தை அடையாத்தன்மையையும் தான் செய்த பாவத்தின் பலமான நரகம்சேரும் தன்மையையும் ஆலோசித்து அவைகளால் பயம் உடையவனவான். ஞானியோ எனில் மூலாஞ்ஞான நிவர்த்தியானதுபற்றி, கிரியாகாரக பலமான பிரபஞ்சம் பாதிக்கப்பட்டதினல் வருபிறப்பைக் கொடுக்கத்தக்க கன்ம பஞ்சரம் ஞானக்கினியால் தகிக்கப்பட்டு வருபிறவி நீங்கலால் தன்னைத் துயருறச் செய்யானென்பதுகொண்டு '**இருவினையாற் றுன்புறன்**' எனவும், சாதுவாகியும் அசாதுவாகியும் உள்ள கருமங்களைத் '**துன்பஞ் செய்வதும்**' எனவும், போக்திரு பிரபஞ்சத்தைத் '**துன்பந்துய்ப்பதுமாகிய தோற்றம்**' எனவும் கூறினர். (33)

அவதாரிகை.

முற்கவியில் அனைத்தும் சுகவடிவமான பிரத்தியகான்ம சொரூபமாக விளங்குகின்றன என்றபடியே இந்தக்கவிமுதல் விஸ்தரித்துக் கூறுகின்ருர்.

வேறு.

செய்வான் செய்விப் பவன்செய்யும் பொருள்செய் கருவி செய்தொழிலென்
றைவாய்ப் பொருளும் வெறுமான்மா வாகித் தோன்று மிறையருளால்
எய்யா மான மறிபொருளும் அறிவோ னென்னப் படும்பேத
மெய்யா மிறைவன் றிருவருளால் எல்லாந் தானய் விளங்குமால்.

இதன் பொருள்.

இறையருளால் —பரமசிவப் பிரசாதத்தினல்
செய்வான் செய்விப்பவன் —கருத்தா, செய்விப்பவன்,
செய்யும் பொருள் செய்கருவி—செயப்படுபொருள், காணம்,

செய்தொழில் என்று —கருமமென்று சொல்லுகின்ற
ஐவாய்ப்பொருளும் —ஐந்தினிடத்தடங்கிய எல்லாப் பொருள்களும்
வெறும் ஆன்மாவாகித் தோன்றும்—கேவலம் ஆன்மாவான தானாகவேவிளங்கும்
எய்யாமானம் அறிபொருளும்—இளையாத பிரமாணமும் பிரமேயமும்
அறிவோன் —பிரமாதாவும்
என்னப்படும் பேதமெல்லாம்—என்று சொல்லப்பட்ட பேதமெல்லாம்
மெய்யாம் இறைவன் —உண்மைப்பொருளாகிய பரமசிவத்தின்
திருவருளால் தானாய்விளங்கும்—பிரசாதத்தால் தானாகவே பிரகாசிக்கும்.

**கருத்து**—பரமசிவப்பிரசாதத்தால் கர்த்தா, செய்விப்பவன் செய்யப்படு பொருள், காணம், கர்மம் என்று சொல்லப்படும் ஐந்தினிடத்தடங்கிய சகல பொருள்களும் ஆத்மஸ்வரூபமாக விளங்கும். பிரமாணம், பிரமேயம், பிரமாதா ஆகிய எல்லாம் ஆத்மஸ்வரூபமாகவே விளங்கும். (34)

துய்க்கு மவன்றான் றுய்ப்பிப்பான் றுய்க்கும் பொருடான் றுய்த்தறான்
கைக்கொள் பொருள்கொள் பவன்கொள்கை கடவு ளருளாற் றானேயா
மைக்கொள் ஞான மொன்றொன்று மாறு ஞான மையமுறுந்
துய்க்கு ஞான முற்றுமிறை யருளாற் றானே யாய்த்தோன்றும்.

இதன் பொருள்.

துய்க்குமவன்றான் —புசிப்பவன்
துய்ப்பிப்பான் —புசிக்கச்செய்பவன்
துய்க்கும் பொருள் தான் —புசிக்கப்படுபொருள்
துய்த்தல் தான் —புசித்தல்
கைக்கொள்பொருள் —கிரகிக்கும் பொருள்
கொள்பவன் —கிரகிப்பவன்
கொள்கை —கிரகித்தல் (இவையெல்லாம்)
கடவுளருளால் —பரமசிவன் திருவருளால்
தானேயாம் —ஆத்மஸ்வரூபமாகவே விளங்கும்
மைக்கொள் ஞானம் —அஞ்ஞானம்
ஒன்றொன்றுமாறு ஞானம் —ஒவ்வொன்றாக மாறுபடுகின்ற பிராந்தி ஞானம்
துய்க்கும் ஐயமுறும் ஞானம் —அனுபவிக்கின்ற சமுசயம் பொருந்தும் ஞானம்
முற்றும் இறை அருளால் —இவை அனைத்தும் பரமன் திருவருளால்
தானேயாய்த் தோன்றும் —ஆத்மஸ்வரூபமாகவே விளங்கும்.

கருத்து—பரமசிவப் பிரசாதத்தால், புசிப்பவன், புசிக்கச்செய்பவன், புசிக்கப்படுபொருள், புசித்தல், கிரகிக்கும்பொருள், கிரகிப்பவன், கிரகித்தல், அஞ்ஞானம், பிராந்தி ஞானம், சமுசயஞானம், ஆகிய இவை அனைத்தும், ஆத்மஸ்வரூபமாகவே விளங்கும். (35)

வேறு.

கடபடகுட் டியமுதலா மிதில்ஞா னங்கள்
கடமதுகுட் டியங்குதுலம் படம தாகும்
தடமலைபா தாளமுத லுலக மற்றைச்
சத்தியமே முதலான வுலக மெல்லா
மிடவியமா மலரவன்ற னண்ட மித்திற்
கற்பிதமா மெல்லையிலண் டங்க ளெல்லாங்
கடறடமா றுகண்மற்றுங் கண்ட தெல்லாங்
கடவுளரு ளதனாலே தானாய்க் காணும்.

இதன் பொருள்.

| | |
|---|---|
| கடபடகுட்டிய முதலாமிதின் ஞானங்கள் | குடம், வஸ்திரம், சுவர் முதலான இவற்றின் ஞானங்களும் |
| கடமது குட்டியம் | —கலசம் சுவர் |
| குதுலம் படமது | —குதிர் வஸ்திரம் |
| ஆகும் தடமலை | —விஸ்தாரமாகிய மலை |
| பாதாள முதலுலகம் | —பாதாள முதலான உலகம் |
| மற்றைச் சத்தியமே முதலான உலகமெல்லாம் | இன்னுமுள்ள சத்தியலோக முதலான உலகங்கள் அனைத்தும் |
| இடவிய | —விரிவாயுள்ள |
| மாமலரவன்றன் அண்டம் | —பெருமைபொருந்திய பிரமதேவனால் படைக்கப்பட்ட இவ்வண்டமும் |
| இத்தில் கற்பிதமாம் | —இந்தச்சிவ (பிரமத்தி) னிடத்தில் கற்பிதமாகிய |
| எல்லையில் அண்டங்களெல்லாம் | —அளவில்லாத அண்டங்கள் அனைத்தும் |
| கடல், தடம் ஆறுகள் | —சமுத்திரங்களும், தடாகங்களும், நதிகளும் |
| மற்றும் கண்டதெல்லாம் | —இன்னும் காணப்பட்ட அனைத்தும் |
| கடவுள் அருள் அதனால் | —பரமசிவப் பிரசாதத்தால் |
| தானாய்க்காணும் | —ஆத்மஸ்வரூபமாகவே தோன்றும் |

கருத்து—கடம், வஸ்திரம், சுவர் முதலிய இவற்றின் ஞானங்களும், கலசம், சுவர், குதிர், வஸ்திரம், மலை, பாதாளம், சத்தியலோகம் பிரமாண்டம், இன்னும் ஈசுவர கற்பிதமான அளவிடமுடியாத பல அண்டங்கள், சமுத்திரம், தடாகம், ஆறு இன்னும் காணப்பட்ட அனைத்தும் பரமசிவப் பிரசாதத்தால் ஆத்மஸ்வரூபமாகவே விளங்கும். (36)

வேறு.

மேரு மந்தர முதலதா மிருந்தமால் வரைகள்
சாரு மெல்லையின் றியவனம் வனத்திலுள் ளவைதான்
றரு மந்தமில் விதங்கள்புற் புதலெல்லாந் தானு
வேரு மின்றிய விறைதிரு வருளினு லிலங்கும்.

இதன் பொருள்.

| | |
|---|---|
| மேரு மந்தர முதலதாம் | —மகாமேரு மந்தரம் முதலிய |
| மிருந்த மால்வரைகள் | —மிகப்பெரிய பருவதங்களும் |
| சாரும் எல்லை இன்றியவனம் | —பொருந்திய எல்லையில்லாத காடுகளும் |
| வனத்திலுள்ளவை தான் | —அந்த வனத்திலுள்ள அனைத்தும் |
| தாரும் அந்தமில் விதங்கள் | —விருட்சங்களும், அளவற்ற வர்க்கங்களும் |
| புற்புதல் எல்லாம் | —புல்பூண்டுமுதல் அனைத்தும் |
| ஏருமின்றிய | —இலட்சண (விலட்சண) த்திற் கெட்டாத |
| இறை திருவருளினல் | —பரமசிவப் பிரசாதத்தால் |
| தானு இலங்கும் | —ஆத்மஸ்வரூபமாகவே விளங்கும். |

கருத்து—மேருமந்தர முதலாயுள்ள மலைகளும், இடமகன்ற காடுகளும், அக்காடுகளில் உள்ளவைகளும், விருட்சங்களும், விருட்சவர்க்கங்களும், புல் பூண்டு முதலானவைகளும், ஆகிய யாவும் ஆத்மஸ்வரூபமாகவே தோன்றும். (37)

வேறு.

வான்முதலாம் பூதங்கள் பௌதி கங்கண்
மன்னுமொலி பரிசமுரு சுவைநாற் றங்க
ளூன்மருவு கிருமிகீ டம்ப தங்க
முலவுபசு விதமோடு மொட்டை யானை
கான்மருவு பரிகரப மனிதர் சித்தர்
கந்தருவ ராக்கிரியக் கர்கடா மிக்கு
வான்மருவு தேவகண மெல்லா மற்று
மாபரம னருளாற்றன் வடிவாய்த் தோன்றும்.

இதன் பொருள்.

| | |
|---|---|
| வான் முதலாம் பூதங்கள் | —ஆகாசாதி பூதங்கள் |
| பௌதிகங்கள் | —(உலகாதி) பௌதிகங்கள் |
| மன்னும் ஒலி | —நிலைபெற்ற சப்தம் |
| பரிசம் உருசுவை நாற்றங்கள் | —ஸ்பரிசம், ரூபம், ரசம், கந்தங்கள் |

ஊன்மருவு கிருமிகீடம் —தசைபொருந்திய புழு வண்டு
பதங்கம் —பறவைகள்
உலவு பசுவிதமோடும் —உலவுகின்ற பசுவகைகளோடும்
ஒட்டையானை —ஒட்டகம், யானை
கான்மருவு —காட்டகத்திருக்கின்ற
பரி, கரபம் மனிதர் —குதிரை, கழுதை, மனிதர்கள்
சித்தர், கந்தருவர் அரக்கர் —சித்தர்கள், கந்தர்வர்கள் ராட்சதர்கள்
இயக்கர்கள் தாம் மிக்க —இயக்கர்கள் பெருமை மிகுந்த
வான் மருவு தேவகணம் —ஆகாயத்திருக்கின்ற தேவகணங்கள்
எல்லாம் மற்றும் —இவையனைத்தும் மற்றுமுண்டாகிய சகலமும்
மா பரமனருளால் —பெருமை பொருந்திய பரமசிவப் பிரசாதத்தால்
தன் வடிவாய்த் தோன்றும் —ஆத்மஸ்வரூபமாகவே விளங்கும்.

கருத்து—ஆகாசாதிபூதங்கள், உலகாதி பௌதிகங்கள், சப்தஸ்பரிச ரூபரச கந்தங்கள்; புழு, வண்டு, பறவை, பசு, ஒட்டகை, யானை, குதிரை, கழுதை, மனிதர், சித்தர், கந்தர்வர், ராட்சசர், இயக்கர், தேவகணங்கள் முதலிய யாவும் ஆத்மஸ்வரூபமாகவே தோன்றும். (38)

வேறு.

வினைமிகு விண்ணோர் விண்ணவர் விண்ணோர்
வேந்தனும் விராட்டுடன் சுராட்டு
மெனையடைந் தவரென் செல்வமியா னெடுமா
லுருத்திர னீசனற் சிவனென்
றனைவர்தம் பதங்க ளவர்களை யடைந்தோ
ரவர்கடா மன்னிய மின்றித்
தனைநிக ரில்லா விறையவ னருளாற்
சகலமுந் தானெனத் தோன்றும்.

இதன் பொருள்.

மிகுவினை விண்ணோர் விண்ணவர்—மிகுந்த கர்ம தேவர்களும் தேவர்களும்
விண்ணோர் வேந்தனும் —தேவேந்திரனும்
விராட்டுடன் சுராட்டும் —விராட்டு என்பவனோடு சுராட்டு என்பவனும்
எனையடைந்தவர் —என்னை அடைந்தவர்களும்
என் செல்வம் —என்னுடைய ஐஸ்வரியமும்
இயான் —(பிரமனாகிய) நானும்
நெடுமாலுருத்திரன் —விஷ்ணுவும், உருத்திரனும்

ஈசன் —ஈசுவரனும்
நற்சிவனென்று —நன்மைபொருந்திய சதாசிவனும் ஆகிய இவர்கள்
அனைவர் தம் பதங்கள் —அனைவர்களுடைய பதவிகளும்
அவர்களை அடைந்தோர் அவர்கள் தாம்—அவர்களை அடைந்தவர்களும்
சகலமும் —(மற்றுமுள்ள) அனைத்தும்
தனைநிகர் இல்லா —எந்த விதத்தாலும் தனக்குவமை சொல்லக்கூடாத
இறைவன் அருளால் —பரமசிவப் பிரசாதத்தினால்
அன்னியமின்றி —வேறில்லாமல்
தானெனத்தோன்றும் —ஆத்மஸ்வரூபமாகவிளங்கும்

கருத்து—தேவர்கள், கர்மதேவர்கள், இந்திரன், விராட்டு, சுராட்டு, என்னை அடைந்தவர், என் செல்வம், யான், பிரம்மவிஷ்ணு ருத்ரர், ஈசுவரன் சதாசிவன் ஆகிய எம்மனோர்களுடைய பதவிகள், எம்மனோர்களை அடைந்தவர்கள் மற்றுமுள்ள சகலமும் ஆத்மஸ்வரூபமாகவே தோன்றும். (39)

தீதெனும் பொருள்க ணன்றெனும் பொருள்கள் செய்யலா வனசெயப் படாத
வேதமா முடல மிந்தியம் பிராண னிசைமனம் புத்தியாங் காரந்
தீதுறு காமங் கோபமே முதலாந் தீயன சாந்தி தாந்திகளே
யாதியா நலங்க ளடையவுந் தானே யாகியே தோன்றுமெய் யருளால்.

இதன் பொருள்.

தீது எனும் பொருள்கள் —தீமையென்று சொல்லப்பட்ட பொருள்களும்
நன்று எனும் பொருள்கள் —நன்மை என்று சொல்லப்பட்ட பொருள்களும்
செய்யலாவன செயப்படாத —செய்யப்பட்டவைகளும் செய்யப்படாதவைகளும்
ஏதமாம் உடலம் —குற்றமாகிய சரீரம்
இந்தியம் பிராணன் —பொறிகள் உயிர்
இசைமனம் புத்தி —பொருந்திய மனம புத்தி
ஆங்காரம் —அகங்காரம்
தீது உறுகாமம் —தீமைபொருந்திய காமம்
கோபமே முதலாம் தீயன —குரோதம் முதலான கொடுமை உடையவைகளும்
சாந்தி தாந்திகளே யாதியாம் —சமம் தமம் இவைகள் முதலான
நலங்கள் அடையவும் —நன்மைகள் அனைத்தும்
மெய்யருளால் —சத்தியமான பரமசிவப் பிரசாதத்தால்
தானே ஆகியே தோன்றும் —ஆத்மஸ்வரூபமாகியே விளங்கும்.

**கருத்து**—நன்மை தீமையான பொருள்களும், செய்யப்பட்டவைகளும், செய்யப்படாதவைகளும், சரீரம், இந்திரியம், பிராணன், மனம், புத்தி, அகங்காரம், காமம், கோபம் முதலானவைகள், சமம் தமம் முதலான நன்மைகள் யாவும் ஆத்மஸ்வரூபமாகவே தோன்றும். (40)

பேதமாஞ் சீவ பரங்களு மவர்கள் பேதமும் பேதிக்கு மதுவும்
போதமில் சடசத் தியுமதன் பிதையும் போதசத் தியுமதன் பிதையு
மோதுமுண் டில்லை யெனவெழு முரையி லுள்ளதாம் பொருள்களு மிலாது
மியாதுமிவ் விறைவ னருளினுற் றன்ன தேகமா முருவமா யெறிக்கும்.

### இதன் பொருள்.

| | |
|---|---|
| பேதமாம் சீவபரங்களும் அவர்கள் பேதமும் | பேதமாகிய ஜீவேசர்களும் அவர்களது பிரிவுகளும் |
| பேதிக்கும் அதுவும் | —பேதக உபாதி அனைத்தும் |
| போதமில் சடசத்தியும் | —அறிவில்லாத ஜடசத்தியும் |
| அதன் பிதையும் போதசத்தியும் | —அதன் பேதங்களும் ஞானசத்தியும் |
| அதன் பிதையும் | —அதன் பேதங்களும் |
| ஓதும் | —சொல்லப்பட்ட |
| உண்டு இல்லை என எழும் | —அஸ்தி நாஸ்தி என்று உதிக்கின்ற |
| உரையில் உள்ளதாம் பொருள்களும் | —வார்த்தையில் இருக்கின்ற பொருள்களும் |
| இலாதும் இயாதும் | —இல்லாத பொருள்களும் மற்றுமுள்ள அனைத்தும் |
| இவ்விறைவனருளினுல் | —இந்தப் பரமசிவப் பிரசாதத்தால் |
| தன்னது ஏகமாம் உருவமாய் | —தன்னுடைய ஏகமான ஸ்வரூபமாகியே |
| எறிக்கும் | —விளங்கும். |

**கருத்து**—ஜீவேசர்களும், அவர்கள் பேதங்களும், பேதக உபாதியும், ஜடசத்தியும், அதன் பேதங்களும், ஞானசத்தியும், அதன் பேதங்களும், அஸ்தி நாஸ்திப்பொருள்களும், இல்லாதும் மற்றதும், ஆகிய யாவும் ஏகமான தனது ஆத்மஸ்வரூபமாகவே விளங்கும். (41)

### அவதாரிகை.

இவ்விதமான சகல ஜகமும் வித்வானுக்குத் தன் ஸ்வரூபமாகவே விளங்குமாளுல் ஆன்மா சவிசேஷனே என்ற சங்கைக்குச் சமாதானம் கூறுகின்றார்.

### வேறு.

தன்ன தொளியாற் றுன்விளங்கப் படுவா னுன்மா னெனத்தகுவா
னன்ன வனையே நானீயென் றறியா நின்ற வவ்வுளத்தே
யுன்ன வரிய வவன்றன்ன துண்மை யுணரா ரொருவர்களும்
பின்ன மில்லா மையிலறிவார் தாமு மறியப் பெற்றிலரால்.

### இதன் பொருள்.

| | |
|---|---|
| தன்னது ஒளியால் | —தனது பிரகாசத்தால் |
| தான் விளங்கப்படுவான் | —(வேறு உதவியின்றி) தானே இயல்பாக விளங்குகின்றவன் |
| ஆன்மாவெனத் தகுவான் | —ஆன்மாவென்று கூறத்தகுவான் |
| அன்னவனேயே | —அந்த ஆன்மாவையே |
| நானீயென்று அறியா நின்ற | —நானென்றும் நீயென்றும் விவகாரகாலத்தில் உணருகின்ற |
| அவ்வுளத்தே | —அந்த உள்ளத்தில் தானே |
| உன்ன அரிய | —நினைக்க அரியதான |
| அவன் தன்ன துண்மை | —அந்த ஆன்மாவினுடைய உண்மையை |
| ஒருவர்களும் உணரார் | —ஒருவர்களும் அறியமாட்டார்கள் (ஏன் அறியமாட்டார்கள் என்னில்) |
| பின்னமில்லாமையில் | —ஆன்மாவுக்கு வேருக ஒன்றும் இல்லாமையினுல் |
| அறிவார் தாமும் | —பின்னபதார்த்தங்களே அறிந்தவர்களாகிய அவர்களும் |
| அறியப் பெற்றிலர் | —அறியும் தன்மை அடையாமற்போனுர்கள் |

**கருத்து**—சுயம்பிரகாசமாக விளங்குகின்றவன் ஆன்மா. அவனேயே விவகாரத்தில் நீ, நான் என்று அறிகிறுர்கள். அவன் ஆன்மாவுக்கே வேருக இல்லாது அத்துவிதனுயிருப்பதால் அவனது உண்மையை அறியார்கள்.

**பதசாரம்**—தன்னில் ஆரோபித ஜகத்தை விளங்கச்செய்கின்றதாயும் மற்ருெருதவியின்றித் தானே விளங்குகின்றதாயுமுள்ள சின்மாத்திர சாட்சி எவனே அவனே ஆன்மாவென்பது விளங்கத் '**தன்னதோளியாற் றன்விளங்கப் படுவானுன்மா வேனத் தகுவான்**' எனவும், ஆன்மா தானுகவே பிரகாசிக்கின்றவனுயின் வித்துவான்களிடம்போல் அவித்துவான்களிடத்தும் பிரகாசிப்பதனுல் அவர்களும் யாதொரு விதமான முயற்சியுமின்றி முத்தராவார்களேயெனில் அவர்களிடத்தில் ஆன்மா சுயம்பிரகாசனுக விளங்கிடினும், நீ, நான் என்று அகங்காரியாகவே அறியப்படுதலால் உண்மையாகச் சகல உபாதியும் நீங்கிய அத்துவித சின்மாத்திரமாகத் தம்மை அறியாததினுல் அவர்கள் முத்தர்கள் ஆகமாட்டார்கள் என்பது விளங்க '**நானீயேன் றறியாநின் றவ்வுளத்தே உன்னவரிய வவன் றன்ன துண்மையுணரா ரோருவர்களும்**' எனவும், ஏன் அறியார்கள் என்னில் அறிதற்குப் பிரமாதிரு பிரமாண முதலியவற்றை அபேட்சிப்பதனுல் ஆன்மா அத்துவயனுனது பற்றி அறியமாட்டார்கள் என்பது விளங்கப் '**பின்னமில்லா மையிலறிவார் தாமும் அறியப் பேற்றிலர்**' எனவும் கூறினுர். (42)

**கருத்து**—நன்மை தீமையான பொருள்களும், செய்யப்பட்டவைகளும், செய்யப்படாதவைகளும், சரீரம், இந்திரியம், பிராணன், மனம், புத்தி, அகங்காரம், காமம், கோபம் முதலானவைகள், சமம் தமம் முதலான நன்மைகள் யாவும் ஆத்மஸ்வரூபமாகவே தோன்றும். (40

பேதமாஞ் சீவ பரங்களு மவர்கள் பேதமும் பேதிக்கு மதுவும்
போதமில் சடசத் தியுமதன் பிதையும் போதசத் தியுமதன் பிதையு
மோதுமுண் டில்லை யெனவெழு முரையி லுள்ளதாம் பொருள்களு மிலாது
மியாதுமிவ் விறைவ னருளினாற் றன்ன தேகமா முருவமா யெறிக்கும்.

### இதன் பொருள்.

| | |
|---|---|
| பேதமாம் சீவபரங்களும் அவர்கள் பேதமும் | பேதமாகிய ஜீவேசர்களும் அவர்களது பிரிவுகளும் |
| பேதிக்கும் அதுவும் | —பேதக உபாதி அனைத்தும் |
| போதமில் சடசத்தியும் | —அறிவில்லாத ஜடசத்தியும் |
| அதன் பிதையும் போதசத்தியும் | —அதன் பேதங்களும் ஞானசத்தியும் |
| அதன் பிதையும் | —அதன் பேதங்களும் |
| ஓதும் | —சொல்லப்பட்ட |
| உண்டு இல்லை என எழும் | —அஸ்தி நாஸ்தி என்று உதிக்கின்ற |
| உரையில் உள்ளதாம் பொருள்களும் | —வார்த்தையில் இருக்கின்ற பொருள்களும் |
| இலாதும் இயாதும் | —இல்லாத பொருள்களும் மற்றுமுள்ள அனைத்தும் |
| இவ்விறைவனருளினால் | —இந்தப் பரமசிவப் பிரசாதத்தால் |
| தன்னது ஏகமாம் உருவமாய் | —தன்னுடைய ஏகமான ஸ்வரூபமாகியே |
| எறிக்கும் | —விளங்கும். |

**கருத்து**—ஜீவேசர்களும், அவர்கள் பேதங்களும், பேதக உபாதியும், ஜடசத்தியும், அதன் பேதங்களும், ஞானசத்தியும், அதன் பேதங்களும், அஸ்தி நாஸ்திப்பொருள்களும், இல்லாதும் மற்றதும், ஆகிய யாவும் ஏகமான தனது ஆத்மஸ்வரூபமாகவே விளங்கும். (41)

### அவதாரிகை.

இவ்விதமான சகல ஜகமும் வித்வானுக்குத் தன் ஸ்வரூபமாகவே விளங்குமானால் ஆன்மா சவிசேஷனோ என்ற சங்கைக்குச் சமாதானம் கூறுகின்றார்.

### வேறு.

தன்ன தொளியாற் றான்விளங்கப் படுவா னான்மா னெனத்தகுவா
னன்ன வனையே நானீயென் றறியா நின்ற வவ்வுளத்தே
யுன்ன வரிய வவன்றன்ன துண்மை யுணரா ரொருவர்களும்
பின்ன மில்லா மையிலறிவார் தாமு மறியப் பெற்றிலரால்.

இதன் பொருள்.

| | |
|---|---|
| தன்னது ஒளியால் | —தனது பிரகாசத்தால் |
| தான் விளங்கப்படுவான் | —(வேறு உதவியின்றி) தானே இயல்பாக விளங்குகின்றவன் |
| ஆன்மாவெனத் தருவான் | —ஆன்மாவென்று கூறத்தகுவான் |
| அன்னவனையே | —அந்த ஆன்மாவையே |
| நானீயென்று அறியா நின்ற | —நானென்றும் நீயென்றும் விவகாரகாலத்தில் உணருகின்ற |
| அவ்வுளத்தே | —அந்த உள்ளத்தில் தானே |
| உன்ன அரிய | —நினைக்க அரியதான |
| அவன் தன்ன துண்மை | —அந்த ஆன்மாவினுடைய உண்மையை |
| ஒருவர்களும் உணரார் | —ஒருவர்களும் அறியமாட்டார்கள் (என் அறியமாட்டார்கள் என்னில்) |
| பின்னமில்லாமையில் | —ஆன்மாவுக்கு வேறாக ஒன்றும் இல்லாமையினால் |
| அறிவார் தாமும் | —பின்னபதார்த்தங்களை அறிந்தவர்களாகிய அவர்களும் |
| அறியப் பெற்றிலர் | —அறியும் தன்மை அடையாமற்போனார்கள் |

**கருத்து**—சுயம்பிரகாசமாக விளங்குகின்றவன் ஆன்மா. அவனையே விவகாரத்தில் நீ, நான் என்று அறிகிறார்கள். அவன் ஆன்மாவுக்கே வேறாக இல்லாது அத்துவிதனாயிருப்பதால் அவனது உண்மையை அறியார்கள்.

**பதசாரம்**—தன்னில் ஆரோபித ஜகத்தை விளங்கச்செய்கின்றதாயும் மற்றோருதவியின்றித் தானே விளங்குகின்றதாயுமுள்ள சின்மாத்திர சாட்சி எவனோ அவனே ஆன்மாவென்பது விளங்கத் '**தன்னதோளியாற் றன்விளங்கப் படுவா னான்மா வெனத் தருவான்**' எனவும், ஆன்மா தானாகவே பிரகாசிக்கின்றவனாயின் வித்துவான்களிடம்போல் அவித்துவான்களிடத்தும் பிரகாசிப்பதனால் அவர்களும் யாதொரு விதமான முயற்சியுமின்றி முத்தராவார்களேயெனில் அவர்களிடத்தில் ஆன்மா சுயம்பிரகாசனாகி விளங்கிடினும், நீ, நான் என்று அகங்காரியாகவே அறியப்படுதலால் உண்மையாகச் சகல உபாதியும் நீங்கிய அத்துவித சின்மாத்திரமாகத் தம்மை அறியாததினால் அவர்கள் முத்தர்கள் ஆகமாட்டார்கள் என்பது விளங்க '**நானீயென் றறியாநின் றவ்வுளத்தே உன்னவரிய வவன் றன்ன துண்மையுணரா ரொருவர்களும்**' எனவும், என் அறியார்கள் என்னில் அறிதற்குப் பிரமாதிரு பிரமாண முதலியவற்றை அபேட்சிப்பதனால் ஆன்மா அத்துவயனானது பற்றி அறியமாட்டார்கள் என்பது விளங்கப் '**பின்னமில்லா மையி லறிவார் தாமும் அறியப் பெற்றிலர்**' எனவும் கூறினர். (42)

## அவதாரிகை.

இங்ஙனமாயின் வித்துவான் மாத்திரம் எப்படி அறிவான் எனில் அதற்குச் சமாதானமும், சுருதியில் இந்தச் சாமவேதத்தைக் கானம் செய்து கொண்டிருப்பவன் என்றது முதல் சுவர்ணச்சோதி என்ற வரைக்கும் கூறிய வித்துவானுடைய கானத்தைப் பிரயோசனமாகவும் கூறுகின்றார்.

*அயரு னின்றித் தன்னைத்தா னான்மா வாக வறிவுற்றோ*
*னியல்பா லிந்தப் பொருளினையே யென்றும் பாடி யிருக்குமா*
*வியல்பா ராலு மறிவரிய வீச னடம்போ லியாவர்க்கும்*
*நயமார் ஞான விஞ்ஞதன்றன் கீத நலமே நல்கிடுமால்.*

### இதன் பொருள்.

| | |
|---|---|
| அயல் தான் இன்றி | —வேறில்லாமல் |
| தான் தன்னை ஆன்மாவாக | —தான் தன்னைப் பரமான்மாவாக |
| அறிவுற்றோன் | —அறிந்தவன் |
| இயல்பால் | —அந்தச் சுபாவத்தினால் |
| இந்தப் பொருளினையே | —இவ்வர்த்தத்தையே |
| என்றும் பாடியிருக்கும் | —நித்தியமும் கானம் செய்துகொண்டிருப்பான் |
| இயல்பு ஆராலும் அறிவரிய | —தன் சுபாவத்தை எவராலும் அறியக்கூடாத |
| ஈசன் நடம்போல் | —பரமசிவத்தினது திருநடனம்போல |
| நயமார் | —இன்பம் பொருந்திய |
| ஞானவிஞ்ஞதன் தன் கீதம் | —ஞான உல்லாசனுடைய கானமும் |
| யாவர்க்கும் | —எல்லாருக்கும் |
| நலமே நல்கிடும் | —இன்பமே கொடுக்கும். |

**கருத்து**—வேறில்லாமல் தானே பரமாத்துமா என்று அறிந்தவன் சதா சுருதியிற் சொல்லிய 'அகம் அன்னம்' என்பதைக் கானம் செய்துகொண்டிருப்பான். எப்படிப் பரமசிவனுடைய நிருத்தம் லோகரட்சணைக்காக இருக்கிறதோ அதுபோல் சிவனுடைய கானமும் லோகரட்சணைக்காகும்.

**பதசாரம்**—சிரவண மனனம் முதலிய சாதனத்தால் உண்டாகிய உபாதி இல்லாத பிரமான்ம விஷயமான மனோவிருத்தியால் ஆவரணாஞ்ஞானம், நீங்கிடில் அத்துவிதீயமான ஆன்மாவைத் தானாக ஆன்மாவாகவே அபரோக்ஷீகரிக்கின்றான் என்பது விளங்க 'அயறலின்றித் தன்னைத்தான் ஆன்மாவாக அறிவுற்றோன்' எனவும், இதுவரைக்கும் யாதொரு போக்திரு, போக்ய போகப் பிரதரூபமான ஜகம் பின்னமாகத் தோற்றியதோ அவைகளனைத்தும் நானேதான். கிஞ்சித்தேனும் எனக்கு வேறாக இல்லை. இதுவும் மகத்தாகிய ஆச்சரியம் என்றும், சொப்பிரகாச இலக்கணமுடைய பரஞ்சோதிரூபமும் நானே தான் என்றும்

கூறிய பொருளுடைய சாமவேதத்தைக்கானம் செய்தும் அதன்பொருளை அனுசந்தானம்செய்தும் விக்ஷேபத்திற்கு ஏதுவின்மையால் வித்துவான் அனுகூலனாயிருக்கின்றான் என்பது தோன்ற "இந்தப் பொருளினையே என்றும் பாடியிருக்குமால்" எனவும் கூறினார். (43)

அவதாரிகை.

கூர்ம புராணத்தில் பரமசிவனால் உபதேசிக்கப்பட்ட ஈசுவர கீதையைப் போல வித்துவானது கானம் உலகத்திற்கு உபகாரமெனக் கூறுகின்றார்.

அன்பி னாலெம் மாதிகுரு வாகு மிறைவ னருள்கீதை
யின்ப மேசெய் திடலுலகுக் கியல்பா மெவ்வா றவ்வாறே
முன்பு பரமன் திருவாக்கான் மொழிந்த கீதைப் பொருளான
பின்பிக் குரவ னருள்கீதைப் பேரா வின்பம் பிறப்பிக்கும்.

இதன் பொருள்.

| | |
|---|---|
| எம் ஆதிகுருவாகு மிறைவன் | —எமது மூலகுருவான சிவபெருமான் |
| அன்பினால் | —திருவருளினால் |
| அருள்கீதை | —திருவாய்மலர்ந்தருளிய (ஈசுவர) கீதையானது |
| உலகுக்கு இன்பமே செய்திடல் | —உலகத்திற்குச் சுகத்தையே செய்வது |
| எவ்வாறு இயல்பாம் அவ்வாறே | —எப்படிச் சுபாவமாகுமோ அப்படியே |
| முன்பு பரமன் திருவாக்கால் | —முற்காலத்தில் பரமசிவத்தின் திருவாக்கால் |
| மொழிந்த | —(அப்படி) உரைத்தருளிய |
| கீதைப்பொருளான பின்பு | —அந்தக் கீதையின் அர்த்தமாகிய பிற்காலத்தில் |
| இக்குரவன் | —(பிரம்ம நிஷ்டனாகிய) இந்த ஆசிரியன் |
| அருள் கீதை | —மொழிந்தருளும் கானமானது |
| பேரா இன்பம் பிறப்பிக்கும் | —நீங்காத சுகத்தை உண்டாக்கும் |

**கருத்து**—கூர்ம புராணத்தில் ஈசுவரனால் சொல்லப்பட்ட ஈசுவர கீதை எப்படி லோகத்துக்குச் சுகத்தைச் செய்வது இயல்பாயிருக்கின்றதோ அப்படியே இந்தப்பிரம்மநிஷ்டனுடைய கீதமும் லோகத்துக்குச்சுகத்தைக் கொடுப்பதாகும்.

அவதாரிகை.

**'அதனை எவ்வேளையிலும் கானம் செய்கின்றான்'** என்ற மற்றை வாக்கியத்தாலும் வித்துவானுக்குக் கானம் கூடுமென்று கூறுகின்றார்.

வேறு.

உலகியல்பாங் கீதைக்கு முவந்தருளு மிறையென்று
மிலகியவை திகீதைக் கேன்செய்யா னிறையதனை
னலமிகுத்த பொருள்வேண்டி னலமிகுபத் தியினோடும்
பலமிகுநற் கீதைகளே யெப்பொழுதும் பாடுவான்.

### இதன் பொருள்.

உலகியல்பாங் கீதைக்கும் —லௌகிகமான கானத்திற்கும்
இறை உவந்தருளுமென்றால் —சிவபெருமான் மகிழ்ந்து திருவருள் செய்வான் என்றால்
இலகிய வைதிக கீதைக்கு —விளங்குகின்ற வேதசம்பந்தமான வைதிக கானத்திற்கு
இறை என் செய்யான் —பரமசிவன் என் திருவருள் பாலிக்கமாட்டான்
அதனால் நலமிகுத்த —அத்தன்மையினால் நன்மை மிகுத்த
பொருள்வேண்டின் —மோட்சத்தைக்கருதிடில்
நலமிகு பத்தியினோடும் —நன்மை மிகுந்த அன்போடும்
பலமிகு நற்கீதைகளே —பயன்மிகுந்த நல்லகானங்களையே
ஏப்பொழுதும் பாடுவான் —இடைவிடாமல் பாடக்கடவன்

**கருத்து**—லௌகிக கானத்திற்கே ஈசுவரன் மகிழ்ந்து அருள்செய்வாரானால் வைதிக கானத்திற்கு அருள்செய்வதில் என்ன சந்தேகம்? ஆகையால் மோட்சத்தைவேண்டிப் பிரமநிஷ்டன் இக்கானத்தைச் செய்யக்கடவன். (45)

### அவதாரிகை.

சிவத்தின் ஐக்கியத்தை வைதிககானம், ஆகமகானம் இவைகளின் வழியால் அடையும் திறமில்லாவிடினும் திராவிடாதி தேசபாஷைகளாயுள்ள கீதையினாலாவது கானம் செய்வானாயின் அவனும் அடைவானெனக்கூறுகின்றார்.

### வேறு.

அறையு மறையா லாகமத்தா லறியா னாகின் மற்றுந்தா
னறிவ தொருபா டையினாலே யறைவா னென்று மமைவுறவே
யிறையை யடைதற் கேதுவிது விதனாற் பரம யோகெய்தும்
பிறிவொன் றறவே சிவன்றன்னை யோகத் தாலே பெறலாமால்.

### இதன் பொருள்.

அறையுமறையால் —சொல்லப்படும் வைதிக கானத்தாலும்
ஆகமத்தால் —வியாக்கியாகானத்தாலும்
அறியானாகில் —அறியும் திறமில்லாதவனாகில்
மற்றும் தான் அறிவதொரு பாடையினாலே —இன்னமும் தனக்குத்தெரிந்த பாஷை எதுவோ அதனாலே
என்றும் அறைவான் —சிவபெருமானைக்குறித்து எந்நாளும் கானம் செய்யக்கடவன்
இறையை அடைதற்கு இது ஏது—சிவபெருமானைச் சேர்வதற்கு இதுவே காரணமாகும்

இதனால் பரமயோகு எய்தும் —இந்தக்கானத்தால் உயர்ந்த யோகமுண்டாகும்
யோகத்தாலே சிவன் தன்னை — அந்த யோகத்தினாலேயே பரமசிவத்தை
பிறிவு ஒன்று அறவே பெறலாம்—ஒருபேதமும் இல்லாமல் அடையலாகும்.

கருத்து—வேதாகமங்களால் கானம்செய்யத் திறமில்லாதவன் தனக்குத் தெரிந்த பாஷையினாலாவது கானம்செய்யக்கடவன். இதுவே சிவபெருமானை அடைதற்குக் காரணமாகும். இக்கானத்தால் உயர்ந்த யோகம் சித்திக்கும். அதனால் சிவசாட்சாத்காரத்தையடைவன். (46)

அவதாரிகை.

பிரதிபந்த மிகுதியால் அப்போதே ஐக்கியத்தை அடையாவிடினும் காலாந்தரத்திலாவது சென்றடைவான் எனவும், பரமசிவ விஷயமின்றி வீணை காணம் செய்வானாகில் பாதகன் ஆவான் எனவும் கூறுகின்றார்.

கீதை செய்தோன் யோகத்தாற் கீழ்ச்செய் வினையின் பெருமையினாற்
பேத மில்லான் றனைக்கூடப் பெறாதே விடினும் பின்பெறுவான்
னாத லாலே யிறை கீதை யல்லா தெல்லாங் கைவிடுவான்
பேத மையினாற் செய்தானேற் பிராயச் சித்தஞ் செயவேண்டும்.

இதன் பொருள்.

கீதை செய்தோன் —இப்படிக்கானம் செய்தவன்
யோகத்தால் —யோகத்தினாலும்
கீழ்ச்செய்வினையின் —முன்னே செய்த (நல்) வினையின்
பெருமையினால் —மிகுதியினாலும்
பேதமில்லான் தன்னை —அபின்னனான பரமசிவனை
கூடப் பெறாதேவிடினும் —இப்பொழுதே அடையப் பெறாமற்போனாலும்
பின்பெறுவான் —பின்பு அடையக்கடவன்
ஆதலாலே —ஆகையினாலே
இறை கீதை அல்லாது —பரமசிவத்தின் கானத்தைத் தவிர
எல்லாம் கைவிடுவான் —மற்றனைத்தையும் கைவிடக்கடவன்
பேதமையினால் செய்தானேல்—அறியாமையினால் வேறுள்ள கானங்களைச் செய்தானானால்
பிராயச்சித்தம் செயல்வேண்டும்—பிராயச்சித்தம் செய்யவேண்டியது.

கருத்து—இக்கானத்தினாலும் முன்செய்துள்ள நல்வினையினாலும் இப்பொழுதே சிவசாட்சாத்காரத்தை அடையாவிடினும் காலாந்தரத்தில் அடைவான். ஆகையால் பரமசிவகானத்தைத் தவிர மற்றவையனைத்தையும் கைவிடக்கடவன். அறியாமையால் செய்வானாகில் பிராயச்சித்தம் செய்துகொள்ளவேண்டும். (47)

அவதாரிகை.

முற்கூறியபடி முமுட்சுவானவன் சுருதி, தர்க்கம் இவைகளால் சிவபோதத்தை அடைந்து அவ்வனுசந்தானத்துடன் கானம்செய்து சுகத்தில் சஞ்சரிக்க வேண்டுமெனவும், இந்தஉபநிஷதார்த்தத்தைச் சிவபக்தர்களுக்குச்சொல்வதன்றி மற்றவர்களுக்குச் சொல்லக்கூடாதெனவும் கூறுகின்றார்.

வேறு.

ஆதலாற் பிறவி யறுக்கவா தரிப்போ னருமறைப் பிரமாணத் தாலுந்
தீதிலாத் தர்க்க நெறியத னாலுஞ் சிவனுடை யுணர்வுபெற் றதுவே
கீதமே செய்வா னுபநிட மதனிற் கிளத்திய பொருளிதிப் பொருளைத்
தீதிலாச் சிவனற் பத்தருக் குரைக்க வல்லவர் தமக்குரை யீரே.

இதன் பொருள்.

| | |
|---|---|
| ஆதலால் பிறவி அறுக்க ஆதரிப்போன் | ஆகையால் பிறவிப் பெருந்துயரத்தை ஒழிக்க வேண்டுமென்னும் இச்சைகொண்டவன் |
| அருமறைப் பிரமாணத்தாலும் | —அரிதான வேதப் பிரமாணத்தாலும் |
| தீதிலாத்தர்க்க நெறியதனாலும் | —குற்றமில்லாத தருக்க வழியினாலும் |
| சிவனுடை உணர்வுபெற்று | —பரமசிவஞானத்தை அடைந்து |
| அதுவே கீதமே செய்வான் | —அந்தச் சிவஞான மகிமையையே கானம் செய்து கொண்டிருப்பான் |
| உபநிடமதனில் | —உபநிஷதத்தில் |
| கிளத்தியபொருள் இது | —சொல்லிய அர்த்தம் இதுதான் |
| இப்பொருளை | —இந்தத் தாற்பரியத்தை |
| அல்லவர்தமக்கு உரையீரே | —சிவநேசம் இல்லாதவர்களுக்குச் சொல்லவேண்டாம் |
| தீதிலா | —தீமை இல்லாத |
| சிவன் நல்பத்தருக்கு உரைக்க | சிவபெருமானிடத்தில் பேரன்புடைய நல்ல அடியார்களுக்கே உபதேசிக்கவேண்டியது. |

கருத்து—பிறவிப் பெருந்துன்பத்தை ஒழிக்கவேண்டுமெனக் கருதுகின்றவன் வேதப்பிரமாணத்தினாலும், தர்க்கப் பிரமாணத்தினாலும், சிவஞானத்தை அடைந்து அச்சிவஞான மகிமையையே கானம் செய்யக்கடவன். உபநிடதத்தின் பொருளும் இதுவேயாம், இப்பொருளைக் குற்றமற்ற மெய்யடியார்களுக்கே உரைக்க. ஏனையோர்க்கு ஓதாதொழிக. (48)

மூன்றாவது தைத்திரிய உபநிஷதார்த்த தாற்பரியமுரைத்த
அத்தியாயம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் 98.



## நான்காவது

## கேனுப நிடத தாற்பரியம் உரைத்த அத்தியாயம்.

### அத்தியாய அவதாரிகை,

முந்திய அத்தியாயங்களில் ஐதரேய தைத்திரிய உபநிஷத்துக்களின் தாற்பரியத்தைக்கூறி இந்த அத்தியாயத்தால், பிரம்மதத்துவம், உபதேசத்தால் அடையத்தக்கதேயன்றி, தருக்கத்தால் அடையத்தக்கது அன்று என்று காண்பிக்கவேண்டி, சுருதியில் கேள்வி உத்தரங்களாற் கூறியதைக் கூறுகின்றார். அஃதெங்ஙனமெனில் எதனுல் மனம், பிராணன், வாக்கு, விழி, சுரோத்திரம் இவைகள் பிரேரிக்கப்பட்டுத் தம் தம் விஷயங்களிற் செல்கின்றன என்பது கேள்வி. அதற்கு அவ்வஸ்து கண்ணுக்குக்கண் காதுக்குக்காது, மனத்திற்குமனம், வாக்குக்குவாக்கு, பிராணனுக்குப் பிராணன், என்பது உத்தரம். இவ்வத்தியாயத்தில் அவ்விரண்டின் பொருளையும் கூறுகின்றார்.

### அவதாரிகை.

தேவர்களுக்குப் பிரம்மத்தை ஜைமினி சாகையான உபநிடதத்தின் பொருளுடைய இவ்வத்தியாயத்தாலும் உபதேசிக்கின்றேன் என எல்லாப் பிரபஞ்சங்களையும் படைத்தருளிய பிரம்மதேவர் கூறுகின்றார்.

வான் றொடங்கி மலர்ந்தன யாவைக்குஞ்
சான்ற தாமறி வைத்தன் னருளினாற்
றோன்று சோதியைச் சொல்லுவ னென்றெலா
மீன்ற வன்னிமை யோர்கட் கியம்பினான்

### இதன் பொருள்.

| | |
|---|---|
| வான் தொடங்கி | —ஆகாயம் முதலாகத் தொடங்கி |
| மலர்ந்தன யாவைக்கும் | —உண்டாகிய அனைத்திற்கும் |
| சான்றதாம் அறிவை | —சாட்சியாகிய பிரம்மசொரூபத்தை |
| தன்னருளினுல் தோன்று சோதியை | தன்னுடைய கருணையினுல் தானுகவே விளங்குகின்ற ஜோதியை |
| சொல்லுவன் என்று | —உங்களுக்குக் கூறுவேன் என்று |
| எல்லாம் ஈன்றவன் | —சகலப் பிரபஞ்சங்களையும் படைத்த நான்முகனைவன் |

இமையோர்கட்கு இயம்பினன்—தேவர்களுக்குச் சொன்னுன்

**கருத்து**—ஆகாய முதலாயுண்டாகிய சகலத்திற்கும் சாட்சியான பிரம்ம சொரூபத்தை உங்களுக்குச் சொல்லுகிறேன் என்று எல்லாப் பிரபஞ்சங்களையும் படைத்தருளிய பிரம்மதேவர் தேவர்களுக்குச்சொல்லத்தொடங்கினர். (1)

அவதாரிகை.

சுருதியில் கூறியுள்ள 'எதனால் என்ற பொருள்' பொதுவாதலால் அதனைச் சர்வ சாட்சியான கூடஸ்தனாகத் தெரியக்கூறி அவ்விறையால் மனம், பிராணன், இரண்டும் பிரேரிக்கப்பட்டுத் தங்கள் தங்களது விஷயங்களில் செல்லுமெனக் கூறுகின்றார்.

வேறு.

தானே யுளனா யெப்போது மெல்லாப் பொருட்குஞ் சான்றாகி
யூனேய் பவசா கரத்துற்றோர்க் குடன்று ரகமா கியவும்பர்
கோனே நியமித் திடமனமுங் குறித்து விடயங் களிற்செல்கை
தானே சேட்டை செய்யாது பிராண னிறைவன் றன்னாலே

இதன் பொருள்.

| | |
|---|---|
| தானே உளனாய் | —தானாகவே விளங்கியிருக்கின்றவனாகி |
| எப்போதும் எல்லாப்பொருட்கும் | —எக்காலத்தும் சகல வஸ்துக்களுக்கும் |
| சான்றாகி | —சாட்சியாகி |
| ஊன் எய் | —மாமிசபிண்டமான தேகத்தைத் தருகின்ற |
| பவசாகரத் துற்றோர்க்கு | —சன்ம சாகரத்தில் ஆழ்ந்தவர்களுக்கு |
| உடன் தாரகமாகிய | —அப்போதே ஆதாரமாகியிருக்கின்ற |
| உம்பர்கோனே | —தேவ தேவனாகிய பரமசிவன் (ஒருவனே) |
| நியமித்திட மனமும் குறித்து | —பிரேரணைசெய்ய நெஞ்சமும் கருதி |
| விடயங்களில் செல்கை | —விஷயங்களில் செல்வது |
| பிராணன் | —பிராணனும் |
| தானே சேட்டை செய்யாது | —தானாகவே சலிக்கமாட்டாது |
| இறைவன் தன்னால் | —அந்தப் பரமசிவத்தினாலேயே (சேட்டிக்கப்) படுகின்றது. |

கருத்து—எக்காலத்திலும் உள்ளதும், சர்வத்திற்கும் சாட்சியானதும், தானே விளங்கக்கூடியதுமான பிரம்மத்தினுடைய பிரேரணையால் மனம் விஷயங்களில் செல்லுகின்றது. பிராணனும் சேட்டிக்கின்றது.

பதசாரம்—எப்போதும் இயல்பாகவே இருக்கின்ற பரமார்த்த ஸ்வரூபத்தைத் 'தானேயுளனாய்' எனவும், தான் புறம்பு என்ற விவகாரகாரணமான சிற்பிரகாசம் சாட்சியப் பிரபஞ்சத்திற்கு உட்படாததனால் அது நித்தியமென்பதைச் 'சான்றாகி' எனவும் கூறினார். (2)

அவதாரிகை.

ஞானேந்திரிய கர்மேந்திரியங்களும் இறைவனாலேயே பிரேரேபிக்கப்பட்டுத் தங்கள் விஷயங்களில் செல்கின்றன எனவும், அவ்வித பிரேரகத்துவமும் மாயைக்கேயன்றி இறைவனுக்கு இல்லையெனவும் கூறுகின்றார்.

வேறு.

நாவுரைப் பதுவுஞ் செவியுரைப் பதனை நலம்பெறக் கேட்பதும் நயன
மேவுருத் திகழக் காண்பது மற்றும் வேறுள விந்தியங் களுமத்
தேவனுற் றத்தம் விடயமேற் செல்லப் படுவதிங் கிவைசெலுத் திடலத்
தேவமா யையினு லன்றியுண் மையிலத் தேவனுக் கில்லையே தெரியில்

இதன் பொருள்.

நாவுரைப்பதுவும் —நாவானது வசனிக்கின்றதும்
செவி உரைப்பதனை நலம்பெறக் கேட்பதும் —காது வசனிக்கின்ற சொல்லை நன்மையடையக் கேட்கின்றதும்
நயனம் மேவு உருத்திகழக் காண்பதும் —கண்கள் பொருந்திய உருவங்களை விளங்கப் பார்க்கின்றதும்
மற்றும் வேறு உள இந்தியங்களும் —இன்னும் வேறு வேருயிருக்கின்ற இந்திரியங்களும்
அத்தேவனுல் —அந்தப் பரமசிவனுல்
தத்தம்விடய மேல்செல்லப்படுவது—தத்தம் விஷயங்களில் செல்லுகின்றன
தெரியில் —ஆராயுங்கால்
இங்கு இவை செலுத்திடல் —இவ்விடத்தில் இவற்றை ஏவுவது
அத்தேவ மாயையினுலன்றி —அந்தப் பரமசிவனுடைய மாயையினுலல்லாமல்
உண்மையில் அத்தேவனுக்கில்லை—சுபாவத்தில் அந்தப் பரமசிவனுக்கு இல்லை.

**கருத்து**—வாக்கு வசனிக்கின்றதும், காது கேட்பதும், கண் பார்ப்பதும், மற்றுமுள்ள இந்திரியங்கள் தத்தம் விஷயங்களில் செல்வதும் அப்பரமசிவனுடைய மாயையினுல் அல்லாமல் ஸ்வபாவத்தில் அவனுக்கில்லை.

**பதசாரம்**—எல்லாப் பிராணிகளின் இதயங்களிலும் ஜீவரூபனுக அனுப்பிரவேசித்திருக்கின்ற சர்வசாட்சியான சுதந்திர பரமேசுவரனுல் எல்லா இந்திரியங்களும் தத்தம் விஷயங்களில் செல்கின்றன என்பது விளங்க '**வேறுள விந்தியங்களுமத் தேவனுற் றத்தம் விடயமேற் செல்லப் படுவது** எனவும், அலையில்லாத சாகரசமானனுன அசங்கனுகிய கூடஸ்த ஆன்மாவுக்கு இவ்வித பிரேரகத்துவம் எங்ஙனம் கூடுமெனில் சத்துவப் பிரதானமாகிய மாயா பரிணுமமான தேகேந்திரியம் முதலிய உபாதி சம்பந்தவசத்தால் என்பது விளங்க '**மாயையால்**' எனவும் கூறினுர். (3)

அவதாரிகை.

மனம் இந்திரியங்களுக்குச் சத்தை (இருப்பு) சிவந்த அக்கினியால் வியாபிக்கப்பட்ட இரும்பு விளங்குவது போலன்றிச் சொந்தமில்லை என்று கூறுகின்றுர்.

## வேறு.

இந்தியங் களுக்குச் சத்தை யில்லையே யிவற்றின் சத்தை
செந்தழ லயம்போ லுள்ள தேவனா லுள்ள சத்தை
தொந்தமில் பரன்றான் றன்னிற் சோத்திரந் தன்னைக் கற்பித்
தந்தவத் தன்மை யுண்டா களிக்குமங் கனுவே சித்து

## இதன் பொருள்.

| | |
|---|---|
| இந்திரியங்களுக்குச் சத்தை இல்லையே | இந்திரியங்களுக்கு இயற்கையாகச் சத்தை இல்லை |
| இவற்றின் சத்தை | —(ஆனால்) இவ்விந்திரியங்களில் தோற்றுகின்ற சத்தையானது |
| செந்தழல் அயம்போல் | —சிவந்த அக்கினியால் வியாபிக்கப்பட்ட இரும்பு எப்படி விளங்குமோ (அப்படியே) |
| உள்ளதேவனால் உள்ளசத்தை | —என்றும் அழியாமலிருக்கின்ற பரமசிவனால் பொருந்திய சத்தைதான் |
| தொந்தமில் பரன்தான் | —துவிதமில்லாத பரமசிவனானவன் |
| தன்னில் சோத்திரம் தன்னைக் கற்பித்து | தன்னிடத்தில் செவியைத் தோற்றுவித்து |
| அங்கு அனுவேசித்து | —அவ்விடத்தில் அனுப்பிரவேசித்து |
| அந்த அத்தன்மை உண்டா களிக்கும் | அழகாகிய அச்செவியின் தன்மையை உண்டாகும்படி கொடுக்கின்றான். |

**கருத்து**—இந்திரியங்களுக்கு இயற்கையில் சத்தை இல்லை. அக்கினியிற் பட்ட இரும்புபோல் நித்தியனான பரமசிவனுடைய சத்தைதான் அவ் விந்திரியங்களிடத்திலுள்ளது. பரமசிவன் தன்னிடத்தில் காதை உண்டுபண்ணிக்கொண்டு அச்செவியினிடத்தில் அனுப்பிரவேசித்து அதன்தொழிலை நடத்துகின்றான்.

**பதசாரம்**—பிரேரக ஆன்மா அன்னியன். அவனால் பிரேரிக்கத்தக்க மனமாதிகள் அன்னியமாயின் துவிதமாகுமோ என்னில், சிற்பிரகாசனான அவனிடத்தில் அத்தியாசமானதனால், தப்தாயபிண்டம் நியாயம்போல் அதிஷ்டான சத்தைத்தவிர ஆரோபிதசத்தை வேறில்லாததனால் அவைகளில் விளங்கிய சத்தையும் அதிஷ்டானசத்தைகள் என்பது விளங்கத் **'தொந்தமில் பரன்றன்'** எனவும், மனமுதலியவைகள் எவனது இச்சாமாத்திரத்தால் பிரேரிக்கப்படுகின்றன; அவன் எச்சொரூபம் உடையவன்? என்று கேள்வியை வருவித்துக் கொண்டு உத்தரமாக சிரவணசாதனமான சுரோத்திரத்தில் சர்வாந்தர சிற்சோதியான பரமசிவன் அனுப்பிரவேசித்து அதற்குச்சிரவண சாமார்த்தியத்தைக் கொடுக்கின்றான் என்பது விளங்க **'அத்தன்மை உண்டா களிக்குமங் கனுவேசித்து'** எனவும் கூறினார். (4)

இதுவுமது—வேறு.

தன்னிற்கற் பிதமனத்தை யனுவே சித்துச்
சத்துவத்தி னின்றுமனத் தன்மை நல்கும்
நண்ணுற்ற கற்பிதமா நாட்டந் தன்னை
நாட்டமாந் தன்மைபெற நல்கா நிற்கும்
மன்னுற்ற பிராணனுக்குப் பிராண னாகை
வாக்குக்கு வாக்காகை மற்று முண்டாய்ப்
பன்னுற்ற கற்பிதமாங் கருவி கட்கும்
பரிசனுவே சித்தளிக்கும் பரமன் றானே.

இதன் பொருள்.

| | |
|---|---|
| தன்னில் கற்பித மனத்தை | —தன்னிடத்தில் அத்தியாசிக்கப்பட்ட மனத்தை |
| அனுவேசித்து | —அனுப்பிரவேசித்து |
| சத்துவத்தில் நின்று மனத் தன்மை நல்கும் | சத்துவகுணத்தில் தான் இருந்து அதற்கு மனத் தன்மையைக் கொடுக்கிறான் |
| கற்பிதமாம் நண்ணுற்ற நாட்டந் தன்னை | அப்படியே கற்பிதமாகப் பொருந்திய கண்ணை |
| நாட்டமாம் தன்மைபெற நல்கா நிற்கும் | பார்வையாம் தன்மையை அடையும்படி அனுப் பிரவேசம்செய்து கொடுக்கின்றான் |
| மன்னுற்ற பிராணனுக்கு | —நிலைபெற்ற பிராணனுக்கு |
| பிராணனாகை | —பிராணத் தன்மையாதலும் |
| வாக்குக்கு வாக்காகை | —வாக்கு இந்திரியத்துக்கு வாக்குத் தன்மையாதலும் |
| மற்றும் உண்டாய் | —இன்னமும் பலவகை உண்டாகி |
| பன்னுற்ற கற்பிதமாம் | —சொல்லுகின்ற கற்பிதமாகிய |
| கருவிகட்கும் | —இந்திரியங்களுக்கும் |
| பரிசுபரமன் தானே | —அவற்றின் தன்மையைப் பரமசிவனே |
| அனுவேசித்து அளிக்கும் | —அனுப்பிரவேசம்செய்து கொடுக்கின்றான். |

**கருத்து**—பரமசிவனே தன்னிடத்தில் அத்தியாசிக்கப்பட்ட மனத்தை அனுப்பிரவேசஞ்செய்து சத்துவகுணத்தில் தானிருந்துகொண்டு அதற்கு மனத்தின் தன்மையையும், கண், பிராணன், வாக்கு இன்னும் மற்றைய இந்திரியங்களை அனுப்பிரவேசஞ்செய்து அவ்வவ்வற்றிற்குள்ள தனிப்பட்ட தன்மைகளையும் கொடுக்கின்றான்.

**பதசாரம்**—சத்துவகாரியமான அந்தக்கரணத்துக்கும் காரணமாகிய சத்துவம் சைதன்னியப் பிரகாசாபி வியஞ்சகமானதனால் அவ்வுபாதியுடையவன் என்பது விளங்கச் '**சத்துவத்தினின்றும்**' என்றார். (5)

அவதாரிகை.

சுரோத்திரம் முதலிய சகல கற்பனைக்கும் அதிஷ்டானமாகியும், கற்பிதங்களானவைகளுக்குச் சிரவணம் முதலிய வல்லமைகளைக் கொடுக்கின்றதாயுமுள்ள சர்வாந்தரமான சிதேகரசமாகிய பிரம்மம் முற்கவிகளால் உபதேசிக்கப்பட்டது. ஆயினும், இவ்வித வஸ்து கடாதிகளைப்போல. பிரத்தியட்சமாக ஏன் அனுபவிக்கப்படவில்லை எனச் சங்கைவர, அதை நிராகரிக்கவேண்டி, கூடஸ்தனாகிய அவனிடத்தில் கண் வாக்கு, மனம் இவைகள் செல்லா எனச் சுருதியிற்கூறிய பொருளை இக்கவியில் கூறுகின்றார்.

வேறு.

வாக்குமன முங்கண்ணு மற்றுளவிந் தியங்களுமே
நோக்கரிய பரஞ்சுடரை நோக்கியிவை செலமாட்டா
தாக்கில்பரம் பானறியிற் றான்வேறு மறியாதே
போக்குபொரு ளினும் வேறும் பானரிய பொருளன்றே.

இதன் பொருள்.

| | |
|---|---|
| வாக்கும் மனமும் கண்ணும் | —வாக்கும், மனசும், விழியும் |
| மற்றுள இந்தியங்களும் | —வேறுள்ள இந்திரியங்களும் |
| நோக்கரிய பரஞ்சுடரை | —பார்ப்பதற்கரிய பரமசிவனை |
| நோக்கி இவை செலமாட்டா | —எதிரிட்டுப்பார்த்து இவைகள் செல்லமாட்டா |
| தாக்கில் பரம்பரன் | —தொந்தமில்லாத அந்தப் பரமசிவன் |
| அறியில் தான் வேறும் | —அறிந்தால் அந்தப்பொருளுக்கும் வேறுவான் |
| அறியாதேபோக்கு | —அறியாமல் விடுத்த |
| பொருளினும் வேறும் | —பொருளுக்கும் வேறுவான் |
| பரன் அரிய பொருளன்றே | —அந்தப்பரமசிவன் அறிதற்கரிய அருமையான பொருளல்லவா |

**கருத்து**—சொப்பிரகாசனாகிய அப்பரமசிவனை வாக்கு, மனம், கண் முதலிய இந்திரியங்கள் எட்டமுடியா. அவன் அறியக்கூடியதும் அறியக்கூடாததுமான பொருள்களுக்கு வேறுவன், வாக்கினால், மனத்தால், கண், காது, பிராணன் இவைகளால் அவனை அறியமுடியாது.

**பதசாரம்**—வாக்கு இந்திரியத்தையும் அதனால் உண்டாகும் சப்தத்தையும் **'வாக்கு'** எனவும், இந்தக்கண் முதலிய இந்திரியங்கள் பிரம்மத்தில் அத்தியஸ்தமானதுகொண்டு அச்சொருபங்களேயாகும். அங்ஙனமாயின் தங்கள் சொருபமாகிய பிரம்மத்தில் எங்ஙனம் அவைகளுக்குப் பிரவிர்த்திகூடும். தங்கள் சொருபமாயினும் ஏன் விஷயீகரிக்கப் பிரவர்த்தியாது என்றால் விஷய விஷயீ பாவம் பேதத்தை முன்னிட்டிருப்பதனால். அஃதில்லாததுபற்றி அவைகளுக்கு அவிஷயமென்பது விளங்க **'நோக்கரிய பரஞ்சுடர்'** எனவும் கூறினார்.

[ஆத்மா சித்ரூபமானதால் விஷயி என்ற சப்தத்தால் வேதாந்த சாஸ்திரத்தில் விவரிக்கப்படுவன். அனாத்மா சடமானதால் விஷயம் என்ற சப்தத்தால் விவரிக்கப்படுவன். பிரகாசம்செய்கிற வஸ்து விஷயியாகவும், பிரகாசிக்கச் செய்யப்படுகிற வஸ்து விஷயமாகவும் லோகத்தில் ஏற்பட்டவிவஸ்தை. தீபம் பிரகாசம்செய்கிற வஸ்து. அது மற்றொன்றால் பிரகாசம்செய்யப்படுகின்ற வஸ்து இல்லையென்பது அனுபவசித்தம். கடாதியவை பிரகாசிக்கச் செய்யப்படுகிற வஸ்துக்கள். மற்றொன்றைப் பிரகாசிக்கச்செய்கின்ற வஸ்துக்களில்லை. இதுவும் அனுபவசித்தம். இதனால்தான் தீபத்தை விஷயியென்றும், கடாதிகளை விஷயமென்றும் வித்வான்கள் விவரிக்கின்றார்கள். பொதுவாகவே விஷயம் என்றால் இயற்கையில் தனக்குப் பிரகாசம் இல்லாமல் மற்றொன்றின் சேர்க்கையால்தான் பிரகாசிக்கவேண்டியதான ஸ்வபாவமுள்ள வஸ்து என்று அர்த்தம். விஷயி என்றால் தான் ஸ்வயமாகவே பிரகாசிக்கச் சக்தியுள்ள வஸ்து என்று அர்த்தம். இவற்றிற்குக் கடமும் தீபமும் உதாரணங்களாகும்.]

சொரூபத்தால் பேதமில்லாவிடினும் ஆரோபபேதம் அங்கீகரிக்கக்கூடலாமே என்னில் சர்வசாட்சியான திருஷ்டாவைத் திரிசியங்களானவைகள் விஷயீகரியா என்பது விளங்க 'நோக்கியிவை சேலமாட்டா' எனவும் இங்ஙனம் கண் முதலிய எல்லாப் பிரமாணங்களுக்கும் பரமசிவரூபம் அவிஷயமானால் வேதந்தான் எப்படி அடையும்படி கூறுமென்னில், சுருதியில் அறியப்பட்டதாயும், அறியப்படாததாயுமுள்ள பொருள்களின் தன்மையில்லாத சுபாவமுடையதாக அறியலாமெனக் கூறியபடி ஞாதாஞ்ஞாத வியதிரேகாவச்சின்னமாகப் பிரம்மம் அறியப்படும் என்பது தோன்ற 'அறியிற்றன் வேறுமறியாதே போக்கு பொருளினும் வேறும்' எனவும் கூறினர். (6)

அவதாரிகை.

பிரம்மம் ஞாதாஞ்ஞாதங்களுக்கு வேறாதலால் உபநிஷத் பிரமாணத்தால் அறியத்தகும் என உபதேசிக்கப்பட்டிருந்திடினும், ஞேயப் பிரம்மமாகிய இதற்குப் பின்னமாக உபாசியப் பிரம்மம் இருக்கலாமென்று சிஷ்யனுக்குச் சங்கைவரில் அதனை நிராகரிக்கவேண்டி, எது வாக்கில் உதிக்கப்படாததோ, எதனால் வாக்கு உதிக்கின்றதோ அது பிரம்மம் என்று அறி. எது மனத்தால் எட்டப்படாததோ, எதனால் மனம் மதிக்கப்படுமோ அதுவே பிரம்மம் என்று அறி. எந்தப் பிரம்மமானது இத்தன்மை உடையதென உபாசிக்கப்படுகின்றதோ அதுவே பிரம்மம் என்று அறி. இந்தப்பொருள் இத்தன்மையுடையதென அறியப்படாது என்ற சுருதியின் பொருளைக் கூறுகின்றார்.

வாக்குமனங் கண்செவியான் மன்னிநின்ற பிராணனு
னீக்கியுள காரணத்தா னின்மலன்கோ சரிக்கவுறுன்
பார்க்கரனுக் குருவும்போற் பகர்பொருளெ லாந்திகழ்வ
தாக்கதனைச் சுஞதனமாம் பரப்பிரம மெனவறிமின்

இதன் பொருள்.

| | |
|---|---|
| வாக்குமனம் கண் செவியால் | —வாக்கினாலும், மனத்தினாலும், கண்ணினாலும் காதினாலும் |
| மன்னிநின்ற பிராணனால் | —நிலைபெற்றிருக்கின்ற பிராணனாலும் |
| நீக்கியுளகரணத்தால் | —(இவை) யொழிந்த அந்தக்கரணத்தினாலும் |
| நின்மலன் | —மலரகிதனான (சங்கரனானவன்) |
| கோசரிக்க உறான் | —விஷயீகரிக்கப்படமாட்டான் |
| பார்க்கரனுக்கு | —சூரியன் ஒளிக்கு (முன்) |
| உருவம்போல் | —சகல ரூபங்களும் (விளங்குவது) போல |
| பகர் பொருளெலாம் | —சொல்லுகின்ற (வாக்குமனம் முதலிய) எல்லாப் பொருள்களையும் |
| திகழ்வதாக்கதனை | —பிரகாசிப்பதாகச் செய்கின்ற வஸ்துவை |
| சனாதனமாம் பரப்பிரமமென | —சனாதனமாயுள்ள பரப்பிரம்மமென்றே |
| அறிமின் | —நீங்கள் அறியுங்கள். |

**கருத்து**—மலரகிதனாகிய சங்கரனானவன் வாக்கு, மனம், கண், காது, பிராணன், அந்தக்கரணம் இவற்றால் விஷயீகரிக்கப்படமாட்டான். சூரியன் முன் பொருள்கள் விளங்குவனபோல வாக்கு முதலியவைகளை விளங்கச் செய்கின்ற வஸ்து எதுவோ அதுவே சனாதனமாயுள்ள **பரப்பிரம்மம்** என அறிக.

அவதாரிகை.

இங்ஙனம் இந்திரியம் முதலியவைகளுக்கு வேறாகவும், அவைகளுக்குச் சாட்சியாகவுமுள்ள பிரத்தியகான்மாவைப் பிரம்மமாக அனுபவிக்கும்படி யாதொரு ஞானம் உபதேசிக்கப்பட்டதோ அதன் பலத்தைக்கூறி, இந்தப்பிரகாரம் தனது ஆன்ம சொரூபமாக உபதேசிக்கப்பட்ட பிரம்மாபரோட்ச சமயத்தில் நான் பிரம்மத்தை அறிவேன் என்று கர்மகர்த்திருத் தன்மையான லட்சணமுடைய பேதத்தோற்றம் வஸ்து அன்று எனவும், பேதமில்லாத அகண்டைகரசமான பிரம்மான்மதத்துவம் சொரூபப் பிரகாசத்தாலேயே அறியத்தக்கது எனவும், தெரிவிக்கவேண்டி, குருசிஷர்களுடைய கேள்வி மறுமொழிகளாகச் சுருதி கூறுகின்றது. அது, நன்றாயறிந்தேனென அபிப்பிராயம் கோள்வாயானால் நிச்சயமாகவே அற்பமாய்விடும் பிரம்மசொரூபமென நீ அறி' என்பது குருவின் வாக்கியமும், 'நன்றாய் அறியப்பட்டதாகவும், அறியப்படாததாகவும், நான் அபிப்பிராயப்படவில்லை' என்பது சிஷன் வசனமும் ஆகும். அவ்விரண்டு வாக்கியங்களின் பொருளையும் கூறுகின்றார்.

வேறு.

ஆனதர்க் கத்தான் மானத்தாற் குரவ னருளினா லனுபூதி யதனால்
ஞானமெய்ப் பொருளை யறிந்திடு மவரே நலம்பெறு முத்தரா னவர்கள்
ஊனமற் றந்தத் தற்பரம் விளங்க வுணர்ந்திடப் பட்டதென் றுணரிற்
றானனைத் தினுக்குஞ் சாட்சியாம் பிரமந் தானறி பொருளுமா யசத்தா

### இதன் பொருள்.

| | |
|---|---|
| ஆன தர்க்கத்தால் | —யூகமான தருக்கத்தினாலும் |
| மானத்தால் | —வேதப் பிரமாணத்தினாலும் |
| குரவனருளினால் | —சற்குரு கடாக்ஷத்தினாலும் |
| அனுபூதியதனால் | —சுவானுபூதியினாலும் |
| ஞானமெய்ப் பொருளை | —சத்திய ஞானசொரூபத்தை |
| அறிந்திடும் அவரே | —அறியும் தீரர்களே |
| நலம்பெறு முத்தரானவர்கள் | —நன்மையுடைய முத்தராயினவர்கள் |
| ஊனம் அற்று | —களங்கம் இல்லாமல் |
| அந்தத் தற்பரம் | —அந்தப் பிரம்மசொரூபம் |
| விளங்க உணர்ந்திடப்பட்டது | —நன்றாக அறியப்பட்டது |
| என்றுணரில் | —என்றுணர்ந்தால் |
| தான் அனைத்தினுக்கும் | —தானே சகலசகத்துக்கும் |
| சாட்சியாம் பிரமம் | —சாட்சியாக விளங்குகின்ற பிரம்மமானது |
| தான் அறிபொருளுமாய் | —தன்னாலே அறியப்பட்ட பொருளுமாகி |
| அசத்தாம் | —அசத்துமாகிவிடும் |

**கருத்து**—தருக்கத்தினாலும் வேதப் பிரமாணத்தாலும், குருகடாட்சத்தாலும், ஸ்வானுபூதியினாலும், சத்திய ஞானசொரூபத்தை அறியும் தீரர்களே முத்தராவார்கள். கடாதி விருத்திகளுக்குச் சாட்சியாயிருப்பதுபோல புத்தி விருத்திக்கும் இயல்பாகவே சாட்சியாயிருப்பதைச் சாட்சியமாயறிந்து அதுவே வஸ்துவாக அறியப்பட்டிடில் அந்தப் பிரம்மம் ஜடமாகும். அங்ஙனமாயின் ஜடமான திரிசியமெல்லாம் திருக்கில் ஆரோபிதமானதால் அதற்குச் சுயம் வஸ்துத்தன்மை இல்லாததனால் அவன் அனுபவத்திற் பிரம்மமாகக்கொண்ட அது மித்தையேயாகும். (8)

### அவதாரிகை.

பிரம்மத்தைத் திரிசியமாய் அறியக்கூடாதெனவும் அப்படியே பிரம்மம் அனுபவத்துக்குவரினும் அதனைத் திரிசியமில்லாத் திருக்கு நான் என்று கர்த்தாவாகச் சுட்டக்கூடாதெனவும், குருசிஷ்ய சம்வாதத்தால் நிச்சயிக்கப்பட்ட பொருளைச் சுருதியானது 'எவனுக்குப் பிரம்மம் விஷயமாதும் அவனுக்கு விஷயமாகாதேனவும், எவன் மனத்திற்கு அவிஷயமோ அவனுக்கு விஷயமெனவும், எவனுடைய ஞானத்திற்கு அவிஷயமாக அறியப்பட்டதோ அவனது ஞானத்திற்கு விஷயமெனவும், எவனது ஞானத்திற்கு விஷயமோ அவனது ஞானத்திற்கு அவிஷயம்' எனவும் கூறிற்று. அவற்றின் பொருளைக் கூறுகின்றார்.

தனக்குமெய்ப் பிரமம் விஷயமா யிராமற் ருனதன் சாட்சியா யிராமற் றனிற்பிறி தறத்தா ஞகவப் பாத்தை யறிந்தவன் ருனறிந் தவனுந் தனிற்பிரிந் தறியா தவனறிந் தவனு மறிந்தவன் ருனறிந் திலனு முனற்கரும் பிரம முணர்ந்தவர்க் குணர்வன் றுணர்வுறூர் தமக்குணர்ந் ததுவாம்.

இதன் பொருள்.

| | |
|---|---|
| தனக்கு | —(அதிகாரியாகிய) தனக்கு |
| மெய்ப் பிரமம் | —உண்மையாகிய பிரம்மவஸ்துவானது |
| விடயமாயிராமல் | —விஷயமாயிராமலும் |
| தான் அதன் சாட்சியாய் இராமல் | தான் அந்தப் பிரம்மத்தை அறிகின்றவனுக இராமலும் |
| தனிற் பிறிது அற | —தன்னில் வேறில்லாமல் |
| தானுக அப்பாத்தை அறிந்தவன் தான் | தானுகவே அந்தப் பிரம்மத்தை எவன் அறிந்தவனே அவனே தான் |
| அறிந்தவனும் | —அறிந்தவனுகின்ருன் |
| தனிற்பிரிந்தறியாதவன் | —அந்தப் பிரம்மத்தைத் தன்னில் வேருகஅறியாதவன் |
| அறிந்தவனும் | —அறிந்தவனுவான் |
| அறிந்தவன் தான் | —இதற்கன்னியமாய் அறிந்தவன் |
| அறிந்திலனும் | —அறியாதவனுவான் |
| உனற்கு அரும் பிரம்மம் | —நினைக்கமுடியாத அந்தப் பிரம்மமானது |
| உணர்ந்தவர்க்கு உணர்வன்று | —(பேதித்து) அறிந்தவர்க்கு அறிந்ததல்ல |
| உணர்வுறூர் தமக்கு | —அவ்வண்ணம் பேதித்து அறியாதவர்களுக்கு |
| உணர்ந்ததுவாம் | —அறிந்ததாகும். |

**கருத்து**—அதிகாரியாகிய தனக்குப் பிரம்ம வஸ்துவானது விஷயமாயிராமலும், தான் அந்தப் பிரம்மத்தை அறிகின்றவனுக இராமலும், தன்னில் வேறில்லாமல் தானுகவே அந்தப் பிரம்மத்தை எவன் ஒருவன் அறிகின்ருனே அவன்தான் அறிந்தவனுகின்ருன். அந்தப் பிரம்மத்தைத் தனக்கு அன்னியமாயறியாதவனெவனே அவன் அறிந்தவன். அன்னியமாய் எவன் ஒருவன் அறிகிருனே அவன் அறியாதவன். அந்தப் பிரம்மம் பேதித்து அறிந்தவர்க்கு அறிந்ததல்ல. பேதித்தறியாதவர்களுக்கு அறிந்ததாகும்.

**பதசாரம்**—'தனக்கு மெய்ப் பிரமம் விடயமாயிராமற் றனதன் சாட்சியாயிராமற் றனிற்பிறிதறத் தானுகவப் பாத்தையறிந்தவன் றனறிந்தவனும்' என்பதனல் ஞானத்தினது தொழிலின் பலமாக இராமல் பிரத்தியக்குப் பிரகாசமான தானுகவே பிரம்மம் எவனுக்கு விளங்குகின்றதோ அவ்வனுபவத்தில் செய்வான், செய்தொழில் முதலியவை இல்லாததுபற்றி அனவச்சின்ன நிருபாதிகப் பிரம்மம் இயல்பாகவே அறியப்படும் என்பது விளங்கும்.

'தனிற்பிறிந்தறியா தவனறிந்தவனும்' என்றதனால், எந்தச் சாதகனுக்கு ஆன்ம பூதமான பிரம்மம் மனோவிருத்தியினால் விஷயீகரிக்கப்படாமல் கேவலம் சொரூபப்பிரகாசமாகவே விளங்குகின்றதோ அவன் பிரம்மத்தை அறிந்தவன் என்பதும், 'அறிந்தவன் றனறிந்திலனும்' என்பதனால் தடஸ்த கற்பனா மனோ விருத்தியினாலேனும் சுட்டி அறியின் அவன் மனம் உள்ளபடி அனுபவமுடைய தாக விளங்காததனால் அவனது மனத்திற்கு அவிஷயம் என்பதும், 'உணர் கரும்பிரமமுணர்ந்தவர்க் குணர்வன்று' என்பதனால், பிரம்மத்தை நாங்கள் அறிந் தோமென்று புத்திவிருத்தியுடன் கூடியதாக அறிந்தவர்களுக்கு அகப்படாது என்பதும், 'உணர்வுறுர் தமக்குணர்ந்ததுவாம்' என்பது, அவ்வித ஞானவிருத்தி யில் பிரகாசிக்கின்ற பிரகாசம் ஆன்மப் பிரகாசமேயாதலால் அதில் விகாரமில் லாததனால் அந்தப்பிரகாசமும் தனக்கு வேறாதலால் பிரகாசானுபவ மாத்திரமாக வே விளங்குகின்றவனது புத்தி உள்ளபடி அனுபவமுடையதாக விளங்குவதனால் அவனது புத்திக்கு எட்டும் என்பதும் விளங்கும். (9)

### அவதாரிகை.

பிரம்மம் எவன் மனத்திற்கு அவிஷயமோ அவன் மனத்திற்கு விஷயம் என்றால் ஒன்றுக்கொன்று விரோதப்படும் என்று சங்கித்து, அதன்பொருளைத் தெளிவாகத்தெரிய, போதந்தோறும் அறியப்பட்டிடின் மோட்சத்தை அடை கின்றான் என்று சுருதியின் பொருளைக் கூறுகின்றார்.

### வேறு.

பித்தா ஞானம் கடஞானம் பிரம ஞான மெனுமிவற்றிற்
கத்தா வன்று பரப்பிரமங் கன்மந் தானு மன்றுவெறுஞ்
சித்தா மிதனைத் தெரியாமற் கத்தா வாகச் சிந்தித்தல்
பித்தா மகர்த்தா வாயறியப் பெற்றா னறியப் பெற்றானும்.

### இதன் பொருள்.

பித்து ஆம் ஞானம் —பிராந்தி ஆகின்ற ஞானம்
கடஞானம் பிரமஞானம் —கடஞானம் பிரம்மஞானம்
எனும் இவற்றில் —என்று சொல்லும் இவைகளுக்குள்
பரப்பிரமம் —பரப்பிரம்மமானது
கத்தா அன்று கன்மந்தானும் அன்று—கர்த்தாவும் அன்று கருமமும் அன்று
வெறுஞ் சித்தாம் —கேவலம் சின்மாத்திரமாகும்
இதனைத் தெரியாமல் —இந்தப் பிரம்மத்தை அறியாமல்
கத்தாவாகச் சிந்தித்தல் பித்தாம்—கருத்தாவாக நினைப்பது பிராந்தியாகும்
அகர்த்தாவாய் அறியப்பெற்றான்—(எவன்) கருத்திருத்துவத் தன்மை இல்லாத தாக அறியப் பெற்றவனோ (அவனே)
அறியப்பெற்றானும் —அறியப்பெற்றவனாகின்றான்.

**கருத்து**—பிரம்மஞானத்திலும், கடஞானத்திலும், பிராந்தி ஞானத்திலும், பிரம்மம் கர்த்தாவுமல்லாமல், கர்மமும் இல்லாமல் கேவலம் சித்தாயிருக்கிறது. எவன் அகர்த்தாவாகிய பிரம்மத்தைக் கர்த்தாவாக எண்ணுகிறானோ அவன் பிரம்மத்தை உள்ளவாறு அறிந்தவன் இல்லை.

**பதசாரம்**—பிராதிபாசிகமான சுத்திரசதாதி விஷயமாம் பிராந்தி ஞானத்தைப் '**பித்தாஞானம்**' எனவும், வியவகாரிகசத்தியப் பொருளாகிய கடாதி விஷயமான விழி முதலிய சம்பந்தத்தால் உண்டாகிய ஞானத்தைக்'**கடஞானம்**' எனவும், சிரவணமனனாதி சாதனத்தாலுண்டாகிய உபாதியில்லாத பாமார்த்தமான பரம விஷயமாம் ஞானத்தைப் '**பிரமஞானம்**' எனவும், பிராதிபாசிக முதலிய சகல விருத்தி ஞானங்களிலும் தானாக இருக்கின்ற சிதேகரசமான நிருபாதிகப் பிரம்மம் விகாரப்படாமையால் கருத்தாவாயும் கருமமாயும் ஆகாதாதலான் இது என்று குறிக்கப்பட்ட அனைத்தையும் சின்மாத்திரமான சாட்சிரூபமாக விளங்குவிக்கின்ற ஸ்வப்பிரகாச ஞானமேதான் என்பது விளங்க '**இவற்றிற் கத்தாவன்று பாப்பிரமங் கர்மந்தானுமன்று வெறுஞ் சித்தாம்**' எனவும், சகலத்திலும் இருந்து விளங்கும் இச்சொரூபஞானம் இயல்பாகவே அகர்த்தாவாயிருக்க அதனைக் கர்த்தாவாக அறிதல் விபரீத ஞானமாதலால் அந்த ஞானத்தைச் '**சித்தாமிதனைத் தெரியாமல் கத்தாவாகச் சிந்தித்தல் பித்தாம்**' எனவும் புருஷதந்திரமில்லாமல் வஸ்துவின் இயல்பின் பிரகாரமே வஸ்து தந்திரமாகிய அகர்த்தாவாய் அறிந்த ஞானம் உண்மைஞானம் ஆதலால் அந்த ஞானவானை '**அகர்த்தாவாயறியப் பெற்றானறியப்பெற்றானும்**' எனவும் கூறினர். (10)

அவதாரிகை.

போதந்தோறும் அறியப்பட்டிடின் மோட்சத்தை அடைகின்றான்என்ற அந்தச் சுருதியின் முக்கிய தாத்பரியமான வேதனப் பிரகாரத்தைக் கூறுகின்றார்.

தர்க்க மானந் தானொழியத் தானு யுள்ள பேரொளியை
மிக்க கருத்தா வாகுதலும் விடய மாகு தலுமொழியப்
பொக்க மறவே றறக்கண்ட பொழுது புரைதீர் பொருளான
தக்க பிரம தத்துவத்தைக் கண்டா னருந் தானாக.

இதன் பொருள்.

| | |
|---|---|
| தர்க்கமானந் தானொழிய | —தர்க்கம் வேதப் பிரமாணம் இவைகள் நீங்க |
| தானுயுள்ள பேரொளியை | —சுயமாகவே விளங்குகின்ற பிரம்மத்தை |
| மிக்க கருத்தா ஆகுதலும் | —மிகவும் கருத்தா ஆதலும் |
| விடயமாகுதலும் ஒழிய | —விஷயமாதலும் நீங்க |
| பொக்கம் அற வேறு அற | —பொய்யில்லாமலும் அன்னியமில்லாமலும் |
| கண்டபொழுது | —காணும்பொழுது |
| புரைதீர் பொருளான | —குற்றம் நீங்கிய பொருளாய் விளங்கிய |

தக்க பிரமதத்துவத்தை —தகுந்த பிரம்ம தத்துவத்தை
தானாக கண்டானாகும் —தானாகவே கண்டவனாவான்.

கருத்து—சிரவணத்தால் உண்டான மனனவிருத்தியும், சிரவணித்த வேத வாக்கியத்தின் வாச்சிய விருத்தியும் நீங்க, இயல்பாகவே அகர்த்தாவாயும், அகர்ம மாயுமுள்ள பிரத்தியகான்மப் பிரகாசத்தை அன்னியமில்லாமற் கண்டபொழுது ஆத்மதத்துவம் தானாகவே விளங்கும். (11)

அவதாரிகை.

இவ்வித நிருபாதிக சொப்பிரகாச ஞானமாக விளங்குகின்ற சுபாவமே பிரம்மவித்து என்றதின் பொருளாக அறியாமல் அபரோட்ச சமயத்தில் அங்ஙனம் கூறியபடி நிருபாதிகம்போல் விளங்கிய ஒருவிருத்தியில் பிரம்மத்தைக் குறித் திடின் அது பிரம்மம் அன்று எனக் கூறுகின்றார்.

வேறு.

நோக்குரு தமெய்ஞ் ஞானமுங் காட்சியாய் நோக்கவும் பட்டுத்தான்
சாக்கி யாயறிந் திடுபவ னெங்ஙனே தத்துவ வித்தானன்
றாக்கிலாப் பர விச்சையுஞ் சனிக்குமேற் சடமதாங் கடம்போலப்
பார்க்கி லந்தவிச் சையின் புணர்ப் பாலுணர் பொருளதாம் பான்றானும்.

இதன் பொருள்.

நோக்குருதமெஞ் ஞானமும் —திரிசியப்படாத இந்தப் பிரம்ம ஞானமும்
காட்சியாய் நோக்கவும்பட்டு —திரிசியமாய்ப் பார்க்கவும்பட்டு
தான் சாக்கியாய் அறிந்திடுபவன்—தான் சாட்சியாயும் இருந்து அறிபவன்
எங்ஙனேதத்துவவித்தானன் —எங்கே பிரம்மசொரூபத்தை அறிந்தவனாயினான்
தாக்கிலா —சம்பந்தமில்லாத
பரவிச்சையும் சனிக்குமேல் —பரஞானமும் ஜனிக்குமானால்
கடம்போல சடமதாம் —கடவஸ்துப்போல ஜடமாய்விடும்
பார்க்கின் —கூர்ந்து பார்த்திடில்
அந்த விச்சையின் புணர்ப்பால் —அந்தத் திரிசிய ஞானத்தின் சம்பந்தத்தால்
பான்றானும் உணர்பொருளதாம்—பரமசிவமும் திரிசியமாயறிகின்ற வஸ்தாகும்.

கருத்து—திரிசியப்படாத இந்தப் பிரம்மஞானம் திரிசியமாய் ஒருவனுக்குப் புலப்பட்டு அதற்கு அவன் சாட்சியாயுமிருப்பானாகில் அவன் எவ்வாறு பிரம்ம சொரூபத்தை அறிந்தவனாவான்? அப்படிப் பரஞானம்ஜனிக்குமானால் கடம்போல் ஜடமாய்விடும். இன்னும் நன்கு கவனித்தால் அந்தத் திரிசிய ஞானத்தின் சம்பந்தத்தால் அறியமுடியாத பிரம்மமும் அறியப்பட்டதாகும்.

**பதசாரம்**—பிரம்மாபரோட்சானுபவமின்றி ஜீவத்துவம் நிவர்த்தி அடையாததனுல், பரோட்சமென்பது வஸ்துவையிட்ட நிர்ணயஞானுனுபவமாதலால் வஸ்து நிச்சய ஞானமுண்டாகியே அபரோட்சானுபவம் உண்டாகவேண்டும். ஆதலால், பிரம்மத்தை நிர்ணயப்படுத்தி அபரோட்சிகரிக்கத் தக்கதாகப் பிரம்ம ஞானம் ஜனிக்கின்றதெனில், ஜன்னியமெல்லாம் திரிசியமாதலால் ஜடமாகிக் கடத்திற்குச் சமானமாகுமென்பதுதோன்றத் '**தாக்கிலாப்பா விச்சையும் சனித்து மேல் சடமதாங்கடம்போல**' எனவும், எது திரிசிய சம்பந்தமுடையதோ அது திரிசியமேயாகும். ஆதலால் திரிசியமான ஞானசம்பந்தத்தால் பிரம்மமும் திரிசியமாய்விடும் என்பதுதோன்ற '**பார்க்கிலந்த விச்சையின் புணர்ப்பால் உணர் பொருளதாம் பரன்றனும்**' எனவும் கூறினர். (12)

அவதாரிகை.

வித்தியாசம்பந்தத்தால் பிரம்மம் சவிசேஷமாகும். நிர்விசேஷமாயிருக்கும் பிரமத்தை அவ்வாறு சவிசேஷமாக அறிந்தவன் பிரம்மவித்தாகான் எனவும், பிரம்மம் வித்தைக்கு ஆசிரியமாயும் விஷயமாயும் இராது எனவும் கூறுகின்றார்.

வேறு.

விச்சை யுள்ளவன் விசேடவா னும்பர தத்துவ மவிசேடம்
விச்சை யுள்ளவ னுதலாற் றத்துவ வித்தலன் விச்சைக்கண்
துச்ச முற்றுள தாகுதல் விஷயமாய்த் தோன்றுதல் செய்யாது
சச்சி தானந்த மப்படி யிராதெனிற் றற்பர மாமோதான்.

இதன் பொருள்.

விச்சையுள்ளவன் விசேடவானும்—பரவித்தையுடையவன் சவிசேஷனுவான்

| | |
|---|---|
| பரதத்துவம் அவிசேடம் | —பிரம்மம் நிர்விசேஷம் |
| ஆதலால் | —ஆகையால் |
| விச்சையுள்ளவன் | —இந்தப் பரவித்தையுடையவன் |
| தத்துவவித்தலன் | —ஆத்துமவித்தாகான் (இந்தப் பிரம்மமானது) |
| விச்சைக்கண் துச்சம் உற்று உளதாகுதல் | } வித்தையினிடத்தில் கீழ்மைபொருந்தி அதற்கு ஆசிரயமாயாகுதலும் |

விடயமாய்த் தோன்றுதல் செய்யாது—விஷயமாகக் காண்பதும் ஆகமாட்டாது

| | |
|---|---|
| சச்சிதானந்தம் அப்படி இராதெனில் | } சச்சிதானந்தமான அந்த வஸ்து அவ்வாறு இராவிடின் |
| தற்பரமாமோ | —எப்படிப் பிரம்மமாகும்? (ஆகாது) |

**கருத்து**—பரவித்தையுடையவன் சவிசேஷனுவான். பிரம்மம் நிர்விசேஷமானதால் இவன் ஆத்மவித்தாகான். பிரம்மம் வித்தைக்கு ஆசிரயமாயும் விஷயமாயும் ஆகாது. சச்சிதானந்தமாகிய அந்த வஸ்து அப்படி வித்தைக்கு ஆசிரய விஷயமாகாமல் இராவிடின் எப்படிப் பிரம்மமாகும். ஆக மாட்டாது.

பதசாரம்—விச்சையின் சம்பந்தமாத்திரத்தால் கடம்போல் என்று கூறக்கூடாது. பிரம்மரூபம் ஞானகாரமாக அனுபவிக்கப்படுவதனுல் என்னில், திரிசியமான விஞ்ஞானத்தோடும் சம்பந்தப்படுவதனுல் அச்சம்பந்தத்தால் தானன வஸ்து சவிசேஷமாய்விடும் என்பார், **'விச்சையுள்ளவன் விசேடவானும்'** எனவும், சவிசேஷமாயினும் பரவஸ்துவான பிரம்மமாக ஏன் ஆகக்கூடாதெனில் பரவஸ்து இயல்பாகவே நிர்விசேஷமானதால் சவிசேஷமாகாது என்பது விளங்கப், **'பரதத்துவ மவிசேடம்'** எனவும், வஸ்துவின் இயல்பு நிர்விசேஷமாயிருக்க அதனைச் சவிசேஷப்படுத்தி வேருக அறிந்ததனுல் அத்தகைய ஞானமெல்லாம் அனுன்மவிஷய ஞானமாதலால் அந்த ஞானமுடையவன் எங்ஙனம் ஆன்மவித்தாகலாம்? என்பது விளங்க **'விச்சையுள்ளவனுதலால் தத்துவவித்தலன்'** எனவும், வித்தைக்குவிஷயம் என்னில் கூறிய தூஷணம் வரும். ஆசிரயமாகலாமெனில் ஆசிரயம் என்பதும், விஷயம் என்பதும் ஒன்றேதான். ஏனெனில், ஆசிரயியினுடைய சம்பந்தத்தைக்கொண்டே ஆசிரயமெனக் கூறவேண்டும். அப்படியானுல் சம்பந்தமெல்லாம் விகாரவஸ்துக்களையே பற்றியுள்ளது. விஷயம் என்பது அங்ஙனமே ஆகின்றது. அங்ஙனமாயின் எது விகாரியோ அது ஜடமாம். எது ஜடமோ அது அனுன்ம வஸ்துவாகும். ஆதலால் விச்சைக்குப் பிரம்மம் ஆசிரயமாயும், விஷயமாயும் ஆகத்தகாது என்பது விளங்க **'விச்சைக்கண் துச்சமுற்றுளதாகுதல் விஷயமாய்த் தோன்றுதல் செய்யாது'** எனவும், பிரம்மம் விச்சைக்கு விஷயமாயேனும், ஆசிரயமாயேனும், கருத்தா கருமமாயேனும் இருக்குமென்னில் சுருதி கூறிய திரிவித பரிச்சேத சூனிய சச்சிதானந்தமாம் பரப்பிரம்ம வஸ்துவாகாது என்பது விளங்கச் **'சச்சிதானந்தமப்படியிராதெனிற் றற்பரமாமோ தான்'** எனவும் கூறினுர். (13)

### அவதாரிகை.

பிரம்மம் அசங்கியாயிருத்தலால் விச்சைக்கு ஆசிரயமுமன்று, விஷயமுமன்று, கருத்தாவுமன்று, கருமமு மன்று எனவாயிற்று. அப்படியானுல் அதிகாரி எங்ஙனம் வேத்தா ஆவான் என்னில் ஆசிரயம், விஷயம், கருத்திரு, கர்மம், இவைகளாக இராமல் வேத்தா ஆவான் என்று கூறுகின்ருர்.

### வேறு.

ஆதலால் விஞ்சை யாலறி வுறுதற் காவதன் றுகிலப் பராந்தா
னேதினு லறியப் படுமறி வுறுதற் கேவனு லாமிமை யவர்காள்
காதலாற் பரத்திற் கற்பித மாயை கழியுமேற் பரம்பரன் கண்ணே
ரேதமா மாயை யில்லையுண் டாகி லிருக்குமோ விரவிமுன் னிருடான்.

### இதன் பொருள்.

ஆதலால் —(அவித்தையானது பிரம்ம சம்பந்தியில்லாதது) ஆகையால்

விஞ்சையால் அறிவுறுதற்கு ஆவது அன்று ஆகில் } பிரம்மம் ஞானத்தினுல் அறியப்படுவதல்லவானுல்

அப்பராந்தான் —அப்பிரம்மமானது

| | |
|---|---|
| எதினல் அறியப்படும் | —எதனுலே தான் அறியப்படும் |
| இமையவர்காள் | —தேவர்களே |
| எவனல் அறிவுறுதற்கு ஆகும் | —எவனுலேதான் அறியலாகும் (எனில்) |
| காதலால் பரத்தில் | —மிகுந்த ஆசையினுல் பிரம்மத்தின்கண் |
| கற்பிதமாயை | —அத்தியாசிக்கப்பட்ட மாயையானது |
| கழியுமேல் | —ஞானத்தினுல் நீங்குமேல் |
| பரம்பரன்கண் | —பிரத்தியேகான்மாவினிடத்தில் |
| ஓர் ஏதமா மாயையில்லை | —ஒரு குற்றமுடைய இருளாகிய மாயைக்குச் சம்பந்தம் இல்லை |
| உண்டாகில் | —உங்கள் மதிக்கேற்க உண்டாயிருக்குமானுல் |
| இரவிமுன் இருள் இருக்குமோ | —சூரியன் முன்பு இருட்டானது இருக்குமா. |

**பதசாரம்**—பிரம்மம் பரிச்சேதமில்லாமல் அசங்கியாயிருத்தலால் விச்சை பிரம்ம சம்பந்தமுடையதாகாது. ஆகையால் விச்சையால் பிரம்மம் அறியக்கூடாததாகும். அங்ஙனமாயின் மற்றெதனுல் அறியப்படும்? ஒன்றினுலும் அறியப்படாதென்பார், '**ஆதலால் விச்சை யாலறி வுறுதற் காவதன் றகிலப் பரந்தா னேதினு லறியப் படும்**' எனவும், இங்ஙனம் அறியக்கூடாததாகில் ஒருவனும் வேத்தா ஆகமாட்டான். தனது ஞானத்தால் அறியப்படினும் வேத்தாவாகான்; முன் கூறியபடி வஸ்து விஷயமாகிப் பிரம்மசத்தார்த்தமுடையதாகவே சித்தியாமல் அவஸ்துவாய்விடும். ஆதலால் சுருதியில் பிரம்மவித்து பிரம்மமாகின்றுன் என்றபடி அபரோட்சமாய்ப் பிரம்மமாகவே பிரகாசிக்கின்றுனேயன்றி வேத்தாவாகின்றதில்லை என்பார், '**அறிவுறுதற் கேவனுலாம்**' என்வும், சொப்பிரகாச பிரம்மத்தைப் பிரகாசிப்பிக்க வல்லமை இலாததாயினும் அவித்தியாநிவர்த்தியை உண்டு பண்ணவேணும் விச்சையின் சம்பந்தம் ஒப்பவேண்டுமெனில், அங்ஙனம் அஞ்ஞானமாகியமாயையை விச்சையானது நீக்குமானுல் கூடலாம்; நீக்காவிடின் கூடாது என்பார், '**பரத்திற் கற்பிதமாயை கழியுமேல்**' எனவும், விச்சை என் அவித்தையை நிவர்த்திசெய்யாது என்னில் பிரத்தியக்கு சொரூபமாகவே சாட்சாத்காரமாய் விளங்கிய குற்றமற்ற பிரம்மத்தில், மாயை, அதன் காரியம் இவற்றின் சம்பந்தமென்பதே இல்லாததனுல், இல்லாததனை நிவிர்த்தி செய்ததெனக் கூற ஒவ்வாததுபற்றி விசாரிக்கில் விச்சை அவித்தையை நிவிர்த்தி செய்யாதென்பார், '**பரம்பரன் கண்ணே ரேதமா மாயையில்லை**' எனவும், அஞ்ஞானத்தால் சொரூபஞானம் மறைபட்டு அதனுல் அனைவர்களும் மோகிக்கின்றுர்கள் எனச் சாஸ்திரங்கள் கூறுவதனுல் எங்ஙனம் மாயையை இல்லையெனலாமெனில் அதுவும் விசாரமில்லாத குற்றமேயன்றி வேறில்லை. எங்ஙனமெனில் திரிவித பரிச்சேதமில்லாத சுயம் ஜோதியான பிரம்மத்தை அந்தகாரமாயை எவ்வாறு மறைக்கும்? சொப்பிரகாச ஆன்மா அத்துவிதனுகவே எவ்விடத்தும் எப்போதும் பிரகாசித்திருக்க இரவிமுன் இருள்போல் மாயையாகிய இருள் உதிக்கமாட்டாது என்பார், '**உண்டாகி லிருக்குமோ விரவிமுன் னிருடான்**' எனவும் கூறினுர். (14)

## அவதாரிகை.

பரமார்த்தமாக மாயை சொரூபத்தில் இல்லாததனால் அதனை நீக்கவேண்டி விச்சை வேண்டுவதும் இல்லையென்பதையே சுருதியுக்தி அனுபவம் இவற்றால் உறுதிப்படுத்தினர். பிரம்மசொரூபத்தை அடைவதற்கு விச்சையால் பிரயோசனமில்லை என்னில், சுருதியில் 'பிரம்மவித்து பரத்தை அடைகின்றான். பிரம்மத்தை அறிந்தவன் பிரம்மமாகவே ஆகின்றான். எதனால் அட்சரவஸ்து அடையப்படுகின்றதோ அது பராவித்தை' என்று சொல்லப்பட்டிருக்கின்றதே, அது உபயோகமில்லாமற் போய்விடுமே என்று சங்கிக்க, அங்ஙனம் வித்தை அவித்தை என்றது உலகவிவகாரத்தை அனுசரித்துக் கூறியதேயன்றி உண்மையில் இல்லையென்று சமாதானம்கூறி வியாவகாரிகமாயேனும் அவைகளை ஒப்பவேண்டுமன்றோ? அப்படி ஒப்பிடில் வஸ்து துவிதப்படும் என்று சங்கித்து, விவகாரம் என்பதும் பிரகாசிப்பது கொண்டு பிரம்மரூபப் பிரகாசமேயாதலால் எப்போதும் அத்துவிதமேதான் உள்ளதென்று கூறுகின்றார்.

ஆதலான் மாயை தார்க்கமா னத்தா லானுபா வத்தினாற் றானே
சோதிஞா னச்சித் கனச்சுடர் முன்னர்த் தோன்றிடா தவிச்சைவிச் சைகடா
மோதுமாத் திரமா முலகுரை வழக்கத் துள்ளன வுண்மையி லில்லை
யேதமா முலக வழக்குமு மொளியா யிலங்கலா லபேதமே யென்றும்.

## இதன் பொருள்.

| | |
|---|---|
| ஆதலால் | —ஆகையினால் |
| தார்க்கமானத்தால் | —தார்க்கப் பிரமாணங்களாலும் |
| அனுபாவத்தினால் | —சுவானுபூதியினாலும் |
| மாயை தானே | —மாயை என்பது சுயமாகவே |
| சோதிஞானச் சித்கனச்சுடர் முன்னர் | ஞானப்பிரகாச சித்கன பரமான்மாவின் முன்பு |
| தோன்றிடாது | —உண்டாகமாட்டாது |
| அவிச்சை விச்சைகள் | —அவித்தை, வித்தையென்னும் இவ்விரண்டும் |
| ஓது மாத்திரமேயாம் | —சொல்லளவேயாகிய |
| உலகுரைவழக்கத்துள்ளன | —உலகவிவகார வழக்கத்தில் இருக்கின்றனவாம் |
| உண்மையில் இல்லை | —பாரமார்த்திக திருஷ்டியில் இல்லையாம் |
| ஏதமாம் உலக வழக்குமும் | —குற்றமாகிய லோகவிவகாரமும் |
| ஒளியாய் இலங்கலால் | —ஆன்மப் பிரகாசமாகவே விளங்குவதனால் |
| என்றும் அபேதமே | —எப்பொழுதும் அத்துவிதந்தான். |

**கருத்து**—தார்க்கப் பிரமாணங்களினாலும், சுவானுபூதியினாலும் மாயை என்பது ஞானப்பிரகாச சித்கன பரமான்மாமுன்பு தோன்றமாட்டாது. பரமார்த்தமாகப் பிரம்மம் அசங்கப்பொருளாதலால் அவித்தையின் சம்பந்தமின்றி மற்-

றெல்லாவற்றையும் விஷயீகரிக்கும் புத்திவிருத்திகளனைத்தையும் விளங்குவிக்கின்ற சாட்சி சிற்பிரகாசமாய் மிஞ்சுதலால் சொப்பிரகாசமான அத்துவிதமே பிரமமென்ருராகலின் விருத்திதோறும் அறியப்படின் அறியப்படுமென்ற சுருதிக்குப் பொருள் கூறினுரென்றறிக.

**பதசாரம்**—விவகார மாத்திரமாயுள்ள மாயாகற்பிதமான பிரபஞ்சத்தை அனுசரித்தே பிரத்தியட்சாதி பிரமாணங்கள் பிரவிர்த்திக்கின்றன. அப்படியே பிரபஞ்சவிவகார திருஷ்டியினுலேயே சுருதியும் அவித்தியா நிவர்த்தியின் பொருட்டு விச்சையைக்கூறுகின்றது. ஆதலால் வித்தை அவித்தை இரண்டும் விவகாரமாத்திரமாயுள்ளன என்பார், **'அவிச்சை விச்சைகடா ஞேது மாத்திரமா மூலதுரை வழக்கத்துள்ளன'** எனவும், கடபடாதி சகல மனோவிருத்திகளினும் சாட்சி சித்பிரகாசனுக இருந்து பிரகாசிக்கச் செய்வதனுல் வியபிசரிக்கப்படாமல் இடைவிடாததாகித் தான் இதரம் என்ற விவகாரத்துக்கு ஏதுவான பிரகாசரூபமான பிரம்மத்தில் இதரம் என்னும் அங்கிசத்தில் சற்பம் போல சிலகாலத்தில் காணப்பட்டும், சிலகாலத்தில் காணப்படாததாயுமுள்ள வியபிசாரமுடைய பிரபஞ்சம் கற்பிதமானதுகொண்டு மித்தையானதனுல், அதிஷ்டானமாகிய தன் பிரகாசத்துக்கு வேறு இல்லாததாகி எப்போதும் அத்துவிதமாம் பிரம்மமேயுளது என்பார், **'ஏதமாழலக வழக்கழ மொளியா யிலங்கலா லபேதமே'** எனவும் கூறினர். (15)

### அவதாரிகை.

அத்துவிதம் என்பதும் துவிதநிஷேதமான விசேஷமுடையதாதலால் பிரம்மம் நிர்விசேஷமாய் எங்ஙனம் சித்திக்கும் என்று சங்கித்துக் கூறுகின்ருர்.

வேறிலத் துவித மென்பது மொளியில் வேறிலா மையிலுள தொளியே
கூறலற் றிடலா லிப்பொருள் கூடுங் கூடுவ தளவையி னுனு
மூறிறக் கத்தான் மறைகளாற் குரவ னுபதேசத் தாலிறை யருளா
லீறின்மா தவத்தாற் காலபா கத்தா லப்பொருள் புருடனுக் கெய்தும்.

### இதன் பொருள்.

| | |
|---|---|
| வேறிலத் துவித மென்பதும் | —பின்னமில்லாத அத்துவிதம் என்பதும் |
| ஒளியில் வேறு இலாமையில் | —ஆன்மப் பிரகாசத்துக்கு வேருக இல்லாததனுல் |
| உளது ஒளியே | —எப்பொழுதும் உள்ளது (அந்தப்) பிரகாசமேதான் |
| இப்பொருள் | —இந்தப் பொருளானது |
| கூறல் அற்றிடலால் கூடும் | —மௌனத்தினுல் ஒருவனுக்குச் சித்திக்கும் |
| கூடுவது | —அப்படிச் சித்திப்பதும் |
| அளவையினுலும் | —பிரத்தியட்ச முதலிய பிரமாணங்களாலும் |
| ஊறு இல் | —குற்றம் இல்லாத |

தர்க்கத்தால் மறைகளால் —தருக்கத்திஞலும் சுருதிகளாலும்
குரவன் உபதேசத்தால் —ஆசாரியனுபதேசத்திஞலும்
இறையருளால் —ஈசுவர கிருபையாலும்
ஈறு இல் மாதவத்தால் —(பல ஜன்மங்களிற்செய்த) அழிவில்லாத பெருமை பொருந்திய தவத்தாலும்
காலபாகத்தால் —காலபரிபாகத்திஞலும்
அப்பொருள் —அந்த (மகத்தாயுள்ள சிவரூபமாகிய)பொருளானது
புருடனுக்கு எய்தும் —ஒரு (புண்ணிய) புருஷனுக்குச்சித்திக்கும்.

**பதசாரம்**—துவித நிஷேத விருத்தியாம் அத்துவிதம் என்ற விவகாரமும் பிரகாசிப்பதுகொண்டு முற்கூறிய பிரகாரம் பிரகாசத்துக்கு வேறில்லாமையாலும், அபரோட்ச சமயத்தில் துவிதம்போல் தாஞகவே நீங்கிக் கேவலம் பிரகாசமே சேஷித்துவிடுவதஞலும் எப்போதும் பிரகாசமேதான் இருக்கிறதென்பார், **'வேறிலத்துவிதமென்பது மோளியில் வேறிலாமையிலுள தோளியே'** எனவும், கேவலம் சிற்பிரகாச ஆன்மாவாகிய பிரம்மம் வாக்குமனங்களால் விஷயீகரிக்கப்படின், அந்தந்த உபாதியை உடையதாய்விடும். ஆகையால், மனத்தோடும்கூடச் சுரோத்திரம் முதலிய இந்திரியங்களைத் தத்தம் விஷயங்களினின்றும் நிவர்த்தித்து அந்தர்முகப்படுத்திட விட்சேப வாசனை இல்லாததாகி அந்தக்கரணம் பிரசன்னமாகும். அவ்விடத்து அதனைப்பிரகாசிப்பிக்கின்ற பிரத்தியக்கு சைதன்னியமாம் பிரம்மம் தாஞகவே பிரகாசிக்கின்றது. ஆதலால் மௌனமாம் இதுவே முடிவான பிரம்மப் பிராப்தியினுபாயமென்பார், **'கூறலற்றிடலா லிப்பொருள்கூடும்'** எனவும், மௌனமாத்திரமாயின் பிரமோபதேசம் எல்லாருக்கும் சுலபமாகி விடலாமே எனின் அதன் சித்தியின்பொருட்டு இது சுலபம் அன்று, மகத்தாயுள்ளது; மிகுந்த சாதனங்களின்றிக் கிட்டாதென்பார் எதிர்மறைமுகத்தால், **'கூடுவ தளவையினலு மூறிறர்க்கத்தால்'** எனவும் கூறிஞர். ஆதலால், தருக்கம் சுருதி, குருஉபதேசம், ஈஸ்வரகடாட்சம், தவம், கால பரிபக்குவம் முதலிய சாதனங்களின்றிக் கிட்டாது. (16)

அவதாரிகை.

முன்ஜன்மாக்களில் வர்ணுச்சிரம தர்மம் முதலியவற்ருல் பரமேசுவரனை நன்ருயாராதித்து அவனது திருவருளை அடைந்த சாதன சதுஷ்டயமுடைய முமூக்ஷுவான அபூர்வவாஞயுள்ள ஒரு புருஷனுக்கே மிக சூக்ஷுமமாதலால் அதிகம்பீரமுடைய இந்தப்பொருள் பிரகாசிக்கின்றதென முன்செய்யுளில்கூறி, சுருதியில் **'அமிர்தத் தன்மையை அல்லவா அடைகின்றன்'** என்றது முதலியவைகளால் இதரசாதனங்களின் உதவியின்றி உள்ளபடி உண்மையான ஞானத்துக்கு யாதொரு மோட்ச சாதனத்தன்மை கூறப்படுகிறதோ அதனைக்கூறுகின்ருர்'

வேறு.

ஓது மிப்பரம் பெரும்பொரு ளுணர்ந்தவன் செய்வ
தேது மில்லைஞா னமுமிலை யிரண்டிலா மையினல்
நீதி வன்னவாச் சிரமமு நிடேதமும் விதியுஞ்
சாதி நல்வினை தீவினை சகலமு மிலதே.

இதன் பொருள்.

| | |
|---|---|
| ஓதும் | —இப்பொழுது சொல்லப்பட்ட |
| இப்பரம்பெரும்பொருள் | —மேலான இந்தப் பரவஸ்துவை |
| உணர்ந்தவன் | —சுவானுபூதியால் அறிந்தவன் எவனே அவனுக்கு |
| செய்வது ஏதும் இல்லை | —செய்யத்தக்க கருமம் யாதொன்றும் இல்லை |
| இரண்டிலாமையினல் | —(அவனுக்குத்) துவிதம் இல்லாமையினல் |
| ஞானமும் இல்லை | —(அனுசந்தானத்திற்கு உபகாரமான பிரம்மாகார விருத்தி) ஞானமும் இல்லை |
| நீதிவன்ன வாச்சிரமும் | —நீதியும் வர்ணச்சிரம தருமமும் |
| நிடேதமும் விதியும் | —விலக்கும் விதியும் |
| சாதி நல்வினை தீவினை | —சாதியும் புண்ணியமும் பாவமும் |
| சகலமும் இலது | —மற்ற அனைத்தும் இல்லை. |

**கருத்து**—வித்துவானுக்கு அத்துவிதப் பிரம்ம சாட்சாத்காரத்தால் சாதனமான ஞானகரும முதலிய எல்லாம் தோற்ருமையால் அவற்றில் அதிகாரமில்லை.

அவதாரிகை.

கேவலம் பேதத்தால் உபஜீவித்துப் பிரவர்த்தமான சகல விவகாரமும் அவ்வித்துவானுக்கு இல்லையென்று முற்கவியில்கூறிச் சுருதியில் 'ஆன்மாவினல் வீரியத்தை அடைகின்றன்' என்று சொல்லப்பட்ட பொருளைக் கூறுகின்ருர்.

வேறு.

இந்தப் பரமாம் பொருளிறைவ னருளா லியாவன் பெறுமவன்ரு
னந்தப் பரம னேயென்ற னறிவிற் றிகழ்வ தவன்பெருமை
சிந்தித் திடவொன் ணுதென்னுற் செய்யப் படுமத் தேவர்களாற்
சந்தப் படுமா லாலனுற் சாற்றுந் தன்மை சாராதால்.

இதன் பொருள்.

| | |
|---|---|
| இந்தப் பரமாம் பொருள் | —இந்த மகத்தாகிய பிரம்மவஸ்துவை |
| இறைவன் அருளால் | —சிவப்பிரசாதத்தால் |
| யாவன்பெறும் அவன் தான் | —எவன் அடைகின்ருனே அந்த மகான் |

| | |
|---|---|
| அந்தப் பரமனே என்று | —அந்தச் சம்புவே என்று |
| என் அறிவில் திகழ்வது | —என்னுடைய அறிவில் விளங்குகின்றது |
| அவன் பெருமை | —அவனுடைய மகிமையை |
| என்னால் சிந்தித்திட ஒண்ணாது | —என்னாலும் நினைத்து அளவிடுதற்குமுடியாது |
| செய்யப்படுமத்தேவர்களால் | —(என்னால்) சிருஷ்டிக்கப்பட்ட அத்தேவர்களாலும் |
| சந்தப்படுமாலால் | —அழகுபொருந்திய விஷ்ணுவினாலும் |
| அரனால் | —உருத்திரனாலும் |
| சாற்றுந்தன்மை சாராது | —சொல்லும் தரமுடையதன்று |

**கருத்து**—இந்த மகத்தாகிய பிரம்மவஸ்துவை எவன் அறிகின்றானோ அவன் அச்சம்புவே. அவனுடைய பெருமையை என் (பிரம்ம) னாலும் தேவர்களாலும், விஷ்ணுவாலும், ருத்திரனாலும் சொல்லமுடியாது.

**பதசாரம்**—தனசகாயமுடைய மந்திரம் ஔஷத முதலிய சாதனங்களாலுண்டாகிய வீரியம் அனித்திய வஸ்துவினால் உண்டானதாதலால் மோட்சத்திற்கு வேறான பலத்தின் சாதனமாம். அஃதற்பமாயிருத்தலின், மதிக்கப்படும் வித்தையால் விளங்கும் ஆன்ம சொரூபத்தால், அவித்தை அதன்காரியம் இவைகளை அவமானித்திடும் வல்லமையுடைய இந்த வித்துவானது வீரியம் அப்படியாகாமையால், பிரம்ம விஷ்ணு ருத்திரர்களாகிய எவர்களாலும் மதிக்கக்கூடாதென்பார், 'சிந்தித் திடவோண் ணாதென்னால்' என்றார். (18)

### அவதாரிகை.

மோட்சசாதனமாகிய இந்தவித்தை புண்ணியவிசேஷத்தால் அறியத்தக்கது. சரீரம் இருக்கும்போதே வருத்தமுற்றேனும் அதனைச் சம்பாதிக்காவிடின் அவனுக்கு எப்போதும் சமுசாரமேதான் என்று சுருதி உபதேசிக்கின்றது. அந்த வாக்கியமும் இங்கு அறிந்திடில் பின்பு சத்தியமிருக்கின்றது. இங்கு அறியாவிடில் மகத்தான நஷ்டமேதான் என்பதாம். அதன் பொருளைக் கூறுகின்றார்.

### வேறு.

இந்த வாக்கையி லியம்பிய பரம்பொரு ளறியி
லந்த மானுடன் மெய்யதா யபேதமா யறிந்த
தொந்த மாம்பர மடைந்திடுந் தோன்றிடா தாகிற்
பந்த மாம்பவக் கடற்படும் பாகதி யடையான்.

### இதன் பொருள்.

| | |
|---|---|
| இந்த ஆக்கையில் | —இந்த (மானிட) தேகம் இருக்கும்பொழுதே |
| இயம்பிய | —(முன்) சொல்லப்பட்ட |
| பரம்பொருள் அறியில் | —மகத்தாயுள்ள பொருளை அறியப்பெற்றிடில் |

அந்தமானுடன் —அந்தப்புண்ணிய புருஷனே
மெய்யதாய் அபேதமாய் —உண்மையாயும் பேதமில்லாததாயும்
அழிந்த தொந்தமாம் —துவிதம் நீங்கியதான
பரம் அடைந்திடும் —பரத்தை அடைந்திடுவான்
தோன்றிடாதாகில் —(அந்த அறிவு) தோன்றாமற்போனல்
பந்தமாம் —பந்தமாகின்ற
பவக்கடல்படும் —ஜனனமாகிற சமுத்திரத்தில் அகப்படுவான்
பரகதி அடையான் —மோட்சத்தை அடையமாட்டான்.

**கருத்து**—இந்த மானிட சரீரம் இருக்கும்பொழுதே எவனொருவன் மேலே சொல்லிய மகத்தாயுள்ள பொருளை அறிகிறானோ அவனே உண்மையாயும், பேதமில்லாததாயும் இரண்டற்ற பரத்தை அடைந்திடுவான். அறியாதவன் பிறவிப் பெருங்கடலில் வீழ்வான்.

**பதசாரம்**—சோம்பலினல் சிரவண மனன முதலிய நிரதிசயானந்த சாதனங்களை விடுத்ததினல் முன்கூறிய இலக்கணமுடைய பரம புருஷார்த்தத்தை அடையானென்பார், 'பரகதியடையான்' என்றார். (19)

## அவதாரிகை.

இத்தப் பிரகாரம் அன்னுவய வியதிரேகங்களால் முமுக்ஷுவின் சரீரத்தில் வித்தியலாபம் சுலபமெனக்கூறி, பின்பு அதன்பலத்தைக் கூறும்பொருட்டு '**பூதங்கள்தோறும் விவேகித்துத் தீரர்கள் இந்த உலகத்தினின்று நீங்கி முத்தர்களாகின்றார்கள்**' என்ற சுருதியின் தாற்பரியப்படி கூறுகின்றார்.

## வேறு.

தங்க ளாக்கையிற் சகலயாக் கையினிலுந் தத்துவ மதுதானே
யெங்கு மொன்றெனக் காண்பவர் யாவரிங் கிறந்திடார் பிறவாராற்
பங்கு பட்டறிந் தவனறி யாதவன் பந்தன்முத் தர்களென்றே
யிங்கொ ருத்தனே நிகழ்பவன் சேதன னிவைகன வியல்பொக்கும்.

## இதன் பொருள்.

தங்கள் ஆக்கையில் —தங்கள் சரீரத்திலும்
சகலயாக்கையினிலும் —எல்லாச் சரீரங்களிலும்
எங்கும் தத்துவமதுதானே —மற்றெல்லாவிடத்திலும் பிரம்ம சொரூபந்தான்
ஒன்று எனக்காண்பவர் யாவர்—ஏகசுபாபவமாக விளங்குகின்றது என்று அனுபவித்து அறிபவர்கள் எவர்களோ (அவர்கள்)
இங்கு இறந்திடார் —இவ்விடத்து சாகாதவர்களும்
பிறவார் —ஜனிக்காதவர்களும் ஆவார்கள்.

| | |
|---|---|
| பங்குபட்டு அறிந்தவன் | —பிரிந்தறிந்தவன் (என்றும்) |
| அறியாதவன் பந்தன் | —அறியாதவன் (என்றும்) பெத்தன் (என்றும்) |
| முத்தர்கள் என்றே | —முத்தர்கள் என்றும் (சொல்லப்பட்டு) |
| இங்கு சேதனன் ஒருந்தனே | —சேதனஞகிய அவன் ஒருவனே இவ்விடத்தில் |
| நிகழ்பவன் | —விளங்குகின்றவன் |
| இவை | —மேற்கூறிய அனைத்தும் |
| கனவு இயல்பு ஒக்கும் | —சொப்பனத்தின் தன்மையை நிகராகும். |

**கருத்து**—அந்தப் பிரமாத்மதத்துவத்தை எவனெருவன் தன் சரீரத்திலும், அன்னிய சரீரங்களிலும் சமமாயிருப்பதாக ஸ்திரமான நிச்சயம் அடைகிருனே அவன் பிறக்கிறதில்லை. சாகிறதுமில்லை. ஏனென்ருல், விச்சையினுல் சகல சமுசாரகாரணமாகிய அவித்தை மூலத்தோடும் நீங்கலால், பிறப்பற்ற அழியாத பிரம்ம சொரூபமாகவே பவிக்கின்ருன். ஏகனுகிய ஆன்மா தனது சரீரத்திலும் இதரமான சகல சரீரத்திலும் எப்படிச் சமனுக இருக்கக்கூடும்? அங்ஙனம் இருந் திடில் பெத்தமுத்த விவஸ்தை கெடுக்கக்கூடும், ஆகையால் அதன் சித்தியின் பொருட்டு ஆன்மா அநேகனுக அகத்தியம் ஒப்பவேண்டுமெனில், தனதவித்தை யினுல் கற்பிக்கப்பட்ட உபாதிபேதத்தால் தைஜசன் ஒருவனே சொப்பனுவஸ் தையில் மலை முதலிய சொப்பனபதார்த்தமாகிப் பலவிதமாகத் தோற்றுகின்ருன்.

**பதசாரம்**—விச்சையினுல் சகல சமுசாரகாரணமாகிய அவித்தை மூலத் தோடும் நீங்கலால், பிறப்பற்ற அழியாத பிரம்ம சொரூபமாகவே பவிக்கின்ருர் களென்பார், '**பிறவார்**' எனவும், ஏகனுகிய ஆன்மா தனது சரீரத்திலும் இதர மான சகல சரீரத்திலும் எப்படிச் சமனுகவிருக்கக்கூடும், அங்ஙனமிருந்திடில் பெத்தமுத்த விவஸ்தை கெடுக்கப்படும். ஆகையால் அதன் சித்தியின்பொருட்டு ஆன்மா அனேகனுக அகத்தியமொப்ப வேண்டுமெனில், தைஜஸன் ஒருவனே சொப்பனுவஸ்தையில் மலை முதலிய சொப்பன பதார்த்தமாகி நாநாவாய்த் தோற் றுகின்ருன். அதுபோல ஆன்மா ஒருவனே தனதவித்தையினுல் கற்பிக்கப்பட்ட உபாதி பேதத்தால் பேதிக்கப்பெற்று ஆங்கே பெத்தன், முத்தன், அஞ்ஞன், ஞானி என்று நானுவாகத் தோற்றுகின்ருனென்பார், '**பந்தன் முத்தர்களென்றே யிங்கோருந்தனே நிகழ்பவன்**' எனவும் கூறினுர். (20)

### அவதாரிகை.

ஆன்மா ஒருவனுயின் ஒரு உபாதியின்கண் ஒருவனுல் வித்தையை முன்னி ட்டுப் பிரம்மம் சாட்சாத்கரிக்கப்பட்ட அளவில் அவித்தை நீங்கலால் ஒருவனுன அவ்வான்மாவும் முத்தனுய் அவனுக்குப் பின்பு அவித்தியா சம்பந்தம் கூடாத தனுல், சகல ஜீவர்களுக்கும் பிரயத்தனமின்றி சர்வசாதாரணமாக முத்தி சித்தித் திடுமே என்ற சங்கைக்கு ஈங்கே சமாதானம் கூறுகின்ருர்.

தன்னில் வேறிலா மையிற் பரமுத்தியிற் றனதுபுத் தியினாலே
யன்னி யங்களாய்த் தோற்றுமா பாசர்க்கும் பரம்பத மறிகின்றான்
முன்ன மெப்படி மூடமாந் திசையிற்றன் மோகத்தா லெலாம்பெத்த
மென்ன வுற்றனன் முத்தியி லப்பரி சிருக்கும தியல்பேயாம்.

இதன் பொருள்.

தன்னில் வேறு இலாமையில்—தன்னைத் தவிர வேறு இல்லாததனால்
பரமுத்தியில் —உயர்ந்த முத்திதிசையில்
அன்னியங்களாய்த் தோற்றும்—(அந்தக்கரண விருத்தியால்) அன்னிய சரீரங்களாகத் தோற்றுகின்ற
ஆபாசர்க்கும் —ஜீவர்களுக்கும்
தனது புத்தியினால் —(தெளிந்த) தனது புத்தியால்
பரம்பதம் அறிகின்றான் —முத்திதிசையை உணர்கின்றான்
முன்னம் —(தான் முத்தி அடைதற்கு) முன்னமே
எப்படி மூடமாம் திசையில் —எவ்விதமாக அஞ்ஞானதிசையில்
தன்மோகத்தால் எலாம் —தனது பிராந்தியால் அனைத்தையும்
பெத்தம் என்ன உற்றனன் —சமுசாரபந்தமுடையதென்று இருந்தானோ
முத்தியில் அப்பரிசு இருக்கும் —முத்திதிசையிலும் அப்படியே எல்லார்களையும் முத்தர்கள் என்றே அறிந்திருப்பான்
அது இயல்பேயாம் —அப்படி அறிதல் சுபாவமேதான்.

**பதசாரம்**—சிரவணாதி சாதனானுஷ்டானமுடைய வித்துவான் கண்ணாடியில் பிரதிபிம்பித்த முகாபாசம்போல அந்தக் கரணோபாதிகளில் பிரதிபிம்பித்த அன்னியர்களான ஆபாசமாய்த்தோற்றிய ஜீவர்களும் உண்மையாய்த் தனக்கு வேறில்லாமையால் அவர்களையும் முத்தர்களாகவே தனது முத்திதிசையில் விச்சையால் அறிகின்றான் என்பார், **வேறிலாமையிற் பரமுத்தியிற் றனதுபுத்தியினாலே யன்னியங்களாய்த் தோற்றுமா பாசர்க்கும் பரம்பதமறிகின்றான்**' எனவும் எப்படி ஒருவன் தனது பந்ததிசையில் அனைவர்களுக்கும் பந்தத்தையும், தனது முத்திதிசையில் அனைவர்களுக்கும் முத்தியையும் அறிகின்றானோ அப்படியே எல்லா ஜீவர்களும் தம் தம் அவித்தையால் கற்பிக்கப்படும் சமுசாரத்தைப் பிரம வித்தை உண்டாகும் வரைக்கும் அறிகின்றதனால் வித்துவானது பார்வையால் அவர்கள் முத்தர்களாயினும், தங்களது பார்வையில், பெத்தர்களே தான் என் பார். '**முத்தியில் அப்பரிசிருக்கும தியல்பேயாம்**' எனவும் கூறினார். (2

அவதாரிகை.

அவித்துவானுக்கு அவித்தியா சம்பந்தம் இருப்பதனால் பிரபஞ்சத் தோற் கூடும். வித்துவானுக்கு அஃதில்லாததனால் எங்ஙனம் பிரபஞ்சத் தோற் கூடும்? என்று சங்கித்து அவற்றின் தாரதம்மியங்களை விவரித்துக் கூறுகின்

வேறு.

ஒருகால முன்செய்வினை யளவும் யோகி
யுயிருலகா தியைக்காண்பா னொருகாற் காணான்
ஒருகாலிற் றோற்றமெல்லாம் பரமாய்க் காணு
முளபரிசே யாயொருகா லொன்றுங் காணான்
துரிசான சகரூபந் தோன்றும் போது
துக்கசுகங் களுமாபா தித்துத் தோன்றும்
பரமாகத் தோன்றுபொழு தாபா தித்துத்
தோன்றாது துக்கசுகம் பரமே தோன்றும்.

இதன் பொருள்.

| | |
|---|---|
| முன் செய்வினையளவும் | —பிராரத்த கர்மபரியந்தம் |
| ஒருகாலம் யோகி | —ஒருகாலத்தில் (சிவயோகி என்னும்) பிரம்மவித்தானவன் |
| உயிர் உலகாதியைக் காண்பான் | —உயிர்கள் உலகம் முதலியவற்றைக் காண்பான் |
| ஒருகால் காணான் | —ஒருகாலத்தில் காணமாட்டான் |
| ஒருகாலில் தோற்றம் எல்லாம் | —ஒருகாலத்தில் தோன்றுகின்ற எல்லாவற்றையும் |
| பரமாய்க்காணும் | —பிரம்ம சொரூபமாகவே பார்ப்பான் |
| உளபரிசே யாயொருகால் | —ஒருகாலத்தில் உள்ளபடியேயாகி |
| ஒன்றுங்காணான் | —(அன்னியமான) ஒன்றையும் காணமாட்டான் |
| துரிசான | —குற்றமான |
| சகரூபந் தோன்றும்போது | —உலகரூபம் தோன்றும் காலத்தில் |
| துக்க சுகங்களும் | —துன்ப இன்பங்களும் |
| ஆபாதித்துத் தோன்றும் | —ஆபாசமாகத்தோன்றும் |
| பரமாகத் தோன்றும்பொழுது | —பிரமமாக (ஜகமானது) தோன்றும்காலத்தில் |
| துக்க சுகம் | —துன்ப இன்பங்கள் |
| ஆபாதித்துத் தோன்றாது | —ஆபாசமாகத் தோன்றாது |
| பரமேதோன்றும் | —பிரம்மமே விளங்கும். |

**பதசாரம்**—கர்மங்கள் ஆரப்த பலமுடையன எனவும், அனாரப்த பலமுடையன எனவும் இருவகைப்படும். அவற்றில், ஆரப்தபலமுடைய கர்மங்கள் ஞானத்தால் நீங்காமல் போகத்தாலே நசிக்கின்றன. ஆதலால் பிராரத்தகர்மம் நாசமாகும் வரைக்கும் போகசமயத்தில் புசிப்போனுகியும், புசிக்கத்தக்கதாயுமுள்ள ஜகத்தை வித்துவானும் அறிகின்றான் என்பார், **ஒருகால முன்செய்வினையளவும்யோகி யுயிருலகா தியைக்காண்பான்'** எனவும், அத்துவித 'பிரமானுசந்

தான சமயத்தில் ஜகத்தை அறியமாட்டார்கள் என்பார், 'ஒருகாற் காணுன்' எனவும், விவகாரசமயத்தில் அவித்துவான்போல் வித்துவானும் ஜகத்தோற்றமுள்ளவனுனல் அவித்துவானுக்கும் வித்துவானுக்கும் என்ன பேதம் எனில், விவகரித்திடினும் ஒருகால் பிரத்தியகான்மாவான பிரம்மத்தில் ஜகமனைத்தும் கற்பிதமானதுபற்றி ஜகத்தையும் அதிஷ்டான பிரம்மமாகவே அறிகின்றுன் என்பார், 'ஒருகாலிற் றேற்றமெல்லாம் பரமாய்க்காணும்' எனவும், சமாதி சமயத்தில் அதிஷ்டானப் பிரம்ம ஞானத்திறல் ஆரோபித ஜகம் வியாபிக்கப்பட்டதுபற்றி நிஷ்பிரபஞ்சமான ஆன்மசொரூப மாத்திரமாய் விளங்குவதனுல் பிரபஞ்சத்தைப் பார்க்கின்றுன் இல்லை. ஆதலால் அவித்துவான், வித்துவான் இருவர்களுக்கும், வெகுபேதம் இருக்கின்றது. என்பார், 'உளபரிசே யாயோருகா லொன்றுங் காணுன்' எனவும், விவகார சமயத்தில் வித்துவானுக்கு வாதிக்கத்தக்க போக்திரு போக்கியப் பிரபஞ்சாகாரமாகப் பிரம்மம் தோற்றிடில் சுகதுக்காதி போகங்களும் ஆபாசமாகவே தோன்றுமேயன்றிச் சச்சிதானந்தாகாரத்தைத் தவிர வேருகித் தன்னைப்பாதிக்கும் வஸ்துவாகத்தோற்றுதென்பார், 'துரிசான சகரூபந் தோன்றும்போது துக்கசுகங்களுமாபாதித்துத் தோன்றும்' எனவும், சமாதி சமயத்தில் திரிபுடியில்லாத சொரூபமாத்திரமாக விளங்குவதனுல் ஆபாசமாய்க் கூட ஜகத்தோற்றம் இல்லாததனுல் துக்கசுகாதிகளும் அங்ஙனமே தோற்றுமல் சொரூபமாகவே விளங்குகின்றதென்பார், 'பரமாகத்தோன்றுபோழ தாபாதித்துத்தோன்றது துக்கசுகம் பரமேதோன்றும்' எனவும் கூறினுர். (22)

### அவதாரிகை.

அவித்துவானைப்போல வித்துவானும் குறைவின்றிச் சகல ஜகத்தையும் பார்க்கின்றுனேனும் அவன் சத்ருபமான பிரம்மமாகவே பார்க்கின்றபடியால் எங்ஙனம் அவனுக்கு ஜகத்தோற்றம் தக்தபட நியாயமாய் ஆபாசம் ஆகுமென்று சங்கித்து அச்சங்கை தீருமாறு கூறுகின்றுர்.

### வேறு.

தத்துவ ஞானி காணிலுஞ் சகத்தைக்
கண்டிலன் றத்வமே கண்டான்
வத்துவே யாக அல்லவே யாக
மற்ருெரு பொருளிலை யானு
லித்தில்வே ருென்றை யெங்ஙனங் காண்பா
னியாதொரு படிசகத் தாகத்
தொத்தா வில்லாத் தோற்றமெப் படியோ
வப்படி நிகழ்வது பாந்தான்.

### இதன் பொருள்.

தத்துவஞானி —பிரம்ம வித்தானவன்
சகத்தைக் காணிலும் —உலகத்தைக் கண்டாலும்

| | |
|---|---|
| கண்டிலன் | —காணாதவன் தான் |
| தத்துவமே கண்டான் | —சத்துவரூபமான பிரம்மமாகவே கண்டவனாவான் |
| வத்துவேயாக அல்லவேயாக | —பாரமாத்திகமாயாவது வியாவகாரிகமாயாவது |
| மற்றொரு பொருளில்லையானால் | —பிரம்மத்துக்கு அன்னியமாக ஒருபொருளும் இல்லாததாகுமானால் |
| இத்தில் யாதொருபடி | —இதில் எப்படி |
| சகத்தாக வேறு ஒன்றை | —ஜகத்துரூபமாக வேறொரு பொருளை |
| எங்ஙனங் காண்பான் | —அவன் எங்கே காண்பவனாவான் |
| தொத்தரவு இல்லா | —தொந்தரவு இல்லாத |
| தோற்றம் எப்படியோ | —அவனதுதோற்றம் எவ்வண்ணமோ |
| அப்படி | —அவ்வண்ணமே |
| பரம் நிகழ்வது | —பிரம்மமானது விளங்குகின்றது. |

**பதசாரம்**—ஆரோபிதமாயுள்ள ஜகத்தைக்கண்டிடினும் அதிஷ்டான சத்துரூப பரமார்த்த பிரம்மசொரூபமாகவே காண்கின்றானேயன்றி நாமரூப சுபாவமாகக் காண்கின்றான் இல்லை என்பார், '**தத்துவஞானி காணிலுஞ்சகத்தைக் கண்டிலன் தத்வமேகண்டான்**' எனவும், வித்துவான் பிரத்தியட்சமாய் ஜகத்தை அனுபவிக்கப்பார்த்தும் பார்க்கிலன் என்று எங்ஙனம் கூறலாமெனில் அணுமாத்திரமேனும் துவித வஸ்து இல்லையென்ற சுருதியால் ஆரோபிதமெல்லாம் அதிஷ்டானத்துக்கு வேறு இல்லாததுபற்றி அதிஷ்டானமே எப்போதும் உள்ளதாயிருப்பதனால், பின்னவஸ்து இல்லாமலிருக்கத் தத்துவவித்து எங்ஙனம் ஜகத்தைப் பார்ப்பான் என்பார் '**வத்துவேயாக வல்லவேயாக மற்றொரு பொருளிலையானா லித்தில்வே றொன்றை யெங்ஙனங்காண்பா னியாதொரு படிசகத்தாக**' எனவும், அதிஷ்டான பிரம்மரூபமாயாவது, ஆரோபித போக்திரு போக்கிய பிரபஞ்சரூபமாயாவது, எந்தெந்தப் பிரகாரம் வித்துவானது ஞானம் பிரகாசிக்கின்றதோ அந்தந்தப் பிரகாரமாகப் பிரம்மமே பிரகாசிக்கின்றதனால் பிரம்மபானமே தான் எப்போதும் வித்துவானுக்கு உள்ளது என்பார், '**தோத்தரவில்லாத் தோற்றமெப்படியோ வப்படிநிகழ்வது பரந்தான்**' எனவும் கூறினர். (23)

அவதாரிகை.

வித்துவானுக்கு ஜகத்தோற்றமும் சமாதியவஸ்தையைக் காட்டிலும் விசேஷப்படாது. ஆதலின் அதுவும் சமாதியேதான் எனக்கூறுகின்றார்.

எப்படித் தோற்ற மப்படி யாகி யிலங்குவ துண்மையே யோகிக்
கப்படி யுண்மை யாகவே தெளிவுற் றறிவதே யான்மவே தனந்தான்
செப்புநா மத்தா லுண்மையா லெல்லாத் திகழ்வுமா தேவனே யாகி
யிப்படி யறிந்த ஞானிகைக் கொள்வா னெத்தையன் றெனவெத்தை விடுவான்.

இதன் பொருள்.

| | |
|---|---|
| யோகிக்கு | —சிவயோகிக்கு |
| எப்படித்தோற்றம் | —எந்தப்பிரகாரம் காணப்படுகிறதோ |
| அப்படியாகி | —அந்தப் பிரகாரமாகவே |
| இலங்குவது உண்மையே | —(ஆன்ம சுபாவம்) விளங்குவது மெய்தான் |
| அப்படி உண்மையாகவே | —அந்தப் பிரகாரம் மெய்யாகவே |
| தெளிவுற்று அறிவதே | —தெளிவடைந்து அபரோட்சமாக அறிவதே |
| ஆன்ம வேதனந்தான் | —ஆன்மதரிசனமாகும் |
| செப்புநாமத்தால் | —சொல்லுகின்ற நாமத்தினாலும் |
| உண்மையால் | —(அதன்) உண்மைப்பொருளாலும் |
| எல்லாத் திகழ்வும் | —சகலப் பிரகாசமும் |
| மாதேவனேயாகில் | —பிரபுவாகிய மகாதேவரது விளக்கமேயாகுமானால் |
| இப்படி அறிந்த ஞானி | —இவ்விதமாக உணர்ந்த ஞானியானவன் |
| எத்தைக்கைக் கொள்வான் | —எந்தப்பொருளைக் கிரகிப்பான் |
| எத்தை | —எந்தப்பொருளை |
| அன்று என விடுவான் | —கிரகிக்கத்தக்கதன்று என்று தள்ளுவான். |

**கருத்து**—சிவயோகிக்கு எந்தப் பிரகாரம் காணப்படுகிறதோ அந்தப் பிரகாரமாகவே ஆன்மசுபாவம் விளங்குவது மெய்தான். அப்படி உண்மையான விளக்கத்தை அபரோட்சமாக அறிவதே ஆத்மதரிசனமாகும்.

**பதசாரம்**—மகாதேவ சத்தார்த்தத்தைப் பரியாலோசிக்கும்போது வித்துவான் தனக்கு வேறாகச் சிறிதேனும் தள்ளத்தக்கதாகவும், கொள்ளத்தக்கதாகவும் உள்ள வஸ்து இல்லை என்பார், 'செப்புநா மத்தா லுண்மையா லெல்லாந் **திகழ்வுமா தேவனே யாகி யிப்படி யறிந்த ஞானிகைக் கொள்வா னெத்தை யன் றெனவெத்தை விடுவான்'** எனவும் கூறினார். (24)

அவதாரிகை.

அந்த மகாதேவனுக்கு அன்னியமாக யாதேனும் இருப்பதாக ஒப்பிடில் அவன் மகத்துவம் குறைந்துவிடும். அவன் இயல்போ குறைவுடையது அன்று எனவும், பேதம் இல்லாததனால் மகத்துவம் தருமமாகாதெனவும் கூறுகின்றார்.

அன்னிய மாக விடுதல்பற் றுகலுண் டாகுமேற் பூரண னாகப்
பன்னிய பெருமைக் கானியா மந்தப் பரமன தியல்பழு தூறாதே
தன்னில்வே றின்மையான்மகத் துவமுந் தன்மமோ தன்மதன் மிகளா
பின்னவா சகமு மிப்பரம் பொருளிற் பேதமுண் டாகிலே பிறக்கும்.

இதன் பொருள்.

அன்னியமாக —(அந்த மகாதேவனுக்கு) வேறாக
விடுதல் பற்றுதல் —தள்ளுவதாகவும், கொள்ளுவதாகவும்
உண்டாகுமேல் —(ஏதேனும்) இருக்குமாகில்
பூரணனாக —சுயம் பூரணன் என்று
பன்னிய பெருமைக் கானியாம்—சொன்ன மகத்துவத்திற்குக் குறைவுண்டாகும்
அந்தப் பரமனது —அந்த மகாதேவனது
இயல் பழுது உறாதே —சுபாவ நிலைமை (ஒருநாளும்) கெடத்தக்கதல்லவே
தன்னில் வேறு இன்மையால்—தன்னைத் தவிர வேறு இல்லாததனால்
மகத்துவமும் தன்மமோ —(அந்த மகாதேவனது) மகத்துவமும் தர்மமாகுமோ
தன்ம தன்மிகளாம் — தர்ம தர்மிகளாகச் சொல்லுகின்ற
பின்னவாசகமும் —பேதவார்த்தையும்
இப்பரம் பொருளில் —இந்த மகாதேவனிடத்தில்
பேதம் உண்டாகிலேபிறக்கும்—பேதத்தன்மையிருந்தால் அல்லவா உண்டாகும்.

கருத்து—திரிவித பரிச்சேத சூனிய சொரூபனாயிருக்கிற பிரம்மத்தினிடத்து வியாபக பேதமில்லாமையால் வியாப்பிய தரும தருமி பாவமும் இல்லை.

பதசாரம்—சர்வ சொரூபனாயிருக்கின்ற பிரத்தியக்கான பரமசிவத்துக்கு அன்னியமாகக்கொள்ளுதல் தள்ளுதலான பொருள் இருக்கின்றதாக அங்கீகரித்திடில் திரிவித பரிச்சேத சூனியமாகிய அவனது மகத்துவம் குறைந்துவிடும் என்பார், **அன்னியமாக விடுதல்பற்றுதலுண் டாகுமேற் பூரணனாகப் பன்னிய பெருமைக் கானியாம்**' எனவும், பிரத்தியட்சமாக அனுவிக்கப்பட்ட ஜகத்தை இல்லையென்பதைக் காட்டிலும் அவன் மகத்துவம் குறைவது நமக்கு இஷ்டம் தானெனின் மேலான மகத்துவம் அவனது சொரூபமேயாதலால் கெடுக்கத்தகாததுதான். சொரூபமான தர்மம் கெடுக்கப்பட்டதாக ஒப்பிடில் அதிஷ்டானமான அவனும் கெடுதலை அடைந்து இந்த ஜகமும் இல்லாததாகவேயாகும். மேலும் மகத்தான அவனது சொரூபத்தைக் குறைவுடையதாக எண்ணிடில் எண்ணினவன் குறைந்திடுவானேயன்றிச் சொரூபமகத்துவம் குறையாதென்பார், **'அந்தப்பரமன தியல்பழுதுறாதே**' எனவும், மகத்துவம் பரமசிவனுக்குச் சுபாவமன்று தர்மம் என்னில், பரமாத்மாவுக்கு ஸ்வகத ஸஜாதீய விஜாதீய பேதமில்லை. ஒன்றே தான். அத்துவிதம் பிரம்மம் என்று சுருதி சொல்லுகின்றதனாலும், பிரத்தியட்ச முதலிய பிரமாணங்கள் பேதத்தையே கிரகிக்கின்றன என்று மேல் பத்தாவதத்தியாயத்தில் நிரூபித்திருத்தலாலும், தனக்குத் தானே தர்மமாயிருத்தல் கூடாமையாலும், தரும தருமி பாவமும் நியமமாகப் பேதத்தை அபேட்சித்துச் சித்திப்பதனாலும் அங்ஙனமாகாது என்பார், '**தன்னில்வே றின்மையான் மகத்துவமுந் தன்மமோ தன்மதன் மிகளாம் பின்னவா சகமு மிப் பரம் பொருளிற் பேதமுண் டாகிலே பிறக்கும்**' எனவும் கூறினார். (25)

அவதாரிகை.

ஆன்மாவுக்குப் பேதமில்லாவிடினும் திரிசியப் பிரபஞ்ச தாதான்மிய லட்சண முடைய பேதம்வரும். வந்தால் பிரம்மம் சவிசேஷமாய்விடும் என்ற சங்கைக்குச் சமாதானமுங் கூறித் தீது என்று தள்ளத்தக்கதும் நன்மை என்று கொள்ளத்தக் கதுமான பேதத்தோற்றம் ஞானிக்கு இல்லையென்று கூறுகின்றார்.

வேறு.

பேதமும் பேதந் தானும் பேதாபே தமும்வே றல்ல
வோதிலப் பாத்துக் கென்று முள்ளது பிரமந் தானே
தீதாக நன்றே யாகச் சிவனலா தில்லை ஞானி
யேதாகு மென்று கொள்வா னேதாகா தென்று நீப்பான்.

இதன் பொருள்.

| | |
|---|---|
| ஓதில் | —சொல்லுங்கால் |
| பேதமும் அபேதந்தானும் | —பேதமும் அபேதமும் |
| பேதா பேதமும் | —பேதா பேதமும் (ஆகிய இவைகள்) |
| அப்பரத்துக்கு வேறல்ல | —அந்தப் பரமாத்மாவுக்கு அன்னியமல்லவாம் |
| பிரமந் தானே | —பிரம்மம் ஒன்றுதானே |
| என்று முள்ளது | —எக்காலத்தும் இருக்கின்றது |
| தீதாக | —தீமையாயினுமாகுக |
| நன்றேயாக | —நன்மையாயினுமாகுக (அவைகள்) |
| சிவனலாதில்லை | —பரமசிவனன்றி வேறில்லை (இப்படியானால்) |
| ஞானி | —சிவஞானியானவன் |

ஏது ஆகும் என்று கொள்வான்—எதனைத் தனக்கு ஆகுமென்றுகொள்வான்
ஏது ஆகாது என்று நீப்பான்—எதனைத் தனக்குக் கூடாது என்று தள்ளுவான்.

**பதசாரம்**—அத்தியாசிக்கப்பட்ட பிரபஞ்சம் சதசத்து விலட்சணமானது பற்றி வஸ்துவாயாவது அவஸ்துவாயாவது அதிஷ்டான பிரம்மத்துக்கு வேறாக இல்லாததனால் எப்போதும் அத்துவிதீய பிரம்மமேதான் விளங்குகின்றது என் பார், **'என்று முள்ளது பிரமந்தான்'** என்று கூறினார். அப்படியிருக்க ஞானி எதைக்கொள்ளுவான் எதைத்தள்ளுவான். கொள்வதுமில்லை தள்வதுமில்லை.

அவதாரிகை.

சொரூப திருஷ்டியால் பிரபஞ்சம் இல்லாவிடினும் மாயையால் உளதாக லாம் அல்லவா என்ற சங்கைக்குச் சமாதானம் கூறுகின்றார்.

வேறு.

எப்பொருளு மாயையினு லெனச்சிலவ ரியம்புவர்கள்
மெய்ப்பரமன் றனையொழிய வேறொருமா யையுமில்லை
யொப்பரிய பரனொழிய வொருமாயை யுண்டாகி
லப்பரமன் றன்பெருமைக் கதுநேரே யழிவன்றோ.

இதன் பொருள்.

| | |
|---|---|
| சிலவர் | —சிலர்கள் |
| எப்பொருளும் | —எந்தப்பொருள்களும் |
| மாயையினுலென | —மாயையினுலே உண்டாயிருக்கின்றன என்று |
| இயம்புவர்கள் | —சொல்லுவார்கள் |
| மெய்ப்பரமன் தனையொழிய | —உண்மையாகிய பரமசிவனைத் தவிர |
| வேறொரு மாயையுமில்லை | —மற்றொரு மாயையுமில்லை |
| ஒப்பரிய பரன் ஒழிய | —உவமையில்லாத பரமசிவனைத்தவிர |
| ஒருமாயை உண்டாகில் | —ஒருமாயை உண்டாயிருக்குமானுல் |
| அது | —அவ்விவகாரமானது |
| அப்பரமன் தன்பெருமைக்கு | —அந்தப் பரமசிவனது மகத்துவத்திற்கு |
| நேரே அழிவன்றோ | —பிரத்தியட்சமாகவே கெடுதல் அல்லவா. |

**கருத்து**—பிரபஞ்சம்போல அதன்காரணமான கற்பிதமாயையும் சதசத்து விலட்சணமானதால், மாயாமயமாகிச் சகம் எல்லாப் பொருள்களுமாயிருக்கின்றது என்ற வாதியர்களது வாதமும் விருத்தமாகும். (27)

**அவதாரிகை.**

மகத்துவத்தில் குறைவுண்டாகமாட்டாதாதலின் திரிவித பரிச்சேத சூனியமாய்ப் பிரம்மமே உள்ளதென அத்துவிதத்தை ஸ்தாபித்துக் கூறுகின்றார்.

பெருமையினிற் சங்கோசம் பிறவாது பிறக்குமெனி
லருமறைவாக் கியம்பொய்யா மப்பிரமா ணமுமாகும்
பொருவில்பரா னந்தபரி பூரணமெய்ச் சுடராகுந்
தெரிவருமா தேவனலாற் றிகழ்வதொரு சிறிதுமிலை.

இதன் பொருள்.

| | |
|---|---|
| பெருமையினில் | —மகத்துவத்தில் |
| சங்கோசம் பிறவாது | —குறைவுண்டாகமாட்டாது |
| பிறக்குமெனில் | —உண்டாகுமென்று ஒப்பிடில் |
| அருமறை வாக்கியம் | —அருமையாகிய சுருதி வாக்கியம் |

## அவதாரிகை.

ஆன்மாவுக்குப் பேதமில்லாவிடினும் திரிசியப் பிரபஞ்ச தாதான்மிய லட்சண முடைய பேதம்வரும். வந்தால் பிரம்மம் சவிசேஷமாய்விடும் என்ற சங்கைக்குச் சமாதானமுங் கூறித் தீது என்று தள்ளத்தக்கதும் நன்மை என்று கொள்ளத்தக் கதுமான பேதத்தோற்றம் ஞானிக்கு இல்லையென்று கூறுகின்றார்.

## வேறு.

பேதமும் பேதந் தானும் பேதாபே தமும்வே றல்ல
வோதிலப் பாத்துக் கென்று முள்ளது பிரமந் தானே
தீதாக நன்றே யாகச் சிவனலா தில்லை ஞானி
யேதாகு மென்று கொள்வா னேதாகா தென்று நீப்பான்.

## இதன் பொருள்.

| | |
|---|---|
| ஓதில் | —சொல்லுங்கால் |
| பேதமும் அபேதந்தானும் | —பேதமும் அபேதமும் |
| பேதா பேதமும் | —பேதா பேதமும் (ஆகிய இவைகள்) |
| அப்பாத்துக்கு வேறல்ல | —அந்தப் பரமாத்மாவுக்கு அன்னியமல்லவாம் |
| பிரமந் தானே | —பிரம்மம் ஒன்றுதானே |
| என்று முள்ளது | —எக்காலத்தும் இருக்கின்றது |
| தீதாக | —தீமையாயினுமாகுக |
| நன்றேயாக | —நன்மையாயினுமாகுக (அவைகள்) |
| சிவனலாதில்லை | —பரமசிவனன்றி வேறில்லை (இப்படியானால்) |
| ஞானி | —சிவஞானியானவன் |

ஏது ஆகும் என்று கொள்வான்—எதனைத் தனக்கு ஆகுமென்றுகொள்வான்
ஏது ஆகாது என்று நீப்பான்—எதனைத் தனக்குக் கூடாது என்று தள்ளுவான்.

**பதசாரம்**—அத்தியாசிக்கப்பட்ட பிரபஞ்சம் சதசத்து விலட்சணமானது பற்றி வஸ்துவாயாவது அவஸ்துவாயாவது அதிஷ்டான பிரம்மத்துக்கு வேறாக இல்லாததனால் எப்போதும் அத்துவிதீய பிரம்மமேதான் விளங்குகின்றது என்பார், **'என்று முள்ளது பிரமந்தான்'** என்று கூறினார். அப்படியிருக்க ஞானி எதைக்கொள்ளுவான் எதைத்தள்ளுவான். கொள்வதுமில்லை தள்வதுமில்லை.

## அவதாரிகை.

சொரூப திருஷ்டியால் பிரபஞ்சம் இல்லாவிடினும் மாயையால் உளதாக லாம் அல்லவா என்ற சங்கைக்குச் சமாதானம் கூறுகின்றார்.

வேறு.

எப்பொருளு மாயையினு லெனச்சிலவ ரியம்புவர்கள்
மெய்ப்பரமன் றனையொழிய வேறொருமா யையுமில்லை
யொப்பரிய பரனொழிய வொருமாயை யுண்டாகி
லப்பரமன் றன்பெருமைக் கதுநேரே யழிவன்றோ.

இதன் பொருள்.

சிலவர் —சிலர்கள்
எப்பொருளும் —எந்தப்பொருள்களும்
மாயையினுலென —மாயையினுலே உண்டாயிருக்கின்றன என்று
இயம்புவர்கள் —சொல்லுவார்கள்
மெய்ப்பரமன் தனையொழிய —உண்மையாகிய பரமசிவனைத் தவிர
வேறொரு மாயையுமில்லை —மற்றொரு மாயையுமில்லை
ஒப்பரிய பரன் ஒழிய —உவமையில்லாத பரமசிவனைத்தவிர
ஒருமாயை உண்டாகில் —ஒருமாயை உண்டாயிருக்குமானல்
அது —அவ்விவகாரமானது
அப்பரமன் தன்பெருமைக்கு—அந்தப் பரமசிவனது மகத்துவத்திற்கு
நேரே அழிவன்றோ —பிரத்தியட்சமாகவே கெடுதல் அல்லவா.

**கருத்து**—பிரபஞ்சம்போல அதன்காரணமான கற்பிதமாயையும் சதசத்து விலட்சணமானதால், மாயாமயமாகிச் சகம் எல்லாப் பொருள்களுமாயிருக்கின்றது என்ற வாதியர்களது வாதமும் விருத்தமாகும். (27)

அவதாரிகை.

மகத்துவத்தில் குறைவுண்டாகமாட்டாதாதலின் திரிவித பரிச்சேத சூனியமாய்ப் பிரம்மமே உள்ளதென அத்துவிதத்தை ஸ்தாபித்துக் கூறுகின்றார்.

பெருமையினிற் சங்கோசம் பிறவாது பிறக்குமெனி
லருமறைவாக் கியம்பொய்யா மப்பிரமா ணமுமாகும்
பொருவில்பரா னந்தபரி பூரணமெய்ச் சுடராகுந்
தெரிவருமா தேவனலாற் றிகழ்வதொரு சிறிதுமிலை.

இதன் பொருள்.

பெருமையினில் —மகத்துவத்தில்
சங்கோசம் பிறவாது —குறைவுண்டாகமாட்டாது
பிறக்குமெனில் —உண்டாகுமென்று ஒப்பிடில்
அருமறை வாக்கியம் —அருமையாகிய சுருதி வாக்கியம்

பொய்யாம் —அசத்தியம் ஆகும் (ஆகவே)
அப்பிரமாணமும் ஆகும் —பிரமாணமில்லாததாகவும் பவிக்கும் (ஆகையால்)
தெரிவரும் —எவராலும் காண்டற்கரிய
பொருவில் பரானந்த —ஒப்பற்ற பிரம்மானந்த
பரிபூரண மெய்ச்சுடராகும் —சம்பூரண சுயம்பிரகாசனுகிய
மாதேவனலால் —மகாதேவனல்லாமல்
ஒரு சிறிதும் திகழ்வது இலை —ஓரணுவும் பிரகாசிப்பது இல்லை.

**பதசாரம்**—ஆகாயத்தினது மகத்துவம்போல பரமசிவத்தின் மகத்துவம் இதரத்தை அபேக்ஷிக்காது. அபேக்ஷித்ததெனில் சத்திய ஞானனந்தமாம் பிரம்மம் ஒன்றேதான் என்று திரிவித பரிச்சேதசூனிய மாகக்கூறிய சுருதி, பிரமாண மாகாது. அதுவோ உண்மையாகவே சத்தியார்த்தத்தைக்கூறும் இயல்புடைய தனுல் எவராலும் அதனை அப்படிக் கூறக்கூடாதென்பார், 'பிறக்குமேனிலரு **மறைவாக்கியம் பொய்யா மப்பிரமா ணமுமாகும்**' எனவும் கூறினர். ஆனதால் எவராலுங் காண்டற்கரியதாகிய ஒப்பற்ற பிரம்மானந்த சம்பூரண சுயம்பிரகாச னுகிய மகாதேவனல்லாமல் ஓரணுவும் பிரகாசிக்கமாட்டாது. (28)

### அவதாரிகை.

வைதிகா வைதிகமான சகல சாஸ்திரங்களிலும் புராணேதிகாசங்களிலும் இந்தப் பரமாத்துவிதமே கூறப்பட்டிருக்கின்றதெனக் கூறுகின்றார்.

### வேறு.

இதுவே முடிந்த நிலமெல்லாத் தர்க்கங் களுக்குங் காட்சியே
முதலாம் பிரமா ணங்களுக்கு மொழியும் வேதாந் தங்களுக்கும்
விதமாம் புராண மனைத்தினுக்கு மிருதி களுக்கும் வேதத்தின்
மதமாம் விச்சை யனைத்தினுக்கு மன்னு மாபா ரதத்துக்கும்.

### இதன் பொருள்.

எல்லாத் தர்க்கங்களுக்கும் —தர்க்கங்கள் அனைத்தினுக்கும்
காட்சியே முதலாம் —பிரத்தியட்சம் முதலிய
பிரமாணங்களுக்கும் —அளவைகளுக்கும்
மொழியும் வேதாந்தங்களுக்கும்—சொல்லாநின்ற உபநிஷதங்களுக்கும்
விதமாம் புராணம் அனைத்தினுக்கும்—பலவிதமாகிய சகல புராணங்களுக்கும்
மிருதிகளுக்கும் —ஸ்மிருதிகளுக்கும்
வேதத்தின் மதமாம் —வேதத்தின் சம்மதமான
விச்சை அனைத்தினுக்கும் —சகல வித்தைகளுக்கும்
மன்னுமா பாரதத்துக்கும் —நிலைபெற்ற மகாபாரதமென்னும் இதிகாசத்துக்கும்

| | |
|---|---|
| இதுவே | —இந்தப் பரமாத்துவிதம் ஒன்றே |
| முடிந்த நிலம் | —முடிவான இடமாகும் |

கருத்து—இதுவே தர்க்கங்கள், பிரத்தியட்சாதி பிரமாணங்கள், வேதாந்தங்கள், ஸ்மிருதிகள், புராணங்கள், பாரதம், வேதாநுசாரவித்தைகள் முதலிய அனைத்துக்கும் அவற்றின் கடைசியான முடிவாகும். (29)

இதுவுமது.

ஐயன் சைவா கமங்கட்கு மரியா கமத்துக் கும்மெனது
பொய்யின் றியவா கமத்துக்கும் புத்தா கமங்கட் கும்மருகன்
செய்யு மாக மத்துக்குஞ் சித்த ரியக்கர் கந்தருவ
ருய்யும் பரிசு மற்றுள்ளோ ருரைத்த வாக மங்கட்கும்

இதன் பொருள்.

| | |
|---|---|
| ஐயன்சைவாகமங்கட்கும் | —நாதனாகிய மகாதேவனால் சொல்லப்பட்ட சைவாகமங்களுக்கும் |
| அரி ஆகமத்துக்கும் | —வைஷ்ணவாகமங்களுக்கும் |
| எனது | —(இரணியகருப்பனாகிய) என்னுடைய |
| பொய்யின்றிய ஆகமத்துக்கும் | —சத்தியார்த்தமாகிய ஆகமத்துக்கும் |
| புத்தாகமங்கட்கும் | —(பிடக முதலிய) பௌத்தாகமங்களுக்கும் |
| அருகன் செய்யும் ஆகமத்துக்கும் | —அருகனாற் செய்யப்பட்ட ஆகமத்துக்கும் |
| உய்யும் பரிசு | —யாவரும் பிழைக்கும்படி |
| சித்தரியக்கர் கந்தருவர் | —சித்தர்களும் இயக்கர்களும் கந்தருவர்களும் |
| மற்றுள்ளோர் உரைத்த | —இன்னமுள்ள அனைவர்களும் சொல்லிய |
| ஆகமங்கட்கும் | —ஆகமங்களுக்கும் (இதுவே முடிந்த நிலமாகும்) |

கருத்து—இதுவே சைவ வைஷ்ணவ பிரம்மாகமங்கள், புத்த, ஆருகத, யக்ஷ, கந்தர்வ, சித்தர் முதலிய ஆகமங்கள் இவற்றின் கடைசியான முடிவு. (30)

அவதாரிகை.

இவ்விதமான பரமாத்துவிதம் தேவர் மானிடர்களில் எவர்களுக்கும் இயல்பாகச் சித்திக்காது. பரமசிவத்துக்கே இயல்பாக இருக்கின்றது. பரமசிவம், பராசத்தி இவர்கள் திருவருளாலேயே பிரம்மா, விஷ்ணு, விராட்டு, சம்ராட்டு முதலிய தேவர்கள் முதல் எவர்களுக்கும் சித்தித்திருக்கின்றதெனக் கூறுகின்றார்.

வேறு.

உவமையில் பரமாத் துவிதமா மிந்த வொண்பொரு ளுலகின்மா னிடரி
லெவரிது பெற்றா ரன்றிவின் னவரி லெவரோ பெற்றவ ருடையான்
சிவனொரு வனுமிப் பரம்பொருள் சுபாவ சித்தமாஞ் சிவனுக்குஞ் சிவைக்கு
மவாருளாலே யரிக்குமிப் பொருளுண் டப்படி யெனக்குமுண் டருளால்

### இதன் பொருள்.

இந்த ஒண்பொருள் —இந்தப்பிரகாசமான தாற்பரியமே
உவமையில் பரமாத்துவிதமாம்—ஒப்பில்லாத பரமாத்துவிதமாகும்
உலகில் மானிடரில் —இவ்வுலகத்திலுள்ள மனிதர்களில்
எவரிது பெற்றோர் —எவர்கள் இதனை அடைந்தவர்கள் ஆவார்கள்
அன்றி —அன்றியும்
விண்ணவரில் —தேவர்களில்
ஏவரே பெற்றவர் —எவர்கள் அடைந்தவர்கள் ஆவார்கள்
சிவன் ஒருவனும் உடையான் —பரமசிவன் ஒருவனே உடையவன்
சிவனுக்கும் சிவைக்கும் —பரமசிவனுக்கும் பராசத்திக்கும்
இப்பரம்பொருள் —இந்தப் பரமாத்துவித ஞானமானது
சுபாவ சித்தமாம் —இயல்பாகவே சித்தித்திருக்கின்றதாகும்
அவர் அருளாலே அரிக்கும் —அந்தப் பரமசிவன், பராசத்தி இவர்களுடைய திருவருளாலே விஷ்ணுவுக்கும்
இப்பொருள் உண்டு —இந்தப் பரமாத்துவித ஞான முண்டு
அப்படி அருளால் —அந்தப்பிரகாரமே (அவர்களது) திருவருளினல்
எனக்கும் உண்டு —எனக்கும் உண்டாயிருக்கிறது.

**கருத்து**—இந்தத் தாற்பரியமே பரமாத்துவிதமாகும். மனிதர்களிலோ அன்றி தேவர்களிலோ யாவரே இதனைப்பெற்றவர்? எவருமே இலர். சிவன் ஒருவனே இதனை உடையவனுவான். சிவனுக்கும் பராசத்திக்கும் இந்த ஞானம் இயல் பாகவே உள்ளது. அவர்களது திருவருளாலேயே பிரம்மனுகிய எனக்கும் விஷ்ணுக்கும் இந்தப் பரமாத்துவித ஞானம் உண்டு. (31)

### இதுவுமது.

சாற்றிடப் பட்ட விராட்டுடன் சுராட்டு சம்ராட் டெனுமிறை யவர்க்கு
மேற்றம துடைய தேவரா முமக்கு மியக்கரோ டரக்கர்கந் தருவர்
சீற்றமில் சித்த ரிவர்முதலான தேவசா திகளனை வருக்குந்
தோற்றிய மனிதர் விலங்குசா திகட்கு மருளினு லிப்பொரு டோன்றும்

### இதன் பொருள்.

சாற்றிடப்பட்ட —சொல்லப்பட்ட
விராட்டுடன் சுராட்டு —விராட் புருஷனேடு சுராட்டு
சம்ராட்டெனும் —சம்ராட்டென்று சொல்லப்படுகின்ற
இறையவர்கட்கும் —அதிகாரிகளுக்கும்
ஏற்றமதுடைய —மேன்மையுடைய

தேவராம் உமக்கும் —தேவர்களாகிய உங்களுக்கும்
இயக்கரோடு —யட்சர்களுடனே
அரக்கர் கந்தருவர் —ராட்சசர்கள், கந்தருவர்கள்
சீற்றமில் சித்தர் —அகங்காரமற்ற சித்தர்கள்
இவர் முதலான —இவர்கள் முதலாகிய
தேவசாதிகள் அனைவருக்கும் —தேவவர்க்கங்கள் யாவர்களுக்கும்
தோற்றிய மனிதர் —தோற்றுகின்ற மனிதர்கள்
விலங்கு சாதிகட்கும் —மிருகங்கள் (என்னும்) சாதிகளுக்கும்
அருளினால் —(பரமசிவனது) திருவருளினால்
இப்பொருள் தோன்றும் —இந்தப் பரமாத்துவித ஞானம் உண்டாகும்

**கருத்து**—பரமசிவனுடைய திருவருளினால், விராட்டு, சுராட்டு, சம்ராட்டு என்னும் அதிகாரிகளுக்கும் தேவர்களாகிய உங்களுக்கும், யட்சர், ராட்சதர், கந்தருவர் சித்தர் முதலான தேவர்களுக்கும், மனிதர், மிருகம் முதலிய ஜாதி களுக்கும் இந்தப் பரமாத்துவித ஞானம் உண்டாகும். (32)

அவதாரிகை.

சிவப்பிரசாதம் உண்டானால் கீடம் பதங்கம் முதலிய சகல ஜந்துக்களும் மோட்சத்தை அடையும். அந்தச் சிவனன்றி நாராயணன் முதலிய எந்தத் தேவர் களும் சுதந்திரமாக மோட்சம் கொடுக்கத்தக்கவர்களல்லர் எனக் கூறுகின்றார்.

பரமன தருளுண் டாயிடிற் கீடம் பதங்கமா னிடவரோ டசுரர்
சுரரனை வருக்கு ஞானமுண் டவனே சுடர்மிகு ஞானமிங் களிப்பா
னரியினா லென்னா லவனருளொழிய வளித்திடப் படாதொரு பொருளுஞ்
சுரர்களே தரவும் வாங்கவு நாங்கள் சுதந்திர ரன்றுமெய் சொல்லில்

இதன் பொருள்.

பரமனது அருள் உண்டாயிடில்—சிவப்பிரசாதம் உண்டானால்
கீடம் பதங்கம் —புழுக்கள், விட்டில்
மானிடவரோடு அசுரர் சுரர் —நரரோடு, தானவர்கள் தேவர்கள், (முதலான)
அனைவருக்கும் ஞானம் உண்டு—யாவர்களுக்கும் பரமஞானம் உண்டு
அவனே இங்கு —அந்தப் பரமசிவனே இவ்விடத்தில்
மிகுசுடர் ஞானம் —மிகவும் விளங்குகின்ற ஞானத்தை
அளிப்பான் —கொடுக்கத்தக்கவன்
அவன் அருள் ஒழிய —அந்தப் பரமசிவனது திருவருள் இல்லாமல்
அரியினால் என்னால் —விஷ்ணுவினாலும் (பிரம்மாவாகிய) என்னாலும்
ஒருபொருளும் அளித்திடப்படாது—யாதொரு பொருளையும் கொடுக்கப்படாது

சுரர்களே சொல்லில் —தேவர்களே சொல்லுங்கால்
தரவும் வாங்கவும் —கொடுக்கவும், வாங்கவும்
நாங்கள் —நாங்கள் (இருவர்களும்)
சுதந்திரர் அன்று மெய் —சுதந்திரர்கள் அல்ல (இது) உண்மையான வசனமாகும்

**கருத்து**—சிவப்பிரசாதம் உண்டானால், புழு, விட்டில், நரர், சுரர், அசுரர் யாவர்களுக்கும் ஞானம் உண்டாகும். சிவன் ஒருவனே ஞானத்தை அளிக்கத் தக்கவன். அவனருளில்லாமல் பிரம்மாவி (என்) னாலும், விஷ்ணுவினாலும் எந்தப் பொருளும் கொடுக்கப்படாது. உண்மையைக் கூறுமிடத்து விஷ்ணுவுக்கோ பிரம்மாவாகிய எனக்கோ வாங்கவோ கொடுக்கவோ சுதந்திரமில்லை. (33)

## அவதாரிகை.

சிவன் ஒருவனே சுதந்திரன், அவனருளின்றி நாராயணன் பிரம்மன் இவர்களால் சுதந்திரமாக இச்சமுசார நிவர்த்திசெய்யக்கூடாது. அவர்கள் கொடுப்பது பாத்திரத்திலுள்ள பதார்த்தத்தை அகப்பை அள்ளிக் கொடுப்பதுபோல சிவன் திருவருளாலேயே கொடுக்கப்படுவது எனக் கூறுகின்றார்.

சுதந்திரன் சிவனே யவனன்றே பிறவிச்
சூழனின் றெடுப்பவ னவன்றன்
பதங்களா லன்றி யெங்களா லெடுக்கப்
படாதொரு செந்துவு மெங்கள்
மதங்களா லொழிய வருளினாற் பிறவி
மாற்றவும் வல்லமற் றொருவன்
றிதம்பெற வழங்கும் போதுதான் வழக்கஞ்
செய்வது தருவியே போல

## இதன் பொருள்.

சிவனே சுதந்திரன் —(இந்தப்) பரமசிவன் ஒருவனே சுதந்திரமுடையவன்
அவன் அன்றே —அந்தப் பரமசிவன் அல்லவா
பிறவிச்சூழல் நின்று எடுப்பவன்—ஜனனம் என்னும் இடத்தில் இருந்தும் எடுத்தருளத்தக்கவன்
அவன் தன் பதங்களாலன்றி —அந்தப் பரமசிவனது திருவடிகளாலன்றி
ஒரு செந்துவும் —ஒரு ஜெந்துவையும்
எங்களால் எடுக்கப்படாது —எங்களாலே (சமுசாரத்தினின்றும்) நீக்கப்படாது
மற்றொருவன் திதம்பெற —வேறொருவன் நிலைபெற
வழங்கும்போது —(இலையில்) படைக்குங்காலத்தில் (அவனுதவியால்)
தருவி —அகப்பையானது
தான் வழக்கம் செய்வதுபோல—தான் படைக்குந் தன்மையைப்போல

| | |
|---|---|
| எங்கள் மதங்கள் | —எங்கள் (இருவர்களுடைய) வல்லமைகளும் |
| ஒழிய அருளினுல் | —நீங்க (பரமசிவனுடைய) திருவருளைக்கொண்டு |
| பிறவி மாற்றவும் | —பிராணிகளது ஜனனத்தை ஒழிக்கவும் |
| வல்லம் | —வல்லமை உடையோம் |

**கருத்து**—பரமசிவன் ஒருவனே சுதந்திரன். அவன் ஒருவனே ஜந்துக்களின் பிறப்பை ஒழிக்கவல்லவன். அவனருளன்றி எங்களாலியலாது. யாங்கள் நீக்குவது ஒருவன் இலையில் படைக்குங்காலத்தில் அவனுதவியால் அகப்பை தான் வழங்குவதுபோல் பரமசிவனுடைய திருவருளைக் கொண்டதேயாகும். (34)

## அவதாரிகை.

பரதத்துவம் மிகவும் திருவிசேஷமாதலால் இந்திராதி தேவர்களுக்கும் உபதேசமின்றிக்கிட்டாது. அவனது பிரசாதத்தால் அடைய வேண்டுமெனவும், பரமசிவத்தினது மகத்துவத்தை அவனது திருவருளாலன்றி மகத்துக்களாலும் ஓரணுவளவேனும் அறிய ஒண்ணாது எனவும் கூறுகின்றார்.

## வேறு.

தேவ தேவன் சிவன்பெருமை தானு மவன்றன் றிருவுருவு
மேவ ரறிவா ராதலினு லில்லை யாகிற் றவறுதலே
யாவ ரருளா லன்றியவிர் பெரியோர் தமக்கு மறிவரியன்
கோவி னறிதற் கருமையைத்தான் கூற மிகவும் குறிக்கொண்மின்

## இதன் பொருள்.

| | |
|---|---|
| தேவதேவன் | —தேவர்களுக்குத் தேவனுகிய |
| சிவன் பெருமை தானும் | —மகாதேவனது பெருமையையும் |
| அவன் தன் திருவுருவும் | —அந்த மகாதேவனது திவ்விய சொரூபத்தையும் |
| ஏவர் அறிவர் | —யாவர் அறிவார்கள் |
| ஆதலினுல் இல்லை | —ஆகையினுல் ஒருவராலும் அறியப்படுவதில்லை |
| ஆகில் | —எவரேனும் அறிந்தார்களானுல் |
| தவறுதலேயாவர் | —சொரூப ஞானத்தினின்றும் தவறுதலை உடையவர்களாவார்கள் |
| அவிர் பெரியோர் தமக்கும் | —விளங்குகின்ற (எந்த) மகான்களுக்கும் |
| அருளாலன்றி அறிவரியன் | —திருவருளாலன்றி அறிதற்கரியவன் |
| கோவின் | —இறைவனுகிய (அந்தப்) பரமசிவனது |
| அறிதற்கருமையைக்கூற | —அறிய அரிதாகிய பெருமையை (யான்) சொல்ல |
| மிகவும் குறிக்கொண்மின் | —நீங்கள் மிகவும் கவனமாகக்கேட்டு உள்ளத்தில் கொள்ளுங்கள் |

கருத்து—தேவதேவனாகிய பரமசிவனுடைய பெருமையையுஞ் சொரூபத்தையும் ஒருவராலும் அறியமுடியாது. அப்படி யாவரேனும் அறிந்தார்களானால் அவர்கள் சொரூப ஞானத்தினின்றும் தவறுதலையுடையவர்களாவார்கள். மகான்களாயிருந்தாலும் உபதேசமும் அவன் திருவருளும் இருந்தாலன்றி அறியமுடியாது. அப்படிப்பட்டவனுடைய அறிதற்கரிய தன்மையை யான்சொல்லுகிறேன் கேளுங்கள் எனப் பிரம்மதேவன் சொல்லலுற்றான். (35)

அவதாரிகை.

முற்கூறிய இடத்தில் மகாமோகத் தொடர்பினாலே பிரமாதமாக ஏற்பட்ட தேவாசுரயுத்தம் சுருதியில்கூறப்பட்டிருப்பதனால் அதனை விரித்துக்கூறுகின்றார்.

வேறு.

கலக்குறு மோகத் தாலிமை யவருங் கடுந்திற லசுரரும் பகைத்து
விலக்கரும் பூசன் முன்பொரு காலம் விளைந்துவிண் ணவர்தலை சாயப்
பெலத்தினான் மிக்க வசுரர்கள் வெல்லப் பெருகிய வருளுடை யிறைவ
னலத்தகு மிமையோர் வெல்லவு மசுரர் நசிக்கவுந் திருவரு ணயந்தான்.

இதன் பொருள்.

| | |
|---|---|
| முன்பு ஒருகாலம் | —முன்னொருகாலத்தில் |
| கலக்குறும் மோகத்தால் | —கலங்கச்செய்கின்ற மகாமோகத்தினால் |
| இமையவரும் | —தேவர்களும் |
| கடுந்திறல் அசுரர்களும் | —கொடிய வீரத்தையுடைய அசுரர்களும் |
| பகைத்து | —(ஒருவர்க்கொருவர்) விரோதம் பூண்டு (அதனால்) |
| விலக்கரும் பூசல்விளைந்து | —விலக்கமுடியாத யுத்தம்செய்து |
| விண்ணவர் தலைசாய | —தேவர்கள் (அபசயமடைந்து) தலைகுனியும்படி |
| பெலத்தினால் மிக்க | —வீரத்தினால் மிகுந்த |
| அசுரர்கள் வெல்ல | —தானவர்கள் ஜெயிக்க (பின்பு) |
| பெருகிய அருளுடைய இறைவன் | —மிகுந்த கருணையையுடைய சிவபெருமான் |
| நலத்தகும் | —நன்மைக்குரிய |
| இமையோர் வெல்லவும் | —தேவர்கள் ஜயிக்கவும் |
| அசுரர் நசிக்கவும் | —தானவர்கள் மாளவும் |
| திருவருள் நயந்தான் | —திருவருள் செய்தான் |

கருத்து—முன்னொருகாலத்தில் தேவர்களுக்கும் அசுரர்களுக்கும் மகாமோகத்தினால் யுத்தமுண்டாகி அதில் முதலில் வானவர்கள் தோல்வி அடையச் சிவபெருமான் அவர்களுக்கு வெற்றி உண்டாகும்படி அனுக்கிரகம்செய்தான். (36)

### அவதாரிகை.

இனி, பரமசிவத்தின் திருவருளால் தேவர்கள் ஜயத்தை அடைந்து மகா ஆங்காரத்தால் அவனுடைய திருவருளை மறந்து தாங்களே ஜயித்ததாகச் செருக்குற்றிருக்க அதனை அறிந்த பரமசிவம் தான் எவர்களாலும் அறியப்படாதவர் என்பதை அறிவிக்கவேண்டி இயக்கரூபமாக ஆவிர்ப்பவித்தார் என்றது முதலான சுருதியின் பொருளை மேல்வரும் பாடல்களாற் கூறுகின்றார்.

திருவரு ளதனா லசுரரைத் தேவர் செயித்துமா தேவன்றன் செயலென்
றொருவரு மறியா ரும்பர்தா னவரை யோட்டினர் தாமென வுவந்து
பெருகிய வகந்தை செய்திடத் தேவர் பிழைக்கவும் பிரான்றனை யறிதற்
கருமையு மறிய வியக்கரூ பங்கொண் டமலனங் கருளினா னின்றான்

### இதன் பொருள்.

திருவருள் அதனால் —மகாதேவப் பிரசாதத்தால்
தேவர்கள் அசுரரை செயித்து—தேவர்கள் அசுரர்களைவென்று (இப்போது நாம் வென்றது)
மாதேவன்றன் செயலென்று —மகாதேவனது திருவருள் என்று
உம்பர் —(அந்தத்) தேவர்களில்
ஒருவரும் அறியார் —ஒருவரும் அறிந்தார் இல்லை
தானவரை ஓட்டினர் —அசுரர்களை (புறங்காட்டி) யோடச்செய்தவர்கள்
தாம் என உவந்து —தாங்களே என்று மகிழ்ந்து
பெருகிய அகந்தை செய்திட —மிகுந்த அகங்காரங்கொண்டிட
தேவர்கள் பிழைக்கவும் —அந்தச் சுரர்கள் உய்யவும்
பிரான்தனை —மகாதேவனாகிய தன்னை
அறிதற்கு அருமையும் அறிய —பிறரால் அறிதற்கருமையாகிய தன்மையை யாவரும் அறியவும்
அமலன் அருளினால் —மகாதேவன் (தனது) காருண்ணியத்தினால்
அங்கு —அந்தத் தேவலோகத்தின்கண்
இயக்கரூபங்கொண்டு நின்றான்—ஒரு யட்சரூபங்கொண்டு நின்றருளினான்

**கருத்து**—தேவர்கள் மகாதேவப் பிரசாதத்தால் வெற்றிபெற்றிருக்க அகங்காரத்தால் தாங்களே ஜயித்ததாகஎண்ணி மமதைகொண்டிருக்கக் கருணாநிதியாகிய பரமசிவன் அத்தேவர்கள் பிழைக்க ஒருயட்சவடிவமாக நின்றான். (37)

### வேறு.

இயக்க ரூபனா மிறையவன் றன்னைக்கண் டிமையவ ரினங்கூடி
வியக்க வுற்றது வேதெனத் தங்களில் விசாரித்து விளங்காமன்
மயக்க மற்றிட வறிந்தெமக் குரையென வன்னியை விடுத்தார்க
ணயக்க வுற்றிது தன்னியல் பறிந்துநா னவிலுவ னெனச்சென்றான்

இதன் பொருள்.

இயக்கரூபனும் —யட்சரூபனாகிய
இறையவன் தன்னைக்கண்டு —சிவபெருமானைப்பார்த்து
இமையவரினங்கூடி —தேவ வர்க்கத்தாரெல்லாம் (ஒன்றாகக்) கூடி
வியக்கவுற்றது ஏது என —(நாம் எல்லாரும்) அதிசயிக்கும்படிவந்த இது யாதென்று
தங்களில் விசாரித்து —தங்களுக்குள்ளே விசாரித்தும்
விளங்காமல் —தெளியாமல்
எமக்கு மயக்கம் அற்றிட —எங்களுக்குச் சந்தேகம் தீரும்படி
அறிந்து உரையென —தெரிந்து சொல் என்று
வன்னியை விடுத்தார்கள் —அக்கினி தேவனை ஏவினார்கள்
நயக்க உற்று —(அவனும்) நன்மையாகும்படி சென்று
நான் இதுதன் இயல்பறிந்து —நான் இதன் சுபாவத்தைத் தெரிந்து
நவிலுவன் எனச்சென்றான் —சொல்லுவேன் என்று (இயக்கரூபனாகப் பரமன் எழுந்தருளி நிற்கும் இடத்திற்குப்)போனான்.

கருத்து—யட்சரூபனாகவந்த சிவபெருமானைத் தேவர்கள் யாவருங்கண்டு யாரென அறிந்துகொள்ளமுடியாமல் மயங்கிநின்று அக்கினிபகவானைத் தெரிந்துவரும்படி அனுப்ப அவனும் அதனை அறிந்துவரச்சென்றான். (38)

வேறு.

அனல னைக்குறித் தியக்கனு மிறைவனு ரென்று
வினவ வங்கிநா னென்றவற் குறித்தவன் விளம்ப
வுனது வீரிய மேதென விறையவ னுரைப்ப
வெனது பூமியி லுளதெலாஞ் சுடுமியல் பென்றான்

இதன் பொருள்.

அனலனைக்குறித்து —(தன்னிடத்தில்வந்த) அக்கினியைப் பார்த்து
இயக்கனும் இறைவன் —யட்சரூபனாகிய சிவபெருமான்
யார் என்று வினவ —நீ யார் என்று கேட்க
நான் அங்கி என்று —நான் அக்கினிதேவன் என்று
அவற் குறித்து —அவ்விறைவனை நோக்கி
அவன் விளம்ப —அந்த அக்கினிதேவன்கூற
இறையவன் —சிவபெருமான் (அவனை நோக்கி)
உனது வீரியம் ஏதென —உன்னுடைய சாமர்த்தியம் என்ன என்று

| | |
|---|---|
| உரைப்ப | —கேட்டருளலும் |
| எனது இயல்பு | —என்னுடைய சுபாவம் |
| பூமியிலுளதெலாம் | —ஜகத்திலுள்ள சகலத்தையும் |
| சுடும் என்றான் | —தகித்துவிடும் என்று (அக்கினிதேவன்) கூறினான் |

கருத்து—தன்னிடத்தில் வந்த அக்கினிதேவனைச் சிவபெருமான்பார்த்து 'நீ யார்' என்று கேட்க அவன் 'நான் அக்கினிதேவன்' என்றான். இறையவன் அவனை 'உன்னுடைய சாமர்த்தியம் யாது' எனக்கேட்க அவன் 'நான் ஜகத்திலே வியாபித்திருக்கிற எதையும் தகித்துவிடுவேன்' என்றான். (39)

அத்த னங்கொரு திரணத்தை யெடுத்தன லவனை
யித்தை நீதகி யெனக்குறு முறுவல்கொண்டிசைப்ப
வெத்தன் வேகமுங் கொண்டது சுடவெரி யவனுஞ்
சத்த னன்றிநா ணிப்பயந் தமரரைச் சார்ந்தான்

இதன் பொருள்.

| | |
|---|---|
| அத்தன் அங்கு | —(அப்போது) சிவபெருமானும் அவ்விடத்தில் |
| ஒரு திரணத்தை எடுத்து | —ஒரு துரும்பை எடுத்துவைத்து |
| அனலவனை | —அக்கினியைப்பார்த்து |
| இத்தை நீதகி என | —இத்திரணத்தை நீ தகிப்பாய் என்று |
| குறுமுறுவல் கொண்டு | —புன்சிரிப்படைந்து |
| இசைப்ப | —திருவாய் மலர்ந்தருள |
| எத்தன் வேகமும் கொண்டு அது சுட | தனக்கு எவ்வளவு வேகமுண்டோ அவ்வளவையுங் கொண்டு அந்தத்திரணத்தைக் கொளுத்துவதற்கு |
| எரியவனும் சத்தன் இன்றி | —அக்கினிதேவனும் வல்லமை இல்லாதவனாகி |
| நாணிப் பயந்து | —வெட்கமுற்று அச்சங்கொண்டு |
| அமரரைச் சார்ந்தான் | —தேவர்களிடத்தில் அடைந்தான் |

கருத்து—சிவபெருமான் ஒரு துரும்பை எடுத்துவைத்து இதைச்சுடு என்று சொல்ல அக்கினிதேவனும் தன்னால் ஆனவரை முயன்றும் முடியாதுபோக அவனும்பயந்து வெட்கமடைந்து தேவர்களிடம் வந்துசேர்ந்தான். (40)

வேறு.

அவன தியல்பை யென்னுவிங் கறிகற் கறிகென் றனல்சொல்லப்
பவன னறியென் றிமையவர்கள் பகர வவனு மப்பரிசே
சிவனு லபசெ யப்பட்டுத் தேவர் தம்பாற் செல்லுதலு
மவனை நானே யறிகுவனென் றகந்தை யுற்று னமரேசன்

### இதன் பொருள்.

| | |
|---|---|
| அவனது இயல்பை | —அவனுடைய தன்மையை |
| என்னால் இங்கு | —என்னாலே இவ்விடத்தில் |
| அறிதற்கு அரிது என்று | —தெரிதற்கு அருமையாயிருக்கின்றது என்று |
| அனல் சொல்ல | —அக்கினி பகவான்கூற |
| பவனன் அறி என்று | —வாயுவே நீபோய்த் தெரிந்துவா என்று |
| இமையவர்கள் பகர | —தேவர்கள் சொல்ல |
| அவனும் அப்பரிசே | —அந்த வாயுவும் அக்கினியைப்போலவே அந்தத் திரணத்தை அசைக்கமுடியாமல் |
| சிவனால் அபசெயப்பட்டு | —சிவபெருமானிடத்தில் தோல்வியை அடைந்து |
| தேவர்தம்பால் செல்லுதலும் | —தேவர்களிடத்தில் மீண்டுவந்தடைதலும் |
| அமரேசன் அவனை | —இந்திரனானவன் அந்த இயக்கனை |
| நானே அறிகுவனென்று | —யானே போய் அறிகின்றேன் என்று |
| அகந்தையுற்றான் | —செருக்கடைந்தான் |

**கருத்து**—அக்கினிபகவான் 'அவனுடைய இயல்பை யான் அறியமுடிய வில்லை' எனலும், தேவர்கள் வாயுவை அனுப்பினார்கள். அவனும் வந்து அவ்வாறே சொல்ல இந்திரன்தானே அறிந்துவருவதாக அகந்தைகொண்டான். (41

### வேறு.

புரந்தர னறியச் சென்றிடும் பொழுதிற் போக்கற வவ்விடந் தனிலே
கரந்திட மிகவுங் கலங்கியுள் வெதும்பிக் கருதுபு கருணையே வடிவாய்
வரந்தரும் விச்சா வல்லியா ளுமையை வைதிக நெறியினால் வழுத்தா
அரந்தைதீர் வுறவே புகழ்ந்தனன் புகழ்ந்தவளவிலங் களவிலா வருளால்

### இதன் பொருள்.

| | |
|---|---|
| புரந்தரன் | —தேவேந்திரனானவன் |
| அறியச் சென்றிடும்பொழுதில் | —அந்த யட்சரூபத்தை அறியும்பொருட்டுச் செல்லுங் காலத்தில் |
| போக்கற | —(சிவபெருமான் வேறு எங்கும்) போகாமல் |
| அவ்விடம் தன்னிலே கரந்திட | —நின்ற அவ்விடத்திலேயே மறைந்தருள |
| மிகவும் கலங்கி | —(அப்போது இந்திரன்) மிகவும் கலக்கத்தை அடைந்து |
| உள்வெதும்பி கருதுபு | —மனம்வாடிச் சிந்தித்து |
| கருணையே வடிவாய் | —ஜீவகாருண்ணியமே ஓர் உருவமாகி |
| வரம் தரும் | —வரங்களைக் கொடுத்தருளும் |
| விச்சாவல்லியாளுமையை | —வித்தியா வல்லியாகிய பார்வதி தேவியை |

வைதிக நெறியினால் வழுத்தா —வேதமார்க்கமாக துதித்து
அரந்தை தீர்வுறவே —துன்பம் அகலும் பொருட்டே
புகழ்ந்தனன் —ஸ்தோத்திரம் செய்தான்
புகழ்ந்த அளவில் —அப்படி ஸ்தோத்திரம் செய்த உடனே
அங்கு அளவிலா அருளால் —அவ்விடத்தில் முடிவில்லாத திருவருளினால்

கருத்து—இந்திரன் அந்த யட்சனை அறியும்பொருட்டு ஏகிய அளவில் சிவபெருமானாகிய அந்த யட்சசு மறைந்தருள அவன் மிகவும்கலங்கி மனவருத்தம் அடைந்து கருணைவடிவாகிய ஸ்ரீ வித்தியாதேவியாகிய பார்வதியை ஸ்தோத்திரம் செய்தான். அப்பொழுது அவள் மிகுந்த கருணையோடு. (42)

அவதாரிகை.

நிரகங்காரிகளான இந்திராதிகளுக்குப் பிரம்மசொரூபத்தை உபதேசிக்கும் பொருட்டு, மிகக் கலங்கி ஆங்கே தோத்திரஞ் செய்து நின்ற இந்திரன் முன்பு பராசக்தி ஆவிர்ப்பவித்தது முதலியவற்றைச் சுருதி கூறியபிரகாரம் கூறுகின்றார்.

அங்கவே தத்தின் மயமதாய்ச் சிவனுக் கபின்னயா யானந்த மாகிச்
சங்கரன் றனக்குந் தானளித் தின்பங் கருணையா லுயிர்க்கெலாந் தாயாய்த்
துங்கமால் வரையி லிச்சையாற் றோன்றுந் தோகையீ சனதுவல் லபமு
மங்கவ னறிதற் கருமையுந் தோன்றத் தோன்றினா ளவ்விடந் தனிலே.

இதன் பொருள்.

அங்கவேதத்தின் மயமதாய் —ஆறு அங்கங்களை உடைய வேதசொரூபியாயும்
சிவனுக்கு அபின்னயாய் —சிவபெருமானுக்கு வேறில்லாதவளாயும்
ஆனந்தமாகி —ஆனந்த சொரூபியாயும்
சங்கரன் தனக்கும் —(எல்லாருக்கும் சுகத்தைச்செய்கின்ற) சிவபிரானுக்கும்
தான் இன்பம் அளித்து —தான் சுகத்தைக்கொடுத்து
கருணையால் உயிர்க்கு எலாம் —(தனது) திருவருளினால் சர்வ ஜீவராசிகளுக்கும்
தாயாய் —மாதாவாகியும் (விளங்கி)
துங்கமால் வரையில் —பரிசுத்தமாகிய இமயமலையில்
இச்சையால் தோன்றும் —தனது இச்சையினால் தோன்றி அருளிய
தோகை —மயில்போன்ற சாயலை உடையவளாகிய பார்வதி தேவியானவள்
ஈசனது வல்லபமும் —(தனது நாயகனாகிய) சிவபெருமானுடைய வல்லமையும்
அங்கு அவன் —அவ்விடத்தில் அப்பரமேசுவரனுடைய
அறிதற்கு அருமையும் —அறிதற்கரிய தன்மையும்

| | |
|---|---|
| தோன்ற | —விளங்கும்பொருட்டு |
| அவ்விடம் தனில் தோன்றினுள் | —அந்த இடத்தில் ஆவிர்ப்பவித்தாள். |

கருத்து—வேதசொரூபியாயும், சிவனுக்கு வேறில்லாதவளாயும், ஆனந்த சொரூபியாயும், சிவபெருமானுக்கும் ஆனந்தத்தைக் கொடுக்கின்றவளாயும், ஜகன்மாதாவாகியும் விளங்கித் தனது இச்சையால் இமாசலத்தில் தோன்றியருளிய உமாதேவி பரமேசுவரனுடைய வல்லமையையும், அவனுடைய அறிதற்கரிய தன்மையையும் வெளிப்படுத்த அவ்விடத்தில் ஆவிர்ப்பவித்தாள். (43)

உமையையர்ச் சித்தங் கும்பர்கோ னியக்க ரூபமா யவ்விடத் துண்டா
யெமதுகட் புலத்துற் றிவ்விடந் தனிலே மறைந்ததீ தென்னேயென் றியம்ப
மமதிருக் கொழுந னருளினுற் ஞேன்றி மறைந்தனன் மாலுக்கு மயற்கு
மிமையவ ரெவர்க்கு முனக்குமா தேவ னியல்பறி யப்படா தென்றும்.

இதன் பொருள்.

| | |
|---|---|
| உமையை | —(ஆங்கே எழுந்தருளிய) உமாதேவியை |
| உம்பர்கோன் | —தேவர்களுக்கு அதிபனுகிய இந்திரன் |
| அங்கு அர்ச்சித்து | —அவ்விடத்தில் அர்ச்சனைசெய்து |
| இயக்கரூபமாய் | —யட்சவடிவமாக |
| இவ்விடத்து உண்டாய் | —இந்தவிடத்தில் ஆவிர்ப்பிவித்து |
| எமது கட்புலத்துற்று | —எங்களுடைய கண்ணுக்கு எதிராகத்தோன்றி |
| இவ்விடம் தனிலே மறைந்து | —இவ்விடத்தில் தானே தோன்ருமற்போனது |
| ஈது என்னே என்று இயம்ப | —இது என்ன என்று வணங்கிக்கேட்க (அதை உமையவள் கேட்டு) |
| மமதிருக்கொழுநன் | —எனது பதியாகிய பிரம்மமே |
| அருளினுல்தோன்றி | —கிருபையினுல் ஆவிர்ப்பவித்து |
| மறைந்தனன் | —மறைந்துபோயினுன் |
| மாலுக்கும் அயற்கும் | —விஷ்ணுவுக்கும் பிரம்மாவுக்கும் |
| இமையவர் எவர்க்கும் | —சகல தேவர்களுக்கும் |
| உனக்கும் | —(இந்திரனுகிய) உனக்கும் |
| மாதேவன் இயல்பு | —(என்னுடைய பதியாகிய) மகாதேவனது சுபாவத்தை |
| என்றும் அறியப்படாது | —எக்காலத்தும் உணரமுடியாது. |

கருத்து—இந்திரன் உமாதேவியை அர்ச்சித்துவேண்டி அம்மே! இங்கு யட்சவடிவமாய்த்தோன்றி மறைந்தது யாதெனக்கேட்க அவள் அது என்னுடைய பதியாகிய பிரம்மமேயாகும் என்றும் அவனுடைய சாட்சாத்கார சச்சிதானந்த சொரூப இயல்பைப் பிரம்ம விஷ்ணுக்களாலும், உன்னுலும், இன்னும் மற்றைய தேவர்களாலும் அறியமுடியாது என்றும் கூறினுள். (44)

வேறு.

தன்னையறி தற்கருமை தன்னையறி வித்தற்
குன்னிநிகழ் வுற்றது மொளித்ததுவு மும்பன்
என்னதற வானவரு நீயும்விச யத்தே
மன்னவவ னேயசுரர் மாயவருள் செய்தான்.

இதன் பொருள்.

| | |
|---|---|
| தன்னை | —(சச்சிதானந்த சொரூபியாகிய) தன்னை |
| அறிதற்கருமை தன்னை | —எவராலும் அறிதற்கருமையாகிய தன்மையை |
| அறிவித்தற்குன்னி | —தெரிவிக்கவேண்டுமென்று கருதி |
| நிகழ்வுற்றதும் ஒளித்ததுவும் | —ஆவிர்ப்பவித்ததும் மறைந்ததுவும் |
| உம்பன் | —அந்த மகாதேவனேதான் |
| என்னது அற | —(உங்களுடைய) நான் எனது என்னும் செருக்கு அகலவும் |
| வானவரும் நீயும் | —தேவர்களும் நீயும் |
| விசயத்தே மன்ன | —விசயத்தில் தானே நிலைபெறவும் |
| அசுரர்மாய | —அசுரர்கள் அழியவும் |
| அவனே அருள்செய்தான் | —அந்த மகாதேவனே கிருபைசெய்தான். |

**கருத்து**—மகாதேவன் தன்னை எவராலும் அறியமுடியாது என்கிற தன்மையைத் தெரிவிக்கும் பொருட்டுத்தோன்றி மறைந்தருளினுன், அவனே தான் உங்களுடைய நான் எனது என்கிற செருக்ககலவும் உங்கள் ஜயம் நிலைபெற்றிருக்கவும், அசுரர்கள் ஒழியவும் திருவருள் செய்தவன். (45)

வேறு.

அத்தனே சரண மாக வடையுமென் றருளிச் செய்து
பத்தர்கள் பாசந் தீர்க்கும் பரமகா ருணிகை யாகிச்
சித்துரு வாகிச் சான்ருய்த் திகழ்ந்திடுந் தேவி யுந்தன்
சுத்தமாஞ் சொரூபந் தன்னிற் கரந்தன டோன்று வண்ணம்.

இதன் பொருள்.

| | |
|---|---|
| அத்தனே சரணமாக | —ஆதலால் பரமசிவத்தையே அடைக்கலமாக |
| அடையும் என்று | —அடையுங்கள் என்று |
| அருளிச்செய்து | —திருவாய் மலர்ந்தருளிச் செய்து |
| பத்தர்கள் பாசம் தீர்க்கும் | —அடியார்களுடைய அஞ்ஞானத்தை நீக்குகின்ற |
| பரமகாருணிகையாகி | —பரமகிருபையுள்ளவளாயும் |

சித்துருவாகிச் சான்றாய் —சித்துருபியாயும் சர்வசாட்சியாயும்
திகழ்ந்திடும் தேவியும் —பிரகாசிக்கின்ற பார்வதி தேவியும்
தன் சுத்தமாம் —தன்னுடைய நிர்மலமாகிய
சொரூபம் தன்னில் —பிரம்ம சொரூபத்தில்
தோன்றுவண்ணம் —யாருக்கும் புலப்படாவண்ணம்
கரந்தனள் —மறைந்தருளினாள்.

கருத்து—அடியார்களுடைய அஞ்ஞானத்தை நீக்குகின்ற பரமகிருபையுள்ளவளாயும், சித்துருபியாயும், சர்வசாட்சியாயும் விளங்குகின்ற பார்வதிதேவி, இந்திரன்காண எதிரே தரிசனந்தந்து பரமசிவத்தை அடைக்கலம்புகுங்கள் என்று சொல்லிப் பிரம்மசொரூபத்தில் மறைந்தருளினாள். (46)

அவதாரிகை.

பரமசிவத்தின் திருவருளின் பெருமையைக் கூறுகின்றார்.

வேறு.

அன்றுமா லொழிந்தங் கிமையவ ரீச னறிவதற் கருமையு மருளுந்
துன்றுபுத் தியுநன் முத்தியு மளிக்குஞ் சுதந்திரந் தன்னையுந் துணிந்து
நன்றியே யுற்றா ரருள்பெறி லெளிய நாதனிங் கறிவுறு மருடா
னின்றியே யொழியி லொருவரா லுந்தன் னியல்பறி யப்படா தென்றும்.

இதன் பொருள்.

அன்று அங்கு இமையவர் —அக்காலத்தில் அவ்விடத்தில் தேவர்கள்
மால் ஒழிந்து —(சமுசார காரணமாகிய) மயக்கம் அகன்று
ஈசன் அறிவதற்கு அருமையும் அருளும் —பரமசிவனுடைய அறிதற்கருமையாகிய தன்மையையும் காருண்ணியத்தையும்
துன்றுபுத்தியும் —நெருங்கிய புத்தியையும்
நன்முத்தியும் —நன்மையாகிய மோட்சத்தையும்
அளிக்கும் —கொடுத்தருளும்
சுதந்திரம் தன்னையும் —சுதந்திரத் தன்மையையும்
துணிந்து நன்றியேயுற்றார் —(நன்றாகத்)தெளிந்து நன்மையே அடைந்தார்கள்
அருள்பெறில் —திருவருள் அடைந்தால்
எளியநாதன் —(அவர்களுக்கு) எளிய சிவபெருமான்
இங்கு அறிவுறும் —இவ்விடத்தில் தானே அறியப்படுவான்
அருள்தான் இன்றியே ஒழியில்—அவனது திருவருள் இல்லாது நீங்குமாயின்
ஒருவராலும் தன் இயல்பு —யாவராலும் அந்தச் சிவபிரானுடைய சுபாவத்தை
என்றும் அறியப்படாது —எக்காலத்திலும் அறியமுடியாது.

**கருத்து**—அப்பொழுது தேவர்கள் பரமசிவனுடைய அறிதற்கரிய தன்மையையும், காருண்ணியத்தையும், புத்தியையும், முத்தியையும் கொடுக்கும் சுதந்திரத் தன்மையை நன்றாகத்தெளிந்து நன்மையேயடைந்தார்கள். பரமசிவனுடைய திருவருள் இருந்தால் இவ்விடத்தில் தானே அவன் அறியப்படுவான். அவனது திருவருள் இல்லையாயின் எவராலும் அவனுடைய சுபாவம் அறியமுடியாது. (47)

**இதுவுமது.**

சம்புவி னருளா லன்றிமா லியானுஞ் சகலதே வதைகளு மந்த
வும்பனையுணரோமருள்பெறும்பொருட்டேயோதியயாவையுமுளதாஞ்
செம்பொரு டன்னை யருளினு லொழியத் தெரிவினுற் றெளிகுவ ராக
நம்புமா னிடவர் கையினு னாற்ற மறிவரோ நாசியா லொழிய

**இதன் பொருள்.**

| | |
|---|---|
| சம்புவினருளாலன்றி | —சிவபெருமானுடைய பிரசாதத்தாலன்றி |
| மால் யானும் | —விஷ்ணுவும் நானும் |
| சகல தேவதைகளும் | —சகல தேவர்களும் |
| அந்த உம்பனே உணரோம் | —அந்தச் சிவபெருமானை (சுதந்திரமாக) அறியும் தகுதி உடையவராகமாட்டோம் |
| ஓதிய யாவையும் | —சொல்லிய அனைத்தும் |
| அருள்பெறும் பொருட்டே | —சிவப்பிரசாதம் கிடைக்கும்பொருட்டே |
| உளதாம் | —எக்காலத்தும் உள்ளதாகிய |
| செம்பொருள் தன்னை | —செவ்வியபொருள் தன்னை |
| அருளினுலொழிய | —சிவப்பிரசாதத்தாலன்றி |
| தெரிவினுல் தெளிகுவராக | —அறிவினுல் அறிபவர்களாக |
| நம்புமானிடவர் | —நம்புகின்ற மனிதர்கள் |
| நாசியாலொழிய | —மூக்கினுலன்றி |
| கையினுல் நாற்றம் அறிவரோ | —கரத்தினுலும் வாசனையை அறிவார்களோ. |

**கருத்து**—சிவப்பிரசாதம் இருந்தாலன்றி விஷ்ணுவானுலும், பிரம்மனுலும், தேவர்களானுலும், அந்தச் சிவபெருமானை அறியமுடியாது. மேலே சொல்லியதெல்லாம் அந்தச் சிவபெருமானை அறியும்பொருட்டே. மூக்கினுல் வாசனையை உணரலாமேயன்றி, கையினுல் அறியமுடியாது. அதுபோல அவனருளால் அவனே உணரலாமேயன்றி அறிவினுல் அறியமுடியாது. (48)

அவதாரிகை,

குருநாதகடாட்சமாம் சிவப்பிரசாதத்தின் சொரூபத்தைக் கூறுகின்றார்.

ஒழிவிலா விறைவ னருளுரு வுணரி லொத்திடும் வினையினிற் குரவன்
விழியினால் விளையப் படுவதா யுளதோர் மிக்கதோ ரதிசய மதனை
மொழியுமா றென்னான் முகுந்தனா லரனான் முடிந்திடா கண்முகப் படாதே
யழிவிலாச் சிவற்குஞ் சிவைக்குமாற் கெனக்கு மறிவுறுஞ் சிலவறி குறியால்

இதன் பொருள்.

| | |
|---|---|
| இறைவன் | —சிவபெருமானுடைய |
| ஒழிவிலா அருளுருவு | —நீங்காத பிரசாதத்தின் சொரூபத்தை |
| உணரில் | —கருதுங்கால் |
| ஒத்திடும் வினையினில் | —கருமசாமியமான காலத்தில் |
| குரவன் விழியினால் | —குரு நாதனுடைய கருணாகடாட்சத்தினால் |
| விளையப்படுவதாயுளது | —உண்டாகத் தக்கதாயிருக்கின்றது |
| ஓர் | —ஒப்பற்ற (இந்தப் பிரசாதத்தின்) |
| மிக்கதோர் அதிசயமதனை | —மிகுதியான ஓர் அதிசயத் தன்மையை |
| மொழியுமாறு | —சொல்லுதற்கு |
| என்னால் முகுந்தனால் அரனால் | —என்னாலும் விஷ்ணுவாலும் ருத்திரனாலும் |
| முடிந்திடா | —முடியாது (ஏனெனில் அந்தப் பிரசாதம்) |
| கண்முகப்படாது | —திரிசியமாகாது |
| அழிவிலாச்சிவற்கும் | —ஒருநாளும் அழிவில்லாத பரமசிவனுக்கும் |
| சிவைக்கும் மாற்குமெனக்கும் | —பராசத்திக்கும் விஷ்ணுவுக்கும் எனக்கும் |
| சில அறிகுறியால் அறிவுறும் | —சில அடையாளங்களால் தெரியும். |

**கருத்து**—சிவபெருமானுடைய பிரசாதத்தின் சொரூபத்தைக் கருதுங்கால் சுகதுக்கத்திற்கேதுவாகிய தர்மா தர்மங்கள் என்னும் கர்மங்கள் போகத்தால் அழிவுற்று ஒத்தஅளவில் குருகடாட்சத்தினால் உண்டாகத்தக்கது. அந்தப் பிரசாதத்தின் அதிசயத்தன்மையை என்னாலும், விஷ்ணுவினாலும், ருத்திரனாலும், சொல்லமுடியாது. ஏனெனில் அது திரிசியமாகாது. சிவனுக்கும், பராசத்திக்கும் விஷ்ணுவுக்கும் எனக்கும் சில அடையாளங்களால் தெரியும். (49)

அவதாரிகை.

சிவப்பிரசாதத்தை அறியவேண்டி அதனது சின்னங்களைக் கூறுகின்றார்.

மொழியுமக் குறிதான் மிக்கபே ருவகை
மொழிதழுத் தழுகையங் கத்தும்
விழியிலும் விகாரம் பிறக்கைதம் பிக்கை
மெய்விதிர்த் திருக்கைமெய் விழுகை

சுழல்கைமற் றெழுகை வானிலே யிருத்தல்
சுடரொளி யாகியே தோன்ற
லொழியுமிவ் வுடலங் கண்டிடா திருத்த
லும்பர்தே காந்தரத் துறைதல்

இதன் பொருள்.

| | |
|---|---|
| மொழியும் | —சொல்லப்பட்ட |
| அக்குறிதான் | —அந்த அடையாளங்கள் (யாவை யென்னில்) |
| மிக்க பேருவகை | —மிகுந்த பேரானந்த சந்தோஷமடைதலும் |
| மொழிதழுத்தழுகை | —மொழிதழுதழுத்தழுதலும் |
| அங்கத்தும் விழியிலும் | —சரீரத்திலும் நேத்திரங்களிலும் |
| விகாரம்பிறக்கை தம்பிக்கை | —விகாரம் உண்டாதலும் ஸ்தம்பமாயுறுதலும் |
| மெய்விதிர்த்திருக்கை | —புளகமாய் உடல்நடுக்குற்று இருத்தலும் |
| மெய்விழுகை சுழல்கை | —சரீரம் கீழேவிழுதலும் சுற்றுதலும் |
| மற்று எழுகை | —மேலும் ஊர்த்துவகதியாதலும் |
| வானிலேயிருத்தல் | —ஆகாயத்தில் இருத்தலும் |
| சுடர் ஒளியாகியே | —(தேகம்) விளங்குகின்ற சோதியாகியே |
| தோன்றல் | —காணப்படுதலும் |
| ஒழியுமிவ்வுடலம் | —அழியும் தன்மையுள்ள இச்சரீரமானது |
| கண்டிடாதிருத்தல் | —ஒருவருக்கும் தெரியாமல் மறைந்திருத்தலும் |
| உம்பர் | —உயர்வாக |
| தேகாந்தரத்து உறைதல் | —பரகாயப் பிரவேசம் செய்தலும் |

**கருத்து**—வெகு சந்தோஷமடைதலும், மொழி, நேத்திரம், சரீரம் விவ்காரப் படுதலும், நடுக்கமும், தம்பமாயுறுதலும், சரீரம் கீழேவிழுதலும், பிரமிப்பதும், மேல்கிளம்புதலும், ஆகாசத்தில் இருத்தலும், வேறு சரீரத்தை அடைதலும், சரீரம் ஒருவருக்கும் தெரியாதிருத்தலும், பிரகாசமாக விளங்குதலும், குரு கருணை கடாட்ச சிவப்பிரசாதத்தினது குறிகளாம். (50)

இதுவுமது.

ஓதிடா துணர்தல் கலைமலை முதலா வுள்ளபே தனஞ்தெற லுணர்த்த
லாதியாங் குறிக ளிறைவனு ரருளுக் கறிகுறி யாவன வருடன்
னீதிதா னெவர்க்கு மொருபடித் தாகி நிகழ்வுறு தந்தநின் மலன்றன்
பாதமே யுறுவார் பக்குவந் தோறும் படுதா மாகியே நிகழும்

இதன் பொருள்.

| | |
|---|---|
| ஓதிடாது | —அப்பியாசிக்காமல் |
| கலை உணர்தல் | —சாஸ்திரங்களைத் தானே தெரிந்துகொள்ளுதல் |

| | |
|---|---|
| மலை முதலாவுள்ள | —பருவதமுதலாக உள்ளவைகளை |
| பேதனம் | —(சாதனமின்றிப்) பேதித்திடல் |
| தெறல் உணர்த்தல் | —நிக்கிரகித்தல் அனுக்கிரகித்தல் |
| ஆதியாம் குறிகள் | —என்னும் இவை முதலான குறிகள் |
| இறைவனார் அருளுக்கு | —சிவபெருமான் திருவருளுக்கு |
| அறிகுறியாவன | —அடையாளங்கள் ஆகின்றன |
| அருள்தன் நீதிதான் | —(அந்தச்) சிவப்பிரசாதத்தின் முறைமையானது |
| எவர்க்கும் ஒருபடித்தாகி | —எல்லார்க்கும் ஒரே தன்மையாகி |
| நிகழ்வுறாது | —விளங்கமாட்டாது |
| அந்த நின்மலன்தன் | —அந்த நின்மலனாகிய சிவபிரானுடைய |
| பாதமேயுறுவார் | —திருவடிகளை அடையத் தக்கவர்களுடைய |
| பக்குவம்தோறும் | —பக்குவங்கள்தோறும் |
| படுதரமாகியே | —(அததற்குத் தகுந்தபடி) அதிகமதிகமாகவே |
| நிகழும் | —(அந்தப் பிரசாதம்) விளங்கும். |

**கருத்து**—சாஸ்திரங்களை ஓதாதுணர்தல், மலை முதலாவுள்ளவைகளைப் பேதித்திடல், நிக்கிரகித்தல், அனுக்கிரகித்தல் ஆகிய குறிகள் சிவபெருமானுடைய திருவருளுக்கு அடையாளங்களாம். அப்பிரசாதத்தின்முறை எல்லாருக்கும் ஒரேமாதிரியாக இருக்காது. சிவபெருமானுடைய அடியை அடையத் தக்கவர்களுடைய பக்குவத்துக்குத் தக்கவாறாக இருக்கும். (51)

### அவதாரிகை.

பரமசிவன் பராசத்தி இவர்களால் செய்யப்பட்ட பிரசாதம் நாராயணன், நான் (பிரம்மன்) முதலிய எவர்களாலும் செய்ய முடியாதெனவும், அதிசீக்கிரத்தில் முத்தி அடையவேண்டுமேல் முமூட்சுக்கள் மற்றைத் தேவர்களது பத்தியை நீக்கிச் சிவனையே மோசகன் என்று சரண்புகுதல் வேண்டுமெனவும் கூறுகின்றார்.

செப்பிய விந்த வருள்சிவ னாலுஞ் சிவையினா லுஞ்செயப் படுவ
தப்பெருந் தன்மை யரியினா லென்னா லொருவரா லளிக்கலா காதே
யிப்பவந் தனிலே முத்தியிச் சிப்பான் இயம்புமெத் தேவையும் விட்டுச்
சிற்பா னாகுஞ் சிவனொரு வனையே சரணெனச் சென்றுசேர் வுறுவார்

### இதன் பொருள்.

| | |
|---|---|
| செப்பிய | —இப்போது சொல்லப்பட்ட |
| இந்த அருள் சிவனாலும் | —இந்தப் பிரசாதம் சிவபிரானாலும் |
| சிவையினாலும் செயப்படுவது | —பராசத்தியினாலும் கொடுக்கப்படுவது |
| அரியினால் என்னால் | —நாராயணனாலும் என்னாலும் |

| | |
|---|---|
| ஒருவரால் | —(வேறு) ஒருவராலும் |
| அப்பெருந்தன்மை | —அந்த மகத்துவமுடைய (பிரசாதத்தை) |
| அளிக்கலாகாது | —கொடுக்கமுடியாது |
| இப்பவம் தனிலே | —இந்தப் பிறப்பிற்றுனே |
| முத்திபிச்சிப்பான் | —மோட்சத்தை அடையவேண்டுமென்ற ஆசை கொண்ட (முமுக்ஷுவான)வன் |

இயம்பும் எத்தேவையும் விட்டு—சொல்லப்பட்ட எந்தத் தேவர்களையும்நீக்கி

சிற்பரனுகும் சிவன் ஒருவனையே—சித்சொரூபனுகிய சிவபிரான் ஒருவனையே

சரண் எனச் சென்று சேர்வுறுவான்—அடைக்கலமென்று போய் அடைவான்.

**கருத்து**—இச்சிவப் பிரசாதம் சிவபிரான், பராசத்தி இவர்களால் மாத்திரம் கொடுக்கமுடியுமே ஒழிய மற்று எவராலும் கொடுக்கமுடியாது. இப்பிறப்பிலேயே மோட்சத்தை அடைய இச்சிக்கும் முமுக்ஷுவானவன் இப்பிறப்பிலேயே சித்சொரூபனுகிய சிவபெருமானையே அடைக்கலம் புகுவான். (52)

### அவதாரிகை.

சிவபத்தியினுலே முத்திசித்திப்பதன்றி விஷ்ணு முதலியோரிடத்துச் செய்யப்படும் பத்தியால் சித்தியாது. சிவனடியார்களிடத்தில் திருவருள் விளங்குவதுபோல மற்றை அடியார்களிடத்தில் விளங்காதென்று கூறுகின்றுர்.

பாகதி சிவன்பால் வைத்திடப் பட்ட பத்தியா லுறுமது வன்றி
யுரகமேற் றுயில்வோன் பாலுமென் பாலு முற்றபத் தியினிலுண் டாகா
திரமுறு சிவபத் தன்றனு கத்துத் திருவரு ளொளிமிகத் திகழும்
பரிசரி பத்தர்க் கெனதுபத் தர்க்கும் பரமுற நிகழ்வுறப் படாதால்

### இதன் பொருள்.

| | |
|---|---|
| சிவன்பால் வைத்திடப்பட்ட | —சிவனிடத்தில் வைக்கப்பட்ட |
| பத்தியால் பரகதி உறும் | —உத்தமபத்தியால் முத்தியானது சித்திக்கும் |
| அதுவன்றி | —அந்தச் சிவபத்தி அல்லாமல் |
| உரகமேல் துயில்வோன்பாலும் | —அரவணைமேல் (யோக) நித்திரை செய்கின்றவ (மகாவிஷ்ணுவி) னிடத்திலும் |
| என்பாலும் உற்றபத்தியினில் | —என்னிடத்தில் பொருந்திய பத்தியினுலும் |
| உண்டாகா | —ஒருவருக்கும் மோட்சம் சித்திக்கமாட்டாது |
| திரமுறு | —நிலைபெற்ற |
| சிவபத்தன் தன் ஆகத்து | —சிவபத்தனுகிய மகானுடைய தேகத்தில் |
| திருவருள் ஒளி | —பரமசிவப் பிரசாத விளக்கம் |
| மிகத்திகழும் பரிசு | —மிகுதியாய் விளங்கும் தன்மைபோல் |
| அரிபத்தர்க்கு | —நாராயணன் அடியார்களுக்கும் |

எனது பத்தர்க்கும் —என்னுடைய அடியார்களுக்கும்
பாமுற —பரத்தை அடையும்படி
நிகழ்வுறப்படாது —(அந்தப் பிரசாதம்) விளக்கமுறமாட்டாது.

**கருத்து**—சிவபத்தியால் மோட்சம் சித்திக்கும். விஷ்ணு முதலியோரிடத்துவைத்த பத்தியால் அவ்வாறு மோட்சம் சித்திக்கமாட்டாது. சிவபத்தர்களுடைய தேகத்தில் சிவப்பிரசாதம் விளக்கமுறுவதுபோல் மற்றைத் தேவர்களின் அடியார்களிடத்தில் விளக்கமுறமாட்டாது.

## அவதாரிகை.

விஷ்ணு முதலிய தேவர்களது பத்தியைக் கௌணமாகக்கொண்டு நீக்கிச் சிவபெருமானையே திரிகரணங்களாலும் பத்திசெய்திடில் அவரே பிரசாதஞ் செய்கின்றார். அவ்வாறு பத்திசெய்யில் எவராலும் அறியவொண்ணாத பரமசிவனைப் பிரத்தியகான்ம சொரூபமாகவும், சாம்பமூர்த்தியான சகுணரூபமாகவும் சிவபெருமானைப் பிரத்தியட்சமாகக்காணலாம் எனக் கூறுகின்றார்.

## வேறு.

ஆதலா லரியை யென்னை யாதாவு செய்திடா தரன்மகேசனைக்
காதலா லடைக முத்தி சித்திகடு கக்கிடைக்கு மருளெய்துமப்
போதிலே யரிய னாகிலுந் தனது பூரணப் புரண மானசிற்
சோதியே முழுது மாகி நின்றபடி தோன்றுமாறு வெளிதோன்றுமால்

## இதன் பொருள்.

ஆதலால் —(இவ்வாறு) ஆகையால் (முமுக்ஷுவானவன்)
அரியை என்னை ஆதரவுசெய்திடாது—விஷ்ணுவையும் என்னையும் விரும்பாம
அரன் மகேசனை —அரனென்னும் சிவபெருமானை
காதலால் அடைக —அன்பினால் சரணடையக்கடவன்
முத்திசித்தி —மோட்ச சித்தியானது
கடுகக் கிடைக்கும் அருள் எய்தும்—சீக்கிரத்தில் கிடைக்கத்தக்க பிரசாதம் உண்டாகும்
அப்போதிலே —அக்கணத்திற்றானே
அரியனாகிலும் —(பரமசிவன் காண்டற்கு) அரியனாகிலும்
தனது பூரணப்புரணமான —தன்னுடைய பூர்ணப் பிரகாசமான
சிற்சோதியே —சிற்பிரகாசமே
முழுதுமாகி நின்றபடி —எல்லாமாயிருக்கின்ற தன்மை
தோன்றுமாறு —விளங்கும்படி
வெளிதோன்றும் —(சாம்பமூர்த்தியாகப்) பிரத்தியட்சமாவான்

கருத்து—சிவபெருமானிடத்தில் பத்திவைத்து அவனைச் சரணமடைந்தால் மோட்சம் சீக்கிரம் சித்திக்கும். அப்படிச்செய்யில் எவராலும் அறியவோண்ணாத பரமசிவன் பிரத்தியகான்மாவாகவும், மூர்த்தியான்மாவாகவும் சர்வாத்ம ரூபமாகவும் அவ்வாறு பக்தி வைக்கும் முமூட்சுக்களுக்கு விளங்குவான். (54)

அவதாரிகை.

அனைத்துக்கும் சாட்சியாகிய பிரம்மத்தைச் சாட்சிமாத்திரமாய் உணரும் பரமாத்துவித விஞ்ஞானமே முடிந்த நிலமென்றும், இதற்கு வேறாயறிந்தவன் பசுவென்றும் கூறுகின்றார்.

வேறு.

சாக்கியா மெல்லாப் பொருட்குமீ சனையெப்
　　பொருள்களுஞ் சாக்கிமாத் திரமா
நோக்கினு னியாவ னோக்கத னாலே
　　நோக்கலா மிதுமறை யந்த
நீக்கிலாப் பரமாத் துவிதநிட் டையாமிந்
　　நிலமொன்றே முடிவிதிற் பேத
மாக்கினு னறிவா லறிவிலா தமையா
　　லவனலா தார்பசு வாவார்

இதன் பொருள்.

| | |
|---|---|
| எல்லாப்பொருட்கும் | —சகல வஸ்துக்களுக்கும் |
| சாக்கியாம் ஈசனை | —(சாட்சியாகிய) பரமசிவனையும் |
| எப்பொருள்களும் | —(சாட்சியமான) எந்தப் பொருள்களையும் |
| சாக்கிமாத்திரமா | —சாட்சி மாத்திரமாகவே |
| நோக்கினுனியாவன் | —அறிந்தவன் எவனோ (அவனுடைய) |
| நோக்கதனால் | —ஞானத்தினாலே |
| இது நோக்கலாம் | —இந்தப் பிரம்மமானது அறியலாகும் |
| மறையந்தம் நீக்கிலா | —வேதாந்தத்தை நீங்காத |
| பரமாத்துவித நிட்டையாம் | —பரமாத்துவித நிட்டையாகும் |
| இந்நிலம் ஒன்றேமுடிவு | —இந்தப்பூமி ஒன்றே முடிவாயுள்ளது |
| அறிவால் அறிவிலாதமையால் | —ஞானத்தினாலேனும் அஞ்ஞானத்தினாலேனும் |
| இதில்பேத மாக்கினுன் | —இந்தப் பரமாத்துவித நிட்டையாம் ஸ்தானத்தில் பேதம் செய்தவன் (எவனோ) |
| அவனலாது | —அவனைத்தவிர |
| ஆர் பசுவாவார் | —உலகத்தில் எவர்கள் தான் பசு ஆவார்கள். |

**கருத்து**—சர்வ சாட்சியான ஈசுவரனையும், சாட்சியமான சகல பொருள்களையும், சாட்சிமாத்திரமாக எவன் ஒருவன் அறிகின்றானோ அவனே உண்மை அறிந்தவன். இதுவே பரமாத்துவித நிஷ்டையாகும். இதுவே முடிவான பூமி. ஞானத்தாலோ அஞ்ஞானத்தாலோ எவன் ஒருவன் பேதம் கொள்கிறானோ அவனே பசு என்னும் மற்றொரு பெயருக்குடையவனாகின்றான். (55)

அவதாரிகை.

பரமாத்துவித ஞானியே பரதேவதை என்பதையும், அதில் அன்பு செய்யமாட்டாதபடி துவேஷமுண்டாவதற்குக் காரணத்தையும் கூறுகின்றார்.

வேறு.

பரமாத் துவித ஞானியே பரதே வதைதா னவனேயித்
திரமா முத்தி யானிங்குச் செப்பும் பொருள்செய் வினையாலு
முரமாந் ததீசி கௌதமனா லுண்டாஞ் சாப வுரையாலுங்
கரமா மனிதர் நெஞ்சுதனிற் காதல் செய்யா ரொருகாலும்

இதன் பொருள்.

பரமாத்துவிதஞானியே —(இந்தப்)பரமாத்துவித விஞ்ஞானமுடையவனே
பரதேவதை —பரவஸ்து ஆவான்
அவனே —அந்த ஞானியே
இத்திரமாமுத்தி —இந்த நிலைபெற்றதாகிய முத்தியுமாவான்
யான் —நான்
இங்குச் செப்பும் பொருள்—இவ்விடத்தில்கூறிய (பரமாத்துவித) தாற்பரியத்தை
செய்வினையாலும் —(முன்)செய்த பாவத்தினாலும்
உரமாந்ததீசி —(தவத்தில்)வலிபொருந்திய ததீசி முனிவராலும்
கௌதமனால் —கௌதம முனிவராலும்
உண்டாம் —(ஒவ்வொரு காரணத்தினால்) சம்பவித்த
சாப உரையாலும் —சாபவார்த்தையாலும்
கரமாமனிதர் —கழுதைபோன்ற மானிடர்கள்
நெஞ்சுதனில் —(தங்கள்) மனத்தின்கண்
ஒருகாலும் காதல்செய்யார் —எக்காலத்திலும் அன்புசெய்யமாட்டார்கள்.

**கருத்து**—பரமாத்துவ ஞானியே பரவஸ்து ஆவான். அவனே நிலைபெற்ற முத்தியுமாவான், நான் (பிரம்மன்) சொல்லிய இந்தப் பரமாத்துவித தாற்பரியத்தைக் கழுதைபோன்ற சிலர் உணரமாட்டார்கள். ஏனென்றால், அவர்கள் செய்த பாவத்தினாலும், ததீசி, கௌதமருடைய சாபத்தினாலுமேயாம். (56)

இதுவுமது—வேறு.

ஆரணத்தன் னியமில்லாச் சிவன்றன் பாலு
மத்துவித வேதனத்து மடைதற் குள்ள
காரணமாஞ் சிவலிங்கார்ச் சனத்துஞ் சாலக்
காய்வதுவு மேயன்றி யுருத்தி ராக்க
தாரணத்துந் திரிபுண்ட்ர தார ணத்துஞ்
சருவாங்கோத் தூளணத்துந் தாமே காய்வர்
சீரிணக்குஞ் சிவனென்னு முரையுந் தங்கள்
செவியாலுங் கேளார்செய் வினையாற் றீயோர்

இதன் பொருள்.

தீயோர் —கொடியவர்கள்
செய்வினையால் —ஜன்மாந்தரத்திற்செய்த (கொடிய)வினையால்
ஆரணத்து அன்னியமில்லா —வேதத்திற்கு வேறில்லாத
சிவன் தன்பாலும் —சிவபெருமானிடத்திலும்
அத்துவித வேதனத்தும் —துவிதமில்லாத ஞானத்திலும்
அடைதற்கு உள்ள —(சிவபெருமானை) அடைவதற்கு ஏற்றதாயுள்ள
காரணமாம் —காரணமாகிய
சிவலிங்கார்ச்சனத்தும் —சிவலிங்க பூசையிலும்
சாலக் காய்வதுமேயன்றி —மிகவும் துவேஷிப்பதுமல்லாமல்
உருத்திராக்கதாரணத்தும் —உருத்திராட்சம் தரித்துக்கொள்வதிலும்
திரிபுண்ட்ரதாரணத்தும் —(விபூதியைத்) திரிபுண்ட்ரமாகத் தரித்துக்கொள்வதிலும்
சருவாங்கோத்தூளணத்தும் —(விபூதியை) உடலெங்கும் (தண்ணீர்விட்டுக் குழையாமல்) பூசிக்கொள்வதிலும்
தாமே காய்வர் —தாங்களே துவேஷிப்பார்கள்
சீர் இணக்கும் —(ஒருதரம் சொன்னவர்களுக்கு முத்தி என்னும்) பெருஞ்செல்வத்தைக் கொடுக்கின்ற
சிவன் என்னும் உரையும் —சிவன் என்கிற வார்த்தையையும்
தங்கள் செவியாலும் கேளார்—தங்கள் காதினாலும் கேட்கமாட்டார்கள்.

கருத்து—வேத ஜன்யமான இந்தப் பரமாத்துவித ஞானத்திலும், சிவனிடத்திலும் துவேஷமுண்டாகும். ஞானசாதனங்களாகிய சர்வாங்கதூளணம், திரிபுண்டரதாரணம், ருத்திராட்சதாரணம், சிவலிங்கபூசை, சிவசப்த ஜபம், இவைகளில் தீவினையின் வசப்பட்ட தீயோர்க்குத் துவேஷமுண்டாகும். (57)

## அவதாரிகை.

அநேக ஜன்ம சுகிர்தங்களால் சுருதி ஸ்மிருதிகளின்படி நடப்பவர்களுக்கே பரமாத்துவித ஞானமுண்டாகும் எனவும், அவ்வித ஞானி மும்மூர்த்திகளாலும் எத்தேவர்களாலும் எக்காலத்தும் பூசிக்கத்தக்கவன் எனவும் கூறுகின்றார்.

## வேறு.

தொல்லைநல் வினையாற் சுருதிநன் மிருதி
சொன்னவா துணிந்தவத் தூயோ
ரொல்லையிற் பரமாத் துவிதவே தனத்தை
யுள்ளவா றுணரவே யுணர்வர்
நல்லவிப் பரமாத் துவிதஞா னியைநா
ராயண னானுருத் திரனு
மெல்லையி லெல்லாத் தேவரும் பூசித்
தேத்தவும் படுமிவ் னென்றும்

## இதன் பொருள்.

| | |
|---|---|
| தொல்லை நல்வினையால் | —முன்புரிந்த புண்ணிய கர்மங்களால் |
| சுருதி நல்மிருதி | —வேதங்களும் நல்ல ஸ்மிருதிகளும் |
| சொன்னவா துணிந்த | —சொல்லியபிரகாரமே தெளிந்தவர்களாகிய |
| அத்தூயோர் | —அந்தப் பரிசுத்தமானவர்கள் |
| ஒல்லையில் | —சீக்கிரத்தில் |
| பரமாத்துவித வேதனத்தை | —பரமாத்துவித ஞானத்தை |
| உள்ளவாறு உணரவே யுணர்வர் | —உள்ளபடி அறியவே அறிவார்கள் |
| நல்ல | —நன்மைபொருந்திய |
| இப்பரமாத்துவித ஞானியை | —இந்தப் பரமாத்துவித ஞானமுடையவனை |
| நாராயணன் நான் | —மகாவிஷ்ணுவும் நானு (பிரம்மனு) ம் |
| உருத்திரனும் | —உருத்திரனும் |
| எல்லையில் எல்லாத்தேவரும் | —அளவில்லாத சகலதேவர்களும் |
| இவண் என்றும் பூசித்து | —இவ்விடத்தில் எக்காலத்தும் பூசித்து |
| ஏத்தவும்படும் | —அருச்சித்துத் துதிப்பார்கள். |

**கருத்து**—முன்செய்த புண்ணியகர்மங்களால் சுருதி ஸ்மிருதிகளில் சொல்லியபடி தெளிந்தவர்கள் இந்தப் பரமாத்துவித ஞானத்தை உள்ளபடி அறிவார்கள். அவர்கள் பிரம்ம விஷ்ணு ருத்திரர்கள் என்கின்ற மூத்தேவர்களாலும் இன்னும் இதர எத்தேவதைகளாலும் எக்காலத்தும் பூசிக்கப்படுவார்கள். (58)

## அவதாரிகை.

பரமாத்துவித விஞ்ஞானியினுடைய பெருமையைக் கூறுகின்றார்.

ஈசனா ஞானி யிருந்துள விடத்தே யிருப்பது முத்திதா னந்தத்
தேசிக னேவல் செய்பவன் காலென் சென்னியி லிருப்பது மன்னி
மாசிலாப் பரம ஞானியா முனிக்கு மகேசனு மொப்பலன் மதிக்கி
லாசிலா வரியு மொப்பல னானு மொப்பல னேவரொப் பாரே.

### இதன் பொருள்.

ஈசனும் ஞானி —ஈசுவர சொரூபனாகிய ஞானியானவன்
இருந்துளவிடத்தே —வசிக்கின்ற இடத்திலேயே
முத்தியிருப்பது —மோக்ஷமானது இருக்கின்றது
அந்தத்தேசிகன் —அந்தக்குருநாதனுடைய
ஏவல்செய்பவன் கால் —பணிவிடை செய்பவனுடைய பாதம்
என் சென்னியில் —எனது தலையின்மேல்
மன்னியிருப்பது —நிலையாயிருக்கின்றது
மாசிலா —குற்றமில்லாத
பரமஞானியா முனிக்கு —அத்துவித விஞ்ஞானியான முனிவனுக்கு
மகேசனும் ஒப்பலன் —உருத்திரனும் சமானமாகமாட்டான்
மதிக்கில் —ஆராயுங்கால்
ஆசிலா அரியும் —குற்றமில்லாத திருமாலும்
ஒப்பலன் —சமானமாகமாட்டான்
நானும் ஒப்பலன் —(பிரம்மனாகிய) நானும் சமானமாகமாட்டேன் (என்றால்)
ஏவர் ஒப்பார் —யாவர்தாம் சமானமாவர்கள்.

**கருத்து**—ஈசுவர ஸ்வரூபனாகிய ஞானி இருக்கும் இடமே மோட்சம். அவனுக்குப் பணிவிடைசெய்கின்றவர்களுடைய பாதங்களை யான் என் சிரசில் வகித்துள்ளேன். அந்த ஞானியாம் முனிவனுக்குப் பிரம்ம விஷ்ணு ருத்திரர் களாகிய மும்மூர்த்திகளும் நிகரில்லையென்றால் மற்று யாவர்தாம் நிகராவார்?

## அவதாரிகை.

பரமாத்துவித ஞானிக்கு உடல் பொருளாவியாமிவை மூன்றினையும் தத்தம்செய்யில் பிறவி நீங்கத்தக்க ஞானம் உண்டாகும் என்று கூறுகின்றார்.

ஒப்பறு பரமாத் துவிதஞா னத்தை யுணர்ந்துள பரமயோகிக்குக்
கைப்பொரு ளாவி காயமுங் கொடுப்பான் காதலா லவைகொடுத் திடவே
யிப்பவ மறுக்கு ஞானம்வந் துதித்தற் கேதுவா மதுவிது வொழிய
வுற்பவந் துடைக்கு முணர்வுபெற் றுய்தற் கிலதிநி லையுநீ ரொன்றும்

## இதன் பொருள்.

(முமூட்சுவானவன்) ஒப்பறு —நிகரில்லாத
பரமாத்துவித ஞானத்தை —உயர்ந்ததான அத்துவித விஞ்ஞானத்தை
உணர்ந்துள பரமயோகிக்கு —அறிந்திருக்கின்ற பரமாத்துவித நிஷ்டனுக்கு
கைப்பொருள் —தன் கையிலுள்ள பொருளையும்
ஆவி காயமும் —பிராணனையும் தேகத்தையும்
காதலால் கொடுப்பான் —(மிகுந்த) அன்பினாலே கொடுக்கக்கடவன்
அவை கொடுத்திடவே —அந்த மூன்றையும் கொடுக்கவே
இப்பவம் அறுக்கும் —இப்பிறவியை (துன்பத்தை) ஒழிக்கத்தக்க
ஞானம்வந்து உதித்தற்கு —பரமஞானம் வந்தடைவதற்கு
அது ஏதுவாம் —அது காரணமாகும்
இது ஒழிய —இதுவல்லாமல்
உற்பவம் துடைக்கும் —பிறப்பை ஒழிக்கின்ற
உணர்வுபெற்று —ஞானத்தை அடைந்து
உய்தற்கு இலது —பிழைப்பதற்கு (வேறுமார்க்கம்) இல்லையாகும்
இதில் ஒன்றும் —இந்தத் தாற்பரியத்தில் யாதொன்றும்
ஐயுறீர் —(நீங்கள்) சந்தேகம் கொள்ளாதீர்கள்.

**கருத்து**—முமூக்ஷுவானவன் பிரம்மநிஷ்டனுக்குத் தன்னுடைய உடல் பொருள்ஆவி மூன்றையும் கொடுக்கக்கடவன். அங்ஙனம் செய்யின் பிறப்பை ஒழிக்கத்தக்கதாகிய ஞானம் உண்டாகும். ஞானோதயத்துக்கு இதையொழிய வேறுமார்க்கமில்லை. இதில் நீங்கள் கொஞ்சமும் சந்தேகம்கொள்ளவேண்டாம்.

## அவதாரிகை.

பரமாத்துவித ஞானத்திற்கு விரோதமானவற்றைக் கூறுகின்றார்.

சதுமறை யொழிந்த வாதனை பொல்லாத் தர்க்கவா தனையுல கத்தின்
மதமுறு சமய வாதனை தார மக்கள்சுற் றத்தின்வா தனையு
மிதமுறும் பொருளின் வாதனை தேகேந் தியமனம் புத்திநற் பிராணன்
முதலவா தனையும் வித்தைவா தனையு முடிவில்போ கத்தின்வா தனையும்.

## இதன் பொருள்.

சதுமறை ஒழிந்தவாதனை —நான்கு வேதங்களுக்கும் புறம்பானவைகளில் வாசனை (பிடிப்பு)
பொல்லாத்தர்க்க வாதனை —கொடிய குதர்க்க வாசனையும்
உலகத்தில் —ஜகத்தில்
மதமுறு சமயவாதனை —அகங்காரமுள்ள சமயவாசனையும்

| | |
|---|---|
| தாரம் மக்கள் சுற்றத்தின் வாதனையும் | மனைவி, புத்திரர், உறவோர் (ஆகிய இவர்களிடத்துள்ள) வாசனையும் |
| இதமுறும் பொருளின்வாதனை | —நன்மை பொருந்துகின்ற திரவியத்தின் வாசனையும் |
| தேகேந்திய மனம் | —உடல், இந்திரியம், மனம் |
| புத்தி நற்பிராணன் | —புந்தி நல்ல ஆவி |
| முதல வாதனையும் | —முதலானவற்றின் வாசனையும் |
| வித்தை வாதனையும் | —கல்வியின் வாசனையும் |
| முடிவில் | —ஒழிவில்லாத |
| போகத்தின் வாசனையும் | —போகத்திலுள்ள வாசனையும் |

## இதுவுமது.

ஏறுடைச் சிவனைத் திருநெடு மாலை யிகழும்வா தனையும்வே தத்திற்
கூறிடு ஞான சாதன மாகக் கொளுமுத்தூ ளனபுண்ட ரத்தை
மாறுட னிகழும் வாதனை பாவ வாதனை யாவுமா னிடர்க்கு
வேறடும் பரமாத் துவிதஞா னத்தை விலக்கிடும் விரோதிவிண் ணவரே.

## இதன் பொருள்.

| | |
|---|---|
| ஏறுடைச் சிவனை | —இடபவாகனனாகிய ருத்திரனையும் |
| திருநெடுமாலை | —திருமகளையுடைய மகாவிஷ்ணுவையும் |
| இகழும் வாதனையும் | —நிந்திக்கும் வாசனையும் |
| வேதத்தில் கூறிடும் | —வேதங்களில் சொல்லியிருக்கின்ற |
| ஞானசாதனமாக | —ஞானத்திற்குச் சாதனமாக |
| கொளும் | —அங்கீகரிக்கப்பட்ட |
| உத்தூளன புண்டரத்தை | —(விபூதி) உத்தூளனம் திரிபுண்டரம் இவற்றை |
| மாறுடன் | —விரோதத்துடனே |
| இகழும் வாதனை | —நிந்தித்திடும் வாசனையும் |
| பாவவாதனையாவும் | —பாவ சம்பந்தமான வாசனைகள் அனைத்தும் |
| விண்ணவரே | —தேவர்களே |
| மானிடர்க்கு வேறு அடும் | —மனிதர்களுக்குத் துவிதத்தை நாசம்செய்கின்ற |
| பரமாத்துவித ஞானத்தை | —உயர்ந்த அத்துவித விஞ்ஞானத்தை |
| விலக்கும் விரோதி | —நீக்குகின்ற விரோதிகளாகும். |

**கருத்து**—பரமாத்துவித விஞ்ஞானம் அடையவொட்டாமல் தடுக்கும் பிரதிபந்தகம் யாதெனில் மனிதர்களுக்கு வேதபாகியமான தந்திரங்களில் பிடிப்பு வாசனை குதர்க்கவாசனை, லோகவாசனை புத்திர, மித்திர, பாரியாள்வாசனை,

அர்த்தவாசனை, தேகம், இந்திரியம், மனம், புத்தி, பிராணன் இவற்றின் வாசனை, பாண்டித்தியவாசனை, போகவாசனை, காந்திவாசனை, ருத்ரன், வேத பாராயணங்களில் துவேஷவாசனை, ஞானசாதனங்களான திரிபுண்டர முதலிய வைகளில் துவேஷவாசனை, பாவவாசனை முதலிய இவைகளேயாம். (62)

அவதாரிகை.

முமுக்ஷுவானவன் ஞானப் பிரதிபந்தவாசனையை நீக்கிப் பரமாத்துவித ஞானியாவனெனவும், வேதம்கூறிய இந்த அத்துவித ஞானசொரூபப் பிரம்மத்தின் மகிமையை என்னால் உரைக்க ஒண்ணாதெனவும் கூறுகின்றார்.

வேறு.

ஆதலால் வீடதனி லாசை யுள்ளோ
னதின்மிகவுந் தாற் பரிய னாகி முன்ன
மோதுவா தனைகளெல்லா மிகந்தெப் போது
முற்றபர மாத்துவித ஞானி யாவன்
வேதவே தாந்தங்க ளுரைக்கப் பட்ட
மேலான வத்துவித ஞான மாகு
நாதனும் பிரமத்தை நவில லாமோ
நாமௌனத் திருப்பதல்லா னாகத் தீரே.

இதன் பொருள்.

ஆதலால் வீடதனில் —ஆதலால் மோட்சத்தில்
ஆசையுள்ளோன் —இச்சையுடையவன்
அதில் —அந்தப் பரமாத்துவிதத்தில்
மிகவும் தாற்பரியனாகி —மிகவும் கருத்துள்ளவனாகி
முன்னம் ஓது —முன்சொன்ன
வாதனைகள் எல்லாம் இகந்து —வாசனைகள் அனைத்தையும்விட்டு
எப்போதும் உற்ற —எக்காலத்தும் பொருந்திய
பரமாத்துவித ஞானியாவன் —பரமாத்துவித ஞானமுடையவன் ஆவான்
வேத வேதாந்தங்கள் —வேதங்களாலும், வேதாந்தங்களாலும்
உரைக்கப்பட்ட —சொல்லப்பட்ட
மேலான அத்துவித ஞானமாகும்—உயர்வான அத்துவித ஞானசொரூபமாகிய
நாதனும் பிரம்மத்தை —பரமசிவமான பிரம்மத்தின் சுபாவத்தை
நாகத்தீர் —விண்ணோர்களே
நாம் மௌனத் திருப்பதல்லால்—நாம் சும்மா இருக்கவேண்டுவதன்றி
நவிலலாமோ —சொல்லமுடியுமோ.

கருத்து—தேவர்களே! முமுக்ஷுவானவன் வாசனைகளையெல்லாம் ஒழித்து எப்போதும் பரமாத்துவிதத்தில் கருத்துள்ளவனுகிப் பரமாத்துவித ஞானி யாவான். வேத வேதாந்தங்களால் சொல்லப்பட்ட பரமாத்துவித ஞானசொரூப மாகிய பிரம்மத்தின் சுபாவத்தை நம்மால் சொல்ல முடியுமா? முடியாது. (63)

## அவதாரிகை.

துவிதமற்ற தன்மையாகிய பாரமார்த்திக சுத்த சொரூப ஞானமாகிய இதனைப் பிரம்மநிட்டையுடைய களங்கமில்லாத வேதவேதாந்தியர்களே குற்றமில்லாத பரிபக்குவமுடையவர்களுக்குச் சொல்லவல்லவர்கள் எனக்கூறுகின்றூர்.

## வேறு.

ஓதிய தோட மெல்லா மொழிந்துள ராகி யுற்ற
வேதவே தாந்தந் தன்னின் மிகநிட்டை யுடைய நல்லோர்
யாதுதம் மிதயத் துள்ளா மிரண்டிலா ஞான மத்தைப்
போதகஞ் செய்யத் தக்கோ ராவர்கள் புரையற் றோர்க்கே.

## இதன் பொருள்.

ஓதிய தோடமெல்லாம் —(முன்பு) கூறிய குற்றம் அனைத்தும்
ஒழிந்துளராகியுற்ற —நீங்கினவர்களாயிருக்கின்ற
வேத வேதாந்தந்தன்னில் —வேதத்திலும், வேதாந்தத்திலும் (விளங்கிய பிரம்மத்தில்)
மிகநிட்டைவுடைய நல்லோர் —மிகவும் நிஷ்டைஉடைய மகான்கள்
தம் இதயத்துள்ளாம் —தங்கள் மனத்துள் பொருந்துகின்ற
யாது இரண்டிலா ஞானம் அத்தை—எது துவிதமில்லாத ஞானமோ அதனை
புரையற்றோர்க்கே —குற்றமில்லாதவர்களுக்கே
போதகம்செய்ய —உபதேசம்செய்ய
தக்கோராவர்கள் —தகுந்தவராவார்கள்.

கருத்து—இந்தப் பரமசொரூபத்தைக் குற்றமற்ற வேத வேதாந்தத்தில் விளங்கிய பிரம்மத்தில் நிஷ்டையுடைய மகான்களே குற்றமில்லாத பரிபக்குவ முடையவர்களுக்குச் சொல்லுவார்கள். மற்றையோரால் சொல்லமுடியாது. (64)

## அவதாரிகை.

குருநாதன் மனமிரங்கித் திருவருளால் ஒருதரம் பார்த்தபோதே சகல துக்கங்களும் தாமாகவே நீங்குமாறு உண்டாகும் பரமாத்துவித ஞானமகிமையை உள்ளது உள்ளவாறு நான் உங்களுக்கு மொழிந்தேனென்று கூறுகின்றூர்.

சுரரினுத் தமரே யெல்லாத் துக்கமுந் தொலைப்ப தாகிப்
பரிவொடொண் குரவன் பார்த்த பொழுதிலே பரமா னந்தப்
பொருவிலாச் சிவரூபத்தை யடைவித்துப் பூரண மாக்கும்
பெரியவத் துவிதஞான முங்கட்குப் பேச லானேம்.

இதன் பொருள்.

| | |
|---|---|
| சுரரில் உத்தமரே | —தேவர்களில் உயர்ந்தவர்களே |
| எல்லாத் துக்கமும் | —சகல துக்கங்களையும் |
| தொலைப்பதாகி | —ஒழிப்பதாகி |
| பரிவொடு ஒண்குரவன் | —அன்புடன் ஞானகுருவானவன் |
| பார்த்தபொழுதிலே | —(ஒருதரம் கிருபாதிருஷ்டியால்) கடாட்சித்த காலத்தில் தானே |
| பொருவிலா | —ஒப்பில்லாத |
| பரமானந்த சிவரூபத்தை | —பிரமானந்த சிவரூபத்தை |
| அடைவித்துப் பூரணமாக்கும் | —அடையப்பண்ணிப் பூரணமாகச் செய்கின்ற |
| பெரிய அத்துவித ஞானம் | —பரமாத்துவித ஞானத்தை |
| உங்கட்கு | —உங்களுக்கு |
| பேசலானேம் | —சொல்லலானேம். |

**கருத்து**—தேவர்களே! குருநாதன் கடைக்கண்ணால் பார்த்தமாத்திரத்தில் சகல துக்கங்களையும்போக்கிப் பரமானந்த சிவசொரூபத்தை அடையச்செய்து பூரணமாக்குகின்ற பரமாத்துவித ஞானத்தைத் தேவர்களில் சிறந்தோர்களாகிய உங்களுக்கு நான் சொன்னேன் என்று பிரம்மதேவன் சொன்னான். (65)

நான்காம் அத்தியாயம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் 163.



## ஐந்தாவது

## சாந்தோக்கிய உபநிஷத தாற்பரியம் உரைத்த அத்தியாயம்.

### அத்தியாய அவதாரிகை.

பூர்வம் சாமவேத ஜைமினிசாகையில் அந்தர்க்கதமான கேனோ உபநிஷதத்திற்குப் பிரமான்ம ஐக்கியத்துவம் காண்பிக்கப்பட்டது. அந்தப்படியே சாந்தோக்கிய உபநிஷதத்திற்கும் பிரமான்ம ஐக்கியத்துவத்தைப் பிரம்மா இரண்டு அத்தியாயங்களாலும் கூறுவான்தொடங்கி இந்த அத்தியாயத்தில் நிஷ்பிரபஞ்சமாகிய அத்விதீய பிரம்மத்தைப் பிரத்தியகான்ம சொரூபமாக உபதேசித்தற்குக் காரியப் பிரபஞ்சம் காரணப் பிரம்மத்திற்கு வேறு இல்லாததுபற்றி ஏகவஸ்துவின் விஞ்ஞானத்தினால் அனைத்தின் விஞ்ஞானம் உண்டாகுமென்று பிரதிக்ஞை செய்துகொண்டு திருஷ்டாந்த பூர்வமாகப் பிரதிபாதிக்கப்பட்டிருக்கின்ற சுருதியின் தாற்பரியத்தைச் சங்கை சமாதானத்தோடு கூறுகின்றார்.

### அவதாரிகை.

பிரம்மன் தேவர்களுக்கு மீண்டும் மிக ரகசியமான அத்துவித உபதேசத்தை உங்களுக்குச் சொல்லுகிறேன் கவனமாய்க் கேளுங்கள் என்று சொல்லுகிறான்.

மறைப்பதாய் மிகவு முன்னோர் மடிவிலாப் பொருளைக் காட்டுஞ்
சிறப்புடை யுபதேசத்தைச் செப்புவ னுங்கட் கெல்லா
மிறப்பிலா தரத்தி னோடு மிசைந்திது கேண்மி னென்றான்
பிறப்பன முழுதுஞ் செய்யும் பீடுடை மலரின் மேலோன்.

### இதன் பொருள்.

பிறப்பனமுழுதும் —பிறக்கும் பொருளனைத்தையும்
செய்யும் பீடுஉடை —சிருஷ்டிக்கின்ற பெருமையை உடைய
மலரின் மேலோன் —தாமரைமலரில் வசிக்கின்ற பிரம்மதேவனானவன்
முன்னோர் —முதியோர்களால்
மிகவும் மறைப்பதாய் —மிகவும் (ரகசியமாக)மறைக்கத் தக்கதாயிருக்கின்ற
மடிவிலாப்பொருளைக் காட்டும்—அழிவில்லாத பொருளை(விளங்கக்)காட்டுகின்ற
சிறப்புடை உபதேசத்தை —மேன்மையுடைய அத்துவித உபதேசத்தை
உங்கட்கு எல்லாம் செப்புவன்—உங்களுக்கெல்லாம் சொல்லுகிறேன்
இறப்பில் ஆதரத்தினோடும் —அழிவில்லாத அன்பினோடும்
இசைந்து —இணங்கி
இதுகேண்மின் என்றான் —இதனைக்கேளுங்கள் என்றான்.

**கருத்து**—உபதேசத்தாலன்றி மற்றெவ்வித உபாயத்தினாலும் அறிய ஒண்ணாததாகிய அத்துவித உபதேசத்தை உங்களுக்குச் சொல்லுகிறேன். மிகவும் கவனமாய்க் கேளுங்கள் என்று பிரம்மன் தேவர்களுக்குக் கூறினான்.

பதசாரம்—உபதேசத்தாலேயே அடையப்படுவதனல் இரகசியமென்பார் மறைப்பதாய்'என்றும் அது அத்துவிதமாதலால், சிறப்புடை'என்றும் கூறினர்

அவதாரிகை.

ஏக விஞ்ஞானத்தால் எல்லாம் அறியப்படும் என்று உறுதி கூறுகின்றர்

வேறு.

யாதொன் றிருந்த படிகேட்கக் கேளா முழுதுங் கேட்டனவாம்
யாதொன் றிருந்த படிபார்க்கப் பாரா வெவையும் பார்த்தனவாம்
யாதொன் றிருந்த படியறிய வறியா வெல்லா மறிந்தனவாம்
யாதொன் றந்த வுபதேச மறிக வறிவு மிகவுடையீர்.

இதன் பொருள்.

| | |
|---|---|
| மிகஅறிவு உடையீர் | —சிறந்த அறிவுடைய தேவர்களே |
| யாதொன்று இருந்தபடி கேட்க | —யாதொரு பொருளை உள்ளபடி கேட்க |
| கேளாமுழுதும் | —கேட்கப்படாத அனைத்தும் |
| கேட்டனவாம் | —கேட்டவைகள் ஆகுமோ |
| யாதொன்று இருந்தபடி | —யாதொரு பொருளை உள்ளபடி |
| பார்க்க | —மனனம்செய்ய |
| பாராஎவையும் | —மன்னப்படாத காரியப் பொருளனைத்தும் |
| பார்த்தனவாம் | —மன்னம் செய்தவைகளாகுமோ |
| யாதொன் றிருந்தபடி அறிய | —யாதொரு பொருளை உள்ளபடி உணர |
| அறியா எல்லாம் | —அறியப்படாத அனைத்தும் |
| அறிந்தனவாம் | —அறியப்பட்டனவாகுமோ |
| யாதொன்று அந்த உபதேசம் | —யாதொரு அந்த உபதேசத்தை |
| அறிக | —நீங்கள் அறியுங்கள். |

பதசாரம்—காரணமான சத்துருபப் பிரம்மத்தை உபநிஷத மகாவாக்கியங்களால் சிரவணம்செய்யில் என்பார் 'யாதோன்றிருந்தபடி கேட்க' எனவும், காரியமான ஜகமனைத்தும் ஞானத்துக்கு அவிஷயமாயிருந்திடினும் தனக்குக் காரணமான பிரம்மத்துக்கு வேறுயில்லாததனல் பிரம்ம விஷயமான சிரவண ஞானத்தால் விஷயீகரிக்கப்படு மென்பார், 'கேளா முழுதுங் கேட்டனவாம் எனவும், காரியமான ஜகமெல்லாம் ஞானத்தால் அறியப்படாவிடினும் காரணப் பிரம்மத்துக்கு அவை அனைத்தும் வேறு இல்லாததனல் அவைகளையும் காரணமாகவே நிச்சயிக்கப்படுமென்பார், 'எல்லா மறிந்தனவாம்' எனவும் கூறினர். (2

## அவதாரிகை.

பிரம்மவஸ்துவை அறிந்தமாத்திரத்தில் இதரங்கள் எங்ஙனம் அறிந்ததாகும் என்னும் சங்கைக்குக் காரியஜகம் காரணப் பிரம்மத்திற்கு வேறு இல்லையென்று ஈண்டுப் போதிய திருஷ்டாந்தங்களால் சமாதானம் கூறுகின்றார்.

## வேறு.

மண்ணதோர் திரளைக் காண வனைந்தகா ரியங்க ளந்த
மண்ணில்வே றிலாதெக் காலும் வருவதே யாத லால்வே
றெண்ணிடு நாம ரூப மிசைவுறு தாகு மென்று
மண்ணிதே யுள்ள தென்றும் வானவர்க் கயன்முன் சொன்னான்.

## இதன் பொருள்.

மண்ணது ஓர் திரளைக் காண—மண்ணினுடைய ஒரு பிண்டத்தைப் பார்க்க
வனைந்த காரியங்கள் —வெவ்வேறாகச் செய்யப்பட்ட கடமுதலானவைகள்
அந்தமண்ணில் வேறு இலாது—அந்த மண்ணைக்காட்டிலும் வேறாக இல்லாமல்
எக்காலும் வருவது ஆதலால்—எக்காலத்திலும் அறியவருவது ஆகையால்
வேறு எண்ணிடும் நாமரூபம்—பின்னமாகக் கூறுகின்ற நாமரூபங்கள்
இசைவுறுதாகுமென்றும் —பொருந்தாததாகுமென்றும்
மண்ணிதேயுள்ளதென்றும்—இந்த மிருத்திகையே சுபாவமாயிருக்கிறதென்றும்
வானவர்க் கயன் —தேவர்களுக்குப் பிரம்மதேவன்
முன்சொன்னான் —முன்பு கூறினான்.

**பதசாரம்**—நிச்சயப்பட்டிருக்கின்ற காரணமான மண் இடைவிடாதிருத்தலால் கடமுதலிய காரியங்களுக்குச் சொரூப லாபமில்லையென்பார், 'வனைந்த காரியங்களந்த மண்ணில் வேறிலாது எக்காலும் வருவதே' என்று கூறினார். (3)

## இதுவுமது.

உலக மோர் மணியிரும்பா முகிர்சீவி யொன்று காண
உலக மெல் லாமுமாய வுருவமு மிரும்பு மற்றே
அலகில் காரணத்தி னோடு காரியம் வேறி லாமை
பலபட வறியும் வண்ணம் பகர்ந்தனன் படைக்கு நாதன்.

## இதன் பொருள்.

ஓர் உலகமணி —ஓர் லோகமணியையும்
இரும்பாம் உகிர்சீவி ஒன்று காண —இரும்பு ரூபமாகிய நகம் செதுக்கும் கத்தி ஒன்றையும் பார்க்குங்கால்
எல்லாமுமாய உருவமும் —சகலாபரணங்களுமாகிய ரூபமும்
உலகம் —லோகமொன்றேயாகும்

| | |
|---|---|
| இரும்பும் அற்றே | —இரும்பும் அத்தன்மையேயாகும் |
| அலகில் காரணத்திேைடு | —அளவில்லாத காரணத்தோடு |
| காரியம் வேறு இலாமை | —காரியங்கள் பின்னமில்லாத தன்மையை |
| பலபட அறியும்வண்ணம் | —பலவிதமாக அறியும்படி |
| படைக்கும்நாதன் பகர்ந்தனன் | —சிருஷ்டிசெய்யும் பிரம்மதேவன் சொன்னான். |

கருத்து—ஒருலோக மணியையும் கத்தியையும் பார்க்குங்கால் லோகத்தால் ஆக்கப்பட்டவையெல்லாம் லோகமயமாய் அறியப்படுகின்றன. இரும்பால் ஆக்கப் பட்டவைகளும் அப்படியே. இப்படிப் பலவிதமாகக் காரணத்திேைடு காரியம் பின்னமில்லாத தன்மையைப் பலபட அறியுமாறு பிரம்மன் கூறினான். (4)

## அவதாரிகை.

காரணமாகிய பிரம்மத்திற்குக் காரியமாகிய ஜகம் வேறில்லையென்றால், இந்த ஜகம் விசேஷம் இல்லாததாகும். ஆதலால் அகத்தியம் ஜகம் பிரம்மபின்ன மென்று அங்கீகரிக்கவேண்டுமென்று சங்கித்துக் காரியம் காரணபின்னமே யன்றிப் பின்னமுமல்ல, அபின்னமும் அல்ல, பின்னபின்னமுமல்ல எனக்கூறி, பின்பு காரியம் பின்னமென்னில் சத்தாகவா, அசத்தாகவா, சதசத்தாகவா எனக் கேள்வி பிறக்குமென்று விகற்பித்துங் கூறுகின்றார்.

காரிய மெல்லா முள்ள காரணம் வேறு மன்று
காரிய மொருகால் வேறாய் வேறன்றி யிருப்ப தன்று
காரியங் கார ணத்தின் வேறென்று கருதி லந்தக்
காரியஞ் சத்த சத்தோ சதசத்தாய் வேறோ வென்றான்.

## இதன் பொருள்.

| | |
|---|---|
| காரியம் எல்லாம் | —காரியங்கள் அனைத்தும் |
| உள்ள காரணம் | —தனக்கு அபின்னமாயிருக்கின்ற காரணந்தான் |
| வேறு மன்று | —பின்னமும் அல்ல |
| காரியம் | —காரியமானது |
| ஒருகால் வேறாய் வேறன்றி | —ஒரு காலத்தில் பின்ன பின்னமாகவும் |
| இருப்பதன்று | —இருப்பதல்ல |
| காரியம் காரணத்தின் வேறு என்று கருதில் | காரியமானது காரணத்தைக் காட்டிலும் பின்ன மென்று எண்ணினால் |
| அந்தக்காரியம் | —அந்தக் காரியமானது |
| சத்து அசத்தோ | —சத்தாகப் பின்னமோ அசத்தாகப் பின்னமோ |
| சதசத்தாய் வேறோ என்றான் | —சதசத்தாகப் பின்னமோ என்று கேட்டான். |

கருத்து—காரியம் காரணத்திற்கு அபின்னம் (வேறன்று) பின்னமன்று. பின்னபின்னமுமன்று. ஆனால் பின்னமாமே எனில் பின்னம் என்றபட்சத்தில் காரியம் சத்தா, அசத்தா, சத்தசத்தா? என்ற கேள்வி வரும். (5)

அவதாரிகை.

சத்தாகப் பின்னமென்னில் அக்காரியத்தின் சத்தை காரணத்தினது சத்தையா அல்லது அதனின்றும் பின்னப்படத்தக்க வேறு என விகற்பித்துக்கூறுகின்றார்.

சத்தாயே வேற தென்னிற் காரண சத்தை தானோ
பொய்த்தாய காரி யத்தின் சத்தைதான் புகலில் வேறோ
ஒத்தேதா னிற்ப தேதென் றுரைத்தன னுலக மெல்லாம்
வைத்தாயு மறைகளோது மலர்மிசை மன்னும் வானோன்.

இதன் பொருள்.

| | |
|---|---|
| சத்தாயே | —சத்துரூபமாகவே |
| வேறதென்னில் | —பின்னம் என்றால் |
| பொய்த்தாய | —பொய்ம்மையாகிய |
| காரியத்தின் சத்தைதான் | —காரியத்தினுடைய சத்தையானது |
| புகலில் | —சொல்லுங்கால் |
| காரணசத்தை தானோ | —காரணமானசத்தைதானோ |
| வேறோ | —அன்னியமோ |
| ஒத்தே நிற்பது எது என்று | —(உங்களுக்குப்) பொருந்திநிற்கின்றது எதுவென்று |
| உலகமெல்லாம் வைத்து | —எல்லா உலகங்களையும் சிருஷ்டித்து |
| ஆயும் மறைகள் ஓதும் | —ஆராயத்தக்க நான்கு வேதங்களையும் ஓதுகின்ற |
| மலர்மிசை மன்னும் | —தாமரைமலரில் வீற்றிருக்கும் |
| வானோன் உரைத்தனன் | —பிரம்மதேவனானவன் சொன்னான். |

**கருத்து**—சத்தாயிருந்தால், காரணசத்தையா? அல்லது காரியசத்தையா? (6)

அவதாரிகை.

காரணசத்தையே காரியசத்தை என்றபட்சத்தால் காரியம் அசத்தேயாகின்றது என்றும் காரணசத்தையேயன்றிக் காரியசத்தை வேறில்லை என்றுங்கூறுகின்றார்.

காரண சத்தை தானே யென்றிடில் வேறு சொன்ன
காரிய சத்தை யில்லை யாயிடு முன்பு சொன்ன
காரண சத்தை யொன்றே யானபி னந்தச் சத்தைக்
கோதொரு பேத முண்டாம் படியெங்ங னுரைமி னென்றான்.

இதன் பொருள்.

| | |
|---|---|
| காரணசத்தை தானே யென்றிடில் | —காரணசத்தை தானே காரியசத்தையெனில் |
| வேறுசொன்ன காரியசத்தை | —பின்னமாகச் சொல்லிய காரியசத்தையானது |
| இல்லையாயிடும் | —இல்லாததாய்விடும் |

| | |
|---|---|
| முன்புசொன்ன | —முற்கூறிய |
| காரணசத்தையொன்றே | —காரியசத்தையானது காரணசத்தையாகவே |
| ஆனபின் | —சித்தித்த பின்பு |
| அந்தச் சத்தைக்கு | —அந்தக் காரியசத்தைக்கு |
| ஓது | —சொல்லுகின்ற |
| ஒருபேதம் உண்டாம்படி | —ஒருபேதம் உண்டாகும்விதம் |
| எங்ஙன் உரைமின் என்றான் | —எவ்வாறு சொல்லுங்கள் என்றான். |

பதசாரம்—காரணசத்தையேயன்றிக் காரியசத்தை வேறில்லாததனால் காரியம் காரணபின்னமே யாகின்றதென்பார், 'காரண சத்தை ஒன்றே யானபி னந்தச் சத்தைக் கோதொரு பேத முண்டாம் படியெங்ங னுரைமின்' என்றார். (7)

அவதாரிகை.

சத்தை ஏகமாயினும் காரணத்துக்குக் காரியம் வேறாக அனுபவிக்கப்படுகின்றதெனச் சங்கிக்கக் காரணசத்தையே காரியசத்தையென அங்கீகரித்ததனால் தன்னியல்பாலேயே காரியம் அசத்தாகும் ஆதலால் காரியம் பின்னமாகிச் சத்தென்பது வாக்குமாத்திரம் தானெனக் கூறுகின்றார்.

சத்தைதா னொன்று நின்ற தாயினுங் காரி யங்க
ளொத்தபேர் வேறு பாட்டா லுள்ளகா ரணத்தில் வேறே
லித்தகைத் தான வார்த்தை யியம்புபே ரளவே யானால்
வைத்தகா ரியமுண் டென்னும் வார்த்தையு மசத்தே யாகும்.

இதன் பொருள்.

| | |
|---|---|
| சத்தைதான் | —காரணசத்தை காரியசத்தை இரண்டும் |
| ஒன்று நின்றதாயினும் | —ஏகத்தன்மையாக நின்றதானாலும் |
| காரியங்கள் ஒத்த | —காரியங்கள் பொருந்திய |
| பேர் வேறுபாட்டால் | —பெயர் வேற்றுமை கொள்ளப்படுதலால் |
| உள்ளகாரணத்தில் | —இயல்பாயுள்ள காரணத்தைக்காட்டிலும் |
| வேறேல் | —பின்னமென்னில் |
| இத்தகைத் தானவார்த்தை | —இத்தன்மையுடைய உங்கள் சொல்லானது |
| இயம்பு பேரளவேயானால் | —சொல்லுகின்ற நாமமாத்திரமேயாகுமானால் |
| வைத்தகாரியம் | —வைக்கப்பட்ட காரியமானது |
| உண்டு என்னும் வார்த்தையும் | —உண்டு என்கிற சொல்லும் |
| அசத்தேயாகும் | —அசத்தேயாய்விடும். |

கருத்து—சத்தை ஒன்றானாலும் காரணத்தைவிடக் காரியம் பின்னம் என்கிற வார்த்தையும் வீண்பேச்சு. காரியம் என்றது அசத்து அன்றோ. (8)

### அவதாரிகை.

முற்கூறிய அசத்துத் தன்மையை விவரித்துக் கூறுகின்றார்.

சத்தையில் லாத போது காரிய மில்லை யாகும்
இத்தன்மைக் காரி யத்துக் கிலாமையே யிசைவ தானால்
அத்தன்மைச் சத்த தாகக் காரியம் பின்ன மென்றிங்
கொத்திடா துரைத்த வார்த்தை யென்றுமின் றாகு மன்றே.

### இதன் பொருள்.

| | |
|---|---|
| (ஆகையால்) காரியம் | —காரியமானது |
| சத்தை இல்லாதபோது | —சத்தை இல்லாதகாலத்தில் |
| இல்லையாகும் | —இல்லாததாய்விடும் |
| இத்தன்மைக் காரியத்துக்கு | —இந்தத் தன்மையுடைய காரியத்திற்கு |
| இலாமையே | —இல்லாமை தானே |
| இசைவதானால் | —பொருந்துவதானால் |
| காரியம் | —காரியமானது |
| அத்தன்மைச் சத்ததாக | —முன்கூறிய சுபாவமுள்ள சத்தையையுடையதாக |
| பின்னமென்று | —வேறென்று |
| இங்கு ஒத்திடாது | —இவ்விடத்தில் பொருந்திடாமல் |
| உரைத்த வார்த்தை | —சொன்ன சொல்லானது |
| என்றும் இன்றாகும் | —எக்காலத்திலும் இல்லாததாகும். |

**பதசாரம்**—சத்தையில்லாத காரியம் சத்தாகாது. ஒன்றினுடைய சத்தையால் மற்றொன்று சத்தாகலாமென்றால், நாசிருங்கமுஞ் சத்தாகுமென்று பிரசங்கிக்குமென்பார் 'அத்தன்மைச் சத்ததாகக்காரியம் பின்னமென்றிங் கொத்திடா துரைத்த வார்த்தை' எனவும், காரியமென்பதற்கு இல்லாமையே பொருந்தி இந்தப் பிரகாரம் இந்தப் பட்சத்தில் காரியம் அசத்தாகில் சத்தென்ற வசனம் பொருளுடைய தன்றென்பார் 'என்றுமின் றாகு மன்றே' எனவும் கூறினார். (9)

### அவதாரிகை.

காரியசத்தை காரணசத்தை அன்று வேறென்றபட்சத்தைக் கண்டிக்க வேண்டி, அந்தச்சத்தை வெறெனில் சத்தாகவேறா அசத்தாகவேறா என்னும் வினாவைக் கற்பித்து அவற்றை விகற்பித்துக் கூறுகின்றார்.

காரண சத்தை யேயக் காரிய சத்தை யின்று
வேறொரு சத்தை யுண்டே யென்றிடில் வேறு சொன்ன
காரிய சத்தை யுள்ள காரண சத்தை யோடு
கூறிய சத்தாய்க் கொண்டோ வசத்தாயோ நிற்ப தென்றான்.

### இதன் பொருள்.

| | |
|---|---|
| காரணசத்தையே | —காரணசத்தை தானே |
| அக்காரியசத்தையின்று | —அந்தக்காரியசத்தை யென்பதில்லை |
| வேறொரு சத்தை | —காரியத்துக்கு வேறாக ஒரு சத்தையானது |
| உண்டேயென்றிடில் | —இருக்கின்றதேயென்று சொல்லிடில் |
| வேறுசொன்ன காரியசத்தை | —வேறாகச் சொல்லிய காரிசத்தையானது |
| உள்ள காரணசத்தையோடு | —இயல்பாயுள்ள காரணசத்தையுடன் |
| கூறிய சத்தாய்க்கொண்டோ | —சொல்லுகின்ற சத்துருபமாகவோ |
| அசத்தாயோ | —அசத்துருபமாகவோ |
| நிற்பதென்றான் | —பின்னமாக நிற்கின்றதென்றான். |

**கருத்து**—காரணசத்தை தான் காரியசத்தையென்பதில்லை. காரியத்துக்கு வேறாக ஒருசத்தையானது இருக்கின்றதேயென்று சொல்லிடில், வேறாகச்சொல்லிய காரியசத்தையானது இயல்பாயுள்ள காரணசத்தையுடன் சொல்லுகின்ற சத்துருபமாகவோ அசத்துருபமாகவோ பின்னமாக நிற்கின்றதென்றான். (10)

### அவதாரிகை.

விகற்பிக்கப்பட்ட அந்த இரண்டுங்கூடாது. ஏனெனில் சத்துருபமாகப் பின்னமெனில் சத்தாகிய சொருபம் இரண்டு சத்தைக்கும் ஏகமாயிருப்பதனால் பேதமில்லாதனவாகி இரண்டும் ஒருசத்தையே யாகுமெனவும், அசத்துருபமாக வேறென்னில் அசத்தானதுபற்றி சத்தையேயாகாது. சசவிஷாணம்போல் அசத்தேயாகுமெனவும், சத்காரிய பட்சத்தை நிராகரித்து, அசத்தாகிக் காரியம் காரணத்துக்கு வேறு என்ற பட்சத்தை நிராகரித்துக் கூறுகின்றார்.

### வேறு.

சத்தாக் கொண்டே வேறென்னி லொன்றே சத்தை யிரண்டாகா
சத்தா யன்றிக் காரணத்தோ டாகி வேறு நிற்குமெனிற்
சத்தா யிதுதா னிலாமையினு லசத்தே யாகுங் காரியம
சத்தே லுளதாச் செயமாட்டா தென்றும் மலடி மகன்போல.

### இதன் பொருள்.

| | |
|---|---|
| (காரியமானது) சத்தாக்கொண்டே | —சத்துருபமாகக்கொண்டு |
| வெறென்னில் | —பின்னமென்றால் |
| சத்தை | —(காரணகாரியங்களின்)சத்தை |
| ஒன்றே | —ஒன்றாகவே சித்திக்கும் |
| இரண்டாகா | —பின்னமாகாது |
| சத்தாயன்றி | —(காரியசத்தையானது)அசத்தாக |

காரணத்தோடாகி வேறு —காரணத்தோடு பின்னமாகி
நிற்குமெனில் —நிற்பதென்னில்
சத்தாயிதுதா னில்லாமையினுல்—இந்தக் காரியசத்தையானது சத்தாக இல்லாத தன்மையினுல்
அசத்தேயாகும் —சத்தையில்லாததாகும்
காரியம் அசத்தேல் —காரியமானது அசத்துரூபமாகிப் பின்னமாகுமெனில்
மலடிமகன்போல் —வந்தியா புத்திரனைப்போல
என்றும் —எக்காலத்திலும்
உளதாச் செயமாட்டாது —(அது காரியசத்தை) இருப்பதாகச்செய்யமாட்டாது.

**பதசாரம்**—முன்னில்லாத காரியத்துக்குச் சத்தையோடுஞ் சம்பந்தமே உற்பத்தியெனப் பிறர்கள் அங்கீகரித்திருப்பதனுல், அந்த நீதிபற்றி மலடிமைந்தனும் ஒருவஸ்துவுக்குக் காரியமாகலாம். அதுவோ உலகத்திலில்லையாகையால் அசத்தாய்க்காரியங் காரணத்திற்கு வேருகாதென்பார், '**காரியம சத்தே லுளதாச் செயமாட்டா தென்றும் மலடி மகன்போல**' என்றுர். (7)

**அவதாரிகை.**

பிரத்துவம்சாபாவம்போல் அசத்துக்கு என் காரியத்தன்மை கிடையாதென்று சங்கிக்க பிரத்துவம்சமும் காரியமாகாதென்று கூறுகின்றுர்.

காரிய மொருக்கா லுண்டா மொன்றினு லழிவ தில்லை
காரியந் தனக்குற் பத்தி யிலாமையா லில்லா வொன்றுங்
காரியந் தானென் றேடே நண்ணுமென் றுரைத்தல் கூடா
பாருமி னென்று வானேர்க் குரைத்தனன் பதும மேலோன்.

**இதன் பொருள்.**

காரியமொருக்காலுண்டாம் —காரியமானது ஒருகாலத்தில் உற்பத்தி ஆகும்
ஒன்றினுலழிவதில்லை —ஒன்றினுலும் நசிப்பதில்லையெனில்
காரியந்தனக்குற்பத்தி இலாமையால் —அந்தக் காரியத்திற்கு உற்பத்தியென்பதில்லாமையே சொரூபமாதலால் (காரியமாகாது)
இல்லாவொன்றுங் காரியந்தான்—அசத்தாகிய ஒரு காரியந்தானும்
ஒன்றேடு —ஒரு காரகத்தோடு
நண்ணுமென்றுரைத்தல் கூடா—சம்பந்திக்கு மென்றுகூறுதல் பொருந்தாது
பாருமினென்று —பாருங்களென்று
பதுமமேலோன் வானேர்க் குரைத்தனன் —தாமரைமலரின்மேல் வீற்றிருக்கின்ற பிரம்மதேவனுனவன் தேவர்களுக்குக் கூறினுன்.

பதசாரம்—ஆதியுள்ளதாயும், அந்தமில்லாததாயும் உள்ளது பிராத்துவம் சாபாவமென்பார், 'காரியமொருக்காலுண்டா மொன்றினலழிவதில்லை' எனவும், கர்த்தா கரணம் காரகம் இவற்றின் சம்பந்தமுடைய கடாதிகளுக்கே ஜனிக்கிரியை காணப்படுகின்றது சசவிஷாணம்போல் தருமமில்லாத அசத்தாம் பிராத்துவம்சத்துக்கு அங்ஙனம் ஜனிக்கிரியை கிடையாது தருமத்துக்கு ஆச்ரயமாயின் பாவவத்துவெனப் பிரசங்கிக்குமாதலால் அதற்குக் காரியத்தன்மை கிடையாதென்பார், 'இல்லா வொன்றங் காரியந் தானேன் றேடே நண்ணுமென் றுரைத்தல் கூடா' எனவும் இது சத்தியமென்பார், 'பாருமின்' எனவும் கூறினர். (12)

அவதாரிகை.

முன்னமே காரகசம்பந்தமில்லாததாகக் கூறியதனல் அதற்கு ஜனிக்கிரியை கிடையாது. அதனல் காரியத்தன்மை இல்லையெனவும், பிராத்துவம்சம் அசத்தாயினும் வந்திமகன்போல் அத்தியந்தம் அசத்தல்ல விசேடமுளதாதலால் காரியமாகலாமென்ற சங்கையே அனுவதித்துக் கூறுகின்றார்.

இன்னதோர் படியிருக்கு மெனப்படா விலாமை யேபோ
லன்னதே யாதலாலே யாவது மிலதே யாகுஞ்
சொன்னவிவ் விலாமை தானிங் கசத்தெனத் தோற்றினும்
பின்னையும் விசேட மொன் றுண் டென்னவே பேசுவீரேல்.

இதன் பொருள்.

இன்னதோர்படி —இவ்வண்ணமாய்
இருக்குமெனப்படா —இருக்கின்றதெனக் கூறத்தகாத
இலாமையேபோல் —சூனியம்போல
அன்னதேயாதலாலே —(பிராத்துவம் சாபாவமும்) நிரூபிக்கத் தகாததனல்
ஆவ்துமிலதேயாகும் —(அது)உற்பத்தி வியாபாரமுமில்லாததேயாகும்
சொன்னவிவ்விலாமைதான் —முன்னுரைத்த இந்தப் பிராத்துவம் சாபாவமானது
இங்கு —இவ்விடத்தில்
அசத்தெனத்தோற்றினும் —அசத்தென்று காணப்பட்டாலும்
பின்னையும் —மறுபடியும்
விசேடமொன்றுண்டென்ன —ஒரு விசேஷமிருக்கின்றதென்று
பேசுவீரேல் —சொல்லுவீர்களானல். (13)

அவதாரிகை.

நீர் கூறிய விசேடம் யாது காரகசம்பந்தமா அல்லது ஜனிக்கிரியாச்ரயத்துவமா சத்தா சம்பந்தமா என்று விகற்பித்து முற்கூறிய காரகசம்பந்தங் கண்டிக்கப்பட்டிருப்பதனல் அது இங்கு சித்தியாதென்பதுபற்றி இக்காரக சம்பந்தம் விசேடமுள்ளதென்ற பட்சத்தைக்கண்டித்துக் கூறுகின்றார்.

இதற்குநீர் சொன்னவேறே தியைந்திடு சம்பந்தந்தா
னதற்கொரு காரகத்தா லென்னில்வே றமைவதில்லை
யொதுக்கமில் லாததொன்றே விசேடமா யிருக்குமென்னு
மதற்குவே றொன் றுமில்லை யாதலாற் கூடாதென்றும்.

இதன் பொருள்.

| | |
|---|---|
| இதற்கு நீர் சொன்ன | —(அசத்தாகிய) இந்தக் காரியத்திற்கு நீர் சொல்லிய |
| வேறேது | —விசேடமாகிய வேற்றுமையாது |
| அதற்கு | —அந்தக் காரியத்திற்கு |
| இயைந்திடு சம்பந்தந்தான் | —பொருந்திய சம்பந்தமானது |
| ஒருகாரகத்தால் என்னில் | —ஒருகருவியால் உண்டென்றால் |
| வேறமைவதில்லை | —(அந்த) விசேடமானது பொருந்துவதின்றாகும் |
| ஒதுக்கமில்லாததொன்றே | —பிரிவுபடாத சம்பந்தமொன்றுதானே |
| விசேடமாயிருக்குமென்னும் அதற்கு | விசேடமாயிருக்கப் பொருந்துமென்பதற்கு |
| வேறொன்றுமில்லை | —விசேடமொன்றுமில்லை |
| ஆதலால் என்றும் கூடாது | —ஆகையால் எக்காலத்தும் ஒவ்வாது. |

பதசாரம்—விசேஷமில்லாத அசத்துக்குக் காரகசம்பந்தம் ஒப்பினால் வந்தி மகனுக்கும் அந்தச் சம்பந்தத்தால் காரியப்படுகை வரலாமென்பார், 'அதற்கொரு காரகத்தா லென்னில்வே றமைவதில்லை' எனவும், முற்கூறிய தூஷணம் நீங்குதற்கு அவசியமேதேனு மொரு விசேஷத்தோடு விசேஷித்திடில் காரகசம்பந்தங் கூறத்தகும். அவ்விசேடமும் இச்சம்பந்தமே தானென்னில் தன்னையே விசேஷணமாயுடைய விசேஷியத்தில் தான் இருத்தலென்ற ஆன்மாச்ரயமெனுந் தூஷணம் நேரிடும். சம்பந்தத்துக் கன்னியம் விசேடமெனினும் யாதேனுமொன்றுடன் விசேஷிக்கப்படில் உளதாகும். அவ்விசேடமும் முற்கூறிய சம்பந்தமா அன்னியமா எனில் மூன்றாம் விசேடம்வரும். முதலாவது அன்யோன்யாசிரய தூஷணம், இரண்டாவது நாலாவது விசேட மொப்பாவிடில் சக்கிரகாபத்தி தூஷணம் ஒப்பினால் அனவத்தையாதலால் அசத்தாகிய காரியத்துக்குக் காரக சம்பந்த லட்சணமாகிய விசேடம் பிரிவுபடாத சம்பந்தமேயன்றிநிரூபிக்கத் தகாதென்பார், 'ஒதுக்கமில்லாததொன்றே விசேடமா யிருக்குமென்னு மதற்கு வேறொன்றுமில்லை யாதலாற் கூடாதென்றும்' எனவும் கூறினார். (14)

அவதாரிகை.

ஜனிக்கிரியைக்கு ஆசிரயமாயிருத்தலே விசேடமெனினும் முற்கூறிய தூஷணமனைத்தும் நேரிடும். அவைகளை ஒருவராலும் பரிகரிக்கக் கூடாதென இரண்டாம் விகற்பத்தைக் கண்டித்துக் கூறுகின்றார்.

காரணத் தோடுகூடல் வேறெனி லதுதன்னுலும்
காரணந் தானேயாகு மிதினின்றுங் கருதிச்சொன்ன
காரியம் பிறக்குமென்ற விதுகொண்டு வேறுசொல்லிற்
பாருமின் குற்றமுன்போற் பரிகரிப் பாருமில்லை.

இதன் பொருள்.

காரணத்தோடு கூடல் —சத்தாகிய காரணவஸ்துவினுடன் அசத்தாகிய காரியம் விசேடமாகப் பொருந்துதல்

வேறெனில் —(முற்கூறிய சம்பந்தத்திற்குப்) பின்னமென்றால்

அது தன்னுலும் —அத்தன்மையினுலும்

காரணந்தானேயாகும் —காரியத்தையிட்ட யாதேனுமொரு காரணந் தானேயாகும்

இதினின்றும் —இந்நீதியில் நின்றும்

கருதிச்சொன்ன —ஆலோசித்துச் சொல்லிய

காரியம் பிறக்குமென்ற —காரியத்தின் ஜனிக்கிரியாச்ரயத்துவமென்ற

இதுகொண்டு —இத்தன்மையைக்கொண்டு

வேறுசொல்லில் —முற்கூறிய விசேடம் வேறென்று சொன்னல்

பாருமின் —பாருங்கள்

முன்போல் குற்றம் —முன்போற் குற்றமாகும்

பரிகரிப்பாருமில்லை —இதனை நிவிர்த்திசெய்பவருமில்லை.

**பதசாரம்**—ஜனிக்கிரியைக்கு ஆசிரயமாயிருக்கையெனு மிலக்கணமுடைய விசேஷமும் யாதேனுமொன்றோடுவிசேஷிக்கப்படும்பொருட்கேசித்திக்கவேண்டும். இல்லாவிடில் நரவிஷாணமும் விசேஷமுடையதெனவாகும். ஆதலால் அவ்விசேடமும் இந்த ஜனக்கிரியாசிரயத்தன்மைதானு அல்லது வேறு இதுவேயெனில் முன்சொன்ன ஆன்மாசிரய முதலியவை திரும்பிவருமென்பார், இரண்டாம் விகற்பத்தைக் கண்டித்துக் '**காரியம் பிறக்குமென்ற விதுகொண்டு வேறுசொல்லிற் பாருமின் குற்றமுன்போற் பரிகரிப் பாருமில்லை**' என்றார். (15)

அவதாரிகை.

சத்தா சம்பந்தமே விசேஷமென்ற மூன்றும் விகற்பமுங் கூடாதென்று அசத்தாகிக் காரியங் காரணத்துக்குப் பின்னமென்ற பட்சத்தைக் கண்டித்துச் சதசத்தாகிக் காரியம் பின்னமென்றதுவுங் கூடாதென்று கூறுகின்றார்.

இரண்டுக்கு மொன்றேசத்தை யெனுமிது வேறேயென்னிற்
றிரண்டிடுங் குற்றமெல்லாஞ் செறிதனிச் சயமெப்போதுந்
திரண்டகா ரியமசத்தே யாதலாற் சதசத்தென்னி
லிரண்டிற்கு முரைத்தகுற்ற மிசைந்திடு மியல்பினுலே.

இதன் பொருள்.

| | |
|---|---|
| இரண்டுக்கும் | —(காரியகாரண) மிரண்டினுக்கும் |
| ஒன்றே சத்தையெனும் | —சத்தையொன்றே யெனப்படும் |
| இதுவேறேயென்னில் | —(சத்தா சம்பந்தமான) இது விசேடமென்னில் |
| திரண்டிடுங் குற்றமெல்லாம் | —கூட்டமாகிய குற்றமெல்லாம் |
| எப்போதும் | —எக்காலத்தும் (முன்போல்) |
| செறிதனிச்சயம் | —சேருவது திண்ணமாகும் |
| ஆதலால் திரண்ட காரியமசத்தே | ஆகையால் கூடியகாரியம் அசத்தேயாகும் (காரியமானது) |
| சதசத்தென்னில் | —சதசத்தாகப் பின்னமெனில் |
| இயல்பினுல் | —இத்தன்மையினுல் |
| இரண்டிற்கு முரைத்த குற்றம் | (முன்னமே சத்தாகவு மசத்தாகவும் பின்னமென்ற) இரண்டிற்குஞ் சொன்னதோஷம் |
| இசைந்திடும் | —பொருந்திவிடும். (16) |

அவதாரிகை.

காரியம் பின்னுபின்னரூபமாகியுள்ளதென்ற பட்சமுங்கூடாதென்று கண்டித்துக் காரணத்துக்கு அபேதமாயின் காரியம் விவரிக்கப்படும். காரியகாரண முதலிய பேதத்தோற்றத்துக் கென்னகதியென்று சங்கித்துக் கூறுகின்றூர்.

உண்மையிற் பேதமின்றி யிருந்தேயும் பேதமென்னல்
வெண்மையே செய்தரூப வியாபாரந் தோற்றங்கேடு
பண்வயி னிவற்ருற்கொள்ளும் பயனுமெ ரூபம்வேறு
முண்மையி லெல்லாம்பொய்யா லுண்டாகிப் பொலியுமன்றே.

இதன் பொருள்.

| | |
|---|---|
| உண்மையில் பேதமின்றி பேதம் | —மெய்யாக அபேதமாயும் பேதமாயும் |
| இருந்தேயும் என்னல் | —இருந்து பொருந்துமென்று சொல்லுதல் |
| வெண்மையே | —அறிவின்மையேயாகும் (இவ்வாறு காரியங் காரணுபின்னமெனச் சாதிக்கப்படுதலால்) |
| செய்தரூப வியாபாரம் | —இயற்றியரூப வியாபாரம் |
| தோற்றம் கேடு பண்வயின் | —உற்பத்திநாசம் செய்யுமிடம் |
| இவற்ருற்கொள்ளும் பயன் | —இவைகளாற் கொள்கின்றபயன் |
| நாமரூபம் வேறும் | —நாமரூபம் இன்னமும் |
| உண்மையில் எல்லாம் | —பரமார்த்த சொரூபத்தில் அனைத்தும் |
| பொய்யால் | —பொய்யினுல் |
| உண்டாகிப் பொலியும் | —உண்டாகிச் சித்திக்கும். |

காரணத் தோடுகூடல் வேறெனி லதுதன்னுலும்
காரணந் தானேயாகு மிதினின்றுங் கருதிச்சொன்ன
காரியம் பிறக்குமென்ற விதுகொண்டு வேறுசொல்லிற்
பாருமின் குற்றமுன்போற் பரிகரிப் பாருமில்லே.

இதன் பொருள்.

| | |
|---|---|
| காரணத்தோடு கூடல் | —சத்தாகிய காரணவஸ்துவினுடன் அசத்தாகிய காரியம் விசேடமாகப் பொருந்துதல் |
| வேறெனில் | —(முற்கூறிய சம்பந்தத்திற்குப்) பின்னமென்றல் |
| அது தன்னுலும் | —அத்தன்மையினுலும் |
| காரணந்தானேயாகும் | —காரியத்தையிட்ட யாதேனுமொரு காரணந் தானேயாகும் |
| இதினின்றும் | —இந்நீதியில் நின்றும் |
| கருதிச்சொன்ன | —ஆலோசித்துச் சொல்லிய |
| காரியம் பிறக்குமென்ற | —காரியத்தின் ஜனிக்கிரியாச்ரயத்துவமென்ற |
| இதுகொண்டு | —இத்தன்மையைக்கொண்டு |
| வேறுசொல்லில் | —முற்கூறிய விசேடம் வேறென்று சொன்னல் |
| பாருமின் | —பாருங்கள் |
| முன்போல் குற்றம் | —முன்போற் குற்றமாகும் |
| பரிகரிப்பாருமில்லே | —இதனை நிவிர்த்திசெய்பவருமில்லே. |

**பதசாரம்**—ஜனிக்கிரியைக்கு ஆசிரயமாயிருக்கையெனு மிலக்கணமுடைய விசேஷமும் யாதேனுமொன்ரேடுவிசேஷிக்கப்படும்பொருட்கேசித்திக்கவேண் டும். இல்லாவிடில் நரவிஷாணமும் விசேஷமுடையதெனவாகும். ஆதலால் அவ் விசேடமும் இந்த ஜனக்கிரியாசிரயத்தன்மைதாஞ அல்லது வேறு இதுவே யெ னில் முன்சொன்ன ஆன்மாசிரய முதலியவை திரும்பிவருமென்பார், இரண்டாம் விகற்பத்தைக் கண்டித்துக் '**காரியம் பிறக்குமென்ற விதுகோண்டு வேறுசொல் லிற் பாருமின் குற்றமுன்போற் பரிகரிப் பாருமில்லே**' என்ருர். (15)

அவதாரிகை.

சத்தா சம்பந்தமே விசேஷமென்ற மூன்றும் விகற்பமுங் கூடாதென்று அசத்தாகிக் காரியங் காரணத்துக்குப் பின்னமென்ற பட்சத்தைக் கண்டித்துச் சதசத்தாகிக் காரியம் பின்னமென்றதுவுங் கூடாதென்று கூறுகின்ருர்.

இரண்டுக்கு மொன்றேசத்தை யெனுமிது வேறேயென்னிற்
றிரண்டிடுங் குற்றமெல்லாஞ் செறிதனிச் சயமெப்போதுந்
திரண்டகா ரியமசத்தே யாதலாற் சதசத்தென்னி
லிரண்டிற்கு முரைத்தகுற்ற மிசைந்திடு மியல்பினுலே.

இதன் பொருள்.

| | |
|---|---|
| இரண்டுக்கும் | —(காரியகாரண) மிரண்டினுக்கும் |
| ஒன்றே சத்தையெனும் | —சத்தையொன்றே யெனப்படும் |
| இதுவேறேயென்னில் | —(சத்தா சம்பந்தமான) இது விசேடமென்னில் |
| திரண்டிடுங் குற்றமெல்லாம் | —கூட்டமாகிய குற்றமெல்லாம் |
| எப்போதும் | —எக்காலத்தும் (முன்போல்) |
| செறிதனிச்சயம் | —சேருவது திண்ணமாகும் |
| ஆதலால் திரண்ட காரியமசத்தே | ஆகையால் கூடியகாரியம் அசத்தேயாகும் (காரியமானது) |
| சதசத்தென்னில் | —சதசத்தாகப் பின்னமெனில் |
| இயல்பினல் | —இத்தன்மையினல் |
| இரண்டிற்கு முரைத்த குற்றம் | (முன்னமே சத்தாகவு மசத்தாகவும் பின்னமென்ற) இரண்டிற்குஞ் சொன்னதோஷம் |
| இசைந்திடும் | —பொருந்திவிடும். (16) |

அவதாரிகை.

காரியம் பின்னபின்னரூபமாகியுள்ளதென்ற பட்சமுங்கூடாதென்று கண்டித்துக் காரணத்துக்கு அபேதமாயின் காரியம் விவரிக்கப்படும். காரியகாரண முதலிய பேதத்தோற்றத்துக் கென்னகதியென்று சங்கித்துக் கூறுகின்றார்.

உண்மையிற் பேதமின்றி யிருந்தேயும் பேதமென்னல்
வெண்மையே செய்தரூப வியாபாரந் தோற்றங்கேடு
பண்வயி னிவற்றாற்கொள்ளும் பயனும ரூபம்வேறு
முண்மையி லெல்லாம்பொய்யா லுண்டாகிப் பொலியுமன்றே.

இதன் பொருள்.

| | |
|---|---|
| உண்மையில் பேதமின்றி பேதம் | —மெய்யாக அபேதமாயும் பேதமாயும் |
| இருந்தேயும் என்னல் | —இருந்து பொருந்துமென்று சொல்லுதல் |
| வெண்மையே | —அறிவின்மையேயாகும் (இவ்வாறு காரியங் காரணபின்னமெனச் சாதிக்கப்படுதலால்) |
| செய்தரூப வியாபாரம் | —இயற்றியரூப வியாபாரம் |
| தோற்றம் கேடு பண்வயின் | —உற்பத்திநாசம் செய்யுமிடம் |
| இவற்றாற்கொள்ளும் பயன் | —இவைகளாற் கொள்கின்றபயன் |
| நாமரூபம் வேறும் | —நாமரூபம் இன்னமும் |
| உண்மையில் எல்லாம் | —பரமார்த்த சொரூபத்தில் அனைத்தும் |
| பொய்யால் | —பொய்யினல் |
| உண்டாகிப் பொலியும் | —உண்டாகிச் சித்திக்கும். |

பதசாரம்—பாவாபாவங்களுக்கு ஏகத்தன்மை கூடாததனுற் பேதபட்சத்திற்கூறிய தூஷணம் வருமாதலால் பின்னுபின்னங் காரியமென்னும்பட்சம் மிகவுஞ் சித்திக்காதென்பார், அவ்வாறு கொள்ளுதல் அறிவின்மையாமென உண்மையிற் பேதமின்றியிருந்தேயும் பேதமென்னல் வெண்மையே' என்றூர். (17)

## அவதாரிகை.

இந்தப்பிரகாரம் காரியமென்பது காரணமேதானெனச் சாதித்து இவ்விடத்திற் காரியமாகிய நாமரூப விகாரம் வாக்குமாத்திரமே தானெனவும், விகாரமாகிய காரியம் வாக்குமாத்திரமாயுளதெனில் அசத்தாகும். சத்து அசத்து இரண்டும் விரோதமுடையதாதலால் அதற்குக் காரணமாகிய சத்தாம் பிரம்மத்தோடு வேறின்மை யெங்ஙனங் கூடுமென்ற சங்கைக்குச் சமாதானமாகத் தோற்றுதல் மாத்திரமானதுபற்றிக் கூடுமெனவுங் கூறுகின்றூர்.

## வேறு.

எல்லா விகாரங் களும்வாக்கா லென்று முண்டென் றுரைப்பதுவும்
சொல்லா மளவே யெவ்விடத்துந் தோன்று மென்ற துண்மையதே
யல்லா விகார மறிவொழிய வனைத்தும் பொய்யே விகாரத்துக்
கில்லா தாகு முண்மைபிறி தில்லா தாகு மாதலினுல்.

## இதன் பொருள்.

வாக்கால் எல்லாவிகாரங்களும்—சொல்லால் சகல விகாரங்களும்
என்றும் —எக்காலத்தும்
உண்டென்றுரைப்பதுவும் —இருக்கின்றதெனச் சொல்வதுவும்
சொல்லாமளவே —வாக்குமாத்திரமேதான்
எவ்விடத்தும் —எந்தவிடத்திலும்
தோன்றுமென்றது —அவ்விகாரம் பிரதீதிமாத்திரமாயுளதென்பது
உண்மையதேயல்ல —சத்தியமேயல்ல
அறிவொழிய —காரணமாகிய அறிவைத்தவிர
விகாரம் அனைத்தும் பொய்யே—காரியவருக்கங்கள் எல்லாம் மித்தையே
ஆதலினுல் —ஆகையால்
இல்லாதாகும் விகாரத்துக்கு —(சொரூப) மில்லாததாகிய அந்த விகாரங்களுக்கு
உண்மை —சத்தியத்தன்மை
பிறிதில்லாதாகும் —(காரணசொரூபத்திற்கு) வேறில்லாததாகும்.

பதசாரம்—காரியமானது பிராத்துவம்சாவஸ்தையிலிருப்பதுபோற் முனிருக்குங் காலத்திலும் காரணமாத்திரமாகச் சேஷிக்கின்றது தோன்ற, 'விகாரமறிவொழிய வனைத்தும் பொய்யே' எனவும், காரியம் இரண்டுரூபமுடை

தாகும் அவற்றில் பெருத்தவயிறு முதலிய ஆகாரவிசேடம் பிராதீதகமெனு முருவமொன்ருகும். அங்ஙனமே இடைவிடாமலுள்ள மிருத்தாகிய உருவமொன்ருகும். அங்ஙனமாயின் பிராதீதிக உருவமாகக் காரியம் சத்தியமேதானென்பார், தோன்றுமென்ற துண்மையதேயல்ல' எனவும் கூறினர். விகாரத்துக் கில்லாதாகு முண்மையெனவே சொரூபமில்லாததாகிய அந்த விகாரமும் காரணமான மண்ணுருவாகச் சத்தியமென்பது பெறப்பட்டது. (18)

அவதாரிகை.

காரிய சம்பந்தமுடைய காரணரூபமொன்று எனில் அத்துவித காரணத் தன்மைக்கு விரோதம் நேரிடுமென்ற சங்கைக்குச் சமாதானம் கூறுகின்ருர்.

வேறு.

காரண மதனு லன்றிக் காரிய முளவாய்த் தோன்ரு
காரண மொழிய வேறு காரிய மின்மை யாலே
காரிய மனைத்தி னுக்குங் காரண மதுவே யுண்மை
யேரதா விரண்டும் வேறென் றியம்பிட லியல்பின் ருமால்

இதன் பொருள்.

| | |
|---|---|
| காரணமொழிய வேறு | —காரணமின்றி அன்னியமாக |
| காரியமின்மையால் | —காரியங்களில்லாததனுல் |
| காரணமதனுலன்றி | —காரணத்தைத் தவிர |
| காரியமுளவாய்த் தோன்ரு | —காரியங்களிருக்கின்றனவாகத் தோன்ருவாகும் |
| காரியமனைத்தினுக்கும் | —சகல காரியங்களுக்கும் |
| காரணமதுவே உண்மை | —காரணமே சத்தியமாகும் |
| ஏரதா இரண்டும் | —அழகாக காரணகாரியமிரண்டும் |
| வேறென்றியம்பிடல் | —பின்னமென்று சொல்லுவது |
| இயல்பின்ரும் | —தகுதியின்மையாகும். (19) |

அவதாரிகை.

இங்ஙனம்கூறிய பொருளில் மிருத்தே சத்தியமென்றது முதலிய காரண மாத்திர சத்தியத்தன்மையை நிரூபிக்குஞ் சுருதியின் பொருளைக் கூறுகின்ருர்.

வேறு.

ஆமன்றென நினையீரல தன்பின்வழி யறிவீர்
நாமுன்சொன முதல்காரண மறியமுழு தறிவாஞ்
சேமம்பட மிகவுந்தெளி வுறுவீரிது வென்றே
தாமந்தரு மலர்மேலுறை தலைவன்னுரை தருமால்.

### இதன் பொருள்.

நாமுன் சொன —யாமுன்பு சொல்லிய
முதல் காரணமறிய —முதன்மைக் காரணமாம் பிரம்மத்தை யறிந்திடில்
முழுதறிவாம் இது —சருவஞ்ஞானமாகும் இதனை
அன்பின் வழியறிவீரலது —(நீங்கள்) பிரேமாபத்தியுடன் அறிவீர்களேயன்றி
ஆமன்றென நினையீர் —ஆகுமாகாதென்று கருதமாட்டீர்கள் (ஆதலால்)
சேமம்பட —இன்பமுண்டாகும்படி
மிகவுந் தெளிவுறுவீர் என்று —மிகவும் நிச்சமுசயமாக அறிவீர்கள் என்று
தாமந்தரு —விளக்கத்தைத்தருகின்ற
மலர்மேலுறை தலைவன்—தாமரைப்பூவில் வீற்றிருக்கும் பிரம்மதேவனானவன்
உரைதரும் —சொல்கின்றான்.

**பதசாரம்**—உலகத்தில் மிருத்து முதலிய காரணங்கள் அறியப்படின் அதற்கு வேறில்லாததாக அதன் காரியமான கடசராவ முதலியவை காரணரூபமாக அறியப்படுதலால் சருவசக காரணமான சத்தாகிய பிரம்மஞானத்தால் அதன் காரியமான வனைத்துங் காரணசொரூபமாகவே அறியப்படுமென்பார், '**நாமுன் சொன முதல்காரணமறிய முழுதறிவாம்**' என்றார். (20)

### அவதாரிகை.

காரணஞானத்தாற் காரியமறியப்படினும் காரணம் அநேகமாதலால் ஏக காரண ஞானமாத்திரத்தா லறியக்கூடாததனால் எங்ஙனம் ஒன்றை அறிந்தது பற்றி அனைத்தும் அறிந்ததாகுமென்ற சங்கைக்குச் சமாதானங் கூறுகின்றார்.

கூறும்பொருள் விரிவென்றிட லறியாமையின் முழுதும்
வேறும்மல வேறாயுட னாய்நின்றது மலதான்
தேறும்படி யுளகாரண மொன்றேயுள தெனலால்
வேறென்றிடு பேதம்மில தாமெங்கணும் வினையால்.

### இதன் பொருள்.

கூறும்பொருள் —(இப்போது) சொல்லிய பொருள்
விரிவென்றிடல் —நானாவென்று சொல்லுதல்
முழுதும் அறியாமையின்—முழுதும் அறியாமையினாலேதான் (காரணமானது)
வேறும்மல —பின்னமுமல்ல
வேறாயுடனாய் நின்றதுமல —பின்னாபின்னமாக நிற்கின்றதுமல்ல
தான்தேறும்படி யுளகாரணம்—தான் தெளியும்படியுள்ள காரணமானது
ஒன்றேயுளதெனலால் —ஏகமாகவேயிருக்கின்றதெனச் சொல்லலால்

| | |
|---|---|
| வினையால் | —தொழிலால் |
| வேறென்றிடு பேதம் | —பின்னமென்கிற பேதமானது |
| இலதாமெங்கணும் | —எவ்விடத்திலும் இல்லாததாகும். (21) |

அவதாரிகை.

பின்னங்களாகக் கடபடங்கள் அனுபவிக்கப்படப் பேதம் எங்ஙனம் இல்லாததாகுமென்ற சங்கைக்கு அன்னியோன்னியாசிரயத்தில் சமாதானங் கூறுகின்றார்.

அயலொன்றிடு பொருளும்மதன் பிரிவும்மறி வரிதா
மியல்பின்கண தறியும்பொழு திதுதான்மிகும் வேறா
மயலென்றது வறியிற்றரு மியின்ஞானமு மாகும்
முயலும்பல பேதம்மென மொழிகின்றது மரிதே.

இதன் பொருள்.

| | |
|---|---|
| அயலொன்றிடு பொருளும் | —பேதம்பொருந்திய தருமியாகிய பொருளும் |
| அதன் பிரிவும் அறிவரிதாம் | —தருமியினது தருமமாகிய பேதமும் அறிதற்கரிதாகும் |
| இயல்பின்கண தறியும்பொழுது | —உண்மையாகத் தருமியை அறியும்பொழுது |
| வேறாமிதுதான் மிகும் | —பேதமான இந்தப்பொருள் அதிகமாக உண்டாகும் |
| அயலென்றது வறியில் | —பேதமென்கின்றதறியுங்கால் |
| தருமியின் ஞானமுமாகும் | —தருமியினுடைய ஞானமுமுண்டாகும் (ஆகையால்) |
| முயலும் பலபேதம்மென | —முயற்சிசெய்கின்ற பலபேதமுண்டென்று |
| மொழிகின்றதுமரிதே | —சொல்லுவதற்கரிதாகும். |

கருத்து—பிரத்தியட்சமாகிய பேதம் எங்ஙனமித்தையாகுமெனில் தருமிப் பிரதியோகியின் ஞானத்தை முன்னிட்டுப் பேதஞானஞ் சித்திக்கவேண்டும். பேதமாக அறியப்பட்டவைகளுக்கே தருமிப் பிரதியோகித் தன்மையுளதாகும். இங்ஙனமாயின் தருமியாகிய பின்னவஸ்துவின் ஞானஞ்சித்தித்துப் பேதஞானஞ் சித்திக்கும். பேதஞானஞ் சித்தித்திடிற் பின்னவஸ்துவாகிய தருமிஞானஞ் சித்திப்பதாகும். இஃது அன்னியோன்னியாசிரய தூஷணமாதலாற் பேதமுள்ளதெனச் சொல்லுவது அவிவேகத்தாலென்றறிக. (22)

அவதாரிகை.

முற்கூறியபடி பேதமின்றி பேதாபேதமுமின்றி எப்பொழுதும் எவ்விடத்தும் அழிவில்லாத காரண மொன்றேதானிருக்கின்றதெனக் கூறுகின்றார்.

பேதந்நெறி யோரில்லில தாகும் மதனாலே
பேதம்மொட பேதம்மது பேசல்பிழை யேயா
மேதம்மில தாயெங்கணு மொன்றாயொழி வில்லா
தியாதொன்றது முதல்காரண மெனுமாமலர் மிசையோன்.

### இதன் பொருள்.

ஓரில் —ஆராயுங்கால்
பேதந்நெறி இலதாகும் —பேதமார்க்கம் இல்லாததாகும்
அதனல் —அத்தன்மையினுல்
பேதம்மொட பேதம்மது பேசல்—பேதா பேதமென்பதை நிரூபித்தல்
பிழையேயாம் —குற்றமேயாகும்
ஏதம்மிலதாய் —துன்பமில்லாததாய்
எங்கணுமொன்ருய் —எவ்விடத்திலும் ஒரேபொருளாய்
ஒழிவில்லாதியாதொன்று அது—அழியாதிருக்கின்றதெதுவோ அதுவே
முதல்காரணமெனும் —ஆதிகாரணமென்று சொல்லுவான்
மாமலர்மிசையோன் —பெரிய தாமரைமலரின்மேலிருக்கும் பிரம்மதேவன்.

பதசாரம்—காரண ரூபபேதமில்லாததனுலும் ஸஜாதீயவிஜாதீய சுகதபேத மில்லாததனுலும் காரணமத்துவிதமாகி ஒன்றேதானுளதென்பார், ஏதம்மிலதா யெங்கணு மோன்றயொழி வில்லா தியாதோன்றது முதல்காரணம்' என்ருர்.

### அவதாரிகை.

உலகில் கடாதி காரியங்களிடத்தில் உபாதானம் நிமித்தம் இவ்விரண்டும் வேருகக் காணப்படுதலால் அத்துவிதப்பிரம்மம் நிமித்தமாயின் உபாதான மின்றிக் காரியமுண்டாகாது. உபாதானமாயின் நிமித்தமாகாதெனில் அதற்கத் துவித சுத்தமாகிய இரண்டு தன்மையுமுண்டெனக் கூறுகின்ருர்.

மண்ணும்வனை வானும்வனை பவையும்பிறி தாயே
யெண்ணும்மள வறிவின்மையி லிவனைப்பெறு மிதுவுங்
கண்ணென்றிட வருகாரண மொன்ருயம லமதா
யெண்ணும்மறி வுருவையிசை யாநிற்பதிவ் விடையே.

### இதன் பொருள்.

மண்ணும் —மிருத்திகையாகிய உபாதானகாரணமும்
வனைவானும் —குலாலனுகிய நிமித்தகாரணமும்
வனைபவையும் —செய்யப்பட்ட கடாதிகளும்
பிறிதாயே எண்ணும்மளவு —பேதமாகவே நினையுங்கால்
இதுவும் அறிவின்மையில் —இந்த மண்ணும் அசேதனமாகலின்
இவனைப்பெறும் —குலாலனை அடையாநிற்கும்
இவ்விடை —இவ்விடத்தில்
கண்ணென்றிட வருகாரணம்—திருக்கென்னும்படி வருகின்ற காரணமானது

| | |
|---|---|
| ஒன்றாய் அமலமதாய் | —அத்துவிதமாயும் சுத்தமாயும் |
| எண்ணும் அறிவுருவை | —கருதுகின்ற சைதன்னியரூபத்தை |
| இசையா நிற்பது | —பொருந்தி நிற்கின்றது. |

கருத்து—பலவாகப் பவிப்போமென்று பார்த்தானென்ற சுருதியினாற் பலவாகப்பவித்தலின் உபாதானத்தன்மையும், பார்த்தமையின் நிமித்தத்தன்மையும், அத்துவித வஸ்துவுக்குக் காணப்படுதலால் காரியங்களினிடத்தில் நிமித்தமும் உபாதானமுமான இரண்டு தன்மையும் அதுதானே யென்றறிக. (24)

இதுவுமது.

வனைகின்றவ னெனக்காரண மாஞ்சேதனம் வேறாய்
நினையும்படி யிலஃதா தலி னிலையாயுள தறிவே
யனகாரண மறிவாயினும் வனைவானிக ரன்றாம்
நினைமண்ணொடு நிகரானவை தனையேகொடு செயுமால்.

இதன் பொருள்.

| | |
|---|---|
| வனைகின்றவனென | —செய்பவனாகிய குலாலனைப்போலவே |
| காரணமாஞ்சேதனம் | —காரணமாகிய சேதனத்தை |
| வேறாய் நினையும்படி யிலஃதாதலின் | —வேறாக எண்ணும் பரிசில்லாத தாகையால் |
| நிலையாயுள்து அறிவே | —திரமாகவிருப்பது ஞானமேதான் |
| அனகாரணம் | —அத்தன்மைத்தாகிய காரணமானது |
| அறிவாயினும் | —சேதனமாயினும் |
| வனைவானிகரன்றாம் | —குலாலன்போலன்றாகும் |
| நினைமண்ணொடு | —கருதப்படுமண்ணினோடு |
| நிகரானவை | —சமானமாயுள்ள உபாதானகாரணங்களாகவும் |
| தனையேகொடு செயுமால் | —தன்னையேகொண்டு சிருட்டிசெய்யா நிற்கும். (25) |

அவதாரிகை.

விவகாரமில்லாத அசங்கமாஞ் சத்துரூபப் பிரம்மத்திற்கு இவ்வித காரணத் தன்மை எங்ஙனங்கூடும்; மாயையாற்கூடுமெனில், அதனால் துவிதமாகிவிடுமென்ற சங்கைக்குச் சமாதானங் கூறுகின்றார்.

வேறு.

தோன்றலா வசித்துமாகித் தமத்தொடு கலந்து நின்றே
யான்றவம் முனிகள்பண்ணு மனனத்தா லளப்பொண்ணாதாய்ச்
சான்றதா யெங்கும்நின்ற சங்கர னுடைத்தா யொன்றா
யீன்றிடு மரியவெல்லா மித்தன்மைத் தெனவொன் றுண்டு.

### இதன் பொருள்.

| | |
|---|---|
| தோன்றலால் | —(விவகாரமாத்திரத்தால்) தோன்றுதலால் |
| அசித்துமாகி | —அசித்துருபியாயும் |
| தமத்தொடு கலந்து நின்று | —தமோரூபத்துடன் பொருந்தி நின்று |
| ஆன்றவம்முனிகள் | —அறிவினையுடைய அந்த முனிவர்கள் |
| பண்ணுமனனத்தால் | —செய்யுமனனத்தினுல் |
| அளப்பொண்ணுதாய் | —அளக்கக்கூடாததாயும் |
| சான்றதா யெங்கும்நின்ற | —சாட்சியாகவே யெவ்விடத்தும் பிரகாசிக்காநின்ற |
| சங்கரனுடைத்தாய் | —சங்கர சம்பந்தமுடையதாயும் |
| ஒன்ருய் | —ஒருபொருளாயுமுள்ள |
| அரியவெல்லாம் | —உற்பத்தி செய்தற்கரிய அனைத்தையும் |
| இத்தன்மைத்தெனை | —இப்பரிசினையுடைய தென்னும்படி |
| ஈன்றிடும் | —சிருட்டி செய்கின்ற |
| ஒன்றுண்டு | —(மாயையென்னும்) ஒரு சத்தியிருக்கின்றது. |

**பதசாரம்**—தோற்றமே சரீரமாகிய ஜடசுபாவத்தைத் '**தோன்றலா லசித்து மாகி**' எனவும், சுயம்பிரகாசப் பிரம்மசுபாவத்தை மறைப்பதுபோலிருத்தலின் '**தமத்தோடு கலந்து நின்றே**' எனவும், பிரதான தத்துவத்தை நிரூபிக்கும் வல்லமையுடைய சாங்கியர்களாலும் சத்து அசத்து சதசத்து என்றது முதலிய சருவப் பிரகாரங்களாலும் நிருணயிக்கக் கூடாமையின் '**ஆன்றவம் முனிகள் பண்ணு மனனத்தால் அளப்பொண்ணுதாய்**' எனவும், மாயை அநிர்வசனீயமாதலிற் சத்தாகி வேருயில்லாததனுற் றுவிதமாகாதென்பார், சர்வபரிபூரண சாட்சிமாத்திரமாகப் பிரகாசியாநின்ற '**சங்கரனுடைத்தாய்**' எனவும், சிருஷ்டிக்கக்கூடாத அனைத்தையும் சிருஷ்டிக்கும் வல்லமையுடைய ஒரு மாயாசத்தி உளதென்பார், '**ஈன்றிடு மரியவெல்லா மித்தன்மைத் தெனவொன்றுண்டு**' எனவும் கூறினர். (26)

### அவதாரிகை.

இவ்வண்ணம் அத்துவிதம் பிரம்மம் என்று சாதித்து விஞ்ஞானமா மானந்த சொரூபமுடையது பிரம்மமென்ற சுருதியினல் சத்தென்றுங் கூறுகின்ருர்.

காரண மேவி மாயை படைத்தளித் தழிப்ப தாகுங்
காரணஞ் சத்தாஞ் சித்தா யிருத்தலா லென்று கொண்டே
பூரண மாகி யுள்ள பொருளினைச் சுரர்கள் கேட்ப
வாரண முரைத்த வாதி யருளின னறியும் வண்ணம்.

### இதன் பொருள்.

பூரணமாகியுள்ள பொருளினை—பரிபூரணமாயுள்ள வஸ்துவை
சுரர்கள் கேட்ப —தேவர்கள் (பிரம்மாவினிடத்திற்) கேட்க
காரணம் மேவி மாயை —காரணவஸ்துவானது (தன்னிற் கற்பிக்கப்பட்ட) அந்த மாயையோடு பொருந்தி
படைத்து அளித்து —(சகலத்தையுஞ்) சிருட்டித்து காத்து
அழிப்பதாகும் —சங்காரஞ் செய்கின்றதாகும்
காரணம் —காரண சொரூபமானது
சித்தாயிருத்தலால் —சித்தாகவிருப்பதனுல்
சத்தாம் என்று கொண்டு —சத்தாகும் என்று கருதி
அறியும்வண்ணம் —அத்தேவர்களுணரும்படி
ஆரணமுரைத்தவாதி —வேதத்தையருளிய பிரம்மதேவனைவன்
அருளினன் —சொன்னுன்.

**பதசாரம்**—இவ்வித மாயா தாதான்மியஞ் சத்துரூபப் பிரம்மத்தில் அத்தியாசிக்கப்பட்டிருப்பதனுல் அதன் சத்துவ ரஜோதமோ குணங்களாகிய உபாதிகளின் பேதத்தால் நிர்விகாரியாகிய பரிபூரண வஸ்துவாயுள்ள அத்துவிதீயப் பிரம்மத்திற்குச் சிருட்டி கருத்திருத்துவ முதலியன கூடுமென்பார், '**காரண மேவி மாயை படைத்தளித் தழிப்பதாகும்**' என்ருர். (27)

### அவதாரிகை.

இவ்விஷயத்தில் வியாப்தி கூறுகின்ருர்.

உண்மைசித் தினுக்கே யுள்ள தசித்தெனும் பழுதைப் பாம்பிங்
கெண்மையி னிலாத வண்ண மிசையுமுங் கட்கு மேற்கக்
கண்ணென முழுது நின்ற காரண மொன்றே சத்தா
யெண்ணிடி லென்று முள்ள திச்சக முனஞ்சத் தாமால்.

### இதன் பொருள்.

உண்மை —இருக்குந்தன்மை
சித்தினுக்கே உள்ளது —சித்தொன்றினுக்கே இருக்கின்றது
அசித்தெனும் பழுதைப்பாம்பு—சடமென்று சொல்லப்பட்ட இரச்சு சர்ப்பம்
இங்கு எண்மையில் —இவ்விடத்தில் எண்ணிடில்
இலாதவண்ணம் —இல்லாதவாறு
உங்கட்கும் ஏற்க இசையும் —உங்களுக்குஞ் சமாதானம் ஆகும்படி பொருந்தும்
எண்ணிடில் —கருதில்
கண்ணென முழுதுநின்ற —திருக்கு சொரூபமாக எங்கும் வியாபித்த

காரணமொன்றே —காரணசொரூப மொன்றுதானே
சத்தாய் என்றுமுள்ளது —சத்தாகி எக்காலத்துமிருக்கின்றது
இச்சகம் முனஞ்சத்தாம் —இந்தவுலகமெல்லாம் சிருட்டிக்குமுன் சத்தாகும்.

**பதசாரம்**—ஜடப்பிரபஞ்சப் பிரதீதிநாசங்களுக்குச் சாட்சியாய் எக்காலத்தினுமுள்ளதாதலால் அதிட்டானமாகிய சித்துருபப் பிரம்மத்துக்கு எப்போதுஞ் சத்தியத்தன்மையே யோக்கியமாகுமென்பார், 'உண்மை சித்தினுக்கே உள்ளது' எனவும், சித்துருபத்துக்கேன் அசத்தியத்துவங் கூடாதெனின், எது சத்து விலட்சணமோ அது சித்தாகாதாகையால் இரச்சுவில் ஆரோபிதமாகிய சர்ப்பத்துக்கே அசத்துவங் கூடுவதுபோல் மாயை முதலிய பிரபஞ்சத்துக்கே அசத்தியத்துவங் கூடுமேயன்றி அதிஷ்டானப் பிரம்மத்துக்கு அசத்தியத்துவங் கூடாது எங்ஙனமெனில் மித்தையானது அசித்துருபத்தால் வியாபிக்கப் பட்டதாகக் காணப்படுவதனுல் அந்த அசித்துருபமானது சித்துருபமான உலக காரணத்தினின்றும் நீங்கித் தனக்கு வியாப்பியமாகிய மித்தியாத்துவத்தையும் நீக்கிவைக்கின்றதென்பார், 'அசித்தேனும் **பழுதைப் பாம்பிங்** கேண்மையினி லாதவண்ண மிசையும்' எனவும், சகத்காரணம் அத்துவிதமாயும் சத்தாயுமிருத்தலால் நாமரூபமாகத் தோற்றுகின்ற காரிய சகமெல்லாம் சிருட்டிக்குமுன் நாமரூபமாயில்லாமல் சத்தானகாரண வான்மரூபமாகவேயிருந்ததென்பார், 'எண்ணிடிலென்றுமுள்ள திச்சகமுனஞ் சத்தாமால்' எனவும் கூறினுர். (28)

## அவதாரிகை.

இந்தப் பிரகாரம் சத்காரண வாதத்தைத்துதித்து அதனை உறுதிசெய்யும் பொருட்டுச் சூன்யவாதியின் கொள்கையான அசத்காரண பட்சத்தைக் கூறி அதனை அஃதொன்றே அல்லவா வென்றதுமுதல் எங்ஙனம் சத்தினின்று அசத்துண்டாகு மென்றதுவரை மக்கட்படைப்புக்குக் காரணம் மலடிமகன் ஆகான் என வாக்கியத்தாற் கண்டிக்குஞ் சுருதியின் பொருளேயுங்கூறுகின்றுர்.

அறியாதா ரசத்தாய் முன்பு காரண முளதாய்த் தென்பர்
நெறியாலிவ் வசத்துண் டாக்குங் காரண மாகா தென்றும்
பிறியாத காரி யங்க ளிதினின்றும் பிறக்கு மென்னில்
வறிதாய மலடி மைந்தன் காரண மக்கட் கெல்லாம்.

## இதன் பொருள்.

அறியாதார் முன்பு அசத்தாய் —உணராதவர்கள் சிருட்டிக்குமுன் அசத்தாக
காரணமுளதாய்த் தென்பர் —காரணமுள்ளதாயிற்றென்பார்கள்
நெறியால் இவ்வசத்து —முறைமையால் இந்த அசத்தானது
என்றும் —எக்காலத்தும்
உண்டாக்குங் காரணமாகாது —உற்பத்திசெய்யுங் காரணமாகாது
பிறியாத காரியங்கள் —காரணத்துக் கபின்னமாகிய காரிய வஸ்துக்க

இதினின்றும் பிறக்குமென்னில்—இந்த அசத்தில் நின்று முற்பவிக்குமென்றால்
வறிதாய மலடிமைந்தன் —வீணாகிய வந்தியாபுத்திரனும்
மக்கட்கெல்லாம் காரணம் —எல்லா மானிடர்களுக்கும் காரணமாவான்.

பதசாரம்—நசித்த பீசத்தினின்றும் அங்குர முதலிய காரியோற்பத்தி காணப்படுதலால் காரணங் கெடாமற் காரியமுண்டாவதில்லை, அபாவத்துக்கே காரணத்தன்மை உளதாகும். இங்ஙனம்போல் உலககாரணமும் அசத்துரூபமே தானென்பார்கள் அசத்வாதியர்கள். இறந்த தேவதத்தனுக்குப் புத்திர உற்பாதன சத்தியில்லாததுபோல் நசித்த காரணத்துக்குக் காரிய ஜனனசத்தி கிடையாததனுலும் அங்குர முதலிய காரியங்களுண்டாகுங்காலத்தும் பீசமுதலிய காரணங்களினிருப்பு முதலாம் விசேடங்களாகிய காரணவயவங்களுக்கு இடைவிடாத இருப்புக்காண்பதனுலும், அசத்துகாரணத்தன்மை பொருந்தாததுபற்றி அவ்வசத்காரணவாதிகள் பிராந்தர்களென்பார், 'அறியாதா ரசத்தாய் முன்பு காரண முளதாய்த் தேன்பர்' எனவும், சருவப் பிரகாரத்தாலும் நிரூபிக்கத்தகாத வசத்துக்குக் காரணத் தன்மையை இலக்கணமாகவுடைய பாவரூப தருமாசிரயத்தன்மை கூடாததனுலும் அங்ஙன மாசிரயத்தன்மைகூடின் வந்திமகனும் அசத்தானது பற்றி விசேடமில்லாததனுல் அனைத்துக்குங் காரணமாகலாமென வருமாதலால் அசத்து காரணமாகாதென்பார், 'பிறியாத காரியங்க ளிதினின்றும் பிறக்குமென்னில் வறிதாய மலடி மைந்தன் காரண மக்கட் கெல்லாம்' எனவுங்கூறினுர். (29)

## அவதாரிகை.

உலகிற்கு மூலகாரணம் அசத்தா யிருந்திடினும் தன் சத்தியாலதற்குக் காரணத்தன்மை கூடலாமென்ற பட்சத்தை யனுவதித்துக் கூறுகின்றூர்.

அசத்துத்தன் சத்தி யாலே யாவுக்கு முதலா மென்னி
லசத்துக்குச் சத்தி கூடா தாமசத் தாத லாலே
யசத்தலா வித்தி னின்று மங்குரந் தோன்ற லாலே
யசத்திற்கஃ தின்றுஞ் சத்தே யாவையு மாவ தென்றும்.

## இதன் பொருள்.

அசத்துத் தன்சத்தியாலே —அசத்தானது தனது சத்தியினுல்
யாவுக்கும் முதலாமென்னில் —சகலங்களுக்கும் காரணமாகுமென்னில்
அசத்துக்குச் சத்திகூடாதாம் —அந்த அசத்தினுக்கு வல்லமை சேராதாகும் (ஏனென்னில்)
அசத்தாதலால் —அபாவரூபமாதலால்
அசத்தலாவித்தினின்றும் —சத்தாகிய வித்தினின்றும்
அங்குரந்தோன்றலாலே —முளையுண்டாதலால்

அசத்திற்கு —அசத்தாகிய வித்திற்கு
அஃதின்ருல் —முளையுண்டாகுந்தன்மை இல்லாததாகும் (ஆகையால்)
சத்தே என்றும் —சத்தொன்றே எக்காலத்தும்
யாவையுமாவது —காரணமனைத்துமாகின்றது.

**பதசாரம்**—அசத்துரூபந் தனது சத்தியாலே அனைத்திற்குங் காரணமாகாமல் அங்குர முதலிய காரிய ஜனனசத்தியுஞ் சத்துரூபப் பீசத்துக்கே அன்வய வியதிரேகங்களாற் காணப்படுதலால் பிரத்தியட்ச விரோத மாகலின் அசத்துக்குச்சத்தி கற்பனம் பொருந்தாதென்பார், 'அசத்திற்கஃதின்றும்' என்ருர். (30)

அவதாரிகை.

அதனை மூன்றுவிதமாக விகற்பித்துக் கண்டனங் கூறுகின்ருர்.

அசத்தின்கண் ணுளதாஞ் சத்தி சத்தாயோ வசத்தாக் கொண்டோ
வசத்துடன் சத்தாய்க் கொண்டோ வாய்நின்ற வாற தென்னை
யசத்தினை யுளதாஞ் சத்தி யாசிரித் திடுவ தென்னி
லசத்தாய மலடி மைந்த னத்தகு சத்த ஞவான்.

இதன் பொருள்.

அசத்தின் கண்ணுள தாஞ்சத்தி—அசத்தினிடத்திலிருக்கின்ற சத்தியானது
சத்தாயோ வசத்தாக்கொண்டோ—சத்தாகவோ அசத்தாகவோ
அசத்துடன் சத்தாய்க்கொண்டோ—சதசத்தாகவோ
ஆய்நின்றவாறதென்னை —இவைகளிலெதுவாகி நிற்கின்றது
அசத்தினை —அசத்தாகிய காரணத்தை
உளதாஞ்சத்தி —சத்தாகிய சத்தியானது
ஆசிரித்திடுவதென்னில் —ஆசிரியிக்கின்றதென்னில்
அசத்தாய மலடிமைந்தன் —அசத்தாகிய வந்தியாபுத்திரனும்
அத்தகு சத்தனுவான் —அத்தன்மைத்தாய சத்தியையுடையவனுவான். (31)

இதுவுமது

அசத்தின்றன் சத்தி தானு மசத்தாயே நிற்ப தென்னி
லிசைத்திடுங் காரி யங்க ளியாவையு மிடற்ரு தென்று
மசத்தோடே மலடி மைந்த னுக்குவ திலாமை யேபோ
லசத்தோடே சத்தே யென்னி லாயிடு மிரண்டின் குற்றம்.

இதன் பொருள்.

அசத்தின்றன் சத்திதானும் —அசத்தினுடைய சத்தியானது
அசத்தாயே நிற்பதென்னில் —அசத்தாகியே நிற்கின்றதென்ருல்

மலடிமைந்தன் —வந்தியாபுத்திரன்
அசத்தோடே —அசத்துடன்பொருந்தி
ஆக்குவதிலாமையேபோல் —ஒருபொருளை உற்பத்தி செய்வதில்லாததுபோல்
இசைத்திடும் —சொல்லுகின்ற
காரியங்களியாவையும் —தொழில்களனைத்தையும்
என்றும் இயற்ருது —எக்காலத்தும் செய்யமாட்டாது
அசத்தோடே சத்தேயென்னில்—(அச்சத்தியானது) சதசத்தென்னில்
இரண்டின் குற்றம் ஆயிடும் —முன்சொல்லிய இரண்டுவிதமான குற்றங்களும் உண்டாகிவிடும். (32)

அவதாரிகை.

முன் கூறிய பிரகாரம் அசத்தைக் காரணமென்பதாவது அல்லது சதசத்தென்பதாவது ஊகமில்லாப் புலம்பலாமெனக் கூறுகின்ருர்.

அசத்துத்தன் சத்தி யாலுங் காரண மாகா தாஞ
லசத்துமுன் புளதென் ருேதற் கருத்தமு மில்லை யேயா
மசத்தலா தாகு மொன்றே யனைத்திற்கு முதல தாகு
மசத்துள தாகு மென்ற லழிந்திடும் வார்த்தை யன்றே.

இதன் பொருள்.

அசத்துத் தன் சத்தியாலும் —அசத்தானது தனது சத்தியினுலும்
காரணமாகாதாஞல் —காரணமாகாதாயின்
அசத்து முன்பு —அசத்தானது சிருட்டிக்குமுன்பு
உளதென்ருேதற்கு —இருந்ததென்று சொல்லுதற்கு
அருத்தமுமில்லையேயாம் —பொருளில்லாததாகும் (ஆகையால்)
அசத்தலாதாகுமொன்றே —அசத்தல்லாத சத்து ஒன்றே
அனைத்துக்கு முதலதாகும் —சகலங்களுக்கும் காரணமாகும்
அசத்துளதாகுமென்றல்—(சிருட்டிக்குமுன்பு)அசத்து இருந்ததாகச்சொல்லுதல்
அழிந்திடும் வார்த்தை —நிலையாத வார்த்தையாகும். (33)

அவதாரிகை.

சிருஷ்டிக்குமுன் அசத்திருந்ததென்பது நிலையாதாதலின் பூருவ கற்பம் போல் உலகமெல்லாம் சத்தாகிய காரணத்தால் உதித்தன வென்று கூறுகின்ருர்.

பூதத்தா லுளதா யுள்ள புவனங்க ளுயிர்கண் முன்போன்
ருேதத்தா னரிய சத்தா லுதித்ததென் றுணரும் வண்ணம்
வேதத்தான் முழுதுஞ் சொன்ன வடிவினை விளங்கு மாற்ரு
லோதத்தான் ருெடங்க லுற்ரு னுயர்தரு சுரர்கட் கெல்லாம்.

### இதன் பொருள்.

பூதத்தாலுளதாயுள்ள —பஞ்சபூதங்களால் பொருந்துவனவாயுள்ள
புவனங்கள் உயிர்கள் —உலகங்களும் சீவர்களும்
முன்போன்று —பூருவ கற்பம்போல்
ஓதத்தானரியசத்தால் —சொல்லுதற்கரிதாகிய சத்திஞலே
உதித்ததென்று —உண்டாகியதென்று
உணரும்வண்ணம் —அறியும்படி
வேதத்தான் முழுதுஞ்சொன்ன—சுருதியினுல் முழுதுஞ் சொல்லிய
வடிவினை விளங்குமாற்ருல் —சொரூபத்தை விளங்கும்படியாக
உயர்தரு —பெருமை பொருந்திய
சுரர்கட்கெல்லாம் —தேவர்களனைவர்களுக்கும்
ஓதத்தான்ருெடங்கலுற்ருன் —தான்சொல்லத் தொடங்கினுன். (34

### அவதாரிகை.

அசத்து காரணமாகாததனுல் சத்தே காரணமாகிச் சிருட்டிக்குமுன் சகமனை தும் காரண சன்மாத்திரமாயிருந்ததென்ற சுருதியின் பொருளைக் கூறுகின்ருா

### வேறு.

எல்லாமுண் டாவதற்கு முன்னேதோன்று
மித்தனைக்குங் காரணமாஞ் சத்தேயாகு
மில்லாத முதன்முடிவை யுடைத்தாயொன்ருா
யிருக்குமிது வென்றுமுள வியல்பிற்ருகி
நில்லாத வுலகனைத்து முன்புசெய்த
நெறியதனை யுடைத்தாகி நிமலமாகிச்
சொல்லாலு மளப்பரிதாய்த் தன்னதுண்மை
சுருதிமுடி வதனுலுந் தொடரொணுதாய்.

### இதன் பொருள்.

உண்டாவதற்கு முன்னே —சிருட்டிக்கு முன்னமே
எல்லாம் —உலகமெல்லாம்
தோன்றுமித்தனைக்குங் காரணமாஞ் சத்தேயாகும் } தோற்றுகின்றவிவ்வளவு விகாரத்திற்கும் ணமாகிய சன்மாத்திரமேயாகும்
இல்லாத முதன்முடிவை யுடைத்தாய் } ஆதியும் அந்தமும் இல்லாத காரணத் தன் யையுடையதாயும்
ஒன்ருயிருக்குமிது —அத்துவிதமாயுமிருக்கின்ற இந்தக்காரணமா
என்றும் முளவியல்பிற்ருகி —எக்காலத்துமிருக்கின்ற சுபாவமுடையதாகி

நில்லாதவுலகனைத்தும் —நிலையாயிராத வுலகமெல்லாம்
முன்புசெய்த —பூருவகற்பத்திற்செய்த
நெறியதனையுடைத்தாகி —சமஸ்காரவிதத்தையுடையதாகி
விமலமாகி —நின்மலமாகி
சொல்லாலுமளப்பரிதாய் —வாக்கினாலளவிடுதற்கரிதாகி
தன்னதுண்மை —தன்னுடைய மெய்ம்மையை
சுருதிமுடிவதனாலும் —வேதாந்தங்களாலும்
தொடரொணாதாய் —தொடர முடியாததாகி.

பதசாரம்—ஆதியந்தமற்ற அதீதகற்பத்திலொடுங்கிய பிரபஞ்சத்தினுண்டாகிய வாசனையோடும் அவ்வனுபவத்தாற்றோன்றிய சமஸ்காரத்தோடும்கூடியதென்பார், 'முன்புசெய்த நெறியதனை யுடைத்தாகி' என்றார். (35)

அவதாரிகை.

கூறியபடி ஏகவத்து விஞ்ஞானத்தாற் சருவவத்துவின் ஞானத்தைப் பிரதிக்கினைசெய்து அதனை நிரூபிக்கவேண்டி மிருத்து முதலிய திட்டாந்தங்களால் காரியத்துக்குக் காரணத்தின் வேறின்மை சாதித்து அவ்வேகமுமாகிய வத்து எது, எந்த வத்துவின் ஞானத்தால் அனைத்தும் அறியப்படுகின்றதென்று சங்கித்து, சிருட்டிக்குமுன்ன மிச்சகஞ் சன்மாத்திரமாயிருந்ததென்று சத்தாகிய அத்துவீதியப் பிரம்மம் முற்கவிகளாலுபதேசிக்கப்பட்டது. சகம் பிரம்மகாரியமாயின் அச்சகத்தின்காரண விஞ்ஞானத்தால் சகமனைத்து மறியப்பட்டதாகுமென்று அபிப்பிராயங்கொண்டு சகத்தைப் பிரம்மகாரியமாகக் கூறவேண்டி அதினின்றுஞ் சிருட்டி சுருதியிற் கூறப்படுகின்றது. அது வெங்ஙனமெனில் பல சீவர்களாகப் பவிப்போமென்று அந்தப் பிரம்மம் பார்த்ததென்றது முதலான விஷயங்களாகிய அந்தச் சுருதியின் பொருளைக் கூறுகின்றார்.

வேறு.

காலமுங் கன்மந் தானு பரிபாக மான வாற்றால்
ஞாலமுண் டாக்கு நல்ல குணத்தினைக் கலந்து நிற்கும்
பாலதொன் றில்லா விந்தச் சத்திமான் படைத்தற் காக
யேலவே யெல்லா மாவோ மென்றுகொண் டிசைந்து பார்த்தான்.

இதன் பொருள்.

காலமுங் கன்மந்தானும் —காலமும் கருமம்
பரிபாகமானவாற்றால் —பரிபக்குவமானவிதத்தினால்
ஞாலமுண்டாக்கும் —உலகைச் சிருட்டிசெய்யும்
நல்லகுணத்தினைக் கலந்து நிற்கும்—சத்துவவிருத்தியைச் சேர்ந்து நிற்கும்
பாலதொன்றில்லா —(உண்மையில்) ஒருகுணமும் தன்னிடத்தில் இல்லாத

இந்தச் சத்திமான் —இந்தச் சத்தியையுடையவன்

படைத்தற்காக —சிருட்டி செய்வதற்காக

ஏலவே —(பூருவகற்பத்திலுள்ள வாசனையாலுண்டான சமஸ்கார வியல்பினுக்கு) ஏற்கவே

எல்லாமாவோ மென்றுகொண்டு } நாம் அனைத்துமாகப் பவிப்போமென்றுட் கொண்டு

இசைந்து பார்த்தான் —சம்மதித்து நோக்கினன்.

**பதசாரம்**—காலத்தாற் செய்யப்பட்ட பிராணிகளின் புண்ணிய பாப பலன்களைக்கொடுக்கும் முயற்சியையுடைய கருமபரிபாகத்தாலென்பார், '**காலமுங் கன்மந்தானும் பரிபாகமானவாற்றல்**' எனவும், அந்தக்காரணத்துக்கு உபாதானமாகிய சத்துவ பரிணாமரூபமாயும் சிருட்டிக்கத்தக்க பிரபஞ்சவிடயமாயுமிருக்கின்ற விருத்தியைக் கலந்தென்பார், '**நல்லதுணைத்திணைக் கலந்து**" எனவும், நிருவிகாரமாயும் நிரவயவமாயுமுள்ள சித்துருபவான்மாவுக்குப் பலவாகப் பவிக்குந்தன்மை கூடாததனால் சாங்கியர்களொப்பிய பிரதானமே அதற்கு யோக்கியமாகும். அஃதே பலவாகப் பவிப்போமென்ற சுருதிவாக்கியத்தால் கூறப்படுகின்றதென்னில், அங்ஙனங்கூடாது. அசேதனமாயின் அதற்குப் பார்வையில்லாமையின் அதனாலேயே வாதராயணரும் சுருதியில் ஈட்சிக்கின்றதாகக் காணப்படுவதனால் பிரதானம் சுருதிகூறிய காரணமாகாதென்று சூத்திரஞ்செய்தருளினர். எங்ஙனம் பிரம்மத்துக்கு வெகுவாகுந்தன்மை கூடுமெனின் முக்குணரூபமாயையினாற் கூடும். இங்ஙனமாயினும், மாயை சுதந்திரமாகக் காரணமென்பது வேதமூலமாகாதென்பார், '**பாலதோன்றில்லாவிந்தச்சத்திமான்**' எனவும், வேறான உபாதானத்தின் அபேட்சையின்றி, தன்சொரூபத்தாலேயே வெகுவித ஜகத்தாய்ப்பவித்ததென்பார், '**ஏலவே எல்லாமாவோ மென்றுகொண்டு**' எனவும் கூறினர். (36)

## அவதாரிகை.

சாந்தோகசாகையில் தேயு முதலியவற்றிற்கே யுற்பத்தி கூறப்பட்டது ஆகாயத்திற்கும் வாயுவுக்கும் உற்பத்தி கூறவில்லை. ஆயினுந் தைத்திரீயத்தில் அவைகளுக்கு முற்பத்தி கூறப்பட்டிருக்கின்றமையின் குணோபசங்கார நியாயத்தால் இவ்விடத்து அதனையுஞ்சேர்த்துச் சிருட்டியை நிரூபிக்கின்றார்.

பார்த்தபின் முன்னா காயம் வாயுவைப் படைத்துப் பின்பு
தீத்தனை யப்பைச் செய்தே யனமெனச் சொல்லப் பட்ட
பூத்தனை யுளதாய்ச் செய்த காரண மாகா வீசன்
வாய்த்தநுண் பூத மைந்தாய் வகுத்தவா றியம்பக் கேண்மின்.

## இதன் பொருள்.

பார்த்தபின் —(பலவாவோமென்று) பார்த்தபின்பு

முன்னாகாயம் —முன்னாக விண்ணையும்

| | |
|---|---|
| வாயுவைப்படைத்து | —காற்றையும் சிருட்டித்து |
| பின்பு தீத்தனை | —பிறகு தீயையும் |
| அப்பைச்செய்து | —சலத்தையுமுண்டாக்கி |
| அனமெனச் சொல்லப்பட்ட | —அன்னமென்று (சுருதியிற்) சொல்லப்பட்ட |
| பூத்தனையுளதாய்ச்செய்து | —பிருதிவியையுஞ் சிருட்டித்து |
| அகாரணமாகா வீசன் | —காரணவஸ்துவான ஈச்சுரன் |
| வாய்த்த நுண்பூதம் | —பொருந்திய அபஞ்சீகிருத பஞ்சபூதத்தை |
| ஐந்தாய் வகுத்தவாறு | —பஞ்சீகிருதமாகப் பிரித்த தன்மையை |
| இயம்பக்கேண்மின் | —சொல்லக் கேளுங்கள். |

பதசாரம்—சாந்தோக சுருதியின் விசாரணையான இவ்விடத்தில் மற்றொரு சுருதியிற் சொல்லிய விரண்டுபூதங்களின் சிருட்டியை விருத்தமா யெங்ஙனங் கூறலாமெனில் சமான வித்தைகளைக்கூறும் பின்னசுருதிகளில் வித்தியாகுணங் கள் ஒன்றில் அதிகமாயும், ஒன்றில் குறைவாயுமிருந்திடில் அதிக குணங்களை இல்லாததில்சேர்க்க அதிகாரம்பெற்ற குணோபசங்காரமெனும் நியாயத்தால் தைத் திரீயக சாந்தோக சுருதிகளில் பூதசிருட்டி சமானமானதனாலும் அவ்வாறே வாத ராயணரும் இதனால் வாயுவுரை செய்யப்பட்டானென்ற அதிகரணங்களால் ஆகாசம் வாயு இவற்றினுற்பத்தியை நிருணயித்திருப்பதனாலும் கூடுமென்பார், 'முன்னாகாயம் வாயுவைப் படைத்து' எனவும், சுருதியில் தேயு அப்பு அன்னம் இவைகளைச் சிருட்டித்தானென்றதில் அன்னமென்பது பிருதிவியெனத் தெரியத் தக்கதென்றும் அங்ஙனமே பிருதிவியானது அதிகாரமாகிய மறுசத்தங்களில் நின்றென்ற வியாச சூத்திரமுண்டென்றும் தெரிவிப்பார், 'பின்புதீத்தனை யப்பைச்செய்தே யனமெனச் சொல்லப்பட்ட பூத்தனையுளதாய்ச்செய்து' எனவும், அபஞ்சீகிருத பஞ்சபூதமென்பார், 'நுண்பூதம்' எனவும், கூறினார். (37)

### அவதாரிகை.

சுருதியில் தேயு முதலிய சிருட்டிக்குப் பின்பு திருவிருத்கரணமானது கூறப்பட்டிருக்கின்றது. அவைகளின் ஒவ்வோரங்கிசத்தையும் மூன்றங்கிச முடையதாகச் செய்ததெனவுமிருக்கின்றது. ஆயினும் பூதசிருட்டியில் ஆகாயத் திற்கும் வாயுவிற்கும் உபசங்காரத்தால் உற்பத்திகூறப்பட்டது. பஞ்சீகரணத் திற்கு உபலட்சணமாதலின் அதனை இங்கு விரித்துக் கூறுகின்றார்.

### வேறு.

தன்மாத் திரைக ளைந்தினையு மோரோன் றிரண்டாய்ப் பகுத்தொன்றை
நன்னு லாக்கித் தன்பாதி யொழிந்த நாலி னுடன்கூட்டி
யின்னே யலாத வைந்நான்கி லியல்பிற் கூட்ட வானுதி
பின்னே தூல பூதமெனப் பிறக்கு மெனவே பெயர்த்துரைத்தான்.

## இதன் பொருள்.

| | |
|---|---|
| தன் மாத்திரைகளைந்தினையும் | —தன் மாத்திரைகளாகிய பூதங்களைந்தினையும் |
| ஓரொன்றிரண்டாய்ப் பகுத்து | —ஒவ்வொன்றை இரண்டாகப் பங்கிட்டு |
| ஒன்றை | —(அவைகளில் ஐந்தங்கிசங்களை எடுத்து அவ்வங்கிசங்களுக்குள்) ஒவ்வொன்றை |
| நன்னாலாக்கி | —நன்னான்காகச்செய்து |
| தன் பாதியொழிந்த | —தனது பாதியாகிய ஐந்து நீங்கிய |
| நாலினுடன்கூட்டி | —ஒரு பூதத்தினது நான்குபாகத்தோடு மற்றைப் பூதங்களின் பதினாறு பாகத்தையுஞ்சேர்த்து |
| இன்னே அலாத | —இத்தன்மையவாய் ஒழிந்த |
| ஐந்நான்கில் | —இருபதங்கிசங்களினால் |
| வானாதி | —அபஞ்சீகிர்த பஞ்சபூதங்களை |
| இயல்பிற்கூட்ட | —இவ்வியல்பாகப் பஞ்சீகரணஞ்செய்ய |
| பின்னே தூல பூதமென | —அதன் பின்பு தூலபூதமாக |
| பிறக்குமெனவே | —உண்டாகுமென்று |
| பெயர்த்துரைத்தான் | —திரும்பவும் கூறினான். (38) |

## அவதாரிகை.

பஞ்சீகரணத்தின் பின்பு செய்யுஞ் சிருட்டியைக் கூறுகின்றார்.

## வேறு.

அறியாமை வடிவா யுள்ள புவனங்க ளமைத்துப் பின்பு
பிறியாத கன்மந் தன்னின் வசத்தினா லுயிர்கட் கெல்லாஞ்
செறிவாய கால பாக மானபின் னீசன் றானே
பிறிவாகு நான்கு யோனி பிறந்திடும் வகையே செய்யும்.

## இதன் பொருள்.

| | |
|---|---|
| அறியாமை வடிவாயுள்ள | —அஞ்ஞானரூபமாயுள்ள |
| புவனங்களமைத்து | —உலகங்களை உண்டாக்கி |
| பின்பு பிறியாத | —பிறகு நீங்காத |
| கன்மந்தன்னின் வசத்தினால் | —கன்மத்தினது வசத்தால் |
| உயிர்கட்கெல்லாம் செறிவாய | —எல்லாப் பிராணிகளுக்கும் பொருத்தமாகிய |
| காலபாகமானபின்பு | —காலம் பரிபக்குவமாகிய பின்பு |
| ஈசன்றானே | —ஈச்சுரன்றானே |
| பிறிவாகும் நான்குயோனி | —வேறாகிய (அண்டஜம், ஜராயுஜம், சுவேதஜம், உற்பீஜ மென்னும்) நான்கு யோனிகளாக |
| பிறந்திடும் வகையே செய்யும் | —உண்டாகும்படியே சிருட்டிப்பான். (39) |

அவதாரிகை.

சுவேதஜமான ஊகை முதலியன அண்டஜத்தில் அடங்குமென்ற அபிப்பிராயத்தால் சுருதியிற் கூறப்பட்ட மூவகைச் சீவராசியினுற்பத்தியை முற்கவியில் நான்காக வித்தரித்துக்கூறி இந்தக்கவியில் அந்தத்தேவதை இந்த மூன்று தேவதைகளையுஞ் சீவான்ம சொரூபத்தாற்புகுந்து நாமரூபங்களைச் செய்ததென்ற சுருதியின் பொருளை இங்கு விரித்துக் கூறுகின்றார்.

ஈசனு மிறைவ னொத்த வறிவினா லெங்கு மாகிப்
பேசிடு நாம ரூப முன்புபோற் பிறக்கச் செய்தான்
மாசிலாச் சகத்துத் தானே யுளதுபோ லிசைந்திட் டாலு
மீசனை யொழிய வேறு நிற்பதொன் றில்லை யென்றும்.

இதன் பொருள்.

| | |
|---|---|
| ஈசனுமிறைவன் | —பரமேச்சுரனாகிய பதியானவன் |
| ஒத்தவறிவினால் | —ஒரே தன்மையாகிய (தனது)அறிவினால் |
| எங்குமாகி | —எல்லாவிடத்திலு மனுப்பிரவேசித்து |
| பேசிடும் நாமரூபம் | —(வெவ்வேறாகச்)சொல்லுகின்ற நாமரூபங்களை . |
| முன்புபோல் | —முந்திய கற்பம்போல் |
| பிறககச்செய்தான் | —உண்டாகச்செய்தான் |
| மாசிலா சகத்து | —குற்றமில்லாத சகத்தானது |
| தானேயுளதுபோல் | —தானே சத்தியம்போல் |
| இசைந்திட்டாலும் | —பொருந்தினாலும் |
| ஈசனையொழிய | —அந்த ஈசனைத்தவிர |
| என்றும் வேறு | —எக்காலத்தும் வேறாக |
| நிற்பதொன்றில்லை | —ஒருசகமும் நிற்பதில்லை. |

**பதசாரம்**—ஜலதரங்கபுற்புத முதலியவற்றில் சூரிய பிம்பம்போல் சகத்தின் காரணமாகிய பிரம்மமே பிரம்மன் இந்திரன் முதலிய எல்லாருடலினும் சித்துரூபமாகவே யனுப்பிரவேசித்து முந்திய கற்பத்திலுள்ளபடி நாமரூபங்களை உண்டாக்கினான் என்பார், '**ஈசனுமிறைவனொத்த வறிவினா லெங்குமாகிப் பேசிடு நாமரூப முன்புபோற் பிறக்கச்செய்தான்**' என்றார். (40)

அவதாரிகை.

முன்பு மண் முதலிய திருட்டாந்தங்களால் காரியத்துக்குக் காரணத்தின் வேறின்மைகூறித் திரும்பவுமதனைத் திடப்படுத்தவேண்டித் திருவிருத்கிருத தூலபூதத்திற்கு அஃதில்லாதகாரண பூதங்களான தேயு, அப்பு, பூமி இவற்றின் மாத்திரமான தன்மை சுருதியில் அக்கினி முதலிய நான்கு திருட்டாந்தங்களால் கூறப்பட்ட தென்பதைக் குறித்து அவற்றை விளக்கிக் கூறுகின்றார்.

அனலினிற் சிவந்த மேனி யானதவ் வொளியே யாகு
மனல்வயின் வெண்மை யப்பாங் கருமைபூ மியின்றன்கூறு
மெனுமிவை மூன்று மன்றி யீண்டன லென்பதில்லை
யனலெனும் விகாரம் வார்த்தை யாவதே யன்றி யில்லை.

இதன் பொருள்.

அனலினில் —அக்கினியினிடத்தில்
சிவந்த மேனியானது —சிவந்த வடிவந்தோற்றுகின்றது
அவ்வொளியேயாகும் —அந்தச் (சூக்கும பூதத்தின்) பிரகாசமேயாகும்
அனல்வயின் வெண்மை —அக்கினியினிடத்தில் (தோற்றுகின்ற) வெண்ணிறம்
அப்பாம் —சலத்தின் பாகமாகும்
கருமை பூமியின்றன்கூறும் —கருநிறம் பிருதிவியின் பாகமாகும்
எனும் —என்று சொல்லுகின்ற
இவை மூன்றுமன்றி —இவை மூன்றினையுந்தவிர
ஈண்டனலென்பதில்லை —இவ்விடத்தில் அக்கினியென்பது வேறில்லை
அனலெனும் விகாரம் —அக்கினியென்னும் வேற்றுமை
வார்த்தையாவதே யன்றியில்லை—வாசாரம்பணமாத்திரமேயல்லாமல் வேறில்லை.

பதசாரம்—பஞ்சீகரிக்கப்பட்ட பூதகாரியமாகிய இச்சகம் பரமார்த்தம்போலத் தோற்றினும் காரணசூக்கும பூதத்தைத் தவிர வேறில்லை யென்பதெங்ஙனங்கூறு மெனில் திரிவிருத்கிருத பூதகாரியங்களாகிய அக்கினி முதலியவற்றிற் செம்மை வெண்மை கருமையான மூன்று நிறந்தோற்றுகின்றன. அவற்றுட் காரியவன்னியின் சிவப்பு திருவிருத்கரிக்கப்படாத சூக்குமதேயுவி னுருவமே யென்பார், 'அனலினிற் சிவந்தமேனி யானதவ் வொளியேயாகும்' எனவும், ஒன்றி னுருவம் மற்றொன்றின் தன்மையாதலால் அக்கினியென்னும் தருமி எனில்லாதா தாகுமெனில் செம்மை வெண்மை கருமையாகிய இம்மூன்றுருவங்களே சேர்ந்த அக்கினி முதலிய பதத்தால் பொருளாக விவரிக்கப்படுகின்றனவன்றி உருவத் திற்கு வேறாக ஒரு தத்துவமில்லை யென்பார், 'மூன்றுமன்றி யீண்டனலென் பதில்லை' எனவும், தகனமும் பக்குவமுஞ்செய்யும் வல்லமையுடைய அக்கினி முத லிய பொருளை எங்ஙனம் நிஷேதிக்கத்தகுமெனில் காரண பூதத்திரயத்துக்கு வேறாகிய அக்கினி முதலிய பெயருடைய விகாரசம்பந்த விசேடமும் வார்த்தை மாத்திரமேயன்றி உண்மையில் இல்லை யென்பார், 'அனலெனும் விகாரம் வார்த் தை யாவதே யன்றியில்லை' எனவும், கூறினார்.

அவதாரிகை.

ஆதித்தனுஞ் சந்திரனும் மின்னலும் அம்மூன்றுருவங்களைக்காட்டிலும் வேறு காணாததனால் சூக்குமபூதத்தைத் தவிர இல்லையென்று கூறுகின்றார்.

ஆதித்த னிரத்த வன்ன மானதவ் வொளிய தாகு
மாதித்த னிடத்து வெண்மை யப்பின தாகும் நின்று
பேதித்த கருப்புப் பூமி யுடையதிம் மூன்று மன்றி
யாதித்த னென்று வேறிங் கில்லையென் றறிமி னென்றும்.

இதன் பொருள்.

| | |
|---|---|
| ஆதித்தனிரத்தவன்னமானது | —சூரியனுடைய சிவந்த நிறமானதுவும் |
| அவ்வொளியதாகும் | —அந்த அக்கினியின் பிரகாசமேயாகும் |
| ஆதித்தனிடத்து வெண்மை | —சூரியனிடத்துள்ள வெண்ணிறமும் |
| அப்பினதாகும் | —சலத்தின்பாகமாகும் |
| நின்றுபேதித்த கருப்பு | —அவனிடத்தில் நின்று பேதமாகத் தோற்று கின்ற கருநிறமும் |
| பூமியுடையது | —பிருதிவியினுடையதாகும் |
| இம்மூன்றுமன்றி | —இம்மூவகையுமன்றி |
| இங்கு ஆதித்தனென்று | —இவ்விடத்தில் சூரியனென்றொருவன் |
| வேறு என்றும் | —வேறாக எக்காலத்தும் |
| இல்லையென்றறிமின் | —இல்லையென்றுணருங்கள். (42) |

இதுவுமது.

அறிவொடு விவேக மில்லா ராதலா லவர்க ளாலே
பிறிதா விரவி யென்று பேசிடப் பட்ட தென்று
மறிகனல் ப்ருதிவி நீரென் றனவிம் மூன்று மன்றிப்
பிறிதுசந் திரனை மின்னைப் பேசிடல் பிழையே யன்றோ.

இதன் பொருள்.

| | |
|---|---|
| அறிவொடு | —அறிவுடன் |
| விவேகமில்லாராதலால் | —பகுத்தறிவுமில்லாதவர்களாதலால் |
| அவர்களால் | —அப்புத்தியில்லாதவர்களால் |
| பிறிதா இரவியென்று | —வேறாகச் சூரியனிருக்கின்றானென்று |
| பேசிடப்பட்டது | —கூறப்பட்டது |
| என்றும் அறிகனல் | —எக்காலத்தும் அறியப்பட்ட அக்கினி |
| ப்ருதிவிநீர் என்றன | —மண் ஜலம் எனவாகிய |
| இம்மூன்றுமன்றி | —இந்த மும்மையுமன்றி |
| பிறிது சந்திரனை | —வேறு மதியையும் |
| மின்னைப் பேசிடல் | —மின்னலையும் (பேதமாகச்) சொல்லுதல் |
| பிழையேயன்றோ | —குற்றமேயல்லவா. |

கருத்து—காரியமனைத்துங் காரணத்திற்கு வேறென்றல் பிராந்தியென்றறிக.

### அவதாரிகை.

சுருதியில் ஆதித்தன் முதலியவற்றின் சிவப்பாகிய உருவமென்ற தாதியாகக் கூறிய பொருளை மற்ற விஷயங்களிலுந் தெரியக் கூறுகின்றார்.

### வேறு.

பூதம் புவனஞ் சுவர்வே றுகுடம் போலும் பொருளா யுளவா குமெலாப்
பேதம் பிரம மொழிய விலையாற் பேர்வற் றிடநின் றது தா னதுவே
யோதுஞ் சனனம் பலவா தலையா லுடலம் முதலா கியவெளி யினிலே
பேதம் படநா னெனவே யறியும் பெயரா மயலா யிடுமெங் கணுமே.

### இதன் பொருள்.

பூதம்புவனம் —பஞ்சபூதங்களும் உலகங்களும்
சுவர்வேறு குடம்போலும் —சுவரும் வேறான கடங்களும் இவைக்கு நிகராக
பொருளாயுளவாகும் —பொருளாகவிருக்கின்ற
எலாப்பேதம் —சகல பேதங்களும்
பிரம்மமொழிய இலை —பிரம்மத்தைத் தவிர இன்றாகும்
பேர்வற்றிட —பெயருதலில்லாமல்
நின்றது தானதுவே —நின்றதந்தப் பிரம்மமேதான்
ஓதுஞ்சனனம் பலவாதலையால்—சொல்லுகின்ற அனேக சன்மவாதலையால்
எங்கணும் —எவ்விடத்தும்
உடலம் முதலாகிய வெளியினில்—தேக முதலாகிய திரிசியங்களில்
பேதம்பட நானெனவே யறியும்—பேதம் பொருந்த நானென்று அறிகின்ற
பெயராமயலாயிடும் —நீங்காத அஞ்ஞானமுண்டாய்விடும்.

**பதசாரம்**—எப்படி அக்கினி முதலியவைகள் காரணமான சூக்குமபூதத்தைத் தவிர வேறில்லையோ அப்படியே பூதபவுதிகமான சகல சகமும் காரணப் பிரம்மத்தைத் தவிர வேறில்லை. எப்போதுஞ் சத்தாகிய பிரம்மமே யுள்ளதென்பார், '**எலாப்பேதம் பிரமமொழிய விலையாற் பேர்வற்றிட நின்றதுதானதுவே**' எனவும், பிரம்மம் பரமார்த்தமாயின் அஃது நீயென்று பிரம்மத்தோடைக்கியமாம் ஏகசொரூபனாகச் சீவன் பின்பு கூறத்தக்கவனாதலால் அச்சீவனும் பரமார்த்தனுவான். அங்ஙனமாயின் அவனுடைய அகம்பிரதீதி அசத்தியங்களாகியதேகாதிகளில் நான் மானிடனென்று வருகின்றதே அஃதெங்ஙனங் கூடுமெனில் சென்ற ஜன்மங்களிலுள்ள பிராந்தியாலுண்டாகிய வாசனாமூலமாக இத்தேகாதிகளினும் நீங்காத அஞ்ஞானத்தினாலே நானென்ற பிராந்தி உண்டாகும். அதுவுமனாதியானதுபற்றி அனவத்தையென்னுந் தூஷணமில்லாததாகுமென்பார், '**சனனம் பலவா தலையா லுடலம் முதலா கியவெளி யினிலே பேதம் படநா னெனவே யறியும் பெயரா மயலா யிடு மெங்கணுமே**' எனவுங் கூறினார். (44)

### அவதாரிகை.

புசித்த அன்னமானதென்று தொடங்கி தயிரில் நின்றுஞ் சோமயாஜியே யென்று முடிந்த சுருதியினல் மனம்வாக்குப் பிராணன் மாங்கிசம் இரத்தம் மச்சை இவை முதலாகிய சரீரம் சடமான பூதத்திரயத்தின் காரியமாதலால் சடமாகும். அஃது சைதன்னிய கோசரமாகிய அகம்பிரத்தியத்துக்கு விடயமாகாதெனக் கூறப்பட்டிருக்கின்றது. அதனைச் சங்கிரகமாகக் கூறுகின்றார்.

ஊனிந் திரியா திகளா னவெல்லா மோருங் கணிநா னெனலா கியிடா
வானம் முதலா கியபூ தமதால் வரவின் படியே வளர்வுற் றுளதா
லானம் மணிறு ல்மைியுஞ் சுவர்தா னாகும் மணுநீர் கொடளித் திடல்போ
லூனுங் காரணங் களுமுண் பவையா லுளதாய் வளரும் மெனவே யுணர்மின்.

### இதன் பொருள்.

| | |
|---|---|
| ஊன் இந்திரியாதிகளானவெலாம் | —தேகம் இந்திரியங்கள் முதலான அனைத்தும் |
| வானம் முதலாகிய பூதமதால் | —விண்முதலிய ஐம்பூதங்களால் |
| வரவின்படியே | —உற்பத்தியானவாறே |
| வளர்வுற்றுளதால் | —விருத்தியடைந்திருத்தலினல் |
| ஓருங்கணில் | —ஆலோசிக்குமிடத்தில் |
| நானெனலாகியிடா | —அகம்பதமென்னும் ஆன்ம வஸ்துவாகாது |
| அம்மணிறுல் | —சலத்திறுலும் மண்ணிறுலும் |
| அமைியுஞ் சுவர்தான் | —பொருந்திய சுவரை |
| ஆகும்மணு நீர்கொடு | —உண்டாகின்ற மண்ணேயுஞ் சலத்தையுங்கொண்டு |
| அளித்திடல்போல் | —காப்பதுபோல் |
| ஊனுங் காரணங்களும் | —தேகமும் இந்திரியங்களும் |
| உண்பவையால் உளதாய் | —புசிக்கின்ற பூதங்களால் உள்ளனவாகி |
| வளரும்மெனவே யுணர்மின் | —விருத்தியாகுமென்றே அறியுங்கள். |

**கருத்து**—தாய் தந்தையிருவரும் புசித்த பூதங்களின் காரியமாதலாலும் தன்றற் புசிக்கப்பட்ட தேயு அப்பு அன்னமென்னு மிலக்கணமுடைய பூதங்களின் தூலமத்திம சூக்குமாங்கிசங்களால் விருத்தியாதலாலும் எவைகளேதனல் விருத்தி அடைகின்றனவோ அவைகள் அதினின்றும் உற்பத்தியுடையனவாதலாலுந் தேக முதலியவைகள் அகம்பதபாகிகளாகாதெனவாம். (45)

### அவதாரிகை.

இங்கே உரைசெய்யப்பட்ட சுருதியின் பலிதார்த்தத்தைக் கூறுகின்றார்.

ஊனூ திகளா யதிரட் சியிலே யொளியா வணநா னெனதென் றுகொடே
நானே நுகர்வே னவையென் றுணரு நானு வறிவா னவைவிட் டிவையிற்
றானே முதல்கண் டிவையித் தனையிற் சலியா வறிவா கியதன் மையிலே
நானே யதுவென் றிடுநல் லறிவோர் நாடார் பிறிதென் பதுநாடொறுமே

## இதன் பொருள்.

ஊனூதிகளாய திரட்சியிலே —தேக முதலாகிய கூட்டங்களில்
ஒளியாவணம் —மறைவுபடாதபடி
நானெனதென்று கொடே —நானெனதென்று கருத்துட்கொண்டு
அவை நானே நுகர்வேன் —அந்த விஷயாதிகளை யானே புசிக்கின்றேன்
என்றுணரும் —என்றறிகின்ற
நானுவறிவானவைவிட்டு —பலவிதமாகிய பேதஞானத்தைவிடுத்து
இவையிற்றானே —இந்தத் தேகாதிகளிற்றானே
முதல்கண்டு —காரணத்தைக் கருதிப்பார்த்து
இவையித்தனையில் —இவையெல்லாவற்றினும்
சலியாவறிவாகிய தன்மையிலே—அசைவில்லாத ஞானசொரூபமாகிய சுபாவத்திலிருந்து
நானேயது வென்றிடும் —நானே அந்தப் பிரம்மமென்கின்ற
நல்லறிவோர் நாடொறும் —நல்ல ஞானிகள் நாள்தோறும்
பிறிதென்பது நாடார் —துவிதமென்பதை விரும்பமாட்டார்கள்.

**கருத்து**—யாதொரு காரணத்தால் தேகேந்திரியாதிகள் தேயு, அப்பு, அன்னங்களாகிய பூதகாரியமாதல்பற்றி வாக்குமாத்திரங்களாயும் அனாத்மப் பொருள்களாயுமிருக்கின்றன, அதனால் அவற்றின் நானென்னும் புத்தியை நீக்கிக்கூடத்தனாகிய சிதான்மாவில் அகம்புத்தியைச்செய்யத்தக்க தென்றறிக. (46)

## அவதாரிகை.

தேயு, அப்பு, அன்னமிவைகளுக்கு விலட்சணங்களாகிய தேகேந்திரிய மனமுதலியவைகளெங்ஙனம் பூதகாரியங்களாகுமெனில், தயிருக்கு விலட்சணமாகிய நெய்போலாகுமென்று உதாகரித்த சுருதியின்பொருளைக் கூறுகின்றார்.

## வேறு.

கடையப்படு தயிரிற்றிர ணெய்போன் மனமுதலா
மிடையிற்செயு மியல்வேறிலை யுளபூதம திடையே
யடையத்திர ளுருவிற்செலு மதிவிட்டறி வுருவா
மடையப்பிறி திலமெய்ப்பொரு ளதுநானென வறிவீர்.

இதன் பொருள்.

| | |
|---|---|
| கடையப்படுதயிரில் | —கடையப்படுகின்ற தயிரினிடத்தில் |
| திரணெய்போல் | —கூடுகின்ற நெய்யைப்போல |
| மனமுதலாம் | —(பஞ்சபூதங்களினின்று) மனமுதலானவை களுண்டாகும் |
| இடையிற்செயு மியல்வேறிலை | —(இதுவன்றி) நடுவிலுற்பத்திசெய்யு மிலக்கணம் வேறில்லை |
| உளபூதமதிடையே | —பொருந்திய பூதத்தினிடத்திலும் |
| திரளுருவில் அடைய | —பவுதிகங்களிலும் சேர |
| செலுமதிவிட்டு அடைய | —செல்கின்ற புத்தியைவிடுத்து எல்லாம் |
| அறிவுருவாம் | —ஞானசொரூபமேயாகும் |
| பிறிதில | —வேறில்லை |
| மெய்ப்பொருளது | —அந்த உண்மையான வஸ்துவை |
| நானெனவறிவீர் | —நானென்றுணருங்கள். |

**பதசாரம்**—கடையப்படுந் தயிரினிடத்துண்டாகும் வெண்ணெயைப் போல் தேயு, அப்பு, அன்னமிவைகள் உதராக்கினியாலுண்டாகிய பாகவிசேடத்தால் தேகேந்திரிய மனோரூபங்களாகப் பரிணமிக்கின்றனவென்பார், '**கடையப்படு தயிரிற்றிர ணெய்போன் மனமுதலாம்**' எனவும் கூறினர்.

**கருத்து**—தயிர் நெய் திருட்டாந்தத்தால் தேக முதலியன பவுதிகமென்று சாதித்ததுபற்றி முற்கூறிய தேகாதிகளினின்றும் பின்னமாகிய ஆன்மநிட்டை குற்றமில்லாததென்றும் பிறிதில்லாத ஞானசொரூபம் நானே என்றும் அறிக.(47)

அவதாரிகை.

காரியங்களாகிய வாக்குப் பிராணனிவைகளுக்குப் பவுதிகத்தன்மையுள்ள தாயினும் மனம் நித்தியமென வைசேடிகர்கள் கூறுவதனால் அஃதெங்ஙனம் பவுதிகமாகுமென்று சங்கித்த புத்திரனுக்குப் பதினறு கலையென்றதுமுதல் மனம் அன்னமயமென்றதீறாகிய சுருதிவாக்கியங்களின்படி பதினறுதினம் உணவில்லாததனால் மனஞ்சுருங்கி அப்பியாசித்த சாத்திரம் விளங்காமல் உணவினால் மனம்விருத்தி அடைந்தபின்பு சாத்திரம் விளக்கமுற்றதனால் மனம் அன்னமயமென்று உபதேசித்த பிதாவின் தாற்பரியத்தைத் தனித்தனியே வியாக்யானவாயிலாய் மேல்வரும் செய்யுட்களால் கூறுகின்றார்.

வேறு.

அன்னத்தா னிறைவிலானுக் கறிவுதோன் றுமையாலு
மன்னகா ரியமேபுத்தி யாதனிச் சயமதானு
லன்னத்தா லுண்டாமந்தப் புத்தியைத் தவிர்த்துநானு
முன்னுவா னெங்குங்காணு மறிவுநா னென்றெப்போதும்.

இதன் பொருள்.

அன்னத்தால் நிறைவிலானுக்கு—அன்னத்தினுல் நிறைவில்லாத சுவேதகேதுவுக்கு
அறிவுதோன்ருமையாலும் —நூலறிவு விளங்காததனுலும்
அன்னகாரியமே புத்தியதால் —அன்னத்தின் காரியமே மனமாகுதல்
நிச்சயமதானுல் —உறுதியானுல்
அன்னத்தாலுண்டாம் —அன்னத்தினுல் உற்பத்தியாகிய
அந்தப்புத்தியை நாளும் தவிர்த்து—அந்த மனத்தை எந்நாளும் நீக்கி
எங்குங் காணுமறிவு —சர்வசாட்சியான ஞானசொரூபமே
நானென்று —அகம்பொருளென்று
எப்போதும் உன்னுவான் —எக்காலத்தும் நினைக்கக்கடவன். (48)

வேறு.

தேகேந்திரியா திகளாகுந் திரட்சியினைநா னெனதென்றே
போகநின்ற புத்தியினை விட்டுத்தானு யிருந்துளதா
யாகாதெல்லா மாகியிடு மறிவாஞ்சித்தி லியாதொருகா
லேகாவொன்ரு யடங்கியிடு மவன்றனியல்பை யியம்பிடுவாம்.

இதன் பொருள்.

தேகேந்திரியாதிகளாகும் —உடல்பொறிகள் முதலான
திரட்சியினை —கூட்டங்களை
நானெனதென்றே போகாநின்ற—நான் என்னுடையதென்றே செல்கின்ற
புத்தியினைவிட்டு —புந்தியைவிடுத்து
தானுயிருந்துளதாய் —அகம்பதப் பொருளாயிருக்கின்றதாய்
ஆகாதெல்லாமாகியிடும் —நிஷேதவஸ்துக்களனைத்துமாய் விளங்கும்
அறிவாஞ்சித்தில் —ஞானசொரூபமான சித்தில்
யாதொருகால் —யாதொரு காலத்தில்
ஏகா ஒன்ருயடங்கி யிடுமவன்றன் —சென்று அத்துவிதமாகத் தாதான்மியத்தை அடைகின்றவனது
இயல்பை இயம்பிடுவாம் —சுபாவத்தைச் சொல்லுவாம். (49)

வேறு.

அப்போது சுகதுக்கங்க ளாதியாச் சொல்லப்பட்ட
எய்ப்பாய விகாரமெல்லா மறியாது தன்னைத்தானே
மெய்ப்பாடாய் நுகராநின்ருேன் விளங்கவவ் விடத்தேகாணும்
தப்பாது தானுய்நின்ற சுகத்தினைத் தடையொன்றின்றி

### இதன் பொருள்.

அப்போது —அக்காலத்தில்
சுகதுக்கங்களாதியாச் சொல்லப்பட்ட—இன்பதுன்ப முதலாகச் சொல்கின்ற
எய்ப்பாய விகாரமெல்லாம் —தளர்ச்சியாகிய விகாரமனைத்தையும்
அறியாது —உணராமல்
தன்னைத்தானே —தொம்பதார்த்தனாகிய தன்னையே
மெய்ப்பாடாய் நுகராநின்றோன்—உண்மையாக அனுபவிப்பவன்
விளங்க —விளங்கும்படி
அவ்விடத்தே —அந்தப் பிரம்மத்தினிடத்திலேயே
தப்பாதுதானாய் நின்ற —தானாகத் தவறாதிருக்கின்ற
சுகத்தினை —பரமசுகத்தை
தடையொன்றின்றிக் காணும் —ஒருதடையுமில்லாமல் காண்பான். (50)

### வேறு.

ஆதலா லறிவுள் ளோர்க ளழிந்திடு முடலே யாதி
சேர்தரு புத்தி தன்னைச் செலவிட்டுத் தெளியும் வண்ணந்
தீதிலா தெவையுங் காணுந் திகழ்தரு சித்தின் கண்ணே
யேதிலா மதியை நானென் றிடுமின்க ளிசைந் தெப்போதும்.

### இதன் பொருள்.

ஆதலால் —ஆகையால்
அறிவுள்ளோர்கள் —உணர்வுள்ளோர்கள்
அழிந்திடும் உடலேயாதி —நசிக்கின்ற தேகாதிகளில்
சேர்தரு புத்திதன்னை —சேர்கின்ற புத்தியை
செலவிட்டுத் தெளியும்வண்ணம்—போகவிடுத்துத் தெளியும்படி
தீதிலாது எவையுங்காணும் —குற்றமில்லாமல் சகலத்தையும் பார்க்கின்ற
திகழ்தருசித்தின் கண்ணே —பிரகாசம்பொருந்திய சித்தினிடத்தே
இசைந்தெப்போதும் —இயைவுற்று எக்காலத்தும்
ஏதிலாமதியை —குற்றமில்லாத மதியை
நானென்றிடுமின்கள் —நானென்றுவையுங்கள். (51)

### அவதாரிகை.

மனமுதலியவைகள் அனாத்மாவாதலால் அவைகளைவிட்டுக் கூடத்தவான்மாவினிடத்தில் அகம்புத்திசெய்யவேண்டும். அவ்வாறு புத்திசெய்யுங்கால் எப்பொழுது அதில் லயிக்கின்றானோ அப்பொழுது துவிதமில்லாததனால் ஆன்மசுக சொரூபமாகின்றானென்று முற்கவிகளால் அத்துவிதீய பிரம்மம் ஒன்றேயுள்ளதெ

### இதன் பொருள்.

அப்போது —அக்காலத்தில்
சுகதுக்கங்களாதியாச் சொல்லப்பட்ட—இன்பதுன்ப முதலாகச் சொல்கின்ற
எய்ப்பாய விகாரமெல்லாம் —தளர்ச்சியாகிய விகாரமனைத்தையும்
அறியாது —உணராமல்
தன்னைத்தானே —தொம்பதார்த்தனாகிய தன்னையே
மெய்ப்பாடாய் நுகராநின்றோன்—உண்மையாக அனுபவிப்பவன்
விளங்க —விளங்கும்படி
அவ்விடத்தே —அந்தப் பிரம்மத்தினிடத்திலேயே
தப்பாதுதானாய் நின்ற —தானாகத் தவறாதிருக்கின்ற
சுகத்தினை —பரமசுகத்தை
தடையொன்றின்றிக் காணும் —ஒருதடையுமில்லாமல் காண்பான். (50)

### வேறு.

ஆதலா லறிவுள் ளோர்க ளழிந்திடு முடலே யாதி
சேர்தரு புத்தி தன்னைச் செலவிட்டுத் தெளியும் வண்ணந்
தீதிலா தெவையுங் காணுந் திகழ்தரு சித்தின் கண்ணே
யேதிலா மதியை நாளென் றிடுமின்க ளிசைந் தெப்போதும்.

### இதன் பொருள்.

ஆதலால் —ஆகையால்
அறிவுள்ளோர்கள் —உணர்வுள்ளோர்கள்
அழிந்திடும் உடலேயாதி —நசிக்கின்ற தேகாதிகளில்
சேர்தரு புத்திதன்னை —சேர்கின்ற புத்தியை
செலவிட்டுத் தெளியும்வண்ணம்—போகவிடுத்துத் தெளியும்படி
தீதிலாது எவையுங்காணும் —குற்றமில்லாமல் சகலத்தையும் பார்க்கின்ற
திகழ்தருசித்தின் கண்ணே —பிரகாசம்பொருந்திய சித்தினிடத்தே
இசைந்தெப்போதும் —இயைவுற்று எக்காலத்தும்
ஏதிலாமதியை —குற்றமில்லாத மதியை
நானென்றிடுமின்கள் —நானென்றுவையுங்கள். (51)

### அவதாரிகை.

மனமுதலியவைகள் அனாத்மாவாதலால் அவைகளைவிட்டுக் கூடத்தவான்மாவினிடத்தில் அகம்புத்திசெய்யவேண்டும். அவ்வாறு புத்திசெய்யுங்கால் எப்பொழுது அதில் லயிக்கின்றானோ அப்பொழுது துவிதமில்லாததனால் ஆன்மசுக சொரூபமாகின்றானென்று முற்கவிகளால் அத்துவிதீய பிரம்மம் ஒன்றேயுள்ளதெ

## இதன் பொருள்.

அன்னத்தால் நிறைவிலானுக்கு—அன்னத்தினல் நிறைவில்லாத சுவேதகேதுவுக்கு
அறிவுதோன்ருமையாலும் —நூலறிவு விளங்காததனுலும்
அன்னகாரியமே புத்தியதால் —அன்னத்தின் காரியமே மனமாகுதல்
நிச்சயமதானல் —உறுதியானல்
அன்னத்தாலுண்டாம் —அன்னத்தினல் உற்பத்தியாகிய
அந்தப்புத்தியை நாளும் தவிர்த்து—அந்த மனத்தை எந்நாளும் நீக்கி
எங்குங் காணுமறிவு —சர்வசாட்சியான ஞானசொரூபமே
நானென்று —அகம்பொருளென்று
எப்போதும் உன்னுவான் —எக்காலத்தும் நினைக்கக்கடவன். (48)

## வேறு.

தேகேந்திரியா திகளாகுந் திரட்சியினைநா னெனதென்றே
போகநின்ற புத்தியினை விட்டுத்தாணு யிருந்துளதா
யாகாதெல்லா மாகியிடு மறிவாஞ்சித்தி லியாதொருகா
லேகாவொன்று யடங்கியிடு மவன்றனியல்பை யியம்பிடுவாம்.

## இதன் பொருள்.

தேகேந்திரியாதிகளாகும் —உடல்பொறிகள் முதலான
திரட்சியினை —கூட்டங்களை
நானெனதென்றே போகாநின்ற—நான் என்னுடையதென்றே செல்கின்ற
புத்தியினைவிட்டு —புத்தியைவிடுத்து
தாணுயிருந்துளதாய் —அகம்பதப் பொருளாயிருக்கின்றதாய்
ஆகாதெல்லாமாகியிடும் —நிஷேதவஸ்துக்களனைத்துமாய் விளங்கும்
அறிவாஞ்சித்தில் —ஞானசொரூபமான சித்தில்
யாதொருகால் —யாதொரு காலத்தில்
ஏகா ஒன்ருயடங்கி யிடுமவன்றன் —சென்று அத்துவிதமாகத் தாதான்மியத்தை அடைகின்றவனது
இயல்பை இயம்பிடுவாம் —சுபாவத்தைச் சொல்லுவாம். (49)

## வேறு.

அப்போது சுகதுக்கங்க ளாதியாச் சொல்லப்பட்ட
எய்ப்பாய விகாரமெல்லா மறியாது தன்னைத்தானே
மெய்ப்பாடாய் நுகராநின்ருேன் விளங்கவவ் விடத்தேகாணும்
தப்பாது தாணுய்நின்ற சுகத்தினைத் தடையொன்றின்றி

இதன் பொருள்.

| | |
|---|---|
| அப்போது | —அக்காலத்தில் |
| சுகதுக்கங்களாதியாச் சொல்லப்பட்ட | —இன்பதுன்ப முதலாகச் சொல்கின்ற |
| எய்ப்பாய விகாரமெல்லாம் | —தளர்ச்சியாகிய விகாரமனைத்தையும் |
| அறியாது | —உணராமல் |
| தன்னைத்தானே | —தொம்பதார்த்தனாகிய தன்னையே |
| மெய்ப்பாடாய் நுகராநின்றோன் | —உண்மையாக அனுபவிப்பவன் |
| விளங்க | —விளங்கும்படி |
| அவ்விடத்தே | —அந்தப் பிரம்மத்தினிடத்திலேயே |
| தப்பாதுதானாய் நின்ற | —தானாகத் தவறாதிருக்கின்ற |
| சுகத்தினை | —பரமசுகத்தை |
| தடையொன்றின்றிக் காணும் | —ஒருதடையுமில்லாமல் காண்பான். (50) |

வேறு.

ஆதலா லறிவுள் ளோர்க ளழிந்திடு முடலே யாதி
சேர்தரு புத்தி தன்னைச் செலவிட்டுத் தெளியும் வண்ணந்
தீதிலா தெவையுங் காணுந் திகழ்தரு சித்தின் கண்ணே
யேதிலா மதியை நானென் றிடுமின்க ளிசைந் தெப்போதும்.

இதன் பொருள்.

| | |
|---|---|
| ஆதலால் | —ஆகையால் |
| அறிவுள்ளோர்கள் | —உணர்வுள்ளோர்கள் |
| அழிந்திடும் உடலேயாதி | —நசிக்கின்ற தேகாதிகளில் |
| சேர்தரு புத்திதன்னை | —சேர்கின்ற புத்தியை |
| செலவிட்டுத் தெளியும்வண்ணம் | —போகவிடுத்துத் தெளியும்படி |
| தீதிலாது எவையுங்காணும் | —குற்றமில்லாமல் சகலத்தையும் பார்க்கின்ற |
| திகழ்தருசித்தின் கண்ணே | —பிரகாசம்பொருந்திய சித்தினிடத்தே |
| இசைந்தெப்போதும் | —இயைவுற்று எக்காலத்தும் |
| ஏதிலாமதியை | —குற்றமில்லாத மதியை |
| நானென்றிடுமின்கள் | —நானென்றுவையுங்கள். (51) |

அவதாரிகை.

மனமுதலியவைகள் அனாத்மாவாதலால் அவைகளைவிட்டுக் கூடஸ்தவான்மாவினிடத்தில் அகம்புத்திசெய்யவேண்டும். அவ்வாறு புத்திசெய்யுங்கால் எப்பொழுது அதில் லயிக்கின்றானோ அப்பொழுது துவிதமில்லாததனால் ஆன்மசுகசொரூபமாகின்றானென்று முற்கவிகளால் அத்துவிதீய பிரம்மம் ஒன்றேயுள்ளதெ

ன்று பிரதிக்கினைசெய்து, தேயு, அப்பு, அன்னமென்னும் பூதங்களும் அவைக ளின்றும் உற்பன்னமாகிய பவுதிகமான போக்கியவத்துவும் போகாதாரமாகி சரீரங்களும் போக உபகரணங்களாகிய இந்திரியங்களும் காரியங்களாதல்பற்றி வாக்குமாத்திரங்களாகிப் பிரதியோகி பேதமில்லாததனால் அத்துவிதப் பிரதிக் கினுபங்கமில்லையென்று அத்தியாயத்தின் முன்பாகம் உரைசெய்யப்பட்டது. அங்ஙனமாயினும்புசிக்கின்ற ஆன்மாக்கள் நித்தியர்களாதலால் அந்தப்பிரதியோகி பேதத்தால் அத்துவிதப் பிரதிஞ்ஞாபங்கம்வருமென்ற சங்கையை நிராகரிப்ப தற்கு உத்தரபாகமானது உத்தாலகனருணியென்றது முதலான சுருதிகளால் போக்கிய வஸ்துப்போல் புசிக்கின்றவான்மா கற்பிதனன்று பரமார்த்தனேதான், ஆயினும் அந்தப் பிரதியோகிபேதத்தால் அத்துவிதப் பிரதிக்கினுபங்கம் நேரி டாது. அவன் பிரம்மசொரூபமானதுபற்றிப் பேதமில்லாததனாலென்று கூறப் பட்டது. அஃதெங்ஙனமெனில் இவன் சூக்குமன் இவன் மயமே இவ்வனைத்தும் அஃது சத்தியம் அவனேயான்மா அது நீயாகின்றாய். சுவேதகேதுவே யென்பன வாம், அவற்றின்பொருளை விவரமாகக் கூறுகின்றார்.

காண்பவன் றானே யாகுங் காண்பவை யென்ற யாவுங்
காண்பவன் றன்னில் வேறொன் றின்மையிற் றனையே காணும்
பூண்பதொன் றின்றி நின்ற பூரண மதுநீ யென்ற
மாண்டவார்த் தைக்கு முள்ள பொருளிதின் மற்றொன் றில்லை.

இதன் பொருள்.

காண்பவையென்ற யாவும் —திரிசியங்களாகக்கூறியவனைத்தும்
காண்பவன்றானே யாகும் —திருஷ்டாவேயாகும்
காண்பவன் —(அந்தத்)திருஷ்டாவானவன்
தன்னில் வேறொன்றின்மையில்—தன்னைத்தவிர வேறொரு பொருளில்லாததனால்
தனையேகாணும் —தன்னையே காண்கின்றான்
பூண்பதொன்றின்றி நின்ற—அணியத்தக்க வேறொரு பொருளில்லாது நிற்கின்ற
பூரணமது நீயென்ற —அகண்டமான அந்தப் பிரம்மமே நீயென்கிற
மாண்டவார்த்தைக்கும் —மாட்சிமையுடைய வாக்கியத்திற்கும்
உள்ளபொருள் —பொருந்திய பொருளாகும்
இதில் மற்றொன்றில்லை —இவ்விஷயத்தில் வேறொரு பொருளில்லை.

**பதசாரம்**—எது சர்ப்பம் அது ரச்சுவேதான் எது ரசதம் அது சுத்தியே தான் என்பதுபோல் பாதசாமானாதி கரணியமாகப் பிரமத்திலாரோபிதமாதலால் அனைத்தும் அதற்கு வேறின்மையில் பிரம்மமேதானென்பார், '**காண்பவன்றானே யாகுங் காண்பவை யென்றயாவுங் காண்பவன்றன்னில் வேறொன்றின்மையில்**' என்றார். தொம்சத்தார்த்தனாகிய ஜீவனும் பரமார்த்தமாகப் பிரம்மசொரூபனே யன்றித் திரிசியம்போல் கற்பிதனன்றென்பார், '**பூரணமது நீ**' என்றார். (52)

## அவதாரிகை.

நீ யென்னுஞ் சத்தம் திரிசியப்பொருளைத்தரும். அகமென்னுஞ் சத்தம் பிரத்தியக்குப் பொருளைத்தரும். இவைகள் பின்னார்த்தங்களுடையனவாத லால் குறில் நெடில்போல் விரோதிகளாகும். இங்ஙனமாயின் மற்றொரு சுருதியில் நான் பிரம்மமாகின்றேனெனப் பிரத்தியகான்மாவிற்குப் பிரமத்துவம் கூறப்பட் டிருக்க இவ்விடத்தில் அஃது நீயாகின்றாயெனப் பராக்குவத்துவுக்கு எங்ஙனம் பிரம்மத்துவங் கூடுமென்று சங்கித்து அதனை விரித்துக் கூறுகின்றார்.

## வேறு.

நீயென்கின்ற வார்த்தைக்கும் பொருளாயென்று நிற்பதுவே
நானென்கின்ற வாசகத்தின் பொருளாய்நின்று நாடுவது
நானென்கின்ற வாசகத்தின் பொருளாய்நாடி நிற்பதுவே
நீயென்கின்ற வாசகத்தி னிற்கும்பொருளும் நிலைபெறவே.

## இதன் பொருள்.

நீ யென்கின்ற வார்த்தைக்கும்—அது நீ யென்னும் வாக்கியத்திற்கும் [னே
பொருளாயென்று நிற்பதுவே—இலக்கியப்பொருளாக எப்போதும் நிற்பதுதா
நானென்கின்ற வாசகத்தின்—அகமென்னுஞ் சொல்லினது
பொருளாய்—இலக்கியப்பொருளாக
நின்று நாடுவது—நின்று விளங்குகின்றது
நானென்கின்ற வாசகத்தின்—அகமென்னுஞ் சொல்லினது
பொருளாய் நாடி நிற்பதுவே—அருத்தமாகவிளங்கி நிற்பதுவே
நீ யென்கின்ற வாசகத்தில்—நீ யென்னுஞ் சொல்லில்
நிலைபெற நிற்கும் பொருளும்—திரமாக நிற்கின்ற பொருளுமாகும்.

**கருத்து**—தேவதத்தனொருவனே புத்திரனால் பிதாவெனவும் பிதாவினால் மகனெனவும் கூறத்தக்கவனெனினும் தகப்பன் மகனென்ற சத்தங்களால் சொல் லப்படுந் தேவதத்தனது சொரூபம் பேதிக்காது. அப்பேதமும் விவரிக்கின்ற வனது நிபந்தனமேயன்றி விவகரிக்கத்தக்கதென்னும் நிபந்தனமில்லாததுபோல் பிரம்மத்தைத் தானாகவனுபவிக்கு மவத்தையில் நான் பிரம்மமெனவும் அவ்வைக் கியமே அன்னியன் பொருட்டுப் போதிக்கத்தக்கதாகி அது நீ யெனவும் (அக மென்னுஞ் சொல்லின் இலக்கியப் பொருளாய்) உபதேசிக்கப்படலால் இரண்டு வாக்கியமுஞ் சமானமாகிய பொருளுடையதுபற்றி விரோதமின்றென்றறிக. ()

அவதாரிகை.

அது நீ யாகின்றாய் நான் பிரம்மமாகின்றேன் என்ற இவைகளுக்கு விரோதம் வேண்டாம். நீ நானென்னுஞ் சொற்களால் அஞ்ஞானியான ஜீவனென்னுஞ் சம்சாரியும் அஃதென்ற பிரம்மபதத்தால் அசமுசாரியாய் முற்றுமுணர்ந்த வீச்சுரனும் வெவ்வேறாய்க் கூறப்படுகின்றான். அங்ஙனமாயின் எங்ஙனம் ஈசனோடு சீவனுக்கு ஐக்கியங் கூடுமென்று சங்கித்துக்கூறுகின்றார்.

சொல்லிய விரண்டி னாலுஞ் சுட்டிடப் பட்டு மேலா
வெல்லையில் பொருள்க ளான தியாவுக்கு முன்னே தோன்றி
நல்லதோ ரறிவா யுள்ள தியாதொன்ற தென்னும் வார்த்தைக்
கெல்லையாம் பொருளுந் தானே யெனுமிதி லைய மில்லை.

இதன் பொருள்.

| | |
|---|---|
| சொல்லியவிரண்டினாலும் | —முன் சொல்லிய நீ நானென்னுமிரண்டு வாக்கியங்களாலும் |
| சுட்டிடப்பட்டுமேலா | —மேன்மையாகக் குறிக்கப்பட்டு |
| எல்லையில் | —அளவற்ற |
| பொருள்களானதியாவுக்கும் | —பொருள்களாகியவனைத்திற்கும் |
| முன்னேதோன்றி | —முன்னே விளங்கி |
| நல்லதோரறிவாயுள்ளது | —ஒப்பில்லாத நல்ல பிரஞ்ஞானகனமாயுள்ளது |
| யாதொன்று தானே | —யாதொன்றுண்டோ அதுவே |
| அதென்னும் வார்த்தைக்கு | —தற்பதத்திற்கு |
| எல்லையாம் பொருளும் | —முடிவாகிய இலக்கியப் பொருளும் |
| எனுமிதிலையமில்லை | —என்று சொல்லும் இவ்வார்த்தையில் ஐயமில்லை. |

**கருத்து**—சத்திய ஞானானந்தமாகக்கூறிய அகண்டமாயும் அத்துவிதீயமாயும் ஏகமாயும் முதல் முடிவில்லாததாயும் உள்ளதே உண்மையான வத்துவாகும். முக்குணங்களையுடைய அநாதியான பிரகிருதி தத்துவம் தத்துவஞானத்தால் நீங்குவதனால் அந்தமுள்ளதாய் மித்தையாய்க் கற்பிதமாதலால் வத்துத்தன்மையில்லாததாகும். அது இரண்டு பிரிவுடையதாகும். அவற்றுள் இராசத தாமத குணங்களில்லாத சுத்த சத்துவ மாத்திரமாகிய ஒரு பாகம் மாயையென்று சொல்லப்படும். அவ்விரண்டு குணங்களால் அவமானிக்கப்பட்ட மலின சத்துவமான மற்றொருபாகம் அவித்தையெனப்படும். அவற்றுள் மாயாசத்துவாங்கிசத்தில் பிரதிவிம்பித்த பரமான்மா அம்மாயையைத் தன் வசஞ்செய்த சருவக்கிய சருவேசனென்று சொல்லப்படுவான். அவித்தியாமலின சத்துவாங்கிசத்தில் பிரதிவிம்பித்த அவ்வீசனே அவ்வவித்தையால் வசீகரிக்கப்பட்டு சுதந்திரமில்லாதவனாயும் போக்தாவாயும் சமுசாரியாயுமுள்ள ஜீவனென்று சொல்லப்படுவான். அந்தப் பரமான்மாவே தமப்பிரதானப் பிரகிருதியுபாதிதனைப் பூதபவுதிக

பிரபஞ்ச விலக்கணமுடைய போக்கியரூபமாகவிருக்கின்றான். தமப்பிரதானப் பிரகிருதியுபாதிகனைதுபற்றிச் சகத்திற்குபாதானமாகவும் விசுத்தசத்துவப் பிரகிருதியுபாதியால் சகத்திற்கு நிமித்தமாகவும் அபின்ன நிமித்தவுபாதானமாதலால் சுருதியில் சன்மாத்திரமாகவே இச்சகஞ் சிருட்டிக்கு முன்னிருந்ததென்றதில் அஃதுபார்த்ததென்ற வாக்கியத்தால் நிமித்தத்தன்மையும் பலவாகப் பவிப்போமென்றதனல் காரியரூபமாக விவர்த்திப்பதுபற்றி உபாதானத் தன்மையும் பிரசித்தம். அஃதிங்கு பிரகிருதமாதலால் அது நீயாகின்றாயென்ற வாக்கியத்தில் பிரகிருதத்தை ஆலோசியாநின்ற அஃதென்னுஞ் சத்தத்தால் கூறப்படுகின்றது. அவித்தியோபாதியுடைய சகல ஜீவர்களும் முன்னிராநின்ற சுவேதகேதுவை நிமித்தீகரித்து உத்தாலகனென்னும் பிதாவினல் நீ யென்னுஞ் சத்தத்தால் கூறப்படுகின்றார்கள். அஃது நீ யென்ற சத்தங்களின் வாச்சியப்பொருளாகிய மாயா வித்தியோபாதியுடைய சைதன்னியங்களுக்கு மிகவும் ஒன்றுக்கொன்று விலக்ஷணமுண்டாதல்பற்றித் தாதான்மிய விரோதமாதலால் அது நீ யென்ற சத்தங்களால் மாயை அவித்தை இவைகளின் விபாகத்தைநீக்கி இரண்டிடத்தும் இடைவிடாமலிருக்கின்றவேகமாகிய சைதன்யத்தைமாத்திரம் இலக்ஷிப்பிக்கின்றதென்றறிக.

## அவதாரிகை.

சிதங்கிசத்தில் தாதான்மிய விரோதமில்லாவிடினும் நீ நான் என்ற சத்தங்களுக்கு அஃதென்ற பதத்தின் வாச்சியார்த்தத்தோடு தாதான்மிய விரோதமுள்ளதென்னில் அவ்விரோதம் மெய்யெனினும் இவ்விடத்தில் அந்தத் தற்பதத்தின் ஐக்கியம் சொல்லப்பட்டதல்ல வென்று கூறுகின்றார்.

## வேறு.

உடம்பா திகளில் வேறாகி நீநா னென்னு முறையாலே
திடம்பா டாகச் சொலுமிந்தச் சித்தா யுள்ள பொருளிடையே
யடங்கா ததுவென் றிடும்வார்த்தைக் கருத்த முடம்ப தெனச்சுருதி
தொடர்ந்தே தத்தொ மசியென்றே சொல்லு மாறின் றெனவுரைத்தான்

## இதன் பொருள்.

| | |
|---|---|
| உடம்பாதிகளில் | —தேகேந்திரியாதிகளில் |
| வேறாகி | —பின்னமாகி |
| நீ நானென்னு முறையாலே | —நீ நானென்கின்ற வாக்கியங்களால் |
| திடம்பாடாகச் சொலும் | —உறுதிப்பாடாகச் சொல்லுகின்ற |
| இந்தச் சித்தாயுள்ள பொருளிடையே | கேவலஞ் சைதன்னியமாகிய இந்தப் பொருளினிடத்தே |
| அடங்காது | —அடங்காமல் |
| அதுவென்றிடும் வார்த்தைக்கு | —அதுவென்னுஞ் சொல்லுக்கு |
| அருத்தமுடம்பதென | —பொருளுடம்பென்று |

| | |
|---|---|
| சுருதிதொடர்ந்தே | —சுருதியானது தொடர்ந்து |
| தத்தொமசியென்றே | —அது நீ யாகின்றாயென்று |
| சொல்லுமாறின்றென உரைத்தான் | தற்பதத்தின் ஐக்கியத்தைச் சொல்லும் நெறியில்லையென்று சொன்னான். |

**கருத்து**—இங்கு சுருதியில் சமுசாரித்தன்மைக்கு அது நீ யாகின்றாயென்ற தத்தொமசி சருவக்கியத்தன்மை கூறப்படவில்லையென்றறிக. (55)

## அவதாரிகை.

சிற்சுபாவத்தையே தத்துவமசி என்று கூறுமாற்றால் நீ யென்ற சத்தத்தால் சமுசாரித்துவ முதலியவை சொல்லப்படவில்லை யென்று கூறுகின்றார்.

## வேறு.

தற்பதப் பொருளா யுள்ள வறிவொடே கூடு தற்கு
நிற்பதொன் றிலையாய்ச் சொல்லப் பட்டகா யாதி விட்டு
மெய்ப்படத் துரியத் தோடே யேகனாய் வேறி லாத
சிற்பொரு டனையே தத்தொ மசியெனச் செப்பு மன்றே.

## இதன் பொருள்.

| | |
|---|---|
| தற்பதப்பொருளாயுள்ள | —தற்பதத்தினருத்தமான |
| அறிவொடே கூடுதற்கு | —ஞானத்துடன் பொருந்துவதற்கு |
| நிற்பதொன்றிலையாய் | —நிலையாய் நிற்பது ஒன்றுமில்லாததாக |
| சொல்லப்பட்ட காயாதிவிட்டு | —கூறப்பட்ட தேகாதிகளைவிடுத்து |
| மெய்ப்படத்துரியத்தோடே | —உண்மையாக சேஷித்த துரியத்தினோடு |
| ஏகனாய் வேறிலாத | —அத்துவிதனாய்த் தனக்குப் பின்னமில்லாத |
| சிற்பொருடனையே | —சிற்சுபாவத்தையே |
| தத்தொமசியென | —தத்துவமசியென்று |
| செப்பும் | —(தற்பதத்தில் தொம்பத ஐக்கியத்தைச் சுருதியானது) சொல்லுகின்றது. |

**கருத்து**—சமானமாகக் கூறப்பட்ட மறுபதங்களுக்குச் சமானாதிகரணத் தன்மையில்வரும் விரோதமே விவக்ஷிக்காமைக்குக் காரணமென்றறிக. (56)

## அவதாரிகை.

நீ நா னென்ற சத்தார்த்தத்தில் கூறப்பட்டிருக்கும் பொருளை அஃதென்ற சத்தத்தின் பொருளிலும் இங்கு ஒப்பு நோக்கி இசையக் கூறுகின்றார்.

வேறு.

அதுவென் றுரைசெய் பொருளா மதிலும்
நீயென் றுரைசெய் பொருளா மிதிலும்
மதிபண் ணிடவே றதுவா கியிடு
மறிவா தியகா ரணமன் றியிலே
யெதுவொன் றுமிலா தவையா வையுமா
மிதுவென் றிடுகே வலசித் தினையே
யதுநீ யெனும்வாய் மொழியா மதனு
லறியும் படிசொன் னதிவ்வா ரணமே.

இதன் பொருள்.

| | |
|---|---|
| அதுவென்றுரை செய்பொருளாமதிலும் | அதுவென்று சொல்லும் பதத்தினது பொருளினும் |
| நீயென்றுரை செய்பொருளா மிதிலும் | நீயென்று சொல்லும் பதப்பொருளிடத்தும் |
| மதிபண்ணிட | —கருதுங்கால் |
| வேறதுவாகியிடும் | —பின்னமாயிராநின்ற |
| அறிவாதிய | —சருவக்கியத்துவ முதலிய |
| காரணமன்றியில் | —காரணத்தையல்லாமல் |
| எதுவொன்றுமிலாது | —யாதொரு திரிசியப் பொருளுமில்லாமல் |
| அவையாவையுமாம் | —அந்தத்திரிசியப்பொருள் அனைத்துமாகிய |
| இதுவென்றிடு | —இதுவென்று அபரோக்ஷீகரிக்கின்ற |
| கேவல சித்தினையே | —திரிபுடியில்லாத சிற்சொருபத்தையே |
| அது நீ யெனும் வாய்மொழியாமதனுல் | —அது நீ யென்னும் வாக்கியத்தினுல் |
| இவ்வாரணம் | —இந்த வேதம் |
| அறியும்படி சொன்னது | —உணரும்படி புகன்றது. |

கருத்து—அதுவென்ற பதத்தின் வாச்சியப்பொருளாகியஜகத்தின் காரணத்தன்மை, சருவக்கியத்தன்மை இவை முதலானவற்றினேடும் விருத்தமாகி விசேடணமாயிருக்கின்ற நீ யென்னும் பதத்தின் வாச்சியமான சமுசாரித்தன்மை முதலியன எப்படி விவக்ஷிக்க வில்லையோ அப்படியே நீ யென்னும் பதவாச்சியமான சமுசாரித்தன்மையோடு விருத்தமாகிய அஃதென்னும் பதத்தின் வாச்சியமான சகத்தின் காரணத்தன்மை, சருவக்கியத்தன்மை இவை முதலியனவும் விவக்ஷிக்கப்படவில்லை. விருத்தமான அவைகளை நீக்கி விசேடியமாகிய சின்மாத்திரத்தை லக்ஷியப்படுத்தி நீ யென்றதின் பொருளோடும் திரிபுடியில்லாத சிற்சொருப ஐக்கியத்தைச் சுருதி கூறுகின்றதென்றுணர்க. (57)

## அவதாரிகை.

அது நீ என்னும் பரமான்ம ஏகமாகிய சுபாவ விருத்தாங்கிசத்தைப் பரிகரிக்குங்கால் பெறப்படும் வாக்கியத்தின் பொருளைக் கூறுகின்றார்.

## வேறு.

தத்துவ மென்ற வார்த்தை யிரண்டுக்கும் பொருள தாகிச்
சித்துமெய் யாகி நின்ற திகழ்பர மொன்றுந் தன்மை
தற்பரந் தன்னி னாலே சித்திக்கு மென்ப தேயிங்
கப்படி வாக்கி யத்தி னருத்தமே யாகு மன்றே.

## இதன் பொருள்.

| | |
|---|---|
| தத்துவமென்ற வார்த்தை | —அது நீ யென்னும் வார்த்தை |
| இரண்டுக்கும் பொருளதாகி | —இரண்டு சொற்களுக்கும் பொருளாயும் |
| சித்துமெய் யாகி நின்ற | —சித்துருவாயும் நின்ற |
| திகழ்பரம் ஒன்றுந்தன்மை | —பிரகாசிக்கும் பரமான்மா ஏகமாகிய சுபாவம் |
| தற்பரந்தன்னினாலே | —தானான சுபாவத்தினால் |
| சித்திக்குமென்பதே | —நிலைக்குமென்பதுவே |
| இங்கு அப்படி | —இவ்விடத்தில் அவ்வண்ணம் |
| வாக்கியத்தின் அருத்தமே யாகும் | —வாக்கியத்ினதுபொருளாகும். |

கருத்து—அது நீ யென்ற சத்தங்களுக்குச் சகல வுபாதிகளுமற்ற சின்மாத்திரமான லக்ஷியப் பொருள் பரமான்மாவே. ஞானமாயும் ஆனந்தமாயுமுள்ளது பிரம்மமென்ற சுருதியினால் அதற்கு மூன்றுவித பரிச்சேதமுமில்லாததனால் எது இயல்பாகவேயுள்ள ஏகத்தன்மையோ அவ்வபேதமே இவ்விடத்தில் அது நீயாகின்றாய் யென்னும் வாக்கியத்தால் கூறப்படுகின்றதே யன்றிச் சீவன் பிரம்மம் இவைகளில் ஒன்றோடு மற்றொன்றிற்கு முன்னில்லாத ஏகத்தன்மை போதிக்க வேண்டி இவ்வாறு கூற வந்ததில்லை யென்றறிக. (58)

## அவதாரிகை.

இரத சம்மந்தத்தால் செம்பு தங்கமாவதுபோல் பரமார்த்தமாகப் பின்னனாய் சம்சாரியான ஜீவனுக்கே ஈசனது அனுக்கிரகத்தால் தாதான்மியங் கூடுவதனால் அத்தாதான்மியம் எனைப்பக் கூடாதென்று சங்கித்துக் கூறுகின்றார்.

இப்படி யன்றி வேறா யிருந்துள பொருடா னியாதொன்
றப்பொருள் வாக்கியத்தி னருத்தமன் றாகு மொன்றா
மெய்ப்படு பொருளின் ஞான முளதாகா வாக்கியத்தாற்
செப்பிடும் வார்த்தை தன்னி லறிவின்மை சிதைத்தல் செய்யும்.

இதன் பொருள்.

| | |
|---|---|
| இப்படி யன்றி வேறு யிருந்துள | —இவ்வாறன்றிப் பின்னமாக விராநின்ற |
| பொருடானியாதொன்று | —யாதொரு பொருளுண்டோ |
| அப்பொருள் | —அந்தப் பொருளானது |
| வாக்கியத்தி னருத்தமன் றாகும் | —வாக்கியார்த்தமாகாது |
| வாக்கியத்தால் | —(அந்த) வாக்கியத்தினால் |
| ஒன்றும் | —ஏகமாகிய |
| மெய்ப்படு பொருளின் ஞான முளதாகா | உண்மைப் பொருளினுணர்வு இல்லை (அவ்வாக்கியமானது வித்தையால்) |
| செப்பிடும் வார்த்தை தன்னில் | —சொல்லும் விவகாரத்திலிருக்கின்ற |
| அறிவின்மை சிதைத்தல் செய்யும் | —அஞ்ஞானத்தை நாசஞ் செய்யும். |

**பதசாரம்**—விசேஷண விசேஷிய ரூபமாயாவது சம்பந்த ரூபமாயாவது ஜீவப்பிரமங்களுக்கு ஐக்கியஞ் சொல்லுவது வாக்கியத்தின் பொருளாகாது. உண்மையாகவே பின்னங்களாயின் அவைகளின் அன்யோன்னியாபாவத்திற்கு ஆதியந்தமில்லாததுபற்றித் தாதான்மியங் கூடாததனாலென்பார், "**இப்படி யன்றி வேறு யிருந்துள பொருடா னியாதொன் றப்பொருள் வாக்கியத்தி னருத் தமன் றாகும்**" எனவும், சுயம்பிரகாசப் பிரம்மத்தின் சொரூபமான ஏகத்தன்மையும் இவ்விதமென்று வாக்கியத்தால் போதிக்கப்படில் சுயம்பிரகாசத் தன்மை குன்றுமெனில் வாக்கியம் ஏகத்தன்மைக்கு விடயமாகிய ஞானத்தை யுண்டாகச் செய்யவில்லை, செய்யாமையால் வாக்கியம் பிரயோசனமில்லாததாமெனில் தன்னாலுண்டாகும் பிரமாண்ம விடயமான மனோவிருத்தியால் அஞ்ஞானம் நீங்குதலின் வாக்கியம் பிரயோசனமுடையதென்பார், '**ஒன்று மெய்ப்படு பொருளின் ஞான முளதாகா வாக்கியத்தாற் செப்பிடும் வார்த்தை தன்னி லறிவின்மை சிதைத்தல் செய்யும்**' எனவும் கூறினார். (59)

அவதாரிகை.

ஏகத்துவஞானத்தால் வாக்கியத்திற்கு வியாபாரமில்லாவிடில் பிரமாணத்திற்கு விஷயமாகாததனால் நரவிஷாணம்போல் அது அசத்தாகுமென்று சங்கித்துக் கூறுகின்றார்.

வேறு.

அறியாமையினை யழிவித்துக் கொண்டேயிந்த வாக்கியந்தான்
பிறியாதொன்று மறிவினையுண் டாக்காதென்று பேசுங்காற்
செறிவாயுண்மை யுருவாகுஞ் சித்தினொளியைத் தவிர்த்துண்டா
மறியாமையதொன் றெனவில்லை யாருமுண்மை யறியுங்கால்.

## இதன் பொருள்.

இந்த வாக்கியந்தான் —இந்த வாக்கியமானது
அறியாமையினை —அஞ்ஞானத்தை
அழிவித்துக்கொண்டே —நாசம் செய்வித்துக்கொண்டு
பிறியாது —வேறுபாடின்றி
ஒன்றுமறிவினை —ஏகமாகிய ஞானத்தை
உண்டாக்காதென்று —உண்டுபண்ணுதென்று
பேசுங்கால் —சொல்லுங்கால்
செறிவாய் உண்மையுருவாகும்—(எங்கும்) நிறைந்ததாகிச் சத்திய சொரூபமாகிய
சித்தினொளியைத் தவிர்த்து —சிற்பிரகாசத்தையன்றி
உண்டாம் அறியாமையது —உண்டாகின்ற அஞ்ஞானமானது
ஒன்றென —ஒரு பொருளென்பதற்கு
உண்மையறியுங்கால் —உண்மையை ஆலோசிக்குமிடத்தில்
இல்லையாகும் —இன்றாம்

**கருத்து**—அன்னியவஸ்துவால் பிரகாசமுறும் வஸ்துவுக்கே பிரமாணத்திற்கு அவிஷய நிமித்தத்தால் அசத்தின் தன்மையுள்ளதாகும். ஏகத்துவஞானமோவெனில் சுயம்பிரகாசத்திற்கு வேறாக இல்லாததனால் எப்பொழுதும் பிரகாசிக்கின்றதாதலின் முற்கூறிய தூஷணமில்லாததாகும். ஆதலால் உண்மையை உணர்ந்து ஆலோசிக்குமிடத்து வாக்கியம் ஆவரணஞ்ஞான நிவிர்த்தியில் உபயோகமேயன்றி சொரூபப் பிரகாசத்தில் இன்றென்றுணர்க. (60)

## அவதாரிகை.

அஞ்ஞானம் அசத்தாயின் நிவிர்த்திகூடாது. பிரம்மத்திற்கு அபேதமாயின் அதற்கு நிவிர்த்திசொல்லப்படுமாதலால் பிரம்ம பின்னமாக அஞ்ஞானமென்னும் வஸ்து அங்கீகரிக்கவேண்டும். அங்ஙனமாயின் துவிதமாய்விடுமென்று சங்கித்துக் கூறி உண்டாகாத அஞ்ஞானத்தை விலக்குவது எப்படி என்று விளக்குகின்றார்.

நோக்கியகால் வாக்கியத்தா னுண்ணிதாய பரத்தொளியை
நீக்கிநிற்கு மறியாமை யென்பதில்லை யாதலினு
லாக்கமில்லா வறிவின்மை யழிப்பதென்றுங் கூடாது
தாக்கதின்றி யொன்றுதற் றன்னாற்கூடுந் தன்மையதே.

## இதன் பொருள்.

வாக்கியத்தால் நோக்கியகால் —வாக்கியத்தினால் ஆலோசிக்குமிடத்தில்
நுண்ணிதாய —நுட்பமாகிய
பரத்தொளியை நீக்கிநிற்கும் —ஞானப்பிரகாசத்தை ஒழித்து நிற்கின்ற

அறியாமையென்பது இல்லை —அஞ்ஞானமென்பது இன்றாகும்
ஆதலினால் —ஆகையால்
ஆக்கமில்லா அறிவின்மை —உண்டாகாத அஞ்ஞானத்தை
அழிப்பது என்றுங்கூடாது —நீக்குவது எக்காலத்தும் பொருந்தாது
தாக்கதின்றி ஒன்றாதல் —விரோதமின்றி ஏகத்தன்மையாதல்
தன்னாற்கூடுந் தன்மையதே —தானாகவே பொருந்துந்தன்மையுடையது.

**கருத்து**—பிரகாச விரோதியான இருள்போல் சிற்பிரகாச விரோதியான அஞ்ஞானத்திற்குச் சொரூபமில்லாததனால் பரமார்த்தமாயில்லை. சிற்சொரூபத்தில் முந்திய சமஸ்காரவசத்தால் உண்மையில் இல்லாத அஞ்ஞானமென்பது அத்தியாசிக்கப்பட்டு வித்தையால் நிவிர்த்திக்கப்படுகின்றமையின் விவகாரதிருஷ்டியால் வாக்கியம் அஞ்ஞானத்தை நீக்குமென்றுணர்க. (61)

அவதாரிகை.

கடபடாதி விஷயமான மற்றையவிருத்திகள்போல் தனது அஞ்ஞானத்தை நிவிர்த்திசெய்விக்கின்ற வாக்கியத்தாலுண்டாம் பிரமான்ம விஷயமான அந்தக்கரணவிருத்தி யாது, அதற்குத் தனது விஷயமான பிரகாசம் ஏன்கூடாது என்று சங்கித்துக் கூறுகின்றார்.

பிரமாணங்க ளானவைதான் பேதமில்லா தொருபொருளைத்
திரமாயிதுவென் றிடமாட்டா செல்லாதாமிங் காதலினா
லுரைமாத்திரமா யியாவையினு முளவஞ்ஞான மதுதானும்
பரமாமொளியே யாகியிடும் பார்க்கிலுண்மைப் பரிசிதுவே

இதன் பொருள்.

பிரமாணங்களானவைதான் —எல்லாப் பிரமாணங்களும்
பேதமில்லாதொரு பொருளை —பேதமில்லாத ஒப்பற்ற பிரம்மத்தை
திரமா யிதுவென்றிடமாட்டா—உறுதியாக இதுவென்று குறிக்கமாட்டாவாம் (ஏனெனில்)
செல்லாதாமிங்கு —இந்தச் சொரூபத்தினிடத்தில் செல்லாதாகும்
ஆதலினால் —ஆதலால்
உரைமாத்திரமாய் —வாசகமாத்திரமாய்
யாவையினுமுளா —அனைத்தினுமுள்ள
அஞ்ஞானமது தானும் —அஞ்ஞானமென்பதும்
பரமாமொளியே யாகியிடும் —பரமாகிய இந்தவஸ்து மாத்திரமாகவேயாகும்
பார்க்கில் —நோக்குங்கால்
உண்மைப் பரிசிதுவே —உண்மையான தன்மையிதுவே.

**கருத்து**—சூரியப்பிரகாசத்தில் தீபப்பிரகாசம்போல் சாட்சியால் பிரகாசிக்கத்தக்க பிரமாணங்கள் சொப்பிரகாசசிதான்மாவிடத்துச் சத்தியில்லாதனவாமெனவும் சுத்தியில் அத்தியாசிக்கப்பட்ட வெள்ளிபோல் வாக்கியத்தாலுண்டாகிய வித்தையால் நிவர்த்திக்கத்தக்க அஞ்ஞானமும் பிரம்மத்தில் அத்தியாசிக்கப்பட்டது பற்றிப் பிரம்மமேயாதலால் விவகாரத்திலும் அஞ்ஞானம் இன்றெனவும் அறிக.

### அவதாரிகை.

விவகார பலத்தால் அஞ்ஞானத்துக்குச் சற்பாவம் என் அங்கீகரிக்கக்கூடாதென்று சங்கித்து அதனை ஈண்டுவிரித்துக் கூறுகின்றார்.

### வேறு.

அறியாமை யென்று வேறு மதுதானு மறிவி னுண்மை
பிறியாது நுண்மை காணு மளவினி லுளது சத்தே
யறியாமை சத்த சத்தே யாகிய விரண்டின் மேலா
மறிவானத் தோன்ற றானு மறிவின தொளியே யாமால்.

### இதன் பொருள்.

நுண்மை காணுமளவினில் —சூக்ஷுமமாய்ப் பார்க்குங்காலத்தில்
அறியாமையென்று —அஞ்ஞானமென்று
வேறுமதுதானும் —வேறாகப் பொருந்துகின்றவதுவும்
அறிவினுண்மை பிறியாது —அறிவினுண்மைக்கு வேறாகமாட்டாது
உளது சத்தே —சத்தே அழிவற்றிருக்கின்றது
அறியாமை —அஞ்ஞானமானது
சத்த சத்தேயாகிய விரண்டின்—சதசத்தாகிய விரண்டிற்கும்
மேலாம் —அப்புறப்பட்டதாகுமென்னில்
அறிவானத்தோன்றல் தானும்—உணர்வினாலந்த விளங்குதலும்
அறிவினதொளியேயாம் —பிரம்மத்தின் விளங்குதலேயாகும்.

**கருத்து**—சத்ரூபமான வஸ்துவுக்கே சத்பாவமன்றிச் சத்துக்கு வேறாம் வஸ்துவுக்குச் சத்பாவமில்லை யெனவும், கடமிருக்கின்றது படமிருக்கின்றது என்று சத்பாவ மனுபவிக்கப்படுகின்றதெனில் அதிஷ்டானத்திலுள்ள சத்துவமே ஆரோபிக்கப்படுபொருளில் தோற்றுகின்றதெனவும், தோற்றமும் அழிவு மற்றொன்றால் கூடாததனால் சதசத்து விலட்சணமாக அஞ்ஞானம் ஒப்பத்தக்தெனில் அந்த விவகாரமும் அந்தவந்தத் தன்மையை நிரூபித்திடின் அதனை பெருமையாலாமன்றி அப்படிப் பொருளுண்டென்ப தின்றெனவும் இத்தன்மைத்து இப்பொருள் என்று விளங்கிடின் அன்றோ அதில் சதசத் விலட்சணமென்னும் விவகாரங்கூடும், விளங்காவிடில் கூடாது, அஞ்ஞானமில்லாத கேவல பிரம்மமே விளங்குகின்றது அஞ்ஞானத்திற்கு விளக்கமில்லையெனவும் கொள்க

அவதாரிகை.

அஞ்ஞானத்திற்குச் சுயம் விளக்கம் வேண்டாத பானரூபப் பிரம்ம சம்பந்த வசத்தால் அஞ்ஞானம் ஏன் விளங்காதென்று சங்கித்துக் கூறுகின்றார்.

தோன்றுகூட் டாவி ஞலே தோற்றிடும் பொருள்கட் கெல்லா
மூன்றிடு முண்மை யுண்டே லதுவுள்ள பரமே யாகுந்
தோன்றுவ துளது பாரா தொழிபில்வே றுண்மை யென்னிற்
றேன்றிய வுருவு முண்டாய்த் தோன்றலாற் பரமே யன்றே.

இதன் பொருள்.

| | |
|---|---|
| தோன்று கூட்டராவினுலே | —விளங்காநின்ற (கூடஸ்தனது) சம்பந்தத்தினுலே |
| தோன்றிடும் பொருள்கட்கெல்லாம் | பிரதீதியாகிய அஞ்ஞானத்திற்கும் அதன் காரியமான எல்லாப் பொருள்களுக்கும் |
| ஊன்றிடும் | —நிலைப்படுத்துகின்ற |
| உண்மையுண்டேல் | —சத்பாவ விளக்கமுண்டானல் |
| அது உள்ள பரமேயாகும் | —அந்த உண்மையும் சத்தாயுள்ள பிரம்மமேயாகும் |
| தோன்றுவதுளது | —விளங்குகின்றதே யிருக்கின்றதாதலால் |
| பாராதொழியில் | —விசாரித்துப் பாராவிடில் |
| வேறு உண்மையென்னில் | —ஆரோபித சத்பாவமுண்டென்றல் |
| தோன்றியவுருவும் | —அப்படித் தோன்றிய ரூபமும் |
| உண்டாய்த் தோன்றலால் பரமே | உண்டாகி விளங்குவதனுல் பிரம்மசொரூபமே. |

பதசாரம்—சம்பந்தமானது இரண்டு சம்பந்தியை யபேட்சித்தலால் பிரம்மம் போல் அஞ்ஞானமும் சொரூப சத்பாவமுடையதென்று அவசியம் அங்கீகரிக்கத் தக்கது. அச்சற்பாவமும் அதிஷ்டானப் பிரம்மத்துள்ளதாதலால் அந்தச் சத்தை யன்றி அதற்கன்னியமாய் அஞ்ஞானமென்பதில்லாமையால் இரண்டு சம்பந்திகளில்லாததனுல் சம்பந்தமென்பது நிரூபிக்கத் தகாதென்பார், 'தோன்று கூட்டராவினுலே தோற்றிடும் பொருள்கட்கெல்லா மூன்றிடு முண்மையுண்டேலது வுள்ள பரமேயாகும்' எனவும், பிரம்மம்போலஞ்ஞானத்திற்குப் பரமார்த்த சத்பாவமின்றெனினும் ஆரோபித சத்பாவமுண்மையினுல் சம்பந்தமேன்கூடா தெனல் விசாரிக்காதவளவில் அழகிய சொரூபமுடைய அத்தியாசிக்கப்பட்ட அஞ்ஞானம் அதன் காரியமிவற்றிற்கு அதிஷ்டானப் பிரம்மமே சொரூபமன்றி வேறு சொந்தமாய்ச் சொரூபமில்லையென்பார், 'பாராதொழியில் வேறுண்மை யென்னிற் றேன்றியவுருவு முண்டாய்த் தோன்றலாற் பரமே' எனவும் கூறினர்.

அவதாரிகை.

பிரம்மத்திற்கே உருவமன்றி மற்றயதற்கில்லையென்று கூறுகின்றார்.

உருவமா யொளிர்வ துள்ள பிரமமே வேறொன் றில்லை
யுருவமா யுண்மை யின்மை யாதலின் வேறி னுக்கு
முருவமுண் டென்று சொல்லப் பார்த்திடில் வேறொன் றாய
வுருவத்தாற் றோன்று ரூப முண்மையிற் பரமே யாகும்

### இதன் பொருள்.

உருவமா யொளிர்வது —உருவமாகிப் பிரகாசிப்பது
உள்ள பிரமமே —சத்தாயுள்ள பிரம்ம சொரூபமேயாகும்
வேறொன்றில்லை —மற்றொன்றில்லை
உருவமாய் உண்மை —உருவமாயிருக்குந்தன்மை
இன்மையாதலில் —இல்லாமையால்
வேறினுக்கும் —இதர வஸ்துவுக்கும்
உருவமுண்டென்று —ரூபமுண்டென்று
சொல்லப் பார்த்திடில் —சொல்ல ஆலோசித்தால்
வேறொன்றாய —இதரமாகிய
உருவத்தாற்றோன்று ரூபம் —உருவத்தினால் தோன்றுகின்ற ரூபமானது
உண்மையில் பரமேயாகும் —மெய்ம்மையில் பிரம்மமே யாகும்.

**கருத்து**—நிரூபிக்கத்தக்க ரூபம் பிரமபின்ன வஸ்துவுக்குளதேல் இரண்டிற்கும் ரூபமொன்றாகிப் பேதமில்லாமையின் அந்தரூபமும் பிரம்மரூபமேயென்க. (65)

### அவதாரிகை.

இவ்வாறு ரூபமாத்திரத்திற்றானே பேதஞ் சித்தியாவிடில் பிரம்மரூபத்துக்கு வேறான ரூபத்தால் அஞ்ஞானத்துக்கும் உருவ முண்டென்ற சங்கையைக் கண்டிக்கவேண்டி மூன்றுவிதமாய் விகற்பித்துக் கூறுகின்றார்.

அன்னியத் தினுக்குச் சொன்ன வுருவுவே றுருவி னலா
மென்னிலப் பரந்தா னன்று மெனுமுரு வந்தான் றானே
யுன்னிய பரத்தி னோடு பின்னமோ வபின்ன மாயோ
சொன்னவிவ் விரண்டுங் கூடி யுள்ளதோ சொல்லு மென்றான்

### இதன் பொருள்.

அன்னியத்தினுக்கு —இதர வஸ்துவுக்கு
சொன்னவுருவு —சொன்னரூபமானது
வேறுருவினலாமென்னில் —வேறுருவத்தாலாகுமென்றால்
அப்பரந்தான் அன்றுமெனும் உருவம் —அந்தப் பிரம்மரூபம் அல்லவென்னும் உருவமானது
தான்றானே யுன்னிய —தான்மாத்திரமாய்க் கருதிய

உருவமா யொளிர்வ துள்ள பிரமமே வேறொன் றில்லை
யுருவமா யுண்மை யின்மை யாதலின் வேறி னுக்கு
முருவமுண் டென்று சொல்லப் பார்த்திடில் வேறொன் றாய
வுருவத்தாற் றோன்று ரூப முண்மையிற் பரமே யாகும்

இதன் பொருள்.

உருவமா யொளிர்வது —உருவமாகிப் பிரகாசிப்பது
உள்ள பிரமமே —சத்தாயுள்ள பிரம்ம சொரூபமேயாகும்
வேறொன்றில்லை —மற்றொன்றில்லை
உருவமாய் உண்மை —உருவமாயிருக்குந்தன்மை
இன்மையாதலில் —இல்லாமையால்
வேறினுக்கும் —இதர வஸ்துவுக்கும்
உருவமுண்டென்று —ரூபமுண்டென்று
சொல்லப் பார்த்திடில் —சொல்ல ஆலோசித்தால்
வேறொன்றாய —இதரமாகிய
உருவத்தாற்றோன்று ரூபம் —உருவத்தினால் தோன்றுகின்ற ரூபமானது
உண்மையில் பரமேயாகும் —மெய்ம்மையில் பிரம்மமே யாகும்.

**கருத்து**—நிரூபிக்கத்தக்க ரூபம் பிரமபின்ன வஸ்துவுக்குளதேல் இரண்டிற்கும் ரூபமொன்றாகிப் பேதமில்லாமையின் அந்தரூபமும் பிரம்மரூபமேயென்க. (65)

அவதாரிகை.

இவ்வாறு ரூபமாத்திரத்திற்றானே பேதஞ் சித்தியாவிடில் பிரம்மரூபத்துக்கு வேறான ரூபத்தால் அஞ்ஞானத்துக்கும் உருவ முண்டென்ற சங்கையைக் கண்டிக்கவேண்டி மூன்றுவிதமாய் விகற்பித்துக் கூறுகின்றார்.

அன்னியத் தினுக்குச் சொன்ன வுருவுவே றுருவி னாலா
மென்னிலப் பரந்தா னன்றா மெனுமுரு வந்தான் றானே
யுன்னிய பரத்தி னோடு பின்னமோ வபின்ன மாயோ
சொன்னவிவ் விரண்டுங் கூடி யுள்ளதோ சொல்லு மென்றான்

இதன் பொருள்.

அன்னியத்தினுக்கு —இதர வஸ்துவுக்கு
சொன்னவுருவு —சொன்னரூபமானது
வேறுருவினாலாமென்னில் —வேறுருவத்தாலாகுமென்றால்
அப்பரந்தான் அன்றாமெனும் உருவம் —அந்தப் பிரம்மரூபம் அல்லவென்னும் உருவமானது
தான்றானே யுன்னிய —தான்மாத்திரமாய்க் கருதிய

| | |
|---|---|
| பரத்திறேடு பின்னமோ | —பிரம்மத்தினுடன் பின்னமாகவோ |
| அபின்னமாயோ சொன்ன | —அபின்னமாகவோ சொல்லிய |
| இவ்விரண்டுங் கூடியுள்ளதோ சொல்லுமென்ருன் | இந்த இரண்டுங் கூடியுள்ள பின்னுபின்ன மாகவோ சொல்லுங்களென்ருன். (66) |

அவதாரிகை.

விகற்பித்த அம்மூன்றிற்கும் தூஷணங் கூறுகின்ருர்.

பின்னமென் றுரைக்கி லந்த வுருவின்வே ருகை யாலே
சொன்னது மருவே யாகுந் தற்பதஞ் சொல்லுங் காலே
பின்னமன் றென்னிற் ருனே யாயிடும் பின்னு பின்ன
மென்னின்முன் சொன்ன குற்ற மிரண்டும்வந் திசையு மென்க

இதன் பொருள்.

| | |
|---|---|
| பின்னமென்றுரைக்கில் | —பின்னமென்று சொல்லில் |
| அந்தவுருவின் | —அந்த ரூபத்தைக்காட்டிலும் |
| வேருகையாலே | —வேருதலாலே |
| சொன்னதும் அருவேயாகும் | —(இங்ஙனஞ்)சொல்லியதும் உருவமில்லாததாகும் |
| சொல்லுங்காலே | —சொல்லுங்காலத்தில் |
| பின்னமன்றென்னில் | —அபின்னமெனில் |
| தற்பதம் தானேயாயிடும் | —தற்பதமாகிய அந்த ரூபமாகவேயாகிவிடும் |
| பின்னுபின்னமென்னில் | —பின்னமும் அபின்னமுமென்று சொல்லில் |
| முன்சொன்ன குற்றமிரண்டும் | —முற்கூறிய இரண்டு குற்றமும் |
| வந்திசையுமென்க | —வந்து பொருந்துமென்று அறிக. |

**பதசாரம்**—'சொன்னது மருவே'என்றமையால் நிரூபிக்க யோக்கியமான பிரம்மசொரூபத்திற்குப் பின்னமாதலால் நரசிருங்கம் ஒக்குமெனவும், 'தானேயா யிடும்' என்றமையால் அஞ்ஞானத்திற்கு வேருன சொரூபலாபமில்லையெனவும் பின்னுபின்னமெனில் குற்றமிரண்டும் பொருந்துமெனவும் பெறப்பட்டது. (67)

அவதாரிகை.

அநிரூபிதரூபமாகச் சற்பாவம் யாதொன்று பிரதிக்கினை செய்யப்பட்டதோ அஃது இந்தப் பிரகாரத்தால் வாக்குமாத்திரந் தானென்று கூறுகின்ருர்.

பாராத படியி னுலே பரத்தினில் வேற தாக
னோரயொன் ருகித் தோன்று நெறிசொலில் வார்த்தை யேயா
மோரயோர் பயனு மில்லஞ் ஞானமு மெக்கா லத்தும்
போராது விளங்கு கின்ற பிரமமே பிறிதொன் றில்லை.

### இதன் பொருள்.

| | |
|---|---|
| பாராதபடியினாலே | —சிந்தித்துப் பாராததன்மையினாலே |
| பரத்தினில் வேறதாக | —பிரம்மத்தினின்றும் வேற்றுமையாக |
| நேராயொன்றாகி | —நேர்மையான ஒரு பொருளாகி |
| தோன்றுநெறி சொலில் | —விளங்குகின்ற மார்க்கமும் நிரூபிக்குங்கால் |
| வார்த்தையேயாம் | —சொல்லளவேயாகும் |
| ஏராய் ஓர்பயனும் இல் | —அழகாக ஓர் பிரயோஜனமும் இல்லாத |
| அஞ்ஞானமும் எக்காலத்தும் | —அறியாமையும் எப்பொழுதும் |
| பேராது விளங்குகின்ற பிரமமே | —நீங்காமல் விளங்குகின்ற பிரம்மமேயாகும் |
| பிறிதொன்றில்லை. | —(அதைத்தவிர)அஞ்ஞானமென்று ஒருவஸ்து இல்லை. (68) |

### அவதாரிகை.

அஞ்ஞானத்திற்குச் சொந்தமாகப் பானலாபமில்லாததனால் வியாவகாரிக அஞ்ஞானமும் பேராது விளங்குகின்ற பிரம்மமேதானென்று யாதொன்று பிரதிக்கினை செய்யப்பட்டதோ அதுவே உறுதியென்று கூறுகின்றார்.

எல்லாமஞ் ஞானத் தாலே தோன்றிடு மென்ற றானு
மில்லாதோ வென்னில் வேறா யறிவின்மை யிலாமை யாலே
யில்லாவஞ் ஞான மத்தின் காரிய மிரண்டு மூன
மில்லாத பிரமந் தானே யெனுமிதென் னறிவே யென்றான்

### இதன் பொருள்.

| | |
|---|---|
| எல்லாம் அஞ்ஞானத்தாலே | —யாவும் அஞ்ஞானத்தினாலே |
| தோன்றிடுமென்றல் தானும் | —தோன்றிடுமென்று சொல்லுதலும் |
| இல்லாதோவென்னில் | —இல்லையோவென்றால் |
| வேறாய் அறிவின்மை | —வேறாக அஞ்ஞானமானது |
| இலாமையாலே | —இல்லாததனால் |
| இல்லா அஞ்ஞானம் | —இல்லாத அஞ்ஞானம் |
| அத்தின் காரியம் | —அந்த அஞ்ஞானத்தின் காரியமான ஜகம் |
| இரண்டும் ஊனமில்லாத | —இவ்விரண்டும் அழிவில்லாத |
| பிரம்மந்தானே யெனுமிது | —பிரம்மமேயென்னும் இந்தத் தாற்பரியமே |
| என்னறிவென்றான் | —என் கருத்தென்றான். (69) |

### அவதாரிகை.

இந்தச் சகல ஜகமும் அஞ்ஞான காரியமென்ற வசனமுங் கேவலஞ் சத்த மாத்திரந்தான் அதற்குப் பொருளில்லை. அதிஷ்டான பரமசிவ சொரூபத்திற்கு வேறாக அஞ்ஞானம் நிரூபிக்கத்தகாததனால் அஞ்ஞானமும் அஞ்ஞான காரிய மனைத்தும் பிரம்மசொரூபமே யன்றி வேறில்லையென்ற விஷயத்தில் சுருதியை அனுவதித்துப் பிரதிக்கினை செய்யப்பட்ட உறுதியெனக் கூறுகின்றார்.

### இதன் பொருள்.

| | |
|---|---|
| பாராதபடியினாலே | —சிந்தித்துப் பாராததன்மையினாலே |
| பரத்தினில் வேறதாக | —பிரம்மத்தினின்றும் வேற்றுமையாக |
| நேராயொன்றாகி | —நேர்மையான ஒரு பொருளாகி |
| தோன்றுநெறி சொலில் | —விளங்குகின்ற மார்க்கமும் நிரூபிக்குங்கால் |
| வார்த்தையேயாம் | —சொல்லளவேயாகும் |
| ஏராய் ஓர்பயனும் இல் | —அழகாக ஓர் பிரயோஜனமும் இல்லாத |
| அஞ்ஞானமும் எக்காலத்தும் | —அறியாமையும் எப்பொழுதும் |
| பேராது விளங்குகின்ற பிரமமே | —நீங்காமல் விளங்குகின்ற பிரம்மமேயாகும் |
| பிறிதொன்றில்லை. | —(அதைத்தவிர)அஞ்ஞானமென்று ஒருவஸ்து இல்லை. (68) |

### அவதாரிகை.

அஞ்ஞானத்திற்குச் சொந்தமாகப் பானலாபமில்லாததனால் வியாவகாரிக அஞ்ஞானமும் பேராது விளங்குகின்ற பிரம்மமேதானென்று யாதொன்று பிரதிக்கினை செய்யப்பட்டதோ அதுவே உறுதியென்று கூறுகின்றார்.

எல்லாமஞ் ஞானத் தாலே தோன்றிடு மென்ற றானு
மில்லாதோ வென்னில் வேறா யறிவின்மை யிலாமை யாலே
யில்லாவஞ் ஞான மத்தின் காரிய மிரண்டு மூன
மில்லாத பிரமந் தானே யெனுமிதென் னறிவே யென்றான்

### இதன் பொருள்.

| | |
|---|---|
| எல்லாம் அஞ்ஞானத்தாலே | —யாவும் அஞ்ஞானத்தினாலே |
| தோன்றிடுமென்றல் தானும் | —தோன்றிடுமென்று சொல்லுதலும் |
| இல்லாதோவென்னில் | —இல்லையோவென்றால் |
| வேறாய் அறிவின்மை | —வேறாக அஞ்ஞானமானது |
| இலாமையாலே | —இல்லாததனால் |
| இல்லா அஞ்ஞானம் | —இல்லாத அஞ்ஞானம் |
| அத்தின் காரியம் | —அந்த அஞ்ஞானத்தின் காரியமான ஜகம் |
| இரண்டும் ஊனமில்லாத | —இவ்விரண்டும் அழிவில்லாத |
| பிரம்மந்தானே யெனுமிது | —பிரம்மமேயென்னும் இந்தத் தாற்பரியமே |
| என்னறிவென்றான் | —என் கருத்தென்றான். (69) |

### அவதாரிகை.

இந்தச் சகல ஜகமும் அஞ்ஞான காரியமென்ற வசனமுங் கேவலஞ் சத்தமாத்திரந்தான் அதற்குப் பொருளில்லை. அதிஷ்டான பரமசிவ சொரூபத்திற்கு வேறாக அஞ்ஞானம் நிரூபிக்கத்தகாததனால் அஞ்ஞானமும் அஞ்ஞான காரியமனைத்தும் பிரம்மசொரூபமே யன்றி வேறில்லையென்ற விஷயத்தில் சுருதியை அனுவதித்துப் பிரதிக்கினை செய்யப்பட்ட உறுதியெனக் கூறுகின்றார்.

இப்படி யெல்லா மாகி யிருந்ததே பரமா மென்ன
மெய்ப்படி யேயா யுள்ள சுருதிதான் விளங்கச் சொன்ன
அப்பொரு டற்பா வத்தா லாவதே யென்று கொண்டு
செப்பிடுஞ் சுரர்கட் கெல்லாந் திகழொளி மலரின் மேலோன்

இதன் பொருள்.

இப்படி எல்லாமாகியிருந்ததே—இவ்வண்ணம்அனைத்துமாகியிருந்ததுவே
பரமாமென்ன —பிரம்மசொரூபமென்று யாருஞ்சொல்ல
மெய்ப்படியேயாயுள்ள —உண்மை நிலையாகவேயிருக்கின்ற
சுருதிதான் —வேதங்களோ
விளங்கச்சொன்ன அப்பொருள்—தெளியவுரைத்த அந்தப்பொருள்
தற்பாவத்தால் —தன் சுபாவத்தினால்
ஆவதேயென்று கொண்டு —ஆகின்றதென்று அபிப்பிராயங்கொண்டு
சுரர்கட்கெல்லாம் —தேவர்கட்கெல்லாம்
திகழொளி மலரின் மேலோன் செப்பிடும் —பிரகாசியாநின்ற தாமரைப்பூவில் எழுந்தருளியிருக்கின்ற பிரம்மதேவன் சொல்வான். (70)

அவதாரிகை.

கிரியாகாரக பலரூபமான பிரபஞ்சத்தினது பேதத்தையும் பிரமத்தைத்தவிரத் திரிசியமான பிரபஞ்சமிருப்பது போலச் சுருதியே பிரதி பாதிக்கின்றது. ஆன்மாவினிடத்தினின்றும் ஆகாயமுண்டாயிற்று. சோதிஷ்டோமத்தால் சுவர்க்கவிச்சையுடையோன் யாஜிக்கத்தக்கது என்றது முதலியவை, இவ்வாறாயின் அனைத்தும் பிரம்மசொரூபமென்றல் பொருந்தாதென்று சங்கித்துக்கூறுகின்றார்.

கேட்பவ னுடைய சித்தம் பரிபாக மிலாதே கொண்டு
மீட்சியாய் வசம தின்றி வேதமோ ரிடத்தி லோர்காற்
காட்சிய துளது போலப் பரத்தினை யொழிந்து வேறு
மாட்சியி லொன்றுண் டாக வகுத்துரை செய்த தன்றே.

இதன் பொருள்.

கேட்பவனுடைய சித்தம் —சிரவணம் பண்ணுகின்றவனுடைய சித்தமானது
பரிபாகமிலாதே கொண்டு —பரிபாகமில்லாததுகொண்டு
வேதம் —வேதமானது
மீட்சியாய் வசமதின்றி —தன்வசமில்லாமல் திரும்பி
ஓரிடத்தில் ஓர்கால் —ஒரு இடத்தில் ஒரு காலத்தில்
அப்பரத்தினையொழிந்து —அந்தப் பிரம்மத்தைத்தவிர்த்து
காட்சியதுளதுபோல —திரிசியமான சகமிருக்கின்றதுபோல

| | |
|---|---|
| வேறு மாட்சியில் | —வேறான பெருமையில்லாத |
| ஒன்றுண்டாக | —ஓரெண்ணமுண்டாக |
| வகுத்துரை செய்தது | —பகுத்துச் சொல்லியது. (71) |

வேறு.

இத்தா லித்தைச் சாதிப்ப தென்ற றீர்த்த மாடென்ற
லொத்தவ் வாது வேறுபடத் தோன்று மூலக மென்றுரைத்தல்
வைத்தே பாவ புண்ணியமும் வன்னச் சிரமங் களுமிவற்றோ
டொத்தே நின்றோர் சரிதைகளு முரைக்கும் வேறு முள்ளனவும்.

இதன் பொருள்.

| | |
|---|---|
| இத்தால் | —இந்தச் சாதனத்தினால் |
| இத்தைச் சாதிப்பதென்றல் | —இதனைச் சாதிப்பதென்பதும் |
| தீர்த்தமாடென்றல் | —தீர்த்தங்களில் முழுகென்பதும் |
| ஒத்தொவ்வாது | —ஒருதன்மையாகப் பொருந்தாமல் |
| வேறுபடத்தோன்று மூலகமென்றுரைத்தல் | உலகங்கள் பல விசித்திரங்களாகத் தோன்று மென்றுரைப்பதும் |
| வைத்தே | —நிலைபெறவைத்தே |
| பாவபுண்ணியமும் | —பாவபுண்ணியங்களும் |
| வன்னச் சிரமங்களும் | —வருணச்சிரமங்களும் |
| இவற்றோடு | —இவைகளோடு |
| ஒத்தே நின்றோர் சரிதைகளும் | —பொருந்திநின்றவர்களது சரித்திரங்களும் |
| உரைக்கும் வேறு முள்ளனவும் | —கூறுகின்ற மற்றுமுள்ளவனைத்தும் (72) |

வேறு.

சுகமொடு துக்கம் பூதம் பௌதிக மிதுவே யென்றல்
சகமுடைத் தாய சத்தை வேறென்ற தகமை தானு
மகமறி வென்று நின்ற வறிவினில் வேறி யாவுந்
தகவுள வுண்மை யென்றே சாற்றிடுந் தன்மை தானும்.

இதன் பொருள்.

| | |
|---|---|
| சுகமொடுதுக்கம் | —இன்பத்தோடு துன்பம் |
| பூதம் பௌதிகம் | —பூதங்கள் பௌதிகங்கள் |
| இதுவேயென்றல் | —இதுவேயென்பதும் |
| சகமுடைத்தாய சத்தை | —உலகத்தையுடையதாகிய சத்தையை |
| வேறென்ற தகமைதானும் | —வேறெனக் கூறுநின்ற பண்பும் |

அகமறிவென்று நின்ற —அகம்பதமானது ஞானமென்று நிற்கின்ற
அறிவினில் —கூடஸ்தனிடத்தில்
வேறியாவும் —வேறாகத் தோன்றப்பட்டவனைத்தும்
தகவுளவுண்மை யென்று —பெருமையுடைய உண்மைப்பொருளென்று
சாற்றிடுந்தன்மை தானும் —சொல்லுகின்ற தன்மையும். (73)

## வேறு.

எல்லாம் பொய்யே யென்பதுவு மாயைக் குண்மை யியம்புவது
மில்லா மாயை யிதனாலே யியலும் பந்தம் வீடுகளு
மெல்லா மாகுங் குருமதமு மிவனை யடைவோன் றன்மதமுஞ்
சொல்லா லளப்பி லாவிச்சை யிருக்கும் படிசொல் லுகைதானும்.

## இதன் பொருள்.

எல்லாம் பொய்யே என்பதுவும்—சகலமும் மித்தையே யென்பதுவும்
மாயைக்குண்மை யியம்புவதும்—மாயைக்குச் சத்தியத்தன்மை கூறுவதும்
இல்லாமாயை யிதனாலே —சொரூபமில்லாத இந்த மாயையால்
இயலும்பந்தம் வீடுகளும் —பொருந்தாநின்ற பந்தமும் மோட்சங்களும்
எல்லாமாகும் குருமதமும் —அனைத்துமாகிய குருவென்னும் அபிப்பிராயமும்
இவனையடை வோன்றன் மதமும் } இந்தக்குருவை வழிபடுவோன் தனது அபிப்பிராயமும்
சொல்லா லளப்பிலா விச்சை—வாக்கால் அளக்கமுடியாத பிரம்மவித்தையும்
இருக்கும்படி சொல்லுகை தானும் } இருக்கும்படியாகச் சொல்லுகின்றதுவும். (74)

ஓதுகின்ற நூல் பலவு முரைக்குந் தர்க்க முள்ளனவும்
பேதித் துளதா மிகவுமெனப் பேணிச் சுருங்கச் சொல்லுகையும்
பேத மின்றி யித்தனையும் பரத்தின் வேறென் றியம்புவது
நீதியாக வுளவெவையு நின்றே நிகழ்த்து மாமறை தான்.

## இதன் பொருள்.

ஓதுகின்ற நூல்பலவும் —சொல்லாநின்ற சாத்திரங்களனைத்தும்
உரைக்குந் தர்க்கமுள்ளனவும் —கூறுநின்ற தருக்கங்களாயுள்ள நூல்களனைத்தும்
பேதித்துளதா மிகவுமென —மிகவும் பேதித்திருக்கின்றனவென்று
பேணி —கருதி
சுருங்கச் சொல்லுகையும் —சுருங்க உரைக்குந் தன்மையும்
ஏதமின்றி இத்தனையும் —குற்றமில்லாத இவ்வளவும்
பரத்தின் —பிரம்மத்தினிடத்தில்

வேறென்றியம்புவதும் —வேறென்று சொல்லுவதும்
நீதியாகவுள்ளவையும் —இந்த நீதியாகவுள்ளவனைத்தையும்
மாமறைதான் —பெருமைபொருந்திய வேதமானது
நின்றே நிகழ்த்தும் —நின்று சொல்லுகின்றது. (75)

பரமா யுள்ள மறைதானே பாக மானோ ரறிவுக்குத்
தரமா யடையும் பரிசாகச் சாற்றி யவர்கட் கிதமாகத்
திரமா யுள்ள மழுங்குறினுஞ் சிறிதே யெல்லா விரதம்போ
லுரமாய்த் தானிப் படியொன்றே யுபதே சித்த துண்மையினால்.

இதன் பொருள்.

பரமாயுள்ள மறைதானே —உயர்வாயிருக்கின்ற வேதமே
பாகமானோ ரறிவுக்குத்தரமாய் —சித்தபரிபாகமான அதிகாரிகளுக்குத் தகுதியாக
அடையும் பரிசாகச் சாற்றி —அடையும் தன்மையாக உபதேசித்து
அவர்கட்கிதமாக —அவர்களுக்கு இதமாகும்படி
திரமாய் —திரமாக
உள்ள மழுங்குறினும் —உள்ளத்தின்கண் வருத்தமுறினும்
சிறிதே எல்லாவிரதம் —கொஞ்சங் கொஞ்சமாக சகல விரதங்களையும்
உரமாய்த்தான் —திண்ணமாக
இப்படியென்று —இந்தப் பிரகாரமென்றே
உண்மையினால் —மெய்ம்மையினால்
உபதேசித்தது —உபதேசஞ்செய்தது. (76)

சாதனமாஞ் சதுட்டயங்கள் சமைந்த வந்தத் தன்மையர்க்கு
நீதியாக வருமறைதா னின்றே யிவர்க ளறியு வணம்
பூதமாயும் புவனங்கள் பிறவு மாகி யிருந்ததுவு
மேத மில்லா தொன்றாய பரமே யென்றே யியம்பினதால்.

இதன் பொருள்.

சாதனமாம் சதுட்டயங்கள் —நான்கு சாதனங்களும்
சமைந்த —அமைந்திரா நின்ற
அந்தத் தன்மையர்க்கு —அந்தத்தன்மையுடைய வதிகாரிகளுக்கு
நீதியாக —ஒழுங்காக
அருமறைதானின்று —அரிய வேதமானது நின்று
இவர்களறியுவணம் —இவர்களறியும்படி
பூதமாயும் புவனங்கள் —பூதங்களாயும் ஜகமாயும்

பிறவுமாகியிருந்ததுவும் —நாளுவாயு மிருக்கின்றவனைத்தையும்
ஏதமில்லாது —குற்றமில்லாமல்
ஒன்றாய —ஏகமாகிய
பரமேயென்றே இயம்பினது —பிரம்மசொரூபமென்றே சொல்லியது.

**கருத்து**—இவ்வான்ம சொரூபமே இவ்வனைத்துமென்ற சுருதிப்பொருளின் சுபாவத்தன்மையினால் நேராயிருக்கின்ற பொருளை நிரூபித்தற்குப் பிரவர்த்தித்தது. இப்பொருள் பக்குவமில்லாத சித்தமுடையவர்களால் அடையத்தகாததனால் அவரவர்கள் சித்தபரிபாகானு குணமாகப் பேதச்சுருதியானது சாத்திய சாதன பல முதலிய லட்சணஜகத்தின் விசித்திரத்தன்மையைப் பிரதிபாதிக்கின்றதேயன்றிப் பரமார்த்தமாகவில்லை. கேட்பவனது சித்தபரிபாகானு குணமாகப் பூருவ காண்டத்தில் அக்கினி ஹோத்திர முதலிய தருமங்களைக் கிரமமாக வுபதேசித்து அவைகளால் பரிபக்குவமுடைய சித்தமுள்ளவர்களுக்குச் சகுணோபாசனை முதலிய வற்றையுபதேசித்து அதனாலடைந்த ஏகாக்கிரசித்தமுடைய உத்தமாதிகாரிகளுக்கு இந்தப் பிரகாரஞ் சோபானக்கிரமமாக இவ்வான்மசொரூபமே இச்சகலமுமென்று சுருதி அத்துவிதீயப் பிரம்மவத்துவையடையச் செய்கின்றதென்றுணர்க. (77)

அவதாரிகை.

அனுசந்தானப் பிரகாரத்தை முறையே ஆசரித்துக் கூறுகின்றார்.

வேறு.

சகமொடு சீவ னீசன் சார்ந்துள விகார மின்றிச்
சுகமுடைச் சத்தாய்ச் சித்தாய்த் துகளின்றி நுண்ணிதாகி
யகமெனு முரைகட் குள்ளா யறிவரி தாகி யொன்றாந்
தகவுடைப் பிரமந் தன்னி னொருமையை மறைகள் சாற்றும்.

இதன் பொருள்.

சகமொடு சீவனீசன் —சகத்தோடு சீவனென்றும் ஈசனென்றும்
சார்ந்துள விகாரமின்றி —பொருந்தியிருக்கின்ற விசித்திரமாம் விகாரமின்றி
சுகமுடைச்சத்தாய்ச் சித்தாய் —சுகமுடைய சத்தாயும் சித்தாயும்
துகளின்றி நுண்ணிதாகி —குற்றமின்றி சூட்சுமமாகியும்
அகமெனுமுரைகட்குள்ளாய் —அகமென்னும் வார்த்தைகளுக்கு ஆந்தரப்பொருளாயும்
அறிவரிதாகி ஒன்றாம் —அறிதற்கரியதாகியும் ஒருபொருளாகும்
தகவுடைப் பிரம்மந்தன்னின் —தகுதியுடைய பிரம்மத்தினது
ஒருமையை மறைகள் சாற்றும்—ஏகசுபாவத்தை வேதங்கள் சொல்லும். (78)

## வேறு.

ஈசன் சகமோ டுளசீ வனதா மியாவும் பாரூ பமதென் றுகொடே
நேசம் மதனு லுளதா கியதன் னிறையும் மறிவா னதியா ததுதான்
மாசொன் றதிலா தபரம் பொருளும் மயலொன் றறியா தவபே தமது
மேதம் மொழிவே தனமா வதுவு மென்றம் மலரோ னுமியம் பினனால்.

### இதன் பொருள்.

ஈசன் சகமோடுள சீவனதாம் —ஈச்சுரன் சகத்தோடுள்ள சீவனுடையதாய
இயாவும் —மாயை அஞ்ஞான முதலியயாவும்
பரரூபமதென்று கொடே —பிரம்மசொரூபமேயென்று கொண்டு
நேசம்மதனால் உளதாகிய —அன்பினால் இருக்கின்றதாகிய
தன்னிறையும் மறிவானது —தனது பூரணமான ஞானமானது
யாது அதுதான் —எது அந்த ஞானமே
மாசொன்றிலாத பரம்பொருளும்—ஒரு குற்றமுமில்லாத பிரம்ம வஸ்துவும்
மயலொன்றறியாத —ஒரு மயக்கமுமறியாத
அபேதமதும் —அபேதமும்
ஏதம்ஒழி வேதனமாவதுவும் —குற்றம்நீங்கிய ஞானமாவதுவும்
என்றம் மலரோ னுமியம்பினன்—என்று அந்தப் பிரம்மாவும் சொன்னான்.

கருத்து—போக்கிய போக்திருபோகப் பிரதரூபமான அகண்டகார இப்பிரபஞ்சமனைத்தும் போராது விளங்குகின்ற விசுத்தப் பிரம்மமேதானென்னும் பரிபூரணப் பிரம்மசொரூப ஞானமே அத்துவித ஞானமென்றுணர்க. (79)

இத்தன் மையொழிந் துளதா மறிவே
யாதொன் றறியா மையையெய் தியதே
மெய்த்தன் மையதா யறிபோ தினுமே
வேறா யறிகின் றவிடந் தனிலும்
மத்தன் மையில்வே றுபடா ததிலோ
ரையம் மிலையா சறநின் றதுதான்
சித்தொன் றியறிந் திடுமவ் வறிவே
சேர்தற் கரிதா யிடுமெங் கணுமே.

### இதன் பொருள்.

இத்தன்மை ஒழிந்து —இவ்விதமான ஞானத்தை நீங்கி
உளதாமறிவு —இருக்கின்றதான ஞானம்
யாதொன்று —யாதொன்றுண்டோ அது

அறியாமையை —அஞ்ஞானத்தை
எய்தியதே —பற்றியதேயாகும்
மெய்த்தன்மைய தாயறிபோதினும் } யதார்த்த சுபாவமாய் விசாரித் தறியுங் காலத்தினும்
வேறாய் அறிகின்ற விடந்தனிலும்—மாறுபாடாக உணர்கின்ற விடத்திலும்
அத்தன்மையில் —ஏகமான அந்தப் பிரஞ்ஞான சுபாவத்தில்
வேறுபடாது —மாறுபடமாட்டாது
அதிலோரையம்மிலை —அதிலொரு சந்தேகமுமில்லை
ஆசற நின்றதுதான் —குற்றமற நிற்கின்றதாகும்
சித்தொன்றி அறிந்திடும் —சித்தைச்சார்ந்து அறியப்பட்ட
அவ்வறிவே எங்கணும் —அந்த ஞானமே எவ்விடத்தும்
சேர்தற்கு அரிதாயிடும் —அடைவதற்கு அரியதாகும்.

**பதசாரம்**—சருவான்ம ஞானத்துக்கு வேருக நான் வேறு பிரம்மம் வேறென்னும் ஞானம் அஞ்ஞானமேதான், சுருதியும் எவன் தான் வேறு தேவதை வேறென்று தனக்குப் பின்னமாக அந்தத் தேவதையை யுபாசிக்கின்றானோ அவனறிந்தவனன்று பசுவேதானென்று கூறிற்றென்பார், 'இத்தன்மை யொழிந்துள தாமறிவே யாதோன் றறியாமையை யெய்தியதே' எனவும், நிருவிசேஷப் பிரமான்ம ஐக்கிய சாட்சாத்காரமானது வருணாச்சிரம தன்மங்களால் மகிழ்வுற்ற பரமேச்சுரப் பிரசாதத்தாலேயே அடையத்தக்கதாதலால் 'சித்தோன்றி யறிந்திடு மவ்வறிவே சேர்தற்கரிதாயிடு மெங்கணுமே' எனவும் கூறினார். (80)

### அவதாரிகை.

பானம் யாவும் சிவசொரூபமென்று கூறுகின்றார்.

### வேறு.

எப்படிப் பொருள்க ளெல்லா மிதுவிது வென்றே யென்றுஞ்
செப்பிட வுண்மை யாகத் திகழ்தரும் வேறு பாட்டா
லப்படிச் சிவனே யந்தப் பொருள்களி னுண்மை யாகி
மெய்ப்பட விளங்கு கின்றான் வேறொரு பொருளன் றாமால்.

### இதன் பொருள்.

எப்படிப் பொருள்களெல்லாம்—எவ்வாறு வஸ்துக்களனைத்தும்
என்றும் —எக்காலத்தும்
இதுவிது வென்றே —இதுவிது வென்று
செப்பிட வேறுபாட்டால் —சொல்லும்படி வித்தியாசத்தால்
உண்மையாகத் திகழ்தரும் —சுபாவமாக விளங்கா நிற்கும்

| | |
|---|---|
| அப்படிச் சிவனே | —அவ்வாறு பரமசிவனே |
| அந்தப் பொருள்களின் | —அந்த வஸ்துக்களின் |
| உண்மையாகி | —சுபாவமாகி |
| மெய்ப்பட விளங்குகின்முன் | —மெய்ம்மையாகப் பிரகாசிக்கின்முன் |
| வேமெருரு பொருளன்மும் | —மற்மெருரு பொருளன்முகும். |

கருத்து—அதிஷ்டான ஸ்புரண சத்துவமே ஆரோபிக்கத்தக்க மெய்ம்மையாகப் பிரகாசிக்கின்ற தருமமாக விளங்குகின்ற தென்றறிக. (81)

அவதாரிகை.

அச்சொருபானு சந்தானத்தைக் கூறுகின்முர்.

யாதொரு படியிப் போதம் பொருடொறும் விளங்கு மந்நேர்
தீதிலாச் சிவன்றன் சத்தி யாயதே பிறிதொன் றன்று
லேதமில் சத்தி யின்னே யிசைந்திட வறித லேயாம்
போதமு மிறந்து தோன்றும் பொருளொன்று யறியும் வண்ணம்.

இதன் பொருள்.

| | |
|---|---|
| யாதொருபடி இப்போதம் | —யாதொரு தன்மையாக இந்த ஞானம் |
| பொருடொறும் விளங்கும் | —பொருள்கடோறும் விளங்குகின்றதோ |
| அந்நேர்தீதிலாச் சிவன்றன் | —அப்படியே தீங்கில்லாத சிவனுடைய |
| சத்தியாயதே | —சத்தையென்னுஞ் சத்தியேயாகியதுதான் |
| பிறிதொன்றன்று | —வேமுென்றல்ல |
| ஏதமில் சத்தி | —குற்றமற்ற சத்தையை |
| இன்னே | —இத்தன்மையாக |
| இசைந்திட அறிதலே | —பொருந்த அறிவதே |
| போதமுமிறந்து தோன்றும் | —சீவபோதமும் நசித்து விளங்குகின்ற |
| பொருள் ஒன்றாய் | —பொருளை ஏகமாக |
| அறியும்வண்ணம் ஆம் | —உணருந்தன்மை ஆகும். |

கருத்து—கடம் விளங்குகின்றது படம் விளங்குகின்றதென்றது முதலிவற்றில் எந்த எந்தப்பிரகாரமாக யாதொரு சித்தினொளியிடைவிடாமல் விளங்குகின்றதோ அஃதே அந்தவந்த விஷயாங்கிசத்தை நீக்கில் சாட்சாத் பரமேச்சுசொருபமாயுள்ள சமுசய விபரீதமற்ற அனுசந்தானமான பாரமார்த்திக சுத்தத்துவப் பரமாத்துவித விஞ்ஞானமென்றறிக. (82)

அவதாரிகை.

இவ்வாறு அனுசந்தானிப்பவனுகிய பரிசுத்தனனவனுக்குப் பாகியமாசசல வியாபாரமும் பரமேச்வர சிந்தனமாகுமென்று கூறுகின்முர்.

யாதொரு படியி னாலே யாவையுந் தோன்று மத்தை
யோதிய பரமே யாக வுண்மையா வறிந்தா னியாவ
னேதமி லீசன் றன்னை யியல்பினா லெளிதாம் வண்ணம்
பூதனு மவனே மிக்க பூசனை செய்யா நின்றான்.

இதன் பொருள்.

| | |
|---|---|
| யாதொருபடியினாலே | —எந்தத் தன்மையினாலே |
| யாவையுந்தோன்றும் | —அனைத்தும் விளங்குகின்றதோ |
| அத்தை ஓதிய பரமேயாக | —அதனைச் சொல்லிய பிரம்மமேயாக |
| உண்மையா அறிந்தானியாவன் | —மெய்ம்மையாக அறிந்தவனெவனோ |
| பூதனுமவனே | —பரிசுத்தனாகிய அவனே |
| ஏதமில் ஈசன்றன்னை | —குற்றமில்லாத மகாதேவனை |
| இயல்பினால் | —சுபாவத்தினால் |
| எளிதாம் வண்ணம் | —சுலபமாகும்படி |
| மிக்க பூசனைசெய்யா நின்றான் | —மிகுந்த பூசனைசெய்கின்றவன். |

**கருத்து**—யாதொரு வத்துவானது கண் செவி முதலிய பிரமாணங்களால் விளங்குகின்றதோ அவ்வனைத்தையும் இடைவிடாமல் வியாபித்து விளங்காநின்ற பானரூப பரமசிவனே தானென்று உண்மையாயறிந்து எந்த எந்தப் பிரகாரமாக அனுசந்தானிக்கின்றானோ அந்தப் பரிசுத்தனாகிய யோகி யெத்தனமின்றி மனோவாக்குக்காய முதலியவைகளாற் செய்யத்தக்க பரமேச்சுர பசனத்தையே செய்கின்றானேயன்றி உலகவிவகாரத்தைச் செய்கின்றானில்லையென்றறிக. (83)

எப்படிப் புத்தி நானு வுருவமா யிலங்குந் தன்னு
ளப்படி யறிவே யாக வனுபவத் திடுத லேயாஞ்
செப்பிட வரிதா யுள்ள திகழொளி யாகுந் தன்னை
மெய்ப்பட வேறொன் றின்றி விளைத்திடும் பூசை தானே.

இதன் பொருள்.

| | |
|---|---|
| எப்படிப் புத்தி | —எவ்வண்ணம் மதி |
| நானுவுருவமா யிலங்கும் | —நானுருபமாக விளங்குகின்றதோ |
| தன்னுள் அப்படி | —தன்னுள் அவ்வண்ணம் |
| அறிவேயாக | —ஞான சொரூபமேயாக |
| அனுபவித்திடுதலே | —அனுபவிப்பதே |
| செப்பிட வரிதாயுள்ள | —சொல்ல வரியதாயிருக்கின்ற |

| | |
|---|---|
| திகழொளியாகுந் தன்னை | —தானாக விளங்குகின்ற (சிவசொரூபத்தை) |
| மெய்ப்பட | —மெய்ம்மையாக |
| வேறொன்றின்றி விளைத்திடும் | —பின்னமில்லாமல் செய்யாநின்ற |
| பூசைதானே ஆம் | —பூசனையே ஆகும். |

**கருத்து**—எந்தவெந்தப் பிரகாரமாய்ப் புருடனது மதியானது எந்த எந்த வத்துக்களிற் சஞ்சலமாகப் பவிக்கின்றதோ அந்த அந்தப் பிரகாரமாகச் சகலத்தினும் பானரூபமாகிய சிவனை அனுசந்தானிக்கின்றவன் கேவலம் ஞான சொரூபமேயான மானசபூசையே செய்கின்றானென்றுணர்க. (84)

**அவதாரிகை.**

இந்தச் சருவான்மஞானத்தை அன்வய வியதிரேகங்களால் கூறுகின்றார்.

போதம தாகித் தோன்றும் பொருளெலாஞ் சிவனேயாக
வேதமி லறிவாற் காண்பா னெவனவ னுண்மை கண்டான்
தீதிலாச் சிவனன் றென்று சிறிதொன்றைச் சிந்தை செய்வோன்
பேதமா மருளின் மேய பித்தனென் றறிய லாவான்.

**இதன் பொருள்.**

| | |
|---|---|
| போதமதாகித்தோன்றும் | —அறிவுருவமாய் விளங்கும் |
| பொருளெலாம் சிவனேயாக | —வஸ்துக்களனைத்தையும் சிவசொரூபமேயாக |
| ஏதமில் | —குற்றமற்ற |
| அறிவாற்காண்பான் | —அறிவினாற் காண்பவன் |
| எவனவன் | —எவனோ அவனே |
| உண்மை கண்டான் | —எதார்த்த சொரூபத்தைக் கண்டவனாவான் |
| தீதிலா | —தீங்கில்லாத |
| சிவனன்றென்று | —சிவசொரூபமல்லவென்று |
| சிறிது ஒன்றை | —கிஞ்சித்தாயினும் ஒருபொருளை |
| சிந்தை செய்வோன் | —கருதுகின்றவன் |
| பேதமாம் மருளில் | —பேதமாகிய மயக்கத்தில் |
| மேயபித்தனென்று | —பொருந்திய பிராந்தனென்று |
| அறியலாவான் | —எல்லாராலும் அறியப்படுவான். (85) |

சிவனிது வன்றே யென்று சிறிதொன்றைச் சிந்தை செய்யு
மவனறி வுடையோர் தம்பா லதமனென் றறியப் பட்டா
னுவமை யொன் றில்லா வீசன் றனையிகழ்ந் தொழுகு வானும்
பவமதி லென்றுமேவும் பசுவெனப் படுகின் றானும்.

### இதன் பொருள்.

இது சிவன் அன்றேயன்று —இந்தப்பொருள் பரமசிவன் அல்லவென்று
சிறிது ஒன்றை —சிறிதாயினும் ஒருபொருளை
சிந்தை செய்யுமவன் —குறிக்கின்றவன்
அறிவுடையோர் தம்பால் —ஞானவான்களிடத்தில்
அதமனென்றறியப்பட்டான் —இழிந்தவனென்று அறியப்பட்டவன்
உவமையொன்றில்லா வீசன்றனை—தனக்குவமையாக ஒன்றுமில்லாத ஈசனை
இகழ்ந்தொழுகுவானும் —நிந்தித்து நடப்பவனும்
பவமதில் என்றும் மேவும் —ஜனனத்தில் எக்காலத்தும் பொருந்தும்
பசுவெனப்படுகின்றானும் —சீவனெனப் படுகின்றவனும் அவனே. (86)

### வேறு.

எல்லாமுஞ் சிவரூப மாகித் தோன்று
மியாவனுக்குத் தன்னியல்பா லவனேமிக்க
சொல்லாலு மளப்பரியா னவன்ற னிச்சை
சுருதியினாற் றுணிந்துரைத்த சரிதை தானும்
பல்லோரு மவனையருச் சனைசெய் தேத்தப்
பரரூபந் தனக்கேநற் பூசையாகும்
நில்லாத வவிச்சையினை நீங்கி யுள்ள
நிற்குணனு மிவனாகும் நினையுங் காலே.

### இதன் பொருள்.

இயாவனுக்குத் தன்னியல்பால்—எவனுக்குத் தனதியல்பால்
எல்லாமும் —சகலமும்
சிவசொரூபமாகித் தோன்றும்—சிவரூபமாகி விளங்குகின்றதோ
அவனே —அவனே
மிக்க சொல்லாலும் —மிகுந்த வசனத்தினாலும்
அளப்பரியான் —அளத்தற்கரியவன்
அவன்றனிச்சை —அவனுடைய விச்சையே
சுருதியினால் துணிந்துரைத்த —வேதத்தால் நிச்சயமாய்ச்சொன்ன
சரிதை தானும் —நடத்தையும்
பல்லோரும் அவனை —பலரும் அவனை
அருச்சனை செய்தேத்த —பூசித்துத் துதிக்க (அப்பூசை)
பரரூபந்தனக்கே —பிரம்ம சொரூபத்துக்கே
நற்பூசையாகும் —நல்லபூசனை செய்ததாகும்

| | |
|---|---|
| நில்லாத அவிச்சையினை | —நிலையில்லாத அவித்தையை |
| நீங்கியுள்ள நிற்குணனும் | —நீங்கியிருக்கின்ற குணாகிதனும் |
| நினையுங்கால் இவனாகும் | —கருதுங்கால் இவனேயாகும். |

அவதாரிகை.

ஞானிக்குச் சருவான்ம ஞானமே சிவார்ச்சனையென்று கூறுகின்றார்.

வேறு.

எப்பொருள் களுந்தா னாகி யிலங்கிடு மறிவா மீச
னப்படி விளங்குகின்ற தறிதலே யவன்ற னக்கு
மெய்ப்படு பூசை வேறோர் செயலினா லன்று மெய்யே
யிப்படி ஞானந் தன்னா லிறைஞ்சிடப் படுவா னீசன்.

இதன் பொருள்.

| | |
|---|---|
| எப்பொருள்களும் | —எந்தவஸ்துக்களும் |
| தானாகி யிலங்கிடும் | —தானாகவே விளங்காநின்ற |
| அறிவாமீசன் | —அறிவாகிய ஈசன் |
| அப்படி விளங்குகின்றது | —அவ்வண்ணம் விளங்குகின்றதன்மையை |
| அறிதலே | —அறிவதுவே |
| அவன்றனக்கு | —அவ்வீசனுக்கு |
| மெய்ப்படுபூசை | —மெய்ம்மையான பூசனையாம் |
| மெய்யே | —மெய்யாகவே |
| வேறோர் செயலினாலன்று | —மற்றொரு செயலினாலல்ல |
| இப்படி ஞானந்தன்னால் | —இவ்விதம் ஞானத்தினால் |
| ஈசன் இறைஞ்சிடப்படுவான் | —பரமசிவன் பூசிக்கப்படுவான். |

அவதாரிகை.

மற்றொரு நெறியால் அனுசந்தானங் கூறுகின்றார்.

வேறு.

சகரூப மாய வதில்வே றிலாது விளையாடு தெய்வ மதுதான்
சுகரூப மாய தனையே பகுத்து விளையாடி யுண்ட லதனை
யகமாயை யின்றி யறிகின்ற போத முளதாகி நிற்கு மதுவே
தகநாளு மோது மறிவாவ தென்று சதுரான னன்சொ றருமால்.

இதன் பொருள்.

| | |
|---|---|
| சகரூபமாயவதில் வேறிலாது | —செகதாகாரமாகிய அதில்நின்றும் வேறில்லாமல் |
| விளையாடு தெய்வம் | —விளையாடுகின்ற (ஆன்ம) தேவதையானது |

அதுதான் —அந்தப் பிரம்மந்தான்
சுகரூபமாய —ஆனந்தரூபமாகிய
தனையேபகுத்து விளையாடி —தன்னைத்தானேபிரித்து விளையாடி
உண்டலதனை —புசித்தலும் சகதாகாரமான அதனையேயாகும்
அகமாயையின்றி அறிகின்ற —மனத்தின்கண் மாயையில்லாமல் உணருகின்ற
போதமுளதாகி நிற்குமதுவே —ஞானமிருக்கின்றதாகி நிற்கின்ற அதுவே
தகநாளுமோதும் —பொருந்தும்படி எக்காலத்துங் கூறப்பட்ட
அறிவாவதென்று —ஞானமேயாகின்றதென்று
சதுரானனன் சொல்தரும் —நான்முகத்தேவன் சொல்லுகின்றான்.

**கருத்து**—இந்த ஆன்மதேவதையானது தன்னை ஆசிரயத்திருக்கும் மாயாவசத்தால் லீலையினால் புசிக்கத்தக்கதாயும் புசிக்கின்றதாயும் போகத்தைக் கொடுப்பதாயுமுள்ள சகரூபமாய்ப்பவித்து அங்ஙனமே அத்தேவதை லீலையினாற் புசிக்கப்படுவதாகவிருக்கின்ற தன்னையே புசிக்கின்றதுமான தானே புசிக்கின்றதென்க.

வேறு.

ஆன தாகாத் தெய்வமதே யடையும் விடைய மிந்தியமாய்த்
தானு மாகித் தனைத்தன்னாற் றானே நுகருந் தன்மையது
ஊன மாகு ஞாதாதி யொழிந்தே யுள்ள வறிவதனாற்
றானே யாகக் கண்டிடுதல் சத்தா யுள்ள பூசையதே.

இதன் பொருள்.

ஆனதாகாத் தெய்வமதே — உற்பத்தியாகாத (ஆன்ம) தேவதையே
அடையும் விடயம் —அடையப்பட்ட விடயமாயும்
இந்தியமாய்த் தானும் ஆகி —இந்திரியமாயும் தானே ஆகி
தனை —(விஷயமாகிய)தன்னை
தன்னாற்றானே —பொறிவடிவாகிய தன்னாலேயே
நுகருந்தன்மையது —புசிக்கின்ற தன்மையையுடையதாகும்
ஊனமாகும் —ஈனமாகும்
ஞாதாதி யொழிந்தேயுள்ள —ஞாதுருஞேயம் ஞானமில்லாததாயுள்ள
அறிவதனால் —சுயம் பிரஞ்ஞையினால்
தானேயாகக் கண்டிடுதல் —தன் சொரூபமாய்ப்பார்த்தல்
சத்தாயுள்ள பூசையதே —உண்மையான பூசையாகும்.

**கருத்து**—விவகார சமயத்தில் இந்திரியங்களால் அபிவியத்தியுடைய பானத்தால் சத்தபரிச ரூபரசகந்த முதலிய விஷயாகாரமாகியும் அதனதிஷ்டானமாகியுமுள்ள பானத்தைக் கிரீடையாற் புசிக்கின்றதென யாதொரு வனுசந்தானமோ, அஃதே தன்சொரூபமாகப் பார்த்திடும் அத்துவித விஞ்ஞானமென்க. (90)

### அவதாரிகை.

இவ்வத்துவித ஞானமே துக்கநிவிர்த்திக்கேது வென்கின்றார்.

### வேறு.

பிறப்பிறப் பாய துக்கம் பிறித்திட லுளதா யென்றும்
மிறப்பிலா வீசன் செய்யு மருளினு லிசைவ தாகி
மறப்புடைப் பாவ கத்தின் வரும்பொரு ளன்றாய் மேலா
யிறப்பதாம் பேத மோர்கா லியைந்திடாப் பொருளி தன்றே.

### இதன் பொருள்.

| | |
|---|---|
| பிறப்பிறப்பாயதுக்கம் | —சனனமரணமாகிய துக்கத்தை |
| பிறித்திடலுளதாய் | —நீக்குந்தன்மையுளதாய் |
| என்றும் இறப்பிலா | —எக்காலத்தும் நாசமில்லாத |
| ஈசன் செய்யும் அருளினுல் | —சிவபிரான்செய்யும் பிரசாதத்தினுல் |
| இசைவதாகி | —பொருந்துவதாகி |
| மறப்புடை | —மறதியையுடைய |
| பாவகத்தின்வரும் | —பாவனையிலெய்தும் |
| பொருளன்றாய் | —பொருளன்றாகி |
| மேலாய் | —உயர்வாகி |
| இறப்பதாம் பேதம் | —அழிவதாகிய பேதம் |
| ஓர்கால் இயைந்திடா | —ஒருகாலத்தும் பொருந்தாத |
| பொருளிது | —பொருளாயுள்ளது இதுவாகும். |

கருத்து—பாவனையாலுண்டாகிய ஞானம் இறந்த புத்திரனது சாட்சாத்காரம்போற் பிரமாணமில்லாததனுல் பாவனையில்லாத ஞானமே புருஷார்த்த சாதனமென ஈண்டு பெற்றாம். இதுபோலவே ஸ்ரீ ஆசாரியரும் பாவனையாலுண்டாகிய பலன்யாது கன்மத்தின் பலன்யாது அவை ஸ்திரமுடையனவல்ல எவ்வாறெனில் வேசிமாதர் சங்கம் போலாமென அருளிச்செய்ததூஉங் காண்க. (91)

### அவதாரிகை.

ஞானிகளுக்கு விவகார சமயத்தினும் பிரமான்ம சுபாவம் விளங்குகின்றதாயின் பிறர்களுக்கும் அஃதேன் விளங்கவில்லையெனற் கேதுகூறுகின்றார்.

ஆதித்த னொளியைக் கூகை யறிந்துகண் டிடாமை போலும்
நீதிக்க ணறியு நாட்ட மவிச்சையான் மறைந்து ளோர்க்கு
மேதக்கட் கிசையா தெங்கு மியாவையு மாகி நின்ற
சோதிக்கண் ணொளியு மாங்கே தோன்றிடா தாகு மன்றே,

### இதன் பொருள்.

ஆதித்தனொளியைக் கூகை —சூரியனது பிரகாசத்தைக் கோட்டான்
அறிந்து கண்டிடாமைபோலும்—அறிந்து காணாததன்மையைப்போலும்
நீதிக்கண் —நீதியினிடத்தில்
அறியும் நாட்டம் —உணரும் நேத்திரம்
அவிச்சையால் —அறியாமையால்
மறைந்துளோர்க்கும் —மறைந்தவர்களுக்கும்
ஏதக்கட்கிசையாது—அவர்களது குற்றமுடைய கண்ணுக்குப் பிரகாசிக்காமல்
எங்கும் இயாவையுமாகிநின்ற —எவ்விடத்திலும் எல்லாமாகிநின்ற
சோதிக்கண்ணொளியும் ஆங்கே } சோதியாகித் திருக்காகிய பிரமத்தினுடைய பிரகாசமும் அவ்வாறே
தோன்றிடாதாகும் —தோன்றாததாகவேபவிக்கும்.

**கருத்து**—சூரியப் பிரகாசமானது மானிடர் முதலோர்களுக்குப் பிரகாசிப்பதாயினும் கூகைக்குப் பிரகாசிக்காததுபோல் விவகாரத்தினும் முமூட்சுத்துவம் பொருந்திய ஆன்ம ஞானிகளுக்குச் சுலபமாகிய அத்துவித சொரூபமானது அஞ்ஞர்களான மானிடர்களுக்குப் பிரகாசிக்கவில்லையென்பதாம். (92)

### அவதாரிகை.

ஞானிக்குமாத்திரம் அஃதெங்ஙனம் விளங்கத்தகுமெனக் கூறுகின்றார்.

ஈசன்ற னருளி னாலு மிசைந்தவா தரத்தி னாலு
மாசது தீர்த லாலு மருள்பவன் பார்வை யாலும்
பேசிடு பாவ கன்ம புண்ணிய மிரண்டு மொத்தாற்
பாசமாம் படலம் போக்கும் பரம்பொரு டிகழு மன்றே.

### இதன் பொருள்.

ஈசன்றன் அருளினாலும் —உருத்திரமூர்த்தியினது பிரசாதத்தினாலும்
இசைந்த ஆதரத்தினாலும் —பொருந்திய பக்தியினாலும்
ஆசது தீர்தலாலும் —குற்றமானது நீங்குதலாலும்
அருள்பவன் பார்வையாலும் —தேசிகனது கிருபாதிருஷ்டியாலும்
பேசிடும் —சொல்லுகின்ற
பாவகன்ம புண்ணியம் —பாவபுண்ணியமென்னும் கன்மங்கள்
இரண்டும் ஒத்தால் —இரண்டும் சமானமாயின்
பாசமாம் படலம் போக்கும் —பாசமாகிய கூட்டங்களை நீக்குகின்ற
பரம்பொருள் திகழும் —பிரம ஞானமானது பிரகாசிக்கும்.

பதசாரம்—ஈச்வரப் பிரசாத முதலிய காரணங்களால் தருமா தரும ரூபங்க ளாகிய கருமங்கள் தங்களது பலத்தோடும் புசிக்கப்பட்டுச் சமமாகுங்கால் பக்குவ சித்தமுடையவனுக்குப் பாசபந்த கூட்டங்களை நீக்குகின்ற நிராவரணமான அத்துவித வஸ்து பிரகாசிக்கின்றதென்பார், 'பாவகன்ம புண்ணியமிரண்டு மொத்தாற் பாசமாம்படலம் போக்கும் பரம்பொருடிகழுமன்றே' என்றார். (93

அவதாரிகை.

இந்தப்பொருளின் நிச்சயத்தில் சுருதியை உதாகரித்துக் கூறுகின்றார்.

சுத்தமா யென்று முள்ள சுருதிதா னருளி னாலே
யித்தன்மைத் தாகு ஞான மென்றுகொண்டிசையும் வண்ணம்
பத்தரா யுள்ளார்க் கேயப் பலபடி யாகப் பல்கா
லுய்த்துநோய் கழியும் வண்ண முள்ளவா றுரைத்த தன்றே.

இதன் பொருள்.

| | |
|---|---|
| சுத்தமாய் என்றுமுள்ள | —பரிசுத்தமாய் எக்காலத்திலுமுள்ள |
| சுருதிதான் அருளினாலே | —வேதமானது கருணையினாலே |
| இத்தன்மைத்தாகு ஞான மென்றுகொண்டு | ஞானமானது இத்தன்மையுடைய தாகுமென் றுட்கொண்டு |
| இசையும்வண்ணம் | —பொருந்துந்தன்மை |
| பத்தராயுள்ளார்க்கேய | —பக்திமான்களாயுள்ளவர்களுக்கியைந்திட |
| பலபடியாக | —பலவிதமாக |
| பல்கால் உய்த்து | —பலதரமும் உணரும்படிசெலுத்தி |
| நோய்கழியும்வண்ணம் | —ஜெனனமாகிய துன்பம் நீங்கும்படி |
| உள்ளவாறு உரைத்தது | —உள்ளபடி சொல்லியது. |

கருத்து—பிரமான்ம ஏகத்துவ லட்சணமுடைய வாக்கியப்பொருள் அடிக்கடி உபந்நியாசம்செய்யப்படினும் இவ்வாக்கியப்பொருளையே திரும்பவும் அன்னை போல் இதத்தைச் செய்கின்றதாகிய குற்றமில்லாத சாந்தோக்கிய சுருதியானது சமுசாரலட்சணமான மகத்தான ஆயாசத்தை அடைந்து துன்புறுகின்ற மாணி டர்களுக்கு அநேகவிதங்களால் வருஞ்சங்கைகளை நிராகரித்து அடிக்கடி உபதேசி க்கின்றது. அஃதெங்ஙனமெனில் சுழுத்தி உத்கிராந்தி முதலிய அவஸ்தைகளில் எந்தரூபத்தைச் சீவன் அடைகின்றானோ அச்சொரூபமான பிரம்மம் நீ ஆகின்று யென்று பிதாவினாலுபதேசிக்கப்பட்ட சுவேதகேது சங்கிக்கின்றான். சுழுத்தி யில் சத்தை அடைந்தவர்களான பிரஜைகள் அந்தப் பிரமான்மத்தன்மையை ஏன் அறியவில்லையென வண்டுகளால் மதுவாகச்சேர்க்கப்பட்ட நானாவிருட்சப் புஷ் பரச சமுதாயம்போல் பிரித்திடக்கூடாமையால் சுழுத்தி முதலியவற்றில் அடை யப்பட்டிருந்திடினும் பிரம்மம் அறியப்படவில்லையென்று அச்சங்கையை நிரா கரித்து, முற்கூறிய பொருளையே திரும்பவும் உபதேசித்திடச் சுழுத்தி முதலிய

வற்றில் கரணங்கள் இல்லாமையினால் அறியப்படவில்லை. எழுந்தபின்பு பிரம்மத்தினின்றும் நான் எழுந்திருந்தேனென்று என் அறிகின்றாரில்லையென்று சங்கிக்க, மேகங்களால் சமுத்திரத்தினின்றும் உண்டு பெய்ய வருவனவாயும் திரும்பவும் சமுத்திரத்தை அடைவனவாயுமுள்ள நதிகள் சுவையின் வேறுபாட்டால் சமுத்திரத்தினின்றும் வந்தனவென்றும் சமுத்திரத்தின் சலமென்றும் அறியப்படாதனபோல் பிரம்மத்தினின்றும் எழுந்திருந்த சமுசாரிகளுக்குப் பிரம்ம விலட்சணத்தன்மை இருப்பதனால் நாம் பிரம்மரூபமாயிருந்து எழுந்திருந்தோமென்று ஞானம் வரவில்லையென்று அதனைப்பரிகரித்து முற்கூறிய வாக்கியமே உபதேசிக்கப்பட்டது. சுழுத்தியில் கரணங்கள் இல்லாதிருக்குமளவில் சமுத்திரத்தின் அலைமுதலியனபோல் சீவன் அழிவானென்று சங்கிக்க மரமானது பரசு முதலியவைகளால் சேதிக்கப்படினும் இரதம் பெருகுவதுபற்றி ஜீவனோடுங் கூடியதெனக் கொள்வதுபோல் சுழுத்திஅடைந்த தேகத்திலும் இரதங்காண்பதனால் ஜீவன் அழியவில்லையென்று அதைப்பரிகரித்து முற்கூறிய பொருளே ஸ்தாபிக்கப்பட நுட்பமாய பிரம்மத்தினின்றும் தூலசகத்தினுற்பத்தி எப்படிக்கூடுமெனச் சூக்குமமான ஆலம்வித்தினின்றும் அம்மரத்தின் உற்பத்திபோல் கூடுமென்று அதனை நிராகரித்து உபதேசிக்க, சகத்தின் மூலகாரணமான பிரம்மம் எதனால் காணப்படவில்லையென, நீரிலிருக்கும் உப்பின்கனம் பார்வை பரிசம் இவைகளால் அறியப்படாவிடினும் ரசனையால் உப்பினிருக்கை நிச்சயப்படுவதுபோல் கண் முதலியவற்றிற்குத் திரிசியப்படாவிடினும் காரிய லிங்கத்தினால் இருக்கின்றதென்றுகூற, பிரம்ம சாட்சாத்காரத்தில் எது உபாயமென்று சங்கித்துக் காந்தாரதேசத்தினின்றும் காட்டில் திருடர்களால் கண்ணைக் கட்டிவிடப்பட்ட புருஷனுக்கு நேத்திரபந்தத்தை நீக்கிக் காந்தாரதேசத்தை அடையச்செய்யும் உபதேசம்போல ஆசாரியார் செய்யப்பட்ட உபதேசத்தால் பிரம்ம சாட்சாத்காரம் அவித்தியா நிவர்த்தி இரண்டும் உண்டாகுமென்று கூறப்பட்டது. அந்த வித்துவான் எவ்விதமாய்ப் பிரம்மத்தை அடைகின்றானெனில் மனமுதலியன லயித்திடுங்கால் ஞானதீபத்தால் பிரகாசிக்கப்பட்ட பிரம்மத்தையே அடைகின்றானன்றி அற்சிராதி மார்க்கங்களை அபேட்சிக்கவில்லை. அந்த வித்துவான் வேறொரு தேகத்தையும் கிரகிக்கின்றானில்லை. இறப்பவனும் மோட்சமடைபவனும் பிரம்மத்தை அடைபவர்களென்னில் வித்துவானும் அவித்துவானைப்போல என் சனிக்கமாட்டானென்றும் சங்கிக்க, திருடினவன் திருடாதவன் இருவர்களும் மழுவேந்திச் சத்தியம்செய்யுங்கால் இருவர்கையினும் மழுவின் சம்பந்தம் சமானமாயிருந்திடினும் திருடாதவன் தகிக்கப்படான் திருடினவன் தகிக்கப்படுகின்றான் இவ்வாறு வித்துவானுக்கும் அவித்துவானுக்கும் அந்தியகாலம் சமானமாக இருந்திடினும் சிரவணமனன நிதித்தியாசத்துடன் சத்தியப் பிரம்மத்தில் அபிப்பிராய முடையவன் திரும்பவும் தேகத்தை அடையமாட்டான். பொய்யான தேக முதலியவற்றில் அகம்புத்தியுடையவன் திரும்பவும் சரீரத்தை அடைகின்றானென இந்தப்பிரகாரம் ஒன்பது பரியாயங்களால் அச்சங்கையை நிராகரித்து அது நீயாகின்றாயென்ற வாக்கியத்தால் முற்கூறிய பிரமான்ம ஐக்கியமானது சுருதியினால் நிலைசெய்யப்பட்டதெனவாம். (94)

### அவதாரிகை.

அப்பியாசமென்பது தாற்பரியலிங்கமாதலால் பலதரம் அப்பியாசிக்கப்பட்ட பிரமான்ம ஐக்கிய லட்சணமுடைய பொருளே சுருதியின் தாற்பரியத்தால் அடையத்தக்க பொருளேயன்றி வேறில்லையெனக் கூறுகின்றார்.

சிவனே யுள்ளான் பிறிதில்லை யென்று திரமா யறிவதுவே
பவமே யொழிக்கும் பரமார்த்தம் பகருநெறிதா னதுவாகும்
அவமே யிதனை யொழிந்துளதா மவைதா னிதனை யடைதற்குத்
தவமே முதலாஞ் சரிதைகளைச் சாற்றுகின்ற தன்மையவே.

### இதன் பொருள்.

| | |
|---|---|
| சிவனேயுள்ளான் | —(எப்பொழுதும்) சிவனொருவனே உள்ளவன் |
| பிறிதில்லையென்று | —வேறில்லையென்று |
| திரமாய் அறிவதுவே | —உறுதியாய் அறிகின்றதுவே |
| பவமேயொழிக்கும் | —ஜனனமரணத்தைக் கெடுக்கின்ற |
| பரமார்த்தம் | —பாரமார்த்திகமாகிய சித்தாந்தமாகும் |
| பகருநெறிதான் அதுவாகும் | —சொல்லுமார்க்கமும் அதுவேயாகும் |
| இதனையொழிந்துள தாமவைதான் | இதனை ஒழிந்துள்ள மற்றநூல்களானவைகள் |
| அவமே | —வீணேயாகும் (ஆனால்) |
| இதனையடைதற்கு | —இப்பரம்பொருளையடைவதற்கு |
| தவமே முதலாஞ் சரிதைகளை | —தவமுதலாகிய சரிதைகளை |
| சாற்றுகின்ற தன்மைய | —சொல்லுகின்ற தன்மையுடையனவாம். (95) |

### அவதாரிகை.

இதுவே வேதப்பொருளென்று சபதங் கூறுகின்றார்.

### வேறு.

ஆதர வுடையீர் கேண்மி னருமறைப் பொருளீ தென்றே
யோதலா னுவமை யில்லாப் பொருளிதி லைய முண்டேற்
றீதற மழுவைக் காய்ச்சிச் செங்கையி லிடுவே னென்று
நாதனா யுலக மெல்லாம் படைக்குநான் முகனு யுள்ளோன்.

### இதன் பொருள்.

| | |
|---|---|
| நாதனாய் உலகமெல்லாம் | —நாயகனாகி உலகமனைத்தையும் |
| படைக்கும் | —சிருஷ்டிக்கும் |
| நான்முகனுயுள்ளோன் | —சதுர்முகனாயிருக்கின்ற பிரம்மதேவன் |

ஆதரவுடையீர் கேண்மின் —அன்புடைய தேவர்களே கேளுங்கள்
அருமறைப்பொருள் ஈதென்றே—அரியவேதார்த்தம் இந்தப் பொருளென்றே
ஓதலால் —(நானிப்பொழுது) கூறுதலினால்
உவமையில்லாப் பொருளிதில்—உவமையற்ற பொருளாகிய இதில்
ஐயமுண்டேல் —(இன்னமுங்களுக்குச்) சந்தேகமிருக்குமாகில்
தீதறமழுவைக் காய்ச்சி —குற்றமறமழுவைக்(அக்கினியிற்)காயச்செய்து
செங்கையில் —எனது செவ்வியகையில்
இடுவேனென்றான் —தாங்குவேனென்று சொன்னான். (96)

பத்தரா யுள்ளீர் கேண்மின் பகர்ந்தவே தத்தி னர்த்த
மித்தகைத் தாகும் வேறொன் றில்லையா மிதனி லுங்கள்
சித்தநம் புதலுண் டாகச் செப்பினோ மாணை மூன்றோ
டத்தனார் பாதந் தொட்டே யென்றன னலரின் மேலோன்.

இதன் பொருள்.

அலரின் மேலோன் —மலரின்மேல் வீற்றிருக்கின்ற பிரம்மதேவன்
பத்தராயுள்ளீர் கேண்மின் —சிவபெருமானுக்கு அன்புடையவராயிருக்கின்ற தேவர்களே கேளுங்கள்
பகர்ந்த வேதத்தினர்த்தம் —இப்போது கூறிய வேதத்தின் தாற்பரியம்
இத்தகைத்தாகும் —இத்தகுதியை யுடையதேயாகும்
வேறொன்றில்லையாம் —வேறொரு பொருளின்றாம்
இதனில் —இந்தத் தாற்பரியத்தில்
உங்கள் சித்தம் —உங்களுடைய சித்தத்திற்கு
நம்புதலுண்டாக —நம்பிக்கை உண்டாகும்படி
அத்தனார் பாதந்தொட்டே —சிவபெருமானது திருவடிகளைப்பற்றிக்கொண்டே
ஆணை மூன்றோடு —மூன்றுதரஞ் சத்தியத்தோடு
செப்பினோம் என்றனன் —சொன்னோம் என்று கூறினான். (97)

அவதாரிகை.

நான்மாத்திரம் இந்தப்பிரகாரம் சொல்லுகின்றேன் என்பதில்லை. நான் கூறிய இந்தப்பொருளில் பரமசிவமும் இவ்விடத்தில் வந்து உங்களுக்கு நான் கூறிய இந்தப் பொருளில் விசுவாசத்தை உண்டுபண்ணுவாரெனக் கூறுகின்றார்.

அன்பரா யுள்ளீர் கேண்மி னறிவித்த பொருண் மெய்யன்றே
லென்சிர மிற்று வீழ்வ தென்றன னிதுவு மன்றி
யின்பமே யளிக்கு மீச னிவ்விடந் தன்னில் வந்து
தன்பெருங் கருணை யாலுந் தளர்வறப் பண்ணு கின்றான்.

### இதன் பொருள்.

அன்பராயுள்ளீர் கேண்மின் —பத்திமான்களாகிய சுரோத்நமர்களே கேளுங்கள்
அறிவித்தபொருள் மெய்யன்றேல் —(நானிப்பொழுதுங்கட்கு) அறிவித்த உண்மைப் பொருளானது உண்மையில்லாவிடில்
என்சிரம் —எனது தலை
இற்றுவீழ்வதென்றன்ன் —அற்றுவீழக்கடவதென்று சொன்னான்
இதுவுமன்றி —இதுவுமல்லாமல்
இன்பமேயளிக்கும் —(சகலவுயிர்களுக்கும்) இன்பத்தையேகொடுக்கும்
ஈச னிவ்விடந்தன்னில் வந்து—சிவபெருமானர் இந்தவிடத்தில் எழுந்தருளி
தன்பெருங் கருணையாலும் —தனது அளவற்ற திருவருளினாலும்
தளர்வற —சந்தேகமாகிய தளர்ச்சிநீங்கும்படி
பண்ணுகின்றான் —செய்தருள்கின்றார். (98)

இவ்வண்ண முரைத்துப் பின்னை யாவர்க்கு மன்பா யுள்ளோன்
செய்வண மொழிந்தே யீசன் றிருவடி சிந்தை செய்து
மெய்வண மிழந்து தாழ்ந்து பணிந்துமெய்ப் பத்தி யாலே
யவ்வண மாகித் தன்னை யழிந்தன னயனு மையன்.

### இதன் பொருள்.

இவ்வணமுரைத்து —இந்தப் பிரகாரமாகச்சொல்லி
பின்னையாவர்க்கும் —பின்பு சகலருக்கும்
அன்பாயுள்ளோன் —பிரியமாயிருக்கின்றவன்
செய்வணமொழிந்து —செய்யும்வண்ணம் நீங்கி
ஈசன்றிருவடி சிந்தைசெய்து —சிவபெருமானுடைய திருவடிகளைச் சிந்தித்து
மெய்வணமிழந்து —உடலின் தன்மைமறந்து
தாழ்ந்துபணிந்து —தாழ்ந்துவணங்கி
மெய்ப் பத்தியாலே —உண்மையாகிய பத்தியினால்
அவ்வணமாகி —அவ்வாறேயாகி
அயனுமையன் —பிரம்மதேவனாகிய தேசிகன்
தன்னையழிந்தனன் —தன்னை மறந்தவனாயினான். (99)

அப்பொழு தளவி லாத வருளுரு வாய வீசன்
செப்பிடு மூவ ரேத்துந் திருவுரு வுடைய சோதி
பொப்பிலா மதியஞ் சூடி யுமையொரு கூற னாகி
யிப்படி வானோர் காணும் படியுள வியல்பின் வந்தான்.

இதன் பொருள்.

| | |
|---|---|
| அப்பொழுது அளவிலாத | —அந்தச்சமயத்தில் அளப்பதற்கரிதாகிய |
| அருளுருவாய ஈசன் | —கருணைவடிவாகிய மகாதேவரும் |
| செப்பிடும் | —கூறப்பட்ட |
| மூவரேத்தும் | —திரிமூர்த்திகளாலே வணங்கத்தக்க |
| திருவுருவுடைய சோதி | —திருவுருவுடைய ஜோதியானவரும் |
| ஒப்பிலா | —நிகரற்ற |
| மதியஞ்சூடி | —சந்திரனைத் தரித்தவருமாகிய (சிவபெருமானார்) |
| உமையொரு கூறனாகி | —ஒருபாகத்தில் பார்வதியையுடையவராகி |
| இப்படி வானோர் காணும்படி | —இவ்வாறு தேவர்கள் தரிசிக்கும்படி |
| உளவியல்பின் வந்தான் | —உள்ள சுபாவமாக ஆவிர்ப்பவித்தார். (100) |

நீடொளி மணிகள் சேர்த்தி நிமலமா யோங்கி யெங்கும்
பீடுடைத் தாம நாற்றிப் பிறங்கரி மிசைய தாக
வாடக மதனி னாலே யமரரா லமைக்கப் பட்ட
பீடம்வந் திட்ட தாங்கே யிருந்தனன் பெயரா தீசன்.

இதன் பொருள்.

| | |
|---|---|
| நீடொளி | —நீண்ட பிரகாசத்தையுடைய |
| மணிகள் சேர்த்தி | —இரத்தினங்களைப் பதித்து |
| நிமலமாயோங்கி யெங்கும் | —எவ்விடத்திலுங் களங்கமறப் பிரகாசிக்கின்ற |
| பீடுடைத் தாமநாற்றி | —பெருமை பொருந்திய மாலைகள் தூக்கி |
| பிறங்கரிமிசையதாக | —உயர்ந்த சிங்கத்தின்மேலாக |
| ஆடகமதனினாலே | —சுவர்ணத்தினாலே |
| அமரரால் அமைக்கப்பட்ட | —தேவர்களால் இயற்றப்பட்ட |
| பீடம் வந்திட்ட தாங்கே | —அவ்விடத்தில் ஆசனமானது வந்து சேர்ந்தது |
| ஈசன் | —பரசிவமூர்த்தியானவர் |
| பெயராது இருந்தனன் | —அகலாமல் இருந்தருளினார். (101) |

அளவிலா வொளிய தாய வரனெழுந் தருள லுன்னித்
துளபமா லுலக மியாவு மளிப்பவ னுவகை யோடுங்
களமதார் கறைசேர் நாதன் கழலடி நினைந்தப் போதே
யுளநெகிழ்ந் துருகி யொல்லே வந்தன னுணர்வின் மிக்கோன்.

இதன் பொருள்.

| | |
|---|---|
| அளவிலா ஒளியதாய | —எல்லையில்லாத பிரகாசமாகிய |
| அரனெழுந்தருளலுன்னி | —சிவபிரானெழுந்தருளுதலைக்கருதி |
| உலகமியாவும் அளிப்பவன் | —சகல வுலகங்களையும் காப்பவனும் |
| உணர்வின் மிக்கோன் | —அறிவின் மேம்பட்டவனுமாகிய |
| துளபமால் | —துளசிமாலையை யுடையமாயவன் |
| உவகையோடும் | —சந்தோஷத்தோடும் |
| களமதார்கறை சேர்நாதன் | —விடம்பொருந்திய கறுத்தகண்டத்தையுடைய நாயகனது |
| கழலடி | —(வீரமணியைப்பூண்ட) பாதத்தாமரையை |
| நினைந்தபோதே | —நினைத்த அக்காலத்தே |
| உளநெகிழ்ந்துருகி | —மனநெகிழ்ந்துருகி |
| ஒல்லைவந்தனன் | —விரைவில் வந்தான். (102) |

நித்தரா யுள்ள வானோர் நிறைமலர் மாரி மேன்மே
லுய்த்தனர் மிக்க வன்பா லுரைத்தனர் துதிக ளெல்லாம்
பத்தர்வே தங்கள் சொன்ன படியிலே பணிந்து வாழ்த்தி
யித்தன்மைத் தாய வேறுஞ் செய்தன ரிறைவன் காண.

இதன் பொருள்.

| | |
|---|---|
| நித்தராயுள்ள வானோர் | —அழிவற்றவர்களாயிருக்கின்ற தேவர்கள் |
| நிறைமலர்மாரி | —நிறைந்த புட்பவருஷங்களை |
| மேன்மேல் உய்த்தனர் | —மேன்மேலும் பொழிந்தார்கள் |
| துதிகளெல்லாம் | —தோத்திரங்களெல்லாம் |
| மிக்கவன்பால் உரைத்தனர் | —மிகுந்த அன்பினால் சொன்னார்கள் |
| பத்தர் | —அடியவர்களாகிய இவர்கள் |
| வேதங்கள் சொன்னபடியிலே | —சுருதிகள் கூறியபடியே |
| பணிந்து வாழ்த்தி | —வணங்கித்துதித்து |
| இத்தன்மைத்தாய வேறும் | —இந்தத் தன்மையுடையதாகிய பிறவும் |
| இறைவன்காண | —அதிபராகிய மகாதேவர் காணும்படி |
| செய்தனர் | —செய்தார்கள். (103) |

கடுகியு முயர்ந்துந் தாழ்ந்துங் காளங்கள் பலமுன் னூதப்
படகமோ டடக்கை சல்லி மத்தளம் பலவா சிப்பத்
துடிகுழல் வீணை தாளம் வலம்புரி தொடர்ந்தே யார்ப்பக்
குடமுழா முரசு பேரி குசலரா யினர்கொண் டார்த்தார்.

இதன் பொருள்.

கடுகியும் உயர்ந்தும் தாழ்ந்தும்—விரைவாயும் உச்சமாயும் மிருதுவாயும்
காளங்கள் பலமுன்னூத —திருச்சின்னங்களனேகந் திருமுன்பு ஊத
படகமோடு இடக்கை சல்லி —மேளத்தோடு தம்பட்டஞ் சல்லரி
மத்தளம் பலவாசிப்ப —தண்ணுமை அநேகங்கள் வாசிக்க
துடி குழல் —உடுக்கும் புல்லாங்குழலும்
வீணை தாளம் —வீணையும் கைத்தாளங்களும்
வலம்புரி —வலம்புரிச் சங்கமும்
தொடர்ந்தேயார்ப்ப —ஒன்றோடொன்று கலந்துமுழங்க
குடமுழா முரசு பேரி —குடமுழாவும் முரசும் பேரிகையும்
குசலராயினர் —(அததில்) மிகுந்த வல்லமையுடையவர்கள்
கொண்டார்த்தார் —கொண்டு முழக்கினார்கள். (104)

வானவர் பாட வாட மங்கையர் மறைகள் வீச
வானவா கவிக ளானா ராசிதோத் திரங்கள் சொல்ல
வீனமி லீசன் பாத பங்கய நினைந்து நோக்கு
மோனமா யிருந்தார் வேறு முனிகளோர் செயல தின்றி.

இதன் பொருள்.

வானவர் பாட —தேவர்கள் பாடவும்
மங்கையர் ஆட —தேவதாசிகள் நடனஞ்செய்யவும்
மறைகள் வீச —கவரிகள் வீசவும்
ஆனவா கவிகளானார் —தங்களாலானவாறு கவிகளானவர்கள்
ஆசி தோத்திரங்கள் சொல்ல —ஆசீர்வாதங்களும் துதிகளும் சொல்லவும்
ஈனமில் ஈசன் —அழிவில்லாத உமைபாகரது
பாதபங்கய நினைந்துநோக்கும்—திருவடித்தாமரையை நினைந்துபார்க்கின்ற
முனிகள் —முனிவர்கள்
ஓர் செயலதின்றி —யாதொரு பிரவிர்த்தியுமில்லாமல்
வேறு —தனிமையாக
மோனமாயிருந்தார் —மௌனமாயிருந்தார்கள். (105)

அன்பிலம் முனிகளெல்லா மதிசய மாகி நின்றார்
பின்புளோர் தலையா லாடும் பெருமையை யுடைய ராசா
ரென்புநைந் துருகி நெக்கங் கியாவருந் தாமே தம்மில்
வன்பெருங் கைக ளாலுங் குத்தினர் வானோ ரெல்லாம்.

இதன் பொருள்.

அன்பில் அம்முனிகளெல்லாம்—அன்பினால் அந்த முனிவர்களெல்லாரும்
அதிசயமாகி நின்றார் —அதிசயமடைந்து நின்றார்கள்
பின்புளோர் —பின்பு நிற்கின்றவர்கள்
தலையாலாடும் பெருமையை —தலையால் நிருத்தஞ்செய்யும்பெருமையை
உடையரானார் —உடையவரானார்கள்
என்புநைந்துருகிநெக்கு —எலும்புநைந்துருகிக் குழைந்து
அங்கு யாவரும் —அவ்விடத்தில் முனிவர்களெல்லாரும்
வானோரெல்லாம் —சகல தேவர்களும்
தாமே தம்மில் —தாங்களே தங்களுக்குள்ளாக
வன்பெருங்கைகளாலும் —வலிமையுடைய பெரியகைகளாலும்
குத்தினர் —குத்திக்கொண்டார்கள். (106)

தலையினான் முட்டி மேலுந் தாள்களா லுதைத்துக் கைகள்
பலவினா லடித்துத் தண்டிற் கயிறது பூட்டி வானோர்
சிலவர் தாஞ் சிலவர் தம்மைச் சிவிகையிற் பொறுத்தார் வேறு
குலவியோர் குதிரை தன்னிற் கொடுசென்று சிலர்மேல் வைத்தார்.

இதன் பொருள்.

தலையினான் முட்டி —தலையினாலே (ஒருவருக்கொருவர்) முட்டியும்
மேலும் —பின்னும்
தாள்களாலுதைத்து —கால்களினாலே உதைத்தும்
கைகள் பலவினாலடித்து —பல கைகளாலடித்தும்
தண்டிற் கயிறதுபூட்டி —தடிகளிற் கயிறுகளைப்பூட்டி
வானோர் சிலவர்தாம் —சில தேவர்கள்
சிலவர் தம்மை —சிலர்களை
சிவிகையில் பொறுத்தார் —பல்லக்குகளைப்போல் தாங்கினார்கள்
வேறுகுலவியோர் குதிரை தன்னிற் கொடுசென்று —வேறாகச்(சிலர்களைக்)கொண்டாடி ஓர் குதிரையைப்போலத் தங்கண் மேல்வைத்துக்கொண்டு சென்று
சிலர்மேல்வைத்தார் —சிலதேவர்கள் மேல் வைத்தார்கள். (107)

வேறு.

ஓடினார் சிலவ ரொக்கநின் றவர்க ளொருவரோ டொருவர் தழுவினார்
கூடியொண் புடவை மேலெறிந்து சிலர் கொண்டு கொண்டுவிளை யாடினா
ரோடிவந்து பிரி யத்தினோ டொருவ ரொருவ ருச்சியை முகந்தன
ராடினார்கள் சில ரன்பினா லறிவ தொன்றி லாதபடி யாகவே.

இதன் பொருள்.

| | |
|---|---|
| சிலர் ஓடினார்கள் | —சிலர்கள் ஓடினார்கள் |
| ஒக்கநின்றவர்கள் | —கூடநின்றவர்கள் |
| ஒருவரோடொருவர் | —ஒருவர்களோடொருவர்கள் |
| தழுவினார் | —தழுவிக்கொண்டார்கள் |
| கூடி ஒண்புடவை | —(ஒன்று)கூடி அழகாகிய வஸ்திரங்களை |
| மேலெறிந்து சிலர்கொண்டு கொண்டு | —சிலர்கள் பலதரம் உயர எறிந்துகொண்டு |
| விளையாடினார் | —விளையாடினார்கள் |
| ஓடிவந்து பிரியத்தினோடு | —ஓடிவந்து அன்பினோடு |
| ஒருவரொருவர் | —ஒருவருக்கொருவர் |
| உச்சியை முகந்தனர் | —சிரசை முகந்துகொண்டார்கள் |
| சிலர் அன்பினால் | —சிலர்கள் பத்தியினாலே |
| அறிவதொன்று | —அறியத்தக்கதொன்றும் |
| இலாதபடியாகவே | —இல்லாதபடியாகவே |
| ஆடினார்கள் | —கூத்தாடினார்கள். (108) |

வேறு.

உமையோடு கூடி யுளனாய வீச னொழியாத தேவர் செயல்கண்
டமையாத வன்பு மிகவாகி யங்கை யருளோ டமைக்க வயன்மா
லிமையோர்க ளோடு முனியாயி னோர்க ளிடர்தீரும் வண்ண மருளா
லமையாத வங்க ணதுவைத்தல் கண்ட னர்கள்பெற்று நின்ற வனைவோர்

இதன் பொருள்.

| | |
|---|---|
| உமையோடுகூடி | —பார்வதிசமேதராகி |
| உளனயவீசன் | —இருக்கின்ற சிவபெருமான் |
| ஒழியாத தேவர் செயல்கண்டு | —நீங்காத தேவர்களது செயலைக்கண்டு |
| அமையாதவன்பு மிகவாகி | —(ஒருநாளும்) அமையாதஅன்பு மிகுந்து |
| அங்கையருளோ டமைக்க | —கருணையினாலழகிய திருக்கையமைத்தருளலும் |
| அயன்மால் | —பிரம்மதேவனும் திருமாலும் |
| இமையோர்களோடு | —தேவர்களோடு |
| முனியாயினோர்கள் | —முனிவரானவர்களும் |
| இடர்தீரும்வண்ணம் | —துன்பம் நீங்கும்படி |
| அருளால் அமையாத | —திருவருளால் அடங்காத |
| அங்கண துவைத்தல் | —அழகிய திருக்கண்ணைக்கம்வைத்தலை |
| பெற்றுநின்றவனையோர் | —பெற்றுநின்ற சகலர்களும். |
| கண்டனர்கள் | —கண்டார்கள் (109) |

வேறு.

சத்திய மாகி வேத மொன்றுமே யளவை யாகு
மித்தன்மைப் பொருளை யெல்லா வுலகரு மறியும் வண்ணம்
நித்தரா மன்ப ரேத்து நிறைந்த மெய்க் கருணை யீசன்
மெய்த்தகு பொருளீதென்றே விளம்பிடல் செய்ய லுற்றான்.

இதன் பொருள்.

சத்தியமாகி —உண்மையாகி
வேதமொன்றுமே அளவையாகும்—வேதம் ஒன்றுமாத்திரமே பிரமாணமாகும்
இத்தன்மைப்பொருளை —இத்தன்மையையுடைய பொருளை
எல்லா உலகரும் —சகல உலகத்தவர்களும்
அறியும் வண்ணம் —அறியும்படி
நித்தராமன்பர் ஏத்தும் —அழிவில்லாத பத்திமான்கள் துதிக்கும்
நிறைந்த —நிறைவுற்ற
மெய்க்கருணையீசன் —உண்மையாகிய கருணையுடைய சிவபெருமான்
மெய்த்தகுபொருள் —உண்மையுடைய வேதார்த்தமானது
ஈதென்றே —இதுதானென்றே
விளம்பிடச் செய்யலுற்றான் —உரைசெய்யத் திருவாய் மலர்ந்தருளினர். (110)

அவதாரிகை.

அளவிடப்படாத அறிவினால் ஆராயினும் ஆராயாவிடினும் போத்திரு போக்கிய விலக்கணமுடைய பிரபஞ்சமனைத்துக்கும் அத்துவிதீயப் பிரமான்ம வைக்கியமே சுருதியின் பொருளெனப் பிரம்மதேவனாற் கூறியது சத்தியந்தா னெனப் பரமசிவமூர்த்தியானவர் தமது சார்வான்மியத்தைக் கூறுகின்றார்.

வேறு.

உலக மியாவு முயிர் பலவு நானே சிறிதும் வேறில்லை
யலகி லறிவா லாய்ந் திடினு மாயா விடத்து மருத்தமிதே
திலக மாய மறை துணிந்து திகழ்த்தும் பொருளு மிது வென்ற
னிலகுந் தன்மை யனுபவமு மிதிலோ ரைய முளதன்றால்.

இதன் பொருள்.

உலக மியாவும் உயிர்பலவும் —எல்லாவுலகங்களும் எல்லாவுயிர்களும்
நானே சிறிதும் —நானே (என்னைத்தவிர) கிஞ்சித்தும்
வேறில்லை —அன்னியமாயில்லை
அலகிலறிவால் —அளவில்லாத (மகிமையையுடைய) அறிவினால்
ஆய்ந்திடினும் ஆயாவிடத்தும்—ஆராய்ந்திடினும் ஆராச்சி செய்யாவிடத்தும்

அருத்தமிதே —இதுவே அருத்தமாகும்
திலகமாயமறை துணிந்து —மேன்மையான வேதம் நிச்சயித்து
திகழ்த்தும்பொருளும் இது —விளக்கும் அருத்தமும் இதுவே
என்றன் —என்னுடைய
இலகுந்தன்மை யனுபவமும்—விளங்குந் தன்மையுடைய அனுபவமும் (இதுவே)
இதில் ஓரையம் உளதன்று —இதில் ஒருசந்தேகமும் இருக்கின்றதன்று

**பதசாரம்**—விசாரதசையில் இரச்சுவின் சத்துவத்தில் சற்பதாரைபோல் அத்தியாசிக்கப்பட்ட அஞ்ஞானம் அதன்காரியம் இவை தன்னிடத்தில் இலயிப்பதுகொண்டு கிஞ்சித்தேனும் தனக்கு வேறில்லை கற்பிதவத்துவின் நாசம் அதிட்டானமாத்திரமாகச் சேஷிப்பதாகலின் அச்சகமனைத்துமில்லை. நானே தானென வாதையிற் சாமானுதிகரணியமாகுமென்பார், '**உலகமியாவு மூயிர்பலவு நானே சிறிதும் வேறில்லை யலகிலறிவா லாய்ந்திடினும்**' எனவும், விசாரமில்லாத திசையினும் ஆரோபிதமானது அதிட்டானத்துக்கு வேறுயில்லாததனல் தோற்றுகின்ற சகமும் நானே தானெனச் சமுசர்க்கத்தில் சாமானுதிகரணியமென்பார், '**ஆயாவிடத்தும் அருத்தமிதே**' எனவும், இவ்வனைத்துமென்பது யாது அவ்வனைத்தும் இவ்வான்மாவே தானெனச் சுருதியிற் காண்பதனல் வேதத்திற்குத் தாற்பரியத்தால் அடையத்தக்க பொருள் இதுவேதானென்பார், '**திலகமாயமறைதுணிந்து திகழ்த்தும் பொருளுமிது**' எனவும் கூறினர். (111)

## அவதாரிகை.

அவனேதான் கீழிலும் மேலிலும் அதாவது பரோக்ஷமாகிய தன்மையும் அபரோக்ஷமாகிய தன்மையும் என்று சனற்குமார நாரத சம்வாதத்தில் பூமாவித்தையில் கூறப்பட்ட அதன்பொருளைப் பிரசங்கிகமாய் இவ்விடத்தில் கூறுகின்றார்.

அப்பா லாகி யெவர்கட்கு மதுவே யெனநிற் கின்றேனு
னிப்பா லாகிக் காண்பொருள்க ளெல்லா மாகி யுள்ளேனுன்
மெய்ப்பா லுயிர்க ளியாவையுமாய் விளங்கி மிகவு நின்றேனு
னெப்பே யிலையா முபாதிபல வாகி யெங்கு முள்ளேனுன்.

## இதன் பொருள்.

அப்பாலாகி எவர்கட்கும் —பரோக்ஷமாகி எத்தன்மையானவர்களுக்கும்
அதுவேயென நிற்கின்றேனுன்—அதுவேயென்னும்படி நிற்கின்றவனும் நானே
இப்பாலாகி —அபரோட்சமாகி
காண்பொருள்களெல்லாமாகி —திரிசியங்களனைத்துமாகி
உள்ளேனுன் —இருக்கின்றவனும் நானே
மெய்ப்பாலுயிர்கள் —உடலினிடத்துள்ள உயிர்கள்
இயாவையுமாய் —சகலமுமாகி

| | |
|---|---|
| விளங்கிமிகவு நின்றேனன் | —மிகவும் விளக்கமுற்றுநின்றவனும் நானே |
| ஒப்பேயிலையாம் | —உபமானமேயில்லாததாகிய |
| உபாதி பலவாகி | —நானாவித வுபாதிகளாகி |
| எங்குமுள்ளேனன் | எவ்விடத்துமுள்ளவனும் நானே. (112) |

பூதமாகிப் பொருள் பலவாய்ப் புணர்ந்து நின்றுங் காப்பவனன்
பேதமாகிப் பேதித்தும் பேத மில்லாப் பெற்றியனன்
சோதியாகு மிரவிமதி யாகித் தோன்று கின்றேனன்
வேதமாகி யுள்ளேனன் விளங்கும் புராண மாவேனன்.

## இதன் பொருள்.

| | |
|---|---|
| பூதமாகிப் பொருள் பலவாய் | —பூதங்களாகிப்பலவகைப் பொருளாகி |
| புணர்ந்து நின்றும் காப்பவனன் | —கலந்துநின்றும் காப்பவனும் நானே |
| பேதமாகிப்பேதித்தும் | —பற்பல பேதங்களாகிப்பேதித்தும் |
| பேதமில்லாப் பெற்றியனன் | —பின்னமில்லாத தகுதியுடையவனும் நானே |
| சோதியாகும் இரவிமதியாகி | —பிரகாசமாகும் சூரிய சந்திரராகி |
| தோன்றுகின்றேனன் | —தோன்றுகின்றவனும் நானே |
| வேதமாகியுள்ளேனன் | —வேதங்களாயுமுள்ளவனும் நானே |
| விளங்கும் புராணமாவேன் | —விளங்குகின்ற புராணங்களாக ஆனவனும் |
| நான் | —நானேயாவேன் (113) |

கூறு மோசை பலவவைநா னவற்றிற் குலவும் பொருளவைநா
னாறு சமய மாயவற்றி னருத்த மாகி நிற்பேனன்
வேறென் றறியும் பொருள்களுமாய் வேறாய் விளங்கு கின்றேனு
னுறுஞ் சிந்தை யழிந்தொன்று மறிவா லறியு மறிவுநான்.

## இதன் பொருள்.

| | |
|---|---|
| கூறுமோசை | —சொல்லுஞ் சத்தங்கள் |
| பலஅவை நான் | —பலவகைகளாகும் அவையனைத்தும் நானே |
| அவற்றிற் குலவும் | —அந்தச்சத்தங்களில் விளங்கும் |
| பொருளவை நான் | —பொருள்களும் நானே |
| ஆறுசமயமாய் | —அறுவகைச் சமயமுமாகி |
| அவற்றினருத்தமாகி | —அவற்றின் பொருள்களுமாகி |
| நிற்பேனன் | —நிற்பவனும் நானே |
| வேறென்றறியும் | —பின்னமாக அறிகின்ற |
| பொருள்களுமாய் | —பதார்த்தங்களாயும் |

வேறாய் விளங்குகின்றேனான் —அன்னியமாயும் பிரகாசிக்கின்றவனும் நானே
ஆறுஞ் சிந்தையழிந்து —தணிந்த சிந்தை நசித்து
ஒன்றுமறிவாலறியும் —ஏகமாகிய ஞானத்தினாலறியும்
அறிவு நான் —ஞானமும் நானே. (114)

தோன்று கின்ற வொளியவைநான் றொடர்ந்தே செறியு மிருளதுநா
னான்றங் கமைந்தோ ருளமேவி யறிவாய் நின்றே யறிபவனு
னூன்றும் பொருள்கண் மேலோடு முணர்வா வதுநா னுணர்பவனான்
சான்றங் காகி யெப்பொருட்குஞ் சலியா தென்று நிற்பவனான்.

## இதன் பொருள்.

தோன்றுகின்ற —தோற்றுகின்ற
ஒளியவை நான் —பிரகாசங்களும் நானே
தொடர்ந்தே செறியும் —தொடர்ந்து நெருங்குகின்ற
இருளவை நான் —அந்தகாரங்களும் நானே
ஆன்றங்கமைந்தோர் —உணர்வுபொருந்தினவர்கள்
உளமேவி —மனத்தை அடைந்து (அவ்விடத்தில்)
அறிவாய் நின்றே —ஞானமாக நின்றே
அறிபவன் நான் —அறிபவனும் நானே
ஊன்றும் பொருள்கள் மேலோடும் —நிலைபெற்ற பொருள்கள் மேற்செல்கின்ற
உணர்வாவதும் நான் —அறிவாவதும் நானே
உணர்பவனான் —(அவைகளை)அறிபவனும் நானே
எப்பொருட்கும் சான்றங்காகி —சகலவத்துக்களுக்கும் அவ்விடத்திற் சாட்சியாகி
சலியாது என்றும் —அசையாமல் எக்காலத்தும்
நிற்பவனான் —நிற்கின்றவனும் நானே. (115)

பாடு மிசையா யவ்விசையின் பயனு யறிந்து நிற்பவனான்
கூடுங் கந்தம் பலவாயுங் கொள்வா னுயு முள்ளேனான்
நாடுங் கல்லு மலைபலவுங் கடமும் படமு மாவேனு
நீடும் பொருளா மெவ்விடத்து நிறைந்த வொளியாய்நிகழ்பவனான்.

## இதன் பொருள்.

பாடுமிசையாய் —பாடுகின்ற கானமாயும்
அவ்விசையின் பயனாய் —அந்தக்கானத்தின் பலமாயும்
அறிந்து நிற்பவனான் —அறிந்து நிற்கின்றவனும் நானே
கூடுங்கந்தம் பலவாயும் —கூடும் பலவாசனைகளாயும்

கொள்வானும் —(அவற்றைக்)கிரகிப்பவனும்
உள்ளேனன் —இருக்கின்றவனும் நானே
காடும் கல்லும் மலை பலவும் —வனங்களும் கற்களும் பலகிரிகளும்
கடமும் படமும் ஆவேனன் —குடங்களும் படங்களும் நானே ஆகின்றேன்
நீடும் பொருளாய் —பல பதார்த்தங்களாய்
எவ்விடத்தும் —எல்லாவிடங்களிலும்
நிறைந்தவொளியாய் —பூரணமாகிய பிரகாசமாய்
நிகழ்பவனன் —விளங்குகின்றவனும் நானே. (116)

அளவை யோடங் கறிவானு மறியும் பொருளு மாவேனு
னுளவஞ் ஞான ஞானமென வுரைக்கு முண்மைப் பொருளவைநான்
விளையுங் கன்ம சுகதுக்க மேவுங் கால மாவேனு
னுளம தார வுணர்கின்ற சுவையா றுகி யுள்ளேனன்

இதன் பொருள்.

அளவையோடு அங்கு —பிரமாணங்களோடு அவ்விடத்தில்
அறிவானும் அறியும் பொருளும்—ஞாதாவும் ஞேயங்களும்
ஆவேனன் —நானே யாவேன்
உளவஞ்ஞானம் ஞானம் —பொருந்திய அறியாமையும் அறிவும்
எனவுரைக்கும் — என்று சொல்லப்படும்
உண்மைப்பொருளவை நான் —உண்மையாகிய பொருள்களும் நானே
விளையுங்கன்ம சுகதுக்கம் —உண்டாகும் சுகதுக்கக் கருமங்கள்
மேவுங்காலம் —அனுபவிக்கப் பொருந்துங்காலமும்
ஆவேனன் —ஆகின்றவனும் நானே
உளமதாரவுணர்கின்ற —உள்ளத்திற்பொருந்த அறிகின்ற
சுவையாறுகி உள்ளேனன்—அறுசுவைகளாகி இருக்கின்றவனும் நானே. (117)

தேவ ரெல்லா மாவேனன் திகழு நாரா யுள்ளேனன்
யாவ ரேனுங் கருவாகி யிடுதற் கிசைந்தே யிருப்பவனன்
பாவ பேத புண்ணியங்கள் பலன்கள் சுவர்க்க மாவேனன்
மேவி யடையும் புத்தியும்நான் வீழும்நிரய மாவேனன்.

இதன் பொருள்.

தேவரெல்லாமாவேனன் —சகல தேவர்களாயுமாகின்றவனும் நானே
திகழுநாராயுள்ளேனன் —விளங்குகின்ற மனிதராக வருபவனும் நானே
யாவரேனும் —யாவராலும்

கருவாகியிடுதற்கு —கருவுருவாவதற்கு
இசைந்தே —(அவர்கள் மனோசங்கற்பத்தின்படி) இயைவுற்று
இருப்பவனான் —இருப்பவனும் நானே
பாவபேத புண்ணியங்கள் —பாவபுண்ணிய பேதங்களும்
பலன்கள் —அவற்றின் பலன்களும்
சுவர்க்கம் ஆவேனான் —சுவர்க்கமும் நானே யாவேன்
மேவி அடையும் புத்தியும் நான்—விரும்பி அடைகின்ற புத்தியும் நானே
வீழுநிரய மாவேனான் —வீழ்கின்ற நரகமும் நானே யாவேன். (118)

கரணம் பன்னான் காவேனான் காணியாய காரணனான்
சரணந் தருதே சிகனாகித் தன்னு ளடங்குந் தன்மையனான்
புரணந் திகழ்பே ரொளியோவாப் போத மாய பூரணனான்
கரணங் கடந்த வெனையென்றுங் காண்பார் காணப் படுவேனான்.

இதன் பொருள்.

கரணம்பன்னான்காவேனான்—(கர்மேந்திரியம் ஐந்தும் ஞானேந்திரியம் ஐந்தும் அந்தக் கரணங்கள் நான்கும்)ஆகிய பதினான்கு கரணங்களும் நானே யாவேன்
காணியாய காரணனான்—அக்கரணங்களையுடைய காரணனான சீவனும் நானே
சரணந்தரும் தேசிகனாகி —திருவடிசூட்டும் குருவாயும்
தன்னுளடங்கும் —தன்னிடத் தடங்குகின்ற
தன்மையனான் —இயல்பையுடைய சீடனாயுமிருப்பவனும் நானே
புரணந்திகழ் —பூரணமாய் விளங்கும்
பேரொளியோவா —உயர்ந்தபிரகாசம் மாறுபடாத
போதமாய பூரணனான் —ஞானமாகிய பரிபூரணனும் நானே
கரணங்கடந்த —அந்தக்கரண பாவனையைக் கடந்துநின்ற
எனையென்றுங்காண்பார் —என்னை எக்காலத்தும் காண்பவர்களுக்கு
காணப்படுவேனான் —காணப்படுபவனும் நானே. (119

நாத மாகி மந்திரங்க ளனை வாகி யுள்ளேனான்
பேதமாகி நினைந்திருந்து பேணுந் தியான மாவேனா
னேத லாகு மவத்தைபல வொன்று யறிவா யுள்ளேனா
னேத மில்லா வெப்பொருட்கு முள்ளே யிலங்கி யிடுபவனான்.

இதன் பொருள்.

நாதமாகி மந்திரங்களனைவாகி—ஒலியாகி நானாவித மந்திரங்களாகி
உள்ளேனான் —உள்ளவனும் நானே

| | |
|---|---|
| பேதமாகி நினைந்திருந்து | —பற்பல பேதங்களாகிக் கருதியிருந்து |
| பேணும் | —விரும்புகின்ற |
| தியானமாவேனான் | —தியானமும் நானேயாகின்றேன் |
| ஓதலாகுமவத்தை பல | —சொல்லப்படும் அவத்தைகள் பலவாயும் |
| ஒன்றாய் அறிவாய் உள்ளேனான் | —ஒன்றாயும் அறிவாயும் உள்ளவனும் நானே |
| ஏதமில்லா எப்பொருட்கும் | —குற்றமில்லாத எவ்வகை வஸ்துக்களுக்கும் |
| உள்ளே இலங்கியிடுபவனான் | —உள்ளாக விளங்குபவனும் நானே. (120) |

யாதொன் றருத்த முண்டில்லை யென்னு முரைக ளிரண்டினுக்கும்
யாதொன் றருத்தந் தோன்றுமென்றுந் தோன்றா தென்றுஞ் சொல்லுதற்குந்
தீதொன் றின்றி யிவையனைத்துந் திகழுமென்ற னுருவென்றே
யோது மைய மோரிடத்து முளதன் றுண்மை யுரைக்குங்கால்.

இதன் பொருள்.

| | |
|---|---|
| உண்டில்லையென்னும் | —இருக்கின்றதெனவுமில்லையெனவும் சொல்லுகின்ற |
| உரைகளிரண்டினுக்கும் | —இருவகைச் சத்தார்த்தங்களுக்கும் |
| யாதொன்றருத்தம் | —யாதொன்றுபொருளோ (அதுவும்) |
| தோன்றுமென்றும் தோன்றாதென்றும் | —தோற்றுமென்றும் தோற்றாதென்றும் |
| சொல்லுதற்கும் | —உரைப்பதற்கும் |
| யாதொன்றருத்தம் | —யாதொன்று பொருளோ (அதுவும்) |
| தீதொன்றின்றி | —ஒரு தீங்குமின்றி |
| இவையனைத்தும் திகழும் | —இவைகளனைத்தும் விளங்குகின்ற |
| என்றனுருவென்றே | —எனது வடிவமென்றே |
| ஓதும் | —(வேதங்களெல்லாம்) சொல்லும் |
| உண்மையுரைக்குங்கால் | —சத்தியமாய்ச் சொல்லுங்கால் |
| ஐயம் ஓரிடத்துமுளதன்று | —சந்தேகமானது ஒருவிடத்தும் உளதன்றாகும். (121) |

வேறு.

யாதினை நித்த முள்ள புத்தமுஞ் சுத்த மென்றிங்
கோதிடு மறைதா னென்ற னுண்மையே திகழும் வண்ணந்
தீதினை யொழிந்த வந்தப் பூரண மதுவே யாமென்
றோதிடு மெய்யே யிங்கோ ரையமு முள்ள தன்றே.

இதன் பொருள்.

| | |
|---|---|
| யாதினை நித்தமுள்ள | —எந்த வஸ்துவை நித்தியமாயுள்ள |
| புத்தமுஞ் சுத்தமென்று | —பரிபூரண ஞானமென்றும் பரிசுத்தமென்றும் |

| | |
|---|---|
| இங்கு என்றன் | —இவ்விடத்தில் என்னுடைய |
| உண்மையே திகழும் வண்ணம் | —உண்மை ஒன்றே விளங்கும்படி |
| ஓதிடுமறை தான் | —வேதஞ்சொல்லுகின்றது |
| தீதினையொழிந்த | —தீங்கில்லாத |
| அந்தப் பூரணமதுவே | —அந்தப் பூரணவத்துவே |
| யாமென்று ஓதிடும் | —நாமென்று சொல்லுங்கள் |
| மெய்யேயிங்கு | —இங்ஙனமே இதுசத்தியம் |
| ஐயமுமுள்ளதன்று | —ஒரு சந்தேகமுமில்லை. (122) |

அகமென வறியப் பட்டு நிற்கின்ற பொருளு மாகித்
தகைமையி லிதமென் றுன்னத் தக்கவிப் பொருளுமாகிச்
சுகமுடைச் சற்சித் தாமென் னுருவமே தோன்று மென்று
மிகவுரை செய்ய லுற்றான் வேறுரு விலாத வண்ணம்.

## இதன் பொருள்.

| | |
|---|---|
| அகமெனவறியப்பட்டு | —நானென்றுணரப்பட்டு |
| நிற்கின்ற பொருளுமாகி | —இருக்கின்ற புசிப்பவனாகியும் |
| தகைமையில் | —பெருமையாக |
| இதமென்றுன்னத்தக்க | —இதமென்று கருதத்தக்க |
| இப்பொருளுமாகி | —இந்தப்போக்கியப் பொருளாகியும் |
| சுகமுடைச் சற்சித்தாம் | —பிரமானந்தமுடைய சத்துச்சித்தாகிய |
| என்னுருவமே | —என்னுடைய சொரூபமே |
| தோன்றுமென்று | —விளங்குமென்று |
| வேறுருவிலாதவண்ணம் | —அன்னியப் பொருளொன்றுமில்லாதவண்ணம் |
| மிகவுரை செய்யலுற்றான் | —(சிவபெருமானார்) மிகவுந்திருவாய் மலர்ந்தருள் செய்கின்றார். (123) |

## அவதாரிகை.

நானேயன்றி ஒரு சிறிதும் வேறில்லை என்ற எனது நிச்சயம் இந்தப்பிரகார மாதலினாலே சார்வான்மியத்தைப் பிரதிபாதிக்குஞ் சுருதியும் அதன்பொருளைச் சொல்லுகின்ற பிரம்மதேவருஞ் சத்தியவாதிகள் தானெனக் கூறுகின்றார்.

## வேறு.

நானே முழுது மெனையொழிய நாடிற் சிறிதும் வேறில்லை
யான பொருளை யருமறைதா னறையும் படியா னதனாலும்
யானு மிசைத்த படியாலு மிதுவே திடமா யுளபொருடா
னான மின்றி நான்முகனு முரைத்த துங்கட் குண்மையதே.

### இதன் பொருள்.

நானே முழுதும் நாடில் —ஆராயில் நானேயனைத்தும்
எனையொழிய —என்னைத் தவிர
சிறிதும் வேறில்லை —கிஞ்சித்தும் அன்னியமில்லை
அருமறைதான் —அருமையாகிய வேதங்களும்
ஆன பொருளை —(அப்படி)யான பொருளையே
அறையும்படியானதனுலும் —சொல்லுகின்ற தன்மையையுடையனவாதலாலும்
யானுமிசைத்தபடியாலும் —நாமும் அருள்செய்த தன்மையினுலும்
இதுவே திடமாயுள பொருடான்—இதுவே நிச்சயமாயுள்ள பொருளேயாகும்
ஊனமின்றி நான் முகனும் —குறைபாடின்றிப் பிரம்மாவும்
உங்கட்கு —உங்களுக்கு
உரைத்தது உண்மையதே —உபதேசித்ததுவும் மெய்ம்மைதான். (124)

### வேறு.

இப்பொரு ளையப் பட்டோ ரிறப்பர்கள் கணத்தின் மெய்யே
மெய்ப்படு பொருளை யென்றும் விடுதனிச் சயம தாகும்
இப்பொரு ளைய மின்றி யறிந்தவன் பவ பாசத்தை
மெய்ப்பட வொழிந்து மேலா மொளியினை யடையு மன்றே.

### இதன் பொருள்.

இப்பொருள் ஐயப்பட்டோர் —இந்தப்பொருளில் சந்தேகமுற்றவர்கள்
இறப்பர்கள் கணத்தில் —ஒருகணத்தில் அழிவார்கள்
மெய்யே —இது சத்தியமே
மெய்ப்படுபொருளை —அபரோட்ச சாட்சாத்காரப்பொருளை
என்றும்விடுதல்நிச்சயமதாகும்—எக்காலத்தும் விட்டுவிடுதலும் உண்மையாகும்
இப்பொருள் ஐயமின்றி —இந்தவத்து நிச்சயத்தை சந்தேகமில்லாமல்
அறிந்தவன் —உணர்ந்தவன்
பவபாசத்தை —சனனமரணமாகிய பாசத்தை
மெய்ப்பட ஒழிந்து —உண்மையாக நீங்கி
மேலாமொளியினை —அபரோட்ச சாட்சாத்கார சுபாவத்தை
அடையும் —அடைவான். (125)

பாசமோ சகனு மீசன் பகர்ந்தருள் செய்து தன்னை
நேசமோ டயன்மா றம்மை நீடுறத் தழுவிக் கொண்டு
ஆசிலா வமரர் தம்மை யருட்கண்ணு லமைத்து நோக்கிச்
சோதியா னந்த வெள்ளச் சுகரூப ராமி னென்ருன்.

இதன் பொருள்.

| | |
|---|---|
| பாசமோசகனுமீசன் | —(இந்தப் பிரகாரமாக) சமுசார மோசகனுகிய சிவபெருமான் |
| பகர்ந்தருள்செய்து தன்னை | —தனது மகிமையைத் திருவாய்மலர்ந்தருளிச்செய்து |
| நேசமோடு | —பிரியத்தோடு |
| அயன்மால் தம்மை | —பிரம்மாவையும் திருமாலையும் |
| நீடுறத்தழுவிக்கொண்டு | —நன்ருக ஆலிங்கனஞ் செய்துகொண்டு |
| ஆசிலா அமரர்தம்மை | —குற்றமற்ற தேவர்களை |
| அருட்கண்ணுலமைத்து நோக்கி | —தயாதிருஷ்டியால் பார்த்து |
| சோதியானந்தவெள்ள | —விளங்கும் பிரம்மானந்த வெள்ளமாகிய |
| சுகரூபராமினென்ருன் | —சுகரூபமுடையவராவீர்களென்று அருள் செய்தார். (126) |

சாந்தமெய்க் கருணை மேனிச் சம்புவை யமர ரெல்லா
மாய்ந்தபே ரன்பி னுலே யடியிணை மலர்க டம்மே
லேய்ந்தமா மலரு நீரு மிலையொடு பலமுங் கைக்கொண்
டாந்தனை யிறைஞ்சி யேத்தி யருச்சனைசெய்து நின்ருர்.

இதன் பொருள்.

| | |
|---|---|
| சாந்தமெய்க் கருணை மேனிச் சம்புவை | (இவ்வண்ணம் திருவருள்செய்த) சாந்தமும்மெய்த் திருவருளுமே திருமேனியாகவுடைய மகாதேவரை |
| அமரரெல்லாம் | —தேவர்களெல்லாரும் |
| ஆய்ந்த பேரன்பினுலே | —ஆராய்ந்தறிந்த மேன்மையாகிய பத்தியினுலே |
| அடியிணை மலர்கடம்மேல் | —உபயபாத பங்கயங்களின்மீது |
| ஏய்ந்த மாமலரும் | —இயைவதாகிய உயர்ந்த புஷ்பங்களும் |
| நீருமிலையோடு | —தீர்த்தங்களோடும் பத்திரங்களோடும் |
| பலமும் கைக்கொண்டு | —கனிவர்க்கங்களும் கையிற்கொண்டு |
| ஆந்தனை | —தங்களால் ஆனமட்டும் |
| இறைஞ்சியேத்தி | —வணங்கித்துதித்து |
| அருச்சனைசெய்து நின்ருர் | —அருச்சித்து நின்ருர்கள். (127) |

வேறு.

உலகம் யாவு மளந்தருளு முலப்பில் கீர்த்தி நாரணனு
மிலகுந் தனது காரணமா மீசன் பாத பங்கயத்தைத்
தலையின் மிசையே வைத்தருளித் தரியா வன்பாற் ருனழிந்தான்
மலரின் மிசையோ னவ்வடிகள் மறந்தே தன்னை வைத்திருந்தான்.

## இதன் பொருள்.

உலகமியாவும் அளந்தருளும் —சகல சகங்களையும் அளந்தருளிய
உலப்பில் கீர்த்தி நாரணனும் —கெடுதலில்லாத கீர்த்தியையுடைய திருமாலும்
இலகும் —விளங்கும்
தனது காரணமாம் —தனக்குக் காரணமாகிய
ஈசன் பாதபங்கயத்தை —உமாபதியினது திருவடித் தாமரைகளை
தலையின்மிசையே வைத்தருளி—சிரசின்மீதே வைத்துக்கொண்டு
தரியாவன்பால் —தாங்கற்கரிய அன்பினால்
தானழிந்தான் —தன்னைத்தானே மறந்தான்
மலரின்மிசையோன் —பங்கயாசனனாகிய பிரம்மாவும்
அவ்வடிகள் வைத்து —(விட்டுணுவைப்போல) அவ்வுமாபதியினது திருவடிகளைத் தலைகளில் வைத்துக்கொண்டு
தன்னைமறந்தே இருந்தான் —தன்னைமறந்து இருந்தான். (128)

## வேறு.

தேவர்க்குந் தேவ னாய பெருமான்றன் கழல் செறிந்த
யாவர்க்கும் பாசம் நீக்கி யெடுத்திட லியல்பா யுள்ளான்
மூவர்க்கும் தெரியா வுண்மைப் பொருளான தற்பா வந்தான்
யாவர்க்குந் தெரியும் வண்ண மின்பக்கூத் தாட லுற்றான்.

## இதன் பொருள்.

தேவர்க்குந் தேவனாய —தேவர்களுக்குந் தேவராகிய
பெருமான் —மகாதேவரும்
தன்கழல் செறிந்த —தமது திருவடிமுன்நெருங்கி நின்ற
யாவர்க்கும் பாசம்நீக்கி —சகலருக்கும் பவபாசங்களையொழித்து
எடுத்திடல் —கரையேற்றுந் தன்மையை
இயல்பாயுள்ளான் —இயற்கையாகவுடையவருமாகிய எம்பிரான
மூவர்க்குந்தெரியா —திரிமூர்த்திகளுக்குந் தெரியாத
உண்மைப் பொருளான —எதார்த்த வத்துவாகிய
தற்பாவந்தான் —தனது சுயஞ்சொரூபமானது
யாவர்க்கும் தெரியும்வண்ணம்—சகலருக்கும் தெரியும்படி
இன்பக் கூத்தாடலுற்றான்—ஆனந்தநடனம் செய்தருளத் தொடங்கினார்.

வேறு.

மேலா யருள்சே ராகரமாய் வேறென் றிடுதற் கரியவளுங்
கோலா வளவில் பேரன்பாற் கூத்தன் றனையே பார்த்தருளிக்
கால லாட றனக்கியையக் கையாற்றாளக் கதிசெய்ய
மாலே முதலாம் வானோர்கள் வலவர் மகிழ்வா லாடினரால்.

| | |
|---|---|
| மேலாய் | —மேன்மையாயும் |
| அருள் சேராகரமாய் | கருணையெல்லாம் சேருதற் குறைவிடமாயும் |
| வேறென்றிடுதற்கு | —(சங்கரருக்கு) வேறென்று சொல்லுதற்கு |
| அரியவளும் | —அருமையானவளாயும் விளங்குகின்ற சங்கரியும் |
| கோலா அளவில் பேரன்பால் | —சூழ்ந்து அளவில்லாத பேரன்பினால் |
| கூத்தன்றனையே | —ஆனந்தநடராஜமூர்த்தியாகிய தனது பதியையே |
| பார்த்தருளி | —பார்த்துக்கொண்டு |
| காலா லாடறனக்கியைய | —(அவரது)திருப்பாதத்தாற்செய்யும் நடனத்துக்கேற்க |
| கையாற்றாளக்கதிசெய்ய | —திருக்கைகளாலே தாளம்போட |
| மாலே முதலாம் | —விட்டுணு முதலாகிய |
| வானோர்கள் வலவர் | —தேவர்கள் இன்னுமுள்ள சமர்த்தர்களனைவரும் |
| மகிழ்வால் ஆடினர் | —ஆனந்தத்தால் நிருத்தஞ் செய்தார்கள். (130) |

பேரா னந்தக் கடலாய பெருமான் வணங்குந் தேவர்பிரான்
பாரா வெல்லா வமரரையும் பரிந்துள் ளுவகை கூர்ந்தெவர்க்குந்
தீரா வின்ப மளித்தருளித் தெரிவை யொருபா லுடனாகி
யாரா லறியா வறிவுருவோ னங்கே யறிவிற் கரந்தனனால்.

இதன் பொருள்.

| | |
|---|---|
| பேரானந்தக்கடலாய பெருமான் | —ஞானானந்தக்கடலாகிய பெம்மானாகியும் |
| வணங்குந் தேவர்பிரான் | —வணங்குகின்ற தேவர்களுக்கெல்லாம் அதிபராயுமெழுந்தருளிய மகாதேவர் |
| எல்லாவமரரையும் பரிந்து | —சகல தேவர்களையும் பரிவாகி |
| உள்ளுவகை கூர்ந்து | —திருவுள்ளத்திற் சந்தோஷமுற்று |
| பாரா எவர்க்கும் | —கடாட்சித்தருளி அத்தேவரனைவர்கட்கும் |
| தீராவின்பமளித்தருளி | —நீங்காத பேரானந்தத்தைக் கொடுத்தருளி |
| தெரிவையொருபாலுடனாகி | —ஒருபாகத்திற் பார்வதியோடுங் கூடினவராய் |
| ஆராலறியா வறிவுருவோன் | —யாராலுமறியாத ஞானசொரூபரானவர் |
| ஆங்கே அறிவில் | —அவ்விடத்தில் சிதாகாயத்தில் |
| கரந்தனன் | —மறைந்தருளினார். (131) |

அரியு மயனே யணைத்துக்கொண் டமரர் முனிவர் தமையெல்லாந்
தெரிய வன்பான் மிகநோக்கிச் சித்தங் களிகூர்ந் துளமகிழ்வா
லுரிய வுலகந் தணியினுமா வுலப்பில் பெருஞ்சீர் வைகுண்டத்
தரிவை மலர்மே லவளோடு மரவி னணைமே லமர்ந்தனனால்.

## இதன் பொருள்.

அரியும் அயனை அணைத்துக் கொண்டு — விட்டுணுவும் பிரம்மாவை ஆலிங்கனம் செய்துகொண்டு
அமரர் முனிவர் தமை யெல்லாம் தெரிய — தேவர்களையும் முனிவர்கள் எல்லாரையும் தெரியும்படி
அன்பால் மிகநோக்கி — தயையினால் மிகவுங்கடாட்சித்து
சித்தம் களிகூர்ந்துள மகிழ்வால் — உள்ளத்தில் மிகுந்துள்ள சந்தோஷத்தினால்
உரியவுலகம் — இந்திராதி தேவர்களுக்கு உரித்தாகியவுலகம்
தணியினும் — அழிந்தாலும்
உலப்பில் மாபெருஞ்சீர் வைகுண்டத்து — கெடுதலில்லாத அழகிய பெருஞ்செல்வத்தை யுடைய வைகுண்டத்தில்
அரிவைமலர் மேலவளோடும் — தேவியாகிய திருமகளோடும்
அரவினணைமேல் அமர்ந்தனன் — சர்ப்பசயனத்தில் இருந்தான். (132)

## வேறு.

அயனுமீண் டதிச யத்தா லவசமா யழிந்து பின்னும்
பயனுறு மமரர் தம்மைப் பார்த்துமுன் பரிவி னாலே
வயமெலா முளதாய்ச் செய்யு மலர்மிசை மறையி னோனுந்
தயவின்வாய் திறந்து வார்த்தை யுரைத்தனன் றழைக்கும் வண்ணம்.

## இதன் பொருள்.

அயனும் மீண்டு அதிசயத்தால் — பிரம்மாவும் திரும்பவும் பேருவகையால்
அவசமாயழிந்து பின்னும் — பரவசமாய்த் தன்னைமறந்து திரும்பவும்
பயனுறுமமரர்தம்மைப்பார்த்து — ஆன்மப்பிரயோசனமடைந்த தேவர்களைநோக்கி
முன்பரிவினால் — முன்னிருந்தஅன்பினால்
வயமெலாமுளதாய்ச் செய்யும் — அனைத்துந் தன்வயமுள்ளனவாகப் படைக்கும்
மலர்மிசைமறையினோனும் — பங்கயாசனத்தின்மேவிய பிரம்மதேவனும்
தயவின் வாய்திறந்து — கருணையோடு திருவாய்மலர்ந்து
தழைக்கும் வண்ணம் — (தேவர்கள்) வாழும்படி
வார்த்தை உரைத்தனன் — (இந்த) வார்த்தையை உரைசெய்தான். (133)

## அவதாரிகை.

சாந்தோகத்தின் ஏழாம் அத்தியாயத்தில் சனற்குமாரரால் நாரதர்பொருட்டுப் பூமாவித்தை உபதேசிக்கப்பட்டது. அதனைக்கூற விச்சை நண்ணினவராகி ஆன்ம வித்தைக்கு வேறாயவித்தைகள் சொரூபாஞ்ஞானத்தை நீக்காதென்பது மாத்திர மன்று பாபக்கிரந்தி அதன் நிமித்தமான சோகம் இவைகளுக்குக் காரணங்க ளாகுமென்று கூறப்பட்டது. இருக்குவேத மத்தியயனஞ் செய்திருக்கிறேன் என்றது முதலியவற்றால் அதனை ஈண்டு விளக்கிக் கூறுகின்றார்.

மானிட ராஞே ரென்று மோதிடும் விச்சை யெல்லா
மூனமாய்ப் பாச பெத்த மாக்கிடு முண்மை யாகத்
தான தா மறிவாம் விச்சை யொன்றுமே பாச மான
வீனமா மிருளை நீக்கு மின்பநற் சோதி யொன்றும்.

## இதன் பொருள்.

| | |
|---|---|
| மானிடாராஞேர்என்றும் ஓதிடும் | —மனிதரானவர்கள்எக்காலத்தும் சொல்லுகின்ற |
| விச்சையெல்லாம் | —பாவித்தைக்கு வேறாகிய சகலவித்தைகளும் |
| ஊனமாய் | —ஈனமாய் |
| பாசபெத்தமாக்கிடும் | —பவபாசத்தில் கட்டுண்ணச்செய்யும் |
| உண்மையாக | —சத்தியமாக |
| இன்பநற் சோதியொன்றும் | —நல்ல ஆனந்தப் பிரகாசமுடைய |
| தானதாம் | —தான் அதுவேயாகிய |
| அறிவாம் விச்சை ஒன்றுமே | —அறிவான ஆன்மவித்தை ஒன்றுமாத்திரமே |
| பாசமான | —பவபாசமான |
| ஈனமாம் இருளைநீக்கும் | —குறைவாகிய அந்தகாரத்தை நீக்கிவிடும். |

**பதசாரம்**—விச்சை யெல்லாம் என்றதனால் வேதங்கூறிய வாக்காதிகளின் உபாசனைகளும் பெறப்பட்டது. அவ்விடத்து இச்சைப்பிரகாரம் காமசாரனாகப் பவிக்கின்றானென்ற அந்த வந்த வாக்கிய சேடங்களால் ஐஹிகபாரலவுகிக பலசாதனத் தன்மை காணப்படுவதனால் ஞேயப் பிரம்ம உபநிஷத்துக்குப் பின்னங்களான வேதங்கள் சம்சாரிகப் பலத்தைத் தருவன வென்பார், **'ஊனமாய்ப் பாசபெத்த மாக்கிடும்'** எனவும், சோகத்தைக் கடக்கின்றான் ஆன்மவித்து எனச் சுருதியிற் கூறப்பட்ட பாவித்தை சமுசார காரணமாகிய அஞ்ஞான விருளைக் கெடுக்கு மென்பார், **'உண்மையாகத் தானதா மறிவாம் விச்சையொன்றுமே பாசமான வீனமாமிருளை நீக்கும்'** எனவுங்கூறினார். (134)

## அவதாரிகை.

தானாகின்ற ஆன்ம வித்தை ஒன்றில்லாத மற்றொரு வித்தைக்குச் சமுசா ரத்தை நீக்குந் தன்மை எனில்லையென அதன் காரணத்தைக் கூறுகின்றார்.

தானாகு மறிவொன் றில்லா தவனுக்குத் துன்ப வாழி
தானேயுண் டாவ தென்றுந் தான்றனிற் றழைத்துள் ளோர்கட்
காணுதெவ் வுருவு மாகி யல்லவா மறிவாஞ் சோதி
தானாகும் வீடே யாதல் சங்கையொன் றில்லை யன்றே.

## இதன் பொருள்.

| | |
|---|---|
| தானாகு மறிவொன்றில்லாத | —தானாகின்ற ஆன்மவித்தை ஒன்றில்லாத |
| அவனுக்குத்துன்பஆழி | —அவனுக்குச் சோக சமுத்திரமானது |
| தானே யுண்டாவதென்றும் | —எக்காலத்து மியல்பாகவே யுண்டாகின்றது |
| தான்றனில் | —தன்னிடத்தில் தானாகவே |
| தழைத்துள்ளோர்கட்கு | —வாழ்ந்திருக்கின்றவர்களுக்கு |
| ஆனுதெவ் வுருவுமாகி | —நீங்காமல் சகல ரூபமுமாகி |
| அல்லவாம் | —தன்னில் வேறில்லாமலு மிருக்கின்ற |
| அறிவாஞ் சோதி | —ஞானமாகிய பிரகாசமே |
| தானாகும் வீடேயாதல் | —தானாகிய மோக்ஷ சொரூபமாதலில் |
| சங்கை யொன்றில்லை | —ஒரு சந்தேகமுமில்லை |

**கருத்து**—அஞ்ஞானமே சமுசார காரணமாதலால் அனான்ம விடயங்க ளான வித்தைகளால் அதற்கழிவில்லை. ஆன்மாவினது எதார்த்த ஞானத்தால் ஆவரணவித்தை நீங்கிடில் உபாதானமில்லாததாகிச் சமுசாரரூபமான சோகட உதிக்காததினால் முத்தியுண்டாவதில் சமுசயமில்லையென்பதாம். (135

## அவதாரிகை.

நாமமுதல் பிராணாந்தங்களான தத்துவங்களைப் பாதத்துவத்தில் புக் செல்லும்பொருட்டு உபாயமாகச் சோபானக்கிரமமாய் உபதேசித்துப் பூமாவத் வே அறியத்தக்கதென்று அனவச்சின்ன சுகரூப வியாபகனான ஆன்மாவை அ யத்தக்கவனாகப் பிரதிக்கினைசெய்து எவ்விடத்தில் வேற்றுப்பொருளைப் பா கின்றானில்லையோவென்ற சுருதியிற்கூறிய பூமாலட்சணத்தைக் கூறுகின்றார்.

வேறு.

யாவ னொருவன் றனையிகழ்ந்தே யளவில் வேறு படக்கண்டு
மியாவ னொருசொல் வேறுபடக் கேட்டு மறிந்தும் வருகின்றா
னியாவ னொருவன் றனக்கென்றுஞ் சிறுமை யதுவே பிறப்பிறப்புப்
போவ தில்லாக் காரணமு மதுவே யென்று புகன்றனனால்.

இதன் பொருள்.

| | |
|---|---|
| யாவனொருவன் | —எவனொருவன் |
| தனையிகழ்ந்தே | —தானாகிய பிரம்மத்தை யுதாசீனம்பண்ணி |
| அளவில் வேறு படக்கண்டும் | —அளவில்லாத பின்ன பின்னங்களாகப்பார்த்தும் |
| யாவன் ஒருசொல் | —எவன் ஒருசொல்லாயினும் |
| வேறுபடக் கேட்டும் அறிந்தும் | —பின்னமாகக் கேட்டும் (அப்படியே) அறிந்தும் |
| வருகின்றான் யாவன் | —வருகின்றவன் எவனோ |
| ஒருவன்றனக்கு | —அந்த ஒருவனுக்கு |
| என்றும் அதுவே சிறுமை | —எக்காலத்தும் அதுவே சிறுமையாகும் |
| பிறப்பிறப்பு | —சனனமரணம் |
| போவதில்லாக் காரணமும் | —நீங்காத காரணமும் |
| அதுவேயென்று புகன்றனன் | —அதுவேதானென்று சொன்னான். |

**கருத்து**—பூமாவத்துவுக்குப் பிரதியோகியாக அற்பவத்துவினிலக்கணத்தை எவ்விடத்தன்னியத்தைப் பார்க்கின்றானோவென்றது முதலியவற்றால் சுருதி பிரமாதிரு பிரமாண பிரமேய விவகாரமுடையது அனித்தியமென்று அறிந்து அடையும் சவுகரியத்தின்பொருட்டு அதனை முன்பே கூறியதென்றறிக. (136)

அருளினா லியாவன் றன்க ணிவையில்வே றொன்று காணா
தருளினால் வேறுகேளா தறிந்திடா திருக்கி லஃதே
யருளதாம் பெருமை தானு மழிந்திடாச் சுகமு மெல்லா
விருளிலா வீடு தானு மென்றன னிமையோர்க் கெல்லாம்.

இதன் பொருள்.

| | |
|---|---|
| அருளினால் | —சிவப்பிரசாதத்தால் |
| இயாவன் தன்கண் | —எவன் ஆன்மாவினிடத்தில் |
| இவையில் வேறொன்று காணாது | —இவைகளில் வேறொன்றையுங் காணாமலும் |
| அருளினால் | —அந்தப் பிரசாதத்தினால் |

வேறு கேளாது —வேறொன்றையும் கேளாமலும்
அறிந்திடாது இருக்கில் —அறிந்திடாமலும் இருந்தால்
அஃதே — அதுவே
அருளதாம் பெருமைதானும் —சிவப்பிரசாதமென்னும் பெருமையும்
அழிந்திடாச் சுகமும் —நாசமில்லாத வின்பமும்
எல்லாவிருளிலா வீடுதானும் —ஓரிருளுமில்லாத மோட்சமும்
என்றனனிமையோர்க்கெல்லாம்—என்று தேவர்களுக்கெல்லாம் கூறினன்.

கருத்து—திருபுடி விவகாரம் எந்த வத்துவில் இல்லையோ, அஃது அனவச்சின்ன பூமசத்தாபி தேயமுடைய ஆன்மாவெனவும், யாது பூமாவோ அதுவே சுகமென்ற சுருதிவாக்கியத்தின் பொருளான அபரிச்சின்ன ஆன்மவத்துவே சுகம், நிரதிசயமான முத்தியுமெனவும், பரிச்சின்னத்தில் ஒரு சுகமுமில்லை, பரிச்சேதத்தால் பயம் அவசியம் உண்டு. ஆதலால் அனவச்சின்ன சுகரூபமான ஆன்மநிட்டையே சம்பாதிக்கத்தக்கதெனவுங் கொள்க. (137)

வேறு.

யாவரொருவர் தமக்கென்றுஞ் சிறுமை யுண்டேற் சுகமிலையாம்
ஓவ வில்லா தளவுபடா தொன்று மறிவாய் நின்றோர்கட்
காவ தில்லை பிறப்பிறப்பு மழுந்துபோக்கு வரவு மிலை
மேவு பந்தம் வீடுமிலை யென்றே விரிஞ்சன் விளம்பினனால்.

இதன் பொருள்.

யாவரொருவர் தமக்கென்றும்—எவர்களுக்கும் எக்காலத்தும்
சிறுமையுண்டேல் —(பேதமென்னும்) சிறுமையுண்டாகில்
சுகமிலையாம் —சுகம் இல்லவேயில்லையாம்
ஓவவில்லாது —நீங்குதலில்லாமல்
அளவுபடாது —திரிவித பரிச்சேதமில்லாமல்
ஒன்றுமறிவாய் நின்றோர்கட்கு—ஏகமாகிய ஞானசொரூபமாய் நின்றவர்களுக்கு
பிறப்பிறப்பும் ஆவதில்லை —சனனமரணங்களும் உண்டாதலில்லை
அழுந்துபோக்கு வரவுமிலை —(துன்பத்துள்) அழுந்தத்தக்க கமாகமமுமில்லை
மேவுபந்தம் வீடும் —பொருந்துகின்ற பந்தமும் மோட்சமும்
இலையென்றே —இல்லையென்றே
விரிஞ்சன் விளம்பினன் —பிரம்மதேவன் சொன்னான்.

கருத்து—உள்ளபடி பூமாவத்து அறியப்படுங்கால் பந்தம் மோட்சம் என்கிற பாகுபாடே இல்லாமல் அதில் அனைத்தும் சொரூபமாகவே நன்ருய் லயிக்கப்படு கின்றமையின் திரும்ப உத்தானத்தை அடைவதின்றென்றுணர்க. (138)

அவதாரிகை.

சாட்சியாகிய ஆத்மாவினிடத்தில் முக்குண வடிவமான பிரகிருதியினல் மெய்மையிழந்த ஞாதுரு, பிராந்திஞானம், பொய்ஞேயம் எனும் திரிபுடிமயப் பிரபஞ்சம் ஏககாலத்தில் கற்பிதமாய்வரினும் அவ்வாத்மாவுக்கு யாதொரு கெடு தியும் இல்லை என அதற்குத் திருட்டாந்தம் கூறுகின்றூர்.

வேறு.

தன்னிலே யாக்கப் பட்ட கனவினி லுலக மெல்லாந்
தன்னுணர் நனவ தாகத் தனிலவை யடங்கு மாபோற்
றன்னிலே தோன்று மெல்லாப் பொருள்களுந் தானே யானற்
றன்னிலே தன்னிற் ருனே யாமதே தனில்வே றின்றே.

இதன் பொருள்.

தன்னிலே ஆக்கப்பட்ட —தன்னிடத்திலே உண்டாக்கப்பட்ட
கனவினில் —சொப்பனத்தில்
உலகமெல்லாம் —சகமனைத்தும்
தன்னுணர் நனவதாக —தன்னுடைய உணர்வாகிய விழிப்பில்
தனிலவையடங்கு மாபோல் —தன்னிடத்தில் அவையனைத்தும் அடங்குந் தன்மைபோல
தன்னிலே தோன்றும் —தன்னிடத்திலே உண்டாகும்
எல்லாப் பொருள்களும் —சகல வஸ்துக்களும்
தானேயானல் —தானேயாகில்
தன்னிலே —தன்னிடத்திலே
தன்னில் தானேயாமது —இயல்பாகத் தானகவேயாகும்
தனில்வேறின்று —தனக்கு அன்னியமாக யாதொன்றுமில்லை.

கருத்து—நெய்யானது அக்கினியின் சேர்க்கையில்லாத காலத்தில் கடின மாகி அதன் சம்பந்தத்தால் அக்கடினம் தன்னில் லயிப்பதுபோலப் பிரம்மமும் தனது கோசரமான ஞானத்திற்குமுன் பிரபஞ்சமாகிப் பின்பு ஞானத்தால் நிருவிகாரமாகின்றதெனில் விகாரப்படுவதனல் அனித்தியமாகுமென வடநூலில் கூறிய இவ்வுவமையைக்கூருது அபரிச்சின்ன நிருவிகாரப் பிரம்மவத்துவில் சொப்பனப் பிரபஞ்சத்தோற்றம்போல் சருவசகங்களும் தோற்றுதலால் தோற்ற மே சரீரமாகிய அஃது தனது ஆச்சிரயத்துக்கு விகாரத்தைச் செய்யாதென்பது கருதி ஈண்டுக் கனவுவமை மாத்திரங் கூறினரென்பது போதருமென்ப.

" பொய்ப்பொருள்கற் பிதமாயிற் றவிகாரி யாகப், பொருந்துமுயி ரிடத் தெனின்முன் பிராந்தியார்க் கேன்னி, லோப்பிலசதி பதிதிமா லுருவச்சோர் பனந்தா, ஞேருமுனிவன் பாலுதிப்பி னதனலங் கவனுக், கேப்பழுது மிலாதது போற் சான்ற மான்மாவி லிலங்துதுணை வுருவமாம் பதுதியினுன் மருளு மேய்ப்பரிய ஞாதிருவும் பிராந்திஞா னமும்போய், விடயமே யழம்வரினு மவ கீடையு றிலையே.'' என்ற வேதாந்த சூளாமணி நூலாலுமுணர்க. (13

அவதாரிகை.

சிவபெருமான் திருவருளால் எல்லாங் கூறப்பட்டதென்றும் இனி நா உங்கட்குக் கூறவேண்டியதாக ஒன்றுமில்லை யென்றும் முடித்துக் கூறுகின்று

வேறு.

எல்லாப் பொருட்கு மேற்சுகமா மிதனை யுங்கட் கேயும்வணம்
நல்லா ருளங்கொ ணடராச நாதன் பாதத் தருளாலே
யெல்லா மென்றன் கருணையினு லுரைத்தே னிதன்றன் மேற்கேட்ப
தில்லா வண்ண மினியானு மியம்ப வேண்டு வதுமிலதே.

இதன் பொருள்.

| | |
|---|---|
| எல்லாப் பொருட்கும் | —எல்லாப்பொருள்களினால் உண்டாகும் (சுகத்திற்கும்) |
| மேற்சுகமாம் | —மேலான ஆனந்தமாகிய |
| இதனை உங்கட்கேயும் வணம் | —இந்தப்பொருளை உங்களுக்குப் பொருந்தும்படி |
| நல்லார் உளங்கொள் | —மகான்களது திருவுளமேயிடமாகக்கொண் |
| நடராசநாதன் | —ஆனந்த நடராசமூர்த்தியாய் எழுந்தருளிய சிவபெருமானது |
| பாதத்தருளாலே எல்லாம் | —திருவடிப் பிரசாதத்தினால் அனைத்தையும் |
| என்றன் கருணையினுல் | —என்னுடைய அன்பினால் |
| இதன்றன்மேல் | —இதற்குமேலாக |
| கேட்பதில்லாவண்ணம் | —கேட்கவேண்டியதில்லாதபடி |
| உரைத்தேன் | —உபதேசித்தேன் |
| இனியானும் | —இதற்குமேல் நானும் |
| இயம்பவேண்டுவதுமிலதே | —சொல்லவேண்டுவதும் இல்லை. (1 |

ஐந்தாம் அத்தியாயம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் 303.



## 6-வது சாங்தோக்கிய உபநிடத தாற்பரியம் உரைத்த அத்தியாயம்.

### அவதாரிகை.

இவ்வாறு தேசகால முதலிய அவச்சேதமில்லாத அத்துவிதீய சற்சிற்சுகரூபமே பிரம்மமாக உபதேசிக்கப்பட்டது. அஃது மந்தபுத்திமான்களால் விரைவாகச் சாட்சாத்தாய் அறியக்கூடாமையின் இதயபுண்டரீகமத்தியில் சத்தியகாமத்துவ முதலிய குணமுடையதாக அந்தப்பிரம்மத்தின் உபாசனையைப் பிரமசரிய முதலிய சாதனமுடைய முமூட்சுவுக்குச் சுருதி உபதேசிக்கின்றது. அந்த தராகாச வித்தையை இவ்விடத்தில் விளக்கிக் கூறுகின்றார்.

பங்கயா சனத்தி லிருந்திடும் பரமன் பழமறை பகர்ந்தவப் பரிசே
சங்கையா காமற் சங்கரன் றிருவாய் மலர்ந்தனன் பரிசினைத் தானே
யங்குவா னவர்கட் களிக்குமா றளித்து மளவிலா வருளினு லந்த
வெங்குமாய் நின்ற பொருளைமீண் டுணரு மிடத்தையுந் தெளிவுற விசைப்பான்.

### இதன் பொருள்.

பங்கயாசனத்தில் —தாமரைத்தவிசில்
இருந்திடும் பரமன், —வீற்றிருக்கின்ற பிரம்மனானவன்
பழமறை பகர்ந்தவப்பரிசே—புராதனமாகிய வேதம்சொல்லிய அந்தப்பிரகாரமே
சங்கையாகாமல் —ஐயமுறாமல்
சங்கரன் —(தனக்குச்)சிவபெருமான்
திருவாய்மலர்ந்து —திருவாய் மலர்ந்தருளிய
நன்பரிசினைத்தானே —நல்ல பண்பினைத்தானே
அங்குவானவர்கட்கு —அவ்விடத்தில் தேவர்களுக்கு
அளிக்குமா றளித்தும் —எவ்வாறு உதவவேண்டுமோ அவ்வாறு உதவியும்
அளவிலாவருளினால் —அளவில்லாத திருவருளினால்
எங்குமாய் நின்ற —எவ்விடத்தும் பூரணமாய்நின்ற
அந்தப்பொருளை மீண்டு —அவ்வஸ்துவைத் திரும்பவும்
உணருமிடத்தையும் —அறிகின்றவிடத்தையும்
தெளிவுறவிசைப்பான் —தெளியும்படி சொல்லுகின்றான். (1)

### வேறு.

புகலநின் றிடுபிரம புரமெனும் பதியதனில்
தகாபுண் டரிகமெனு மகமிலங் கியதகர
ககனமுன் டதுமறைகள் கருதுநின் றுளபிரம
மிகவிரும் புவர்பிறவி விடவிரைந் துளவிமலர்.

இதன் பொருள்.

புகலநின்றிடு —சொல்லாநின்ற
பிரமபுரமெனும் பதியதனில் —பிரம்மபுரமென்னும் இச்சரீரத்தில்
தகரபுண்டரிக மெனும் —(அற்ப பரிணாமமுடைய) தகரபுண்டரீக மென்கின்ற
அகம் இலங்கிய —வீட்டில் விளங்குகின்ற
தகரககனமுண்டு —தகராகாசமுண்டு
அது மறைகள் —அந்தத்தகராகாசமானது வேதங்களால்
கருதநின்றுள —உணரும்படி நிற்கின்ற
பிரமம் —சச்சிதானந்தமாகிய சிவமாகும் (அச்சிவத்தை
பிறவிவிட —ஜனனம் நீங்கும்படி
விரைந்துள விமலர் —தீவிரதர முமூட்சுக்கள்
மிகவிரும்புவர் —மிகவும் விரும்புவார்கள்.

**பதசாரம்**—பிரம்மத்தை அபரோட்சமாக அடையுந்தலமானது வித்திய காரியின் சரீரமென்பார், 'புகலநின்றிடு பிரமபுரமெனும் பதி' எனவும், அற் பரிணாமமான இதயபுண்டரீகத்தால் அவச்சேத்தியமாயிருத்தலால் சர்வகதமா னும் அற்ப பரிணாமமாயிருப்பதுபோன்ற ஆகாயம் இதயபுண்டரீக மத்தியி அறியத்தக்கதாக உபதேசிக்கப்பட்டது. அவ்வாகாயம் சத்திய ஞானானந்தமா பரமசிவமேதான், வியாசாசாரிகளும் ஆகாயமந்தலிங்கமானதனாலென்னுஞ் சூத் ரத்தில் பிரம்மமென்று கூறினார்கள். இவ்வாகாய நாமமுடைய பரமசிவ முமூட்சுக்களால் சமதமாதி சாதனத்துடன் கேட்கத்தக்கவன் சிரவண முதலி சாதனங்களால் உண்டாகிய ஞானத்தால் அபரிச்சின்னனாக அறியத்தக்கவனெ பார், 'மறைகள்கருத நின்றுள பிரமமிக விரும்புவர்' எனவும் கூறினர். (

அவதாரிகை.

சங்கோசமுபாதி சம்பந்தத்தாலன்று ஆன்மாவிற்கு அஃது தேகமுதலி வற்றில் சுபாவமாகக் காணப்படுகின்றதென்று சங்கித்துக் கூறுகின்றார்.

தெரியிடஞ் சிறிதலது சிறியதன் றறிவுருவு
பெரிதெனும் படிநினைக பிரமமெங் குமுளதென
வுரியதொன் றுணர்வதுணர் வொழிவதென் பறுவுமுணர்
கரியழிந் துளதொர்பொருள் கழியநின் றதுவுமிலை.

இதன் பொருள்.

தெரி இடம் —காணப்படுவதாகிய தகரபுண்டரீகம்
சிறிதலது —அற்பமேயன்றி
அறிவுருவு —ஞானவடிவமான அந்தத் தகராகாசமானது

சிறியதன்று —அற்பமன்று
பெரிதெனும்படி —பூரணத்தன்மையுடையதென்று
நினைக —உணரக்கடவீர்கள்
பிரமம் —சித்துருபமாகிய பிரம்மம்
எங்குமுளதென உரியது —எவ்விடத்துமிருக்கின்றதென்று சொல்லத்தக்கது
ஒன்றுணர்வது —அறியப்பட்ட வொருபொருளையும்
உணர்வொழிவதென்பதுவும் —அறியப்படாததென்னும் பொருளையும்
உணர்கரி —அறிகின்ற சாட்சியை
அழிந்துள தொர்பொருள் —அழிந்து உண்டாகின்றபொருள்கள்
கழியநின்றதுவுமிலை —நீங்கி நிற்கின்றதுமில்லை.

**பதசாரம்**—சித்துருபனுய்த் தானனவான்மாவினது ஆவரணஞ்ஞான நீங்கியபின்பு சித்தை வெளிப்படுத்தாநின்ற அந்தக்கரணத்தின் பரிச்சேதத்தால் சிவப்புப்படிகம்போல் சிதான்மாவின்கட் பரிச்சேதத்தோற்றமேயன்றி இயல்பன்றென்பார், **'தேரிடஞ் சிறிதலது சிறியதன்றறிவுருவு'** எனவும், உற்பத்தி ஸ்திதி முதலிய சகல காலங்களினும் அத்தியாசிக்கப்பட்ட சகல பிரபஞ்சத்திற்கும் சித்திலக்கணப் பிரம்மமே சொருபமாதலாலும் அத்தியஸ்தமானது அதிஷ்டானத்திற்கு வேறில்லாததனுலும் காலம் வத்து இவைகளாலுண்டான பரிச்சேதமில்லாததென்பார், **'பெரிதெனும்படி நினைக பிரம்மமெங்குமுளதென வுரியதென வும்'** தோற்றுகின்ற சகமனைத்தும் ஞானத்திற்கு விடயமான ரூபமாயும் அப்படியே அஞ்ஞானத்திற்கு விடயமான ரூபமாயும் சாட்சி சின்மாத்திரனனஆன்மாவால் பிரகாசிக்கின்றமையில் சிற்பிரகாசத்திற்கு வேருய் ஓரிடத்தும் ஒன்றுமில்லாததனல் தேசத்தாலுண்டாகிய பரிச்சேதமுமில்லையென்பார், **'ஒன்றுணர்வதுணர்வொழிவ தென்பதுவு முணர்கரி,'** எனவும் கூறினர். (3)

## அவதாரிகை.

சகமும் தானே என் பிரகாசிக்காது என்று சங்கித்துக் கூறுகின்றார்.

அறிவின்முன் பலதுசட வகிலமுண் டெனநிகழ்வு
பெறுவதன் றறிவினிலை பெறநிகழ்ந் ததுபிறிது
செறிவுறும் பொருளினனி சிறிதெனும் படிநிகழ்த
லிறைவனெங் கணும்விரவி யெலையறும் படிநிகழும்.

## இதன் பொருள்.

அறிவின் முன்பலது —ஞானசொருபமாகிய பிரம்மத்தின் முன்பல்லாமல்
சடவகிலம் உண்டென —சடமானவுலகம் இருக்கின்றதாக
நிகழ்வுபெறுவதன்று —(தானே) விளக்கம் பெறுவதன்று
அறிவினிலைபெறநிகழ்ந்தது—சித்தினலேயே நிலைபெற்று விளங்குகின்றது

பிறிது செறிவுறும் பொருளின்—அன்னியமாய்க் கலந்துறும்பொருளினுல்
நனிசிறிதெனும்படி —மிகவும் (அப்பிரம்மம்) சங்கோசமெனும்படி
நிகழ்தல் —விளங்குதலும்
இறைவன் —(வியாப்பியமான சகத்தை விளக்குவிக்கின்ற) சிவன்
எங்கணும் விரவி —எங்கும் வியாபகனுகி
எலையறும்படி நிகழும் —எல்லையில்லாதபடி விளங்குகின்முன்.

கருத்து—திரிசியமான அஞ்ஞானத்தையும் அதன்காரியமான சகல அண்ட பிண்டசராசர சகத்தையும் வியாபித்திருக்கின்றதனுல் சுபாவமாக வியாபகனே. பரிச்சேதமோவெனில் அந்தக்கரண முதலியவற்முலெனக. (4)

## அவதாரிகை.

இவ்வாறுகூறிய இதயகமலமத்தியில் சிற்சொரூபமாக விளங்கிவருகின்ற பரமசிவத்தின் வியாபகத்தன்மையை ஆகாய திருஷ்டாந்தத்தால் கூறுகின்முர்.

அளவிலம் பரமெவள வறிசிதம் பரமவள
வுளதுவிண் புவியநில மொளிபதங் கனுடுமதி
துளிதரும் புயன்மின்முதல் சொலவரும் பொருள்களினி
விளைபவென் றிவையிதய வெளியடங் கிடுமடைய.

## இதன் பொருள்.

அளவிலம் பரமெவளவு —அளவில்லாத ஆகாயமானது எந்தமட்டும் (வியாபகமாயிருக்கின்றதோ)
அறிசிதம் பரம வளவுளது } அறியாநின்ற (இதயகமலமத்தியில்) விளங்கிய சித்தான தகராகாசமும் அந்தமட்டும் வியாபகமாயிருக்கின்றது
விண்புவி அநிலம் —ஆகாயம், பூமி, காற்று
ஒளிபதங்கன் உடுமதி —அக்கினி, சூரியன், சந்திரன், நட்சத்திரம்
துளிதரும்புயல் —மழைத்துளியைத்தருகின்ற மேகம்
மின்முதல் சொலவரும் —மின்னல் முதலாகச் சொல்லப்படும்
பொருள்கள் —வஸ்துக்களும்
இனிவிளைபவன்றிவைஅடைய—மேலும் உண்டாவனஎன்னும் இவைகளெல்லாம்
இதயவெளி அடங்கிடும் —தகராகாசத்தில் ஒடுங்கியிருக்கின்றன.

கருத்து—பிரசித்தாகாச சாமியத்தால் சருவகதம் பிரம்மமென்பதேயன்றி அந்தப் பரிமாணமுடையதன்று. எதனுல் ஆகாயம் பிருதிவி இவைகள் வியாபிக்கப்பட்டிருக்கின்றனவென்னுஞ் சுருதியினுல் பிரம்மத்திற்கு விண்கால் தீ நீர் மண் முதலிய சருவசக வியாபகத்தன்மை கூறப்படுதலாலெனக. (5)

அவதாரிகை.

ஈசன் சருவ வியாபகனே ஜீவனங்ஙனமன்று, தருமா தருமங்களுக்கு ஆசிரயனுதலாலென்னில் கூடஸ்த ஆன்மாவே வியாபக ஈசன், புண்ணியபாபங்கள் முதலியன அந்தக்கரண தன்மங்களாதலால் அதற்கு வேறாகிச் சாட்சியான ஆன்மா அவைகளுக்கு ஆசிரயனுகான். புண்ணிய பாப சம்பந்தமில்லாததனுல் அதன்காரியமான ஜனன மரண ஜரை நரை திரை பசி முதலிய அனைத்தும் தகராகாச சொரூபியான அச்சாட்சிக்கு இல்லையென்று கூறுகின்றார்.

இலதெனும் பொருளுமிவ னிடையிலங் குதலினிறை
சொலவரும் பொருண்முழுது நிலவினன் சுழலும்வினை
நலனுமன் றியதுநரை மரணமும் பசியைமுத
லுலகுறுந் துயர்முழுது முடையனன் றொருபொழுதும்.

இதன் பொருள்.

இலதெனும் பொருளும் —இல்லையென்று சொல்லப்பட்ட வஸ்துக்களும்
இவனிடை —இந்த ஆன்மாவினிடத்தில்
இலங்குதலின் —விளங்கலால்
இறை —இந்த (தகராகாச சொரூபியான) சம்புவானவன்
சொலவரும் பொருள் முழுதும்—சொல்லப்பட்ட வஸ்துக்களெல்லாவற்றினும்
நிலவினன் —பிரகாசிக்கின்றனன்
சுழலும்வினை நலனும் —சுழற்றுகின்ற நல்வினையும்
அன்றியதும் நரை மரணமும் —தீவினையும் நரையும் மரணமும்
பசியைமுதல் —பசி முதலாகிய
உலகுறுந்துயர் முழுதும் —உலகமடையப்பட்ட துன்பங்கள் முழுதும்
ஒருபொழுதும் உடையனன்று—ஒருகாலத்தும் உடையவனல்ல. (6)

அவதாரிகை.

இவ்வாறு சகுண நிற்குணமான பிரம்மத்தினது ஞானமே அழிவில்லாத பலத்திற்குக் காரணமாகுமன்றி அக்கினி ஹோத்திர முதலிய கருமங்கள் ஆகாதென்ற சுருதியின் வாக்கியார்த்தத்தைச் சங்கிரகித்துக் கூறுகின்றார்.

வேறு.

பண்ணிய தொழிறரு பயன்க ளியாவையு
மண்ணிடை நுகர்ந்திட மாறு மாறுபோற்
புண்ணிய வினைதரும் போக மியாவையும்
விண்ணிடை யிருந்தனு பவித்து மீளுமால்.

இதன் பொருள்.

பண்ணியதொழில் —செய்த கிருஷியாதி கருமங்கள்
தருபயன்க ளியாவையும் —கொடுக்கின்ற பலன்களனைத்தையும்
மண்ணிடை நுகர்ந்திட —இப்பூமியினிடத்துப் புசித்திட
மாளுமாறுபோல் —(அப்பலன்கள்) நசிக்கும்விதம்போல்
புண்ணியவினை —சற்கருமங்கள்
தரும்போக மியாவையும் —கொடுக்கின்ற சுவர்க்கபோகமனைத்தையும்
விண்ணிடை இருந்து —பரலோகத்திலிருந்து
அனுபவித்து மீளும் —புசித்து அப்போகம் நசித்தவுடன் திரும்புவான்.

பதசாரம்—செயப்படு பொருள்கட்கெல்லாம் அனித்தியமென்னும் வியாப்தி நியமமாகப் பொருந்துமாதலின் '**புண்ணியவினைதரும் போகம் யாவையும் விண்ணிடை நுகர்ந்தனு பவித்துமீளுமால்**' என்றார். (7)

அவதாரிகை.

இவ்விடத்தில் ஆன்மாவை அறியாமல் கர்மானுஷ்டானஞ் செய்கின்றவன் எவ்வுலகத்துமுள்ள போகங்களைப் புசிக்கமாட்டான். இவ்விடத்தில் எவன் ஆன்மாவை அறிந்து கருமங்களைச் செய்கின்றானோ அவன் சகல உலகங்களின் போகங்களையும் புசிக்கின்றானென்ற சுருதிவாக்கியப் பொருளைக் கூறுகின்றார்.

மெய்யினை யுணர்ந்தவர் வினைக ளியாவையுஞ்
செய்யினுஞ் செய்தில ராவர் தேவர்காள்
துய்யநல் வினைகளே தொகுத்து மற்றையார்
வெய்யகர் மத்தராய் விளம்ப வேண்டுமே.

இதன் பொருள்.

தேவர்காள் —தேவர்களே
மெய்யினையுணர்ந்தவர் —உண்மையான தன்னை அறிந்தவர்கள்
வினைகளியாவையும் செய்யினும்—சகல கருமங்களையும் செய்தாலும்
செய்திலராவர் —செய்யாதவர்களாவார்கள்
மற்றையார் — தன்னைப்பரமாக அறியாத பிறர்கள்
துய்ய நல்வினைகளே —பரிசுத்தமாகிய சற்கருமங்களையே
தொகுத்தும் —ஒழுங்காகச்செய்தாலும் (அவர்களை)
வெய்யகர்மத்தராய் —கொடிதான கன்மங்களைச் செய்தவர்களாக
விளம்பவேண்டும் —சொல்லவேண்டும்.

**கருத்து**—பிதிர்லோக இச்சையுடையவனாகின்றானென்றது முதலிய சுருதி வாக்கியத்தால் கர்மவிசேடங்களாகிய சகலவுலகங்களினும் வித்துவானுக்கு அக்

கன்மபோகங்கள் பலிக்கின்றன. உள்ளத்தின்கண்ணே சத்தியகாம முதலிய குணங்களாலுபாசிக்கப்பட்ட தகரப் பிரம்மம் நிரதிசியானந்த ரூபமாதலால் சருவ காமங்களும் அதன் ஏகதேசமாதலின் என்க. (8)

அவதாரிகை.

சத்தோடும் அக்காலத்தில் அடைந்தவனாகின்றானென்ற சுருதியால் சுழுத்தியில் அந்தப் பிரம்மம் அடையப்படுகின்றதனால் அவித்துவான்போல் தூங்கினவனும் சகல காமங்களையடைந்தவனாக ஏனாகானெனச் சங்கித்துத் திருஷ்டாந்தத்தோடு அஞ்ஞான வலிமையின் தன்மை தோன்றக் கூறுகின்றார்.

வேறு.

பொற்பொருள் புதைத்தபுவி யிற்புலனி லார்போய்
நிற்பினுமி டிப்பர்நனி நித்தமுல கத்தோர்
தற்பொருள் சுழுத்திதனி லுற்றுமது தானே
யற்பமறி கிற்றில ரயர்ச்சிவலி யையோ.

இதன் பொருள்.

| | |
|---|---|
| பொற்பொருள் | —பொற்பொருளை |
| புதைத்த புவியில் | —புதைத்திருக்கின்ற பூமியில் |
| புலனிலார்போய் | —கண்ணில்லாதவர்கள் சென்று |
| நிற்பினுமிடிப்பர் | —நின்றாலும் வறுமையுறுவார்கள் (அதுபோல) |
| நனிநித்தம் உலகத்தோர் | —மிகவும் நாள்தோறும் உலகத்துள்ளவர்கள் |
| தற்பொருள் சுழுத்திதனிலுற்றும் | —பரம்பொருளானது சுழுத்தியிலிருந்தும் |
| அதுதான் | —அதைத்தான் |
| அற்பமறிகிற்றிலர் | —சிறிதும் அறிகின்றாரில்லை |
| ஐயோ அயர்ச்சிவலி | —ஐயோ (அவர்களது) அஞ்ஞானத்தின் வன்மையேயாகும். |

கருத்து—புதையல் இருக்குமிடந்தெரியாதவன் நிதி அடையாததுபோல் சுழுத்தி அவஸ்தையில் சுயம்பிரகாசமான பிரம்மம் எல்லாப் பிராணிகளாலும் அடையப்படினும் அஞ்ஞானவசத்தால் அடையாரென்றுணர்க. (9)

அவதாரிகை.

முற்கவியால் அதெப்படி சுவர்ணநிதியென்ற சுருதியின் பொருள் கூறப்பட்டது. இதய சப்தத்தின் பொருளாலும் சருவகதமான பிரம்மம் இதயமத்தியிலிருக்கின்றதாக உபதேசித்த சுருதியின் பொருளைக் கூறுகின்றார்.

விதம்படு முளந்தொறும் விசேடவறி வாயுற்
றிதம்படுத லாலிதய மென்பரிறை தன்னைத்
திதம்பட விவன்றிற மறிந்தவர்கள் சேரும்
பதம்பிரம மல்லது பகர்ந்திடுத லுண்டோ.

## இதன் பொருள்.

விதம்படும் உளந்தொறும் —தொழிற்படுகின்ற சகல இதயங்களிலும்
விசேடவறிவாயுற்று —உயர்ந்து ஞானசொரூபமாயிருந்து
இதம்படுதலால் —சுகரூபமாயிருத்தலால்
இறைதன்னை இதயமென்பார் —சிவனை இதயமென்று சொல்லுவார்கள்
இவன்றிறம் —இந்தச் சிவனது தன்மையை
திதம்பட அறிந்தவர்கள் —உறுதியாகத் தெரிந்தவர்கள்
சேரும்பதம் பிரம்மமல்லது —அடையும்பதவி பிரம்மமேயன்றி
பகர்ந்திடுதலுண்டோ—வேறுபதவி உண்டென்று சொல்லுவதுண்டுகொலோ

**கருத்து**—துக்கசம்பந்தமில்லாத பரமானந்தரூபமான பிரம்மத்தை அடை கின்றனென விளங்கலில் இதயமத்தியில் இருக்கின்ற பிரம்ம விடயமான ஞான திற்குத் தினந்தோறும் இவ்விதமாக அறிந்தவன் சுவர்க்கத்தை அடைகின் னென்று சுருதிகூறிய பிரம்மப் பிராப்தியே பலமென்பது பெற்றாம். (1

## அவதாரிகை.

பின்பு யாதொரு இந்த ஆன்மாவானவன் நன்றாயடைகின்றனென்ற சுரு முதலியவற்றால் உபதேசித்த பிரம்மத்தை அடையும் பிரகாரத்தைக் கூறுகின்ற

சுழுத்தியத னிற்றுயர் துவக்குமுட றன்னின்
றெழுப்பியுள தன்வடிவி னாலிறையை யெய்துற்
றழுத்தமுற யாவனது வாகுமவ னெங்கு
முழுத்தியுள தற்பரம மாகிமுடி வுற்றான்.

## இதன் பொருள்.

சுழுத்தியதனில் —சுழுத்திகாலத்தில்
துயர்துவக்கும் —துன்பக்கயிற்றால் கட்டுப்படும்
உடறன்னின்று எழுப்பியுள —இவ்வுடலினின்றும் எழும்பிய
தன்வடிவினால் —தனது எதார்த்த சொரூபமாகக்கொண்டு
இறையை —(பரஞ்சோதி சொரூபமுடைய) பரமசிவத்தை
எய்துற்று அழுத்தமுற —(அபேதமாக)அடைந்து அழுத்தமாக
யாவனதுவாகும் அவன் —எவன் அச்சிவமாவான் அவன்

| | |
|---|---|
| எங்கும் முழுத்தியுள | —எவ்விடத்தும் பூரணமாகவிருக்கின்ற |
| தற்பரமமாகி முடிவுற்றான் | —தானான சொரூபமாகவே மிஞ்சுகின்றான். |

கருத்து—தூலசூக்கும சரீர முதலானவற்றிலுள்ள அபிமானத்தை நீக்கிச் சுழுத்தி அவத்தையில் சாக்கிர சொப்பனங்களிலுள்ள விடயபோகங்களாலுண்டான கலக்கங்களில்லாததனால் பிரசன்னனாகிய சின்மாத்திர சொரூபசாட்சி எவனோ அவன் தகரப் பிரம்மவித்தையால் அஞ்ஞான விலக்கணமுடைய காரண சரீரத்தையும்நீங்கி விகாரசம்பந்தமில்லாத கேவல சைதன்யப் பிரகாசமான பரசிவ சொரூபத்தைத் தானாகவறிந்து அவித்தையாலுண்டான பரிச்சேதத்தைவிட்டுத் தன் சொரூபமாகவே பிரகாசிக்கின்றான். இவ்வாறடைதலுங் கண்டத்தின் மணிபோல ஞானமாத்திர சாத்தியமேயன்றி ஓரூரினின்றும் பிரயாணப்பட்டு மற்றோரூரை அடைவதுபோலக் கிரியாசாத்தியமன்றென்றுணர்க. (11)

அவதாரிகை.

இவனே ஆன்மாவென்றுரைத்தானென்றும் அபயம் அமிர்தமென்றும் சொல்லிய சுருதிகளின் பொருளை ஈண்டுச் சங்கிரகித்துக் கூறுகின்றார்.

வேறு.

இதுபரம் பரமமிர்த மபயமென் பதுவுமிது
விதமுறும் பலவுலகும் விரவலின் றியபிரம
பதமிதன் கணிலிரவு பகலடைந் திலமரண
முதயமொன் றிலவி ருமை வினைகளொன் றதுவுமில.

இதன் பொருள்.

| | |
|---|---|
| இது பரம்பரம் அமிர்தம் அபயமென்பதுவும் இது | உயர்வும், அழிவில்லாததுவும் இதுவே, பயமில்லாத மோட்ச சொரூபமென்பதுவும் இதுவே |
| விதமுறும் பலவுலகும் | —பலவிதமான சகங்களும் |
| விரவலின்றிய பிரமபதம் | —விரவாத பிரமபதமாகும் |
| இதன்கணில் | —இதனிடத்தில் |
| இரவுபகல் அடைந்தில | —இராத்திரியும் பகலும் அடையாதுற்றன |
| மரணம் உதயம் ஒன்றில | —உற்பத்தியும் அழிவும் அடையாதுற்றன |
| இருமைவினைகள் | —சுகதுக்கரூபமான இருவினைகளும் |
| ஒன்றதுவுமில | —ஒன்றுமில்லாதனவுமாம். |

பதசாரம்—எவன் இவ்வாறு உபாதிகளின்றிப் பிரகாசிக்கின்றானோ அவனே கூடத்த ஆன்மா வேறில்லை. இவனுக்கு வேறாகத் தேகாதிகளுடன் கூடியவன் சோபாதிகனுதலால் அனான்மாவென்பார், 'இது பரம்பரம்' எனவும், பயத்திற் கேதுவாகிய இரண்டாம் பொருளில்லாமையின், 'அபயம்' எனவும், காலதத்துவமும் சொரூபத்தில் அத்தியாசிக்கப்பட்டதாகவின் பிரம்மம் மற்றை உற்பத்தி

யான பிராணிகள்போல் இராப்பகல்களை இலக்கணமாகவுள்ள காலபரிச்சேத முடையதன்றென்பார், 'இதன்கணிரவு பகலடைந்தில' எனவும், சனனமரண ஜரை முதலியவைகளுந் தேக தருமங்களாதலால் அதற்கு வேறாகிய சேதுவான ஆன்மாவை அடையாதென்பார், 'மரணமுதய மொன்றில' எனவுங் கூறினார். (12)

அவதாரிகை.

இனியாதொரு விவ்வான்மாவென்று தொடங்கி அனுதாபமில்லாதவனென்று முடிந்த சுருதியின் பொருளை ஈண்டு விளக்கிக் கூறுகின்றார்.

ஆதலிற் சிலவினையி னுலடர்ப் பவனுமல
னோதலுற் றிடுபிரம லோகமிப் பரனிவனோர்
சேதுவக் கரையடைனர் சேர்பவக் கடல்விடுவர்
சாதுயர்ப் படினுமவர் தாமிடர்ப் படுவதிலர்.

இதன் பொருள்.

ஆதலிற் சிலவினையினுல் —ஆதலால் (இவ்வான்மா) சில கன்மங்களினுல்
அடர்ப்பவனுமலன் —சம்பந்தப்பட்டவனுமல்லன்
ஓதலுற்றிடு பிரமலோகம் —சொல்லாநின்ற பிரமலோகமும்
இப்பரன் —இந்த ஆன்மாவேதான்
இவன் ஓர் சேது —இவனே ஒரு சேதுவாவான்
அக்கரையடைனர் —அந்தச் சேதுவை அடையப்பட்டவர்கள்
சேர்பவக்கடல் விடுவர் —சேரப்பட்ட பிறவிசமுத்திரத்தைவிட்டு நீங்குவார்கள்
சாதுயர்ப்படினும் —பிராணஹானியான துன்பத்தை அடைந்தபோதிலும்
அவர் தாம் இடர்ப்படுவதிலர் —அவர்கள் துன்பப்படமாட்டார்கள்.

பதசாரம்—பரோட்சமாக அதாவது பிரத்தியட்சமாகக் காணப்படாமல் அபரோட்சமாகக் காணப்படுதலால் பிரம்மத்தை 'லோகம்' என்றார். (13)

இதுவுமது—வேறு.

இசெப்பிய பொருள்க ளியாவையுஞ் சென்று சேர்வுறு வகைநின்ற சேது
வப்படிப் பட்டா லந்தனு மனந்த னருந்துய ருற்றாமுற் றிலனு
மிப்படி யிதயா காசமென் றியம்பு மீசனிவ் வுடம்பில்வே றாகிக்
கப்புறு நனவு கனவுறக் கத்தைக் கண்டவை கடந்துநிற் கின்றான்.

இதன் பொருள்.

செப்பியபொருள்கள் —(அந்தவான்மா) பல பிரிவாகச் சொல்லிய பொருள்கள்
யாவையும் —அனைத்தும்
சென்றுசேர் வுறுவகை —நசித்துப்போகாவண்ணம்
நின்ற சேது —நிலையுற்றுநிற்கின்ற சேதுவாவான்

| | |
|---|---|
| அப்படிப்பட்டால் | —அந்தச் சேதுவான ஆன்மாவாகப்பவித்தால் |
| அந்தனுமனந்தன் | —குருடனும் குருடனுகான் |
| அருந்துயருற்றும் | —தாங்கற்கரிய துன்பத்தை அடைந்தும் |
| உற்றிலனும் | —அடையாதவனுவான் |
| இப்படி இதயாகாசமென்று | —இவ்வண்ணம் தகராகாசமென்று |
| இயம்புமீசன் | —சொல்லப்பட்ட ஈசன் |
| இவ்வுடம்பில் | —இந்தத்தேகத்தைக்காட்டிலும் |
| வேருகிக்கப்புறு | —வேறுபட்டு முப்பிரிவாகிய |
| நனவுகன வுறக்கத்தைக்கண்டு | —சாக்கிர சொப்பன சுழுத்தியை அறிந்து |
| அவைகடந்து நிற்கின்ருன் | —அவைகளைக் கடந்து நிற்கின்ருன். |

பதசாரம்—சாகரத்திற்குக் கரைபோல சமுசாரசாகரம் அணுகாமல் நிற்கும் எல்லையாய் வருணுச்சிரம முதலிய பேதத்தால் கிரியாகாரக பலரூபமாகிய வெவ்வேறு நிபந்தனையுடைய பிரபஞ்சத்தை ஒன்ருேடொன்று சாங்கரியப்பட்டு அழியாமல் தரிக்கின்ருனென்பார், 'செப்பிய பொருள்களியாவையுஞ் சென்று சேர்வுற வகைநின்றசேது' எனவும், பாவசம்பந்தமில்லாது தேகாதிகளுக்கு வேருய்ச் சேதுவான பரமான்ம வஸ்துவைத்தானுக அடைந்தவன் குருடு முதலிய தருமங்கள் தூலசரீர முதலிய தருமியோடு நீங்கலால் இவற்ருேடு சம்பந்தமுருனென்பார், 'அப்படிப்பட்டா லந்தனுமனந்தன்' எனவும், தேகமுதலியவைகளும் சாக்கிர முதலிய அவஸ்தைகளும், சடமாய்ச் சாட்சியமாதலில் அவைகளுக்கு அன்னியமாகச் சுயம்பிரகாச சித்துரூபனுன தகராகாசமெனச் சாற்றற்பால ஆன்மா ஒப்பத்தக்கவனென்பார், இவ்வுடம்பில் வேறகிக்கப்புறு நனவு கனவுறக்கத்தைக் கண்டவை கடந்துநிற்கின்றன்' எனவும் கூறினர். (14)

அவதாரிகை.

முந்திய கவியின் மூன்ரும் அடிவரைக்கும் தகர வித்தியாவிடயப் பிரம்மத்தை உபதேசித்து அதன்பின் சாக்கிர முதலிய அவத்தைகள் தொடராத அந்தப் பிரம்மத்தைப் பிரதிபாதிக்கின்ற அட்சிபுருஷ வித்தையைக் கூறத்தொடங்கி அனுன்ம வஸ்துவுக்குச் சாட்சியத்தன்மையைக் கூறுகின்ருர்.

தற்பரந் தன்னிற் கற்பனை யாலே சாக்கிர கனவுறக் கங்க
ளற்புத மாக விளங்குமல் லதுதா னுகவவ் வவத்தைகள் விளங்கா
கற்பனை யாகிக் காட்சியாங் கடம்போ லுடம்பினைத் தானெனக் கருதிற்
புற்புத வுடம்பாய்ச் செற்றவர் வங்கள் பொருந்துமை யுறேலினிப் பொருளில்.

இதன் பொருள்.

| | |
|---|---|
| தற்பரந்தன்னில் | —(அத்தகராகாசமான) மகாதேவனிடத்தில் |
| கற்பனையாலே | —அத்தியாசத்தாலே |
| சாக்கிரகனவுறக்கங்கள் | —சாக்கிரம் சொப்பனம் சுழுத்தி என்ற மூன்று அவஸ்தைகளும் |

அற்புதமாக விளங்குமல்லது —அதிசயமாக விளங்குகின்றதேயல்லாமல்
தாஞக வவ்வவத்தைகள் —தாஞக அந்த அவஸ்தைகள்
விளங்கா —விளங்கமாட்டாவாம்
கற்பனையாகிக் காட்சியாம் —அத்தியாசமாகித் தோற்ருநின்ற
கடம்போல் உடம்பினை —கடம்போன்ற சரீரத்தை
தானெனக்கருதில் —தானென்று நினைக்கில்
புற்புதவுடம்பாய் —நீர்க்குமிழிபோன்ற வுடம்பாய்
செற்றவார்வங்கள் —பிரியாப்பிரியங்கள்
இப்பொருளில் பொருந்தும் —இந்த எதார்த்தவஸ்துவில் வந்தடையும்
இனி ஐயுறேல் —இனிச் சந்தேகப்படவேண்டாம்.

**கருத்து**—பிரம்மசொரூபத்தில் அத்தியாசிக்கப்பட்ட சகம் சடமாகும். ஒருகால் பிரகாசித்து ஒருகால் பிரகாசியாது அன்னியாதீனப் பிரகாசமுடையதாகலின் சுயம்பிரகாசமெனின் ஆன்ம வஸ்துப்போற் சகமும் எப்பொழுதும் விளங்க வேண்டுதலினற்றன் றெனவும், சரீரத்தோடுங் கூடியவனுக்கேயன்றி இல்லையென்னுஞ் சுருதியால் தேகாபிமானமுடையவனுக்கே சுகதுக்கானுபவ லட்சணமுடைய சமுசாரமேயன்றித் தேகாதிகளுக்கு வேருகியிருக்கின்ற கேவலான்மாவை அறிகின்றவனுக்குச் சமுசாரசம்பந்தமே கிடையாதெனவுங்கொள்க. (15)

அவதாரிகை.

தகராகாச சத்தத்திற்குப் பிரம்மமே பொருளென்பதை உறுதிப்படுத்த வேண்டி மற்ருெரு சுருதியிலுள்ள ஆகாயமே நாமரூபங்களை உண்டாக்குகின்றது என்னும் வாக்கியத்தின் பொருளை ஈண்டு விளக்கிக் கூறுகின்ருர்.

உடம்புட னிருந்தே யுடம்பிலா வுண்மை
யுணர்ந்தவ னுளத்தொருக் காலும்
விடம்படு காம வெகுளிமே வாது
விளம்பிடும் பொருளெலாம் விளைக்கு
மிடம்படு மிதயா காசமற் றிதுவே
யிறப்பொடு பிறப்பிலை தென்றுந்
திடம்படும் பிரம மாவது மான்மா
வாவதுந் தேகிகட் கெல்லாம்.

இதன் பொருள்.

உடம்புடனிருந்தே —(இந்தச்)சரீரத்தோடுமிருந்தே
உடம்பிலாவுண்மை —சரீரமில்லாத வுண்மையை
உணர்ந்தவன் —அறிந்தவனது
உளத்தொருக்காலும் —மனதில் ஒருபொழுதும்

| | |
|---|---|
| விடம்படு | —விஷம்போலுண்டாகின்ற |
| காமவெகுளி மேவாது | —ராகத்துவேஷங்கள் பொருந்தாது |
| விளம்பிடும் | —சொல்லாநின்ற |
| பொருளெலாம் விளைக்கும் | —(காமரூபங்களான)பொருள்களனைத்தையும் உண்டாக்கும் |
| இடம்படும் இதயாகாசம் | —விஸ்தாரம்பொருந்திய தகராகாசம் |
| இறப்பொடு பிறப்பிலது | —சனனமரணமில்லாதது |
| என்றும் திடம்படும் | —திரிகாலங்களினும் திடம்பொருந்திய |
| பிரமமாவதும் | —பிரமமாகவிருப்பதும் |
| தேகிகட்கெல்லாம் | —சரீரிகட்கெல்லாம் |
| ஆன்மாவாவதும் | —ஆன்ம சொரூபமாயிருப்பதும் |
| மற்றிதுவே | —இந்தத் தகராகாசமேதான். (16) |

### அவதாரிகை.

அப்பரமான்ம வஸ்துவின் பூரணத்தன்மையைக் கூறுகின்றார்.

அப்பரம் பொருளே வேறொரு பரமு
 மாகிய தற்பமு மில்லை
யெப்பொரு ளாயும் விளங்கியு விளங்கா
 திருக்கின்றான் றானுமிங் கிறையே
யொப்பரும் பரம னுருத்திரன் சிவனென்
 றுரைக்க நின் றவனுடைத் தான
விப்பெருந் தன்மை யிருந்தவா றென்னே
 யெவ்ரா லறியலா மிதனே.

### இதன் பொருள்.

| | |
|---|---|
| அப்பரம் பொருளே | —அந்தப் பரவஸ்துவே |
| வேறொரு பரமுமாகியது | —அபரவஸ்து வாயுமிருக்கின்றது |
| அற்பமுமில்லை | —சிறிதேனும் வேறில்லை |
| எப்பொருளாயும் | —(பரம் அபரமென்னும்) சருவரூபமாயும் |
| விளங்கியும் | —பிரகாசித்தும் |
| விளங்காதிருக்கின்றானும் | —விளங்காமலிருக்கின்றவனும் |
| இங்கிறையே | —இவ்விடத்தில் அந்தப் பரமசிவனே |
| ஒப்பரும் பரமன் | —உவமை சொல்வதற்கரிய சுயம்பிரகாசனென்றும் |
| உருத்திரன் சிவனென்று | —உருத்திரனென்றும் சிவனென்றும் |
| உரைக்க நின்றவனுடைத்தான | —சொல்லாநின்ற இந்தப் பரமசிவனுடைய |

இப்பெருந்தன்மை —இந்தப் பூரணத்தன்மை
இருந்தவாறென்னே —இருந்தவண்ணந் தானென்னே
இதனை எவராலறியலாம் —இத்தன்மையை யாவரால் அறியலாகும். (17)

அவதாரிகை.

பிரம்மம் தனதுகாரியங்களாகிய பூதபௌதிகங்களில் இடைவிடாமல் நிறைவுற்றிருக்கின்றதென்பதைத் தெரிவிப்பதற்காகத் திருட்டாந்தத்துடன் கூறுகின்றார்.

வேறு.

இந்தமகாபூதங்கள் பிரிந்தே யெல்லையிலாநா மங்களையும் பெற்
றந்தவிகாரங் களுநிகழ் போது மவ்வவையாயே நிகழ்வதுபோன்மற்
றந்தமிலாவொன் றாகியி ருந்தே யளவறுபேதப் பலபொரு ளாயிட்
டெந்தவுபாதிக் குங்கரியாய்நின் றெங்கும்வியாபிக் கும்பர மீசன்.

இதன் பொருள்.

இந்த மகாபூதங்கள் பிரிந்து —இந்தப்பிருதிவி முதலிய நான்கு மகாபூதங்கள் கடமுதலிய பலபொருளாகப்பிரிந்து
எல்லையிலா நாமங்களையும்பெற்று—(தங்கள் விகாரங்களால்) அளவில்லாத பெயர்களையும்பெற்று
அந்தவிகாரங்களும் நிகழ்போதும்—அவ்விதவிகாரங்களும் விளங்கும்போதும்
அவ்வவையாயே நிகழ்வதுபோல் —அவ்வவைகளாகவே விளங்குவதுபோல
பரமீசன் அந்தமிலா —பரமசிவனானவன் முடிவில்லாத
ஒன்றாகியிருந்தே —ஏகமாகியிருந்தே
அளவறுபேத —அளவில்லாத பேதங்களையுடைய
பலபொருளாயிட்டு —பல பொருள்களாகி
எந்த வுபாதிக்கும் —எவ்வகைப்பட்ட வுபாதிகளுக்கும்
கரியாய் நின்று —சாட்சியாயிருந்து
எங்கும் வியாபிக்கும் —எவ்விடத்தும் நிறைந்திருக்கின்றான்.

பதசாரம்—பூதங்கள் என்றமையின் ஆகாசவுவமையுங் கூறப்பட்டதாகவில் எங்கும் நிறைவுற்றிருக்கினும் எவ்வகைப் பொருளினும்சாட்சிமாத்திரமாய் நி[ன்]ன்ற பிரம்மத்திற்கு அவற்றோடு சம்பந்தமில்லையென்பது பெற்றாம். (18

அவதாரிகை.

மகாதேவனென்னும் நாமதேய பலத்தினாலும் கடாகாய மகாகாய திருஷ்டாந்தத்தினாலும் இவ்வான்மாவுக்குச் சருவான்மபாவத்தைக் கூறுகின்றார்.

பின்னகடாகா யாதிக ளாலா காயமபேதம் பேதம்முறுதே
யன்னவனேகா காரண னேகா காரவகம்புக் காலுமனைத்தா
மன்னியபேதா காரம பேதா காரமுமாய்மா தேவனிரானே
வின்னதெனுமத் தானெனு மாறெ னியாவையுமீசா னன்பிறிதன்றே.

இதன் பொருள்.

| | |
|---|---|
| பின்னகடா காயாதிகளால் | —வேறான கடாகாய முதலியவற்றால் |
| ஆகாயம் அபேதம் | —ஆகாயமானது அபேதமேதான் |
| பேதமுறாது | —பேதமடையாது (அதுபோல) |
| அன்னவன் ஏகாகாரன் | —அந்தப்பரமசிவன் அபின்னனாவான் |
| அனேகாகார | —பல பின்னங்களாயுள்ள |
| அகம்புக்காலும் | —இதயங்கள் புகுந்திருந்திடினும் |
| அனைத்தாமன்னிய | —அவ்வாறாக நிலைபெற்ற |
| பேதாகாரம் அபேதாகாரமுமாய் | —பின்னமாகவும் அபின்னமாகவும் |
| மாதேவனிரானேல் | —மகாதேவனிராவிடில் |
| இன்னதென் | —மகாதேவனென்னும் |
| நாமத்தானெனுமாறு | —நாமத்தையுடையனென்னுந்தன்மை |
| என் | —என்னாகும் (ஆகையால்) |
| யாவையும் ஈசானன் பிறிதன்று | —அனைத்தும் மகாதேவனேயன்றி வேறல்ல. |

**பதசாரம்**—மகாதேவனென்னும் பெயருடையவன் எதார்த்தமாகவே மகாதேவனேதான் அங்ஙனமில்லாவிடில் மகானாய்ச் சொப்பிரகாசனான தேவன் மகாதேவனென்றபெயர் எங்ஙனஞ் சித்திக்குமென்பார், 'இன்னதெனாமத் தானெனுமாறென்' என்றார். இங்ஙனங்கூறிய ஆகாய திருட்டாந்தத்தால் ஆன்மாவுக்குச் சர்வான்மபாவமான அபேதமே உண்மையென்பது பெறப்பட்டது. (19)

அவதாரிகை.

பரமசிவமே அனைத்தினும் பிரகாசிக்கின்றதெனே நிச்சயிக்கின்ற புத்தியெதுவோ, அஃது சித்துருபமான பராசத்தியேதான் வேறில்லையெனக் கூறுகின்றார்.

வேறு.

உளவாகியு மில்வாகியு முருவாலெவை யிலகு
மொளியானவ னவனேயவை யவையாயொளிர் வுறுவா
னளவாவகை சிவனேயடை யவுமானவ னெனவே
தெளிவாகிய மதியாததுசிவையாவது தெளிவீர்.

இதன் பொருள்.

| | |
|---|---|
| உளவாகியும் இலவாகியும் | —இருக்கின்றனவாயும் இல்லாதனவாயும் |
| உருவால் | —உருவங்களால் |
| எவை இலகும் | —எவ்வெப்பொருள்கள் விளங்குகின்றனவோ |
| அவையவையா | —அவ்வப்பொருள்களாக |
| ஒளியானவனவனே | —சுயம்பிரகாசனான அச்சிவனே |

ஒளிர்வுறுவான் —விளங்குவான்
அளவாவகை சிவனே —அளவிடக்கூடாதபடி அச்சிவனே
அடையவுமானவன் எனவே —சருவமும் ஆனவனென்றே
தெளிவாகிய —தெளிந்த
மதியாது அது —புத்தியெதுவோ அந்தப் பிரக்ஞையே
சிவையாவது தெளிவீர் —சிவையாகுந் தன்மையை உணர்வீர்கள். (20)

அவதாரிகை.

எவனுக்கு அனைத்தும் சிவ (பாரமார்த்திக)மாகவே பிரகாசிக்கின்றதோ அவனுக்குச் சனன மரண சமுசார பந்தமெவையுமில்லையெனக் கூறுகின்றார்.

சிவனேயக மெனமேதிகழ் வுறுவானித மெனநின்
றவனேயுட லதுமாய்நிகழ் பவன்வேறிலை யானாற்
பவமேதது விடலேதொரு படியாயுள பரனே
யிவனேகமு மெனவோர்பொழு திறவாரவர் பிறவார்.

இதன் பொருள்.

சிவனே அகமெனவே —பரமசிவனே நானென்று சொல்லும்படி
திகழ்வுறுவான் —விளங்குகின்றான்
இதமென நின்று —இதுவென்று சொல்லும்படி நின்று
உடலதுமாய் —சரீரமுமாகி
அவனே நிகழ்பவன் —அந்தப்பரமசிவனே விளங்கப்பட்டவன்
வேறிலையானால் —அந்தச் சிவனைத்தவிர வேறொன்றுமில்லையானால்
பவமேது அதுவிடலேது —பந்தமேது அந்தப்பந்தம் நீங்கிய முத்தியேது
ஒருபடியாயுள —ஏகசுபாவமாயுள்ள
பரனே இவனேகமுமென—அப்பரமசிவனே இந்த எல்லாப்பொருள்களுமென்று
ஓர்பொழுது இறவார் —உணரும்பொழுதில் மரிக்கமாட்டார்கள்.
அவர் பிறவார் —அவர்கள் ஜனிக்கவுமாட்டார்கள். (21)

அவதாரிகை.

இந்த மேலான அனுபவம் பரமசிவன் பிரசன்னனாகி இருந்திடில் கிடைக்குமே யன்றி மற்றொரு உபாயங்களால் கிடையாதெனச் சிவமகிமையைக் கூறுகின்றார்

பரையாமதி யுடையாரறு பவமாய்நிகழ் வதுநா
னுரையாடிய படியேயுள் வொளியாய்நிகழ் சிவனார்
வரையாவரு ளதனல்வரு மிதுமாதவ முதலா
நிரையாயிர வழியாலிது நிகழாதிது நிகழா.

## இதன் பொருள்.

பரையாமதியுடையார் —மேன்மையாகிய புத்தியையுடையவர்கள்
அனுபவமாய் நிகழ்வதும் —அனுபவமாக விளங்குவதும்
நானுரையாடியபடியே உளது —யானுபதேசித்தபடியே இருக்கின்றது
ஒளியாய்நிகழ் சிவனார் —சுயஞ்சோதியாய்விளங்குகின்றபரமசிவனுடைய
வரையாவருளதனால் —நீக்கத்தகாத திருவருளால்
இதுவரும் —இப்பிரமாநுபூதியானது வருமேயன்றி
மாதவமுதலாம் —பெருமைபொருந்திய தவமுதலிய
நிரையாயிரவழியால் —ஒழுங்காகிய பலவழிகளாலும்
இது நிகழாது —இவ்வனுபவம் விளங்காது
இது நிகழா —இவ்வனுபம் விளங்காது

**பதசாரம்**—எனவே வடநூலிலுள்ளபடி சுயஞ்சோதியினுடைய நீக்கத்தகாத திருவருளாலேயேயன்றி அரியயன்முதல் எத்தேவர்களாலும் ஒழுங்காகிய பலவழிகளாலும் இப்பிரமானுபவத்தைக் கொடுத்தற்கு அரிதென்பதுபெற்றாம்.

## வேறு.

திவகா னெழில்வேறே சிலவொளி திகழ்வாமோ
வவமுற விருள்போகா தவனெதிர் நிலையாமோ
சிவதின கரனாலே செறிபவ விருணோரா
வவனொளி தனின்மாலு னமரர்க ளறிவோமோ

## இதன் பொருள்.

திவகரனெழில் —சூரியனுதயமானால்
வேறே சிலவொளி —வேறான (நக்ஷத்திர முதலிய) சில பிரகாசங்கள்
திகழ்வாமோ —பிரகாசமாகுமோ
அவமுற விருள்போகாது —இருள் க்ஷணிகமாய்ந்து போவதேயன்றி
அவனெதிர் நிலையாமோ —அச்சூரியன்முன்பு நிலையாக நிற்குமோ (அதுபோல)
சிவதினகரனாலே —சிவனென்னுஞ் சூரியனாலே
செறிபவவிருள் நேரா—நெருங்கிய பந்தமாகிய இருள் எதிர்நிற்காமல் போய்விடும்
அவனொளிதனில் —அச்சிவனது பிரகாசத்தின் முன்பு
மால் நான் —நாராயணன் (பிரமனாகிய) நான்
அமரர்கள் —(மற்றைத்)தேவர்கள் (எல்லாரும்)
அறிவோமோ —பிரகாசமுடையவர்களாக அறியப்படுவோமோ. (23)

புரணநல் லறிவாகப் புகலுறு பரமீசன்
சரணினை தலுமாரா தனைபுரி தலுமல்லான்
மரணம தறவேறோர் வழிசொல விலையானு
லரணம துறநங்கட் கடையவு மவனன்றோ.

இதன் பொருள்.

புகலுறுபரமீசன் சரண்—சொல்லப்பட்ட பரமேசனுடைய திருவடித்தாமரையை
புரண நல்லறிவாக —பூரணமாக விளங்கும் நல்லுணர்வாக
நினைதலும் ஆராதனைபுரிதலும் அல்லால்—தியானித்தலும் பூசைசெய்தலும்அன்றி
மரணமதற வேறோர்வழி —பிறப்பிறப்பு நீங்குதற்கு மற்றோர்வழியை
சொலவிலை —சொல்லவில்லை
ஆனல் —இவ்வாறாயின்
நங்கட்கு அரணமதற அடையவும்—எங்களுக்குக் காப்பாக அனைத்தும்
அவனன்றோ —அந்தப் பரமசிவனேயல்லவா. (24)

வேறு.

ஆகமங்கள் பலவுமுரை யாடுகின்ற திவனையநு
போகமொன்றி லறியுமறி வாகிநின்ற புனிதனிவ
னேகனந்த வநுபவம தேயிவன்றன் வடிவதனை
யோகமொன்ற வருள்பவனு மோதுகின்ற பரமசிவன்.

இதன் பொருள்.

இவனை —இந்தப் பரமசிவனையே
ஆகமங்கள் பலவும் —வேதாகமங்கள் அனைத்தும்
உரையாடுகின்றது —சொல்லுகின்றது
அநுபோகமொன்றில் —சுவாநுபவம் ஒன்றினல்மாத்திரம்
அறியும் அறிவாகிநின்ற —அறியப்படுகின்ற உணர்வாகிநின்ற
புனிதன் இவன் ஏகன்—புண்ணியசொரூபன் இந்தப்பரமசிவனே அத்துவிதன்
அந்த அனுபவமதே —(பிரம நிட்டர்களுடைய) அவ்வனுபமே
இவன்றன்வடிவு —இந்தப் பரமசிவனது சொரூபம்
அதனை யோகமொன்ற —அச்சொரூபத்தை மேன்மைபொருந்த
அருள்பவனும் —அநுக்கிரகஞ் செய்பவனும்
ஓதுகின்ற பரமசிவன் —வேதங்களாற் சொல்லாநின்ற பரமசிவனேதான். (25)

நானுமந்த வரியமரர் ஞாலமொன்று நார்விதத
யோனியிந்த முழுதுமத னுடெழுந்த சிறுநிவலே
தானொழிந்து சிறிதில்சிவ சாகரந்த னிகாரியை
யூனமொன்று மெனமொழிவ ரோர்வொழிந்த வுணர்விலிகள்.

இதன் பொருள்.

நானும் அந்தவரி அமரர் —நானும் அந்த நாராயணரும் தேவர்களும்
ஞாலமொன்று நரர் —பூமியின் கண்ணேபொருந்திய மனிதர்களும்
விவிதயோனி இந்த முழுதும் —நானாவிதயோனி பேதங்களும் இவையனைத்தும்
அதனூடெழுந்த —பரமசிவனென்னுஞ் சாகரத்தூடெழுந்த
சிறுதிவலை தான் —சிறிய துளியேதான்
ஒழிந்து சிறிதில் —இதற்கு வேறாக அற்பமுமில்லை
சிவசாகரந்தனிகர் —அந்தச் சிவசாகரத்திற்குச் சமானமாக
அரியை —விட்டுணுவையும்
ஊனமொன்று மெனை —தாழ்வுபொருந்தும் என்னையும்
ஓர்வொழிந்த —ஆராய்ச்சியில்லாத
உணர்விலிகள் மொழிவர் —அவிவேகிள் கூறுவார்கள். (26)

வேறு.

எறிகதிர்க்குநிக ராகின்மின்மினி யிறைக்குநேரரியு மெட்டிதா
னறுவிரைக்கொளகில் சந்தொடொக்குமெனி னானுமப்பரம னோடுநே
ரறிவினுக்கறிவி லாமை நேரகில நாயகர்க்கொருவர் நேரெனிற்
செறியவுற்றவறி யாமையின்செயலி ருந்தவாறெனது செப்புவேன்.

இதன் பொருள்.

எரிகதிர்க்கு —பிரகாசிக்கின்ற சூரியனுக்கு
மின்மினி நிகராகில் —மின்மினிப்பூச்சியானது சமானமாயின்
இறைக்கு —பரமசிவனுக்கு
அரியும்நேர் —விட்டுணுவும் சமானமாவன்
எட்டிதான் —எட்டிமரமானது
நறுவிரைக்கொள் —நல்லவாசனையை அடைந்திருக்கின்ற
அகில் சந்தொடு —அகில் கட்டைக்கும் சந்தனக்கட்டைக்கும்
ஒக்குமெனில் —நிகராகுமாயின்
நானும் —(சிருட்டிசெய்யும்)யானும்
அப்பரமனோடு நேர் —அப்பரமசிவனுக்குச் சமானமாவேன்
அகிலநாயகற்கு —சருவ லோகாதிபதியாகிய மகாதேவனுக்கு
ஒருவர் நேரெனில் —ஒருவர் சமானமாவரென்றால்
அறிவினுக்கு அறிவிலாமை நேர் —ஞானத்திற்கு அஞ்ஞானமானது நேராகும்
செறியவுற்ற —பொருந்தும்படியிராநின்ற
அறியாமையின் செயல் —அஞ்ஞானத்தின் செய்கை

இருந்தவாறெனது —இருந்தவண்ணமதனை என்னவென்று
செப்புவேன் —சொல்லுவேன். (27)

ஓதலுற்றபர னாலனைத்துமுள தாவதப்பரம னொன்றினா
லாதலுற்றிலன னாதிமுற்றுமவ னாலெறிப்பததி ரேகமா
வேதனத்தவ ரனைத்துமத்துவித மாய்விழிப்பர்விவி தத்திலே
போதமற்றவர்வி ழிப்பர் மற்றவர்கள் போதமற்றவர்கள் புல்லியோர்.

இதன் பொருள்.

ஓதலுற்றபரனால் —சொல்லப்பட்ட பரமசிவனால்
அனைத்தும் உளதாவது —யாவும் இருக்கின்றதாகப்பவிக்கின்றது
அப்பரமன் ஒன்றினால் —அந்தப்பரமசிவன் மற்றொன்றினால்
ஆதலுற்றிலன் —உற்பவிக்கமாட்டான்
அனாதி முற்றும் —அனாதியாயுள்ள (சகமனைத்தும்)
அவனாலெறிப்பது —அவனொருவனால் விளங்குகின்றது
அதிரேகமா வேதனத்தவர் —உயர்ந்த ஞானக்கண்ணையுடையவர்கள்
அனைத்தும் —சருவசகங்களையும்
அத்துவிதமாய் விழிப்பர் —துவிதமறப் பார்ப்பார்கள்
போதமற்றவர்கள் —ஞானக்கண்ணில்லாதவர்கள்
விவிதத்திலே —நானாவிதமாகிய சகத்திலே
விழிப்பர் —பார்வையைச் செலுத்துவார்கள்
அவர்கள் போதமற்றவர் —அவர்கள் அறிவையிழந்தவர்கள்
புல்லியோர் —கீழ்மக்களுமாவார்கள். (28)

அவதாரிகை.

இவ்வாறு சாந்தோக்கிய உபநிடதப்பொருளனைத்தையுஞ் சிவபெருமானெனக்கு உபதேசித்தருளியபடி உங்களுக்கு உபதேசித்தேனென்று கூறுகின்றார்.

வேறு.

இதுசகந் தானெனமு னிகழ்தலுண் டேவிவித
மெவர்களுங் காணு மறிவே
யதுபரந் தானெனமு னனுபவந் தானடையி
லதுபவந் தீரு மறிவா
முதியசந் தோகவுப நிடதநின் றோதுபொருண்
முழுதுமிங் கீசன் மொழியா
லதிசயந் தானமா ரனைவருங் கூடவழ
குறவுரைத் தேனருளி னால்.

## இதன் பொருள்.

| | |
|---|---|
| இது சகந்தானென்ன | —இது உலகந்தானென்று |
| முனிகழ்தலுண்டேல் | —முன்னிலையாக விளங்குவதுண்டெனில் |
| இவிதம் | —இவ்வித ஞானம் |
| எவர்களும் காணும் | —யாவர்களும் (இயல்பாக) அறிகின்ற |
| அறிவே அது | —ஞானமே அச்சகம் |
| பரந்தானென | —பிரமமேயென்று |
| முன் அனுபவந்தானடையில் | —முன்னாக அனுபவம் பொருந்திடில் |
| அது பவந்தீருமறிவாம் | —அவ்வநுபவமே சமுசாரபந்தம் நீங்குகின்ற ஞானமாம் |
| முதியசந்தோக வுபநிடதம் | —பழமையான சாந்தோக்கிய உபநிடதம் |
| நின்றோது பொருள்முழுதும் | —நின்றுசொல்லுகின்ற தாற்பரிய மனைத்தையும் |
| இங்கு ஈசன்மொழியால் | —இவ்விடத்தில் பரமசிவனது ஆக்கினையாலும் |
| அருளினால் | —கருணையினாலும் |
| அமரரனைவரும் | —தேவர்காள் நீங்களனைவர்களும் |
| அதிசயம்கூட | —அதிசயத்தை அடைய |
| அழகுற அறைந்தேன் | —அழகாகச் சொன்னேன். |

கருத்து—பிரம்மவித்தைக்குச் சமுசாரகாரணமாய அவித்தையினிவிர்த்தி முந்தின பிரயோஜனமாம். ஆவரண அஞ்ஞானம்நீங்கியபின் தனதுசொரூபமாயிருக்கின்ற நிரதிசயானந்த ஆவிர்ப்பாவம் இரண்டாம் பிரயோசனமாம். அவ்விரண்டுஞ் சித்திக்கவேண்டிப் பிரம்மவித்தை உபதேசிக்கப்பட்டதெனக்கொள்க. (29)

## அவதாரிகை.

விஷயங்களில் செல்லுகின்ற இருதயத்தைத் திருப்பி ஆங்கே தோன்றும் ஞானக்கண்ணினாலன்றி ஊனக்கண்ணினால் சுயமாகப்பிரகாசிக்கும் சிதாகாச சொரூபமாகிய பரமசிவனைப் பார்க்கமுடியாதென ஞானநேத்திரத்தால் அமரர்கள் பரமசிவனை அறியும்படி சூக்குமமான பொருளை உபதேசிக்கின்றார்.

## வேறு.

திண்ணி தாகவித யத்தை மீளும்வகை செய்து சிந்தனை யெலாமறப்
பண்ணி னாலறிவி லாமை யென்றுவரு பாவ கத்தையு மொழித்திடக்
கண்ணா தாய்நிகழு மக்கணன்றி யெதிர் காணொணாதுபிற தென்னவே
நுண்ணி தானபொருள் சொல்லினா னதுமெய் நோக்கினா லடைய வாக்கினான்.

## இதன் பொருள்.

| | |
|---|---|
| திண்ணிதாக இதயத்தை | —உறுதியாக இருதயத்தை |
| மீளும்வகைசெய்து | —திரும்புவிதம்செய்து |
| சிந்தனையெலாம் | —கவலைகளையெல்லாம் |

அறப்பண்ணினால் —ஒழியச்செய்தால்
அறிவிலாமையென்றுவரு —அஞ்ஞானமென்று வராநின்ற
பாவகத்தையும் ஒழித்திட —பாவனையையும் நீக்குதற்கு
கண்ணதாய் நிகழும் —ஞானநேத்திரமாகப் பிரகாசிக்கும்
அக்கணன்றி —அந்தஞான நேத்திரத்தைத்தவிர
எதிர்பிறிது காணொணாது என்னவே —நேராக வேறொன்றால் பரமசிவனைக் காணக் கூடாது என்று
ஆக்கினான் —சிருட்டிப்பவனாகிய பிரமதேவன்
அது —அந்தப் பிரம்மத்தை
மெய்நோக்கினாலடைய —ஞானநேத்திரத்தால் அமரர்கள் அடையும்படி
நுண்ணிதானபொருள் —சூக்குமமாகிய பொருளை
சொல்லினான் —உரைத்தருளினான். (30)

ஆறும் அத்தியாயம் சம்பூரணம்.

ஆகத்திருவிருத்தம் 333.



## ஏழாவது முண்டகோப உபநிடததாற்பரியம் உரைத்த அத்தியாயம்.

### அவதாரிகை.

இவ்வாறு மூன்று வேதங்களின் உபநிடதங்களுக்குப் பிரமான்ம ஐக்கியத் தன்மையை உரைசெய்து அவற்றிற்குப் பின்னதாகிய அதர்வண முண்டகோப உபநிடதத்துக்கும் அப்பிரமான்ம ஐக்கியத்தன்மையைக் கூறுகின்றார்.

நீண்டகேள் வியினாற் கல்வியா னெஞ்சா
னிச்சயித் தறியவொண் ணாத
தூண்டிடா ஞானச் சுடர்தனைச் சொரூபா
னந்தனைத் துரிசற வுளத்தே
மீண்டுகாண் பதுவே விச்சையென் றுரைப்ப
தாகவே தொடங்கினன் மெய்போ
லீண்டுலோ கங்க ளிறக்கவுற் பவிக்க
விமைப்பது விழிப்பதா மிறையோன்.

### இதன் பொருள்.

| | |
|---|---|
| நீண்ட கேள்வியினல் | —விஸ்தாரமான சிரவணத்தினலும் |
| கல்வியால் | —சாஸ்திரப் பயிற்சியினலும் |
| நெஞ்சால் நிச்சயித்தறியவொண்ணுத | —மனத்தாலும் நிச்சயித்து அறியக்கூடாத |
| தூண்டிடா ஞானச்சுடர்தனை | —தூண்டாத ஞானவிளக்கை |
| சொரூபானந்தனை | —ஆனந்தசொரூபனை |
| துரிசற உளத்தே | —குற்றமற உள்ளத்தின்கண்ணே |
| மீண்டு காண்பதுவே | —திரும்பவும் அறிவதுவே |
| விச்சையென்றுரைப்பதாகவே | —பரவித்தையென்று சொல்வதாகக்கருதி |
| மெய்போலீண்டு | —சத்தியம்போல இவ்விடத்தில் |
| லோகங்களிறக்க உற்பவிக்க | —சகங்கள் நசிக்கவும் செனிக்கவும் |
| இமைப்பது விழிப்பதாம் | —கண்களைமூடுவதும் விழிப்பதுமுள்ளவனுகிய |
| இறையோன் | —பிரமதேவன் |
| தொடங்கினன் | —ஆரம்பஞ்செய்தனன். (1) |

### அவதாரிகை.

சுருதியில் அஃது அறியப்பட்ட மாத்திரத்தில் இவ்வனைத்தும் அறியப்பட்டது ஆகின்றது முதலியவற்ருல் கேள்வி உத்தரங்களாக யாதொரு அதிஷ்டானமான அட்சரப் பிரமஞானத்தால் ஆரோபிதமாகத் தோற்றப்படுகின்ற சகல சகங்களின் ஞானம் கூறப்பட்டதோ அதனை ஈண்டுவிளக்கிக் கூறுகின்ருர்.

எப்பொருள் களுக்குந் தோற்றமு நிலையு
மிறுதியுந் தன்கணே யாகி
யொப்பிட வொன்று மின்றியே யென்று
முள்ளதா யுரையுணர் விறந்த
வப்பொரு ளேரே யறிந்தபோ தெல்லாப்
பொருள்களு மறிந்ததா மந்த
மெய்ப்பொரு டானே யெப்பொருள் களுமாய்
விளங்கலால் வேறிலா மையினல்.

### இதன் பொருள்.

| | |
|---|---|
| எப்பொருள்களுக்கும் | —சகல வஸ்துக்களுக்கும் |
| தோற்றமும் நிலையும் | —உற்பத்தியும் ஸ்திதியும் |
| இறுதியும் தன்கணேயாகி | —அழிவும் தன்னிடத்தேயுண்டாகியும் |
| ஒப்பிடவொன்று மின்றி | —(அதிஷ்டானமாய்) உவமை சொல்வதற்கு யாதொன்றுமில்லாததுவாயும் |

| | |
|---|---|
| என்றுமுள்ளதாய் | —எக்காலமும் அழிவற்றிருக்கின்றதாயும் |
| உரையுணர்விறந்த | —வாக்குமனங்களுக்கு அகோசரமாயிருக்கின்ற |
| அப்பொருள் | —அவ்வக்கரப்பொருளை |
| நேரேயறிந்தபோது | —அபரோட்சமாயறிந்தபோது |
| எல்லாப்பொருள்களும் அறிந்ததாம் | —சகலவஸ்துக்களும் அறிந்ததாகும் |
| அந்தமெய்ப்பொருள் தானே | —அந்த அக்கரப்பொருள்தானே |
| எப்பொருள்களுமாய் | —எல்லாப்பொருள்களுமாய் |
| விளங்கலால் | —விளங்குதலாலும் |
| வேறிலாமையினால் | —அப்பொருட்கு வேறாக யாதொன்றுமில்லாமையாலும் |

### பதசாரம்.

சிவசக்தி முதலிய முப்பத்தாறு அபாதத்துவங்களுக்கும் வேறாய் விளங்கலின் அழியுஞ்சடங்களான மித்தியாப் பிரபஞ்சங்களுக்கு அழியாத அக்கரப் பொருளே அதிஷ்டானமாமென்பார், **எப்பொருள்களுக்குந் தோற்றமு நிலையு மிறுதியுந் தன்கணேயாகி'** எனவும், நிருவிசேடமாதலால் வாக்குமனங்களுக்கு அவிஷயமென்பார், **உரையுணர்விறந்தவப்பொருள்'** எனவும், அவ்வதிஷ்டான பிரம்மமே ஆரோபித பிரபஞ்சத்துக்குச் சொரூபமாதலால் அதிஷ்டானமாகிய சுத்தி முதலியவற்றிற்கு வேறாகத்தோற்றிய ரசதாதிகள் பேதமாகாததுபோலப் பிரமத்திற்குவேறாகப்பிரபஞ்சம்பேதமுறாதென்பார், **'அந்தமெய்ப்பொருடானே யெப்பொருள்களுமாய் விளங்கலால்வேறிலாமையினால்'** எனவுங்கூறினார். (2)

### அவதாரிகை.

ஆரம்பத்தின் உபநிடதத்தின் விதேயப்பொருளைச் சங்கிரமாகக்கூறி இவ்விடயத்தில் இரண்டுவித்தை அறியத்தக்கதெனப் பிரம்மவித்துக்கள் சொல்லுகின்றார்களென்றதாதியாம் உபநிடதப்பொருளை ஈண்டுவிளக்கிக் கூறுகின்றார்.

இங்குநா மறிய வேண்டுவ திரண்டு விச்சையவ் விரண்டினு ளொன்று
பங்கமா மபரை பரையெனப் படுவ தொன்றதிற் பழமறை நாலு
மங்கமா றுண்மை யமையிதிகாச மாதிக ளபரையா மற்ற
தெங்குமாய் நின்ற தொன்மையா தொன்று லெய்தலா மதுவிறை யருளால்.

### இதன் பொருள்.

| | |
|---|---|
| இங்கு நாமறியவேண்டுவது | —இவ்விடத்தில் யாமறியவேண்டியது |
| இரண்டுவிச்சை | —இரண்டுவித்தைகளாகும் |
| அவ்விரண்டினுள் | —அந்த இரண்டுவித்தைகளுள் |
| ஒன்றுபங்கமாமபரை | —ஒன்றுகுறைவாகிய அபரவித்தையாகும் |
| பரையெனப்படுவதொன்று | —ஒன்று பரவித்தையெனப்படும் |

அதில் பழமறைநாலும் —அவற்றில் அநாதியான நான்குவேதங்களும்

அங்கமாறும் —(சிக்ஷை கற்பம், வியாகரணம், நிருத்தம், சந்தசு, சோதிடம்) என்ற ஆறங்கங்களும்

உண்மையமை யிதிகாசமாதிகள்—உண்மையமைந்த இதிகாச முதலியவைகளும்

அபரையாம் —அபரவித்தையாகும்

மற்றது —பரவித்தையாவது

எங்குமாய்நின்ற தொன்றை—எவ்விடத்தும் பூரணமாகி விளங்குகின்ற வஸ்துவை

இறையருளால் —பரமசிவப் பிரசாதத்தால்

யாதொன்றுலெய்தலாம் அது —யாதொன்றினுலடையலாமோ அதுவேயாகும்.

கருத்து—இருக்குவேத முதலிய சுருதியினுற் கூறப்பட்ட யாதொரு அபர வித்தையுண்டோ அஃது அநாத்ம விஷயமாதலால் அத்துவிதீய தத்துவத்தைப் பிரதிபாதிக்காது. அங்ஙனமே அவ்வபரவித்தையிலுண்டாகிய புத்திகளும் அக்கினிஹோத்திர முதலிய கர்மவிடயங்களாதலால் அநான்ம விடயங்களாகும். ஆதலின் அவை அனைத்தும் பரவித்தைஆகாமல் அபரவித்தைகளேயாமென்க.(3)

### அவதாரிகை.

எதனுல் அவ்வட்சரப்பொருள் அடையப்படுமோ அஃது பரவித்தை என்று பிரதிபாதிக்கின்ற சுருதிவாக்கியத்தை ஈண்டு விளக்கிக் கூறுகின்றார்.

காணவோ ருருவு மின்றியே தனக்கோர்
கண்செவி மூக்குவா யின்றிப்
பாணிபா தங்க ளின்றிநுண் ணியதாய்ப்
பற்றிய பொருளெலாங் கடந்து
தாணுவா யெல்லாந் தோன்றுதற் கிடமாந்
தத்தவந் தன்னைத்தன் னாலே
யாணியா யறியு மறிவது விச்சை
யாவது பிறிதெலா மவிச்சை.

### இதன் பொருள்.

காணவோருவுமின்றியே —பார்ப்பதற்கு ஓருருபமுமில்லாததாயும்

தனக்கு —தனக்கு

ஓர் கண்செவி மூக்குவாயின்றி—ஒருகண்காது மூக்குவாய் இவைகளில்லாததாயும்

பாணிபாதங்களின்றி —கைகால்களுமில்லாததாயும்

நுண்ணியதாய் —அதிசூக்குமமாயும்

பற்றிய பொருளெலாங்கடந்து—பற்றுகின்ற எல்லாப் பொருள்களையுங்கடந்து

தாணுவாய் —சிவமாயும்

எல்லாம் தோன்றுதற்கிடமாம்—ஆகாச முதலியயாவும் தோன்றுதற்கு இடமாகியுமுள்ள
தத்துவந்தன்னை —அவ்வக்கரப்பொருளை
தன்னாலே —தன் சுபாவத்தினாலே
ஆணியாய் —மேன்மையாய்
அறியுமறிவது விச்சையாவது —அறியப்பட்ட அறிவே பரவித்தையாகும்
பிறிதெலாம் அவிச்சை —மற்றவைகளெல்லாம் அபரவித்தையாகும்.

**பதசாரம்**—ஸ்தூலத்தன்மை முதலிய திரிசியதருமங்களில்லாததாகலின், '**காணவோருருவுமின்றி**' எனவும், எவன் சருவஞ்ஞன் எவன் சருவவித்து என்னுஞ் சுருதியிற்கண்ட சேதனத்தன்மை சீவேச சமுதாயமாயினும் சீவர்கள் போல ஈசனும் கண், காது முதலிய கரணமுடையவன் அன்றாகலின், தனக்**கோர் கண்செவி மூக்குவாயின்றிப் பாணிபாதங்களின்றி**' எனவும், அபஞ்சிகிருத சூக்கும பூதங்களுக்கும் காரணமாய் அவைகளுக்கும் அதிசயமான சூக்குமமாகலின் '**நுண்ணியதாய்**' எனவும், நிரவயவமாகிய நிர்க்குணத்துக்கு அவ்வவ குணங்களாலுண்டாகிய சலன வியாதியில்லாததென்பார், '**தாணுவாய்**' எனவும், அது நீயாகின்றாயென்றது முதலிய உபநிடதங்களின் மகாவாக்கியங்களால் உண்டாகிய சொருப ஞானமெனும் வித்தையால் அவ்வட்சரப் பிரம்மம் சமுசயமின்றி அடையப்படுதலாலும் ஆன்மவிடயமான அஞ்ஞானத்தை நிவிர்த்திசெய்தலால் மோட்சசாதனமாதலாலும் அவ்வான்ம ஞானத்தை '**விச்சை**' எனவும் கூறினர். (4)

### அவதாரிகை.

இவ்வாறு கூறிய காரணத் தன்மையைத் திருஷ்டாந்தங்களால் நிரூபிக்கின்றார்.

சிலந்தியு மிழ்ந்து விழுங்குவ தெப்படி தேகத்தே
மலந்தரு கேசவு ரோமம தெப்படி மண்ணிற்கே
பலந்தரு மோடதி யெப்படி யப்படி யீசன்பா
லலர்ந்த தடங்கல்வெ றுங்கன வொக்கும தாயுங்கால்.

### இதன் பொருள்.

சிலந்தி உமிழ்ந்து —சிலந்திப்பூச்சியானது நூலையுமிழ்ந்து
விழுங்குவது எப்படி —மறுபடியும் புசிப்பது எவ்வாறோ
தேகத்து மலந்தரு —உடலில் அழுக்கைக்கொடாநின்ற
கேசவுரோமமதெப்படி —சிகை முதலியவுரோமங்களெவ்வாறோ
மண்ணிற்கு பலந்தரு —பிருதிவிக்குப் பயனைத்தருகின்ற
ஓடதி எப்படி அப்படி —தானியமுதலியன எவ்வாறோ அவ்வாறே
ஈசன்பால் —பரமசிவனிடத்தில் நின்றும்
அலர்ந்து அது அடங்கல் —தோன்றி அவ்வுலகங்கள் ஒடுங்குதல்
அதாயுங்கால் —அத்தன்மையை ஆய்ந்துபார்க்குங்காலத்தில்
வெறுங்கனவொக்கும் —வீண்சொப்பனத்துக்குச் சமானமாகும்.

**கருத்து**—எப்படிச் சிலந்திப்பூச்சி மற்றோர் காரணத்தை அபேக்ஷியாமல் தனது சரீரத்தினின்றும் தந்துவை வெளிப்படுத்தித் தன்னிடத்தில்தானே அடக்குகின்றதோ அதுபோலவும், எப்படித் தானிய முதலிய ஓஷதிகள் பிருதிவியிலுண்டாகின்றனவோ அதுபோலவும், எப்படிச் சத்தாகிய புருஷனிடத்தினின்றும் அசத்தாகிய கேசவுரோமங்கள் உற்பவிக்கின்றனவோ அதுபோலவும், மற்றொரு காரணத்தினுதவியின்றி அட்சரப் பிரம்மத்தினின்றும் சலட்சண விலட்சணங்களான சேதனு சேதன சகமனைத்தும் உண்டாகின்றதெனவும், அவிக்கிரியமாகிய பிரம்மத்தினின்றும் உண்மையாக உண்டாயிற்றென்பது கூடாமையால் அஃது மாயாமயமாதலின் வீண் சொப்பனசமானமெனவுங் கொள்க. (5)

அவதாரிகை.

பிரம்மத்தினின்றும் சகம் இவ்வாறு உற்பவிக்கின்றதெனக் கூறுகின்றார்.

பன்னுத வத்திர ளூற்றப ரத்திடை யேமுன்ன
மன்னமெ ழுந்ததி னின்றுபி ராணன்ம னங்கன்மந்
தன்னிலு றும்பல லோகமும் வந்தது தாவில்லா
வின்னமு தென்றுணர் முத்தியும் வந்ததி தன்கண்ணே.

இதன் பொருள்.

| | |
|---|---|
| பன்னுதவத்திரளூற்ற | —சொல்லாநின்ற தவக்கூட்டம்பொருந்திய |
| பரத்திடை | —பிரம்மவஸ்துவினிடத்தில் |
| முன்னம் அன்னமெழுந்து | —முன்னுக அன்னமுண்டாகி |
| அதினின்று | —அதனிடத்திலிருந்து |
| பிராணன் மனம் | —(சமஷ்டி) பிராணனும் மனமும் |
| கன்மம் தன்னிலுறும் | —(வருணுசிரமாதி) கருமமும் அதிற்பொருந்திய |
| பலலோகமும் வந்தது | —நானுவுலகங்களும் தோன்றிற்று |
| தாவில்லா | —குறைவில்லாத |
| இன்னமுதென்றுணர் | —இனியவமுதமென்றுணரத்தக்க |
| முத்தியும் | —சொர்க்கபதவியும் |
| இதன்கண்ணே வந்தது | —இந்தப் பிரம்மத்தினிடத்தே தோன்றிற்று. |

**பதசாரம்**—பரிபக்குவமுடைய பிராணிகளின் கருமவசத்தாலுண்டாகிய சிருட்டிக்கத்தக்க பரியாலோசனுரூபமான ஞானத்தால் முன்னம் நிருவிகற்பமான பிரம்மம் கிஞ்சித்து விகற்பமுடையதாயிற்று. அந்தப் பிரம்மத்தினின்றும் சமுசாரிகளால் புசிக்கப்படுதலின் அன்னமென்னும் போக்கியப் பிரபஞ்சத்தின் காரணமான அவ்வியாகிருத தத்துவமுண்டாயிற்றென்பார், 'தவத்திரளூற்ற பரத்திடையே முன்னமன்னமெழுந்தது' எனவும், உண்டாகிய அவ்வியாகிருதத்தினின்றும் மண் அப்பு காற்று இவைகளின் சம்பந்தத்தால் உச்சூனு அவஸ்தை

யுடைய பீசத்தினின்றும் அங்குரந்தோன்றுதல்போல் அபஞ்சீகிருத பஞ்சபூதமும் அதன்காரியமான இலிங்கசரீரமுமான சமட்டியுபாதியுடைய சருவஞ்ஞனை பிராணனென்னும் இரணியகருப்பனுண்டானனெனவும், அதனாலே அபஞ்சீகிருத பூதங்களின் சத்துவரஜோங்கிச பரிணமமான இலிங்க சரீரமும் உண்டாயிற்றெனவும், அந்தப் பிராணனினின்றும் பஞ்சீகரணோபயோகியான மனமுண்டாயிற்றெனவும், அம்மனத்தினின்றும் பஞ்சீகிருத பஞ்சபூதங்களும் அவற்றினின்றும் அண்டங்களும் அவற்றினின்றும் பூலோகாதிகளும் அவைகளினின்றும் மானுடர்களுடைய வருணாசிரமங்களான கருமங்களும் அவற்றில் நின்றும் கற்பகோடி காலமிருத்தலால் அழியாத ஜீவபரமவைக்கியவமுநமாம் முத்தியென்னும் பலமும் முறையே உண்டாயிற்றென்பது பெறப்பட்டது. (6)

அவதாரிகை.

மேற்கூறிய சக உற்பவப் பொருளை ஈண்டு உபசங்கிரகிக்கின்றார்.

யாதுமு ணர்ந்தெவை யுஞ்செய வல்லவ னியாரியாவன்
போதம யந்தவ மாவுடை யன்படி வம்பேரன்
னாதிக ளங்கணி கழ்ந்தத டங்கலு நானாவா
யாதிவ ரும்பிர மங்கன வொக்குமி தாயுங்கால்.

இதன் பொருள்.

யாது முணர்ந்து —எல்லாவற்றையும் அறிந்து
எவையுஞ்செய்ய —எல்லாவற்றையுஞ்செய்ய
வல்லவன் யார் —(வியாவகாரிக பாரமார்த்திக) சர்வஞ்ஞயுள்ளவனெவனோ
யாவன்போதமயந் தவமாவுடையன்—எவன் ஞானமே தவமயமாகவுடையவன்
அங்கண் படிவம் பேர் —அப்பிரம்மத்தினிடத்தில் உருவமும் பெயரும்
அன்னாதிகள் அடங்கலும் —அன்ன முதலியவைகளும் இவையெல்லாம்
நானாவாய் நிகழ்ந்தது —பலவிதமாக உண்டாகி விளங்குகின்றது
பிரமம் ஆதிவரும் —இரணியகருப்பனென்னும் பிரமமும் முதன்மையாக உண்டாவன்
இதாயுங்கால் —இதனை ஆய்ந்துபார்க்குங்காலத்தில்
கனவொக்கும் —சொப்பன சமானமாகும்

**கருத்து**—எவன் சாமானியமாகவும் விசேடமாகவும் அனைத்தையும் அறிகின்றானோ அவன் சருவக்கியனாதலால் அவனது தவம் கிருச்சிர சாந்திராயண முதலிய விலக்கணமுடைய சடத்துவமில்லாத ஞானரூபமாகும். அத்தவமுடைய அப்பிரம்மத்தினின்றும் காரியரூபமான இரணியகருப்பனென்னும் பெயரையுடைய பிரம்மமும் தேவதத்தன் எஞ்ஞதத்தன் முதலிய நாமதேயமும் அதன் அபிதேயரூபமான நீலபீத முதலிய ரூபமுடைய எல்லாத் திரவிய சாதிகளும்

சமுசாரிகளால் புசிக்கப்படுகின்ற போக்கியப்பிரபஞ்ச நெல் முதலான அன்னங்களும் கிரமமாகப் பிரதீதிமாத்திரமாய் உண்டாயிற்றெனக்கொள்க. (7)

அவதாரிகை.

இவ்வாறு பரவித்தியாவிடையமான பிரம்மத்தைச் சொரூபம் தடஸ்தமென்னும் இலக்கணங்களால் உபதேசித்து அந்தப் பிரம்மஞானம் மோட்சசாதனமன்றி வேறு சாதனங்கிடையாது, சுருதி மந்திரங்களில் அபரவித்தியாவிடயமான கருமங்களைச் சொல்லுதல் வைராக்கியத்தை உண்டுபண்ணும் பொருட்டாதலால் அஃது சித்தித்திருத்தலால் அவ்வபரவித்தியா விடயமான கருமபாகங்களுக்கும் வலிமையில்லாத வோடங்களென்றது முதலான சுருதியினால் கூறப்பட்ட மோட்சசாதனு பாவத்தன்மையைக் கூறுகின்றார்.

வேறு.

அக்கரமாகி மெய்மையா யுள்ள வப்பொரு ளறிந்தபோ தல்லா
லெக்கருமங்க ளாலும்வீ டில்லை யாகமா திகளியற் றுங்காற்
றுக்கரமாகி யனித்தமாய்ப் பேறுஞ் சுருக்கமா யிருக்கமற் றிவற்றைத்
திக்கறியாதே முயல்பவர் முத்தி செறிந்திடார் மாணமே செறிவார்

இதன் பொருள்.

அக்கரமாகி மெய்மையாயுள்ள —அழிவில்லாததாயும் சத்தியமாயுமுள்ள
அப்பொருள் அறிந்தபோதல்லால்—அவ்வஸ்துவை அறிந்தபோதல்லாமல்
எக்கருமங்களாலும் வீடில்லை —எந்தக்கருமங்களாலும் மோட்சமில்லை.
யாகமாதிகளியற்றுங்கால் —யாகாதிகள் செய்யுங்காலத்தில்
பேறும் —அவைகளால் பெறுகின்ற சொர்க்கபதவியும்
துக்கரமாகி அனித்தமாய் —கிடையாததாயும் அனித்தியமாயும்
சுருக்கமாயிருக்க —அற்பமாயும் இருக்கவும்
மற்றிவற்றை —இந்த யாகாதிகளைச்(செய்ய)
திக்கறியாதே முயல்பவர் —திசைதெரியாமல் முயற்சிசெய்பவர்கள்
முத்தி செறிந்திடார் —மோட்சத்தை அடையமாட்டார்கள்
மரணமே செறிவார் —மரணத்தையே அடைவார்கள்.

கருத்து—திடமுடைய ஓடமே அக்கரைசேர்க்கும். மற்றை ஓடமோவென்னில் சமுத்திரத்தின்மத்தியில் கவிழ்த்துவிடும். அதுபோல் கருமங்கள் அவ்வவற்றின் பலாபலங்களை யளிப்பவையேயன்றி நேரான மோட்ச ஏதுவாகாதென்றுணர்க.

அவதாரிகை.

அவ்வவற்றின் பலாபலங்களுக்குத்தக்க சொர்க்காதி போகங்களையளிக்கும் கருமமேபரமபுருஷார்த்தசாதனமென்றெண்ணுகின்றவர்களைநிந்தித்துக் கூறுகின்றார்.

கருமதற் பராராய் நாங்களே யெல்லாங் கற்றவ ரென்றிருக் கின்ற
பெருமித முடையார் மூடரே பிறவா நெறியையும் பெறுகிலார் பிறவிக்
குருடர்கைப் பற்றிப் போகிய குருடர் குழியிலே கூடவீழ் வதுபோன்
மருவிய வினையுந் தாங்களுங் கூட மாய்வதே யன்றிமற் றிலையே

## இதன் பொருள்.

கருமதற்பராராய் —கர்மநிஷ்டர்களாய்
நாங்களே எல்லாம் —யாங்களே சாஸ்திரங்களனைத்தையும்
கற்றவரென்றிருக்கின்ற —படித்த வித்துவான்களென்றிருக்கின்ற
பெருமிதமுடையார் மூடரே —செருக்குடையார் மூடர்களேதான்
பிறவா நெறியையும் பெறுகிலார்—முத்திமார்க்கத்தையும் பெறமாட்டார்கள்
பிறவிக்குருடர் கைப்பற்றி—பிறவிக்குருடருடைய கையைப்பிடித்துக்கொண்டு
போகிய குருடர் —போகின்ற குருடரும்
குழியிலேகூட விழ்வதுபோல்—கூடவே பாழுங்கிணற்றில் விழுவதுபோல
மருவிய வினையும் —பொருந்திய கருமமும்
தாங்களும் —(கர்மாபிமானிகளாகிய)தாங்களும்
கூடமாய்வதேயன்றி மற்றிலை —ஒன்றாக மடிவதேயன்றி வேறில்லை.

பதசாரம்—தோன்றியும் நின்றும் அழிந்தும் இவ்வாறு மாறிமாறிவருகின்ற சொர்க்க முதலிய காரியபலங்களுக்குச் சாதனமாகிய கருமங்களை மோட்சசாதனமென வேறுபாடாகக் கொண்டமையின் அக்கருமநிஷ்டர்களை 'மூடர்' என்றார்.(9)

## இதுவுமது—வேறு.

தொலையுநல் வினைப்பயன் தொலைந்த போதிலே
தலையது கீழுற விழுகை தப்புமோ
நிலையுறு முத்திநேர் படுத னெஞ்சிலே
யலைவறு ஞானமுண் டாகி லல்லவோ.

## இதன் பொருள்.

தொலையு நல்வினைப் பயன் —(இவ்வாறு) நல்வினைப்பயனுந் தொலைந்துவிடும்
தொலைந்தபோதிலே —(அது)தொலைந்தகாலத்தில்
தலையது கீழுற —(சுவர்க்க முதலிய வுலகங்களினின்றும்) தலைகீழாக
விழுகைதப்புமோ —வீழ்தல் தப்புங்கொலோ
நெஞ்சிலே அலைவறு —மனத்தின் கண்ணே சலனமில்லாத
ஞானமுண்டாகிலல்லவோ —சொரூப ஞானமுண்டானலல்லவோ
நிலையுறுமுத்தி நேர்படுதல் —திரமாகிய மோட்சம் பொருந்துவது. (10)

அவதாரிகை.

இவ்வாறு சுருதிகூறிய அபாவித்தியாவிடயமான கருமநிந்தையைக்கூறி, கருமத்தால் சாதிக்கப்பட்ட அனித்தியமான இகபர உலகங்களைப் பரீட்சித்து என்ற சுருதிகூறிய வைராக்கியத்தை ஈண்டு விளக்கிக் கூறுகின்றார்.

சுருதியு மிருதியுஞ் சொன்ன வாறுநின்
றிருமையு மனித்தமென் றேதும் விட்டுநற்
குருவினை வழிபடிற் கோதி லாவவ
னருளிடு மழிவற நின்ற வப்பொருள்.

இதன் பொருள்.

சுருதியு மிருதியும் —வேதமும் ஸ்மிருதியும்
சொன்னவாறு நின்று —சொல்லிய மார்க்கங்களை அனுஷ்டித்து
இருமையும் அனித்தமென்று —இகபரமிரண்டும்அனித்தியமென்று
ஏதும்விட்டு —அவையனைத்தையும்விடுத்து
நற்குருவினை வழிபடில் —சற்குருவை சரணமடைந்தால்
கோதிலாவவன் —குற்றமில்லாத அத்தேசிகன்
அழிவறநின்ற —நாசரகிதமான
அப்பொருள் அருளிடும் —அந்தப்பரவித்தையை அருள்செய்வான். (11)

அவதாரிகை.

முற்கவியினால் கன்மத்தால் மோட்சம்கிடையாதென்றும், சுரோத்திரியனாகிய பிரம்ம நிஷ்டனான சற்குருவைச் சரணமடையவேண்டுமென்றும், அப்பரமகுரு அவித்தியாவிடயமாகிய சமுசார பலத்தினின்றும்விரக்தனான அதிகாரியின்பொருட்டுப்பிரம்மவித்தையைக் கொடுக்கவேண்டுமென்று முபதேசித்த சுருதிவாக்கியத்தைக்கூறி, இப்பொருள் சத்தியமென்ற சுருதியினால் பிரம்மத்துக்கே சத்தியத்தன்மை கூடுமாயின் சீவர்களுமதற்கு வேறாக விருக்கின்றார்களென்று சங்கித்து அவர்களும் பிரம்மத்துக்கு வேறில்லையென உபமானத்தால் கூறுகின்றார்.

வேறு.

எங்குநி றைந்தப ரத்தினி லோகமெ ழுந்தழி யும்படிதா
னங்கியெ ழும்பொறி போலும கம்புற மாயது மாயையெனுங்
கங்குல்க டந்துயி ருக்குயி ராயொரு காலழி வற்றகமா
யங்கபி ராணன்ம னங்கள றுஞ்சிவ னாகிய வக்கரமே.

இதன் பொருள்.

எங்குநிறைந்த பரத்தினில் —எவ்விடத்தும் பூரணமாய்நிறைந்த பிரம்மத்தில்
லோகம் எழுந்தழியும்படிதான்—இவ்வுயிர்கள்உண்டாகி அழியுந்தன்மையானது

அங்கி எழும் —அக்கினியினிடத்தில் உண்டாகின்ற
பொறிபோலும் —பொறிகளைப்போலாகும்
அகம்புறமாயதும் —உள்ளும் வெளியும் வியாபித்திருப்பதும்
மாயையெனும் —மாயையென்று சொல்லப்பட்ட
கங்குல் கடந்து —அந்தகாரத்தைக்கடந்து
உயிருக்குயிராய் ஒருகாலழிவற்று—உயிருக்குயிராகி ஒருகாலத்துமழிவில்லாமல்
அகமாய் அங்க பிராணன் —அகம்பதமாகித் தேகம் பிராணன்
மனங்கள் அறும்—மனம் (புத்திசித்தம் அகங்காரம்) என்னும் இவைகள் இல்லாத
சிவனாகிய அக்கரமே —பரமசிவனாகிய அட்சரப்பொருளேதான்.

**கருத்து**—சுவாலையுடைய அனலினின்றும் உபாதிவசத்தால் தீப்பொறியுண்டாயினும் அவ்வனலுக்கு வேறில்லாததுபோல் சித்துருபர்களாகிய இச்சீவர்களும் தேகேந்திரிய முதலிய சீவவிலக்கணமுடைய உபாதியின்வசத்தால் சித்துருபமாகிய பிரம்மத்தினின்றும் உற்பன்னர்களாகி உபாதி லயத்தால் அப்பரமசிவமென்னும் அட்சரவஸ்துவினிடத்தே பரிச்சேதமில்லாத மகாகாசத்தில் கடாகாச முதலியதுபோல் லயிப்பவர்களாதலில் அச்சிவத்துக்கு வேறில்லாதவர்களென்பதுதோன்ற 'லோகமேழுந்தழியும்படி தானங்கீ யெழும்பொறிபோல்' எனவும், தருமாதருமங்களைக் காரணமாகவுடைய சகல சமுசாரமுழுமையும் மனத்தைச்சார்ந்ததனால் அம்மனமில்லாமையின்போக்கியப் பிரபஞ்சத்துக்கு உபாதான காரணமாகிய மாயைக்கும் அதனைப்புசிக்கின்ற சோபாதிகனாகிய சீவனுக்கும், நிருபாதிகனாகிய அக்கரப் பொருளாம் சிவசொரூப ஆன்மா வேறுவானென்பார், 'மாயையெனுங் கங்குல்கடந்துயிருக்குயிராய்' எனவுங் கூறினர்.

வடநூலில் இவ்வக்கரத்தினின்றும் பிராணன் மனம் இருவகை இந்திரியங்கள் பஞ்சபூதங்கள் இவ்வனைத்தும் உண்டாயிற்றென்று கூறியது எற்றுக்கெனின் உற்பத்திக்கு முன்னில்லாத பிராணன் முதலியவற்றோடும் இவற்றிற்குக்காரணமாகிய பிரம்மம் கூடியிராதெனற் பொருட்டாகலினென்க. (12

## வேறு.

அங்கிதலை வாய்விவித மானமறை பானு
திங்கள்விழி யெண்டிசைக ளுஞ்செவிகள் வாயு
தங்குமுயிர் தன்னிதய மேசகல முங்கா
லிங்கவனி சங்கானி ருக்கும்வடி வீதால்

## இதன் பொருள்.

அங்கிதலை —அக்கினியென்னும் வானுலகுசிரமாகும்
வாய்விவிதமான மறை —வாக்குப் பலவிதமான வேதங்களாகும்
பானு திங்கள் விழி —சந்திரனும் சூரியனும் கண்களாகும்

எண்டிசைகளும் செவிகள் —அஷ்டதிக்குகளும் காதுகளாகும்
வாயுதங்குமுயிர் —காற்றுதங்கியிருக்கின்ற பிராணனாகும்
தன்னிதயமே —தனது இருதயமே
சகலமும் —எல்லாவுலகங்களுமாகும்
கால் இங்கு அவனி —பாதங்கள் இவ்விடத்தில் பூமியாகும்
ஈது சங்கரன் —இதுவே பரமசிவன்
இருக்கும் வடிவு —இருக்கின்ற சுபாவம்.

**கருத்து**—இங்ஙனம்கூறிய தலை, வாய், கண், செவி, பிராணன், இருதயம், பாதம் முதலிய வடிவுடைய விராட்டும் உபாதி நீங்கிடில் பரமசிவனே என்றறிக,()

**அவதாரிகை.**

வடநூலில் முற்கூறிய சிருட்டியை விரித்துக் கூறுகின்றார்.

அர்க்கன்மதி யங்கிமழை யாதிமறை நாலு
மிக்குமிகு யாகவிவி தங்களிய மானர்
தக்கணைசு ராசுரர்ம னித்தர்பசு சாதி
யெக்கிருமி கீடமுமெ ழுஞ்சிவனி டத்தே.

**இதன் பொருள்.**

அர்க்கன்மதி —சூரியனும் சந்திரனும்
அங்கிமழையாதி —அக்கினியும் மழை முதலாயினவும்
மறைநாலும் —நான்குவேதங்களும்
மிக்குமிகுயாக விவிதங்கள் —மிகுந்த பலவிதயாகங்களும்
இயமானர் தக்கணை —இயமானரும் தக்ஷணைகளும்
சுராசுரர் மனித்தர் —தேவாசுரர்களும் மனிதர்களும்
பசுசாதி எக்கிருமிகீடமும் —பசுஜாதிகளும் சகல கிருமிகீடங்களும்
சிவனிடத்தே எழும் —சிவனிடத்தினின்றும் உண்டாகும்.

**கருத்து**—சுருதியில் பஞ்சாக்கினி வித்தையில் துயுலோகம் மழை பிருதிவீ புருடன் ஸ்திரீ என்னும் ஐந்தக்கினிகளும் உபதேசிக்கப்பட்டுத் துயுலோகாக்கினியினின்றும் உண்டாகிய சோமனிடத்தினின்றும் பர்ஜன்யமுண்டாகி அதினின்றும் பிருதிவியிலோடதியுண்டாகி அவைகள் புருடனாகிய அக்கினியில் ஆகுதிபண்ணப்பட அவ்வித அன்னரசம் ரேதோரூபமாகப் பரிணமித்துப்புருடனால் ஸ்திரீயென்னும் அக்கினியில் அஃது ஆகுதிசெய்யப்பட்டு பிரஜையாக இவ்வாறு பவித்திடினும் பிரஜைகளனைத்தும் அப்பிரம்மத்தினின்றும் உண்டாகின்றதென்றுகூறிய துங்காண்க. இவ்வாறு உற்பத்தியாகவேண்டுமானால் சிருட்டி அனாதியானதுபற்றிப் புண்ணியபாவங்களையுடைய சீவர்கள் தேவயானம் பிதிர்யானமென்னும் மார்க்கங்களால் பரலோகத்தையடைந்து முற்கூறியபடி செனிப்

பதில் சந்திரமண்டலத்தைச் சூக்குமவுபாதியாலடைந்தே செனிக்கவேண்டியிருப்பதனாலும் பிதிர்லோகத்தை அடைதற்குச் சந்திரனும் துயுலோகத்தையடைதற்குச் சூரியனும் சாதனமாகவிருத்தலால் அவர்கள் சமித்தெனவும், துயுலோக முதலியவற்றை அடைந்திடினும் செனிப்பதனால் அவைகளில் வைராக்கியம் வரவேண்டிச் சிருட்டிமத்தியில் பஞ்சாக்கினி வித்தையுமுபதேசிக்கப்பட்டதாம்.

### இதுவுமது.

மெய்ம்மைவிர தந்தவம்வி ழுப்பமுத லாகுஞ்
செம்மைதரு நல்வினைகள் செய்தனுப விக்கு
மிம்மைமறு மைப்பயன னைத்துமிறை வன்பாற்
பொய்ம்மையற வேநிகழி னுங்கனவு போலாம்.

### இதன் பொருள்.

மெய்ம்மை விரதம் —சத்தியம் விரதம்
தவம் விழுப்பமுதலாகும் —தவம் நன்மை முதலாகிய
செம்மைதரு நல்வினைகள்செய்து—செம்மையாகிய சற்கருமங்களைச்செய்து
அனுபவிக்கும் —அனுபவிக்கப்படுகின்ற
இம்மைமறுமைப் பயனனைத்தும்—இகபரமிரண்டினது பலன்யாவும்
இறைவன்பால் —பரமசிவனிடத்தில்
பொய்ம்மையறவே நிகழினும்—மெய்ம்மையாகவே பிரகாசித்திடினும்
கனவுபோலாம் —சொப்பன சமானமாகும்.

கருத்து—இவ்வாறு பிரம்மத்தினின்றும் கிரமமாகப் பிரபஞ்சமுண்டாயிருக்கினும் அது சொப்பன சமானமாதலால் அதனாற் செய்யப்படும் பரிச்சேதங் கூடாமையின் நித்தியமாய்ப் பூரணமா யுள்ளது பிரம்மமென்றுணர்க. (15)

### அவதாரிகை.

இவ்வாறு சுருக்கியும் விஸ்தரித்தும் பிரபஞ்சாதி தேக சிருட்டியை முறையே வரிசைக் கிரமமாகக்கூறி முடிவில் அக்கரசொரூபத்தையே நிரூபித்து இச்செகமனைத்தும் புருடனேதானென்ற சுருதியினால் உண்டாகிய செகம் அப்பரமசிவத்துக்கு வேறில்லையென உபதேசித்த பொருளை விரித்துக் கூறுகின்றார்.

வரக்கடவ தெப்பொருளு முன்புவரு மாபோ
லுரைத்தபர னேயடைய வாகியொளிர் கின்று
னரிக்குமுனி கட்குமா னுக்குமறி வீதே
யிருக்குமதி னையமொரு காலுமிதி லெய்தா.

### இதன் பொருள்.

முன்புவருமாபோல் —முன்உற்பவித்தவாறுபோல்
வரக்கடவதெப்பொருளும் —மற்றும் உற்பவிக்கப்படுகின்ற சருவங்களும்

உரைத்தபரனே —சொல்லிய சர்வசாட்சியான பரமசிவனே
அடையவாகி ஒளிர்கின்றான் —இச்சகல சகமுமாய்ப் பிரகாசிக்கின்றான்
இருக்குமதின் அரிக்கும் —அப்படியிருப்பதில் விஷ்ணுவுக்கும்
முனிகட்கும் அரனுக்கும் —முனிவர்களுக்கும் சம்புவுக்கும்
அறிவீதே இதில் —அறிவு இதேயாகிய இவ்வித நிரூபணத்தில்
ஐயமொருகாலு மெய்தா —சமுசயமொருபோது மடையாதாகும்.

**பதசாரம்**—கூறிய பிரகாரம் பிரம்மதேவன் முதல் ஸ்தம்பம்வரை ஜகமனைத்தும் பிரம்மத்தின் காரியமாதலால் அவ்வனைத்தும் பிரம்மசொரூபத்தில் அத்திபாசிக்கப்பட்டதுபற்றி சுத்திரஜதம்போல் மித்தையாகும், உண்மையாக வஸ்துவுக்குமேற்கூறிய அவையனைத்தும் வேறில்லை. அதிஷ்டான வஸ்து மாத்திரமே தானென்பார் 'உரைத்த பரனேயடைய வாகியோளிர்கின்றன்' என்றார். (16)

அவதாரிகை.

சிவஞானம் உண்டாவதற்கு ஏதுவை ஈண்டு விளக்கிக் கூறுகின்றார்.

வேறு.

மருவிவரு மாயை விடமமய லாலிம்
மனிதர்மா ணுதி யிடாரு
வெருவுபவ வேலை விழுவாழி யாத
விமலசிவ ஞான விழிபெறு
ரொருபிரம ஞான மொழியவொரு காலிவ்
வுததிகரை யேற வொணுமதோ
தெருள்செய்சிவ ஞானம் வருவதிறை தாள்கள்
செறியவரு சேவை வலியினல்.

இதன் பொருள்.

மருவிவரும் மாயை —பொருந்திவருகின்ற மாயையினுடைய
விடமமயலால் —விஷமமாகிய மயக்கத்தினல்
இம்மனிதர் —இந்த மானுடர்கள்
மாணுதியிடாரு —மரணமுதலிய துன்பம்நீங்காத
வெருவுபவவேலை விழுவர் —அஞ்சத்தகுந்த பிறவிச்சாகரத்தில்விழுவார்கள்
அழியாதவிமல —நாசமில்லாத பரிசுத்தமான
சிவஞான விழிபெறுர் —சிவஞானக்கண்ணை அடையார்கள்
ஒரு பிரமஞானம் ஒழிய —ஒப்பற்ற பிரமஞானத்தைத்தவிர
ஒருகால் இவ்வுததி —ஒருகாலத்திலும் இப்பவசமுத்திரத்தின்
கரையேறவொணுமதோ —கரையேறக்கூடுமோ (கூடாது)

| | |
|---|---|
| தெருள்செய் சிவஞானம் | —தெளிதலைச்செய்கின்ற சிவஞானமானது |
| இறைதாள்கள் | —பரமசிவத்தின் பாததாமரைகளை |
| செறியவரு | —இடைவிடாமல்வாராநின்ற |

சேவைவலியினால் வருவது—தரிசனஞ்செய்கின்ற வலிமையினால்வருவதாம். (17)

பதசாரம்—இடைவிடாது தரிசனஞ்செய்கின்ற வலிமையினால் வரப்படுவதாகிய ஒப்பற்ற பிரமஞானமடைந்தாலன்றி இப்பவசாகரத்தைக் கடக்கமுடியாது.

## அவதாரிகை.

அட்சரமென்று தடஸ்தமாக முன்கூறிய பரமசிவத்தைத் தானாகக்கூறுகின்றார்.

## வேறு.

அக்கரந்தனை யிக்குரம்பையி லறியுமாகி லவிச்சையா
மிக்கிரந்தி நசிக்குமீசனை யெய்தலாமமு தென்பதும்
புக்கிருந்தபி ராணனும்மன மாவதும்பர போதமே
மிக்கிருந்த வுளத்தினோர்விர காலிதுள்புக மேவுவார்.

## இதன் பொருள்.

| | |
|---|---|
| இக்குரம்பையில் | —இந்தச் சரீரத்திலுள்ள குகையில் (வைக்கப்பட்டிருக்கின்ற) |
| அக்கரந்தனை | —அக்ஷரப்பொருளை |
| அறியுமாகில் | —அபரோக்ஷமாயறிவானாகில் (அவனுக்கு) |
| அவிச்சையாம் | —அவித்தையாகிய |
| இக்கிரந்தி நசிக்கும் | —இந்த முடிச்சானது அழியும் |
| ஈசனை எய்தலாம் | —பரமசிவனை அடையலாம் |
| அமுதென்பதும் | —மோட்சமென்பதும் |
| புக்கிருந்த | —உடம்பினுட் புகுந்திருந்த |
| பிராணனும் மனமாவதும் | —பிராணனென்பதும் மனமென்பதும் |
| பரபோதமே | —அக்ஷரப்பொருளேயாகும் |
| மிக்கிருந்த | —பெருமையின் மிகுந்திருந்த |
| உளத்தினோர் | —மனத்தையுடையவர்கள் |
| விரகால் | —வுணர்வினால் |
| இதுள்புக மேவுவார் | —இஃது உளத்திற் புகும்படி பொருந்துவார்கள். |

கருத்து—குகையென்னும் சத்தத்தின் வாச்சியமான இருதயமத்தியிலிருக்கின்ற ஆன்மாவைத்தானாக அபரோக்ஷிகரிக்கின்றவன் ஞானத்தால் சமுசாரகாரணமாகிய அஞ்ஞானமென்னும் முடிச்சைக்கீண்டு எதனாலும் வாதையில்லாத சிதேகரசமான பரமசிவ சொரூபத்தை அடைகின்றானெனக்கொள்க. (18)

## அவதாரிகை.

தாதான்மியத்தையடைய வல்லாரது தியான விபரத்தைக் கூறுகின்றார்.

தாரம்விற்கணை தானிலக்குள தத்துவந்தவ றுதவா
ரூர்குறித்தெய வல்லரப்பொரு ளிற்குளிப்பவ ரெங்குமாம்
பேரிலக்கெயும் வில்லியப்படி பேசுநற்கணை யெங்கணுங்
கூர்முகத்ததி லக்கிலம்புகு ளிக்கையையுறல் கூடுமோ.

இதன் பொருள்.

| | |
|---|---|
| தாரம் வில் | —பிரணவமானது வில்லாகவும் |
| தான் கணை | —ஆன்மாவானவன் சரமாகவும் |
| இலக்கு உள தத்துவம் | —இலக்ஷியம் என்றுமுள்ள பிரம்மமாகவும்(செய்து) |
| தவறுதவாறு | —(பிரமாதத்தால்)தப்பாதபடி |
| ஆர்குறித் தெயவல்லார் | —யார்குறித்து ஏவவல்லவர்களோ (அவர்கள்) |
| அப்பொருளில் | —அந்த லக்ஷியப்பொருளில் |
| குளிப்பவர் | —தாதான்மியத்தை அடைபவராவார்கள் |
| பேரிலக்கு எங்குமாம் | —பெரியலக்ஷியமெங்கும் வியாபகமாகும் |
| எயும்வில்லி | —பாணத்தைஎய்கின்ற வில்லையுடையவனும் |
| அப்படி | —அவ்வண்ணமே (வியாபகன்) |
| பேசு நற்கணை | —சொல்லாநின்ற நல்லசரமும் |
| எங்கணுங் கூர்முகத்து | —எங்கும் நண்ணியமுகத்தையுடையது (ஆகையினல்) |
| இலக்கில் | —(பிரம்மமாகிய) லக்ஷியத்தில் |
| அம்பு | —(ஆன்மாவாகிய) சரமானது |
| குளிக்கை | —தாதான்மியத்தையடைதலில் |
| ஐயுறல் கூடுமோ | —சந்தேகப்படுதல் கூடுங்கொலோ. |

**பதசாரம்**—எவ்வாறு லௌகிகமான வில் லக்ஷியத்தில் சரஞ்செல்லுதற்குக் காரணமாமோ அவ்வாறு லக்ஷியமாகிய பிரம்மத்தில் ஆன்மாவெனுஞ் சரப் பிரவேசத்துக்குக் காரணமாதலாற் பிரணவத்தை 'வில்' எனவும், சருவவிருத்தி சாக்ஷியாகிய சோபாதிக ஆன்மாவைக் '**கணைதான்**' எனவும், பாசம் நீங்கிடுங்கால் லக்ஷியப்பிரம்மத்தில் தனது சொரூபமாகவே சரம்போற் சமர்ப்பிக்கத்தக்க ஆன்மா வில் முதவிய சத்திரங்கொண்டு விடய ஆசை முதலிய பிரமாதமில்லாமல் ஏகாக்கிரசித்தத்தால் பேதிக்கத்தக்கது. அவ்வாறு பேதிக்கில் லௌகிக சரம் லக்ஷியத்தோடு ஐக்கியப்படுவதுபோல் தேகாதி சாக்ஷி சைதன்னியம் சாக்ஷிய அபிமான பரித்தியாகத்தால் லக்ஷியமான பிரம்மத்தோடு ஐக்கியத்தையடைந்து சத்ரூபனைகப் பவிக்கின்றனென்பார், '**உளதத்துவந் தவறுதவாறர் குறித்தெய வல்லாரப்பொருளிற் குளிப்பவர்**' எனவும், லௌகிகமான சரத்தின் லட்சியம் பரிச்சின்னமாகவும் வில் ஓர் முகமாகவும் வில்லாளி ஓரிடத்திலுள்ளவனுயுமிருப்பதனல் அதற்கு லக்ஷியத்தையடைதல் நிர்ணயமில்லை. இவ்விடத்தில் அதற்கு விலக்ஷணமாதலால் லக்ஷியம் பிராப்தமாகுமென்பார், '**பேசுநற்கணையெங்கணுங் கூர்முகத்ததி லக்கிலம்புகுளிக்கையையுறல் கூடுமோ**' எனவுங் கூறினர். (19)

## அவதாரிகை.

பிரணவத்தால் ஆன்மாவைப் பிரம்மமாக அறியவேண்டுமென்ற ஞானம் மற்றோர் சுருதியிலுமுள்ளதென்று தெரிவித்து அவ்வக்கரம் சூக்குமம் ஆகலால் அதனையறிதல் கடினமென்று கருதித் திரும்பவும் தெளிவுற உபதேசிக்கின்றார்.

## வேறு.

அாணியோ டுத்த ராரணி யுயிரு
மமலவோங் காரமு மாக்கிக்
கரணிய தியான மாமத னத்தாற்
காணொணு வொளியினைக் காண்பர்
புரணநல் லொளியிற் பூதபௌ திகங்கள்
பொருந்துயிர் புலன்கண்மற் றெல்லா
மாணுறக் கோவை யாகியே கிடக்கு
மதனையே யறிகுவ னறிஞன்.

## இதன் பொருள்.

| | |
|---|---|
| அாணியோடு உத்தராரணி | —அதராரணியோடு உத்தராரணியாக |
| உயிரும் | —தானான ஆன்மாவையும் |
| அமல ஓங்காரமும் ஆக்கி | —நின்மலமான பிரணவத்தையும் செய்து |
| கரணிய | —செய்யப்பட்ட |
| தியானமாம் மதனத்தால் | —தியானமாகிய கடைதலால் |
| காணொணுவொளியினைக் காண்பர் | —அதிரிசியமான தேவனைப் பார்ப்பார்கள் |
| புரணம் நல்லொளியில் | —பூரணமாகிய நல்ல சுயம்பிரகாசத்தில் |
| பூதபௌதிகங்கள் | —பஞ்சபூத பவுதிகங்களும் |
| பொருந்துயிர் | —(உடலில்) பொருந்தியிருக்கின்ற பிராணனும் |
| புலன்கள் | —ஐம்புலன்களும் |
| மற்றெல்லாம் | —(பூமி அந்தரிக்ஷம் சுவர்க்கம் மனம்) இவையனைத்தும் |
| அாணுறக் கோவையாகியே கிடக்கும் | —அழகாகக் கோக்கப்பட்டிருக்கும் |
| அதனை அறிஞன் அறிகுவன் | —அதனை அறிவுடையவன் உணர்வான். |

**கருத்து**—எவ்வாறு கீழ்மேலான அரணிகளால் மதநிக்கில் தாருவின் கண்ணே பார்க்கமுடியாமலடங்கிக்கிடந்த மிகு சூக்குமமான அக்கினியைப் பார்க்கின்றாரோ அங்ஙனம் பிரணவத்தால் சாக்கிர முதலிய அவத்தைகளை முன்னிட்டுக் குறிக்கப்படுவதான பிரம்மரூபமாக அனுசந்தானிக்கின்றதான அவ்வப்பியாசத்தால் அதிரிசியமான சொரூபத்தை அபரோக்ஷீகரிக்கின்றாரென்பதாம்.

அவதாரிகை.

பரப்பிரம்மத்தையே பாடக்கடவனை இவ்வான்மா எவ்விடத்தை அடையத் தக்கவனெனவும் அவ்விடமாகிய சொரூபம் இத்தன்மையதெனவுங்கூறுகின்றார்.

பரம்பொரு ளினையே பாடுவான் வேறு பகருவா னலன்பருகமிர்த
வரம்பது வாகு மண்ணின்மற் றிந்த மகிமையே யுள்ளதிப் பிரம
புரந்தனி லிதயா காசமா நிகழ்ந்தெப் பொருள்களு மறிந்தெலாம் வல்ல
வரன்றனை வெறுநல் லானந்த வடிவா யறிந்தவர் மறுபிறப் பறுவார்.

இதன் பொருள்.

பரம்பொருளினையே பாடுவான்—பரப்பிரம்மத்தையே பாடக்கடவன்
வேறுபகருவானலன் —இதரங்களை விவகரிக்கவேமாட்டான்
பருகு அமிர்த —பானம்பண்ணப்பட்ட அமிர்தமாகிய
வரம்பதுவாகும் —மோட்சத்தின் வரம்பு அப்பொருளேயாகும்
மண்ணில் — பூமியின்கண்
இந்தமகிமையே —(பிரம்மத்தினது) இம்மகிமையே
உள்ளது —பிரசித்தமாய் விளங்குகின்றது
இப்பிரம புரந்தனில் —இந்தப் பிரம்மபுரத்தில்
இதயாகாசமா நிகழ்ந்து —சிதாகாசமாக விளங்கி
எப்பொருள்களுமறிந்து —எல்லாப்பொருள்களையுமறிந்து
எலாம்வல்ல அரன்றனை —சருவசக்கியனாகிய ஈசனை
வெறு நல்லானந்த வடிவாய் —கேவலம் நல்ல ஆனந்தவடிவாகவே
அறிந்தவர் —உணர்ந்தவர்கள்
மறுபிறப்பறுவார் —மேலெடுக்குஞ்சென்மத்தை நீக்குவார்கள். (21)

அவதாரிகை.

அவ்வித்துவானடையும் பலம் இவ்வண்ணம் எனக் கூறுகின்றார்.

இதயமா மிந்த விமலகோ சத்தே விரசமாய் விளங்குநற் பிரமந்
துதையமே விடுமச் சோதியே யெல்லாச் சோதிக்குஞ் சோதியா வதுவு
மிதயமே நிகழு மிதனைமெய் கண்ட விடத்தின்மற் றிதயநோ யெல்லாஞ்
சிதையுமை யுறவுந் தீருமெவ் வினையுஞ் செய்யினுஞ் செய்தில னுமால்.

இதன் பொருள்.

இதயமாம் —(இரண்மயபுரமென்னும்) அந்தக்கரணமாம்
இந்த விமலகோசத்தே —இந்தநின்மல விருதயகோசத்தில்
விரசமாய் விளங்கும் —அவித்தை முதலிய மலமில்லாததாகப் பிரகாசிக்கும்

| | |
|---|---|
| நற்பிரம்மம் | —(திரிவித பரிச்சேதமில்லாத) நல்ல பரமசிவசொரூபமானது |
| துதையமேவிடும் | —நீங்காமற் பொருந்திநிற்கும் |
| அச்சோதியே | —அவ்வித சொப்பிரகாசமே |
| எல்லாச்சோதிக்கும் | —(அனல் முதலிய) எல்லாவொளிகளுக்கும் |
| சோதியாவதுவும் | —பிரகாசிக்கச்செய்யா நிற்பதுவும் |
| இதயமே நிகழும் | —சகல இருதயங்களிலும் பிரகாசிக்கின்ற |
| இதனை | —காரியகாரணங்களாய்நின்ற சிவத்தை |
| மெய்கண்டவிடத்தில் | —உள்ளபடி அறிந்தமாத்திரத்தில் |
| இதய நோயெல்லாம் சிதையும் | —இருதயத்தில் கிரந்திபோலிருக்கின்ற அவித்தையின் வாசனையனைத்தும் நசிக்கும் |
| ஐயுறவுந்தீரும் | —சமுசயமுந் தீர்ந்துவிடும் |
| எவ்வினையுஞ் செய்யினும் | —எக்கர்மங்களைச் செய்தாலும் |
| செய்திலனும் | —செய்யாதவனுவான். |

**பதசாரம்**—பிரம்மத்தை அடையக்காரணமாய்நின்ற விஞ்ஞானப் பிரகாசமுடைய சருவாந்தரமான தகராகாசத்திலென்பார், 'இதயமாமிந்த விமலகோசந்தே' எனவும், வித்தையால் அவித்தை நீங்குமளவில் காரணமில்லாததாகிச் சமுசயமனைத்தும் நீங்குமென்பார், 'ஐயுறவுந்தீரும்' எனவும், அவித்தை சமுசயமிவைகள் நீங்கிய இவ்வதிகாரி இப்பிறப்பிலும் முந்திய பிறப்பிலும் செய்த மேல்வருஞ் சென்மங்களுக்கேதுவாகிய ஆகாமிய சஞ்சிதங்களான கருமங்களையுடையவனுயிருந்தபோதிலும் அக்கருமங்களைவிட்டு நீங்கினவனேயாவனென்பார், 'எவ்வினையுஞ் செய்யினுஞ் செய்திலனும்' எனவும் கூறினுர். (22)

அவதாரிகை.

எங்ஙனம் ஒளிக்கொளியாகுமென்று சங்கித்துக் கூறுகின்றுர்.

வேறு.

இலங்கிரவி யிந்துவன லாரகைமி னெல்லா
நலம்பெறவி ளங்குவது ஞானவொளி கொண்டே
புலம்படும னைத்தையும் விளக்குபர போதந்
துலங்குவது தன்னுடைய சோதியத னலே.

இதன் பொருள்.

| | |
|---|---|
| ஞானவொளி கொண்டே | —ஞானப்பிரகாசத்தைக்கொண்டே |
| இலங்கிரவி இந்து | —ஒளிர்கின்ற சூரியனும் சந்திரனும் |
| அனல்தாரகை மின் | —அக்கினியும் நக்ஷத்திரங்களும் மின்னலும் |
| எல்லாம் | —அனைத்தும் |
| நலம்பெற விளங்குவது | —நன்மைபெறப் பிரகாசிக்கின்றனவாம் |

புலம்படு அனைத்தையும் —பஞ்சவிஷயமான சகலத்தையும்
விளக்கு பரபோதம் —பிரகாசிப்பிக்கின்ற ஞானசொரூபமானது
தன்னுடைய சோதியதனால் —தன் பிரகாசத்தினால்
துலங்குவது —பிரகாசிக்கின்றது. (23)

அவதாரிகை.

சூரியன் முதலோர்கள் அவ்விடத்து விளங்காததற்குக் காரணத்தையும், சூரியன் முதலோர் பிரகாசிக்கின்றார்களென்ற சுருதியின் தாற்பரியத்தையும் சித்துருபப் பிரம்மம் சகத்திற்குக் காரணமாகலின் ஞானப்பிரகாசத்தைக்கொண்டே அனைத்தும் பிரகாசிக்கின்றபடியால் அனைத்தும் பிரம்மமெனக் கூறுகின்றார்.

ஓரொளி விளங்குகில ஊதையுல வாத
சீரொளியில் வேறுசில தேவர்திகழ் வாரோ
பார்வெளியு மெப்பொருள்க ளுந்திசைகள் பத்தும்
பேரொளிபெ றத்திகழ்ப ரப்பிரம மேயாம்.

இதன் பொருள்.

ஓரொளி விளங்குகிலது —ஒருபிரகாசமும் விளங்கமாட்டாது
ஊதையுலவாத —வாயுவுஞ் செல்லாத
சீரொளியில் —சிறப்பினையுடைய சிவப்பிரகாசத்தில்
வேறு சிலதேவர் —மற்றுமுள்ள சாமானியதேவர்களும்
திகழ்வாரோ —பிரகாசிப்பார்களோ
பார்வெளியும் எப்பொருள்களும்—பூமியும் ஆகாயமும் எல்லாப்பொருள்களும்
திசைகள் பத்தும் —பத்துத்திசைகளும்
பேரொளி பெறத்திகழ் —(எல்லாம்) பெரிய பிரகாசமடைய விளங்காநின்ற
பரப்பிரமமேயாம் —பரப்பிரம்மமேயாகும். (24)

அவதாரிகை.

சீவேசர்களால் சமுசாரி யசமுசாரிகளாக நிழலும் வெயிலும்போல வேற்றுமையுள்ளவர்களாயிருக்க எப்படி அவர்களுக்கு ஏகத்தன்மைகூடுமென்று சங்கிக்க அப்பேதம் மடாகாயம் கடத்திற் புகுந்து கடாகாய மெனப் பெயர் பெற்ற நாம பேத மாத்திரமே போன்று அநிர்வசனியமாகிய மாயையினால் வந்ததேயன்றி உண்மையாய் அப்பேதம் இல்லையென்று உபமானத்தால் மறுத்துக் கூறுகின்றார்.

வேறு.

இந்தவு டம்புறை சீவப ரங்களெ னப்படு மன்னமிரண்
டந்தவி ரண்டினு மொன்றுவி னைப்பய னங்குநு கர்ந்திடுமாங்
தொந்தம றும்பர மொன்றுமு ணுதுசொ லப்படு பேதமுவான்
வந்தக டத்தில கப்படு பேதமெ னப்படு மாயையினால்.

### இதன் பொருள்.

| | |
|---|---|
| இந்தவுடம்புறை | —இந்தவுடம்பில் வாசம்பண்ணுகிற |
| சீவபரங்களெனப்படும் | —சீவேசரென்று சொல்லப்பட்ட |
| அன்னமிரண்டு | —இரண்டு அன்னப்பட்சிகளிருக்கின்றன |
| அந்தவிரண்டிலும் ஒன்று | —அந்தவிரண்டுகளிலும் ஓர் பறவையானது |
| வினைப்பயன் | —(தேகத்தில்) கர்மபலத்தை |
| அங்கு நுகர்ந்திடுமாம் | —அவ்விடத்தில் புசிக்கின்றதாகும் |
| தொந்தமறும் பரம் | —தொடர்பில்லாத மகேசனெனும் மற்றொரு பறவை |
| ஒன்றுமுணாது | —ஒன்றும்புசியாமல் (சாக்ஷியாய் விளங்குகின்றது) |
| மாயையினால் சொலப்படு | —மாயையால் (சீவேசரென்று)சொல்லுகின்ற |
| பேதமும் | —வேற்றுமையும் |
| வான் வந்தகடத்திலகப் படுபேதமெனப்படும் | ஆகாயம் கடத்தில் பிரவேசித்தகாலத்தில் கடாகாசமென்று பெயர்வந்த பேதம் போலாகும். |

**பதசாரம்**—உபாதி சம்பந்தமுடைய சீவன் அதனாற் செய்யப்பட்ட சுகதுக்கங்களான புண்ணியபாவ பலங்களை நுகருகின்றானென்பார், '**அந்தவிரண்டிலுமொன்றுவினைப்பய னங்குநுகர்ந்திடும்**' எனவும், உபாதி அபிமானமில்லாததுபற்றிக் கருத்திருத்துவ மின்மையினால் அந்தப் பலனைநுகராது கேவலம் சாட்சிஞானரூபமாக ஈசன் வேறாய்ச் சுயமாகப் பிரகாசிக்கின்றானென்பார், '**தொந்தமறும் பரமொன்றுமுணாது**' எனவும், ஏகமான சிற்சொருபப் பிரம்மமே உபாதியிலுள்ள மலினஞ் சுத்தம் என்னுங் குணங்களாலே ஆகாசம் கடத்திலுட்சென்று கடாகாசமெனப் பெயர்பெற்றதுபோல் சீவேசபேதங் கற்பனையே என்பார்,'**பேதமும்வான்வந்தகடத்திலகப்படுபேதமெனப்படுமாயையினால்**' எனவுங் கூறினர்.

**கருத்து**—உபாதியால் வந்த பேதம் நீங்கிடில் பரமார்த்தமாக அவ்விருவர்களுக்கும் உற்பத்தி நாசமில்லாத பரமஞானமே சொருபமெனக்கொள்க. (25)

### அவதாரிகை.

ஈசனது ஞானம் அனைத்தையும் விஷயீகரிப்பதாயும் சீவனது ஞானம் சிலவற்றை விஷயீகரிக்கின்றதாயுமிருக்க எப்படி இவர்களுக்கு ஏகத்தன்மைகூடுமென்ற மற்றொரு சங்கையைக் கண்டிப்பான்வேண்டி அப்பேதம் சித்துருபத்தாலா அல்லது சடரூபத்தாலாவென்னும் வினாவழி ஆக்ஷேபித்துக் கூறுகின்றார்.

### வேறு.

தற்பா னுருவஞ் சித்தே தற்பா னிடையேயக்
கற்பித சீவன் றானும தானக் காலந்தச்
சிற்பொரு ளொன்றே வேறெனின் மற்றது சித்தாமோ
வற்பமும் வேறா காதுசி தாகா ரத்தாலே.

இதன் பொருள்.

| | |
|---|---|
| தற்பரனுருவம் சித்தே | —ஈசனதுரூபம் சித்தேயாகும் |
| தற்பரனிடையே | —ஈசனிடத்தே |
| அக்கற்பித சீவன்றானும் | —அந்தக்கற்பிதமான சீவனும் |
| அதானக்கால் | —அந்தச் சித்தேயானகாலத்தில் |
| அந்தச் சிற்பொருளொன்றே | —அந்தச்சித்தாகிய வத்து ஒன்றேதான் |
| வேறெனில் | —பின்னமாகக்கூறிடில் |
| மற்றது சித்தாமோ | —அதுசித்தாகுமோ (ஆகாது) |
| சிதாகாரத்தாலே | —சித்துத் தன்மையாலே |
| அற்பமும் வேறாகாது | —கிஞ்சித்தேனும் பின்னமாகாது. |

பதசாரம்—சித்துக்கு வேறாக மற்றொரு சித்து உண்டென்றால் அது சித்துக்கு வேறாதலில் சுவர் முதலியவைபோலாகிச் சித்திற்கு ஆனிவருமென்பார், 'வேறெனின் மற்றது சித்தாமோ' எனவும், ஞானத்திற்குப் பரிமித விஷயத் தன்மையும் எல்லாவற்றையும் விஷயீகரிக்குந் தன்மையும் உபாதியைச் சார்ந்த சுத்தாசுத்த குணங்களால் வந்ததேயன்றி அது சொரூபத்தைச் சார்ந்ததன்றென்பார், 'அற்பமும் வேறகாது சிதாகாரத்தாலே' எனவும் கூறினர். (26)

அவதாரிகை.

சடத்திற்கே அப்பேதமன்றிச் சித்திற்கில்லையென்றும் பரமாத்துவித ஞானிக்கே அவ்வுண்மை விளங்குமென்றும் இரண்டாவது சங்கையை மறுக்கின்றார்.

பன்னுசடாகா ரப்புணர்வாலே பரசீவர்
பின்னரெனிற்போ தத்தொருபேதம் பிறவாதே
மன்னுசடத்தே பேதமதத்தான் மானத்தால்
சொன்னவபேதப் பொருள்கலர்கண்ணிற் றோன்றாதே.

இதன் பொருள்.

| | |
|---|---|
| பன்னுசடாகாரப் புணர்வாலே | —சொல்லப்பட்ட சடரூப சம்பந்தத்தால் |
| பரசீவர் பின்னரெனில் | —சீவேசர்கள் பேதமுடையவர்களென்றால் |
| போதத்தொரு பேதம் பிறவாது | —ஞானத்தில் ஒருபேதமும் சனிக்காது |
| மன்னுசடத்தே பேதம் | —நிலைபெற்ற சடத்தினிடத்தே பேதஞ்சனிக்கும் |
| மதத்தால் மானத்தால் | —தருக்கத்தாலும் பிரமாணத்தாலும் |
| சொன்னவ பேதப்பொருள் | —சொல்லப்பட்ட பேதமில்லா வத்துவானது |
| கலர் கண்ணிற்றோன்றாதே | —பாவிகளது திருஷ்டியிற்றோன்றாது. |

பதசாரம்—இவ்விடத்தில்கூறிய தர்க்கத்தாலும் சித்தேயல்லவா இதுவாகவிளங்குகின்றதென்று இருமுறைகூறிய பிரமாணத்தாலும் சிதேகத்தன்மை சித்தித்ததென்பார், 'மதத்தான் மானத்தாற் சொன்னவ பேதப்பொருள்' என்றார். (27)

அவதாரிகை.

சிவப்பிரசாத முதலியவைகளையுடையவனுக்கே ஜெனனமரண சமுசார பாந்துத்துவமெவையுமில்லாத அத்துவிதமதி உண்டாகுமெனக் கூறுகின்றார்.

வேறு.

மறையாலு மிருதிசொலும் வழியாலும் வருவதவி
ரிறையார்த மருளில்வரு வதுவேக மெனுமுணர்வு
பிறிவான தறுமுணர்வு பெறுமாகி லொருபொழுது
மிறவாத சிவமடையு மிடர்மோக மெவையுமிலன்.

இதன் பொருள்.

| | |
|---|---|
| ஏகமெனு முணர்வு | —பரமாத்துவிதமென்னும் ஞானம் |
| மறையாலும் மிருதிசொலும் வழியாலும் வருவது | சுருதியாலும், ஸ்மிருதியினுற் சொல்லப்பட்ட ஆசாரங்களாலும் வரத்தக்கது |
| அவிர் | —சுயஞ்சோதியாகிய |
| இறையார்தம் அருளில் | —உருத்திரமூர்த்தியினது பிரசாதத்தால் |
| வருவது | —வரத்தக்கது |
| பிறிவானதறும் | —இந்தப் பின்னமில்லாதுபோகும் |
| உணர்வுபெறுமாகில் | —ஞானத்தை அடைந்தானுனல் |
| ஒருபொழுதும் | —ஒருக்காலும் |
| இறவாத சிவமடையும் | —அழியாத சிவத்தையடைவான் |

இடர்மோகமெவையுமிலன்—துன்பமோக முதலிய எவைகளுமில்லாதவனுவான்.

**கருத்து**—ஒருடம்பின்கண்ணே போக்திருத்வமுடையவனும் அஃதில்லாதவனுமிருக்கின்ற சீவேசர்களுக்கு உபாதிகளாற் செய்யப்படும் பேதம்நீங்குதலாலுள்ள சின்மாத்திரரூபமாகிய ஐக்கியம் யாதோ அந்த ஞானமே ஜனனமரண சோகமோக முதலிய சமுசார பய நிவிர்த்திரூபமாய்ப் பரமானந்தத்தையடையச் செய்யுமிலக்கணத்தையுடைய முத்திக்குக் காரணமென்பதாம். (28)

அவதாரிகை.

இரண்டு புட்களென்று சொல்லிய மந்திரத்தினுடைய தாற்பரிய வுரையினுற் பேதபட்சத்தை நிராகரித்துக் கீழேசொல்லிய பொருளை நேரே பிரதிபாதிக்கின்ற மந்திரார்த்தத்தை ஈண்டு விவரித்தும் விளக்கியும் கூறுகின்றார்.

திதமாவி யுடலுறைய விறைமாயை செயலினுயும்
விதநாட வரியகடல் விழும்வேறு படவுரை
விதுநாளும் வருமிறைவ னுருவாகு மிலதெவையு
மதுநானெ னனுபவம தடைவோனெ ரலையுமிலன்.

இதன் பொருள்.

இறை உடலுறைய —பரமசிவன் இச்சரீரத்திலிருக்கவும்
திதமாவி —நிலைபெற்ற இச்சீவன்
மாயை செயலின் —மாயையின் செய்கையினால்
உய்ம்வித நாடவரிய —கரையேறிப் பிழைக்கும்வண்ணங் கருதமுடியாத
கடல் விழும் —சமுத்திரத்தில் விழுவான்
வேறுபடவுணர —தனக்கு வேறாகச் சிவனையறியில்
இது நாளும்வரும் —இந்தப்பவக்கடல் எந்நாளும்வரும்
இலதெவையும் —உண்மையில்லாத அனைத்தும்
இறைவனுருவாகும் —பரமசிவசொரூபமாகும்
அது நான் —அச்சிவமே யான்
எனனுபவமடைவோன் —என்னும் அனுபவத்தை அடைபவன்
ஓரலைவுமிலன் —ஒருசோகமுமில்லாதவன்.

**பதசாரம்**—சீவன் உபாதி பூதமான மலினசத்துவப் பிரதானமாயையினால் வசீகரிக்கப்படலால், 'இறைமாயை செயல்' எனவும், சமுசாரியான தன்னைக் காட்டிலும் விலட்சணமாக வேறாய் விளங்குகின்றதாயும் சமுசார துக்க சம்பந்த மில்லாததாயும் சிரவணமனன நிதித்தியாசன முதலிய உபாயங்களால் தன்னாலே சேவிக்கத்தக்கதாயுமுள்ள பரமசிவ சொரூபமே தானென்றறிதல் சீவனுக்குப் பரமாத்துவித லட்சணமென்பார், இறைவனுருவாகு மிலதேவையுமது நானென னுபவம தடைவோ னோரலைவுமிலன்' எனவும் கூறினர். (29)

அவதாரிகை.

வித்துவான் ஆன்மசொரூபத்தையடையும் விவரம் கூறுகின்றார்.

சின்மய மாகுந் தன்மகி மாவைத் தீரவ றிந்தா னியாதொரு போதத்
தன்மய னாகுந் தன்னைய கர்த்தா வாய்முழு துக்குந் தானிட மாகிப்
பொன்மய னாகும் பூரண னாய்ப் போதெதிர் காணும் புண்ணிய கோடிப்
பன்மையி னாலுந் தர்க்கொடு மானப் பார்வையி னாலும் பானரு ளாலும்.

இதன் பொருள்.

சின்மயமாகும் தன் மகிமாவை—சின்மாத்திரமாகிய தனது மகிமையை
யாதொருபோது தீரவறிந்தான்—எக்காலத்தில் முற்றவுணர்ந்தானோ(அவன்)
அத்தன்மயனாகுந்தன்னை —அத்தன்மையுடையவனாகிய தன்னை
அகர்த்தாவாய் —கருத்திருத்துவ மில்லாதவனாயும்
முழுதுக்குந் தானிடமாகி —எல்லாவற்றிற்குந் தானிருப்பிடமாகி
பொன்மயனாகும் பூரணனாய் —சுவர்ணம்போன்ற மேனியையுடைய பூரணனாயும்

அப்போது —அப்பொழுது
புண்ணியகோடிப் பன்மையினாலும் } முன்னியற்றிய அனேககோடிப் புண்ணிய மிகுதியினாலும்
தர்க்கொடு —தருக்கத்துடன்
மானப்பார்வையினாலும் —பிரமாணமாகிய வேதப்பார்வையினாலும்
பரனருளாலும் எதிர்காணும் —சிவப்பிரசாதத்தாலும் நேராகக்காண்பான்.

**பதசாரம்**—தரிசனக்கிரியா கருத்திருத்துவமில்லாது கேவலம் சொரூபப் பிரகாசமாக விளங்குகின்றமையால் கரும கருத்ருருபாவமில்லாமற் பார்ப்பானென்பார், 'தன்னையகர்த்தாவாய்' எனவும், வேதத்திலுள்ள புருடசத்தத்துக்குப் பொருள் சொல்லுவார், முழுதுக்குந் தானிடமாகிப் 'பூரணன்' எனவும், கூறினர்.

## அவதாரிகை.

மேற் சனனங்களைக்கொடுக்கும் புண்ணியபாவங்களாற் பிரதிபந்திக்கப்பட்ட பாவித்தையினால் சீவனுக்கு எங்ஙனம் முத்திகூடும் என்ற சங்கையையும் நிராகரித்துச் சமவாதத்தை மறுக்கவேண்டிச் சின்மாத்திர ரூபர்களாயுள்ள சீவேசர்களுக்குச் சமத்தன்மையா அன்றேல் உபாதியுடன் கூடினவர்களுக்குச் சமத்தன்மையா வென்று விகற்பித்து அதனை விளக்கிக் கூறுகின்றார்.

பாவபுண் ணியங்க ளிரண்டையு முதறிப்
பற்றுத லொன்றொடு மின்றி
யாவையுந் தானாய் வேறிலா தவனாய்
பெய்துமற் றிப்பொரு ளறிந்தான்
சீவனும் பரனுஞ் சின்மய மாகு
மாதலா லொப்பெனச் செப்பல்
மேவியொன் றாகி விடுதலே யன்றி
வேறுவே றாகுமோ வீடு.

## இதன் பொருள்.

இப்பொருளறிந்தான் —இந்த வஸ்துவையறிந்தவன்
பாவபுண்ணியங்களிரண்டையும்—பாவபுண்ணியங்களாகிய விரண்டினையும்
உதறி —தள்ளி
ஒன்றொடும் பற்றுதலின்றி —ஒருபொருளோடும் பற்றுதலில்லாமல்
யாவையுந்தானாய் —சகலமுந்தானாய்
வேறிலாதவன் —பின்னமாக வொருவஸ்துவுமில்லாதவன்
ஒப்பெய்தும் —சாமியத்தை யடைகின்றான்
சீவனும் பரனும் சின்மயமாகும்—சீவனும் சிவனும் சின்மாத்திரமாகும்
ஆதலால் —ஆகையால்

ஒப்பனச்செப்பல் —சாமியமென்று கூறுதல்
ஒன்றாகி மேவி விடுதலேயன்றி—ஏகத்தன்மையாகப் பொருந்திடுவதேயன்றி
வீடு —மோட்சமானது
வேறு வேறாகுமோ —ஒன்றுக்கொன்று பின்னமாகுமோ (ஆகாது.)

**பதசாரம்**—கீழ்ச்சொல்லிய விலக்கணத்தையுடைய பரமசிவத்தைத்தானுக வித்துவான் எப்பொழுது பார்க்கின்றாளே அப்பொழுது வருபிறப்பைக் கொடுக்குஞ் சஞ்சிதபுண்ணிய பாவங்களை யுதறி அதற்கேதுவாகும் தேகேந்திரி யாதிகளெல்லாவற்றிற்கும் வேறாகியெல்லாவிதத்தாலும் ஐக்கியமாயுள்ள சிவசாமி யத்தை அடைகின்றானென்பார், 'பாவபுண்ணியங்களிரண்டையு முதறிப்பற் றுத லொன்றேடுமின்றி யாவையுந்தானாய் வேறிலாதவனைப்பெய்தும்'என்றார்

**கருத்து**—சீவேசர்களாகிய அவ்விருவர்களுக்கும் சின்மாத்திர ரூபமாகப் பேதமின்மையில் பேதத்தாற் சித்திக்குஞ் சாமியங் கூடாதென்றுகொள்க. (31)

அவதாரிகை.

உபமானத்தால் இரண்டாவது சங்கையை நிராகரித்து இவ்வண்ணஞ் சீவே சர்களுடைய சொருப பரியாலோசனையினால் ஒப்பில்லையென்றுரைத்துக் காரண பரியாலோசனையால் சாமியமுண்டென்பாரை மறுக்கவேண்டி அக்காரணம் கருமமா அன்றேல் வித்தையா என்று விகற்பித்துக் கூறுகின்றார்.

உடம்புடன் புணர்ப்பாற் சீவனுக் கிறையோ
டொப்புள தென்னிலொப் பில்லை
கடந்திகழ் வானில் வானம்வே றாகக்
கருதியொப் புரைப்பரோ வொப்பாய்
விடுந்திறங் கன்மத் தாலெனிற் கன்ம
மிறக்குமே விச்சையா லென்னிற்
றிடம்பட முன்பே யுள்ளதே ஞானந்
திகழ்த்துவ தல்லது செய்யா.

இதன் பொருள்.

உடம்புடன் புணர்ப்பால் —தேகோபாதி சம்பந்தத்தால்
சீவனுக்கு இறையோடு —சீவான்மாவுக்குப் பரமான்மாவோடு
ஒப்புளதென்னில் ஒப்பில்லை —சாமியமிருக்கின்றதென்னில் சாமியங்கிடையாது
கடந்திகழ்வானில் —கடத்திற்பிரகாசிக்கின்ற ஆகாயத்தைக்காட்டிலும்
வானம் வேறாக்கருதி —மகாகாயத்தைப் பின்னமாகவெண்ணி
ஒப்புரைப்பரோ —சமானமாகச் சொல்லுவார்களோ
ஒப்பாய் விடுந்திறம் —சாமியமாகுந்தன்மை

கன்மத்தாலெனில் —கருமத்தாற் கூடுமென்றால்
கன்மம் இறக்கும் —கருமசாத்தியமெல்லாம் நசிக்கும்
விச்சையாலென்னில் —ஞானத்தினாற் சாமியங்கூடுமென்னில்
திடம்படமுன்பேயுள்ளது —திரமாக அந்தச்சாமியம் முன்னமேயிருக்கின்றது
ஞானம் திகழ்த்துவதல்லது —ஞானமானது பிரகாசிக்கச்செய்வதேயன்றி
செய்யா —ஒருபொருளையுண்டாக்கமாட்டாது.

**பதசாரம்**—கிஞ்சிக்கிய சர்வக்கியத்தன்மைகளான உபாதியுடன்கூடிய சீவேசர்களுக்கு மிகவும் வேற்றுமையிருத்தலால் ஒருக்காலும் ஒப்புக்கூடாதென்பார், **'ஒப்பில்லை'** எனவும், கருமசாத்தியமாகுங் காரியத்துக்கு அழிவுபாடு உண்டென்பார், **கன்மமிறக்கும்'** எனவும், ஞானமானது முன்பிருக்குஞ் சாமியத்தைத் தெரிவிக்குமேயன்றி உண்டுபண்ணாது. ஆகலின் முன்னமேயிவர்களுக்குச் சாமியமிருத்தலின் அது வித்தியாபலமாகாமையின் வித்தை பயனில்லாததாகிவிடுமென்பார், **'ஞானந் திகழ்த்துவதல்லதுசெய்யா'** எனவுங் கூறினர். (32)

அவதாரிகை.

இவ்வண்ணம் பிரதி பாதிக்கப்பட்ட சம்வாதம் ஆட்சேபிக்கப்பட்டமையின் முன்னுள்ள சாமியமே வித்தையால் அடையப்படுமென்னும் விவகாரமும் நமது 'கோட்பாடென்று தங்கருத்தை எண்டுச் சித்தாந்தமாகக் கூறுகின்றார்.

எப்படி யாலும் பண்டுமிப் போது மெப்பொழு துஞ்சிவ சீவர்க்
கொப்புள தாகு முருவமொன் றான உண்மையால் வேறுறு தொன்றே
யப்படி யுள்ள சிவன்பிறர் போல வவிச்சையா னிகழுமவ் வவிச்சை
மெய்ப்பர விச்சை யானசித் தொன்றாய் விடுதலொப் படைதல்வேறன்றே

இதன் பொருள்.

எப்படியாலும் சிவசீவர்க்கு —எவ்வாற்றானும் சிவனுக்கும் சீவனுக்கும்
ஒப்புளதாகும் உருவம் —சாமியமாகிய சொரூபம்
பண்டும் இப்போதும் எப்பொழுதும்—முன்னும் இப்பொழுதும் எக்காலத்தும்
ஒன்றான உண்மையால் —ஏகமான மெய்மையினால் (அவ்விருவர்களுக்குமுள்ள சாமிய அஸ்தித்துவம்)
வேறுறுதொன்றே —(இலக்கணைவிருத்தியால்) பின்னமில்லாத ஒன்றேதான்
அப்படியுள்ள சிவன் பிறர்போல—அவ்வாறுள்ள சிவனானவன் அன்னியர்போல
அவிச்சையானிகழும் —அவித்தையால் தோற்றுகின்றான்
அவ்வவிச்சை —அந்த அவித்தையானது
மெய்ப்பரவிச்சையால் —உண்மையான பாவித்தையினால்
நசித்தொன்றாய்விடுதல் —நசித்து சீவேசர்கள் ஏகமாவதுவே
ஒப்படைதல் வேறன்று —சாமியம் அடைதலாகும் (இது தவிர) வேறல்ல

பதசாரம்—எப்பொருள் எதனோடு எல்லாப்படியாலுஞ்சமமாகுமோ அஃது அதுவேயென்னும் நியாயத்தால் பேதத்தை அபேக்ஷிக்காத ஐக்கிய விலக்கண முள்ள சாமியமே இவ்விடத்தில் சொல்லப்பட்டது. பேதமில்லாமல் சாமியங் கூடாமையின் உவமையன்றென்பார், 'எப்படியாலும்' எனவும், சின்மாத்திர சொரூபமான சாட்சி சாக்கியப் பிரபஞ்சமெல்லாம் விளங்குதற்கு எதுவாயிருத் தலின் எக்காலத்தும் உண்மையாகலானும் பரப்பிரேமைக்கு இருப்பிடமாகவிற் சுகரூபமாதலானும் அங்ஙனமே சத்து சித்து ஆனந்தம் என்று சுருதியால் கூறப் பட்டதனாலும் இவ்விருவர்களுக்கும் சமான விலக்கணமிருத்தலில் ஏகத்தன்மை எப்பொழுதும் சித்தமாயிருக்கின்றதென்பார், 'எப்போழுதுஞ் சிவசீவர்க் கோப் புளதாது முருவமோன்றன வுண்மையால்' எனவும், அவித்தை மித்தையாதலால் பரமார்த்தமாகப் பரமசிவசொரூபத்துக்கு ரூபபேதத்தை யுண்டுபண்ணுதென்பார், 'சிவன் பிறர்போல வவிச்சையானிகழும்' எனவும், வித்தையினால் அவித்தை நீங்குங்கால் தானாகவே சித்தித்த சிவேச ஐக்கியமே சேஷிக்கின்றமையால் அது வே சாமிய சத்தார்த்தமென்பார், 'அவ்வவிச்சை மெய்ப்பாவிச்சை யானசித் தோன்றுய் விடுதலோப்படைதல்' எனவுங் கூறினர். (33)

அவதாரிகை.

பிராணனல்லவா இவனென்ற சுருதிவாக்கியத்தின் தாற்பரியத்தைச்சுருக் கிப் பரமார்த்த திருஷ்டியில் பெத்தனும் முத்தனும் இல்லை எனக்கூறுகின்றார்.

வேறு.

சீவன் றன்னுரு வானசிவத்தைத் தெளியிற்றான்
மேவும்பலதொழி றன்னிடையாக விளையாடும்
யாவுந்தன்னுரு வாகிநிகழ்ந்தா லிவன் முத்த
னுவன்பண்டவ னாகாமையின்முத் தனுமாகான்.

இதன் பொருள்.

சீவன் தன்னுருவான —சீவனானவன் தன்னுடைய சொரூபமாகிய
சிவத்தை —பரமசிவத்தை
தெளியில் —உறுதியாயறிவானாயின்
மேவும் பலதொழில் —பொருந்துகின்ற பலதொழில்களும்
தன்னிடையாக விளையாடும்—தன்னிடத்திலுண்டாகும்படி விளையாடுகின்றான்
யாவும் தன்னுருவாகி நிகழ்ந்தால்—சகலமும் ஆன்மசுபாவமாகவே பிரகாசித்தால்
இவன் முத்தனுவன் —இந்தச்சீவன் முத்தனுவான்
பண்டவனாகாமையின் —முன்னமே இவன் பெத்தனாகாமையால்
முத்தனுமாகான் —முத்தனுமாகமாட்டான்.

பதசாரம்—சீவன் தனது உண்மையான நிட்பிரபஞ்ச சிவரூபத்தை எப்பொழுது தானகவே காணுகின்றனே அப்பொழுது வேறே வத்துவில்லாமையால் விளையாடுதல் முதலியவைகளை ஆன்மவிடயமாகவும், தியான பூசாதிகளையும் கைகால் முதலியவைகளாற் செய்யப்படும் பாகியக் கிரியைகளையும் தன்னைக் காட்டிலும் வேறில்லையென்றும் யாதொன்றுஞ் செய்யத்தக்கதில்லையென்றும், அறிகின்றனென்பார், 'சீவன்றன்னுருவான சிவத்தைத் தெளியிற்றன் மேவும் பலதொழிறன்னிடையாக விளையாடும்' எனவும், பந்தமுத்தியும் ஞானரூபமாகலிற் பரமார்த்த திருஷ்டியில் முக்தனென்னுந் தன்மையும் அவனுக்கில்லையென்பார், 'யாவுந் தன்னுருவாகி நிகழ்ந்தா லிவன்முத்த னுவன் பண்டவனுகாமையின்முத் தனுமாகான்' எனவுங் கூறினர். (34)

அவதாரிகை.

இனிப் பரவித்தைக்குத் துணையான பிரமசரிய முதலிய மஹா தவ வேத சாதனத்தைப் பிரதிபாதிக்கின்ற மந்திரத்தின் பொருளைக் கூறுகின்றார்.

வேறு.

திரமன் னியநற் சத்தியத்தின் செய்கை யாலு மனமென்று
மொருமைப் படுநன் மாதவத்தி னுயர்வி னாலு மூனமிலாப்
பிரம சரிய முதலாகப் பேசுந் தருமந் தன்னாலும்
பரமாம் வேத நெறியாலு மடையப் படுமிப் பரவித்தை.

இதன் பொருள்,

திரமன்னிய —நிலைபொருந்திய
நற்சத்தியத்தின் செய்கையாலும்—நல்லவாய்மையின் செய்கையினாலும்
என்றும் மனம் ஒருமைப்படும்—எந்நாளும் உள்ளம் ஒற்றுமைப்படுகின்ற
நன்மாதவத்தி னுயர்வினாலும்—நல்ல மகா தவத்தின் மேன்மையினாலும்
ஊனமிலா பிரமசரிய —இழிவற்ற பிரமசரியமென்னும்
முதலாக —ஆச்சிரமமாதியாக
பேசுந் தருமந்தன்னாலும் —சொல்லாநின்ற தருமத்தினாலும்
பரமாவேத நெறியாலும் —உயர்வாகிய வேதவழியாலும்
அடையப்படு மிப்பரவித்தை —இச்சிவஞானமானது அடையப்படும்.

பதசாரம்—ஆன்மதரிசனத்துக்கு அனுகூலமாகுஞ் சித்தைகாக்கிரியமே தவமன்றிக் கிருச்சிரசாந்திராயண முதலியவை அன்றென்பார், 'ஒருமைப்படு நன் மாதவத்தினுயர்வினாலும்' எனவும், கேட்கத்தக்கவன் சிந்திக்கத்தக்கவன் தெளியத்தக்கவன் என்ற சுருதியாலென்பார், 'பரமாம்வேதநெறியாலும்' எனவும் கூறினர். 'பிரமசரிய முதலாகப் பேசுந் தருமந் தன்னாலும்' என்றமையால், கொல்லாமை, கள்ளாமை முதலிய யோகாங்கங்களும் பெறப்பட்டன. (35)

அவதாரிகை.

வித்துவான் அபரிச்சின்னனாதலின் ஆகாயம் போக்குவரவற்றிருப்பதுபோல் அவனுக்குப் போக்குவரவில்லையென்று திருஷ்டாந்தங்காட்டிக் கூறுகின்றார்.

வேறு.

வேதம் பகர்வழி யேவந் தவர்கட மெய்க்குள்ளே
யாதும் பரவொளி யேகண் டுணருவ தொன்றுமப்
போதந் தனையடை வாரங் கொருகதி போய்மீளா
ரேதுந் திகழ்தரு வானெங் கொழிவுசெய் தேகுந்தான்

இதன் பொருள்.

வேதம் பகர்வழியே —வேதத்திற்சொல்லிய மார்க்கத்தின்படியே
வந்தவர்கள் —(அனுஷ்டித்து) வந்தவர்கள்
தம்மெய்க்குள்ளே யாதும் —தங்களது சரீரத்தினுள்ளே சகலத்தையும்
பரவொளியே கண்டு —சுயம்பிரகாசமாகக்கண்டு
உணருவது —அறியப்படுவதாய்
ஒன்றுமப்போதந்தனை —ஏகமாகுமந்த ஞானத்தை
அடைவார் —அபரோட்சமாக அறிந்தவர்கள்
ஏதும் அங்கு —எவ்வளவேனும் அவ்விடத்தில்
ஒருகதிபோய் மீளார் —ஒருபோக்குவரவு மில்லாதவர்களாவார்கள்
திகழ்தருவான் —விளங்குகின்ற ஆகாயமானது
எங்கொழிவுசெய்து ஏகும்—எவ்விடத்தைநீக்கி எவ்விடத்தில்போகும்(போகாது.)

அவதாரிகை.

ஆன்மா பரிசுத்தமான ஞானப்பிரசாதத்தால் உபாதிகளேதுமில்லாத பரிபூரண சிவசொரூபத்தை யடைதற்குத் துணைச்சாதனமான சத்திய முதலியவை உபதேசிக்கப்பட்டன. இப்போது அசாதாரணமான காரணத்தை உபதேசிக்கின்றார்.

வேறு.

வாக்கினு லுரைக்கு மாறிலாப் பொருளை மற்றுள புலன்களொன் றாலே
நோக்குமா றென்னுங் கருமமொன் றாலு நுவறவத் தாலு நண்ணுதே
தாக்கிலா வந்தக் கரணம துடையார் தத்துவ ஞானநல் விழியாற்
போக்கிலா தெங்கு மாகிய பொருளைப் புரையறக் காண்பரெப் பொழுதும்

இதன் பொருள்.

வாக்கினுலுரைக்கு மாறிலாப்பொருளை—நாவினாற் சொல்லமுடியாத சிவத்தை
மற்றுளபுலன்களொன்றால் —வேறுமுள்ள இந்திரியங்கள் ஒன்றினாலாயினும்

நோக்குமாறென்னும் —பார்க்கும்வண்ணம் என்னுகும்
கருமமொன்ருலும் —ஒருகருமத்தினுலும்
நுவல்தவத்தாலும் நண்ணுது —சொல்லப்பட்ட தவத்தினுலும் கிட்டாது
தாக்கிலா —பற்றுதலில்லாத
அந்தக்கரணமதுடையார் —விசுத்தமான சித்தவிருத்தியையுடையவர்கள்
தத்துவஞான நல்விழியால் —பிரமஞானமாகிய நல்லகண்ணினுலும்
போக்கிலாது —போக்குவரவில்லாமல்
எங்குமாகிய பொருளை —சருவவியாபகமான வஸ்துவை
எப்பொழுதும் புரையறக்காண்பர் —சதாகாலமும் குற்றமறப்பார்ப்பார்கள்.

பதசாரம்—உருவமின்மையிற் கண்முதலியவற்றிற்கு விடயமாகாதென் பார், புலன்களொன்றலே நோக்குமாறென்னும்' எனவும். அக்கினி கோத்திர முதலியவைகளாலும், கிருச்சிர சாந்திராயண முதலியவைகளாலும் அடையப் படாதென்பார், 'கருமமொன்றலு நுவறவத்தாலு நண்ணுது' எனவும், விடயேந் திரிய சம்பந்தத்தாலுண்டான காமாதிமலத்தால்வருங் குற்றமில்லாத சுத்தமான ஞானப்பிரசாதத்தால் உபாதிகளொன்றுமில்லாததாுயுள்ள பரமசிவரூபத்தைச் சாட்சாத்கரிக்கின்ருனென்பார், 'தத்துவஞான நல்விழியாற் போக்கிலாதெங்கு மாகிய பொருளைப் புரையறக் காண்பரெப்பொழுதும்' எனவுங் கூறினர். (37)

அவதாரிகை.

சதாகாலமும் தியானஞ்செய்கின்ற ஏகாந்த விசுத்த சத்துவகுணமுடையவ னுக்கு நிஷ்கள ஞானமுண்டாவதற்குச் சகுணத்தியானங் காரணமாகுமென்று கூறி இவ்வணுவான்மாவென்ற சுருதிவாக்கியத்தின் பொருளைக் கூறுகின்ருர்.

அருளினைத் திருமேனியிற் றரித்தருளு
மகிலநா யகனையெப் பொழுதுந்
தெருளுறத் தியானம் பண்ணுமே காந்த
சித்தாற் றெளிவுறும் பொருளிப்
பொருளித னிடத்தே யைவகைப் பட்ட
பொருள்களும் பொருந்துநுண் மையினு
லொருவரு மறியா ரரியதென் றிகழா
துணர்ந்திட வேண்டுமீ தொன்றும்

இதன் பொருள்.

அருளினை —தனது திருவருளுருவமான பராசத்தியை
திருமேனியில் தரித்தருளும் —திருவுருவில் தரித்திருந்தருளும்
அகிலநாயகனை —சருவலோக நாயகனுகிய சிவபெருமானை

எப்பொழுதும் தெருளுற —சதாகாலமும் தெளிவுபொருந்த
தியானம் பண்ணும் —தியானம் செய்கின்ற
ஏகாந்த சித்தரால் —ஏகாக்கிர சித்தமுடையவர்களால்
தெளிவுறும் பொருளிப்பொருள்—தெளிந்தறியும் பொருள் இந்த நிஷ்களஞானம்
இதனிடத்தேயைவகைப்பட்ட பொருள்களும் பொருந்தும் —இதனிடத்தே பிராணன் முதலிய ஐந்துவகுப்பாகிய பொருள்களுமிருக்கின்றன
நுண்மையினால் —இந்தப்பொருள் நுட்பமாகியிருத்தலால்
ஒருவருமறியார் —ஒருவருமுணரமாட்டார்கள்
அரியதென்றிகழாது —அறிதற்கரியதென்று விட்டுவிடாமல்
ஈதொன்று முணர்ந்திடவேண்டும்—இந்த ஒரு பொருளை மாத்திரம் விசாரித்தறியவேண்டும்.

**பதசாரம்**—அவச்சேதவுபாதிவசத்தால் இவ்வான்மா சூக்குமனாயிருந்தாலும் ஞானப்பிரசாதத்துக்கு ஏதுவாகும் ஒருமைப்படுமனத்தினால் முன்சொல்லிய வண்ணமே அபரிச்சின்ன பரமசிவசொரூபமாக அறியப்படுவானென்பார், '**நுண்மையினா லொருவருமறியா ரரியதென்றிகழா துணர்ந்திடவேண்டும்**'என்றார்.(38)

அவதாரிகை.

இவ்வாறு சருவான்மாவான பரமசிவனைத்தானாக அடைந்த வித்துவானுக்கு எல்லாவற்றையும் அடையுமிலக்கணமான பலத்தை விளக்கிக் கூறுகின்றார்.

வேறு.

எத்தைப் பெறமுயல் கின்றா னதுபெறு கின்றா னாகலி னெப்போது
நித்தத் துவமெனு மொன்றைப் பெறநினை கின்றா னருடனி னேர்பாடா
மத்தத் துவமுனி தன்னைப் பொருளத னாலுந் தனதுட லாலுந்தான்
பத்திப் படுமன னாலற் சனைநனி பண்ணக் கடவர்க டிருவேண்டின்.

இதன் பொருள்.

எத்தைப்பெற முயல்கின்றான்—எதனையடைதற்கு முயற்சிசெய்கின்றானோ
அது பெறுகின்றான் —அதனைத் தானாகவேயடைகின்றான்
ஆதலின் எப்போது —ஆகையால் எப்பொழுது
நித்தத்துவமெனும் —நித்தத்துவம் பொருந்திய
ஒன்றை —(பிரமசொரூபம்)ஒன்றினையே
பெற நினைகின்றான் —அடையக் கருதுகின்றான்(அப்பொழுது)
திருவேண்டின் —ஞானச் செல்வத்திலிச்சையுண்டாயின்
அருடனினேர்பாடாம் —கருணையில் மிகுந்தவனாகிய

அத்தத்துவ முனிதன்னை —அந்தப் பிரமவித்தானவனை
பொருளதனாலும் —திரவியங்களாலும்
தனதுடலாலும் —தன்னுடைய சரீரத்தினாலும்
பத்திப்படுமனனால் —பத்தியுண்டாகிய மனத்தினாலும்
அற்சனை நனிபண்ணக்கடவர்—பூசனை மிகவும் செய்யக்கடவர்கள்.

**பதசாரம்**—தனக்கு வேறில்லாது யாவுந்தானாகவிருத்தலின் ஏககாலத்தில் எல்லாவற்றையும் அடைகின்றானென்பார், '**எத்தைப்பெற முயல்கின்றனது பெறுகின்றன்**' எனவும், எல்லாக் காமங்களும் வித்துவானுடைய சொரூபமாகவேயிருத்தலினால் அவனுடைய பெருமை அளவிடப்படாதது எனத்தெளியுமாறு அவனுக்குத் தொண்டுசெய்தலின் அன்புடையவனும் இச்சித்த பலனெல்லாம் அடைவானென்பார், '**அத்தத்துவமுனி தன்னைப் பொருளதனாலுந் தனதுடலாலுந்தான் பத்திப்படுமனனாலற்சனைநனி பண்ணக்கடவர்க டிருவேண்டின்**'எனவும், அடையும் பொருளின் மகிமைவிளங்க '**நித்தத்துவமெனும் ஒன்றை**' எனவும், கூறினர்.

## அவதாரிகை.

இங்ஙனங்கூறிய வுபாயங்களால் ஞானியி னருளன்றி வேதசாஸ்திர விலக்கண விலக்கிய மதியினால் மாத்திரம் ஆன்ம தத்துவம் அறிதற்குஅரிதென்றுகூறுகிறார்.

## வேறு.

எண்ணிலாக் கல்வியாலு மிலங்கிய கேள்வியாலுந்
திண்ணிதா மதியினாலுந் தெளியவா ராதுதீர
நண்ணிய ஞானிதானே நயந்தருள் செய்யில்ஞானக்
கண்ணினாற் காணலாகுங் கரத்திலா மலகம்போல.

## இதன் பொருள்.

எண்ணிலாக் கல்வியாலும் —எண்ணிக்கையில்லாத வேதமுதலிய சகல கலைஞானத்தினாலும்
இலங்கியா கேள்வியாலும் —பிரகாசிக்கின்ற சாஸ்திரக் கேள்வியினாலும்
திண்ணிதாமதியினாலும் —வலிமையாகிய அறிவினாலும்
தெளியவாராது —தெளிந்தடையப்பெறாது
தீரம் நண்ணிய ஞானிதானே—திடம்பொருந்திய ஞானியானவன்
நயந்தருள் செய்யில் —விரும்பி(ஆன்மாவை அறியவேண்டுமென்று) கிருபைசெய்தால்
கரத்திலாமலகம்போல —உள்ளங்கையின் நெல்லிக்கனிபோல
ஞானக்கண்ணினால் காணலாகும்—ஞானநேத்திரத்தினால் பார்க்கக்கூடும்

**பதசாரம்**—வேதசாஸ்திரங்களைப் படித்தமையாலும் அடிக்கடி சிரவணஞ் செய்தமையாலும், கிரந்தப்பொருளைக் கேட்டவுடன் உட்கொள்ளும் அறிவினா

னும் இவ்வான்மா அடையப்படானென்பார், 'எண்ணிலாக் கல்வியாலுமிலங்கிய கேள்வியாலு நீ ண்ணிதாமதியினுலும் தெளியவாராது' எனவும், சிரவண மனன முதலியவற்றல் பிரம்மப்பிராப்தியை வேண்டுகின்ற வித்துவானுக்கு இவ்வான்மா அவித்தையினுல் விளங்காத தன்சொரூபத்தை உள்ளங்கையிலுள்ள நெல்லிக் கனியைப் போன்று பிரகாசஞ்செய்கின்றுனென்பார், ஞானிதானே நயந்தருள் செய்யில் ஞானக் கண்ணினுற் காணலாதும்' எனவும் கூறினர்.

**கருத்து**—தீரம் நண்ணிய ஞானி அருள் சுரந்து உபதேசிக்கின்ற வித்தையால் அவித்தை நீங்கினகாலத்தில் ஆன்மசொரூபந் தானுக விளங்குமென்பதாம். (40)

**அவதாரிகை.**

ஆன்மப்பிரார்த்தனைக்குச் சகாயமான வலிமைவேண்டுமென்று கூறுகின்றார்.

அயர்ச்சிசேர் தவத்தினுலு மன்னிய லிங்கத்தாலு
முயற்சிசேர் பிரமாதத்தான் மொய்ம்பிலாத் தன்மையானுஞ்
செயப்படா வுண்மை ஞானந் தெள்ளுமா மதியாற்கால
வயத்தினுற் சத்துவத்தின் வலியினு லன்றிவாரா

**இதன் பொருள்.**

| | |
|---|---|
| செயப்படாவுண்மை ஞானம் | —தொழிற்படுவதில்லாத வுண்மைஞானமானது |
| தெள்ளுமாமதியால் | —தெளிந்த வுணர்வினுலும் |
| காலவயத்தினுல் | —பரிபக்குவ காலவசத்தினுலும் |
| சத்துவத்தின் வலியினுல் | —சத்துவகுணத்தின் வலிமையினுலும் |
| அன்றி | —(வருமே)அன்றி |
| அயர்ச்சி சேர்தவத்தினுலும் | —மறதிசேர்ந்த ஞானத்தினுலும் |
| அன்னியலிங்கத்தாலும் | —(சுருதியிற் சொல்லப்பட்ட வாச்சிரமலிங்கமன்றி) மற்றேரிலிங்கத்தினுலும் |
| முயற்சிசேர் பிரமாதத்தால் | —முயற்சியையுடைய (புத்திரன் பசுமுதலிய விஷய சம்பந்தத்திற்கேதுவாகும்)பிரமாதத்தினுலும் |
| மொய்ம்பிலாத் தன்மையாலும் வாரா | (ஆன்மநிட்டையாலுண்டாகும்) வீரியமில்லாத தன்மையினுலும் வரமாட்டாது. |

**பதசாரம்**—வலிமை, பிரமாதமின்மை, தவம் என்று சொல்லப்பட்ட ஆச்சிரம தருமத்தோடுங்கூடிய இம்மூன்றும் பிரம்மப் பிராப்தியில் அந்தரங்க சாதனமென்பதுதோன்ற எதிர்மறையாக, 'அயர்ச்சிசேர் தவத்தினுலு மன்னிய லிங்கத்தாலு முயற்சிசேர் பிரமாதத்தான் மொய்ம்பிலாத் தன்மையாலுஞ் செயப்படாவுண்மை ஞானம்வாரா' எனவும், இவ்வண்ணம் அந்தரங்க சாதனங்களையுடைய வித்துவானுக்குச் சாட்சியாயுஞ் சின்மாத்திரரூபமாயும் தேஜோரூபமாயும் அபரிச்சின்னமாயுமுள்ள பிரம்மம் நன்றுகப் பிரகாசிக்குமென்பதுதோன்ற 'மதியாற் காலவயத்தினுற் சத்துவத்தின் வலியினுலன்றி' எனவுங் கூறினர். (41)

அவதாரிகை.

வித்துவான் பிரம்மத்தையடையும் பிரகாரத்தைக் கூறுகின்றார்.

இப்பரம்பரனைச் சேர்ந்தா ரேகமாம் பொருளதாகித்
தப்பறு ஞானமெய்திச் சாந்தராய்த் தாப மாறி
யெப்படியாலு மெல்லாப் பொருள்களு மெய்தியிங்கே
யப்பொரு டமக்குள்ளாக வவைதனக் குள்ளுமாவார்

இதன் பொருள்.

இப்பரம்பரனைச் சேர்ந்தார் —இந்தப் பிரமத்தை அடைந்தவர்கள்
ஏகமாம் பொருளதாகி —அத்துவித வஸ்துவாகி
தப்பறு ஞானமெய்தி —தப்பில்லாத ஞானத்தையடைந்து
சாந்தராய்த் தாபமாறி —சாந்தமுடையவராகித் துன்பம்நீங்கி
எப்படியாலும் இங்கே —எவ்வாற்றானும் இவ்விடத்திற்றானே
எல்லாப்பொருள்களும் —எல்லாப்பொருள்களையும்
எய்தி —(தானாகவே)யடைந்து
அப்பொருள் தமக்குள்ளாக —அந்தப்பொருள்களெல்லாம் தங்கட்குள்ளாகவும்
அவை தனக்குள்ளுமாவார் —அந்தப் பொருள்களுக் குள்ளாகத் தாங்களு மாவார்கள்.

பதசாரம்—இந்திரிய நிக்கிரகஞ்செய்த ஆன்மவித்துக்கள் ஒருமைப்பட்ட மனத்தராய், ஞானத்தினால் நிறைந்தவர்களாய், நிச்சயவான்களாய்ச் சோகமோக முதலிய சமுசார துக்கமில்லாதவர்களாய்ச் சரீரம் நீங்குங்காலத்தில் பின்ன கடாகாசம்போல அவித்தையினாலுண்டான வுபாதி பரிச்சேதம் நீங்கினவர்களாகிச் சருவான்மகமாயும் ஆகாசம்போலச் சருவவியாபகமாயும் அபரிச்சின்னமாயும் விளங்கும் பிரம்மத்தை அடைகின்றார்களென்பார், 'தப்பறு ஞானமெய்திச் சாந்தராய்த்தாபமாறி எப்படியாலுமெல்லாப் பொருள்களுமெய்தி' என்றார்.(42)

இதுவுமது—வேறு.

அந்தமா மறையா னாடிய பொருளை யழகுற வறுதியிட் டல்லற்
பந்தமா மயற்பற் றறுத்தமா தவரிப் பரமயோ கத்தினா லெல்லாம்
வந்துமாய் விடமா யனைத்திலும் பரமாய் மதிக்கொணா மாயையினுடைய
வந்தகா லத்தே பந்தமற் றிந்த வழுதினா லரியவீ டடைவர்

இதன் பொருள்.

அந்தமாமறையால் —அழகுபொருந்திய வேதத்தினால்
நாடியபொருளை —கருதிய வஸ்துவை

அழகுறவறுதியிட்டு —செவ்வையாக நிச்சயித்து
அல்லல் —துன்பத்தைக்(கொடுக்கின்ற)
பந்தமாம் மயற்பற்று —பந்தமாகிய மயக்கப்பற்றினை
அறுத்தமாதவர் —நாசஞ்செய்த மகாதவத்தையுடையவர்கள்
இப்பரமயோகத்திஞல் —இந்தச் சன்னியாசயோகத்திஞல்
எல்லாம்வந்து மாய்விடமாய் —சகலமும்வந்து நசிப்பதற்கிடமாய்
அனைத்திலும்பரமாய் —அனைத்திற்கும் மேலானதாயும்
மதிக்கொண —மதிக்கக்கூடாததாயுமுள்ள
மாயையினுடைய அந்தகாலத்தே—மாயையினுடைய நாசகாலத்தே
பந்தமற்று —தொடக்கற்று
இந்தவழிதிஞல் —அமிர்தத்திற்குச் சாதனபூதமான ஞானத்தால்
அரியவீடடைவர் —அரிதான மோக்ஷத்தையடைவார்கள்.

**பதசாரம்**—அது நீயாகின்றுயென்னும் வேதாந்த மகாவாக்கியத்தாலுண்டாகும் பிரமான்மவைக்கிய விடயமான உயர்ந்த ஞானத்தால் நிச்சயிக்கப்பட்ட பொருளையுடையாரென்பார், '**அந்தமாமறையானுடிய பொருளை யழகுறவறுதியிட்டு**' எனவும், சருவகன்ம பரித்தியாகத்தாலும் கேவலப் பிரம்ம நிட்டாரூபமான யோகத்தாலுஞ் சுத்தாந்தக்கரணத்தையுடைய யதிகள் பூதபவுதிக காரியங்களை அபேக்ஷித்துக்காரணமாய் உயர்வாயுள்ள அஞ்ஞானம் நசிக்குங்காலத்தில் நிரதிசயமான அமிர்தத்தன்மைக்குச் சாதனமாகும் ஞானத்திஞல் தாஞகவறியும் பிரம்மசொரூபமாகிச் சகல சமுசாரபந்தத்தினின்றும் விடுதலையடைகின்றுர்களென்பார், '**பந்தமாமயற் பற்றறுத்த மாதவரிப் பரமயோகத்திஞலெல்லாம் வந்துமாய் விடமாயனைத்திலும் பரமாய் மதிக்கோணுமாயையினுடைய வந்த காலத்தே பந்தமற்றிந்த வழதிஞலரிய வீடடைவர்**' எனவும், கூறிஞர்.

**கருத்து**—பிரம்மசொருபத்தில் ஐக்கியமடைந்தவர்கள் இவ்வான்ம ஞானத்திஞல் உபாதியில் லயிக்குங்காலத்தில் கடாகாசம்போல அது நீயாகின்றுயென்னும் பாரமார்த்திய அபரிச்சின்னப் பிரம்ம ரூபத்தை அடைகின்றுர்களென்பதாம்.

**அவதாரிகை.**

அந்த முத்தனுடைய பிராணன் முதலிய தேகாந்தரங்களைக் கொடுக்கும் கலைகளும் சொரூபத்தில் ஐக்கியமாகுமென்று திருஷ்டாந்தத்துடன்கூறுகின்றுர்.

விடிலா வினைகள் கலைகண்மு வைந்தும் விடையவிந்தியவதி பதிக
ளுடுசே தனஞஞ் சீவன்மற் றனைத்து நாதஞ ராலய நண்ணிப்
பாடுபே ருருவ மொன்றுமற் றந்தப் பரமனே யாய்விடும் பார்மே
லோடுமா றெல்லா முததிபுக் கொன்று யுருவுபே ரொழியுமா போல.

### இதன் பொருள்.

| | |
|---|---|
| வீடிலாவினைகள் | —நீங்குதலில்லாத கர்மங்களும் |
| கலைகள் மூவைந்தும் | —கலைகள் பதினைந்தும் |
| விடய இந்திய அதிபதிகள் | —விடயங்கள் இந்திரியங்களிவற்றிற்கு அதிஷ்டான தேவதைகளும் |
| நாடுசேதனனுஞ் சீவன் | —கருதுகின்ற சேதனனுஞ் சீவனும் |
| மற்றனைத்தும் | —மற்றெல்லாமும் |
| நாதனாலய நண்ணி | —பரமான்மாவான அதிஷ்டானத்தையடைந்து |
| பாடு | —சொல்லப்பட்ட |
| பேருருவமொன்று மற்று | —நாமரூபமொன்றுமில்லாமல் |
| அந்தப் பரமனேயாய்விடும் | —அந்தப் பரமான்மாவாகவேயாகிவிடும் |
| பார்மேலோடு மாறெல்லாம் | —பூமியின்கண் ஓடாநின்ற ஆறுகளெல்லாம் |
| உததிபுக்கு ஒன்றாய் | —சமுத்திரத்திற்புகுந்து ஏகமாய் |
| உருவு பேரொழியுமாபோல் | —நாமரூபமில்லாததாய் விடுவதுபோல |

**கருத்து**—பிரச்னோபநிடத்திற்கூறிய பிராணன் சிரத்தை ஆகாயம் வாயு அக்கினி ஜலம் பிருதிவி இந்திரியம் திவி மனம் அன்னம் வீரியம் தவம் மந்திரம் கருமலோகங்கள் உலகங்களின் நாமமென்னும் இந்தப் பதினாறு கலைகளும் சமுசாரிகளுக்குத் தேகாந்தரங்களைக் கொடுக்கின்றனவாயினும் வித்துவான்களுக்கு முத்திகாலத்தில் அவைஅனைத்தும் வேறில்லாதனவாகி மேகங்கள் இல்லாதகாலத்தில் சூரியப்பிரதிபிம்பங்கள் எப்படிச் சூரியன்மாத்திரமாக மிஞ்சி நிற்குமோ அப்படித் தத்தமக்குக் காரணமாயுள்ளவற்றை அடைகின்றனவாம்.

### அவதாரிகை.

ஜீவனுக்கும் பிரம்மத்திற்கும் பேதம் அஞ்ஞானத்தால் வந்தமையால் அஞ்ஞானமும் ஞானத்தாலன்றி நீங்காமையின் அறிந்தமாத்திரத்தில் கண்டகதசாமீகரம் (கழுத்தின் பொன்மணி)போலப் பிரம்மப்பிராப்தி சித்திக்குமென்றும் அவனுடைய குலத்தில் அப்பிரம்மவித்து உண்டாவானென்றுங் கூறுகின்றார்.

### வேறு.

மிக்க நற்பிரம ஞான முற்றபொழு தேவெறும் பிரம மாய்மனத்
துக்க மற்றிடுவர் தொல்லை வல்வினை தூவக்குமாறு மிலர் துஞ்சிடார்
பொக்க மற்றொருவ னிச்சகத்தி லனு போகமா வறியு மாயின்மே
லக்கு லத்தினிலொ ருத்த ரப்பிரம வித்த ரல்லரில ராணையே.

### இதன் பொருள்.

| | |
|---|---|
| மிக்க நற்பிரம ஞானம் | —மிகுந்த நன்மைதரும் பிரமஞானத்தை |
| உற்றபொழுதே | —அடைந்த காலத்திலேயே |

| | |
|---|---|
| வெறும் பிரமமாய் | —பிரமமாத்திரமாய் |
| மனத்துக்கமற்றிடுவர் | —நெஞ்சில் துக்கமில்லாதவர்களாயும் |
| தொல்லை வல்வினை | —வலிமையுள்ள ஊழ்வினையாம் பாசங்கள் |
| துவக்குமாறுமிலர் | —(தங்களைக்)கட்டுமாறு மிலாதவராயும் |
| துஞ்சிடார் | —அழியாதவராயுமாவார்கள் |
| ஒருவன் பொக்கமற்று | —ஒரு விவேகி பொய்ம்மையைநீக்கி |
| இச்சகத்தில் | —இவ்வுலகில் |
| அனுபோகமா அறியுமாயின் | —(பிரமத்தை)அபரோக்ஷமாக அறிவானாயின் |
| மேல் அக்குலத்தினில் | —அதற்குமேல் அவனது குலத்தில் |
| ஒருத்தர் | —ஒருத்தராயினும் |
| அப்பிரமவித்தரல்லர் இலர் | —பிரமவித்தல்லாதவர்கள் உண்டாகமாட்டார்கள் |
| ஆணையே | —(இஃது)சத்தியமே |

**கருத்து**—பொய்யைநீங்கிப் பிரம்மத்தை அபரோக்ஷமாக அறிந்த வித்துவானுடைய குலத்தில்பிறந்தவன் பிரம்மவித்தாகவே விளங்குவானென்றுணர்க.(45)

### இதுவுமது.

சோக மோகபட லத்தினைக் கடிதொ ழிப்பதாகி வெறு முண்மையா
யேக போகசுக ரூப மெய்ப்பொரு ளொறிப்ப தாகியுள சோபனம்
மோக மோடும்வகை யிங்கொர் நாவிலிது சொல்ல லுற்றதிது தொல்லையே
பாக மாகியவி ரோதமான பரி சுத்தநெஞ் சிடைப ரிப்பதே.

### இதன் பொருள்.

| | |
|---|---|
| சோகமோக படலத்தினை | —துக்கமோக முதலிய கூட்டத்தை |
| கடிதொழிப்பதாகி | —சீக்கிரத்தில் நீக்குகின்றதாயும் |
| வெறும் உண்மையாய் | —பாதிக்கப்படாத சத்தியமாயும் |
| ஏகபோக சுகரூபமெய்ப்பொருளொறிப்பதாகியுள | ஒன்றாய்(தனித்து)அனுபவிக்கத்தக்க ஆனந்தரூபமான சத்தியப்பொருளை விளக்குவதாயுமிருக்கின்ற |
| சோபனம் | —மங்களமான மறைப்பொருளை |
| மோகம் ஓடும்வகை | —மயக்கம் நீங்கும்படி |
| இங்கு ஓர்நாவில் | —இவ்விடத்தில் ஒருநாக்கினால் |
| சொல்லலுற்றதிது | —(யான்)சொல்லத் தொடங்கியது |
| தொல்லையே | —தொந்தரவேதான் |

இதுபாகமாகி —இப்பொருளானது பரிபாகமுற்று
அவிரோதமான —விரோதமில்லாத
பரிசுத்த நெஞ்சிடை பரிப்பது—சுத்தமுள்ள நெஞ்சினுல் கிரகிக்கத்தக்கது. (46)

இதுவுமது—வேறு.

அச்சமா கியவெம் பிறவியை வேரோ
டறுப்பதா யறிவதற் கரிதாய்
மெய்ச்சொரூ பானந் தன்றிரு மேனி
விளக்குவ தாய்மிகுத் துள்ள
விச்சையின் றன்மை விண்ணவர்க் கெல்லாம்
விளங்கவே விளம்பினன் மெய்போ
லிச்சக மெல்லாம் படைத்துமெய் யன்ப
ரிதயபங் கயத்தில்வீற் றிருப்பான்.

இதன் பொருள்.

அச்சமாகிய வெம்பிறவியை —பயமாகிய கொடிய சனனத்தை
வேரோடறுப்பதாய் —வேரோடறுக்கின்றதாயும்
அறிவதற்கரிதாய் —அறியக்கூடாததாயுமுள்ள
மெய்ச்சொரூபானந்தன் —சத்தியமான சொரூபானந்தனது
திருமேனிவிளக்குவதாய் —திவ்விய சொரூபத்தைப் பிரகாசிப்பிக்கின்றதாயும்
மிகுத்துள்ள விச்சையின்றன்மை—(பெருமை)மிகுந்துள்ள ஞானசுபாவத்தை
மெய்போல் —சத்தியம்போல
இச்சகமெல்லாம் படைத்து —இவ்வுலகனைத்தையும் சிருட்டித்து
மெய்யன்பர் இதயபங்கயத்தில்—உண்மையான பத்தர்களது இதயதாமரையில்
வீற்றிருப்பான் —வாசம்பண்ணும் பிரமாவானவர்
விண்ணவர்க்கெல்லாம் —தேவர்கள் அனைவர்களுக்கும்
விளங்கவே விளம்பினன் —தெளிவாய்த் தெரியும்படிசொன்னார். (47)

ஏழாவது மூண்டகோப நிடதநாற்பரியம்
உரைத்த அத்தியாயம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் 380.

## எட்டாவது

## கைவல்ய உபநிடத தாற்பரிய முரைக்கும் அத்தியாயம்.

### அவதாரிகை.

இனி கைவல்ய உபநிஷதமும் பூர்வங்கூறிய பிரமான்ம ஐக்கிய பரத்துவ முண்டென்பதையே சொல்லுகின்றதென்று அச்சுருதியின் தாற்பரியப்படி தெரிவிப்பார் அந்த உபநிஷார்த்தத்தை ஈண்டுச் சங்கிரகித்துக் கூறுகின்றார்.

நனிவேத நாலு முகமாக மேவி நளினு லயத்தி லுறைவா
னனுபோக மாக வருளா லறிந்த வவரே பரத்தை யறிவார்
தனிமேவு வார்கள் பெறுஞான மாகு மிதுசாத னங்க ளுடைய
முனிமேவு வான தெனும்வேத நாலு மொழிபோது மாறு மொழிவான்.

### இதன் பொருள்.

| | |
|---|---|
| தனிமேவுவார்கள் | —அத்துவிதத்தை அடைந்தவர்கள் |
| பெறுஞானமாகுமிது | —அடைகின்ற ஞானமாகிய இதனை |
| சாதனங்களுடைய | —சாதன சதுட்டய சம்பத்துடைய |
| முனிமேவுவானதெனும் | —முனிவர்களால் அடையப்பட்டமேலானதென்னும் |
| வேதநாலுமொழி | —வேதத்திலுள்ள நான்மொழிகள் |
| ஓதுமாறு | —சொல்லுகின்ற பிரகாரம் |
| அருளால் | —பரமசிவப் பிரசாதத்தினுல் |
| அனுபோகமாக அறிந்தவவரே | —(பிரமத்தை)அபரோக்ஷமாக அறிந்தவர்களே |
| பரத்தை அறிவார் | —சொரூபத்தை அறிவாரென்று |
| நனிவேதம் | —பெருமைபொருந்திய நான்குவேதங்களையும் |
| நாலுமுகமாக மேவி | —நான்கு முகங்களாகப்பொருந்தி |
| நளினுலயத்தில் | —பதுமாசனத்தில் |
| உறைவான் | —வாசம்பண்ணுகின்ற (பிரமாவானவர்) |
| மொழிவான் | —சொல்லத்தொடங்கினர். (1) |

### அவதாரிகை.

சமுசாரதுக்கத்தை நீக்குகின்ற வித்தைக்கு விடயமான நிரதிசயானந்த சிவசொரூபத்தை முமூட்சுக்கள் அவசியம் அறியவேண்டுமென்று பிரதிக்கினை செய்து அவ்வித்தைக்கு அதிகாரிகளையும் பிரயோசனத்தையும் முறையாகக் கூறுவார், ஆசுவலாயனரென்னு மாமுனிவர் பரமேட்டியையடைந்து சொல்லு கின்றார். எப்போதும் சத்துக்களாலே சேவிக்கத்தக்கதாயும் ரகசியமாயும் மேலான

தாயுமுள்ள பிரமவித்தையை உபதேசிக்கவேண்டும், எதனால் சீக்கிரத்தில் வித்துவான் பாவங்களினீங்கி மேலான சிவருத்திராதி நாமங்களையுடைய பரமபுருடனை அடைகின்றானென்ற சுருதியின் தாற்பரியப்படி ஈண்டுவிளக்கிக் கூறுகின்றார்.

வேறு.

ஈசனென் றியம்பு மொன்றை யிப்பிறப் பறுப்பார் தம்மான்
மாசற வறிய வேண்டும் வருந்தியு மறிந்து நன்றாப்
பாசமா னது கெடுத்துப் பரப்பிர மத்தை நல்கும்
தேசுடை யிந்த விச்சை தீர்வறத் துறந்தோர் செய்வார்.

இதன் பொருள்.

ஈசனென்றியம்புமொன்றை —(சிவருத்திராதி நாமங்களுடைய) ஈசனென்று சொல்லப்படும் ஒருபொருளை
இப்பிறப்பறுப்பார்தம்மால்—இச்சனனமொழிய இச்சைகொண்டமுமுட்சுக்களால்
வருந்தியுமறிந்து நன்றா —வருத்தப்பட்டேனு நன்றாக(வேதத்தை)அறிந்து
மாசறவறியவேண்டும் —குற்றமற(அவசியம்)அறியத்தக்கது
பாசமானதுகெடுத்து —பாசத்தைநீக்கி
பரப்பிரமத்தை நல்கும் —பிரமசொரூபத்தை அருளிச்செய்யும்
தேசுடை யிந்தவிச்சை —பிரகாசம் பொருந்திய இந்தப் பரவித்தையை
தீர்வறத் துறந்தோர்செய்வார் —தீரத்தெளிந்த அறிஞர்கள் நீங்காமல் (சேவை) செய்வார்கள். (2)

அவதாரிகை.

பிரமவித்தை உண்டாவதற்குச் சாதனங்களாயுள்ளவற்றைக் கூறுகின்றார்.

முத்தியின் விருப்பத் தாலு முதலவ னற்பா தத்திற்
பத்தியி னாலு மற்றப் பரனையே பாவிக் கின்ற
நித்தமாந் தியானத் தாலு நிரந்தர யோகத் தாலுஞ்
சித்தியா மிதுசித் திக்கும் வினையினாற் சித்தி யாதால்.

இதன் பொருள்.

முத்தியின் விருப்பத்தாலும் —முக்தியை அடையவேண்டி உள்ளத்தில் எழுஞ் சிரத்தையாலும்
முதலவனற் பாதத்திற் பத்தியினாலும் —பரமசிவனுடைய நற்றிருவடித் தாமரையில் வைத்திருக்கப்பட்ட அன்பினாலும்
அப்பரனையே பாவிக்கின்ற —அந்தப் பரமசிவனையே பாவனை செய்கின்ற
நித்தமாந் தியானத்தாலும் —இடைவிடாதுசெய்யும் தியானத்தினாலும்

நிரந்தரயோகத்தாலும் —இடைவிடா யோகத்தாலும்
சித்தியாமிது சித்திக்கும் —சுபாவசித்தமான இப்பரவித்தையானது சித்திக்கும்
வினையினால் சித்தியாது —கருமத்தால் சித்திக்கமாட்டாது.

**பதசாரம்**—ஏகாந்த ஸ்தலத்தில் சுகாசனத்திலிருந்துகொண்டென்ற சுருதியாற் கூறப்பட்டதாயும் இனி இவ்வத்தியாயத்திற் சொல்லுவதாயுமுள்ள யோகத்தைப் பிரதிபாதித்தற்கடிகோலியாக '**நிரந்தர யோகத்தாலும்**' என்றார். (3)

## அவதாரிகை.

இவ்வித சாதனவானுக்கு மூன்றிச்சையும் விடுதலே மோட்ச சாதனமாகுமன்றி மற்றவையாகாதெனவிளக்கிப் பரவித்தையுண்டாவதற்கு அசாதாரண காரணத்தையும் அதிகாரிகள் அதனால் அடையும் பிரயோஜனத்தையும் கூறுகின்றார்.

## வேறு.

திரமா மருத்தத்தி னன்மைந்த ராலுஞ்
சேராத வற்றின் றியாகத்தி னாலே
யுரமான வேதாந்த மாவாக்கி யத்தா
லுற்பன்ன மாம்விச்சை யாநிச்ச யத்தாற்
பரமான வஞ்ஞான வந்தத்தி லேயப்
படிஞான வுபதேச மொன்றாலு மேயிப்
புரமா முடம்புக்கு ளேயந்த முத்திப்
பொருள்கண்டு வீடெய்து வாரிப் புவிக்கே.

## இதன் பொருள்.

திரமாமருத்தத்தினால் —உறுதியாகுந் தனத்தினாலும்
மைந்தராலும் —புத்திரர்களாலும்
சேராது —ஒருவர்க்குப் பரவித்தைபொருந்தாது.
அவற்றின்றியாகத்தினால்—அக்கரும முதலியவைகளினுடைய தியாகத்தினாலும்
உரமான —வலிமையான
வேதாந்தமா வாக்கியத்தால் —வேதாந்த மகாவாக்கிய சிரவணத்தால்
உற்பன்னமாம் விச்சையாம் —உண்டாகிய வித்தியாரூபமான
நிச்சயத்தால் —நிருணயிக்கப்பட்ட (பொருளினாலும்)
அப்படி ஞானவுபதேசம் —அவ்வண்ணமே ஞானோபதேசம்
ஒன்றாலும் —ஒன்றினாலும்
பரமான அஞ்ஞானவந்தத்திலே—மேலான அஞ்ஞானத்தினது நாசகாலத்திலே
இப்புரமா முடம்புக்குளே —இந்தப்பிரமபுரமாகிய சரீரத்தினுள்

இப்புவிக்கே —இந்தப் பூமியின்கண்ணே
அந்த முத்திப்பொருள்கண்டு —அந்த முத்திரூபமான பிரமத்தைத் தானாகவேகண்டு
வீடெய்துவார் —முத்தியை அடைவார்கள்.

பதசாரம்—கரும முதலியவைகள் அநித்திய பலசாதனங்களாகு மென்றும் பரவித்தை அங்ஙனமாகாமையால் கரும முதலியவற்றின் தியாகத்தினாலேயே அஃதடையத்தக்கதென்றுங் கூறுவார், 'அவற்றின்றியாகத்தினாலே' என்றார். ()

## அவதாரிகை.

இவ்வாறு விஷயம் பிரயோசனம் சாதனம் அதிகாரி என்னும் இவைகளுடன் பரவித்தையின் சொரூபம் உபதேசிக்கப்பட்டதாதலின், இனி அதற்குச் சாதனமாயமைந்திருக்கப்பட்ட யோகத்தைப்பற்றி ஈண்டுவிளக்கிக் கூறுகின்றார்.

## வேறு.

தக்கஞா னத்தைத் தான்பெறற் பொருட்டுத்
தனியிடந் தனையடைந் திதய
துக்கமே வாமற் சுகாசனத் திருந்து
தோடலை கழுத்துடம் பிவைநே
ரொக்குமா றிருத்திப் பூதிகொண் டிந்த
வுடம்பையுத் தூளணம் பண்ணி
மிக்கவாய் வருமிந் தியங்களை யெல்லாம்
விடயமே லெழாவகை விலக்கி.

## இதன் பொருள்.

தக்கஞானத்தை —அடையத்தக்க ஞானத்தை
தான்பெறற்பொருட்டு —தானடையும்பொருட்டு
தனியிடந்தனையடைந்து —ஏகாந்த ஸ்தானத்தைச்சேர்ந்து
இதய துக்கமேவாமல் —இருதயத்திலும் துக்கமுண்டாகாமல்
சுகாசனத்திருந்து —சுகம் பொருந்திய ஆசனத்திருந்து
தோள்தலைகழுத்துஉடம்பு —தோள்கள் தலை, கண்டம், தேகம்
இவை நேரொக்குமாறிருத்தி —இவைகளை நேரேசமமாக நிறுத்தி
பூதிகொண்டு இந்தவுடம்பை —விபூதியினால் இந்தச்சரீரத்தை
உத்தூளணம்பண்ணி —தூளாகப் பூசி
மிக்கவாய்வரும் —மிகுந்து இச்சித்துவருகின்ற
இந்தியங்களையெல்லாம் —இந்திரியங்களனைத்தையும்
விடயமேலெழாவகை விலக்கி—விடயத்தில் போகாமலிருக்கும்படி நீக்கி (5)

அவதாரிகை.

இனி இரண்டு திருவிருத்தங்களால் ஆச்சாரியரது பாததாமரையைச் சிந்தித்து வணங்கிச் சிவனுடைய நிஷ்களரூபத்தையும் லீலாவிக்கிரகத்தையும் தியானிக்க வேண்டுமென்றும் அதனாலடையும் பிரயோசனத்தையும் கூறுகின்றார்.

பத்தியாற் குரவன் பதம்பணிந் திதய பங்கயந் தனைநினைந் ததிலே
நித்தமா யொருவ ரானினைப் பரிதாய் நிமலமா யெங்கணு நிறைந்து
சுத்தமாய்ச் சாந்த மாயனைத் துலகுந் தோற்றுதற் கியோனியாய்ச்சுபாவ
சித்தமா யமுதா யருவமா யொன்றாய்ச் சிற்சதா னந்தமாய்ச் சிவமாய்.

இதன் பொருள்.

| | |
|---|---|
| பத்தியால் குரவன் | —அன்பினால் குருவினது |
| பதம்பணிந்து | —பாததாமரையை வணங்கி |
| இதயபங்கயந்தனை நினைந்து | —இதய கமலத்தைத் தியானித்து |
| அதிலே நித்தமாய் | —அதில் என்றுமுள்ளதாயும் |
| ஒருவரால் நினைப்பரிதாய் நிமலமாய் | (நிருவிகற்பமாயிருத்தலின்) எவர்களாலும் சிந்திக்கத்தகாததாயும் விரஜமாயும் |
| எங்கணும் நிறைந்து சுத்தமாய் சாந்தமாய் | சகலத்திலும் நிறைந்து விசுத்தமாயும் (சமுசார சம்பந்தமில்லாமையினால் அலையிலாக் கடல் போலச்) சாந்தமாயும் |
| அனைத்துலகுந் தோற்றுதற்கு | —எல்லாவுலகும் உண்டாவதற்கு |
| யோனியாய் | —காரணமாயும் |
| சுபாவசித்தமாய் | —இயல்பாகவே சித்தித்துள்ளதாயும் |
| அமுதாய் அருவமாய் | —அழிவில்லாததாயும் லௌகிக உருவமில்லாததாயும் |
| ஒன்றாய் சிற்சதானந்தமாய் | —ஏகமாயும் சச்சிதானந்தமாயும் |
| சிவமாய் | —(பரமானந்தரூபமாகிய) சிவமாயும். (6) |

இதுவுமது.

உரியநால் வேதத் தோமெனும் பொருளா
யுள்ளதா யுள்ளவெப் பொருட்குங்
கரியதாய் நின்ற வொன்றினைக் காள
கண்டமுங் கண்ணொரு மூன்றும்
பிரிவிலா மங்கை பாகமு மாகப்
பேணுநற் பாவனை பெறுவா
னரியதா யருளி னால்வரும் விச்சை
யதனினா லதனையே யடையும்.

### இதன் பொருள்.

உரிய நால்வேதத்து —ஓதுதற்குரிய நான்குவேதங்களிலும் (விளங்குகின்ற)
ஓமெனும் பொருளாய் —பிரணவப் பொருளாயும்
உள்ளதாயுள்ள —தோற்றுகின்றதாயுள்ள
எப்பொருட்கும் கரியதாய் —சகல வஸ்துக்களுக்கும் சாக்ஷியான பிரபுவாயும்
நின்றவொன்றினை —விளங்குகின்ற சிவத்தை
காளகண்டமும் கண்ணொருமூன்றும் —நீலகண்டமும் திரிநேத்திரமும்
பிரிவிலா —பிரிவில்லாத
மங்கைபாகமுமாக —உமையை ஒருபாகத்திலுமுடையவராக
பேணுநற் பாவனை —வித்துவான்களால் விரும்பத்தக்க நல்ல தியானத்தை
பெறுவான் —அடைகின்றவன்
அரியதாய் —அருமையதாகி
அருளினால்வரும் —சிவப்பிரசாதத்தால் வருகின்ற
விச்சையதனினால் —வித்தையினால்
அதனையே அடையும் —அந்தச் சொருபத்தையே அடைவான். (7)

### அவதாரிகை.

அறியத்தக்கதாக வுபதேசிக்கப்பட்ட சிற்சொரூபமாய்ப் பிரகாசிக்கும் சிவ சொரூபத்தினது அத்துவிதீயத்தன்மையைச் சருவான்மபாவத்தால்கூறுகின்றார்.

### வேறு.

தெரிவரிய சிற்கனமாய்த் திகழ்சிவனே திசைமுகனு
மரியுடனவ் வரனுமவ னமராதி பதியுமவன்
துரிசறவே யக்கரமாய்ப் பரமாகுஞ் சுராட்டுமவ
னெரியுமழல் காலனவ னிந்துவொடு பிராணனவன்.

### இதன் பொருள்.

தெரிவரிய சிற்கனமாய் —தெரிவதற்கரிய சிற்சொரூபமாய்
திகழ்சிவனே —பிரகாசிக்கின்ற பரமேச்வரனே
திசைமுகனும் அரியுடன் —பிரமாவும் விஷ்ணுவுடன்
அவ்வரனுமவன் —அந்தருத்திரனும் அவன்
அமராதிபதியும் அவன் —தேவர்கட்கு அதிபதியான இந்திரனும் அவன்
துரிசறவே அக்கரமாய் —குற்றமறவே அட்சரமாகி
பரமாகும் சுராட்டுமவன் —பரமாகிய சுராட்டு என்பவனும் அவன்
எரியுமழல் காலனவன் —பிரகாசிக்கின்ற அக்கினியும் காலனுமவன்
இந்துவொடு பிராணனவன் —சந்திரனோடு பிராணனும் அவனே.

பதசாரம்—பிரமன் முதலிய தேவர்களுக்கும் காரணனென்றும் சுதந்தரனாய்த் தன்னாற்றான் விளங்குகின்றவனென்றும் மற்றையர்கள் அவன் வசத்தராதலில் அவரவர் செயல்கள் அவரவருடையன போன்றாலும் உண்மையில்தங்களால் தாங்கள் விளங்கமாட்டாரென்றுங் கூறுவார்,'பரமாதுஞ்சுராட்டு' என்றார்.

அவதாரிகை.

பரமசிவ சொரூபத்துக்கு வேறாக வொன்றுமின்மையின் ஆன்மாவுக்கு அந்தச்சொரூபஞானமே மோட்ச சாதனமாகுமென்று ஈண்டுக் கூறுகின்றார்.

ஒழிந்ததொரு பொருளில்லை யுள்ளதெலா மவனேமுன்
கழிந்தபொருள் மேலும்வரக் கடவபொரு டானுமவன்
மொழிந்ததனிப் பரவிச்சை யவிச்சையெனு முற்றுமவ
னிழிந்தபிறப் பறவேறோர் வழியில்லை யிவனொழிய.

இதன் பொருள்.

ஒழிந்ததொரு பொருளில்லை —(சிவத்துக்கு)அன்னியமாக ஒருவஸ்துவுமில்லை
உள்ளதெலாம் அவனே —இருக்கின்ற அனைத்தும் அச்சிவனே
முன்கழிந்தபொருள் —முன்சென்ற பொருள்களும்
மேலும் வரக்கடவ —இனிவரக்கடவனவாகும்
பொருடானுமவன் —பொருள்களனைத்தும் அவனே
மொழிந்த தனிப்பரவிச்சை —கூறிய ஒப்பில்லாத பரவித்தையும்
அவிச்சையெனும் முற்றுமவன்—அவித்தையுமென்று சொல்லுமெல்லாமும் அவனே
இழிந்த பிறப்பற —இழிவான சனனம் நீங்குதற்கு
இவனொழிய வேறோர் வழியில்லை —இச்சிவனையல்லாமல் வேறுமார்க்கமில்லை.(9)

அவதாரிகை.

இந்த ஞானமானது மிகுந்த பிறவிக்குக்காரணமாயிருந்து வருகிற பிரதிபந்தங்களால் உண்டாகாதென்று அப்பிரதிபந்த நிவிர்த்திக்கு உபாயங்கூறுகின்றார்.

வேறு.

இன்னதெ னுமற் றன்னிடைக் கண்டு
தன்னையெப் பொருளினுங் காணு
மன்னிலை யடைந்தா லவன்பிர மத்தை
யடையும்வே றென்றிலை யடையான்
தன்னையு மோங்கா ரத்தையு மாணி
யாக்கியத் தத்துவ ஞான
வன்னியைத் தியான மதனஞ் செய் தெழுப்பும்
மதியினர் வன்பவஞ் சேரார்.

### இதன் பொருள்.

இன்னதெனுமல் —இத்தன்மையுடையதென்று சுட்டியறியாமல்
தன்னிடைக்கண்டு —(சருவபூதங்களையும்) தானான ஆன்மாவிடத்திற் பார்த்து
தன்னை எப்பொருளினுங்காணும்—தன்னைச் சர்வபூதங்களிலும் பார்க்கின்ற
அந்நிலையடைந்தால் —அந்த ஸ்திதியைப்பெற்றால்
அவன் பிரமத்தை அடையும் —அவன் பிரமசொரூபத்தை அடைவான்
வேறொன்றினாலடையான் —மற்றொரு ஸ்திதியினாலடையமாட்டான்
தன்னையுமோங்காரத்தையும் —ஆன்மாவையும் பிரணவத்தையும்
அரணியாக்கி —அதராரணியாகவும் உத்தராரணியாகவுஞ்செய்து
அத்தத்துவஞான வன்னியை—அந்த உண்மை ஞானமாகிய அக்கினியை
தியானமதனஞ் செய்தெழுப்பும்—தியானமாகிய மதனஞ்செய்து உண்டாகும்
மதியினார் —விவேகிகள்
வன்பவஞ் சேரார் —கொடியபிறப்பை அடையார்கள். (10)

### அவதாரிகை.

சாக்கிர முதலிய அவத்தைகளில் சுகதுக்கங்களைப் புசிக்கின்ற சீவன் சமுசாரியாவான். ஈசனோ அப்படியாகான். அங்ஙனமாயின் இவ்விருவர்களுக்கும் எப்படி யேகத்தன்மை கூடுமென்று சங்கித்து அதனைவிளக்கிக் கூறுகின்றார்.

தாக்கரும் பரமன் தன்சுதந் தரத்தாற் றன்னுடை மாயைதன் னாலே
யாக்கின னிந்த வுடம்படைந் தறியான் போலநின் றனைத்தையு மதிலே
சாக்கிரத் தென்னு மிடம்வகுத் தன்ன பானமுந் தையலார் முதலாம்
போக்கியங் களையும் புசித்திடுங் கனவும் பண்ணியத் தன்மையே புசிக்கும்

### இதன் பொருள்.

தாக்கரும் பரமன் —ஒன்றோடுஞ் சம்பந்திக்காத பரமேசன்
தன் சுதந்தரத்தால் —தன்னுடைய சுதந்தரபெலத்தால்
தன்னுடைய மாயை தன்னாலே—தனக்கு வேறில்லாத மாயையினாலே
இந்தவுடம்படைந்து —இந்தச் சரீரத்தைப்பொருந்தி
அறியான்போல நின்று —மோகமுடையவன்போல நின்று
அனைத்தைவும் ஆக்கினன் —சகல விவகாரங்களையும் செய்வானாகி
அதிலே சாக்கிரத்தென்னும் —அதனிடத்திலே சாக்கிரமென்னும்
இடம்வகுத்து —தலத்தைக் கற்பித்து
அன்னபானமும் —(கிரீடையால்) அன்னபானாதிகளையும்
தையலார் முதலாம் —மாதர்கள் முதலாகிய

போக்கியங்களையும் —போக பதார்த்தங்களையும்
புசித்திடும் —அனுபவிப்பான்
கனவும்பண்ணி —சொற்பனத்தையும் உற்பத்திசெய்து
அத்தன்மையே புசிக்கும் —(சீவனாவிளங்குகின்ற அவ்வீசன்) அவ்வண்ணமே புசிக்கின்றான்

ஈசனே உயிராகவும் சீவனாகவும் ஆன்மாவாகவும் நாமபேதம்பெற்றுச் சாக்கிரம் சொப்பனம் முதலிய அவத்தைகளை அனுபவிப்பவராயினும் இங்குப் போல என்றதனால்பாமார்த்தமாக அவ்வீசனுக்கு யாதொரு மோகமுமில்லையென்ப. (11)

அவதாரிகை.

சாக்கிரம் சொப்பனம் சுழுத்தியாகிய மூன்று அவஸ்தையின் நிலைமையையும் அந்நிலைமையில் விளையாடும் புருடனது திருவிளையாட்டுச் செயல்களையும் கூறுகின்றார்.

வேறு.

உறங்குமக் காலைமன்னிய தமத்தி னுட்புகுந் தொன்றொழி யாம
லிறந்தவவ் விடத்தே தன்னுருவான வின்பமே புசிக்குமீண் டெழுந்து
கறங்குபோ னனவை யடையினு மடையுங் கனவைவந் தடையினு மடையுஞ்
சிறந்தமுப் புரமு மிவன்விளை யாடித் திரிதரச் செய்ததே திகழ்த்தில்.

இதன் பொருள்.

உறங்குமக்காலை —தூங்குகின்றகாலத்தில்
மன்னிய தமத்தினுட்புகுந்து —நிலைபெற்ற தமசுக்குட்பிரவேசித்து
ஒன்றொழியாமல் —யாதேனும் ஒன்று தவறாமல்
இறந்தவவ்விடத்தே —(எல்லாம்) இறந்த அவ்விடத்தில்
தன்னுருவான —தனது சொரூபமாகிய
இன்பமே புசிக்கும் —மகானந்தத்தையே (திரிசியப் பிரதீதியில்லாமற்) புசிக்கின்றான்
மீண்டெழுந்து —திரும்பவும் பூர்வகர்மயோகத்தால் சீவத்தன்மை யுடையவனாகி எழுந்து
கறங்குபோல் —காற்றாடிபோல்
னனவையடையினுமடையும் —சாக்கிரத்தைவந்து அடைந்தாலும் அடைவான்
கனவை வந்தடையினுமடையும் —சொப்பனத்தை வந்தடைந்தாலும் அடைவான் (ஆகையினால்)
திகழ்த்தில் —சொல்லுங்கால்
சிறந்த முப்புரமும் —சிறப்புப்பொருந்திய மூன்றவைத்தைகளென்னும் புரங்களும்
இவன் விளையாடி —இப்புருடன் (லீலையாக) விளையாடி
திரிதரச்செய்ததே —திரியும்பொருட்டுச் செய்ததேதான்.

பதசாரம்—சொப்பனுவத்தையில் புறக்காணங்கள் ஒழியினும் அவ்வவத்தையிற் காணும்பொருளாகப் பரிணமித்த அந்தக்கரணமிருக்கின்றது. அதுவுஞ் சுழுத்தியில் ஒடுங்குமளவில் பாவரூப அஞ்ஞான தமத்தினுல் மறைக்கப்பட்டவனுகித் தன் சொரூபமான ஆனந்தத்தை நேராகவே புசிக்கின்றுன். அதனுலேயே சுழுத்தியினின்று மெழுந்திருந்த புருடன் நான் சுகமாகத் தூங்கினேன் என்கின்றுனென்பதுதோன்ற 'தமத்தினுட் புதுந்தோன்றேழியாம லிறந்த வவ்விடத்தே தன்னுருவான வின்பமேபுசிக்கும்' எனவும், ஈசனே ஜீவரூபனுகவிருக்கின்றுனெனில் அவனுக்குப் போகங்கூடாதென்ற சங்கையை மறுக்க வேண்டிச் சுவர்க்க நரக முதலெல்லாச் சுகதுக்க போகங்களும் அவனது விபூதி விநோத லீலையின்பொருட்டேயன்றி துக்கத்துக்கேதுவாகாதென்பார், 'சிறந்தழப்புழ மிவன்விளையாடித் திரிதரச்செய்ததே நிகழ்ந்தில்' எனவுங் கூறினுர்.

## அவதாரிகை.

ஈசன்விச்சுவாதீதனுதலின் இவனுக்குப்போகமில்லை. சீவன் பரதந்திரனுதலின் உண்மையாகப்போக மேன் அவனுக்கில்லையெனச் சங்கித்துக் கூறுகின்றுர்.

சொல்லிடும் பொருள்க ளியாவையுங் கடந்து சுதந்தர னுய்த்துவக் கின்றி
எல்லைதீ ரின்ப மேவடி வாகி யிருந்துள விறைவனுக் கென்று
மல்லலுண் டாகா திவையனு பவிக்க வன்னிய மாகவோர் சீவ
னில்லையே பேத மின்மையாற் சடந்தா னெங்ஙனே புசிக்குமா றியம்பீர்.

## இதன் பொருள்.

| | |
|---|---|
| சொல்லிடும் பொருள்கள் | —கூறப்பட்ட அநித்தியப் பொருள்களான |
| யாவையும் கடந்து | —சகங்களனைத்தையும் கடந்து |
| சுதந்தரனுய் | —சுதந்தரனுயும் |
| துவக்கின்றி | —(உபத்திரவமான)பந்தமில்லாமல் |
| எல்லைதீர் | —அளவில்லாத |
| இன்பமேவடிவாகி யிருந்துள | —மகானந்தமே சொரூபமாயிருக்கின்ற |
| இறைவனுக்கு என்றும் | —பரனுக்கு எக்காலத்திலேனும் |
| அல்லலுண்டாகாது | —துக்கமுண்டாகாது |
| இவையனுபவிக்க | —இத்துக்கரூபமான கருமபலங்களை அனுபவிக்க |
| அன்னியமாக ஓர் சீவனில்லை | —பின்னமாக ஒரு சீவனில்லை |
| பேதமின்மையால் | —(சித்திற்குப்)பேதமில்லாமையினுலேதான் |
| சடந்தானெங்ஙனே | —சடமானது எவ்வண்ணம் |
| புசிக்குமாறியம்பீர் | —புசிக்கும் வழிசொல்லுங்கள். |

பதசாரம்—பரமசிவன் பிரபஞ்ச வாரோபவாதைகளுக்கு அதிட்டான மாயும், அவதியாயுமிருக்கின்ற விச்சுவாதீதனுதலின் இல்லாததாயுள்ள போகம் துக்கத்துக் கேதுவாகாதென்பார், 'சொல்லிடும் பொருள்களியாவையுங் கடந்து' எனவும், இதர சுகங்களெல்லாம் பேரின்ப சொரூபனை ஈசனுடைய ஆனந்தலேசமேயாதலின் விஷய சுகபோகங்களெல்லாம் லீலையின் பொருட்டென்பதுதோன்ற 'எல்லைதீரின்பமேவடிவாகி' எனவும், பரதந்திரத்தன்மை துக்கத்துக்கேதுவாகலின் ஈசனுக்கு அந்தத்தன்மை இல்லாமையால் துக்கியாகா னென்பதுதோன்ற, 'சுதந்தரன்' எனவும், சீவேசர்களுக்கு உண்மையில் பேத மில்லாமையால் இருவரிடத்திலுமுள்ளசின்மாத்திரரூபத்துக்குப் பேதமில்லாமை முன்னமே நிரூபிக்கப்பட்டதென்பதுதோன்ற, 'அன்னியமாகவோர் சீவனில்லை யே பேதமின்மையால்' எனவும், சடமான கருமபலமுஞ் சிற்சொரூபத்தில் ஆரோபிக்கப்பட்டுப் பொய்யாதலால் சிற்சொரூபனுயுள்ள ஆன்மாவுக்கு உண்மை யாக அவ்விடயபோக மனைத்தும் ஒரு கிஞ்சித்தும் இல்லையே வில்லையென்பார், 'சடந்தானெங்ஙனே புசிக்குமாறியம்பீர்' எனவுங் கூறினுர். (13)

அவதாரிகை.

இவ்வாறு சாக்கிரம் சொப்பனம் சுழுத்தி இவ்வவத்தைகளில் சீவபாவத் தையடைந்த பரமசிவனுக்கு உண்மையாய்ப் போகமில்லாமையால் அவ்வவஸ்தா நிர்மானமும் அப்போகமும் அனைத்தும் லீலாமாத்திரந்தானெனக் கூறுகின்றுர்.

ஆதலா லறிவா னந்தமா யுள்ள வமலனே யவைபுசிக் கின்று
னீதெலாம் விளையாட்டே விளையாடு மிடங்களே யிப்புர மூன்று
மாதலா காமை சொல்லவும் படுமோ வதிசுதந் தரனையன் னியமா
யோதலா மோவிப் புரங்களு மவன்ற னுருவமே வேறிலா மையினுல்.

இதன் பொருள்.

| | |
|---|---|
| ஆதலால் | —ஆகையினுலே |
| அறிவானந்தமாயுள்ள | —ஞானுனந்த சொரூபமாயிருக்கின்ற |
| அமலனே | —நின்மலனுன அரனே |
| அவை புசிக்கின்றுன் | —அப்போகங்களை அனுபவிக்கின்றுன் |
| ஈதெலாம் விளையாட்டே | —இப்போகங்களெல்லாம் விளையாட்டேதான் |
| இப்புரமூன்றும் | —இப்புரங்களாகிய மூன்றுசரீரங்களும் |
| விளையாடுமிடங்களே | —சம்புவானவன் விளையாடு மிடங்களாகும் |
| ஆதல் ஆகாமை சொல்லவும் படுமோ | (அப்பரமசிவனுக்கு) ஆதலையும் ஆகாமையை யும் (ஒருவர்) சொல்லவுங்கூடுமோ |
| அதிசுதந்தரனை | —மிகுந்த சுதந்தரனை |
| அன்னியமா யோதலாமோ | —வேருகச் சொல்லலாமோ |
| வேறிலாமையினுல் | —பிரமத்துக்கு அன்னியமாக ஒன்றுமில்லாமையினுல் |
| இப்புரங்களும் | —இவ்அவஸ்தாத்திரயங்களும் |
| அவன்றனுருவமே | —அவனுடைய சொரூபமேயாகும். |

**பதசாரம்**—ஆப்தகாமனுயுள்ள ஈசனுக்கு வேறொரு பலன் வேண்டாமையால் அவனுக்கு மூன்றுபுரங்களும் கேவலம் உய்யானவனங்கள் போலுள்ளனவெனவும், அவ்வீசனுக்குப் போகசம்பந்தமில்லையென்பதற்குச் சோதிக்கவேண்டாமெனவும் அவன் எல்லாம் வல்லன் எனவும் கூறுவார், **'விளையாடுமிடங்களே யிப்புரமூன்று மாதலாகாமை சொல்லவும்படுமோ'** என்றார். (14)

அவதாரிகை.

மூன்று புரங்களும் ஈசனுக்குச் சங்கேத நாமங்களோடு விளையாடும் பொருட்டு இருக்கின்றனவெனில் துவிதம் வருமென்று சங்கித்துக்கூறுகின்றார்.

மாலுறு நனவு கனவுறக் கங்கள் வடிவமாய் நிகழ்ந்துள விறைக்கு
ஞாலமேல் விசுவன் றைசசன் பிராஞ்ஞ னாமமா நவிலுவ ரடைவே
தூலமே விசுவ னுண்பவன் சுருக்கந் தைசசன் றுய்ப்பவன் சுகந்தன்
பால்தா தலினுற் றன்னுடை யின்பம் பருகிடா நிற்குமே பிராஞ்ஞன்.

இதன் பொருள்.

| | |
|---|---|
| மாலுறுநனவு | —மயக்கமில்லாத சாக்கிரம் |
| கனவு உறக்கங்கள் வடிவமாய் | —சொப்பனம் சுழுத்தி என்னும் இவைகளின் சொரூபமாகி |
| நிகழ்ந்துள இறைக்கு | —பிரகாசிக்கின்ற ஈசனுக்கு |
| ஞாலமேல் அடைவே | —பூமியின்கண் கிரமமாக |
| விசுவன் தைசசன் | —விசுவனென்றும் தைசசனென்றும் |
| பிராஞ்ஞன் | —பிராஞ்ஞனென்றும் |
| நாமமா நவிலுவர் | —சங்கேதநாமமாகச் சொல்லுவார்கள் |
| விசுவன் | —விசுவனனவன் |
| தூலமே உண்பவன் | —தூலமான சாக்கிரத்தைப்புசிக்கின்றவனுவான் |
| தைசசன் | —தைஜசனனவன் |
| சுருக்கம் துய்ப்பவன் | —சூக்குமமான சொப்பனத்தைப் புசிக்கின்றவன் |
| பிராஞ்ஞன் | —பிராஞ்ஞனென்பவன் |
| சுகந்தன்பால தாதலினுல் | —சுகந்தன்னிடத்திலிருப்பதனுல் |

தன்னுடையின்பம் பருகிடாநிற்கும்—தன்னுடைய இன்பத்தையே புசிப்பான்.

**பதசாரம்**—தன்னிடத்தில் கற்பிக்கப்பட்ட சாக்கிர முதலிய சாட்சியமான அவஸ்தையின் பேதத்தால் அந்த அந்தச் சாட்சிய விசேஷத்தாலுண்டாகிய விசுவன் முதலிய சமுக்கினையைச் சின்மாத்திர சாட்சியான ஆன்மா முறையே அடைகின்றுனென்பார், **'இறைக்கு ஞாலமேல் விசுவன்றைசசன் பிராஞ்ஞனமமா நவிலுவர்'** எனவும், பஞ்சீகரிக்கப்பட்ட சத்தபரிச முதலிய விஷயரூபமான தூலப்பிரபஞ்சத்தையும் புசிப்பவரனைவர்க்கும் பொதுவாக ஈசனது மாயையினுல்

கற்பிக்கப்பட்ட போகரூபமான ஸ்தூலப் பிரபஞ்சத்தையும் புசிக்கின்றவன் சாக்க்கிரத்தென்னும் அவத்தைக்குச் சாட்சியான விச்சுவான்மாவென்பார், **தூலமே விசுவனுண்பவன்'** எனவும், தனது அவிச்சையினூற் கற்பிக்கப்பட்ட அசாதாரணமான விஷய சமூகங்களைப் புசிப்பவன் வேறொருவனில்லாமல் தானே புசிக்கின்றவன் சொப்பனத்திற்குச் சாட்சியான தைஜச ஆன்மாவென்பார், **'சூக்கந்தைசசன்றுய்ப்பவன்'** எனவும், விஷயங்களும் இந்திரியவர்க்கங்களும் அந்தக்கரணத்தோடும் தனக்குக் காரணமான அஞ்ஞானத்திலொடுங்குகின்றதனுல் விக்ஷேபமில்லாமல் சொரூபபூதமான ஆனந்தத்தைச் சுழுத்தி சாட்சியான பிராஞ்ஞன் புசிக்கின்றானென்பார், **'சுகந்தன் பாலதாதலினூற் றன்னுடையின்பம் பருகிடாநிற்குமே பிராஞ்ஞன்'** எனவும் கூறினர்.

**கருத்து**—அவஸ்தா சம்பந்தத்தால் இவனுக்குப் போகமுண்டாயதேயன்றிச் சொரூபத்தால் பரமானந்தரூபனும் கேவலஞ் சின்மாத்திர சாட்சியாயும்விளங்குகின்றானுனபடியால் எவ்வித மோகமும் உண்மையில் இவனுக்கன்றென்பதாம்

## அவதாரிகை.

போக்கியமான சகம் நிருபாதிகனுன பரமசிவ சொரூபத்தில் ஆரோபிதமாய்ப் பொய்யாதலானும் உபாதி நீங்குங் காலத்துப் புசிப்பவனும் பரமசிவனுக்கு வேறாக இராததனுலும், புசிப்பவன் புசிக்கப்படு பொருளென்னுமிவைகள் பிரம்மமே என்று அறிந்தவன் போகத்தால்வரும் புண்ணியபாவங்களையும் அவை சம்பந்தமான சுகதுக்கங்களையும் சம்பந்திக்கமாட்டானென்று கூறுகின்றார்.

## வேறு.

புரங்கண் மூன்றிலும் போக்கிய மியாவையங்
கிருந்து துய்ப்பவ னியாவன்மற் றியாவையும்
பரம்பிர மமெ னும்படி பார்ப்பவ
னரந்தை யெய்திடா னுயிரஞ் செய்யினும்.

## இதன் பொருள்.

புரங்கண் மூன்றிலும் —அவஸ்தைகள் மூன்றுகளிலும்
போக்கிய மியாவை —புசிக்கப்படுவன எவை
அங்கிருந்து துய்ப்பவன் யாவன்—அவ்விடத்திலிருந்து புசிப்பவன் யாவன்
யாவையும் —அவ்வெல்லாவற்றையும்
பரம்பிரமமெனும்படி பார்ப்பவன்—பரப்பிரமமென்று சொல்லும்படி காண்பவன்
ஆயிரஞ்செய்யினும் —ஆயிரம்போகங்களைப் புசித்தல்செய்யினும்
அரந்தை யெய்திடான் —துக்கத்தையடையமாட்டான். (16).

இதுவுமது.

விழுமி தாமய மேதங்கள் செய்யினும்
பழிமிகும் பஞ்ச பாதகம் பண்ணினு
மொழிவு றாமலொன் றேயென் றுணருவான்
நழுவினா னந்த நன்மையுந் தின்மையும்.

இதன் பொருள்.

விழுமிதாமய மேதங்கள் செய்யினும்—தூயதான பரிமேதங்களைச் செய்தாலும்
பழிமிகும் பஞ்சபாதகம் பண்ணினும்—பழிமிகுந்த பிரமகத்தி முதலிய வைந்து பாதகங்களையுஞ் செய்தாலும்
ஒழிவுறாமல் —தவிராமல்
ஒன்றே யென்றுணருவான் —(ஏகமான) பிரமம் ஒன்றே என்றறிந்தவன்
அந்த நன்மையும் —அப்புண்ணிய பலத்தையும்
தின்மையும் நழுவினான் —அப்பாப பலத்தையும் கடந்தவனாவான். (17)

அவதாரிகை.

இவ்வண்ணம் ஏகத்துவ ஞானத்திற்குப் பயன் இன்னதென அப்பயனை விளக்கிக் கூறியும் அந்த ஏகத்தன்மையை ஈண்டு விவரித்துங் கூறுகின்றார்.

வேறு.

சீவனன்று புரமூன்றிற் சித்தாமவனே விளையாடு
மேவுமெல்லா மெய்போல வவனால்விளைத லான்மெய்யத்
தேவனேசான் றாதலினாற் சித்துமவனே யத்துவிதன்
யாவுந்தானா தலினெதினுந் தனையேவிரும்ப லாலின்பன்.

இதன் பொருள்.

புரமூன்றிற் சித்தாமவனே விளையாடும் சீவனன்று } அவஸ்தைகள் மூன்றினும் சித்தாகிய பரமசிவனே விளையாடுகின்றான் சிதாபாசனல்ல
மேவுமெல்லாம் மெய்போல்—பொருந்திய எல்லாப்பொருள்களும்சத்தியம்போல
அவனால் விளைதலால் —அச்சிவனால் உண்டாதலால்
மெய்யத்தேவனே —அத்தேவனே சத்தாவான்
சான்றாதலினாற் சித்துமவனே—(எல்லாவற்றிற்குஞ்) சாட்சியாயிருத்தலினாற் சித்துரூபனும் அந்தத்தேவனே
யாவுந்தானாதலின் —எல்லாமுந்தானாயிருத்தலின்
அத்துவிதன் —இரண்டற்றவன்
எதினுந்தனையே —எல்லாவற்றினும் மேலாகத் தன்னையே
விரும்பலால் இன்பன் —விரும்புகின்றபடியால் ஆனந்தரூபனும் அவனே.

பதசாரம்—ஈசனே லீலையினால் சீவரூபனாக இருத்தலால் ஈசனைக்காட்டிலும் சீவன் வேறில்லாமையின், 'சீவனன்று புராழன்றில்' எனவும், புசிப்பவன் போக்கியம் என்னும் விசித்திரமான சகம் மாயையினால் மெய்போல் உண்டாயதேயன்றி உண்மையிலில்லாததனால், 'மெய்போல' எனவும், ஞானரூபனான ஆன்மாவுக்குப் பிரமலட்சணமான சச்சிதானந்தத்தன்மை சித்தித்தலால் ஏகத்துவம் கூடுமெனில் அசத்தியமான எல்லாவற்றிற்குந் திரிசியத்தன்மை நியமமாதலின் அதற்குச் சாட்சியான ஞானரூபஆன்மா சத்தியனும் அதனாலேயேசித்துரூபனும் பரப்பிரேமைக்கு இருப்பிடமாதலால் சுகரூபனும் முற்கூறியபடி எவ்விடத்தும் பேதத்திற்கு நிரூபித்தற்கொவ்வாது சொரூப லாபமில்லாததனால் அத்துவிதனும்ஆதலால் சாட்சியான்மாசச்சிதானந்த ரூபனுவானென்பார், 'மெய்த்தேவன்' எனவும், சித்துமவனே' எனவும், 'இன்பனேனவும்' விதந்து கூறினார். (18)

அவதாரிகை.

இந்தச் சாட்சியினிடத்தில் சாக்கிர முதலிய அவஸ்தைகள் மூன்றும் ஒடுங்குவதனால் அவற்றிற்குச் சாட்சியான ஆன்மா ஜீவனாகான் உபாதிவசத்தால் ஜீவன் போற்றோன்றினும் ஒருபொறியுமில்லாத கேவலப் பிரமந்தானென்றும், ஜீவன் போற்றோற்றுதல் எதனாலென்னில் அஞ்ஞானத்தாலென்றுங் கூறுகின்றார்.

இந்தப் புரங்க ளொருமூன்று மிவன்ற னிடையே யிருப்பதெனிற்
றொந்தப் புருட னன்றவன்போற் றோன்று கின்றான் கேவலமா
மந்தப் பிரம மாயவன்றா னறியாமையினா லப்பரனைப்
பந்தப் படுமோர் சீவனெனப் பார்ப்பார் பவத்தே பதைக்கின்றார்.

இதன் பொருள்.

இந்தப்புரங்களொரு மூன்றும்—இந்தப் புரத்திரயங்களும்
இவன்றனிடையேயிருப்பதெனில்—இவனிடத்திலொடுங்கியிருப்பதென்றால்
தொந்தப் புருடனன்று —துவிதனான ஜீவனன்று
கேவலமாமந்தப் பிரமமாய வன்றான் } கேவலமான அந்தப் பிரமமாகிய ஆன்மாவே
அவன் போற்றோன்றுகின்றான் —அந்தச்சீவன்போற் றோற்றுகின்றான்
அறியாமையினால் அப்பரனை —அஞ்ஞானத்தினால் அந்தப் பரமசிவனை
பந்தப்படுமோர் சீவனெனப் பார்ப்பார் } கட்டுப்பட்ட ஒரு ஜீவனெனக்காண்பவர்கள்
பவத்தே பதைக்கின்றார் —பிறவிச் சமுத்திரத்தில்விழுந்து துன்பப்படுவார்கள்.

அவதாரிகை.

இவ்வாறு ஜீவனுக்குச் சச்சிதானந்த அத்துவித லட்சணமான சொரூபத் தன்மையைப் பிரதிபாதித்துப் பிரம்மத்திற்குச் சூக்ஷுமமான பிராணன் முதல் மண் வரை விரிந்துள்ள தடத்தலட்சணமாக அத்தன்மையை நிரூபிக்கின்றார்.

### வேறு.

ஈனமாகிவி டும்பிராணன்ம னங்களிந்திய மியாவையும்
வானமூதைநெ ருப்புநீர்புவி மற்றுமந்த மகத்திலே
யானதாகிலு நுண்மையின்னதி நுண்மையாமது வாகுமெய்ஞ்
ஞானநாடிய தத்துவம்பத மொன்றினெய்து மருத்தமே.

### இதன் பொருள்.

| | |
|---|---|
| ஈனமாகிவிடும் பிராணன் மனங்கள் | இழிவாகிய பிராணனும், மனம் புத்தியென்னு மிவைகளும் |
| இந்தியமியாவையும் | —பொறிகளெல்லாமும் |
| வானம் ஊதை | —விண்ணும் காற்றும் |
| நெருப்பு நீர்புவி | —அக்கினியும் ஜலமும் மண்ணும் |
| மற்றுமந்த மகத்திலே யானதாகிலும் | மற்றுமுள்ள வனைத்தும் அந்தப் பிரமத்தினின் றும் உண்டானதாயினும் |
| அது நுண்மையின் | —அப்பொருள் நுட்பத்தினும் |
| அதிநுண்மையாம் | —மிகுந்த நுட்பமாகும் |
| ஆகுமெய்ஞ்ஞானம் நாடியதத் | —(சுபாவ)மாகிய சத்சித்தாகக் கருதுகின்ற அப்பிரம்மமே |
| துவம்பத மொன்றினெய்து மருத்தமே | தொம்மென்னும் பதமொன்றின்கண் அடையப் படும் பொருளாகும். |

பதசாரம்—நுண்மையான அபஞ்சீகிருத விஷயங்களைக்காட்டிலும் நுண்மையானது மாயை. அதற்குஞ் சூக்ஷ்மமான பிராணன்முதல் மண்வரையிலும் முறையேயமைந்த எல்லாவுலகுக்கும் காரணப்ரம்மமே ஜீவனைச் சொல்லுகின்ற தொம்பதத்திற்கு அருத்தமென்பார், 'நுண்மை யின்னதி நுண்மையாமது வாகு மெய்ஞ் ஞானநாடிய தத்துவம்பத மொன்றி னெய்துமருத்தமே' என்றார். (20)

### அவதாரிகை.

சகத்காரண வாசியான தற்பதத்திற்கும் தேக முதலிய உபாதியுடன்கூடிய ஆன்மவாசியான தொம்பத்திற்கும் விருத்தமான பாகபரித்தியாகத்தால் இரண் டிடத்துமுள்ள சின்மாத்திரரூபமான ஏகத்துவத்தை ஐந்தாவது அத்தியாயத்தில் 'நீயென்கின்ற வார்த்தைக்குப் பொருளாயென்றும் நிற்பதுவே' என்னும் பாடல் முதலியவற்றால் விரித்துரைத்தார். அதே சித்தாந்தமாக இங்ஙனம் கூறுகின்றார்.

நீயெனும் பொரு ளேயதென்று நிகழ்த்திடும்பொரு ளாவதுந்
தூயசிற்பர மேபதங்களி ரண்டினுந்துணி வாதலான்
மாயையென்று மவித்தையென்று முபாதிபேத வழக்கினு
லாயகற்பித பேதமல்லதபேதமேபொரு ளாவதே.

### இதன் பொருள்.

| | |
|---|---|
| நீயெனும் பொருளே | —நீயென்றுசொல்லும் பதப்பொருளே |
| அதென்று நிகழ்த்திடும் பொருளாவதும் | அது என்று சொல்லுகின்ற பதப்பொருளாகி நின்றதும் |
| பதங்களிரண்டினும் | —நீ அது என்னும் சொற்களிரண்டிடத்தும் |
| தூயசிற்பரமே துணிவாதலால் | —(பொருளானது) சுத்தசித்தான பரமசிவமே நிச்சய மாதலால் |
| மாயையென்று மவித்தையென்று முபாதி பேதவழக்கினால் | மாயையென்றும் அவித்தையென்றும் சொல்லப்படும் உபாதியின் பேதவிவகாரத்தால் |
| ஆயகற்பித பேதமல்லது | —உண்டாகிய கற்பித வேற்றுமையன்றி |
| அபேதமே பொருளாவது | —பேதமில்லாத (ஏகத்துவமே) பொருளாகும். |

**கருத்து**—விசுத்த சத்துவப் பிரதானமாய்த் தன்னையடைந்தவனை மோகஞ் செய்யாத மாயை ஈசனுடைய உபாதியாகும். மலினசத்துவப் பிரதானமாய்த் தன்னையடைந்தவனை மோகஞ்செய்யும் அவித்தை ஜீவோபாதியாகும். இவர்களுக்கு வந்த பேதமும் உபாதிவசத்தாலன்றி உண்மையாயில்லையென்பதாம்.

### இதுவுமது.

ஆதரத்தொ டவிச்சைநாம மறுத்தநல்லதி காரியைப்
போதமுற்று மெனப்புகன்றது பொய்யிலாமறை யையமன்
றேதமற்றது நானெனுந்திட னவனேயஃ தெய்தினோ
னோதுமுத்தி யவன்றனுள்ளநு போகமிங்ங னுதிப்பதாம்.

### இதன் பொருள்.

| | |
|---|---|
| பொய்யிலாமறை ஆதரத்தொடு | —மெய்யானவேதம் அன்போடு |
| அவிச்சைநாம மறுத்த | —அஞ்ஞானமென்னும் பெயரையும்அறுத்த |
| நல்லதிகாரியை | —நல்ல அதிகாரிக்கு |
| போதமுற்றுமெனப் புகன்றது | —ஞானசொரூபமே எல்லாமுமென்று உபதேசித்தது |
| ஐயமன்று | —சந்தேகமேயில்லை |
| ஏதமற்றது நானெனுந்திடனவன் | —(எவன்)குற்றம்நீங்கி அந்தப் பரசிவன் நானென்னும் திடமுடையவனாகின்றானோ |
| அஃதெய்தினோன் | —(அவன்)அந்தப் பிரமத்தை அடைந்தவன் |
| அவன்றனுள் | —அவனிடத்தில் |
| ஓதுமுத்தி | —சொல்லுகின்ற முத்தியிருக்கின்றது |
| இங்ஙன் அனுபோகம் உதிப்பதாம் | —இவ்விடத்தே (அவனுக்கு) அநுபோகம் உண்டாகும். |

பதசாரம்—இயல்பாகச் சித்திந்த ஏகத்தன்மையை மறைத்தலால், 'அவித்தை' எனவும், நுண்மையினும் நுண்மையாய் நித்தியமான அது நீயே நீயே அது என்று சுருதிகூறிற்றென்பதுதோன்ற 'போதமுற்றுமெனப் புகன்றது பொய்யிலாமறை' எனவும், சாக்கிர முதலிய அவஸ்தாரூபமாய்ப் பிராணன் மன முதலிய பிரபஞ்சமாயும், யாதொரு பிரம்மம் பரோட்சமாய் விளங்குகின்றதோ அதுவே நீ நான் என்ற சத்தங்களுக்கு லக்ஷியமாய் அபரோட்சமாய் விளங்குகின்ற பிரத்தியக்குச் சைதன்யமென்பார், 'அது நான்' எனவுங் கூறினர். (22)

அவதாரிகை.

இனி ஐந்து பாடல்களால் அனந்த சொரூபமான பிரமான்ம ஏகத்தன்மையை அறிந்த ஜீவன்முத்தனுக்கு அனுசந்தானப் பிரகாரத்தை விளக்கிக் கூறுகின்றார்.

வேறு.

புகலுமுப் பதத்திற் போகம் போக்கியம் புசிப்பா னேநா
னிகழுமித் தனைக்குஞ் சான்றாய் நின்றதற் சொரூப னேநா
னிகழுவ தென்பா லென்பா னிற்பது மிறப்ப தென்பாற்
சகலமு மாதலாலே தற்பரம் பொருளா கின்றேன்.

இதன் பொருள்.

புகலுமுப்பதத்தில் —சொல்லுகின்ற மூன்றிடங்களாகிய அவத்தைகளினும்
போகம் போக்கியம் —போகமும் போக்கியமும்
புசிப்பான் நான் —புசிப்பவனும் நானே
நிகழுமித்தனைக்கும் —விளங்கும் இத்தனைக்கும்
சான்றாய் நின்ற —சாட்சியாகி நிற்கின்ற
தற்சொரூபனே நான் —அந்தத் தத்பதசொரூபனும் நானே
சகலமும் என்பால் நிகழுவது—எல்லாமும் என்னிடத்திலேயே உண்டாவதும்
நிற்பதுமென்பால் —நிற்கின்றதும் என்னிடத்திலேயே
இறப்பதென்பால் —அழிவதும் என்னிடத்திலேயே
ஆதலால் —ஆகையினால்
தற்பரம் பொருளாகின்றேன்—தற்பரம் பொருளான பரசிவன் ஆகின்றேன். (23)

அணுவினுக் கணுவும் நானே யப்படி மகத்தும் நானே
துணியிலெப் பொருளும் நானே சோதியுட் சோதி நானே
பணிவுறத் தகுவே னானே பழையனும் புருட னானே
யிணைதனக் கில்லா வீச னாகிய வின்பம் நானே.

இதன் பொருள்.

அணுவினுக்கணுவும் நானே —அணுவுக்கு அணுவாயுள்ளவனும் நானே
அப்படி மகத்தும் நானே —அவ்வாறே மகத்துக்கு மகத்தாயுள்ளவனும் நானே
துணியிலெப்பொருளும் நானே—நிச்சயிக்கில் எல்லாப்பொருளும் நானே
சோதியுட் சோதி நானே —ஒளிக்குள் ஒளியாயுள்ளவனும் நானே
பணிவுறத்தகுவேனுனே —யாவராலும் வணங்கத்தக்கவனும் நானே
பழையனும் புருடனுனே —புராதனனுன புருஷனும் நானே
தனக்கு இணையில்லா —தனக்கு நிகரில்லாத
ஈசனுகியவின்பம் நானே —பரசிவமான ஆனந்தசொரூபமும் நானே. (24)

வேறு.

கண்ணுஞ் செவியு மின்றியுமே காணக் கேட்கக் கடவேனுன்
பண்ணுந் தொழிலெல் லாம்வல்லேன் பாணி பாத மில்லெனினு
மெண்ணுங் கடந்த விடமிங்கே யிருந்துஞ் செல்வே னுனெருவர்க்
கொண்ணும் படியன் றெனையுணர வெல்லா முணரு கின்றேனுன்.

இதன் பொருள்.

கண்ணுஞ் செவியுமின்றியும் —விழியும் காதும் இல்லாமலிருக்கினும்
காணக்கேட்கக் கடவேனுன் —பார்க்கவும் கேட்கவும் வல்லவன் நான்
பாணிபாத மில்லெனினும் —கைகால்கள் இல்லையெனினும்
பண்ணுந்தொழிலெல்லாம் —செய்கின்ற தொழில் எல்லாவற்றினும்
வல்லேன் இங்கே —வல்லவனும் இவ்விடத்தில்
எண்ணுங்கடந்த விடமிருந்தும்—நினைவையுங்கடந்த சொரூப ஸ்திதியிலிருக்கினும்
செல்வேனுன் —(எங்குஞ்)செல்பவனும் நான்
ஒருவர்க்கெனையுணர —எவர்க்கும் என்னை அறிதற்கு
ஒண்ணும்படியன்று —(யான்) பொருந்துந் தன்மையனல்லன்
எல்லாமுணருகின்றேனுன் —எல்லாவற்றையும் அறிகின்றவனும் நானே (25)

ஓது வேதம் பலவாலு மோதி யுணரப் படுவேனுன்
வேத வேதாந் தப்பொருள்க ளெல்லாம் விளங்க வறிவேனுன்
தீது நன்ரும் வினைமரணஞ் சனனந் தேகேந் தியம்புத்தி
பூத மைந்து மின்றியக மிதமாய் நானே புசிக்கின்றேன்.

இதன் பொருள்.

ஓதுவேதம் பலவாலும் —சொல்லுகின்ற மறைகள் அநேகங்களாலும்
ஓதியுணரப்படுவேனுன் —துதித்து அறியத்தக்கவனும் நான்

| | |
|---|---|
| வேத வேதாந்தப்பொருள்களெல்லாம் | மறையினும் மறைமுடிவினுமுள்ள பொருள்களெல்லாவற்றையும் |
| விளங்கவறிவேனான் | —நன்றாக அறிபவனும் நானே |
| தீது நன்றாம்வினை | —பாவபுண்ணியங்களான கருமங்களும் |
| மரணம் ஜனனம் | —இறப்பும் பிறப்பும் |
| தேகேந்தியம் புத்தி | —உடல்பொறிகளும் புந்தியும் |
| பூதமைந்துமின்றி | —பூதங்களைந்துமில்லாமல் |
| அகம் இதமாய் | —அகந்தையும் இதந்தையுமாய் |
| நானே புசிக்கின்றேன் | —(யாவையும்)நானே நுகர்கின்றேன். (26) |

வேறு.

சிறப்புடைய தேசுவடி விற்றிகழ்த லானு
னெறித்தவடி வாலுமெறி யாவடிவி னாலு
நிறத்தசுட ரானவடி வாகநிகழ் கின்றே
னிறத்தலில னானபர மீசனவன் யானே.

இதன் பொருள்.

| | |
|---|---|
| சிறப்புடைய தேசுவடிவில் | —சிறப்புப்பொருந்திய சுயம்பிரகாசரூபமாக |
| நான் திகழ்தலால் | —யான் விளங்குகின்றதனால் |
| எறித்தவடிவாலும் | —விளங்குகின்ற ரூபமாகவும் |
| எறியாவடிவினாலும் | — விளங்காத ரூபமாகவும் |
| நிறத்த சுடரான வடிவாக | —விளக்கத்தையுடைய ஒளியான ஹிரண்மயமாகவும் |
| நிகழ்கின்றேன் | —விளங்குகின்றவனும் |
| இறத்தலிலனான | —அழிவில்லாதவனான |
| பரமீசனவன் யானே | —பரமசிவனும் யானே (27) |

அவதாரிகை.

இனி இவ்வநுசந்தானத்தால் அடையப்படும் பலனைக் கூறுகின்றார்.

வேறு.

எனையொழிய வொன்று மிலையெலா மெனதுரு வென்று நிகழ்வதோ
ரனுபவம் வந்து விளையுமே லழிவுள தன்றி யமலமா
யினிதுற நெஞ்சி லுறைவதா யிலதுள தன்றி யெதுவுமா
யனியமிறந்த பிரமமா மறிவுரு வொன்றை யடையுமே.

இதன் பொருள்.

| | |
|---|---|
| எனையொழிய வொன்றுமிலை | —என்னைத்தவிர ஒருபொருளுமில்லை |
| எலாமெனதுருவென்று | —யாவும் என் சொரூபமென்று |

| | |
|---|---|
| நிகழ்வதோரனுபவம் வந்து விளையுமேல் | (இவ்வாறு)விளங்கும் ஓரநுபூதி ஒருவற்கு)வந்து உண்டாகுமெனின் |
| அழிவுளதன்றியமலமாய் | —நாசமில்லாது விமலமாயும் |
| இனிதுறநெஞ்சினுறைவதாய் | —யாவரும் ஆனந்தமடைய இதயத்திலுள்ளதாயும் |
| இலதுளதன்றி யெதுவுமாய் | —இல்லையுண் டென்றுமல் யாவுமாயும் |
| அனியமிறந்த பிரமமா மறிவுருவொன்றை | தனக்கு அன்னியமில்லாத பிரம்மமான ஞானசாரூபமொன்றினை |
| அடையுமே | —அவன் அடையாநிற்பான். (28) |

வேறு.

கைவல் லியவுப நிடதங் கருணையி னாலே யெதுகரு திக்கூறிற்
றுய்வில் லையனிய மொன்று லெனவரி பிரமா திகளுக வாநின்றார்
ரெவ்வல் லியினுள வதிகா ரிகளுமி தறியும் படியினி திற்சொன்னே
னவ்வெல் லையில்பொரு ளதிபத் தியொடறி வுறுவீ ரமரர்க ளனைவீரும்.

இதன் பொருள்.

| | |
|---|---|
| உய்வில்லையனிய மொன்றால் | —மற்றொரு பொருளினால் பிழைப்பில்லை |
| என | —என்று |
| கைவல்லிய உபநிடதம் | —கைவல்லியமென்னும் உபநிடதமானது |
| கருணையினால் | —கிருபையினால் |
| எதுகருதிக் கூறிற்று | —எதனைக்கருதிச் சொல்லிற்று |
| அரிபிரமாதிகளுகவா நின்றார் | —(அதனை) மாலயன் முதலியவர்கள் மகிழாநின்றார் |
| எவ்வல்லியினுள வதிகாரிகளும் | —எந்தப் பிரிவினுமுள்ள அதிகாரிகளும் |
| இதறியும்படி யினிதிற்சொன்னேன் | —இதனையுணரும்படி பிரியமாகச்சொன்னேன் |
| அமரார்களனைவீரும் | —தேவர்களான நீங்களெல்லாரும் |
| அவ்வெல்லையில் பொருளதி பத்தியொடறிவுறுவீர் | அந்த எல்லையில்லாத பரசிவசொரூபத்தை மிகு பத்தியோடு அறிவீர்கள். (29) |

வேறு.

பண்டைநான் மறைகள் சொல்லிய பரிசே
பரகுருவா யிருந்துள்ள
அண்டர்நா யகனை யாதரித் தவன்ற
னருளினா லநுபவ மாகக்
கண்டுளோ ரிருக்குந் தன்மையை யெல்லாங்
காதலால் வானவர்க் குரைத்தான்
புண்டரீ கத்தே யிருந்துதான் சகல
பூதமும் படைத்திடும் புனிதன்.

இதன் பொருள்.

புண்டரீகத்தேயிருந்து —தாமரைத் தவிசிலிருந்து
சகலபூதமும் படைத்திடும் புனிதன்—எல்லாப்பூதங்களையும் உண்டாக்கியதேவன்
பண்டை நான்மறைகள் —பழைய நான்குவேதங்களும்
சொல்லிய பரிசே —உபதேசித்தவாறே
பரகுருவாயிருந்துள்ள —மூலகுருவா யெழுந்தருளியிருக்கின்ற
அண்டர் நாயகனை —லோகநாயகனுன சிவபெருமானை
ஆதரித்தவன்றனருளினால் —அன்பினால் வழிபட்டு அவனது திருவருளினால்
அநுபவமாக —சுவாநுபவமாக
கண்டுளோரிருக்கும் —(அப்பரத்தைக்)கண்டுள்ளவர்களிருக்கும்
தன்மையை யெல்லாம் —இயல்பெல்லாவற்றையும்
காதலால் வானவர்க்குரைத்தான்—அன்பினால் விண்ணவர்களுக்கு உபதேசித்தான்.

எட்டாவது கைவல்லிய உபநிடததாற்பரியம் உரைத்த அத்தியாயம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் 410.



## ஒன்பதாவது

## பிரகதாரணிய உபநிடததாற்பரியமுரைத்த அத்தியாயம்

### அத்தியாய அவதாரிகை.

இனிப் பிரகதாரணியத்துக்கும் பிரமான்ம ஐக்கிய பரத்தன்மையைஇரண்டு அத்தியாயங்களால் கூறுவார் அதனுள் மைத்திரேயிப் பிரமாணத்தில் அமிர்தத் தன்மைக்குச் சாதனமான அத்துவித ஆன்மதரிசனத்தையும் அதற்குச் சாதனங் களான சிரவணாதிகளையும் பிரதிபாதிக்கின்றதுபற்றிச் சம்பூரணமான வுபதேச மாதலால் அதன்பொருளை முன்னாகச் சுருக்கியும் விளக்கியும் கூறுகின்றார்.

துன்பமா முடம்பி னின்றுமங் கதனாற்
றுவக்குறு வகைநின்ற சிவனுக்
கின்பமே வடிவ மாதலாற் சொரூபா
னந்தனென் றெழின்மறை யெல்லா
முன்புகூ றிற்றவ் வின்பமாம் பரிசை
மொழிந்திடக் கேண்மினென் றழகா
வன்பினா லலரோ னமரரி யாவர்களு
மறியவா தரத்தொடு முரைப்பான்.

இதன் பொருள்.

துன்பமாம் உடம்பினின்றும் —துக்கமுண்டாகும் சரீரத்திலிருந்தும்
அங்கு அதனுல் —அவ்விடத்திற்றுனே அந்தச் சரீரத்தினுல்
துவக்குரு வகைநின்ற —சம்பந்தமில்லாதபடி விளங்குகின்ற
சிவனுக்கு —சிவத்துக்கு
இன்பமே வடிவமாதலால் —பரமானந்தமே சொரூபமாதலால்
சொரூபானந்தனென்று —ஆனந்த சொரூபனென்று
எழின்மறையெல்லாம் —வலிமைபொருந்திய வேதமனைத்தும்
முன்பு கூறிற்று —முன்னமே சொல்லிற்று
அவ்வின்பமாம் பரிசை —அந்தப்பரமானந்தத் தன்மையை
மொழிந்திடக் கேண்மினென்று —சொல்லக் கேளுங்களென்று
அழகா அன்பினுல் அலரோன் —அழகாக அன்பினுடன் பிரம்மதேவர்
அமராரியாவர்களும் —எல்லாத்தேவர்களும்
அறிய ஆதரத்தொடு —அறியும்படி அன்பினுடன்
உரைப்பான் —சொல்லுகின்றுர். (1)

அவதாரிகை.

சுருதியில் பதியினுடைய காமத்தின்பொருட்டுப் பதியானவன் பிரியமுள்ளவனுகமாட்டானென்றது முதலான அனேகம் பரியாயங்களால் பதி, மனைவி, மைந்தன், பொருள் முதலியவை ஆன்மசேடமாகப் பிரியங்களாகுமென்று பிரதிபாதித்து எல்லாவற்றினின்றும் ஆன்மாவே மிகுந்த பிரியமுடையவனென்று சொல்லப்பட்டது. அதன்பொருளை ஈண்டு உபமானத்துடன் விளக்கிக் கூறுகின்றுர்.

ஈசனுக் குருவா னந்தமே யாகு
மேதெனி லியாதினுந் தன்மே
லாசைவைத் திடலா லாசைவைத் திடுமா
னந்தமே மிகவுமா னந்தம்
பாசம் வைத்திடுத றன்பொருட் டன்றிப்
பதிபொருட் டல்லவே மனைவி
நேசமெப் படியுந் தன்றெடா தலிற்று
னிரதிச யானந்தம் நேரே.

இதன் பொருள்.

ஈசனுக்கு உருவு —பிரத்தியக்குரூபமான சிவனுக்குரூபமானது
ஆனந்தமேயாகும் —ஆனந்தமேதான்
ஏதெனில் யாதினும் —எதனுலெனில் அனைத்தினும்

தன்மேல் ஆசைவைத்திடலால்—தன்னைக்குறித்து பிரேமையானதுவைப்பதினல்
ஆசைவைத்திடும் —பிரேமைக்கு ஆஸ்பதமுமாற்றிடும்
ஆனந்தமே மிகவுமானந்தம் —ஆனந்தமே மிகுந்த ஆனந்தமாகும்
மனைவி பாசம்வைத்திடுதல் —தாரமானவள் (பதியினிடத்தில்) ஆசைவைத்தல்
தன்பொருட்டன்றி —தன துகாமத்தின் பொருட்டல்லாமல்
பதிபொருட்டல்ல —புருடனிமித்தமல்ல
எப்படியும் நேசம் —எவ்வாற்ருனும் ஆசையானது
தன்னுடாதலின் —தன்னைக்குறித்துவைப்பதனல்
தான்நேரே நிரதிசயானந்தம் —தானே சாக்ஷாத்தாய் நித்தியானந்தமாவான்.

பதசாரம்—பிரேமைக்கு இருப்பிடமான மைந்தன், பொருள் முதலிய விஷயங்களாலுண்டான ஆனந்தம் அன்னிய சேடமாதலின் சாட்சாத்தாக ஆனந்தமாகாதெனப் 'பாசம் வைத்திடுதல் தன்பொருட் டன்றிப் பதிபொருட் டல்லவே' எனவும், யாதொன்று நிரதிசயப்பிரேமைக்கு இருப்பிடமான ஆனந்தமோ அதுவே பிரதானமாதலின் சேஷியான ஆன்மாவே சாக்ஷாத்தாக ஆனந்தமென்பார் 'தன்மே லாசைவைத் திடலா லாசைவைத் திடுமா னந்தமே மிகவுமானந்தம்' என்றும், ஈசன் சச்சிதானந்தனுதலின், 'ஈசனுக்குருவானந்தம்' என்றுங் கூறினர்.

கருத்து—மனைவி மக்களாம் பரப்பிரேமைக்கு இருப்பிடமான தன்மையானந்தரூபத்திற்கு 'இப்புகையுடைமை தீயுடைமை' என்றாற்போல் கமகமென்றுகொள்க.

வேதிய ரரசர் விண்ணவர் மிகவும்
விரும்பிய வுலகுகள் சகல
பூதமும் போக போக்கிய மாகும்
பொருள்களும் பொருள்களின் பொருட்டுக்
காதல்செய் கின்ற னல்லெனப் படியுங்
காதல்செய் வதுதனைக் காமித்
தாதலால் விருப்பந் தன்னுடா தலிற்ற
னிரதிச யானந்த மாகும்.

இதன் பொருள்.

வேதியர் அரசர் விண்ணவர் —அந்தணர்களையும் க்ஷத்திரியர்களையும் தேவர்களையும்
மிகவும் விரும்பிய உலகுகள் —மிகவும் விரும்பப்பட்ட உலகங்களையும்
சகலபூதமும் —சர்வபூதங்களையும்
போகபோக்கியமாகும் பொருள்களும்—போகபோக்கியமாகின்ற வஸ்துக்களையும்
பொருள்களின்பொருட்டு —அப்பொருள்களினிமித்தம்
காதல்செய்கின்றனல்லன் —ஆசைப்படுகின்றனில்லை

எப்படியும் காதல்செய்வது —எவ்விதத்திலும் ஆசைப்படுவது
தனைக்காமித்து —தன்னைக் குறித்துத்தான்
ஆதலால் விருப்பம் —ஆதலினால் பிரேமை
தன்னுடைாதலில் —தன்னிடத்திலிருப்பதனால்
தான் நிரதிசயானந்தமாகும் —தானே நித்தியானந்தமாவான்.

பதசாரம்—மிகுந்த அன்புடைய பரப்பிரேமைக்கு இருப்பிடமான மனைவி, மைந்தன் முதலியவர்கள் தனக்காகவே அன்புசெய்யப்படுகின்றார்களெனக்கூறிச் சுருதியிற் சொன்னவையெல்லாம் சங்கிரகிப்பார் 'சகலபூதமும்' என்றார். (3)

அவதாரிகை.

இவ்வண்ணம் அனைத்தும் ஆன்மசேடமாகக்கொண்டு பிரியமாகலின் ஆன்மாவே மிகுந்த அன்புடையவனும் சகல லட்சணமுடைய நிரதிசயானந்த சொரூபனுமிருத்தலால் பரிச்சின்ன சுகத்திற்குச் சாதனங்களான கருமங்களெல்லாவற்றையும்விட்டு அபரிச்சின்னமான சுகத்தில் இச்சையுடைய முமூக்ஷுக்களாலே அன்போடும் ஞானருபமான ஆன்மா சாட்சாத்கரிக்கத்தக்கவன் அதற்குமனன நிதித்தியாசனத்தோடுங்கூடிச் செய்யப்படும் வேதாந்த மகாவாக்கிய சிரவணந் தானே மிகவும் இன்றியமையாத சாதனமென்று ஈண்டு விளக்கிக் கூறுகின்றார்.

யார்க்குமின் பம்போல் விரும்பிடப் படலா
 லின்பமே யிறைவடி வின்பந்
தூக்கிமெய் யின்பம் பெறநினைப் பவராற்
 றுயர்மிகுந் தொழிலெலாம் விட்டுப்
பார்க்கவுங் கேட்க நினைக்கவுந் தியானம்
 பண்ணவும் படுவனிப் பரம
னாக்கியங் கவனை யறியவே யெல்லா
 மறிந்ததா மொழியவின் மையினால்.

இதன் பொருள்.

இன்பமேயார்க்கும் —சுகமே எவர்களுக்கும்
இன்பம்போல் விரும்பிடப்படலால்—சுகமாக விரும்பப்படுதலால்
இன்பம் இறைவடிவு —அவ்வானந்தமே பரசிவசொரூபமாகும்
தூக்கிமெய்யின்பம் —ஆராய்ந்து சத்தியசுகத்தை
பெற நினைப்பவரால் —அடையக் கருதுகின்றவர்களால்
துயர்மிகும் —துக்கமிகுந்த
தொழிலெலாம்விட்டு —கர்மங்களனைத்தையும் நீக்கி
இப்பரமன் பார்க்கவும் —இந்த ஆன்மாவானவன் தரிசிக்கவும்
கேட்க நினைக்கவும் —கேட்கவும் மனனிக்கவும்

தியானம் பண்ணவும்படுவான்—தியானம் பண்ணவுமாவான்
அவனை ஊக்கி —அவ்வான்மாவை ஊகித்து
அங்கு அறியவே —அவ்விடத்தில் தெரியவே
ஒழிவின்மையினுல் —அந்த ஆன்மாவைத்தவிர வேறொன்றின்மையால்
எல்லாமறிந்ததாம் —சமஸ்தத்தையும் தெரிந்ததாகும்.

**பதசாரம்**—சப்தத்தினுடைய சக்தியான தாற்பரிய நியாயாநு சந்தானத்தைச் சிரவணம் எனவும், நியாயமாகச் சுருதியிற் பிரதிபாதிக்கப்பட்ட பொருளுக்கு அசம்பாவனை முதலியவைகளை நீக்குந்தன்மை யிருத்தலால் அவ்வாகம யுத்தியினுடைய அனுசந்தானத்தை மனனமெனவும், இவ்வாறு சிரவணமனனங்களால் அடையப்படும் பொருளின் சாட்சாத்காரத்தின்பொருட்டு விசாதீயபிரத்தியயத்துக்கு வேறுன சஜாதீயப் பிரத்தியயப் பிரவாகமான சிந்தனத்தை நிதித்தியாசனமெனவும், அவ்வாறே சுருதியும் ஆன்மா பார்க்கத்தக்கவன் கேட்கத்தக்கவன் மனனிக்கத்தக்கவன் சிந்திக்கத்தக்கவன் தெளியத்தக்கவனெனக் கூறிற்றென்பார், **'பார்க்கவுங் கேட்க நினைக்கவுந் தியானம் பண்ணவும் படுவனிப் பரமன்'** எனவும், மிகுந்த அன்புசெய்யத்தக்கவனுன ஆன்மாவானவன் கேட்டல் முதலியவற்றால் சாட்சாத்கரிக்கப்பட்ட அளவில் அவனிடத்தில் ஆரோபமான எல்லாச்சகமும் அந்த ஆன்மசேடமாகப் பிரியமாகுமென்று முன்பே சொல்லப்பட்டதனுல் அனைத்தும் அதற்கு வேறில்லாததாக அறியப்பட்டதாகும். அவ்வாறே சுருதியும் ஆன்மதரிசனத்துக்குச் சருவாவாப்திலக்ஷணமான பிரயோசனத்தைக் கலக்கமறக்கூறிற்றென்பது தோன்ற, **'ஊக்கியங் கவனை யறியவே யெல்லா மறிந்ததா மொழியவின் மையினுல்'** எனவுங் கூறினுர். (4)

## அவதாரிகை.

இந்த ஆன்மதரிசனத்தினுலேயே துக்கங்கள் நீங்குமென்று கூறுகின்றுர்.

## வேறு.

மத்தமு றும்பிற விப்பகை மாளும்
முத்தியு முன்னிலை யாமுடி வில்லா
வெத்துய ருங்கெடு மின்பம தாகு
மத்துவி தத்தைய றிந்தவ ருக்கே.

## இதன் பொருள்.

அத்துவிதத்தை —துவிதமில்லாத ஞானத்தை
அறிந்தவருக்கே —தெரிந்தவர்களுக்கே
மத்தமுறும் பிறவிப்பகை மாளும்—மதம்பொருந்திய சமுசாரமான பகைஒழியும்
முத்தியுமுன்னிலையாம் —மோட்சமும் தன்முன்பு நிலையாகும்
முடிவில்லா எத்துயரும்கெடும்—அந்தமில்லாத எந்தத் துக்கங்களும் அழியும்
இன்பமதாகும் — சிவானந்தம் உண்டாகும்.

**பதசாரம்**—துக்கசமுகங்கள் நீங்கிடினும் சுவர்க்க முதலிய சுகங்களுக்கு ஏதுவான புண்ணியமிருத்தலால் அதன் நிமித்தமாக வித்துவானுக்குச் சமுசாரம் வருமோவெனில் அத்துவிதீயப் பிரமான்ம ஐக்கிய சாட்சாத்காரம் வந்தபின் புண்ணியபாவம் எல்லாவற்றிற்கும் இருப்பிடமாய்க் கருத்திருத்துவபோக்த் திருத்துவ முதலியவையுடைய அந்தக்கரணம் வேருகப் பிரிக்கப்பட்டமையின் அதனுலுண்டாகும் சுகதுக்கபோக இலக்கணத்தையுடைய சமுசாரம் வித்துவானுக்கில்லையென்பார், **'மத்தமுறும் பிறவிப்பகைமாளும்'** எனவும், பரமாத்துவித ரூபனுயுள்ள புருடனுக்குத் தனக்கு வேருகத் துக்க ஏதுவான பொருளில்லாமையின் பரம்பரையாய்வந்த பவங்களிலே சம்பாதிக்கப்பட்ட துக்கசமுகங்கள் நீங்குமென்பார், **'எத்துயருங்கெடும்'** எனவும், இத்தன்மையான மோட்சத்திற்கும் சுகதுக்கங்கள்போலச் சுவர்க்காதி சுகங்களும் நீங்குதலால் புருஷார்த்தத்தன்மை இல்லாமற் போய் விடுமேயெனில் ஆன்மாவிற்குச் சொருபபூதமான நித்திய நிரதிசய அத்துவித ஆனந்தம் வேறொரு காரணத்தை அபேக்ஷியாமல் சொருபப் பிரகாசத்தினலே உண்மையாக விளங்குகின்றமையால் புருஷார்த்தமே யென்பார், **'இன்பம தாத மத்துவி தத்தைய றிந்தவ நுக்கே'** எனவும் கூறினர். (5)

**அவதாரிகை.**

இவ்வாறு முத்திசாதனமான அத்துவித பரமானந்த ஆன்மதரிசனத்தைக் கூறிச் சுருதியிற்கண்ட பேததரிசன நிந்தையையும் விளக்கிக் கூறுகின்றார்.

பின்னமு றப்பிர மத்தைய றிந்தான்
தன்னைய மெய்ப்பொரு டள்ளும தன்றி
மன்னுமு டம்புவ சத்தொரு வாதிங்
கின்னவு லோகமெ ணமலி ழிக்கும்.

**இதன் பொருள்.**

| | |
|---|---|
| பிரமத்தைப் பின்னமுற | —சுத்தப்பிரமத்தைத் தனக்குப் பின்னமாக |
| அறிந்தான் றன்னே | —அறிந்தவனே |
| அ மெய்ப்பொருள் | —அந்தப் பிரம்மம் |
| தள்ளுமதன்றி | —தள்ளிவிடுமல்லாமல் |
| மன்னும் இன்னவுலோகம் | —க்ஷேத்திரமும் இந்தவுலகமும் |
| உடம்புவசத்தொருவாது | —உடம்பின் வசத்தினின்றும் நீங்காமலிருக்கும்படி |
| இங்கு எணுமல் இழிக்கும் | —இவ்விடத்தில் மதியாமல் தள்ளிவிடும் |

**கருத்து**—அந்தப்பிரம்மம் அது நான் என்னும் தத்வமசிக்கு முரண்பட்ட பேதஞானிக்கு அகப்படாததனல் சுகதுக்கங்களுக்கு ஏதுவாகுமென்றறிக.(6)

**அவதாரிகை.**

பேதபுத்திபெற்ற ஆன்மா அடைந்துள்ள பசுவென்னும் பெயரின் தன்மையும் அப்பசுவடையும் பேதத்தன்மையும் இன்னின்னவென விளக்கிக் கூறுகிறார்.

### வேறு.

அல்லா தில்லாப் பரந்தன்னி லயலா வழியும் படியயர்ந்து
பொல்லா வாகத் தறிவுபெறும் பசுவா னவனைப் புத்தேளி
ரெல்லா மெல்லா வேதமும்பூ தங்க ளியாவு மிறத்தள்ளி
நில்லா நிற்கும் பேதத்தே நிற்பா னசிக்கை தப்பாதே.

### இதன் பொருள்.

| | |
|---|---|
| அல்லாதில்லாப் பரந்தன்னில் | —பின்னவஸ்துவாயிராத பிரம்மத்தில் |
| அயலாயறியும்படியயர்ந்து | —பின்னமாகத் தெரியும்படி தன்னைமறந்து |
| பொல்லா ஆகத்தறிவுபெறும் | —கொடிதான தேகஞானமுடைய |
| பசுவானவனை | —பசுவை |
| புத்தேளிரெல்லாம் | —தேவர்களனைவர்களும் |
| எல்லா வேதமும் பூதங்களியாவும் | —சமஸ்த வேதங்களும் பஞ்சபூதங்களும் |
| இறத்தள்ளி நில்லாநிற்கும் | —அழியும்படி தள்ளிநிற்கும் |
| பேதத்தே நிற்பான் | —துவிதத்தில் நிற்கின்றவனுக்கு |
| நசிக்கை தப்பாது | —மரணம் நீங்காது. |

**பதசாரம்**—பிரம்ம க்ஷத்திராதி ஜகத்தைத் தனக்கு வேறாகப்பார்க்கின்றவன் பொய்யாகக் கண்டானாகலின் அவனைப் பசுவென்பார், '**பொல்லாவாகத் தறிவுபெறும் பசுவானவனை**' எனவும், பேதம் அனுபவசித்தமாதலின் எப்படி நீக்கக்கூடுமென்னில் தோற்றுகின்ற பேதம் கிளிஞ்சிலில் வெள்ளிபோலப் பிராந்தியாதலின் எதார்த்தமாய்த் தனக்குவேறாகப் பேதஜகத்தைப் பார்க்கின்றவன் அதனாலுண்டாகிய புண்ணியபாவங்களால் வசீகரிக்கப்பட்டவனாய் ஜனன மரணமான சமுசாரத்தை யடைகின்றானெனவும் அங்ஙனமே சுருதியும் சமுசாரத்தினின்றுந் திரும்பவும் சமுசாரத்தையடைகின்றவன் அஞ்ஞானத்தில்மூழ்கி இவ்விடத்தில் நாமநாமரூபங்களையே சதா பார்க்கின்றானென்று கூறிற்றென்பது தோன்ற, '**பேதத்தே நிற்பா னசிக்கை தப்பாதே**' எனவுங் கூறினார். (7)

### அவதாரிகை.

தோற்றுகின்ற பிரமக்ஷத்திர முதலியவைகளை எப்படி அறிகின்றதென்று சங்கித்து அவையெல்லாவற்றையும் ஆன்மசொரூபமாகவே அறியவேண்டுமென்று இது பிராமணசாதி இது க்ஷத்திரமென்றது முதலிய பொருளைக் கூறுகின்றார்.

மறையோ ரரசர் முதலான வன்றாச் சிரம மற்றுள்ள
பிறிவாய் நிகழு கின்றவெலாம் பிரம மொன்று மேபிறிதா
வறியா நிற்கு மறிவென்று மல்லற் பிறப்பை யடைவிக்கு
மிறைதா னென நிலையெய்து மிரண்டுங் காணு திருந்தக்கால்.

### இதன் பொருள்.

மறையோர் அரசர் முதலான —வேதியர்கள் க்ஷத்திரியர்கள் இவர்கள் முதலான
வன்னாச்சிரமம் மற்றுள்ள —வருணாச்சிரமங்களும் மற்றுமிருக்கின்ற
பிறிவாய் நிகழுகின்றவெலாம் —வேறாக நிகழுகின்றவனைத்தும்
பிரமமொன்றுமே —ஏகமான பிரமமேதான்
பிறிதாவறியாநிற்கும் அறிவு —வேறாக அறிகின்ற புத்தியானது
என்றும் அல்லற்பிறப்பை —எக்காலத்திலும் துக்கமான சமுசாரத்தை
அடைவிக்கும் —அடையச்செய்யும்
இரண்டுங் காணாதிருந்தக்கால் —துவிதத்தைப் பாராமலிருந்தால்
இறைதானான நிலையெய்தும் —பரமசிவம் தானென்றசுபாவத்தை அடைவான்

**பதசாரம்**—மாயாகாரியமான பிரம்மக்ஷத்திர முதலெல்லாம் ஆன்மசொரூபத்தில் அத்தியாசிக்கப்பட்டுக் கிளிஞ்சிலில் வெள்ளிபோல் அதிஷ்டானத்தைக் காட்டிலும் வேறாக நிரூபிக்கமுடியாததனால் எல்லாம் ஆன்மாவேயென்பார், **'பிறிவாய் நிகழுகின்றவெலாம் பிரமமொன்றுமே'** எனவும், பிரம்மக்ஷத்திர முதலிய சகத்திற்கும் பிரத்தியகான்மாவிற்கும் பேதபுத்திசெய்வது பிறப்பு இறப்பு துன்பம் முதலிய சமுசாரத்திற்கேதுவாமென்பார், **'பிறிதாவறியா நிற்கு மறிவென்று மல்லற்பிறப்பை யடைவிக்கும்'** எனவுங் கூறினார். (8)

### அவதாரிகை.

துக்கங்களெல்லாம் நீங்குதற்கும் நிரதிசயானந்தத்தை அடைவிக்கும் இலக்கணமுடைய முத்திக்கும் அத்துவிதமான ஆன்மவித்தையே சாதனமென்பதனையும் அவ்வான்ம வித்தையடைந்த ஞானியின் பெருமையையுங் கூறுகின்றார்.

### வேறு.

அத்துவி தந்தா னும விகற்பம தடைந்த போதே
புத்தியி லிளைப்பும் போகும் போகுமிப் பிறப்பு நேரா
வெத்திகழ் வாலும் பேத மின்மையா லிறையே யென்னுந்
தத்துவ வித்தே யென்றன் றலையினால் வணங்கத் தக்கான்.

### இதன் பொருள்.

அத்துவிதந்தானும் —அத்துவிதமாகிய
அவிகற்பம தடைந்தபோதே —நிருவிகற்பத்தை அடைந்தபொழுதே
புத்தியில் இளைப்பும்போகும் —புத்தியிலுள்ள துக்கமும்நீங்கும்
இப்பிறப்பும் போகும் —இந்தச்சென்மமும் ஒழியும்
எத்திகழ்வாலும் —எந்த விளக்கத்தினாலும்
பேதமின்மையால் —பேதமில்லாததனால்

| | |
|---|---|
| இறையே யென்னும் | —(அனைத்தும்)பிரம்மமே என்கின்ற |
| தத்துவவித்தே நேரா | —தத்துவஞானியே நேராக |
| என்றன்றலையினல் | —எனது நான்குசிரங்களாலும் |
| வணங்கத்தக்கான் | —வந்திக்கத்தகுந்தவன். |

பதசாரம்—சகலவுபாதிகளையும் நீங்கினதாயும் விகாரங்களெல்லாவற்றிற்கும் வேருகியும் சத்தியஞானனந்த ஏகரசமாயும் விளங்கும் பிரம்மசொரூபத்தில் சிரவண முதலிய சாதனங்களாலுண்டான பிரம்மத்தை விஷயீகரிக்கின்ற வித்தையினல் அதனையாவரித்த அவித்தை நீங்குமளவில் அன்னியமான விஷயங்களில்லாமையால் விக்ஷேபவாசனையில்லாத சித்தவிருத்திக்கு யாதொரு வுபாதியுண்டோ அஃதே மோட்சமென்பார், 'அத்துவிதந்தானு மவிகற்பம தடைந்தபோதே புத்தியிலிளைப்பும் போதம் போதுமிப் பிறப்பும்' என்ருர். (9)

அவதாரிகை.

இந்த அத்துவிதீயப் பிரமான்ம விஞ்ஞானம் எங்குஞ் சுலபமாகக்காணுதற்கு மகா பூதத்தின் சுவாசமாகிய வேதங்களே காரணமெனக் கூறுகின்ருர்.

வேதமா கமம் புராண மிருதிகள் வேரு மார்க்க
ரோதுமா கமங்க டர்க்க மொன்ருெடொன் ருெவ்வா தாகு
மீதெலா மொக்கப் பண்ண லாவதன் றிதய துக்க
மாதலா லனைத்தும் விட்டிங் கனைத்துமாஞ் சிவனைப் பார்ப்பான்.

இதன் பொருள்.

| | |
|---|---|
| வேதம் ஆகமம் | —வேதங்களும் ஆகமங்களும் |
| புராணம் மிருதிகள் | —புராணங்களும் ஸ்மிருதிகளும் |
| வேருமார்க்கர் | —புத்தர் அருகர் முதலிய மதவாதிகள் |
| ஓதுமாகமங்கள் தர்க்கம் | —சொல்லுகின்ற ஆகமங்களும் தருக்கங்களும் |
| ஒன்ருெடொன்ருெவ்வாதாகும் | —ஒன்றுக்கொன்று பொருந்தாதாகும் |
| ஈதெலாம் இதயதுக்கமாதலால் | —இவைகளெல்லாம் மனத்தில் துக்கத்தையுண்டுபண்ணுமாதலால் |
| ஒக்கப்பண்ணலாவதன்று | —ஒன்றுபடுத்தக் கூடுவதல்ல |
| அனைத்தும்விட்டு | —எல்லாவற்றையுந்தள்ளி |
| இங்கு அனைத்துமாம் | —இவ்விடத்தில் யாவுமாய்விளங்குகின்ற |
| சிவனைப்பார்ப்பான் | —சிவசொரூபத்தைப் பார்க்கக்கடவன். |

பதசாரம்—சீவித்திருக்கும் வரைக்கும் அக்கினிஹோத்திரஞ் செய்யத்தக்கதெனவும் கருமமுதலியவற்ருல் பிரயோசனமில்லை துறவொன்ருலேயே பிரயோசனமெனவும் இரண்டுபறவைகள்கூடிச் சகாக்களாகவிருக்கின்றனவெனவும் ஒரு தேவனே சகலபூதங்களிலும் சூக்குமமாயிருக்கின்ருனெனவும் ஒன்றுக்கொன்று

விரோதார்த்தங்களாகச் சுருதிஸ்மிருதி புராணவாகமங்களிருத்தலால் 'ஒன்றே டோன்றேவ்வாதாதும்' எனவும், அவைகளுக்கு அவிரோதஞ் செய்யப்புகில் ஆயுளெல்லா மதன்பொருட்டே ஒழியாநிற்கும், அவ்வாயுள் சித்தித்திடினும் அவிரோதஞ்சித்திக்காது, அந்தவந்த நூல்களின் பரிசிலனம் மனோவிக்ஷேபத்துக்குக் காரணமாதலின் அவ்வனைத்தையும்நீக்கி வேதாந்த மகாவாக்கிய விசாரத்தாலுண்டாகிய ஆன்மஞானமுடையவனைப் பவித்து எந்த எந்த வஸ்துக்கள் எவ்வெந்தரூபமாகப் பிரகாசிக்கின்றதோ அந்தந்த ரூபமாக அவைகளின் அதிட்டானமான பரமசிவத்தையே அனைத்திலும் பார்க்கத்தக்கதென்பார், இதயதுக்கமாதலாலனைத்தும்விட்டிங்கனைத்துமாஞ் சிவனைப்பார்ப்பான்' எனவும் கூறினர்.

கருத்து—இதனாலிந்த மகாபூதத்தின் சுவாசமே இருக்கு, எசுர், சாமம், அதர்வணமென்னும் வேதங்களென்ற சுருதியின் தாற்பரியங் கூறப்பட்டது. (10)

## வேறு.

கிருமிகீ டங்கண் மதியுடைத் ததனிற் கிளர்ந்திடும் பசுமதி யவற்றி
னரர்மதி யுடைய ரவரினுஞ் சிலவர் ஞானமிக் கிருப்ப ரன்னவரிற்
பெரியர் கந்தருவர் மதியினா லவரிற் பெரியரே பிதிர்க்கள்வெவ்வேறு
ஒருவருக் கொருவர் தாரதம் மியத்தா லுணர்வினா லுயர்ந்தவ ருளரால்.

## இதன் பொருள்.

| | |
|---|---|
| கிருமிகீடங்கள் மதியுடைத்து | —புழுவண்டு முதலியன மதியுடையனவாகும் |
| அதனில் பசுமதி | —அவற்றைக்காட்டிலும் பசுவினதுபுத்தி |
| கிளர்ந்திடும் | —சிரேட்டமாக விளங்கும் |
| அவற்றின் | —அவைகளைக்காட்டிலும் |
| நரர்மதியுடையார் | —மனிதர் அதிகபுத்தியையுடையவர்கள் |
| அவரினும் சிலர்கள் | —அந்த நரரினும் சிலர்கள் |
| ஞானமிக்கிருப்பர் | —விசேஷ அறிவுடையவர்களாயிருப்பார்கள் |
| அன்னவரில் | —அவர்களைக்காட்டிலும் |
| கந்தருவர் பெரியர் | —கந்தருவர்கள் புத்தியையுடையவர்கள் |
| அவரில் பிதிர்க்கள் | —அவர்களைக்காட்டிலும் பிதிர்க்கள் |
| மதியினால் பெரியர் | —பிரஞ்ஞையினால் ஆதிக்கமாவார்கள் |
| ஒருவருக்கொருவர் | —ஒருத்தருக்கொருத்தர் |
| தாரதம்மியத்தால் | —தாரதம்மியத்தினாலும் |
| உணர்வினால் வெவ்வேறு | —அறிவினாலும் வேறுவேறாக |
| உயர்ந்தவர் உளர் | —மேன்மையையுடையவர்களாக இருக்கின்றார்கள். (11) |

உள்ளபே ரெல்லா ரிலுமுணர் வுடையீ
 ரும்பர்கா ணீங்களுங் களினான்
றெள்ளியே னாவேன் மதியினா லென்னிற்
 சேனார்த்தனன் சேதன னாகும்
வெள்ளமேற் றுயிலு மாலினு மரன்றான்
 மேதையாம் விளம்பிய வெவர்க்கு
முள்ளமே மருவி யுணர்வளிக் கின்ற
 சிவனியா ரினுமுணர் வுடையான்.

இதன் பொருள்.

| | |
|---|---|
| உள்ளபேரெல்லாரினும் | —கீழ்ச்சொல்லியிருக்கின்ற எல்லார்களினும் |
| உம்பர்காள் | —தேவர்களே |
| நீங்கள் உணர்வுடையீர் | —நீங்கள் மிகவும் பிரஞ்ஞைவுடையவர்கள் |
| உங்களில் மதியினால் | —உங்களைக்காட்டிலும் பிரஞ்ஞையினால் |
| நான் தெள்ளியேனாவேன் | —நான் தெளிந்தவனாவேன் |
| என்னில் | —என்னைக்காட்டிலும் |
| சேனார்த்தனன் சேதனனாகும் | —திருமால் அறிவுடையவனாவான் |
| வெள்ளமேல் துயிலும் | —பாற்கடலில் நித்திரைசெய்கின்ற |
| மாலினும் | —விஷ்ணுவைக்காட்டிலும் |
| அரன்றான் | —திரிமூர்த்திகளிலுள்ள உருத்திரர் |
| மேதையாம் | —அதிகஞான முடையவராவார் |
| விளம்பியவெவர்க்கும் | —இப்போதுசொல்லிய அனைவர்களுக்கும் |
| உள்ளமேமருவி | —இருதய பங்கயத்திலிருந்து |
| உணர்வளிக்கின்ற | —ஞானத்தைக் கொடுத்தருள்கின்ற |
| சிவன் யாரினும் | —உமாபதியாகிய மகாதேவரே எல்லாரினும் |
| உணர்வுடையான் | —மேலான பிரஞ்ஞையுடையவர். (12) |

ஆதலா லறியு மறிவெலாங் கைவிட் டறிவினுக் கறிவதாய் நின்ற
பேதமில் பிரம மொன்றுமே யறிவான் பேறுபே ரின்பமாம் பிறத்தல்
சாதலற் றிருக்கு மிதனையோர் வருத்த மின்றியே சார்தலு மாகு
மாதரித் தறியா ரற்பமே விரும்பி யனந்தநுக் கத்திலே யமைவார்.

இதன் பொருள்.

| | |
|---|---|
| ஆதலால் | —(மகாதேவரே சர்வஞ்ஞராய்)இருத்தலால் |
| அறியுமறிவெலாங் கைவிட்டு | —அறியத்தக்க வித்தையனைத்தையும்விடுத்து |
| அறிவினுக்கறிவதாய் நின்ற | —ஞானத்துக்கும் ஞானமாகவிளங்குகின்ற |

பேதமில் பிரம்மமொன்றுமே —அத்துவிதமான பிரம்மமொன்றினையே
அறிவான் —அறியக்கடவன்
பேறு பேரின்பமாம் —அதனால்வரும் பலமும் பேரானந்தமுத்தியாகும்
பிறத்தல் சாதலற்றிருக்குமிதனை—செனனமரணமில்லாமலிருக்கின்ற இந்தச் சிவத்தை
ஓர்வருத்தமின்றியே —ஒரு பிரயாசமுமில்லாமலே
சார்தலுமாகும் —இவ்விடத்திற்றானே அடையலாம்
ஆதரித்தறியார்—(இந்தப் பிரம்மத்தை) அன்புவைத்து உணராதவர்களாகி
அற்பமேவிரும்பி —அற்பசுகத்தையேகருதி
அனந்ததுக்கத்திலே —முடிவில்லாத துன்பத்திற்றானே
அமைவார் —அழுந்துகின்றார்கள்.

**பதசாரம்**—கிருமிகீடமுதல் ருத்திரன்வரைக்கும் மேன்மேல் பிரஞ்ஞை அதிசயமாயிருத்தலால் சருவஞ்ஞத் தன்மைகூடாது. அனவச் சின்னஞான ரூபனான பரமசிவனொருவனே சாட்சாத் சருவஞ்ஞனாதலால் முற்கூறிய சுருதி ஸ்மிருதி முதலான அனன்ம வித்தையைவிட்டு அனைத்தையும் பரமசிவ சொரூபமாகவே அனுசந்தானிக்கத்தக்கதென்பார், 'பேதமில் பிரம்மமொன்று மே யறிவான்' எனவும், பிரமான்ம ஞானம் மனோவியாபாரமாத்திரத்தால் சாதிக்கப்படுதலின், 'இதனையோர் வருத்தமின்றியே சார்தலுமாகும்' எனவுங்கூறினர்.

அவதாரிகை.

இங்ஙனம் கூறியபொருளே சுருதிமுதலிய சாத்திரங்களுக்கும் பரமேசனுக்கும் நாராயணர் முதலிய தேவர்களுக்கும் சம்மதமென்று கூறுகின்றார்.

வேதநூன் மிருதி புராணமத் துவித
மெய்ம்மையே விளம்பமெய்த் தருக்கஞ்
சாதியா நிற்கத் தத்துவ ஞானத்
தவருமிப் பொருளையே சார
வாதியாஞ் சிவனா ராயணா னிங்
கறைந்தது மபேதமா விருக்க
வாதியா மொருவற் கிதையனா தரித்தன்
மாயையி னுடையவல் லபமே.

இதன் பொருள்.

வேதநூல்மிருதி புராணம் —சுருதியும் ஸ்மிருதியும் புராணங்களும்
அத்துவிதம் மெய்ம்மையேவிளம்ப—அத்துவிதத்தின் உண்மையையே சொல்லவும்
மெய்த்தருக்கம் —சுருதியனுக்கிரகமுடைய மெய்ம்மையான தர்க்கங்களும்
சாதியாநிற்க —(பரமாத்துவித வேதனத்தையே) சாதனஞ்செய்யவும்

| | |
|---|---|
| தத்துவஞானந்தவரும் | —தத்துவஞானிகளும் |
| இப்பொருளையே சார | —இந்த அத்துவிதப்பொருளையே பொருந்தவும் |
| ஆதியாம் சிவன் | —ஆதியாயிருக்கின்ற சிவபிரானும் |
| நாராயணன் நான் | —விஷ்ணுவும் (பிரம்மாவாகிய)நானும் |
| இங்கறைந்ததும் | —இவ்விடத்திற் சொல்லியதும் |
| அபேதமாயிருக்க | —அத்துவிதமாயிருக்கவும் |
| வாதியாமொருவற்கு | —மதவாதியாகிய ஒருவனுக்கு |
| இதையனுதரித்தல் | —இந்த அத்துவிதப்பொருளை அனுதரவுசெய்கின்ற புத்திபொருந்துதல் |
| மாயையினுடைய வல்லபமே | —மாயையினுடைய வன்மையேயாகும். |

**கருத்து**—பரமாத்துவிதம் சர்வசம்மதமாயினும் அவித்தையின் வாசனையால் மறைபட்ட கண்ணினராய்ப் பெத்தர்கள் விரும்பமாட்டார்களென்றறிக. (14)

## இதுவுமது—வேறு.

கனகமத பேதம் வேறு கடகமகு டாதி போல
வனியவடி வால னேக மறிவுநிலை யால பேத
மெனவுமுரை யாடு வாரு மிதயமிலர் ஞான வீன
ரேனையநிகழ் வானு மீச னென நினைகு வான வீசன்.

## இதன் பொருள்.

| | |
|---|---|
| கனகமது அபேதம் | —பொன்னானது பேதமில்லாததாயும் |
| வேறு கடகம் | —பின்னமாகிய கங்கணம் |
| மகுடாதிபோல | —கிரீட முதலானவைகளாக ஆவதுபோல |
| அனியவடிவாலனேகம் | —பின்னரூபத்தால் அனேகமென்றும் |
| அறிவுநிலையால் அபேதமெனவும் | —ஞானநிலையால் அத்துவிதமென்றும் |
| உரையாடுவாரும் | —சொல்லுகின்றவர்களும் |
| இதயமிலர் ஞானவீனர் | —புத்தியில்லாதவரும் அறிவில்லாதவரும் ஆவார்கள் |
| ஏனைய நிகழ்வானும் | —மற்றெந்த விளக்கத்தினாலும் |
| ஈசனென நினைகுவான் | —(அனைத்தும்)ஈசனேதானென்று கருதுகின்றவன் |
| அவீசன் | —அந்த ஈசனேயாவான். |

**பதசாரம்**—காரணப்பிரமாகாரமான சாமானியரூபத்தால் அனைத்தும் அத்துவிதந்தான். ஆகாய முதலிய பூதபவுதிக விசேஷாகாரத்தால் துவித சகத்தோற்றம் சத்தியந்தானெனில் ஒன்றுக்கொன்று விரோதமான துவிதாத்துவிதங்கள் ஓரிடத்திலிருக்கின்றதென்று சொல்லுதல் பொருந்தாது, அங்ஙனம் ஒப்பிய பேதாபேதவாதிகளை, முன்னிட்டே அவர்களை 'ஞானவீனர்' என்றார். (15)

அவதாரிகை.

அபேதமே பரமார்த்தமாதலின் துவிதமதத்தைக் கண்டித்துக் கூறுகின்றார்.

பலவடிவும் வேறு பாடு பகரும்வெறு மூட ரான
புலையரொடு கீட மோடு புழுவினொடு வாசி யேது
சொலவிலுல காஆும் வேறு துணியிலுணர் வேயெ லாமெ
னிலகுமதி பேற தாகு மிறைவனடி பேண லாலே.

இதன் பொருள்.

பலவடிவும் —பல வஸ்துக்களும்
வேறுபாடு பகரும் —பின்னமென்றே சொல்லுகின்ற
வெறுமூடர் —வீண்மூடர்கள்
ஆன்புலையரொடு —உற்பத்தியாகிய நீசர்களோடும்
கீடமொடு —கிருமிகளோடும்
புழுவினொடு வாசியேது —புழுவினோடும் சமானமாவார்களென்று சொல்லுவதற்குக்கூட நியாயமென்னிருக்கின்றது
சொலவில் உலகு —விவகாரத்தில் உலகங்கள்
வேறும் ஆலும் துணிவில் எல்லாம்—பின்னமாகச்சேரும் நிச்சயத்தில் அனைத்தும்
உணர்வே என் இலகுமதி —ஞானமே என்கின்ற விளங்கும் புத்தியானது
இறைவனடி பேணலாலே —சிவபிரானது திருவடியைத் தியானித்தலாலே
பேறதாகும் —பிரயோசனமாகும்.

**கருத்து**—பேதா பேதப்பக்ஷம் பொருந்தாமையால் சருவப்பிரகாரத்தாலும் பேதமே பரமார்த்தமென்ற வைசேஷியர்கள் சேதனர்களல்ல கடமுதலியவை போல் அசேதனர்களேதான் ஆவார்கள் என்பதாம். ஈண்டு முன்னமே பேத நிருவசனம் கூடாமை விளக்கமாக நிருபிக்கப் பட்டதனுலென்க. (16)

உலகெனவி ளங்கல் ஞான வுருவமத டைந்து நாளு
மிலகுபரை யின்சொ ரூப மெனும்விமல புந்தி தானும்
அலகிலரு ளிந்து மோலி யடியிணையி லன்பு நீட
நிலைகொளவு றுந்தி யான நிகழ்வினிலி லங்கு மோர்மின்.

இதன் பொருள்.

உலகெனவிளங்கல் — சகங்களாக விளங்குதலும்
ஞானவுருவமதடைந்து —ஞானரூபத்தைப்பொருந்தி
நாளும் இலகு —எப்பொழுதும் பிரகாசிக்கின்ற
பரையின் சொரூபமெனும்—பராசத்தியினது சொரூபமேயென்று கருதுகின்ற
விமலபுந்திதானும் —நின்மலமாகிய புத்தியும்

| | |
|---|---|
| அலகிலருளிந்து மோலி | —அளவில்லாத திருவருளையுடைய சந்திரசேகரரது |
| அடியிணையில் அன்புநீட | —உபயபாத தாமரைகளில் பிரேமைமிக |
| நிலைகொளவுறுந்தியான | —ஸ்திரமாகப்பொருந்துகின்ற தியானத்தின் |
| நிகழ்வினில் இலங்கும் | —விளக்கத்தினால் (ஒருவனுக்குப்)பிரகாசிக்கும் |
| ஓர்மின் | —நீங்கள் அறியுங்கள் |

**கருத்து**—எவனுக்குச் சிதாஸ்மரணமுண்டோ அவனுக்கே ஸ்திரமாகியதியானமான இவ்வித ஞானமுண்டாகுமன்றி வேறொருவனுக்கு இல்லையென்க. (17)

மறைசகவி ளக்க நாடி மருவுபிரி யத்தி னேது
முறையினையு ரைத்த தாமெய் மொழியலவெ னக்கொள் ஞானி
இறையவனி யற்ற யாது மிலைதொழில வற்கு மோக
முறைதொழிலி யற்று வோன லுணர்வில்பசு வொத்த வீனன்.

## இதன் பொருள்.

| | |
|---|---|
| சகவிளக்கநாடி மறை | —உலகவிளக்கத்தைக்கருதி சுருதியானது |
| மருவு பிரியத்தினேது | —பொருந்துகின்ற பிரியஹேதுவின் |
| முறையினை உரைத்ததாம் | —முறைமையைச் சொல்லியதாகும் |
| மெய்மொழியலவெனக்கொள் | —உண்மையாகச்சொல்லியதன்றென்றுகருதுகின்ற |
| ஞானி இறையவன் | —பரமாத்துவித ஞானியே பரமசிவனாவான் |
| அவற்கு | —அந்தஞானிக்கு |
| இயற்றதொழில் யாதுமில்லை | —செய்யத்தக்க கருமங்கள் ஒன்றுமில்லை |
| மோகமுறைதொழில் | —மயக்கம்பொருந்தியகருமங்களை |
| இயற்றுவோன் | —செய்பவன் |
| நல்உணர்வில் | —நல்ல அறிவில்லாத |
| பசுவொத்த ஈனன் | —பசுப்போன்ற இழிந்தவனாவான். |

**கருத்து**—வியாவகாரிக சகவிளக்கத்தை அபேக்ஷித்து அக்கினிஹோத்திரம் செய்யத்தகாதென்றது முதலிய சுருதியும், சொர்க்கமுதலிய பலசாதனமான அக்கினிஹோத்திரத்தை உபதேசித்தது. இதனால் சகம் சத்தியமாகாதென்க. ()

செலவொடுதி ரும்பல் மேவு செனனமர ணங்கள் ஞான
மலவிமல மென்ப யாவு மருவறிஞன் முன்பு சேர்வ
திலைவிரவு கின்ற யாவு மியைபாசி வன்சொ ரூப
நிலையதென நன்ற தாக நிகழ்வுறவி ளங்க லாகும்.

## இதன் பொருள்.

| | |
|---|---|
| செலவொடுதிரும்பல் | —கமாகமங்கள் (போக்குவரத்து) |
| மேவு செனனமரணங்கள் | —அடைகின்ற சன்னமரணங்கள் |

| | |
|---|---|
| ஞானம் மலம் விமலம் | —அறிவு மலம் நின்மலம் |
| என்பயாவும் | —என்பவையனைத்தும் |
| மருவு அறிஞன் முன்பு | —பொருந்துகின்ற சிவயோகிமுன்பு |
| சேர்வதிலை | —(ஒருநாளும்)செல்லுவதில்லை |
| விரவுகின்ற யாவும் | —பரவுகின்ற அனைத்தும் |
| இயை பரமசிவன் | —(கருணை) பொருந்திய பரமசிவனது |
| சொரூப நிலையதென | —சொரூப நிலையாகவே |
| நன்றதாக | —(அவனுக்கு)நன்மையாக |
| நிகழ்வுற விளங்கலாகும் | —பிரகாசமாக விளங்கும் |

**கருத்து**—சனனமரண கமாகமங்கள் முதலிய அனைத்தும் வியாவகாரிக ஜகத்தோற்றத்தின் பெலத்தால் பிரகாசிக்கின்றதேயன்றி பரமார்த்தமாக இல்லை.

அவதாரிகை.

சருவப்பிரகாரத்தாலும் அத்துவிதமே உண்மையெனக் கூறுகின்றார்.

வேறு.

தேசிக னளித்த வழியினு லையந் தீர்ந்துசிற் சடத்திகழ் வெல்லா
மீசனைப் பார்ப்பா னிப்படிப் பார்க்கு மிதனையு மிறையெனப் பார்ப்பா
னேசமோ டிங்ஙன் பார்ப்பவன் பார்வை தன்னையு நீக்கியே யிந்தத்
தேசிகன் றிகழுஞ் சின்மய மாகச் சின்மய மென்கையு மிலையே.

இதன் பொருள்.

| | |
|---|---|
| தேசிகன் அளித்தவழியினல் | —ஆசிரியரானவர் அனுக்கிரகித்த மார்க்கத்தினல் |
| ஐயந்தீர்ந்து | —சந்தேகந்தீர்ந்து |
| சிற்சடத் திகழ்வெல்லாம் | —சிற்சட விளக்கமனைத்தும் |
| ஈசனைப்பார்ப்பான் | —பரமசிவனுகவே பார்க்கக்கடவன் |
| இப்படிப்பார்க்கும் இதனையும் | —இவ்வண்ணம்பார்க்கப்பட்ட பார்வையையும் |
| இறையெனப் பார்ப்பான் | —சிவமாகவே பார்க்கத்தக்கவன் |
| நேசமோடு | —அன்பினேடு |
| இங்ஙன் பார்ப்பவன் | —இவ்வாறு-சிவனுகப்பார்க்கின்றவனுகிய |
| இந்தத்தேசிகன் | —இந்தச் சற்குருவானவன் |
| பார்வை தன்னையும் நீக்கி | —அந்தப் பார்வையையும் விடுத்து |
| சின்மயமாகத்திகழும் | —சின்மயமாக விளங்குவான் |
| சின்மயமென்கையுமிலையே | —சின்மயமாகச் சேஷிப்பானென்கையும் அவனுக்கு இல்லை. |

கருத்து—இதனால் எவ்விடத்தில் துவிதம்போல் பவிக்கின்றதோவென ஆரம்பித்து எவ்விடத்தில் இவனுக்கு அனைத்தும் தானாகவேயாகும் எதனால் எதைப் பார்ப்பானென்று பரமார்த்தமான அத்துவித நிரூபணஞ் செய்கின்ற சுருதிவாக்கியங்களுக்கு உரைசெய்யப்பட்டது. அத்துவிதீயப் பிரமான்ம ஞானபெலத்தால் அதற்கு வேறாகத்தோற்றாநின்ற அனைத்தும் பிரமமாத்திரமாகப்பார்த்து அதிற் கதகரேணுப்போல அந்த ஞானமும் லயிப்பதினால் அதனையும் அவ்வான்மசொரூபமாகவே பார்த்திடப் பிரமான்ம ஐக்கியவிடயமான அந்தக்கரணவிருத்தி தனது காரணத்தோடும் லயிக்குமளவில் அவச்சேதமில்லாததனால் வித்துவான் தன் சொரூபமாகிய சின்மாத்திரமாகச் சேடித்துக் கேவலஞ் சித்ரூபனாகவே பிரகாசிக்கின்றானெனவும், உண்மையாய்ப் பிரதியோகியாக அதாவது எதிரியாகவோர் பொருளில்லாததனால் சேடித்ததாகக் கூறக்கூடாதெனவுங் கொள்க. (20)

## இதுவுமது.

ஒழிவிலாப் பரம யோகிய ரனுபவ
முள்ளவா றுரைத்திட யானோர்
வழிபெறே னெடுமான் மகேசன் மாமுனிவர்
வானவ ருரைத்திட மாட்டார்
விழிமிகுஞ் சிவனால் விஞ்சையாஞ் சிவையால்
விளம்பவும் படாதது விளம்பு
மொழியெலாம் வந்து மோனபா வத்தே
முடியுமன் னிலமதே முடிவு.

## இதன் பொருள்.

ஒழிவிலாப் பரமயோகியரனுபவம்—அழிவில்லாத மகாத்மாவினது அனுபவத்தை
உள்ளவாறுரைத்திட —உள்ளவண்ணஞ் சொல்வதற்கு
யானோர் வழிபெறேன் — நான் ஒருவழியும் அடையாதவனாயிருக்கின்றேன்
நெடுமால் மகேசன் —விஷ்ணுவும் ருத்திரமூர்த்தியும்
மாமுனிவர் —பெரிய முனிவர்களும்
வானவர் உரைத்திடமாட்டார்—தேவர்களும் (அவனனுபவத்தைச்) சொல்ல முடியாதவராவார்கள்
விழிமிகுஞ் சிவனால் —நெற்றியினும் ஒருகண்ணையுடைய பரமசிவனாலும்
விஞ்சையாஞ்சிவையால் —வித்தியாசொரூபியாகிய பராசத்தியாலும்
விளம்பவும்படாது —சொல்லவுங்கூடாது
அது விளம்புமொழியெலாம் —அதைச்சொல்லப்பட்ட வார்த்தையெல்லாம்
மோனபாவத்தே வந்துமுடியும்—மௌனபாவத்திற்றானே வந்துமுடிந்துவிடும்
அந்நிலமதே முடிவு —அந்தநிலமேமுடிவாகும். (21)

வேறு.

இப்படிக் கருணையா லியம்பி னேனெலா
மப்பழ மறையெலா மறிய வோதுவ
தொப்புற நானுமக் குரைத்த வீதெலாஞ்
செப்பரு மறையதின் சேட மாகுமே.

இதன் பொருள்.

| | |
|---|---|
| அப்பழ மறையெலாம் | —அந்த அனாதியாகிய வேதங்களெல்லாம் |
| எலாம் இப்படி | —அனைத்தையும் இவ்வாறு |
| அறியவோதுவது | —அறியும்படி சொல்லுகின்றது |
| கருணையால் இயம்பினேன் | —பரமசிவத்தின் கருணாபெலத்தினால் சொன்னேன் |
| ஒப்புற நான் உமக்கு | —ஒப்பும்படி நான் உங்களுக்கு |
| உரைத்த வீதெலாம் | —சொல்லிய இவ்வனைத்தும் |
| செப்பரும் மறையதின் | —சொல்வதற்கரிய வேதத்தினது |
| சேடமாகும் | —சேஷமேதான். (22) |

வேறு.

உரையா டுவதித் தகைமைத் தெனவோர் குறியுண்டாம்
பொருள்பா லன்றே பூரணமா யோர் வேறில்லாச்
சொருபா னந்தன் றிருமே னியெனச் சொலவன்றே
விரையார் கமலத் தவன்மெய் பாரா வியப்புற்றான்.

இதன் பொருள்.

| | |
|---|---|
| இத்தகைமைத்தென உரையாடுவது | —இத்தன்மையுடையதென்று சொல்வதற்கு |
| ஓர் குறியுண்டாம் | —ஒரு குறிப்பானபொருளுண்டு |
| பொருள்பாலன்று | —அப்பொருளும் வேறிடத்திருப்பதல்ல |
| பூரணமாய் | —பூரணமாயும் |
| ஓர்வேறில்லா | —ஓர்பின்னமுமில்லாததாயும் விளங்குகின்ற |
| சொருபானந்தன் | —சொருபானந்தனது |
| திருமேனியெனச் சொல | —திருமேனியென்று சொல்வதற்கு |
| அன்றேவிரையார் கமலத்தவன் | —அக்காலத்திற்றானே வாசனைபொருந்திய கமலாசனத்தில் வீற்றிருக்கின்ற பிரமதேவர் |
| மெய்பாரா வியப்புற்றான் | —மெய்யைநோக்கி அதிசயமடைந்தார். (23) |

பிரகதாரணிய உபநிடத தாற்பரியமுரைத்த அத்தியாயம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் 433.

# பத்தாவது

## உஷஸ்தப் பிராமணமுரைத்த அத்தியாயம்.

### அத்தியாய அவதாரிகை.

இங்ஙனம் அத்துவிதீய ஆன்ம விஞ்ஞானமே மோட்ச சாதனமெனக் கூறப்பட்டது. அவ்வான்ம சொரூபம் எத்தென்மைத்தென்று சங்கித்து அதனை விசேடமாகப் பிரதிபாதிக்கவேண்டி உஷஸ்தப்பிராமணத்தைக் கூறுகின்றார்.

நாதனுஞ் சொரூபா னந்த னுண்மலர்ப் பாதம்
போதமே யெனும்பரிசு புத்தேளவர்க் கெல்லாம்
நேதிநே திசெய்திப் பரிசென நிகழ்த்திடுவான்
வேதநாலு நான்மு கத்தினால் விளக்கிய விதாதா.

### இதன் பொருள்.

| | |
|---|---|
| நாதனும் சொரூபானந்தன் | —யாவர்க்கும் நாயகராகிய சொரூபானந்தராது |
| நாண்மலர்ப்பாதம் | —புதுமலர்போன்ற திருவடியே |
| போதமேயெனும் பரிசு | —ஞானசொரூபமாயிருக்கின்றதென்னுந்தன்மையை |
| நேதி நேதிசெய்து | —(பூதமுதல் மாயைகாறும்) இதல்ல இதல்லவென்று நிஷேதித்து |
| இப்பரிசென வேதநாலும் | —இவ்விதமென்று நான்குவேதங்களையும் |
| நான்முகத்தினால் விளக்கிய | —நான்குமுகங்களாலும் விளக்கும் |
| விதாதா | —பிரம்மதேவரானவர் |
| புத்தேளவர்க்கெல்லாம் | —தேவர்களனைவருக்கும் |
| நிகழ்த்திடுவான் | —சொல்லுகின்றான். (1) |

### அவதாரிகை.

எது சாக்ஷாத் அபரோக்ஷமாயுள்ள பிரம்மம், எவன் அனைத்திற்குஞ் சருவாந்தரனான ஆன்மா அவனைச் சொல்லவேண்டுமென்ற உஷஸ்தியினது கேள்விக்கு இவன் ஆன்மாவென்று அபினயத்தால் தனது அநுபோகத்தால் அடையத்தக்க ஆன்மவிடையமான உத்தரம் யாக்கியவற்கியரால் கூறப்பட்டது. இங்ஙனம் கேள்வி உத்தரங்களாற் சித்தாயுள்ள பொருளை ஈண்டு விளக்கிக் கூறுகின்றார்.

### வேறு.

எப்பொருள் களுக்குஞ் சான்ற யார்க்குமுள் ளாகி யென்று
மெய்ப்படு தன்றே சாலே விமலமாய் விளங்கா நின்ற
தெப்பொரு ளெல்லா மாகி யெங்கணு நிறைந்து நின்ற
வப்பரம் பிரமம் நேரே யழகுற வறிய லாகும்.

இதன் பொருள்.

| | |
|---|---|
| எப்பொருள்களுக்குஞ் சான்ருய் | —எந்தப்பொருள்களுக்குஞ் சாட்சியாயும் |
| யார்க்குமுள்ளாகி | —அனைவர்களுக்கும் ஆந்தரப்பொருளாகியும் |
| என்றும் | —எக்காலத்தும் |
| மெய்ப்படு தன்றேசாலே | —மெய்ம்மையாகிய தனது பிரகாசத்திஞலேயே |
| விமலமாய் விளங்காநின்ற | —நின்மலமாய் விளங்குவதாயுமுள்ள |
| எப்பொருள் எல்லாமாகி | —எந்தவஸ்துவோ (அது)அனைத்துமாகி |
| எங்கணும் நிறைந்துநின்ற | —எங்கும் பூரணமாய்நின்ற |
| அப்பரப் பிரம்மம் | —அந்தப் பரப்பிரம்மமே |
| நேரே அழகுறவறியலாகும் | —அபரோட்சமாக அழகாக அறியத்தகும். |

**பதசாரம்**—அந்தக்கரணவிருத்தி சம்பந்தத்தால் சோபாதிக ஆன்மா காண்பானுவான். இவன் நிருபாதிகனுதலால் நேரே ஈக்ஷணசொரூபனென்பார், 'எப்பொருள்களுக்குஞ் சான்றய்' எனவும், சோபாதிகனுக்காயின் மற்ருென்றை அபேக்ஷித்து ஆந்தரத்தன்மை, இவன் நிருபாதிகனுதலால் காரியகாரண சமூகமனைத்துக்கும் ஆந்தரப் பொருளென்பார், 'யார்க்குமுள்ளாகி' எனவும் கூறினுர்.

**கருத்து**—சுயம்பிரகாசனெவனே அவனே சகலப் பிராணிகளுக்கும் பிரத்தியக்கான ஆன்மா, அந்த ஆன்மதத்துவமே சுருதியில் பிரசித்தமாய் அபரோட்சமான சொயம்பிரகாச அபரிச்சின்னப் பிரம்மமாகும். இவர்களுக்குப் பேதமில்லை.

அவதாரிகை.

இவன் ஆன்மாவென்று அபினயத்துடன் நிருபாதிக ஆன்மசொரூபம் உபதேசித்தும் அதனையறியாத உஷஸ்திக்குப் போதிக்கும்பொருட்டு எவன் பிராணனுலே சேட்டிப்பிக்கின்ருனென்றது முதலான வாக்கியங்களினுல் யாதொரு தடஸ்தலட்சணம் ஆன்மாவுக்குக் கூறப்பட்டிருக்கின்றதோ அதனைக் கூறுகின்ருர்.

வேறு.

இந்தப் பிராணு பானுதி யாரா லுண்டா யியங்குவதிங்
கெந்தப் புருடன் முன்பாக வெல்லா மிலங்கி யவிர்வாகுந்
தொந்தப் படவெத் தொழிலுஞ்செய் தேவன் ரெழிலற் றிருக்கின்ரு
னந்தப் பரனே யாவர்க்கு முள்ளா மான்மா வாகின்ருன்.

இதன் பொருள்.

| | |
|---|---|
| இந்தப் பிராணுபானுதி | —இந்தப்பிராணன் அபானன் முதலியவைகள் |
| யாராலுண்டாயியங்குவது | —எவனுலுண்டாகிச் சலிக்கின்றன |
| இங்கு எந்தப்புருடன் | —இவ்விடத்தில் எந்தப்புருஷனது |
| முன்பாக | —சன்னிதானத்தில் |

எல்லாமிலங்கியவிர்வாகும் —அனைத்தும் பிரகாசமாகவிளங்கும்
தொந்தப்பட —சுகதுக்காதிகளுக்குப் பாத்தியப்படும்படி
எத்தொழிலுஞ்செய்து —எல்லாத் தொழில்களையுஞ்செய்தும்
எவன் தொழிலற்றிருக்கின்றான்—எவன் ஒரு தொழிலுமில்லாமலிருக்கின்றானே
அந்தப்பரனே —அந்தப்பரமனே
யாவர்க்குமுள்ளாம் —எல்லார்களுக்கும் ஆந்தரமான
ஆன்மாவாகின்றான் —ஆன்ம வஸ்துவாகின்றான்.

கருத்து—பேதமாகத் தோற்றாநின்ற பிராணபானன் முதலிய காரியகாரண சங்காதத்துக்குத் தாருவெந்திரம்போல் சுபாவமாகவே எந்த அதிஷ்டானவசத்தால் சத்தாஸ்புரணமுண்டாகின்றதோ பிராணபானன் முதலிய அனைத்தும் அதன் சன்னிதானமாத்திரத்தால் தொழிலுடையனவாய்ப் பவிக்கின்றன. காந்தத்தின்முன்பு அயம்போல் அனைத்தும் சேட்டிக்கினும் எவன் நிருபாதிகனாய்ச் சின்மாத்திரனாய்த்தான் சலனமில்லாதவனாய்த் துலங்குகின்றானோ அவன் அவைகளால் செய்யப்படும் புண்ணிய பாவங்களால் சம்பந்தப்படுகின்றானில்லை. அவனே முற்கூறிய சருவாந்தரத் தன்மை முதலான லட்சணமுடைய ஆன்மாவென்க.(3)

அவதாரிகை.

தூலமுதலிய சரீரங்களுக்கு அனான்மத் தன்மையைக் கூறுகின்றார்.

உடம்போ தானன் றுடம்பீதென் றுணரப் படுத லாலுடம்பிற்
றிடஞ்சேர் பிராண தியுமன்று செடமாய்க் காணுஞ் செய்தியினாற்
கடம்போ லியாவ னிவையனைத்துங் காண்பா னவனே கத்தாவாய்
நடஞ்சே ருடம்பி னுண்ணின்று நடத்து கின்ற நானவான்.

இதன் பொருள்.

உடம்பீதென்றுணரப்படுதலால்—இது சரீரமென்று சுட்டியறியப்படுதலால்
உடம்போ தானன்று —இந்தச்சரீரமோ நானல்ல
உடம்பில்திடஞ்சேர் —சரீரத்தில் திடம்பொருந்திய
பிராணதியும் —பிராணாதிகளும்
செடமாய்க்காணும் செய்தியினால்—செடங்களாகக் காணப்படுஞ்செய்கையினால்
அன்று —நானல்ல
இயாவன் கடம்போல் —எவன் கடத்தைப்போல
இவையனைத்தும் காண்பான் —சரீராதிகளனைத்தையும் பார்க்கின்றானோ
அவனே கத்தாவாய் —அவனே அதிபனாகி
நடஞ்சேர் உடம்பினுள் நின்று—சலனம்பொருந்திய சரீரத்துள்ளே நின்று
நடத்துகின்ற நானவான் —எவுகின்ற நானவான்.

**கருத்து**—நான் பிரம்மமாகின்றேனென்றது முதலியவற்றில் பிரத்தியக்குப் பொருளைக்கூறுகின்ற நானென்னுஞ் சத்தத்திற்குச் சருவாந்தரனும் பிரத்தியக்காயுங் கூறப்பட்ட ஆன்மாவே முக்கியப்பொருளேயன்றி ஆறுகோசமுடைய தூலசரீரமாகாது. அது கடம்போல் அசேதனமாய்த் திரிசியமாகலின் தூலசரீரத்தை எவன் காண்கின்றானோ அவனே சருவாந்தரனான ஆன்மாவாவன், பிராண பானன் முதலிய ஐந்துவாயுக்களும் இருவகை இந்திரியங்களும் புத்திமனங்களும் ஆகிய பதினேழு தத்துவங்களோடுகூடிய லிங்கசரீரமும் பூதகாரியமாய்த் திரிசியமாகலின் அனான்மாவேதான். அதற்கும் எவன் திருஷ்டாவோ அவனே சருவாந்தரனான ஆன்மாவெனவும் தடஸ்தமாக நிருபாதிகப் பிரம்மங் கூறப்பட்டதென்க.

அவதாரிகை.

திருஷ்டிக்குத் திருஷ்டாவென்றது முதலியவற்றில் சுருதியில் சொப்பிரகாச சித்ரூபமான சொரூபம் கொம்புப்பிடியாய்க் கூறப்பட்டதெனக் கூறுகிறார்.

வேறு.

வினவுற்ற கேள்விக்குக் கேட்பானாகி
மேவியகாட் சியில்விழித்துக் காண்பானாகி
மனனத்தின் மாந்தாவாய் ஞானந்தன்னின்
மதித்திடுஞா தாவாகி மன்னுகின்றான்
சொனவத்தற் பரனாகு மவனில்வேறாந்
தோற்றமெலா மெய்யாகுந் தோற்றமன்று
நினையிற்றற் பரனேயிங் கெல்லாமென்று
நினைவதுவே நினைவான நினைவுநேரே.

இதன் பொருள்.

வினவுற்றகேள்விக்குக் கேட்பானாகி—கேட்கின்ற செவிக்குக் கேட்பவனாயும்
மேவியகாட்சியில் —பொருந்திய கண்ணுக்கு
விழித்துக்காண்பானாகி —விழித்துப்பார்ப்பவனாயும்
மனனத்தில் —மனனத்தொழிலையுடைய மனத்திற்கு
மாந்தாவாய் —மனனிக்கின்றவனாயும்
ஞானந்தன்னில் —விஞ்ஞானத்திற்கு
மதித்திடு ஞாதாவாகி —மதிக்கின்ற விஞ்ஞாதாவாயும்
மன்னுகின்றான் —நிலைபெற்றிருப்பவனே
சொன அத்தற்பரனாகும் —முன்சொல்லிய அந்தத் தற்பரனாவான்
அவனில் வேறாந்தோற்றமெலாம்—அவனுக்குப்பின்னமாகத் தோற்றுகின்ற அனைத்தும்
மெய்யாகுந்தோற்றமன்று —உண்மையான தோற்றமல்ல

நேரே நினையில் —நேராக ஆலோசிக்கில்
தற்பரனே —அந்தப்பரனே
இங்கெல்லாமென்று —இங்கு அனைத்துமென்று
நினைவதுவே நினைவான நினைவு—நினைப்பதுவே நினைக்கத்தக்க நினைவாகும்.

**கருத்து**—உருவ முதலிய விஷயங்களோடுகூடிய கண் முதலியவற்றால் ரூபமுதலிய இச்சையினாலுண்டான சிற்சாயையினால் வியாபிக்கப்பட்ட புத்தி விருத்தியே கண் காது முதலியனவாதலால் அவைகள் அனான்மசொரூபமான உருவ முதலிய விஷயங்களையே பிரகாசிக்கச்செய்கின்றனவன்றித் தனது சைதன்னிய விளக்கத்தால் வியாபிக்கப்பட்ட உருவ முதலியவையில்லாத பிரத்தியகான்மாவைப் பிரகாசிக்கமாட்டாவாம். உலகசம்பந்தமுடைய கண் முதலியவைகளுக்குத் திருஷ்டாவாய்த் தனக்கியல்பான சைதன்யசொரூப திருஷ்டியால் வியாபிக்கப்பட்ட அவ்வான்மா கர்மபூதமான லௌகிக திருஷ்டியினால் எங்ஙனம் வியாபிக்கப்படுவான், புத்திவிருத்திக்குப் பிரகாசனான சொப்பிரகாச சிதான்மாவே முற்கூறிய சர்வாந்தரனான பரமான்மாவெனவும் இங்ஙனம் சர்வாந்தரனான ஆன்மாவைத் தடஸ்தசொரூப லட்சணங்களால் உபதேசித்ததுபற்றி அந்த ஆன்மாவுக் கன்னியமான காரியகாரணங்களாகிய பூதபவுதிக ஜகம் அதிஷ்டானத்தின் உண்மைஞானத்தால் சுத்தி ரசதம்போல் பாதிக்கப்பட்டதினால் அஃது விவகாரதசையில் சத்தியமன்றிப் பரமார்த்த நிரூபணத்தில் சத்தியமாகாது. சருவாந்தரனான பிரத்தியகான்மாவினிடத்தில் அத்தியாசத்தால் தோன்றி அங்ஙனமே ஒடுங்கி அதிஷ்டானமாத்திரமாகவே சேடிக்கின்றதெனவுங்கொள்க. (5)

### அவதாரிகை.

இவ்வாறு பிரத்தியகான்மாவுக்கு அத்தியாத்மமான சருவாந்தரத் தன்மையைவிளக்கி உபதேசித்து அதிபூதமாகிய சருவாந்தரத்தன்மையையும் ஈண்டு உபதேசிக்கவேண்டிக் கார்க்கிப் பிராமணத்தின் பொருளைக் கூறுகின்றார்.

### வேறு.

பாரிலே யெல்லாப் பொருள்களுங் கோவைப்
பட்டதெப் படியிலப் படியே
நீரிலே பாரு நெருப்பிலே நீரு
நிலவுகா லதனிலே நெருப்பு
முருகா லந்த ரிக்கலோ கத்து
முண்டையும் பாவுமே போலச்
சாருமா மொன்றே டொன்றுவே றறவே
தன்னிலே பின்னியிச் சகத்தில்.

### இதன் பொருள்.

பாரிலே எல்லாப்பொருள்களும்—பூமியின்கண் சகலவஸ்துக்களும்
கோவைப்பட்டதெப்படியில் —கோவையாகிய தெவ்வாறே

அப்படியே நீரிலேபாரும் —அவ்வாறே ஜலத்தில் பூமியும்
நெருப்பிலே நீரும் —தீயில் ஜலமும்
நிலவுகாலதனில் நெருப்பும் —விளங்குகின்றவாயுவில் தீயும்
ஊருகால் அந்தரிக்கலோகத்தும்—சலிக்கின்ற காற்று ஆகாயத்திலும்
உண்டையும் பாவும்போல —நூலினது உண்டையும் பாவும்போல
ஒன்றேடொன்று வேறற —ஒன்றுக்கொன்று பின்னமில்லாமல்
தன்னிலே பின்னி —தன்னிற்றானே பின்னிக்கொண்டு
இச்சகத்தில் சாருமாம் —இவ்வுலகில் பொருந்தியிருக்கின்றனவாம்

**பதசாரம்**—சருவாந்தரனை ஆன்மாவுக்கு நிரதிசயமான சூக்குமத் தன்மை வியாபகத்தன்மையும் தெரிவிக்கும்பொருட்டுப் பிரிதிவிமுதல் பிரம்மலோகம் வரைக்கும் மேன்மேற்குறுக்குநீட்டங்களாகக் கோவைப்பட்டுச் சூக்குமத்தன்மை வியாபகத்தன்மை இரண்டுமொன்றற்கொன்று ஏற்றந்தாழ்வுகளாகச் சுருதிவாக்கியங்களால் காணப்படுகின்றது. அவற்றுள் எப்படி நூல்களிடத்தில் குறுக்கு நீட்டங்களான சூத்திரங்களால் படமானது கோவைப்பட்டிருக்கின்றதோ அப்படி மண்ணின்காரியமான ஜகமனைத்தும் காரணமாயும் சூக்குமமாயும் வியாபகமாயுமுள்ள பிருதிவியில் வரிசைக்கிரமப்படி கோவைப்பட்டிருக்கின்றதென்பார், **'பாரிலே யெல்லாப் பொருள்களுங் கோவைப்பட்டது'** என்றார். (6)

அந்தரிக் கங்கள் கந்தரு வத்தே யாதித்த வுலகங்க ளிடையே
கந்தரு வங்கள் சந்திர வுலகில் கதிரவ னுலகுக ளெல்லாஞ்
சந்திர வுலகந் தாரகை யுலகிற் றாரகை வானவ ருலகி
லிந்திர வுலகில் வானவ ருலக மியாவையுங் கோவையா யிருக்கும்.

**இதன் பொருள்.**

அந்தரிக்கங்கள் —ஆகாயலோகங்கள்
கந்தருவத்தே கந்தருவங்கள் —கந்தர்வலோகத்திலும், கந்தருவலோகங்கள்
ஆதித்தவுலகங்களிடையே —சூரியலோகங்களிலும்,
கதிரவனுலகுகளெல்லாம் —ஆதித்தனுலகமெல்லாம்
சந்திரவுலகில் சந்திரவுலகம் —சந்திரலோகத்திலும், சந்திரவுலகம்
தாரகைவுலகில் தாரகை —நக்ஷத்திரலோகத்திலும், நக்ஷத்திரவுலகம்
வானவருலகில் வானவருலகம்—தேவலோகத்திலும், தேவலோகம்
இந்திரவுலகில் —இந்திரலோகத்திலுமாக
யாவையும் கோவையாயிருக்கும்—அனைத்தும் கோக்கப்பட்டிருக்கின்றன.

**பதசாரம்**—சூக்குமதாரதம்மியத்தில் அதிசயமுடைய போகங்களுக்கு ஆச்ரயரூபமாகப் பொருந்தியுள பஞ்சபூதங்களே அவஸ்தா விசேஷங்களால் அவ்வவ்வுலகமாக விவரிக்கப்படுதலால் ஒவ்வோருலகத்தையும் பன்மையாகக் கூறினர். (7)

இதுவுமது—வேறு.

அரசாகிய வமராதிப னுலகானவை யடையப்
பிரசாபதி யுலகங்களி னிடையே பிரமனதா
முரைசாருல கினில்மற்றவை யிதுமாலவ னுலகிற்
றிருமாலுல கஞ்சேர்வுறு மிடமுஞ்செப் புதுமே.

இதன் பொருள்.

அரசாகிய அமராதிபன் —அரசனாகிய இந்திரனது
உலகானவையடைய —உலகங்களெல்லாம் பொருந்த
பிரசாபதி வுலகங்களினிடையே—பிரஜாபதி லோகங்களிலும்
மற்றவை உரைசார் —அந்தப்பிரஜாபதி லோகங்கள் சொல்லுகின்ற
பிரமனதாம் —பிரமாவினது வாகின்ற
உலகினில் இது —உலகங்களிலும் இந்தப்பிரமலோகம்
உயர்மாலவனுலகில் —உயர்ந்த விஷ்ணுலோகத்திலும் (கோவைப்பட்டிருக்கும்)
திருமாலுலகம் சேர்வுறுமிடமும்—விஷ்ணுவினது உலகம் பொருந்துமிடத்தையும்
செப்புதும் —(இனி முறையே எடுத்துச்) சொல்லுவாம்.

பதசாரம்—தூலப்பிரபஞ்ச அபிமானியான விராட்டே பிரசாபதியாதலால் அவனது சரீரத்தை உற்பத்திசெய்கின்றனவாயும் வைராஜனது பதத்தினுபயோக ஸ்தானங்களாயுமுள்ளபஞ்சபூதங்களைப், 'பிரசாபதியுலகங்கள்' எனவும், இரண்ய கருப்ப ரூபத்தையடைந்த பிரம்மதேவனால் பஞ்சீகரணம் பண்ணப்படாதன வாயும் பிரமாண்டத்தை யாரம்பிக்கின்றனவாயுமுள்ள ஆகாச முதலிய சூக்கும பஞ்சபூதங்களைப், 'பிரமனதா முரைசாருலகு' எனவுங் கூறினர். (8)

இதுவுமது—வேறு.

உருத்திர னுலகின்மா லுலகு ருத்திர
னிருக்குமவ் வுலகெலா மீச லோகமே
திருத்தகு மீசலோ கங்க டிண்ணமாய்க்
கருத்தறுஞ் சதாசிவ வுலகின் கண்ணதே.

இதன் பொருள்.

மாலுலகு —விஷ்ணுலோகமானது
உருத்திரவுலகில் —உருத்திர லோகத்திலும்
உருத்திரனிருக்கு மவ்வுலகெலாம்—உருத்திரன் வாசம்பண்ணுகின்ற அந்த வுலகமெல்லாம்
ஈசலோகமே —ஈச்வரலோகத்திலும்
திருத்தகுமீசலோகங்கள் —செல்வம்பொருந்திய ஈச்வரலோகங்கள்
திண்ணமாய்க் கருத்தறும் —வலிமையாகக் கருத்தினலெட்டக்கூடாத
சதாசிவவுலகின் கண்ணதே —சதாசிவலோகத்திலுமி (கோவைப்பட்டி) ருக்கின்றன. (9)

இதுவுமது.

தற்பரந் தன்னிலே சதாசி வன்றன
துற்பவ வுலகெலா முறுதி யாமதிற்
கற்பித மாய்நிகழ்ந் திடுமெய் காணுறி
லற்புத மாம்பர னல்ல தில்லையே.

இதன் பொருள்.

சதாசிவன்றனது —சதாசிவனுடைய
உற்பவவுலகெலாம் —உற்பத்திக்கப்பட்ட வுலகமனைத்தும்
தற்பரந்தன்னிலே —தற்பரமாகிய பிரத்தியகான்மாவில்
உறுதியாம் —உறுதியாகக் கோக்கப்பட்டிருக்கின்றது
அதில் கற்பிதமாய் நிகழ்ந்திடும்—அந்தப்பரத்தில் (ஜகமனைத்தும்) கற்பிதமாக விளங்கும்
மெய்காணுறில் —உண்மையாய்ப்பார்க்குமிடத்தில்
அற்புதமாம் பரனல்லதில்லை —அற்புதனாகிய பரனைத்தவிர இல்லை.

கருத்து—காரியலோகங்கள் காரணலோகங்களில் அத்தியாசிக்கப்பட்டனவாய்ப் பொய்யாய்த் தங்களது தோற்றத்துக்கு அதிஷ்டான சத்தான சருவாந்தரதிருக்குருபப் பிரத்தியகான்மாவினிடத்தில் மாயையாற் கோவையிடப்பட்டதாகவிருக்கின்றன. சருவாதிஷ்டானனை பிரத்தியகான்மா தனக்கு வேறானவோர் பொருளிருக்கின்றானில்லை தன்னிற்றானேயிருக்கின்றான். பராதீனப் பிரகாசங்களாகிய சத்துவிலக்ஷணப் பொருள்களுக்குச் சத்தையின் ஸ்புரணத்தின்பொருட்டு அந்த ஆன்மாவினிடத்தில் கோவையாகும். இவனேவெனில் ஆராயுமிடத்துச் சுயம்பிரகாசனாகலின் மற்றோராதாரத்தில் கோவைப்படானென்க. (10)

அவதாரிகை.

இவ்வாறு பிருதிவிமுதல் பிரம்மலோகம்வரை அனைத்தும் சருவாந்தரனாகிய பிரத்தியகான்மாவினிடத்தில் அத்தியாசத்தால் தோற்றப்படுதலின் உண்மையாய் அதிஷ்டானத்துக்கு வேறில்லையென்று நிரூபித்துச் சகல சகத் கற்பனைக்கும் ஆதாரவாதலால் சருவாந்தரனான ஆன்மாவை அந்தரியாமியாகக் கூறவேண்டி அதிதெய்வம், அதிபூதம், அத்தியாத்மமென்று கூறப்பட்ட ஜகத்துக்கு உபாதனாய் அனைத்துக்கு முள்ளாய் உபாதியனைத்தும் நீங்கினவனாய் விளங்கும் பிரத்தியகான்மா அந்தவந்த நியமன வியாபார சம்பந்தத்தால் அந்தரியாமி யாவனென்று உபதேசித்த அந்தரியாமிப் பிராமணத்தின் பொருளை ஈண்டுக் கூறுகின்றார்.

வேறு.

உடையதொன் றுடை யானெனும் வேறவையின்றிலோகத்
திடையிருந்து மிருந்திலனாயெவை யும்முடம்பாய்த்
திடமிதென் றறி யாவகைநின்றொரு செய்கையின்றி
யடையவுஞ் செயுமாரவ னந்தரி யாமியாவன்.

### இதன் பொருள்.

| | |
|---|---|
| ஒன்று உடையது | —ஒருபொருள் தன்னுடையதெனவும் |
| உடையானெனும் | —ஒருபொருளையுடையவனெனவுஞ் (சொல்லுகின்ற) |
| வேறவையின்றி | —பின்னமாகிய அவ்வுரைகளில்லாமல் |
| லோகத்திடையிருந்தும் | —உலகத்தின்கண் இருந்தும் |
| இருந்திலனாய் | —இல்லாதவனாயும் |
| எவையும் உடம்பாய் | —சகலத்தையும் உடம்பாகவுடையவனாயும் |
| திடமிதென்றறியாவகை நின்று | —திடமாக இதுவென்று சுட்டியறியத்தகாதவனாயுமிருந்து |
| ஒரு செய்கையின்றி | —ஒரு தொழிலுமில்லாமல் |
| ஆர்அடையவுஞ்செயும் | —எவன் எல்லாவற்றையும்செய்பவன் |
| அவன் அந்தரியாமியாவன் | —அவனே அந்தரியாமியென்பவனாவான். |

**பதசாரம்**—பிருதிவி முதலியவற்றிற்கு வெளியிலிருந்து அவற்றை நியமனஞ் செய்யக்கூடாமையின் இவ்வான்மா உபாதானகாரணமாய் அவற்றின் ஆந்தரப் பிரதேசத்திலிருக்கின்றானென்பார், '**லோகத்திடையிருந்தும்**' எனவும், ஆன்மாவிற்கு வேறாகச் சரீரமொன்றில்லையாயினும் பிருதிவி முதலியவை யுடல்போல் மறைத்தலின், '**எவையும் உடம்பாய்**' எனவும், இவ்வான்மா எல்லாவற்றிற்கும் ஆந்தரப்பொருளாயினும் அவற்றால் எமக்கு வேறாகவொரு நியந்தாவுள்ளானென்றறியப்படாது நிற்றலின், '**இதென்றறியாவகை நின்று**' எனவும், அந்தரியாமி லக்ஷண வியாபார சம்பந்தத்தால் ஆன்மாவிற்கு விக்கிரியைத்தன்மை வருமென்னில், உபாதிவசத்தால் நியந்தாவாயினும் பாரமார்த்திகமாக ஒரு தொழிலுமில்லாதவனென்பார், '**ஒரு செய்கையின்றி யடையவுஞ்செயும்**' எனவும், சோபாதிகனாதலால் நம்மைப்போல் இவ்வான்மாவும் ஒரு சீவனென்னில் அங்ஙனமன்று உள்ளிருந்து நியமனஞ்செய்யு முபாதியைத் தன்னதென்றபிமானஞ் செய்யாமையின் விவகாரசமுகங்களுக்கு வேறாய்ச் சம்சார துக்க முதலியவையில்லாதவனாய் இவனே தத்தந்தொழில்களில் செல்லும்படி எல்லாவற்றையும் நியமன வியாபாரசம்பந்தத்தால் ஏவுகின்றானாகலின், '**அந்தரியாமி**' எனவும் கூறினர்.(11)

### அவதாரிகை.

அந்தரியாமியான இவனே நம்மைப்போல் பிருதிவி முதலிய தேவதைகளும் எதனாலறியவில்லையென்ற சங்கைக்குச் சமாதானமும் சாக்கிர சொப்பன முதலிய அவித்தைகளில் சுகதுக்கங்களைப்புசிக்குஞ் சீவர்கள் அந்தரியாமிக்கு வேறானவர்களென்று சங்கித்து வேறல்லரென்று தெரிவிக்கவேண்டி ஆறாவது அத்தியாயத்திலுள்ள சோதிப்பிராமணத்தில் இவ்வான்மாவிற்கு மூன்றவஸ்தைகளிலுள்ள பதார்த்தங்களோடும் விவகாரத்தாலும் சம்பந்தமில்லாமையும் அதனால் செய்யப்படும் புண்ணியபாவங்கள் முதலிய சருவதருமங்களுடன் சேராமையும்

சொப்பிரகாசத்தன்மையும் நிரதிசயானந்த ஸ்வபாவத்தன்மையும் அத்துவிதீயத் தன்மையும் உபதேசிக்கப்பட்டது. அவற்றுள் சொப்பிரகாசத்தன்மையைச் சூரியனும் சந்திரனும் அஸ்தமித்திடில் அக்கினியும் வாக்கும் சாந்தத்தையடையில் எது ஜோதியாம் இந்தப் புருஷனேயென்று சுருதிகூறிய பொருளையுங் கூறுகின்றார்.

காண்டல்கேட்டல் கருதல்செயப் படுவானலன்றான்
காண்டல்கேட்டல் கருதல்செயப்படுவா னொருத்தன்
றூண்டாச் சோதியினு லனல்சோம னருக்கனெல்லா
மாண்டபோதும் விளங்குமனக் கரியாகிநின்று.

இதன் பொருள்.

காண்டல் கேட்டல் —காணப்பட்டவனும், கேட்கப்பட்டவனும்
கருதல்செயப்படுவானலன் —கருதப்பட்டவனுமல்லன்
தான் காண்டல் கேட்டல் —தான் திருஷ்டாவாயும் சுரோதாவாயும்
கருதல் செயப்படுவானொருத்தன்—மந்தாவாயுமிருக்கின்ற ஒருவன்
அனல் சோமன் அருக்கன் —அக்கினி சந்திரன் சூரியன்
எல்லாம் மாண்டபோதும் —அனைத்தும் அழிந்தகாலத்தும்
றூண்டாச் சோதியினுல் —தன்னுடைய தூண்டாவிளக்கத்தினுல்
மனக்கரியாகி நின்றுவிளங்கும்—மனோசாட்சியாய் நின்று விளங்குகின்றான்.

பதசாரம்—ரூபமுதலிய குணங்களில்லாதவனாய் இந்திரியங்களுக்கு அவிஷயனாகலின், 'காண்டல் கேட்டல் கருதல் செயப்படுவானலன்' எனவும், எல்லா இந்திரியங்களிலுமிருத்தலில் திருக்குருபனாய்க் காண்பானும் கேட்பவனும் விஞ்ஞாதாவும் இவனேயாகலின், 'தான்காண்டல் கேட்டல் கருதல் செயப்படுவான்' எனவும் அவனன்றியின்றாதலின் 'ஒருத்தன்' எனவும் கூறினார்.

இதனுல் கண்ணுக்குக் காண்போன் கேள்விக்குக் கேட்போன் என்ற சுருதியின்பொருள் கூறப்பட்டதுமன்றி, இவ்வந்தரியாமியே காண்பான் கேட்பவன் என்று பிரதிபாதித்ததனுல் ஏவப்பட்டவர்களாகிய காண்பவன் முதலானவர்கள் வேறு நியந்தாவேறு என்னும் பேதப்பிராந்தியை நீக்கும்பொருட்டு இவர்களைக் காட்டிலும் அன்னியனல்லன் காண்பான் என்று உபதேசிக்கப்பட்டதாம்.

அவதாரிகை.

சூரியன் முதலிய பாகிய வொளிகளில்லாத காலத்தும் ஆன்ம சொரூப சைதன்யப் பிரகாசம் அந்தக்கரண சாக்ஷியாய்த் தனது பிரகாசத்தினுலேயே எப்போதும் விளங்குகின்றதே யன்றிப் பாகியமான வொளியை அபேக்ஷிக்கின்றதில்லையென முற்கவியால் சாக்கிர அவஸ்தையைக்கூறிச் சொப்பன முதலிய அவஸ்தைகளுக்குஞ் சாக்ஷியென்பதையும் ஈண்டுவிளக்கிக் கூறுகின்றார்.

வேறு.

சித்தமத்த மித்திடத் தபாவமுந் தெரிந்திடுஞ்
சுத்தநற் சுழுத்தியிற் றுய்க்குமாயை கண்டிடு
மத்தமித் தலும்பிறத் தலும்மிலா னபாவபா
வத்தையு மகண்டமு மறிந்தபோத ரூபனே.

இதன் பொருள்.

சித்தம் அத்தமித்திடத்து —(அவ்வான்மாவானவன்)மனோவியாபாரம் நசித்த விடத்தில்

அபாவமும் தெரிந்திடும் —அதன் அபாவத்தன்மையையும் அறிவான்

சுத்த நற்சுழுத்தியில் —சுத்தமாகிய நல்ல சுழுத்தியினிடத்தில்

துய்க்குமாயை கண்டிடும் —சோர்வுள்ள மாயைதனையும் காண்பான்

அத்தமித்தலும் பிறத்தலும் இலான்—ஒடுங்குதலும் ஜனித்தலுமில்லாதவன்

அபாவபாவத்தையும் —பாவாபாவத்தையும்

அகண்டமும் —எல்லாவற்றையும்

அறிந்தபோத ரூபனே —அறிந்த ஞானரூபனுவான்.

**பதசாரம்**—சொப்பனுவத்தையில் கண் முதலிய இந்திரியங்கள் ஒடுங்கலால் சித்தம் பாகியவிடய விவகாரங்களின்றிக் கேவலம் சொப்பனபதார்த்தங்களின் ஆகாரமாகப் பரிணமத்தை அடைகின்றகாலத்தும் மற்றொரு பிரகாசத்தின் உதவியின்றிச் சொரூபமான சிற்பிரகாசத்தினுல் அந்த ஆன்மாவே அதனை அறிகின்றுனென்பார், 'சித்தமத்த மித்திடத் தபாவமுந் தெரிந்திடும்' எனவும், எப்போது காரணமான பாவரூப அஞ்ஞானத்தில் புறக்கரணங்கள்போல் சித்தமும் ஒடுங்குகின்றதோ அத்திசையில் அப்பொழுது கேவலம் அஞ்ஞானமயமாகிய அந்தச்சுழுத்தி யவஸ்தையையும் சொரூப சிற்பிரகாசத்தினுலேயே இவ்வான்மா அறிகின்றுனென்பார், 'சுத்தநற் சுழுத்தியிற் றுய்க்குமாயை கண்டிடும்' எனவும், மூன்று அவத்தைகளிலும் தானுகப்பிரகாசிக்கின்ற சிதான்மா தோற்றம் ஒடுக்க முதலிய தருமமில்லாதவனுய் எக்காலத்திலும் அறியப்பட்டதாயும் அறியப்படாததாயும் இருபிரிவுடைய பாவாபாவரூபமான ஜகமனைத்தையும் கேவலம் ஒருபாதியுமில்லாத சொப்பிரகாசச் சித்ரூபனுன இவ்வான்மாவே ஒடுங்குதலும் விரிதலுமின்றி அறிகின்றுனென்பார், 'அத்தமித் தலும்பிறத் தலும்மிலா னபாவபாவத்தையு மகண்டமு மறிந்தபோத ரூபனே' எனவும் கூறினுர்.

**கருத்து**—சூரியன் முதலிய பாகியப் பிரகாசங்களின் உதவியின்றிச் சாக்கிர முதலிய அவஸ்தைகளில் அனைத்தையுந்தானே விளங்கச் செய்வதுபற்றி ஆன்மா சுயஞ்சோதியாவன் அவஸ்தைகள் மாறிவரினும் இடைவிடாமலிருந்து காண்டலினுல் அவற்றிற்கு அன்னியனுவன், திரிசியமனைத்தும் வேத்தாவான அவனிடத்தில் கற்பிதமாய் மித்தையாதலால் அவனுக்குவேருக அன்னியமில்லை என்க.

வேறு.

சித்தமத்த மித்திடத் தபாவமுந் தெரிந்திடுஞ்
சுத்தநற் சுழுத்தியிற் றுய்க்குமாயை கண்டிடு
மத்தமித் தலும்பிறத் தலும்மிலா னபாவபா
வத்தையு மகண்டமு மறிந்தபோத ரூபனே.

இதன் பொருள்.

சித்தம் அத்தமித்திடத்து —(அவ்வான்மாவானவன்)மனோவியாபாரம் நசித்த விடத்தில்
அபாவமும் தெரிந்திடும் —அதன் அபாவத்தன்மையையும் அறிவான்
சுத்த நற்சுழுத்தியில் —சுத்தமாகிய நல்ல சுழுத்தியினிடத்தில்
துய்க்குமாயை கண்டிடும் —சோர்வுள்ள மாயைதனையும் காண்பான்
அத்தமித்தலும் பிறத்தலும் இலான்—ஒடுங்குதலும் ஜனித்தலுமில்லாதவன்
அபாவபாவத்தையும் —பாவாபாவத்தையும்
அகண்டமும் —எல்லாவற்றையும்
அறிந்தபோத ரூபனே —அறிந்த ஞானரூபனுவான்.

**பதசாரம்**—சொப்பனுவத்தையில் கண் முதலிய இந்திரியங்கள் ஒடுங்கலால் சித்தம் பாகியவிடய விவகாரங்களின்றிக் கேவலம் சொப்பனபதார்த்தங்களின் ஆகாரமாகப் பரிணமத்தை அடைகின்றகாலத்தும் மற்றெரு பிரகாசத்தின் உதவியின்றிச் சொரூபமான சிற்பிரகாசத்தினுல் அந்த ஆன்மாவே அதனை அறிகின்றுனென்பார், 'சித்தமத்த மித்திடத் தபாவமுந் தெரிந்திடும்' எனவும், எப்போது காரணமான பாவரூப அஞ்ஞானத்தில் புறக்கரணங்கள்போல் சித்தமும் ஒடுங்குகின்றதோ அத்திசையில் அப்பொழுது கேவலம் அஞ்ஞானமயமாகிய அந்தச்சுழுத்தி யவஸ்தையையும் சொரூப சிற்பிரகாசத்தினுலேயே இவ்வான்மா அறிகின்றுனென்பார், 'சுத்தநற் சுழுத்தியிற் றுய்க்குமாயை கண்டிடும்' எனவும், மூன்று அவத்தைகளிலும் தானுகப்பிரகாசிக்கின்ற சிதான்மா தோற்றம் ஒடுக்க முதலிய தருமமில்லாதவனுய் எக்காலத்திலும் அறியப்பட்டதாயும் அறியப்படாததாயும் இருபிரிவுடைய பாவாபாவரூபமான ஜகமனைத்தையும் கேவலம் ஒருபாதியுமில்லாத சொப்பிரகாசச் சித்ரூபனுன இவ்வான்மாவே ஒடுங்குதலும் விரிதலுமின்றி அறிகின்றுனென்பார், 'அத்தமித் தலும்பிறத் தலும்மிலா னபாவபாவத்தையு மகண்டமு மறிந்தபோத ரூபனே' எனவும் கூறினுர்.

**கருத்து**—சூரியன் முதலிய பாகியப் பிரகாசங்களின் உதவியின்றிச் சாக்கிர முதலிய அவஸ்தைகளில் அனைத்தையுந்தானே விளங்கச் செய்வதுபற்றி ஆன்மா சுயஞ்சோதியாவன் அவஸ்தைகள் மாறிவரினும் இடைவிடாமலிருந்து காண்டலினுல் அவற்றிற்கு அன்னியனுவன், திரிசியமனைத்தும் வேத்தாவான அவனிடத்தில் கற்பிதமாய் மித்தையாதலால் அவனுக்குவேறுக அன்னியமில்லை என்க.

னென்க. இதனால் திருஷ்டாவினது திருஷ்டிக்குக் குறைவில்லையெனவும் இரண்டாம்பொருளில்லையெனவும் நிரூபித்த சுருதியின்பொருள் கூறப்பட்டதாம். (14)

அவதாரிகை.

இங்ஙனம் அத்துவிதீய ஆன்மநிட்டனுடைய யாதொரு கதி முதலியவைகளுக்கு நிரதிசயத்தன்மை சுருதி கூறிற்றென அதனைவிளக்கிக் கூறுகின்றார்.

வேறு.

இதுபரம மானகதி யிதுபரம மாமுலகு
மதிசுகமு மாவதிது வழிவிறன மாவதிது
வுதறுதன தோலுரக முடலெனவு ளுதுபர
மதனையறி வானதிக னகமதிவை யானுடலில்.

இதன் பொருள்.

| | |
|---|---|
| இது பரமமானகதி | —இந்தச் சொரூபமே பரமபதமும் |
| இது பரமமாமுலகும் | —இதுவே மேலானவுலகமும் |
| இது அதிசுகமுமாவது | —இதுவே அதிகசுகமுமாகும் |
| இது அழிவில்தனமாவது | —இதுவே நாசமில்லாத ஐசுவரியமாகும் |
| உதறுதனதோல் | —உதறுகின்ற தனதுசட்டையை |
| உரகமுடலெனவுளது | —பாம்பு சரீரமென்றுகருதாது (அதுபோல) |
| பரமதனையறிவான் அதிகன் | —பிரமத்தையறிகின்றவனான சிரேட்டன் |
| உடலில் அகமதி | —சரீரத்தில் நானென்னும் புத்தியை |
| வையான் | —(அவன்) வைக்கமாட்டான். |

**பதசாரம்**—பிரமன் முதல் தம்பமீறாயுள்ளகதிகள் அவித்தையினால் கற்பிக்கப்பட்டனவாகலின் உயர்ந்தன அன்றென்பதுதோன்ற, '**இதுபரமமானகதி**' எனவும், கருமபலன்களை ஆசிரயத்திருக்கின்ற உலகங்கள் உயர்ந்தன வாகாமையினாலும் இந்தப் பிரம்மநிட்டை ஒரு கருமத்தாலுண்டாகாமல் சுபாவமாகவே நிரதிசயமாதலாலும். '**இது பரமமாமுலகும்**' எனவும், விஷயசுகம் அனித்தியமாயும் அதனுடைய லேசமாயுமிருப்பதுபற்றி உபேட்சிக்கத்தக்க அபரமம் ஆதலால் நிரதிசயானந்தப் பிரமான்ம சொரூபமாக இருத்தல் நித்தியமாகலின் இந்தப் பிரம்மநிட்டையே மேலான சுகமென்பார், '**அதிசுகமுமாவதிது**' எனவும், அன்னியங்களான சம்பத்துக்கள் கருமங்களால் சாதிக்கப்படுதலின் அனித்தியமாதலால் நித்தியமான அத்துவிதீயப் பிரமான்ம நிட்டையே அழிவில்லாத மேலான சம்பத்தென்பார், '**அழிவிறனமாவதிது**' எனவும் கூறினார். (15)

அவதாரிகை.

தேகான்மபாவம் பேதத்தை முன்னிட்டிருத்தலால் அது நிரூபிக்கக்கூடாதென்று அதன் பேதத்தை நிராகரிக்கின்ற சுருதியின்பொருளைக் கூறுகின்றார்.

தற்பரம மாகியுள தத்துவமதே யொழிய
வற்பமயல் காணுமவ ரத்துருவமே யடைவர்
கற்பிதவ ஞானமதி லுற்பவம தாமுலக
நற்பிரம மாயறிவர் நற்சிவம தாநயனர்.

இதன் பொருள்.

| | |
|---|---|
| தற்பரமமாகியுள | —தற்பரமமாகியிருக்கின்ற |
| தத்துவமதேயொழிய | —பிரம்மத்தைத்தவிர |
| அற்பமயல்காணுமவர் | —கிஞ்சித்தேனும் பின்னமாகப் பார்க்கின்றவர்கள் |
| அத்துருவமேயடைவர் | —நிலையில்லாத மரணத்தையே அடைவார்கள் |
| கற்பித அஞானமதில் | —கற்பிதமாயுள்ள அவித்தையில் |
| உற்பவமதாம் உலகம் | —உற்பத்தியாகிய சகத்தை |
| நற்சிவமதாம் நயனர் | —நல்லசிவமாகிய திருக்கானவர்கள் |
| நற்பிரமமாயறிவர் | —சுத்தப்பிரமமாக அறிவார்கள். |

பதசாரம்—துவிதஜகத் தோற்றத்துக்கு அதிஷ்டானமான பிரம்மமே சக நிஷேதத்துக்கும் அவதியாகலின், துவிதப் பிரபஞ்சம்போலத் தனக்கன்னிய மாய் ஓர் அதிட்டானத்தில் அத்தியாசிக்கப்பட்டு மற்றொன்றின் அதீனமான சத்தையையுடையது ஆகாதென்பதுதோன்ற, ‘தற்பரமமாகியுள தத்துவம்’ எனவும், ஆன்மசொரூபமான சிவனிடத்தில் வேறுயொரு வஸ்துவும் உண்மை யாயில்லை. நான் வேறு ஜகமுதவியவை வேறு என்று, எவன் பிரத்தியகான்ம பாவத்தை அடைந்திருக்கும் பிரம்மத்தினிடத்தில் பேதத்தைப்பார்க்கின்றானோ அவன் அவித்தையால் வசீகரிக்கப்பட்டவனுய்ச் சுருதிகூறிய பிரகாரம் மரணத் தினின்றும் திரும்பவும் மரணத்தை அடைவான் என்பதுதோன்ற, ‘அத்துருவமே யடைவர்’ எனவும், உண்மையாகப் பேதமில்லாமையால் அஞ்ஞானமும் அதன் காரியமான ஆகாச முதலிய பூதபௌதிக ஜகமும் மற்றெல்லாமும் அத்துவிதீய மான பிரம்மத்தினிடத்தில் அத்தியாசிக்கப்பட்டதாகலின் அதிஷ்டானமான ஆன்மசொரூபமாய் ஒரு பிரகாரமாகவே பார்க்கத்தக்கது. அங்ஙனமே சுருதியும் ஏகப்பிரகாரமாய் விஞ்ஞானகன ஏகரச லட்சணமாகவே இந்த ஆன்மா சாந்தி தாந்தி முதலிய சாதன கலாபாநுஷ்டானத்தாலுண்டான பெரியவருத்தத்தை அடைந்தேனும் முமுட்சுக்களால் சாட்சாத்காரமாய் அறியத்தக்கவனென்பது தோன்ற, ‘ஏகப்பிரகாரமாகவே இடைவிடாமற் பார்க்கத்தக்கது இது அப்பிர மேயம் துருவம்’ என்றவாக்கியத்தால் கூறிற்றென்பார், ‘கற்பிதவஞானமதிலுற் பவமதாமுலக நற்பிரமமாயறிவர் நற்சிவமதாநயனர்’ எனவும் கூறினர். (16)

அவதாரிகை.

கூறியதாயும் சொல்லப் போவதாயுமான எல்லாவுபநிடதங்களின் பொருளை யும் சொல்லாநின்ற ‘அந்தவிவன் மகான் அஜன் ஆன்மா’ வென்று தொடங்கிய கண்டத்திற் சொல்லியபடி அறியப்படும் பொருளின் சொருபத்தைக்கூறுகின்றார்.

வேறு.

நிலையி னிலை யாகி யளவி டவொணாத நிமல னுருநாளு நினைகுவான்
சலன மறநாவு மலைவ லையறாத சமயகலை யோத றவிருவா
னுலகி லுதியாது வுயர்வு குறைவான வொருவி னையினாலு மறுவுறா
தலகி லுலகேவல் செயவு ரியனான வதிப தியுமாகு மமலனே.

இதன் பொருள்.

| | |
|---|---|
| நிலையில் நிலையாகி | —தனது ஸ்திதியிற்றானே நிலையாயிருப்பதாகி |
| அளவிடவொணாத | —அளவிடக்கூடாத |
| நிமலனுரு | —நின்மலனாகிய பரமசிவசொருபத்தை |
| நாளும் நினைகுவான் | —எந்நாளும் நினைப்பவனாயும் |
| நாவுசலனமற | —நாவானது (இடைவிடாமல்) சலிப்பதுநீங்க |
| மலைவு அலையறாத | —மயக்கமாகிய அலைநீங்காத |
| சமயகலையோதல் | —சமயசாஸ்திரங்களைச் சொல்லுதல் |
| தவிருவான் அமலன் | —இல்லாதவனாயுமுள்ள அமலனானவன் |
| உலகிலுதியாது | —உலகத்தில்பிறவாமல் |
| உயர்வுகுறைவான | —ஏற்றந்தாழ்வாகிய |
| ஒருவினையினாலு மறுவுறாது | —ஒருகருமங்களாலும் துன்பம்பொருந்தாமல் |
| அலகிலுலகேவல் | —அளவில்லாதவுலகத்தோர்கள் |
| செயவுரியனான | —ஏவற்றொழில் செய்யத்தகுந்தவனான |
| அதிபதியுமாகும் | —இறைவனுமாவான். |

பதசாரம்—திருக்குருபனான ஆன்மா பார்க்கத்தக்கவனாயின் பார்வையாந் தொழிற்கு விஷயனாகலிற் கடமுதலியவைபோல் கிரிசியனாவானெனில் மற்றொருவனாயின் மற்றொருவனால் காணப்படுவான். அத்துவிதீயனான ஆன்மா எப்படி ஒருவனாலறியப்படுவான் ஆதலால் தனது விஷயமான சாட்சாத்காரமுண்டாகுங்கால் சொரூபப்பிரகாசத்தாலேயே விளங்குகின்றானென்பார், 'அளவிடவொணாத நிமலன்' எனவும், அபரோட்சப்பிராந்தி பரோட்சஞானத்தால் நீங்காதாகலின் இவ்வான்மாவைப் புத்திமானான வித்துவான் குருவினுபதேசத்தாலும் சாத்திரத்தாலும் அறிந்திடினும் திரும்பவும் சாட்சாத்காரரூப ஆன்ம விஷயமான பிரஞ்ஞையை அனுசந்தானிக்க வேண்டுமென்பதுதோன்ற, 'நிமலனுருநாளு நினைகுவான்' எனவும், இதயமத்தியிலிருக்கின்ற ஜகத்காரணனான அபரிச்சின்ன ஆன்மாவே எல்லாவற்றையும் அதிஷ்டித்து ரக்ஷிக்கின்றானாகலிற் பிரம்மன் முதல் தம்பம் வரைக்கும் உள்ளவனைத்தையும் ஏவுகின்றவனாயும் எல்லாரும் தன்வசத்தே நிற்றலினால் எல்லாவற்றிற்குஞ் சுதந்திரனான அதிபதியாயுமாவானென்பார், 'அலகிலுலகேவல் செயவுரியனான வதிபதியுமாகும்' எனவுங் கூறினார்.

கருத்து—கருமத்தால் வசீகரிக்கப்பட்ட ஆன்மாவிற்கு உயர்வு தாழ்வான கருமங்களாலுண்டான ஏற்றந்தாழ்வுண்டாகும். இவனிருபாதிகனுய்ச் சர்வேச்வானுய்க் கருமத்தோடுங்கூடிய எல்லாவுலகினையும் ஏவும் வல்லமையுடையவனு யிருத்தலினுல் அவன் வசத்தனவான உயர்வுதாழ்வான கருமங்களுக்கு அவனிடத்தில் உயர்வுங்குறைவுமான விகாரங்களையுண்டாக்கும் வல்லமையில்லை. (17)

அவதாரிகை.

பரவித்தைக்குச் சாதனமான வேதாத்தியயன முதலியவைகளை இந்த ஆன்மாவை வேதாநுவசனத்தாலென்றது முதலானவாக்கியத்தால் நிரூபிக்கின்றூர்.

பூத பதிபூத பால னுலகூடு போக முடியாத தானவோர்
சேது வெனுமீச னுன வனைமேவ றேடி வழிபாடு மேவியே
வேத மொழியாலு வேள்வி பலவாலு மேவு தவதான பூசையே
யாதி வழியாலு மாதரவி னுலு மாயுமுனி ஞானி யாகுவான்.

இதன் பொருள்.

| | |
|---|---|
| பூதபதிபூதபாலன் | —பூதங்களுக்குப்பதியாயும் பூதங்களைக்காப்பவனுயும் |
| உலகூடுபோக முடியாததான | —ஜகங்களுக்கு விவஸ்தாபேதம் நீங்கமுடியாததாயுள்ள |
| ஓர் சேதுவெனும் ஈசனுனவனை | —ஒரு கரையாகிய பரமசிவனை |
| மேவல்தேடி வழிபாடுமேவி | —அடையவிரும்பி வணக்கம்பொருந்தி |
| வேதமொழியாலும் | —வேதவாக்கியங்களாலும் |
| வேள்வி பலவாலும் | —பலயாகங்களாலும் |
| மேவுதவதானபூசையே யாதி | —பொருந்தியதவம் தானம் பூசைமுதலான |
| வழியாலும் | —மார்க்கங்களாலும் |
| ஆதரவினுலும் | —பக்தியினுலும் |
| ஆயுமுனி ஞானியாகுவான் | —ஆராய்கின்ற முனியானவன் ஞானியாவான். |

பதசாரம்—கிரகமுதல் பிரம்மலோகம் வரைக்கும் அந்த அந்த மரியாதை அழியக்கூடாதென்று வருணுசிரம முதலான ஒழுக்கங்களால், எப்படி லௌகிகமான சேதுபேதிக்காததற்கு ஏதுவாகுமோ அப்படியே தரிக்கின்றுனுதலாலும் இந்தப் பரமசிவனுரைத்தருளிய சுருதிமிருதி சொல்லிய நெறியே அனுஷ்டிக்கின்றவனை அதனுலுண்டான ஞானத்தினுல் சமுசார சமுத்திரத்தில் நின்றுந் தாண்டச்செய்தலினுலும், 'உலகூடுபோகமுடியாத தானவோர்சேது' எனவும், மந்திரப் பிராமணரூபங்களான எல்லாவேதங்களையும் அத்தியயனஞ் செய்தலினுலும் என்பார், 'வேதமொழியாலும்' எனவும், சுருதிமிருதிகளால் சொல்லப்பட்ட துலாபுருஷன் முதலியவைகளைத் 'தானபூசை' எனவும், இவ்வாறு வேதாநுவசன முதலியவைகளால் ஆன்மாவை அறிதற்கு இச்சிக்கின்றுனென்று சுருதி

யானது அந்தக்கரணசுத்தி அடையும்பொருட்டு அறிய இச்சைகொண்டவர்களுக்குச் சாதனங்கூறிற்று. இங்ஙனமுண்டாகிய வித்துவான் சாந்தி தாந்தி முதலியவற்றாலும் கேள்வி முதலியவற்றாலும் உண்டானவித்தையினால் ஆன்மாவைச் சாட்சாத்கரிக்கின்ற மனனமுள்ளவனாகலின் யோகியாவான். அனாத்ம அஞ்ஞான மற்றொருவனுக்கு அனான்ம விஷயமான மனனமிருந்திடினும் கரும சம்பந்தமிருத்தலினால் அவன் முனியன்று கருமியே. ஆன்மவித்து கிருதகிருத்தியனாகலிற் கேவலம் முனியே. அங்ஙனமே சுருதியும் அவனையே அறிந்து முனியாவானென்று கூறிற்று என்பதுதோன்ற, 'ஆயுமுனி ஞானியாதுவான்' எனவும் கூறினர். ஈண்டுத் தவமென்றது அனசனரூபமான கிருச்சிர சாந்திராயண முதலியவைகளையன்று, கிரமமான உணவினையே கூறவேண்டும். உணவில்லாவிடில் ஜீவனத்திற்குக் கெடுதல்வருதலினால் வித்தையுண்டாகாது, ஆகலினென்க.

## அவதாரிகை.

எல்லாவற்றிற்கும் வசி ஈசானனென்றது முதலியவற்றால் விதிமுகமாக உபதேசிக்கப்பட்ட ஆன்மதத்துவம் சோபாதிகமென்னுஞ் சங்கையையொழிப்பதற்கு நிஷேதமுகமாகச் சுருதியானது அந்த ஆன்மா இதல்ல இதல்லவென்றது முதலியவற்றால் வாக்குமனங்களுக்கெட்டாத ஆன்மசொரூபத்தை உபதேசித்தது. அதன்பொருளை ஈண்டு உதாரணத்துடன் விரித்துக் கூறுகின்றார்.

## வேறு.

குறியது வாதலாற் குறிக்க வும்படா
னிறுவது மிலனுடம் பென்று மின்மையாற்
செறிவது பற்றிலன் றீண்ட லின்மையா
லறியிலவ் வறிஞனொன் றோடு மார்ப்புறான்.

## இதன் பொருள்.

குறி அதுவாதலால் —ஆன்மாவே லட்சியப்பொருளாகையால்
குறிக்கவும்படான் —குறிப்புக்கும் அடங்கமாட்டான்
உடம்பு என்றுமின்மையால் —தேகம் எக்காலத்துமின்மையால்
இறுவதுமிலன் —அழிவுமில்லாதவனாவான்
தீண்டலின்மையால் —தீண்டுதலில்லாமையால்
பற்று செறிவதுமிலன் —ஒரு பற்றும் நெருங்குதலில்லாதவனாவான்
அறியில் அவ்வறிஞன் —உணருங்கால் அந்தஞானியானவன்
ஒன்றோடுமார்ப்புறான் —ஒன்றோடுங் கட்டுப்படமாட்டான்.

**கருத்து**—திரிசியமான துவிதங்களெல்லாவற்றையும் இதல்ல இதல்லவென்று நிஷேதித்தலினால் ஒருபாதியுமில்லாத நிஷேதத்திற்கு அவதியான ஆன்மா எப்போதும் அழிவில்லாதவனெனவும் இவனுக்கு அன்னியனாக ஒரு கர்த்தா பரமார்த்தமாக இல்லாமையால் வித்தை கருமமென்னுமிவை முதலிய எல்லா

விவகாரங்களும் செய்கின்றவனெனவும், இவ்வான்மா கைகால் முதலிய இந்திரியங்களால் கிரகிக்கப்படாத இயல்பினையுடையான் இந்திரியங்கள் ரூபமுதலியவைகளையுடைய பொருள்களையே விஷயீகரிக்கின்றன வாகலினெனவும், அத்தியஸ்தப் பிரபஞ்சத்தினால் வசீகரிக்கப்படாத சொரூபனெனனவும், போக்குவரவுடைய அவயவிகளாகிய திரிசியத்தின் சம்பந்தத்தால் அதிஷ்டானனான ஆன்மா விகாரியாகான், ஓரிடத்திலுந் தனதென்று அபிமானமில்லாமையின் எப்படிக் கானல்நீர் பூமியை நனைக்காதோ அப்படிச் சம்பந்தத்திற்கு ஏதுவான திரிசியம் பொய்யாதலால் உண்மையாக விகாரத்தை யுண்டுபண்ணாதெனவுமுணர்க. (19)

## அவதாரிகை.

அந்தவிது இருக்கினாற் கூறப்பட்டதென்று சுருதி தன்னால் பிரதிபாதிக்கப்பட்ட பொருளினது சம்வாதமாக உதாகரிக்கின்ற மந்திரத்தைக் கூறுகின்றார்.

தத்துறு வினையினா லுயர்வு தாழ்வுறா
வித்துவான் மகிமையே விளம்பி னித்தமா
மத்தகு சொரூபத்தை யறிந்து பாவமா
மித்துயர் வினையொடு மென்றுஞ் சேர்வுறான்.

## இதன் பொருள்.

விளம்பில் —சொல்லில்
தத்துறுவினையினால் —கெடுதலுறும் புண்ணியபாபமான கருமத்தால்
உயர்வு தாழ்வுறா —விருத்திக்ஷயங்களான விகாரத்தையடையாத
வித்துவான் மகிமையே —ஆன்மஞானியினது மகிமையே
நித்தமாம் —நித்தியமாகும்
அத்தகு சொரூபத்தையறிந்து —(ஆதலாலே ஒருவன்) மேற்சொல்லிய நித்திய மகிமாரூபமான ஆன்மாவையறிந்து
பாவமா மித்துயர்வினையொடும்—பாபமாகிய இந்தத் துன்பக் கருமத்தினோடும்
என்றுஞ் சேர்வுறான் —எக்காலத்துஞ் சேராதவனாவான்.

**பதசாரம்**—அன்னியங்களான மகிமைகள் கருமத்தால் சாதிக்கப்பட்டனவாகலின் அனித்தியங்களாகும். விகாரத்திற் கேதுவானவைகளோடுஞ் சம்பந்தமில்லையென்று நிரூபிக்கப்பட்டிருத்தலாலும் இயல்பாகவே நிர்விகாரமாதலாலும் இந்தமகிமையே நித்தியமென்பார், '**வித்துவான் மகிமையே விளம்பினித்தமாம்**' எனவும், சம்சாரத்திற்கேதுவாம் புண்ணியபாவங்களான கருமங்கள் வித்தையால் நீங்குமென்பதுதோன்ற '**பாவமா மித்துயர் வினையொடுமென்றுஞ் சேர்வுறான்**' எனவும் கூறினார். பாவம்போல் புண்ணியமும் சம்சாரத்திற்கு ஏதுவாதலில் பாவமென்னும் ஒன்றினைக்கொண்டு இரண்டுங் கூட்டப்பட்டன. (20)

அவதாரிகை.

பரவித்தை உண்டாவதற்குப் பகிரங்கசாதனங்களான வேதாநுவசன முதலியவைகளை ஈண்டு விளக்கியும் சங்கிரகித்தும் உபதேசிக்கப்பட்டன. இனிச் சுருதியால் கூறப்பட்ட அந்தரங்க சாதனங்களையும் விளக்கிக் கூறுகின்றார்.

சத்தியத் தான்மிகு சாந்தி தாந்தியா
லெத்தொழி லும்மிசை வற்றி ருத்தலாற்
பத்தியா லிறைவனைப் பண்ணும் பூசையாற்
சுத்தவே தாந்த மெய்த் துணிவு தோன்றுமால்.

இதன் பொருள்.

| | |
|---|---|
| சத்தியத்தால் | —சத்தியத்தினாலும் |
| மிகுசாந்தி தாந்தியால் | —மிகுந்தசாந்தி தன்னடக்கங்களாலும் |
| எத்தொழிலும் | —எந்தக்கருமங்களும் |
| இசைவற்றிருத்தலால் | —பொருந்தலற்றிருத்தலினாலும் |
| பத்தியால் இறைவனை | —பக்தியினாலும் பரமசிவனை |
| பண்ணும்பூசையால் | —செய்யும் பூஜாவிசேஷத்தினாலும் |
| சுத்த வேதாந்த மெய்த் துணிவுதோன்றும் | பரிசுத்தம்பொருந்திய வேதாந்தத்தின் உண்மையான நிச்சயஞானம் உண்டாகும். |

**பதசாரம்**—சகல யோகங்களுக்கும் அங்கமான மெய்யுரையாலும் இந்திரிய வியாபாரங்களின் ஒழிவினாலும் மனோவிஷயங்களான ஆசைகள் நீங்குதலாலும் லோகாந்தரங்களுக்குச் சாதனங்களாய் வித்தைக்கு விரோதிகளான கருமத்தியாகத்தினாலுமென்பார், '**சத்தியத்தான் மிகுசாந்தி தாந்தியா லெத்தொழிலும் மிசைவற்றிருத்தலால்**' எனவும், கேட்கத்தக்கது மனனிக்கத்தக்கதென்றது முதலிய வேதாந்தங்களால் பிரதிபாதிக்கப்பட்ட வித்தைக்கு ஏதுவான சிரவண மனன முதலியவைகளாலுமென்பார், **சுத்த வேதாந்தம்**' எனவும் கூறினார். (21)

அவதாரிகை.

இங்ஙனம் கூறியவாறே சாபால முதலிய உபநிடதங்களில் பிரதிபாதிக்கப்பட்ட விபூதிதாரண சிவபூஜை முதலியவைகளும் சிவப்பிரீதிகரங்களாகலின் பரவித்தை உண்டாவதற்கு அந்தரங்க சாதனங்களாகுமென்று கூறுகின்றார்.

வேளுடல் பொடிபட விழித்த விண்ணவற்
காளெனு மன்பினா லணியு நீற்றையுத்
தூளனம் பண்ணலாற் றெழுது போற்றலான்
மாளுதல் பிறத்தலாம் வழியை மாற்றலாம்.

இதன் பொருள்.

| | |
|---|---|
| வேளுடல் பொடிபட | —மன்மதனது சரீரம் பொடியாகும்படி |
| விழித்த விண்ணவற்கு | —நெற்றிக்கண்ணை விழித்தெரித்த சிவபெருமானுக்கு |
| ஆளெனும் அன்பினால் | —அடிமையென்னும் பக்தியினால் |
| அணியுநீற்றை | —எல்லோராலும் அணியத்தக்க விபூதியை |
| உத்தூளணம் பண்ணலால் | —உடம்புமுழுதும் பூசுவதாலும் |
| தொழுது போற்றலால் | —வணங்கிப் போற்றுவதினாலும் |
| மாளுதல் பிறத்தலாம் | —செனனமரணமாகிய |
| வழியைமாற்றலாம் | —மார்க்கத்தை ஒழித்துவிடலாம். (22) |

இதுவுமது.

மெய்யுறு மன்பினன் மேவு சாதன
மையமில் ஞானமுண் டாக்கு மாக்கினால்
வையக மியாவையு மன்னு போதமாய்க்
கையுறு கூவிளங் கனியிற் காணலாம்.

இதன் பொருள்.

| | |
|---|---|
| மெய்யுறுமன்பினல் | —(இவ்வாறு)உண்மையாகிய பிரேமையினால் |
| மேவுசாதனம் | —பொருந்துகின்ற சாதனங்கள் |
| ஐயமில் ஞானமுண்டாக்கும் | —சந்தேகமில்லாத ஞானத்தையுண்டுபண்ணும் |
| ஆக்கினால் | —(அவ்வாறு ஞானத்தை) உண்டாக்கினால் |
| வையகமியாவையும் | —எல்லாச் சகங்களையும் |
| மன்னுபோதமாய் | —நிலைபெற்ற ஞானசொரூபமாகவே |
| கையுறுகூவிளங்கனியில் | —கரத்திலிருக்கின்ற வில்வக்கனிபோல |
| காணலாம் | —பார்க்கலாம். (23) |

அவதாரிகை.

சிவஞானிக்கு என்ன உண்டாகுமென்ற சங்கைக்குச் சமாதானமும், நான் தேசிகனுக்கு விதேகத்தையும் என்னையும் கொடுக்கின்றேனென்று சுருதியினால் தன்னோடும் எல்லாப்பொருளையும் பிரம்மோபதேசஞ்செய்கின்ற குருவின்பொருட்டுக் கொடுக்கத்தக்கதென்று உபதேசித்த அதன்பொருளையுங் கூறுகின்றார்.

வேறு.

மேவுபாவம் வெல்லாதுமெஞ் ஞானியை வென்றிடு மிவனெல்லாப்
பாவமானது மாதலால் வேதனம் பண்ண வல்லவனை
தேவதேவனாந் தேசிகன்றனக்கு முன் செய்பொருளுடலாவி
யீவதேகட னிறைவ வெம்பிரானென வேத்திமெய்யிதயத்தால்.

### இதன் பொருள்.

மேவுபாவம் —பொருந்துகின்ற பாவமானது
மெய்ஞ்ஞானியை வெல்லாது—உண்மைஞானியை செயிக்காது
இவன் எல்லாப்பாவமானதும் —இந்தஞானி பாவமாகிய அனைத்தையும்
வென்றிடும் ஆதலால் —செயிப்பான் ஆகையால்
வேதனம் பண்ண —ஒருவனுக்கு ஞானத்தை உண்டாக்க
வல்லவனான —வல்லவனாகிய
தேவ தேவனுந்தேசிகன்றனக்கு—தேவ தேவனாகிய குருவுக்கு
முன் செய்பொருள் —முன்புதொழிலால் சம்பாதிக்கப்பட்ட பொருள்களையும்
உடல்ஆவி —தேகத்தையும் உயிரையும்
மெய்யிதயத்தால் —உண்மையானமனத்தினால்
இறைவ எம்பிரானென —இறைவனே எம்பெருமானே என்று
ஏத்தி ஈவதேகடன் —துதித்துக்கொடுப்பதே கடனாகும்.

கருத்து—பிரம்மநிஷ்டர்களிடத்தில் செய்யத்தக்கதாயும் செய்யத்தகாததாயுமான புண்ணியபாபங்களுக்குத் தாண்டுந்தன்மையும் தபிக்கச்செய்யுந்தன்மையுமில்லை. அங்ஙனமே சுருதியும் இந்தக் கிருதா கிருதங்களான புண்ணியபாபங்களிரண்டும் இவனை அதிக்கிரமிக்காதென்று கூறிற்றென்பதாம், (24)

### அவதாரிகை.

அத்தன்மையனான குருவைத் தாய்தந்தையாகக்கருதி ஒருக்காலும் துரோகஞ்செய்யக்கூடாதென்னும் இந்தப்பொருளைப் பிரதிபாதிக்கின்றதான யாஸ்கரால் உதாகரிக்கப்படும் மந்திரத்தை ஈண்டுச் சங்கரகித்து விளக்கிக் கூறுகின்றார்.

மாயவன்புலத் தெழாவகை தீர்ந்ததன் வாய்மையாலிடரின்றிப்
பாயவின்னமு திருசெவித் துளைவழி பாய்ச்சினானன்பதுமத்தா
டாயுந்தந்தையுஞ் சுற்றமுமற்றுநற்றனமுமென்றனைவான்றன்
காயமுள்ளள வும்புகழ்ந்தேத்துவான் கற்றதோர் கலையாலே.

### இதன் பொருள்.

மாயவன்புலத்து —தீங்காகியவலிய ஒலிமுதலிய ஐம்புலங்களில்
எழாவகை —எழும்பிச்செல்லாதபடி
தீர்ந்த தன்வாய்மையால் —அடக்கிய தனதுஉபதேசத்தால்
இடரின்றிப்பாய —துக்கமில்லாமற் பாயும்படி
இன்னமுது —இனியசொரூப அமிர்தத்தை
இருசெவித் துளைவழி —இரண்டு செவித்துளைகளின்வழியாக
பாய்ச்சினான் —செலுத்திய (தேசிகனது)

பதுமத்தாள் தாயும் தந்தையும்—தாமரைபோன்ற திருவடிகளே மாதாவும் பிதாவும்
சுற்றமும் நற்றனமும் —பந்துக்களும் நல்லநிதிகளும்
மற்றும் —இன்னும்வேண்டிய அனைத்தும்
என்றடைவான் —என்று சரணமடைகின்றவன்
தன்காயமுள்ளளவும் —தன்சரீரமுள்ளவரைக்கும்
கற்றதோர்கலையால் —தான்கற்ற ஒப்பில்லாதகல்வியினால்
புகழ்ந்தேத்துவான் —புகழ்ந்து துதிக்கக்கடவன்.

**பதசாரம்**—லௌகிகமாய்க் காதுகுற்றுதல் துக்கத்துக்கேதுவாகலின் அதனை மறுத்து 'இடரின்றிப்பாயவின்னமுதிநசேவித்துளேவழிபாய்ச்சினான்' என்றார்.

**கருத்து**—ஆன்மா சொரூபபூதனாயினும் முன் அஞ்ஞானமலத்தால் ஆவகரிக்கப்பட்டு நஷ்டமானவன்போலிருந்தான். அதன்பின் குருவின் உபதேசத்தால் கண்டத்திலிருக்கும் ஆபரணம்போல மறுபடி அடையப்படுகின்றான்என்றுணர்க.

அவதாரிகை.

இந்தமந்திரத்தின் பொருளையே மீண்டும் விரித்துக் கூறுகின்றார்.

வேறு.

தேசிகன்றன் திருமேனி சிந்தை செய்யச்
சிவனைச்சிந் தித்தானுஞ் செம்பொற் றாளிற்
பூசனைசெய் திடவெங்கு மாகி நின்ற
பூரணனை யினிதாகப் பூசித் தானும்
நாசமிலாச் சிவனும நவின்றா னாண்ட
நாயகன்றன் றிருநாம நவின்றா னாகி
லீசனையே யிகழ்ந்தானுங் கண்ணாற் காண
வெழுந்தருளுந் திருக்கோல மிகழ்ந்தா னாகில்.

இதன் பொருள்.

தேசிகன்றன்திருமேனி —குருவினது திவ்விய சரீரத்தை
சிந்தைசெய்ய —தியானம்பண்ணிடில்
சிவனைச் சிந்தித்தானும் —சிவபெருமானையே தியானித்தவனாவான்
செம்பொற்றாளில் —அவரது செவ்விய பொன்னடியில்
பூசனைசெய்திட —அருச்சித்திடில்
எங்குமாகிநின்ற பூரணனை —எவ்விடத்திலும் பிரகாசிக்கின்ற பரிபூரணனை
இனிதாகப் பூசித்தானும் —அன்புடன் பூசித்தவனாவான்
ஆண்டநாயகன்றன் —தன்னைத்திருவருளால்ஆண்ட குருமூர்த்தியினது
திருநாமம் நவின்றானாகில் —திருநாமத்தைச் சொல்லுவானேல்

| | |
|---|---|
| நாசமிலாச் சிவனுமம் | —அழிவற்ற சிவநாமத்தை |
| நவின்றுன் | —சொன்னவனுவான் |
| கண்ணுற்கான | —கண்ணுலும் பார்க்கும்படி |
| எழுந்தருளுந் திருக்கோலம் | —எழுந்தருளுகின்ற திருக்கோலத்தை |
| இகழ்ந்தாலுகில் | —தூஷிப்பானுகில் |
| ஈசனேயே இகழ்ந்தானும் | —சிவனேயே தூஷித்தவனுவான். (26) |

**கருத்து**—பிரத்தியட்சமாக எழுந்தருளிய குருவை தியானம்பண்ணிடில் அத்தியானம் எவ்விடத்திலும் நீக்கமறப்பிரகாசிக்கின்ற பரிபூரணனுகிய ஈசனேச் சாரும். அங்ஙனமே குருவை இகழ்ந்திடில் அது ஈசனே இகழ்ந்ததொக்குமென்ப.

## அவதாரிகை.

ஆசானது திருவடியைச் சார்ந்தவனே அல்லற்படுகுழியைவிட்டு நீங்கி அனைத்துந்தானுய் நிறைந்த பரம்பொருளாகி விளங்குகிறுன் என்று கூறுகின்றுர்.

ஆதலினுல் வேதவே தாந்தத் துண்மை
யறிவானுய் முழுதுமறிந் தடங்கி னுன்றன்
பாதமடை வான்முத்தி வேண்டி னல்லற்
பரப்பையெலாங் கைவிடுவான் பரிவோ டுங்கட்
கோதுவதிற் கிடப்பதிலை யருளா லெல்லா
மோதினே னிப்பொருள்மெய் யுணர்ந்தோன் செய்யு
நீதிபிழை நினைந்திடவு மில்லை யெங்கும்
நிறைந்தபரம் பொருளாகி நிகழாநின்றுன்.

## இதன் பொருள்.

| | |
|---|---|
| ஆதலினுல் | —ஆகையால் |
| வேதவேதாந்தத்துண்மை | —வேதவேதாந்தங்களினுண்மையை |
| அறிவானுய் முத்திவேண்டின் | —அறிபவனுகி முத்தியைக்கருதிடில் |
| முழுதுமறிந்து | —அனைத்தையும்அறிந்து |
| அடங்கினுன்றன் | —தன்னிலேயடங்கிய தேசிகரது |
| பாதமடைவான் | —திருவடியைச்சேர்வான் |
| அல்லற்பரப்பையெலாம் | —(அவனே) விசாலமாகிய துக்கங்களையெல்லாம் |
| கைவிடுவான் | —விட்டுநீங்குவான் |
| பரிவோடும் | —பிரியத்துடனே |
| உங்கட்கோதுவதில் | —உங்களுக்குச்சொல்லவேண்டிய விஷயத்தில் |
| கிடப்பதிலை | —பாக்கியொன்றுமில்லை |
| அருளால் | —(சிவபெருமானது) திருவருளால் |

எல்லாமோதினேன் —அனைத்தையும் உபதேசித்தேன்
இப்பொருள் மெய்யுணர்ந்தோன்—இந்தப்பொருளினது உண்மையை அறிந்தவன்
செய்யும் நீதிபிழை —செய்யத்தக்க விதியையும் விலக்கையும்
நினைந்திடவுமில்லை —கருதவேயில்லை
எங்கும்நிறைந்த பரம்பொருளாகி—எவ்விடத்தும் நிறைந்த பிரம்மசொரூபமாகி
நிகழாநின்றான் —விளங்குகின்றான். (27)

அவதாரிகை.

எவ்வுபாயத்தினாலும் அடையமுடியாத அப்பிரம வஸ்துவை அடைதற்கு ஆசானது கிருபையை அடைய முயற்சிப்பதே அத்தியாவசியமென்று கூறுகிறார்.

வேறு.

ஒருவரா லொருவிரகி லுணர்வொணா ததுபரம
குருவினா லறியவரு மதனைநேர் தருகுரவ
னருளையா தொருவழியி லடையலா மதுமுயல்கை
கருமமா மெனநிகரில் கருமநான் முகனருளும்.

இதன் பொருள்.

ஒருவரால் ஒருவிரகில் —ஒருவரால் ஒருபாயத்தினாலும்
உணர்வொணாதது —அறியக்கூடாத அந்தவஸ்து
பரமகுருவினால் அறியவரும் —உயர்ந்த தேசிகரால் அறியக்கூடும்
அதனை நேர்தரு —அந்தச்சொரூபத்தை அபரோட்சமாகத்தருகின்ற
குரவனருளை —தேசிகரது கிருபையை
யாதொரு வழியிலடையலாம் —எந்த மார்க்கத்தினால்பெறலாமோ
அதுமுயல்கை —அந்தமார்க்கத்தில் முயற்சிசெய்வது
கருமமாமென —நல்லதொழிலாகுமென்று
நிகரில் —ஒப்பில்லாத
கரும நான்முகன் —சிருட்டித்தொழிலைச் செய்கின்ற பிரம்மதேவர்
அருளும் —சொன்னார். (28)

உஷஸ்தப் பிராமணமுரைத்த அத்தியாயம் முற்றிற்று.



ஆகத் திருவிருத்தம் 461.

## பதினொன்றாவது

## கடவல்லியோடு சுவேதாச்சுவதரமும் உரைத்த அத்தியாயம்.

### அத்தியாய அவதாரிகை.

இவ்வாறு பிரகதாரணிய உபநிடதத்திற்குப் பிரமான்ம ஐக்கிய பரத்தன்மை உரைசெய்து கதிசாமானியந் தெரிவிக்கவேண்டி இவ்வத்தியாயத்தால் கடவல்லி உபநிடதத்தின் தாற்பரியத்தையும் விளக்கிக்கூறத் தொடங்குகின்றார்.

பன்னுநன் குருவெனும் பரம்ப ரன்றிறஞ்
சொன்னதன் மையையெலாந் தோன்ற நானுமக்
கின்னமுங் கூறுவ னெனவி யம்பினா
னன்னவா கனத்தினா னமரார்க் கன்பினால்.

### இதன் பொருள்.

| | |
|---|---|
| பன்னுநன் குருவெனும் | —சொல்லுகின்ற சற்குருவாகிய |
| பரம்பரன்றிறம் | —பரமசிவத்தின் சத்தியை |
| சொன்னதன்மையையெலாம் | —பகர்ந்த தன்மையனைத்தையும் |
| தோன்ற நானுமக்கு | —தெரியும்படி நான் உங்களுக்கு |
| இன்னமுங் கூறுவனென | —இன்னமுஞ் சொல்வேனென்று |
| அன்னவாகனத்தினான் | —அன்னவாகனத்தையுடைய பிரமன் |

அமரர்க்கு அன்பினால் இயம்பினான்—தேவர்களுக்குக் கிருபையினால் சொன்னார்.

### அவதாரிகை.

கடவல்லி உபநிஷதத்தில் முன்னிருக்கும் மந்திரங்கள் வித்தையைத்துதிக்கும் பொருட்டாகலின் அதுமுன்னமே சொல்லிக்கிடந்தமையால் அவற்றைக் கூறாது வித்தியாஸ்வரூபத்திற்கு உபயோகமான தூர்த்தரிசனமென்றது முதலிய மந்திரங்களின் பொருளை ஈண்டுவிளக்கிக் கூறுகின்றார்.

### வேறு.

குகையி லிருப்ப தாய்மிகவுங் கூட மாகி யெவ்விடத்துந்
திகழ்வ தாகி யொருவர்க்குந் தெரியா தாகுஞ் சிவனுருவ
மிகவு நன்றாய் மேலாமவ் வுருவ மெய்ம்மை விளங்குமவன்
சுகதுக் கங்க டோர்ந்துவெறுஞ் சுகசொ ரூப னாகின்றான்.

### இதன் பொருள்.

| | |
|---|---|
| குகையில் இருப்பதாய் | —அந்தக்கரணமென்னுங் குகையில் இருப்பதாயும் |
| மிகவுங் கூடமாகி | —மிகவும் ரகசியமாயும் |
| எவ்விடத்துந் திகழ்வதாகி | —எங்கும் பிரகாசிப்பதாயும் |

| | |
|---|---|
| ஒருவர்க்கும் தெரியாதாகும் | —ஒருவருக்கும் தெரியாததாயுமுள்ளது |
| சிவனுருவம் | —சிவனுடையரூபம் |
| மேலாம் அவ்வுருவமெய்ம்மை | —மேலான அந்தச் சொரூபத்தின் உண்மை |
| மிகவும்நன்ருய் விளங்குமவன் | —மிகவுந்தெளிவாய் விளங்கும்படியடைந்தவன் |
| சுகதுக்கங்கள்தீர்ந்து | —இன்பதுன்பங்களற்று |
| வெறும்சுக சொரூபனுகின்ருன் | —கேவலம் ஆனந்தசொரூபனுகப்பவிக்கின்ருன். |

**கருத்து**—அறியப்பட்ட ஆன்மதத்துவம் நிரதிசயமாகலின் மகிழ்வும் துன்பமுமான இவற்கேதுவாகிய உயர்வு தாழ்வுகள் அங்ஙனமுண்டாகாவென்றுணர்க. (2)

அவதாரிகை.

தருமத்தைக்காட்டிலும் அன்னியமென்ற மந்திரப் பொருள் கூறுகின்ருர்.

தருமா திகட்கும் பூதங்க டமக்கும் வேற தாயாதொன்
றருமா மறைக ளறைகின்ற தரிய பிரம சரியாதி
சரியா நின்ருர் யாதுபெற வதுதற் பரமக் கரமதனைத்
திரமா யறியு மவன்சிந்தை செய்த தெல்லாஞ் சித்திக்கும்.

இதன் பொருள்.

| | |
|---|---|
| தருமாதிகட்கும் | —தருமாதரும முதலியவைக்கும் |
| பூதங்கடமக்கும் வேறதாய் | —சென்றகால முதலிய திரிகாலங்களும் வேருக |
| யாதொன்று | —எது |
| அருமாமறைகள் | —அருமையாகிய பெரியவேதங்கள் |
| அறைகின்றது | —சொல்லுகின்றதோ |
| அரியபிரமசரியாதி | —அரிய பிரம்மசரியாதி ஆச்சிரமங்களை |
| யாதுபெறச்சரியா நின்ருர் | —எதனையடைதற்கு ஆசரிக்கின்ருர்களோ |
| அது தற்பரம் | —அதுவே தற்பரமாயும் |
| அக்கரம் | —அட்சரப்பொருளாயும் (விளங்குகின்றது) |
| அதனை | —அந்தப்பொருளை |
| திரமாயறியுமவன் | —ஸ்திரமாக அறிந்தவன் |
| சிந்தைசெய்ததெல்லாம் | —கருதியவனைத்தும் |
| சித்திக்கும் | —சித்தித்திடும். |

**கருத்து**—'தருமாதிகட்கும்' என்றதனல் சுருதிகூறிய அதருமமும் பெறப்பட்டது. '**அக்கரமதனைத் திரமாயறியுமவன் சிந்தைசெய்ததெல்லாஞ் சித்திக்கும்**' என்றதனல், வடநூலில் கூறியபடி இந்தப்பிரணவரூபமான அட்சரமே ஹிரண்ணியகருப்பனென்னும் பரப்பிரம்மமும், அப்படியே ஒருபாதியுமில்லாத சச்சிதானந்த ஏகாரசமான பிரம்மமும் எனப் பிரணவத்திற்கு இரண்டு குறிப்புமிருந்த

லால் தாதான்மியங்கூறப்பட்டது. ஆதலால் உபாசிக்கத்தக்கதாயும் அறியத்தக்கதாயுமுள்ள பிரம்மங்களைத் தன்னுடைய அதிகாரத்திற்குத் தகுந்தபடி அறிந்தவன் அடையத்தக்க பிரம்மத்தையேனும் அறியத்தக்க பிரம்மத்தையேனும் எதனை இச்சிக்கின்றானோ அதனை அடைகின்றானென்பதும் பெறப்பட்டது. இவ்வாறே வருஞ்செய்யுளில் ஆலம்பனமென்றவிடத்திலுங் கூட்டிக்கொள்க. (3)

## அவதாரிகை.

பிரணவத்தால் அறியத்தக்க பரப்பிரம்மஸ்வரூபம் இது என்று கூறுகின்றார்.

அந்தப் பரமே யெப்பொருட்கு மாலம் பனமா வதுவதனைச்
சிந்தைக் கேறத் தெளிவுற்றான் செனியான் மரியா னொருதிசையில்
வந்துற் றிலனோர் வடிவுமில னதனால் வரவு போக்காகு
மிந்தத் தொழில்க ளொன்றுமில னெங்குந் தானா யிருக்கின்றான்.

## இதன் பொருள்.

அந்தப்பரமே எப்பொருட்கும்—அந்த அட்சரப்பொருளே சகலவஸ்துக்களுக்கும்
ஆலம்பனமாவது —பற்றுக்கோடாகும்
அதனைச் சிந்தைக்கேற —அதனைச் சிந்தையில் ஏறும்படி
தெளிவுற்றான் —தெளிவாக அறிந்தவன்
செனியான் மரியான் —பிறவான் சாகான்
ஒருதிசையில் வந்துற்றிலன் —ஒருதிசையிலும் வந்துபொருந்தமாட்டான்
ஓர் வடிவுமிலன் —(தனக்கு)ஒருவடிவமுமில்லாதவனாவான்
அதனால் வரவுபோக்காகும் —ஆகையால் கமனா கமனமாகிய
இந்தத் தொழில்களொன்றுமிலன்—இந்தப் போக்குவர வொன்றுமில்லாதவனாவான்
எங்குந் தானாயிருக்கின்றான் —எவ்விடத்திலும் தானாகவே விளங்குகின்றான்

**பதசாரம்**—ஜநியான் மரியான்' என்றதனால், ஆதியும் அந்தமுமாகிய பாவவிகாரங்கள் இன்றென்று பொருள்படுதலின் அதற்குமத்தியில்வரும் விகாரங்களும் கமனா கமனமாகிய நிகழ்வுகளும் இல்லாதவனென்பது பெறப்பட்டது. கெடுதலில்லாத ஞானஸ்வபாவனாதலாலும், துவிதம்போல் ஒருகாரணத்தால் உண்டாகானென்பார், '**ஒருதிசையில் வந்துற்றிலன்**' எனவும் கூறினார்.

**கருத்து**—ஆகாச முதலிய பொருள்களிருக்கின்றன ஆன்மாவினிடத்தில் நின்றும் ஆகாசமுண்டாயிற்று என்ற சுருதியாலென்னில், அச்சுருதிக்கும் மாயையின் வசத்தால் துவிதப்பிரபஞ்சம் அத்துவிதமான பிரம்மத்தினிடத்தில் அத்தியாசிக்கப்பட்டதென்று தாற்பரியமாகலின் வேறாக ஒருபொருளும் இல்லை. (4)

அவதாரிகை.

உலகத்தில் ஒரு ஆன்மா மற்றொரு ஆன்மாவினைக் கொன்றவனாகக் காணப் படுதலில் கொன்றவனும் கொல்லப்படுபவனுமுள்ள இரண்டான்மாக்கள் எல் லாப் பிராணிகளுக்கும் சம்மதமாகுமென்று சங்கித்துக் கூறுகின்றார்.

வேறு.

பொன்றவுட லைத்துணிசெய் போதுமிறை பொன்றான்
கொன்றிடுத லுங்கொலையெ னுந்தொழிலு மில்லா
னின்றுபெரு மைச்சிறுமை யிற்பெருகி நுட்பா
யென்றுமித யக்குகையி லேயிலகு கின்றான்

இதன் பொருள்.

பொன்றவுடலைத் துணிசெய்போதும்—அழியும்படி யுடம்பை வெட்டினபோதிலும்
இறைபொன்றான் —அட்சரப்பொருளாகிய ஆன்மா அழியமாட்டான்
கொன்றிடுதலும் —ஒருவரைக் கொல்லுதலும்
கொலையெனும் —ஒருவரால் தன்னைக்கொலைசெய்தலென்னும்
தொழிலுமில்லான் —தொழிலுமில்லாதவன்
பெருமை பெருகி —பெரியதில் பெரியதாகியும்
சிறுமையில் நுட்பாய்நின்று —சிறியதில் சிறிதாயும்நின்று
என்றுமிதயக்குகையில் —எக்காலத்தும் அந்தக்கரணமாகிய குகையில்
இலகுகின்றான் —விளங்குகின்றான்.

**பதசாரம்**—இவ்வான்மா நிருவிகாரனாகலிற் கிரியாசிரயத்தன்மையும் அதற்கு விஷயமாந்தன்மையும் அவனுக்குப்பொருந்தாது. அங்ஙனமறிந்தவர்கள் அறியாத வர்களே எனக் 'கொன்றிடுதலுங் கொலையெனுந் தொழிலுமில்லான்' என்றார்.

**கருத்து**—உலகத்திலுள்ள அணுமகத்துக்களான பொருள்களெல்லாம் இந்தக் காரணபூதமான ஆன்மாவினால் சத்தையுடையனவாகும். ஆன்மாவிற்கு அத்தன் மையும் இரண்டிடத்திலும் வியாபகத்தன்மையிருத்தலினாலென்க. (5)

இதுவுமது.

அண்ணியனு மாகுமதி தூரியனு மாகும்
வண்ணமில தான மகிமா வருளி னாலே
கண்ணினிகழ் வாமலது காணவெளி தோதான்
திண்ணமுற நானறிவன் வேறுதெளி வாரார்.

இதன் பொருள்.

அண்ணியனுமாகும் —சமீபத்திலிருப்பவனுமாவான்
அதிதூரியனுமாகும் —அதிதூரத்திலிருப்பவனுமாவான்

| | |
|---|---|
| வண்ணமிலதான மகிமா | —இவ்வண்ணமென்று குறிக்கக்கூடாத மகிமா ரூபனுன அந்த ஆன்மாவானவன் |
| அருளினுலே | —சிவப்பிரசாதத்தினுலே |
| கண்ணினிகழ்வாம் அலது | —ஞானநேத்திரத்திற்கு விளங்குபவனேயன்றி |
| காணவெளிதோ | —காண்டற்கெளியவனே |
| திண்ணமுற நானறிவன் | —திடமாக நானறிவேனேயன்றி |
| வேறுதெளிவாரார் | —மற்று இயாவர்தெளிபவர். |

பதசாரம்—விருத்த கர்மயோகம் பரிச்சின்னமான பொருளுக்குக்கூடாது. அபரிச்சின்னனுன பிரத்தியகான்மா மகாதேவனுய்ச் சருவகதனுதலால் அவனிடத்திலிருத்தல் போதல் சயனஞ்செய்தல் முதலியவை ஒன்றற்கொன்று விரோதமாயிருக்கினும் அத்தியாசிக்கப்பட்டதாகலின் ஏககாலத்தில் அந்தத் தோற்றங் கூடுமென்பார், 'அண்ணிய னுமாதுமதிதூரியனுமாதும்' எனவும், ஆன்மா பிரமாதிஸ்தம்பபரியந்தம் உற்பத்தியான எல்லாப்பிராணிகளுடைய இதயத்தில் ஆன்மரூபமாக இருந்திடினும் காணப்பட்டதாயும் காணப்படாததாயுமான விஷயங்களில் இச்சையில்லாத புருஷன் விஷயபோகத்தாலுண்டான தோஷமில்லாதவனுய்ச் சிவப்பிரசாதத்தால் அனவச்சின்னப் பிரம்மரூபமான பிரத்தியகான்மாவின் மகிமையை எப்போது அபரோட்சமாக அறிகின்ருனே அப்போது சம்சார பந்தத்தினின்றும் முக்தனுவானன்றி மற்றயர்க்கு அரிதெனை, 'மகிமாவருளினுலே கண்ணினிகழ்வாமலது காணவெளிதோதான்' எனவும், கூறினர். 'திண்ணமுற நானறிவன் வேறு தெளிவாரார்' என்றது நாசிகேதாவுக்குத் தருமராஜர்கூறியது.

இதுவுமது.

நின்றுமுட ரோறுமுட லின்றிநிகழ் வானுய்ப்
பொன்றுமத னேடுமொரு பொன்றுத லுருனு
யென்றுநிலை யாயுலக மெங்குமொரு தானு
மொன்றையறி வானிடர்க ளொன்றிலுழ லானுல்.

இதன் பொருள்.

| | |
|---|---|
| உடல்தோறும் நின்றும் | —சரீரங்கள்தோறும் இருந்தும் |
| உடலின்றி நிகழ்வானுய் | —சரீரமில்லாமல் விளங்குகின்றவனுயும் |
| பொன்றுமதனேடும் | —அழிகின்ற அந்தவுடலினேடும் |
| ஒரு பொன்றுதலுருனுய் | —ஓரழிவுமில்லாதவனுயும் |
| என்று நிலையாய் | —எக்காலத்தும் அழிவில்லாமலிருந்து |
| உலகமெங்கும் | —சகமெங்கும் |
| ஒருதானும் | —ஒப்பற்றதானுகவே விளங்குகின்ற |
| ஒன்றை அறிவான் | —பிரம்மத்தை அபரோட்சமாக அறிந்தவன் |
| இடர்களொன்றில் உழலான் | —ஒருதுன்பத்திலும் உழலமாட்டான். |

பதசாரம்—தேவபிதிர் மனுஷ்யாதிகளுடைய சரீரங்களில் ஆகாசம்போல் ஆன்மபாவமாகஇருக்கினும் இவ்வான்மாவுக்கு மகத்துவம் ஆகாசம்போல ஆபேட்சிகம் அன்றென்பார், 'என்று நிலையாயுலக மேங்குமோருதானும்' என்றார். (7)

இதுவுமது—வேறு.

இகழுபுன் னெறியை விட்டொருப் படுமிந்
திரியங்கண் மனங்கண்மீட் டிருக்குந்
தகவினை யுடையா னருள்பெறு மந்த
வருளினாற் பிரமத்தை யடைவான்
இகபர மிரண்டும் புசிப்பவ னவனிங்
கெவ்விடத் தேயுள னிங்ஙன்
திகழுற மிகுத்த தேவரு மறியார்
மனிதரோ வினித்தெளி வுறுவார்.

இதன் பொருள்.

இகழுபுன்னெறியைவிட்டு —நிந்திக்கத்தக்க அற்பமார்க்கத்தைவிடுத்து
ஒருப்படும் இந்திரியங்கள் —கூடிய இந்திரியங்களேயும்
மனங்கள் மீட்டிருக்கும் —மனமுதலானவைகளையும் திருப்பியிருக்கின்ற
தகவினையுடையான் —குணத்தையுடையவன்
அருள்பெறும் —சிவப்பிரசாதத்தையடைவான்
அந்தவருளினல் —அந்தத்திருவருளால்
பிரமத்தையடைவான் —ஆன்மாவையடைவான்
இங்கு இகபரமிரண்டும் —இவ்விடத்தில் இம்மை மறுமை இரண்டினையும்
புசிப்பவனவன் —புசிக்கின்றவனாகிய அவன்
எவ்விடத்தேயுளன் —எங்கேயிருக்கின்றான்
இங்ஙன் திகழுற —அவனை இவ்விடத்தில்விளங்கும்படி
மிகுத்ததேவருமறியார் —மிகுதியானதேவர்களும் அறியமாட்டார்கள்
மனிதரோ —மானிடர்களோ
இனித்தெளிவுறுவார் —இனிமேலறிவார்கள்.

பதசாரம்—பாவங்களைச் செய்தலினும் பொறிவழிச் செல்கையினும் நீங்காதவர்களாய்ச் சித்தைகாக்கிரியமிலராய் விஷயங்களினின்று நீங்காத மனமுடையவராயுள்ளவர் இவ்வான்ம சொரூபத்தை யடையாரென்பார் எதிர்மறையாக, 'இகழுபுன்னெறியை விட்டொருப்படுமிந்திரியங்கண் மனங்கண் மீட்டிருக்குந் தகவினையுடையானருள்பெறும்' எனவும், சுருதியில் எவனுக்குப் பிரம்மக்ஷத்திரங்கள் அன்னமாகுமென்றது உபலட்சணமாகலிற் பிரம்மக்ஷத்திராதிகளால்

குறிக்கப்படும் எல்லாவுலகுமிந்தப் பரமான்மாவிற்கு அன்னஸ்தானமாகும். எல்லாவற்றையும் சங்கரிக்கின்ற தருமராஜாவுங்கரியாவான். அங்ஙனமே சுருதியும் காலனும் எவனுக்குபசேசனமென்று கூறிற்றென்பதுதோன்ற, 'இகபரமிரண்டும் புசிப்பவன்' எனவுங் கூறினுர். இவ்வான்மா அனேக வேதாத்தியயனத்தினுலும் கிரந்த தாரணைசக்தியினுலும் அனுன்மசாஸ்திரச் சிரவணத்தினுலும் அடையப்படான் என்றது முதலியன ஏழாவது அத்தியாயத்தில் சொல்லிக்கிடந்தனவாகலின் அதனை வடநூலில் கூறியபடி கூறினுரில்லையென்க. (8)

அவதாரிகை.

இங்ஙனங்கூறிய பொருளை இரதரூபகற்பனையாய் அடைபவனையும் அடையத்தக்கதாயும் விரித்துக்கூறுவார், லோகசித்தமாயும் உபாதியால்வந்ததாயுமுள்ள ஜீவேசர்களுடைய பேதத்தைக்கூறுகின்ற **'சத்தியம் புசிக்கின்றவர்கள்'** என்ற மந்திரத்தின்பொருளையும் ஜீவேசர்க்குப் பேதமுண்மையன்றென்பதே அந்த மந்திரத்திற்குத் தாற்பரியமென்பதனையும் ஈண்டுவிளக்கிக் கூறுகின்றுர்.

ஏயபே ருலகில் வினைப்பய னுகர்ந்தங் கிதயமே மருவுவா ரிருவர்
சாயையா தபமா கின்றனர் சீவ சங்கா ரென்றிடத் தகுவா
ரோயுமா றறவே யுண்பவன் சீவ னூட்டுவான் சிவனிவர் தமக்கிங்
காயபே தந்தா னுபாதியால் வந்த தல்லத பேதமே யாகும்.

இதன் பொருள்.

| | |
|---|---|
| ஏயபேருலகில் | —பெருமைபொருந்திய வுலகின்கண் |
| வினைப்பயனுகர்ந்து | —கருமபலத்தைப்புசித்து |
| அங்குஇதயமே மருவுவார் இருவர் | அவ்விடத்தில் இருதயத்தில் பொருந்தியிருக்கின்றவர்களாகிய இரண்டுபேர்கள் |
| சாயையாதபமாகின்றனர் | —நிழலும் வெய்யிலும் போலிருக்கின்றனர் |
| சீவசங்கரரென்றிடத்தகுவார் | —(அவர்கள்)சீவேசரென்று கூறத்தகுமிவர்கள் |
| ஓயுமாறறவே | —(அவர்களில்)ஓயுந்தன்மையில்லாமல் |
| உண்பவன் சீவன் | —புசிப்பவன் சீவனுவான் |
| ஊட்டுவான் சிவன் | —ஊட்டப்பட்டவன் சங்கரனுவான் |
| இங்கு இவர்தமக்கு | —இவ்விடத்தில் இவ்விருவர்களுக்கும் |
| உபாதியால் வந்ததல்லது | —சமஷ்டி வியஷ்டியுபாதியினுல் வந்ததேயன்றி |
| அபேதமேயாகும் | —(யதார்த்தத்தில்)அபேதமேதான். |

**பதசாரம்**—தன்னுற் செய்யப்படும் கருமத்தின் பலபூதமான சரீரத்தில் பூதாகாயத்தை அபேக்ஷித்து உயர்வான இதயாகாசத்திலிருக்கின்ற சத்துவபரிணுமரூபமான புத்தியையடைந்த ஜீவபரமான்மாக்களுக்குள் சத்தியமாகவாக் கடவதான கருமபலத்தைப் புசிக்கின்றவன் சீவனே யன்றிப் பரமான்மாவன்று.

அங்ஙனமே சுருதியும் 'மற்றொருவன் புசிக்காதவன்' என்று கூறிற்று. சத்திர நியாயம்போலப் புசிப்பவனும் புசிக்காதவனுமான இருவரிடத்திலும் புசித்த லென்னுஞ் சொல் ஏறிற்று. அங்ஙனம் ஒப்பாவிடில் நிழலும் வெயிலும்போன்ற சமுசாரித்தன்மையும் அசம்சாரித்தன்மையுமான விலட்சணத்தன்மை கூடாதென் பார், 'சாயையா தபமாகின்றனர் சீவசங்கரரென்றிடத் தகுவார்' என்றார். (9)

அவதாரிகை.

அவித்தையாம் உபாதியால்வந்த சீவனுக்கு அவ்வவித்தையால் சமுசாரமும் வித்தையால் மோட்சமுமான இவ்விரண்டும் ரதரூப கற்பனையாகப் பிரதி பாதிக்கின்றனவென்று அவற்றின் உபமானத்தோடு விளக்கிக் கூறுகின்றார்.

வேறு.

தேசினிகழ் தேருடல்செ லுத்துமதி பாகன்
பாசமன மாமதுபி ணித்துவரு பாய்மா
வீசுபுல னும்விடய வீதிமிசை தானு
மீசனிவை யாதும்விளை யாடியிடு கின்றான்.

இதன் பொருள்.

| | |
|---|---|
| தேசினிகழ் தேருடல் | —பிரகாசித்து விளங்குகின்ற இரதம் சரீரமாகவும் |
| செலுத்துபாகன் மதி | —அதை நடத்துகின்றபாகன் புத்தியாகவும் |
| பாசமனமாம் | —கயிறு மனமாகவும் |
| அது பிணித்துவரு | —அந்தக்கயிற்றினால் கட்டிவருகின்ற |
| பாய்மா வீசுபுலனும் | —குதிரையானது பரம்புகின்ற ஐம்புலன்களாகவும் |
| விடயவீதி மிசை | —விஷயமாகிய வீதியில் |
| தானுமீசன் | —ஆத்மாவாகிய ஈசன் |
| இவையாதும் | —இவைகளனைத்தையுங்கொண்டு |
| விளையாடியிடுகின்றான் | —விளையாடுகின்றான். |

பதசாரம்—புத்தியாலேயே இந்திரியங்கள் ஏவப்படுதலால் அதைப் 'பாகன்' என்றும் அவ்வழியே புலன்கள் செல்லுகின்றபடியால் 'பாய்மா' என்றும் கூறினார்.

கருத்து—சரீர முதலியவற்றை ரதமுதலியனவாய்க் கூறிய அதனால் ஆன்மா அவற்றிற்கு நாயகனாகக்கூறப்பட்டான். சரீர முதலியவற்றோடுகூடிய ஆன்மா புசிப்பவனன்றி சின்மாத்திரரூபனான ஆன்மா அங்ஙனமாகான். அஃதெவ்வா றெனில் மற்றொருவன் புசிக்காதவன் என்னுஞ் சுருதியிருத்தலினென்க. (10)

அவதாரிகை.

இங்ஙனங்கூறிய ரதகற்பனையால் அவிவேகிகளுக்கு அவசமான இந்திரியத் தன்மையும் விவேகிகளுக்கு வசமான இந்திரியத்தன்மையுங் கூறுகின்றார்.

யோகமன மொன்றியறி வாமுணர்வி லானுக்
காகமுறு மைம்புல வயங்கள்வய மாகா
பாகனை யறிந்தபரி போலமன னத்தே
யாகுமதி யாளனை யறிந்துவய மாமால்.

இதன் பொருள்.

யோகமனமொன்றி —ஆத்மயோகத்தால் மனம்தனித்த
அறிவா முணர்விலானுக்கு —விவேகமாகிய புத்தியில்லாதவனுக்கு
ஆகமுறும் —சரீரத்திலிருக்கின்ற
ஐம்புல அயங்கள் வயமாகா —ஐம்புலங்களாகிய குதிரைகள் வசப்படாவாம்
பாகனையறிந்த பரிபோல —சாரதியையறிந்த குதிரையைப்போல
மனனத்தேயாகும் —மனனத்தின்கண்ணே பொருந்தியிருக்கின்ற
மதியாளனை —விவேகியை
அறிந்துவயமாம் —அறிந்துவசப்படும்.

பதசாரம்—'பாகனையறிந்த பரிபோல' என்றதினால் விவேகிக்கு அவ்விந்திரியங்கள் ஏவுதற்கும் நீக்குதற்கும் வசங்களாமென்பது பெறப்பட்டது. (11)

அவதாரிகை.

இங்ஙனம்கூறிய இருவர்களும் முறையே சனனமரணசாகரமாகிய சம்சாரத்திற்கும் அஃதற்ற மோட்சத்திற்கும் அதிகாரிகளென்று கூறுகின்றார்.

வருத்தமில தாமனன மற்றமதி கேடன்
பரத்தை யடையான்மிருப வத்தையடை கின்றா
னொருக்குமன னாலுணர்வு கூடினவன் வீடா
யிருக்குமிட மேவியதி னின்றுமிளை யானால்.

இதன் பொருள்.

வருத்தமிலதாம் —வருத்தமில்லாத
மனனமற்றமதி கேடன் —மனனமில்லாத புத்திஹீனனானவன்
பரத்தையடையான் —சிவத்தையடையமாட்டான்
மிருபவத்தையடைகின்றான் —மிகுந்த சனனங்களையே அடைகின்றான்
ஒருக்குமனனால் —ஒருமைப்படுகின்ற மனத்தினால்
உணர்வு கூடினவன் —ஞானமடைந்தவன்
வீடாயிருக்குமிடமேவி —மோட்சமாகவிருக்கின்ற இடத்தை அடைந்து
அதில் நின்றும் இளையான் —அவ்விடத்திலிருந்தும் இளைக்கமாட்டான்.

பதசாரம்—காமாதிகளால் வசீகரிக்கப்பட்டவனுய்ச் செய்யக்கூடாத காரியத்தின் முயற்சியுள்ளவனுய் அசுத்தனுதலால் அவனை 'மதிகேடன்' என்றார்.

கருத்து—விவேகியானவன் சம்சாரமண்டலத்தை அடையாதவனுய்ப் புனரா விர்த்தியில்லாத முத்திஸ்வரூபமான பிரம்மத்தை அடைவானென்றுணர்க. (12)

அவதாரிகை.

மறுபடியும் முத்திஸ்வரூபமான அந்தப்பதத்தை ஈண்டு விரித்துக் கூறுகின்றார்.

வேறு.

பொருந்து ஞானமாம் பாகனுன் மனத்தளை பூட்டியைம் புலப்பாய்மா
பரந்தெ ழாவகை தன்வச மாக்கினுன் பரம்பத மடைகின்றான்
திருந்து மாலுடைப் பதமது வதுபரஞ் சிவனெனுந் திருநாமத்
திருந்த வாறுதா னிருந்தவா றன்றிவே றிணையிலா விறையாவன்.

இதன் பொருள்.

பொருந்துஞானமாம் பாகனுல்—பொருந்துகின்ற விஞ்ஞானமாகிய சாரதியினுல்
மனத்தளை பூட்டி —மனமாகிய பாசத்தைப்பூட்டி
ஐம்புலப்பாய்மா —பஞ்ச இந்திரியங்களாகிய குதிரைகள்
பரந்தெழாவகை —விரிந்து போகாமலிருக்கும்படி
தன்வசமாக்கினுன் —தன்வசஞ்செய்தவன்
பரம்பதமடைகின்றான் —பரமபதத்தை அடைகின்றான்
திருந்துமாலுடைப் பதமது —திருந்திய விஷ்ணுவினதுபதமும் அதுவேயாகும்
பரம் அது —உயர்வாகிய அதுவே
சிவனெனும் —சிவனென்னும்
திருநாமத் திருந்தவாறுதான் —திருநாமத்தை யுடையவனுயிருந்தவாறுதான்
இருந்தவாறன்றி —அப்படியிருந்த சிவபிரானைத்தவிர
இணையிலா இறை —ஒப்பில்லாத இறைவன்
வேறுயாவன் —வேறெவனிருக்கின்றான்.

பதசாரம்—ஆன்மானன்ம விவேகத்தையுடைய நிச்சயரூபமான புத்தியைப் 'பாகன்' எனவும், வியாபகமான பிரம்மத்தினுயர்ந்த சச்சிதானந்த ஏகாசஸ்வரூபத்தை ஆன்மஸ்வரூபஞானத்தால் சம்சாரபந்தத்தினீங்கி அடைகின்றானென்பது தோன்ற, 'பரம்பதமடைகின்றன் திருந்துமாலுடைப்பதமது' எனவும், கூறினார்.

அவதாரிகை.

இங்ஙனங்கூறிய சொரூபமே லீலையினுல் உமையொருபாகமான சிவமாயிற்று, சச்சிதானந்த ஏகாசமான இந்தப் பரசிவஸ்வரூபமே உருத்திரன் முதலிய குணமூர்த்திக்கும் மற்றைய இந்திராதிகட்கும் பரம்பதமென்று கூறுகின்றார்.

அருள தாலுரு வொன்றியே நின்றுள வகிலநாயக னென்னும்
பொருள தேபர மாம்பத மியாவரும் புகலிட மதுவாகுங்
கருணை மேவிய சிவனொழிந் துருத்திரன் கண்ணனுன் முகனென்பா
ரிருள தானதில் பரம்பத மெனும்படி யெங்ஙனே யிமையோரே.

இதன் பொருள்.

| | |
|---|---|
| அருளதால் | —திருவருளாகிய பராசத்தியுடன் |
| உருவொன்றியே நின்றுள | —திருவுருக்கொண்டெழுந்தருளியிருக்கின்ற |
| அகிலநாயகனென்னும் பொருளதே | —சர்வேச்வரனென்னும் வஸ்துவே |
| பரமாம்பதம் | —பரமபதமாகும் |
| இயாவரும் புகலிடம் | —எவர்களுக்கும் தஞ்சமாகிய இடம் |
| அதுவாகும் இமையோரே | —அந்தப்பரமபதமேயாகும் தேவர்களே |
| கருணைமேவிய | —கிருபைபொருந்திய |
| சிவனொழிந்து | —சாம்பமூர்த்தியான சிவபிரானைத்தவிர |
| உருத்திரன் கண்ணனுன்முகனென்பார் | உருத்திரன் விஷ்ணு அயன்என்னும் மூவர்களுக்கும் |
| இருளதானதில் | —அஞ்ஞானமில்லாத |
| பரம்பதமெனும்படி எங்ஙன் | —பரமபதமென்னும்வண்ணம் எங்கே. |

**பதசாரம்**—திருந்துமாலுடைப்பதமதுவென்ற சுருதிவாக்கியத்திற்குத் தானேயுரைசெய்வார், 'எவ்விடத்தில் அன்னியத்தைப் பார்க்கின்றனில்லை கேட்கின்றனில்லை' என்று சுருதிகூறியபிரகாரம் திரிபுடிஹீனமாய் அத்துவிதமான தத்துவம் யாது அதுவே தேவர் நரர்முதல் எல்லார்களாலும் விரும்பத்தக்கதான நிரதிசயானந்த ஸ்வரூபமான பதமென்பார், 'யாவரும் புகலிடமதுவாகும்' என்றார்.

அவதாரிகை.

இந்திரிய முதலியவற்றிற்கு ஒன்றற்கொன்று சூக்குமத்தன்மையும் வியாபகத்தன்மையும் பிரத்தியக்குத்தன்மையும் தாரதம்மியமாகக்கூறி அடையத்தக்க பரசிவசொரூபத்திற்கு நிரதிசய சூக்குமத்தன்மை முதலியவை நிரூபிக்கின்றார்.

இந்தியங்களிற் பொருளெனல் பரமன மிவற்றினும் பரமத்திற்
புந்திநற்பர மதிலுமான்பர மெலாம் பொன்றிய தெரியாமை
யந்தமானினும் பரமவ் வியத்தமா மதிற்பரம் புருடன்று
ணிந்தமெய்ப்பரம் புருடனிற் பரம்பிறி தில்லைமே லிவனேயாம்.

இதன் பொருள்.

| | |
|---|---|
| இந்தியங்களில் | —பஞ்ச இந்திரியங்களினும் |
| பொருளெனல் பரம் | —விஷயங்களென்பது சிரேஷ்டமாகும் |

| | |
|---|---|
| இவற்றினும் மனம் பரம் | —இவைகளினும் மனமானது சிரேஷ்டமாகும் |
| அத்தில் புந்தி நற்பரம் | —அதினினும் புத்தியானது நல்லசிரேஷ்டமாகும் |
| அதிலும் மான்பரம் | —அதனினும் மகத்துவம் சிரேஷ்டமாகும் |
| எலாம்பொன்றிய | —அனைத்தும் தன்கண் நசித்துறும் |
| தெரியாமை அவ்வியத்தம் | —அஞ்ஞானமாகிய மாயையானது |
| அந்தமானினும் | —அந்த மகத்துவத்தைக்காட்டிலும் |
| பரம் ஆம் | —சிரேஷ்டமாகும் |
| அதிற் பரம்புருடன்முன் | —அதனினும் புருடன் சிரேஷ்டனுவான் |
| இந்தமெய்ப்பரம் | —இந்த வுண்மையாய்ச்சிரேஷ்டனுகிய |
| புருடனில் பரம்பிறிதில்லை | —புருஷனைக் காட்டிலும் சிரேஷ்டம் வேறில்லை |
| மேலிவனேயாம் | —இந்தப் புருடனே சிரேஷ்டனுவான். |

**கருத்து**—பூதகாரியமாய்த் தூலங்களான இந்திரியங்களைத் தங்களுக்கு விளக்கமுண்டாகும்பொருட்டுச் சப்த முதலிய விடயப்பொருள்களையுண்டாக்குதலின் இந்தியங்களிற் பொருளதிகமெனவும், பெரிதான அந்தப்பொருள்களைக் காட்டிலும் மனமென்னுஞ் சொல்லுக்கு வாச்சியமாய் மனத்திற்கு ஆரம்பகமான பூதசூக்குமம் அதிகமெனவும் அதனினும் சூக்குமமாய் மகத்தாய்ப் பிரத்தியகான்மபூதமான புத்தியென்னும் சப்தத்திற்கு வாச்சியமான அத்தியவசாய முதலியவையுண்டாக்கும் பூதசூக்குமம் அதிகமெனவும், அதனினும் சமஷ்டிரூப இரணியகருப்ப சம்பந்தமுள்ள புத்திரூபமான பெரிய ஆன்மா எல்லாப் புத்திவிருத்திகளுக்கும் காரணமாயும் சூக்குமதரமாயும் வியாபகமாயும் பிரத்தியக்குப் பூதமாயும் இருத்தலால் அதிகனெனவும், அதனினும் அவ்வியாகிருத நாமரூபான்மகமாய் எல்லாவுலகிற்கும் பீஜபூதமாய் மாயை பிரகிருதி அவித்தையென்னும் பரியாயங்களையுடைய அவ்வியத்தம் எல்லாவற்றினும் அதிகமெனவும் இவை எல்லாவற்றிற்கும் காரணனுய்ச் சூக்குமதரனுய் பிரத்தியகான்மாவான புருடன் சகல ஜகத்தையும் தன் சொரூபத்தாலேயே நிறைக்கின்றவனுயும் எல்லாச் சரீரங்களினும் சருவாந்தரனுயுமிருக்கின்றதனுல் அதிகனெனவும், சிறகனப் பிரத்தியகான்மாவான புருடனைக்காட்டிலும் மேலானபொருள் யாதொன்றுமில்லையெனவும், இங்ஙனம் எல்லாவற்றிற்குங்கூறிய சூக்ஷுமத்தன்மை முதலியவை இவனிடத்தில் முடிந்து நிற்றலினுல் இவனே அடைகின்றவர்களான சமுசாரிகளுக்கு அடையப்பட்ட உயர்வான கதியாவானெனவும், புனராவிர்த்தி இல்லாமையின் இக்கதியேயுயர்ந்ததெனவும், மற்றைக்கதிகள் புனராவிர்த்தியுடையன வாதலால் உயர்ந்தன அன்றெனவும், இந்தக்கதியும் பிராப்தப்பிராப்தி ரூபமாதலால் ஞானமாத்திரத்தால் அடையத்தக்கதே யன்றி மற்றைக் கதிகளைப்போல் கிரியையால் சாதாரணமாகச் சாதிக்கப்படுந் தன்மையும் ஸ்திரமற்ற அனித்தியத்தன்மையும் இதற்குஉண்டென்று சங்கிக்கத்தக்கதில்லை யெனவுமுணர்க. (15)

அவதாரிகை.

சுருதியிற் கூறிய புருஷ பதத்திற்கு ஈண்டுவிளக்கமாய் உரைசெய்கின்றார்.

புருட னென்றுரை செயப்படு வதுபரி பூரண மாகின்ற
சொருப நின்றவா நிற்கவிங் கருளொடு தோன்றவல் லவன்ருனே
யரனு மன்றுமா லயனுமன் றெவர்க்குமுள் ளாகியே யாவர்க்குந்
தெரிவ ருஞ்சிவ னவனேயிங் கொருங்கிய சிந்தையார் தெளிவாரே.

இதன் பொருள்.

புருடனென்று உரைசெயப்படுவது — புருஷனென்று சொல்லப்படுவது
பரிபூரணமாகின்ற — அகண்டபரிபூரணமாகிய
சொருபம் நின்றவா நிற்க — தனது சொருபமாக விளங்கிநின்ற வண்ணமிருக்கவும்
இங்கு அருளொடு — இங்கு கருணையே வடிவமாகிய பராசக்தியோடு
தோன்றவல்லவன்ருனே — விளங்கவல்லவனே ஆவன்
அரனுமன்று மாலயனுமன்று — (அவன்) உருத்திரனுமல்லன் அரியயனுமல்லன்
எவர்க்குமுள்ளாகி — யாவர்க்கும் ஆந்தரனுகி
யாவர்க்குந் தெரிவரும் — எவர்களாலுமறியக்கூடாத
சிவன் — சிவபெருமானே ஆவான்
அவனே இங்கு ஒருங்கிய — அந்தச்சிவபிரானே இவ்விடத்தில் ஒருமைப்பட்ட
சிந்தையார் தெளிவார் — சித்தத்தையுடையவர்கள் அறிவார்கள்.

**பதசாரம்**—திரிவித பரிச்சேதமில்லாதவனுய்ச் சச்சிதானந்தலட்சணனுன பரசிவனே சாட்சாத் புருஷசத்தத்திற்கு அபிதேயனுவான். அவனே லீலையினுல் தன்னுடைய சிவசக்தி ரூபத்தன்மையைத் தெரிவிக்கும்பொருட்டு உமைபாகனுய்ப் பவித்தானென்பார், 'இங்கருளோடு தோன்றவல்லவன்' எனவும், சகல பிராணிகளிடத்திலும் தானுகவேயிருக்கினும் ஆவரணுவித்தையென்னும் மோகத்தினுல் மறைபொருளாகித் தேகேந்திரியாதிகளுக்கு வேருக விளங்குகின்ருனில்லை. அங்ஙனமாயினும் இந்திரியங்களைக்காட்டிலும் உயர்வுடையன பொருள்களென்றுகூறிய பிரகாரமே நிரதிசய சூக்கும ஆன்மதத்துவத்தைப் பார்க்கும் வல்லமையுடைய சூக்கும தரிசிகளான வித்துவான்களால் குருக்களாலும் சாஸ்திரங்களாலும் பரிபக்குவமாய் ஏகாக்கிரத்தையடைந்த சூக்குமபுத்தியினுல் அந்தப்புருஷன் பார்க்கப்படுவான் என்பார், 'யாவர்க்குந் தெரிவருஞ் சிவனவனே யிங்கொருங்கிய சிந்தையார் தெளிவாரே' எனவுங் கூறினர். (16

அவதாரிகை.

ஆன்மதரிசனத்துக்கு வேண்டுமுபாயத்தை ஈண்டு விளக்கிக் கூறுகின்ருர்.

வேறு.

வாக்கது மனத்திடை வைக்கு மம்மனம்
போக்கிடும் புந்தியுட் புந்தி மானிலே
யாக்கிடு மந்தமா னிவைய னைத்தினுந்
தாக்கறு சாந்தமாந் தன்னிற் சாந்தமாம்.

இதன் பொருள்.

| | |
|---|---|
| வாக்கதுமனத்திடை வைக்கும் | —வாக்கானது மனத்தினிடத்தில் ஒடுங்கும் |
| அம்மனம் புந்தியுள் போக்கிடும் | —அந்தமனமானது புத்தியினிடத்தில் ஒடுங்கும் |
| புந்திமானிலே யாக்கிடும் | —புத்தியானது மகதத்துவத்திலே ஒடுங்கும் |
| அந்தமானிவை யனைத்தினும் | —அந்தமகதத்துவமானது இவை எல்லாவற்றினும் |
| தாக்கறும் | —சம்பந்தமில்லாத |
| சாந்தமாம்தன்னில் | —சாந்தமாகிய ஆன்மாவான தன்னிடத்தில் |
| சாந்தமாம் | —ஒடுங்கும் |

**பதசாரம்**—புறக்கரணங்களெல்லாவற்றையும் மனத்தினும், அதனைச் சொப்பிரகாச சொரூபமான புத்தியென்னும் ஆன்மாவினிடத்தினும், அதனை சமஷ்டிபூதமாயும் சூக்குமதரமாயுமுள்ள ஹிரண்யகருப்பனென்னு முபாதியினும் அதனைச் சொரூபபோத சத்துவமாய்ச்சாந்தமாய் நாமரூபங்களொன்றுமில்லாததாய் நிருவிகாரமாய்ச் சாட்சி சின்மாத்திரரூபமாய் முக்கியமான ஆன்மாவினிடத்தில் ஒடுக்கிப் பரிபூரண ஸ்வப்பிரகாசாநுசந்தானபரனுய்ப் பவிக்கத் தக்கவனென்பதுதோன்ற, 'புந்திமானிலே யாக்கிடு மந்தமான் இவைய னைத்தினுந் தாக்கறு சாந்தமாந் தன்னிற் சாந்தமாம்' எனவுங் கூறினர். (17)

அவதாரிகை.

பிருதிவி முதலிய பூதங்களுக்கு முறையே ஒவ்வொரு குணங்களில்லாமையினால் ஒன்றற்கொன்று சூக்குமதாரதம்மியங் காணப்படுகின்றது எனவே ஒரு குணமுமில்லாத ஆன்மாவிற்கு நிரதிசய சூக்ஷுமத்தன்மை சொல்லவேண்டுவதின்றெனக்கருதிச் சப்தாதிகளை நிஷேதித்து ஆன்மசொரூபத்தைக்கூறுகின்றார்.

ஒலிமுத லுரைப்பன வொன்று மின்றியே
யெல்லையில தாகியெப் பொருட்கு மேலதாய்ச்
சலமதின் றியவது தன்னைத் தம்முளே
நிலைபெற வறிந்தவர் மரணம் நீங்குவார்.

இதன் பொருள்.

| | |
|---|---|
| ஒலிமுதல் | —சத்தமுதலாக |
| உரைப்பனவொன்றுமின்றி | —சொல்லப்பட்டனவொன்றுமில்லாமல் |
| எல்லையிலதாகி | —எல்லையில்லாததாயும் |
| எப்பொருட்கும் மேலதாய் | —அனைத்திற்கும் உயர்வாயும் |
| சலமதின்றியவது தன்னை | —சாந்தமாயுமுள்ள அதனை |
| தம்முளே நிலைபெற | —தனது இருதயத்தின்கண்ணே திரமாக |
| அறிந்தவர் | —உணர்ந்தவர்கள் |
| மரணம் நீங்குவார் | —சனனமரணத்தைக் கடப்பார்கள். |

கருத்து—பரமான்ம ஞானத்தை நிச்சயஞ்செய்தவர் அவித்தியா காமகருமத்தை இலக்கணமாகவுடைய சம்சாரத்தினின்றும் விடுதலையடைகின்றாரென்ப.

அவதாரிகை.

இங்ஙனங்கூறிய ஆன்மாவை யாவரும் அறியாததற்குக்காரணங் கூறுகின்றார்.

வேறு.

பரப்பி னானிந் தியங்களைப் பார்க்குறப் பரம்பர னுள்ளாகி
இருத்த லாலறி வொண்கிலன் புறம்புள விதரமே காண்கின்றான்
திருப்பி ஞானநாட் டத்தினா லப்பொரு டெரியவே பெறுந்தீர
னொருத்த னேயவி நாசியாம் பரவொளி யாயவ னொளிர்கின்றான்.

இதன் பொருள்.

பார்க்குற —ஜகத்தைக்காணும்பொருட்டு
இந்தியங்களைப் பரப்பினான் —ஐம்பொறிகளையும் விரிவாகச் சிருட்டித்தவனாகிய
பரம்பரன் உள்ளாகியிருத்தலால்—பரமசிவன் ஆந்தரப்பொருளாக இருத்தலால்
அறிவொண்கிலன் —அறிதற்கரியவனாகலின்
புறம்புள —(சீவன்) பாகியத்திலுள்ள
இதரமே காண்கின்றான் —பின்னங்களையே பார்க்கின்றான்
திருப்பி ஞானநாட்டத்தினால் —ஆந்தரவழியேதிருப்பி ஞானக்கண்ணால்
அப்பொருள் தெரியவேபெறும் —அந்தப்பரசிவனைக் காணப்பெற்ற
தீரனொருத்தனே —தீரனாகிய ஒருவனே
அவிநாசியாம் —நாசமில்லாதவனாவான்
பரவொளியாய் —பிரம்மசொரூபமாயும்
அவன் ஒளிர்கின்றான் —அவனே பிரகாசிக்கின்றான். (19)

இதுவுமது.

பேத மாகிவே றாகிய பொருள்கண்மேற் பேதமை யதனாலே
காதன் மேவினர் காலபா சத்திலே கட்டுணக் கடவாரே
யாத லாலழி வின்றிய பொருளிலே யறிஞரா தரித்தல்லா
லேது மாதரித் திடாதவ ரப்பொரு ளெய்தியே யிருக்கின்றார்.

இதன் பொருள்.

பேதமாகி —பின்னமாகி
வேறாகிய பொருள்கள்மேல் —வேறாயிருக்கின்ற விடயங்களில்
பேதமையதனால் காதல்மேவினர்—மடமையால் ஆசைகொண்டவர்கள்

காலபாசத்தில் —எமனது பாசக்கயிற்றினல்
கட்டுணக்கடவார் —பிணிக்கப்படுவார்கள்
ஆதலால் —ஆகையால்
அழிவின்றிய பொருளில் —நாசமில்லாத வஸ்துவினிடத்தில்
அறிஞராதரித்தல்லால் —விவேகிகள் அன்புவைப்பதேயன்றி
எதும் ஆதரித்திடாது —மற்றெதனிடத்தும் அன்புசெய்யாமல்
அவர் அப்பொருள் —அவ்வறிஞர் அந்தவஸ்துவை
எய்தியேயிருக்கின்றார் —அடைந்தேயிருக்கின்றார்கள். (20)

### அவதாரிகை.

அவ்வான்மாவை அடையும் உபாயத்தை ஈண்டு விளக்கிக் கூறுகின்றார்.

### வேறு.

சத்தப்பரிச வுருவிரதங் கந்தா திசமைந் தனமுதலா
லெத்தைக்கொண்டிங் கறிகின்றா னதனையொழிய வேதுளதா
மத்தற்பரத்தைக் கண்டிந்த வவத்தைமூன்றுங் காணுமை
சித்தித்திருக்கு மவனலமுந் தீங்குமின்றித் திகழ்கின்றான்.

### இதன் பொருள்.

சத்தப் பரிசவுருவிரதம் —சத்தம், ஸ்பரிசம், உருவம், இரதம்,
கந்தாதிசமைந்தன முதலா —கந்த முதலாகப்பொருந்திய அனைத்தையும்
எத்தைக்கொண்டிங்கறிகின்றான் —எதனால் இவ்விடத்தில் அறிகின்றானே
அதனையொழிய எதுளதாம் —அதைத் தவிர யாது இருக்கின்றதாகும்
அத்தற்பரத்தைக்கண்டு —அந்தப்பிரம்மத்தை அபரோட்சமாகப்பார்த்து
இந்த அவஸ்தை மூன்றும் காணுமை } இந்தமூன்று அவஸ்தைகளையும் (ஆன்மாவாகிய தன்னிடத்தில்) காணுதிருக்கின்றதன்மை
சித்தித்திருக்குமவன் —வாய்க்கப்பெற்றிருக்கின்ற அவன்
நலமுந்தீங்குமின்றி —நன்மையுந் தீமையுமில்லாமல்
திகழ்கின்றான் —விளங்குகின்றான்.

**கருத்து**—தேக முதலிய கூட்டங்களுக்கு வேறாய்ச் சின்மாத்திரப் பிரகாச மான ஆன்மாவினலேயே ரூபமுதலிய எல்லாவிடயங்களும் அறியப்படுதலின் ரூபமுதலிய எல்லாப் பிரத்தியயங்களுக்குஞ் சாட்சியே ஆன்மாவாவானன்றிக் கடம்போல ரூபமுதலியவைகளையுடைய அனான்மாக்களான தேகேந்திரிய முதலியவைகள் அன்றெனவும், எல்லாஞ் சின்மாத்திரரூபனுன ஆன்மாவினலேயே அறியப்படுதலால் ஒருவஸ்துவுஞ் சேஷிக்க வில்லையெனவுங் கொள்க. (21)

| | |
|---|---|
| காலபாசத்தில் | —எமனது பாசக்கயிற்றினல் |
| கட்டுணக்கடவார் | —பிணிக்கப்படுவார்கள் |
| ஆதலால் | —ஆகையால் |
| அழிவின்றிய பொருளில் | —நாசமில்லாத வஸ்துவினிடத்தில் |
| அறிஞராதரித்தல்லால் | —விவேகிகள் அன்புவைப்பதேயன்றி |
| ஏதும் ஆதரித்திடாது | —மற்றெதனிடத்தும் அன்புசெய்யாமல் |
| அவர் அப்பொருள் | —அவ்வறிஞர் அந்தவஸ்துவை |
| எய்தியேயிருக்கின்ருர் | —அடைந்தேயிருக்கின்ருர்கள். (20) |

அவதாரிகை.

அவ்வான்மாவை அடையும் உபாயத்தை ஈண்டு விளக்கிக் கூறுகின்ருர்.

வேறு.

சத்தப்பரிச வுருவிரதங் கந்தா திசமைந் தனமுதலா
லெத்தைக்கொண்டிங் கறிகின்ரு னதனையொழிய வேதுளதா
மத்தற்பரத்தைக் கண்டிந்த வவத்தைமூன்றுங் காணுமை
சித்தித்திருக்கு மவனலமுந் தீங்குமின்றித் திகழ்கின்ருன்.

இதன் பொருள்.

| | |
|---|---|
| சத்தப் பரிசவுருவிரதம் | —சத்தம், ஸ்பரிசம், உருவம், இரதம், |
| கந்தாதிசமைந்தன முதலா | —கந்த முதலாகப்பொருந்திய அனைத்தையும் |
| எத்தைக்கொண்டிங்கறிகின்ருன் | —எதனல் இவ்விடத்தில் அறிகின்ருனே |
| அதனையொழிய ஏதுளதாம் | —அதைத் தவிர யாது இருக்கின்றதாகும் |
| அத்தற்பரத்தைக்கண்டு | —அந்தப்பிரம்மத்தை அபரோட்சமாகப்பார்த்து |
| இந்த அவஸ்தை மூன்றும் காணுமை | இந்தமூன்று அவஸ்தைகளையும் (ஆன்மாவாகிய தன்னிடத்தில்) காணுதிருக்கின்றதன்மை |
| சித்தித்திருக்குமவன் | —வாய்க்கப்பெற்றிருக்கின்ற அவன் |
| நலமுந்தீங்குமின்றி | —நன்மையுந் தீமையுமில்லாமல் |
| திகழ்கின்ருன் | —விளங்குகின்ருன். |

**கருத்து**—தேக முதலிய கூட்டங்களுக்கு வேருய்ச் சின்மாத்திரப் பிரகாசமான ஆன்மாவினுலேயே ரூபமுதலிய எல்லாவிடயங்களும் அறியப்படுதலின் ரூபமுதலிய எல்லாப் பிரத்தியயங்களுக்குஞ் சாட்சியே ஆன்மாவாவானன்றிக் கடம்போல ரூபமுதலியவைகளையுடைய அனுன்மாக்களான தேகேந்திரிய முதலியவைகள் அன்றெனவும், எல்லாஞ் சின்மாத்திரரூபனுன ஆன்மாவினுலேயே அறியப்படுதலால் ஒருவஸ்துவுஞ் சேஷிக்க வில்லையெனவுங் கொள்க. (21)

50

அவதாரிகை.

அவ்வாறு சாட்சியான ஆன்மசொரூபத்தை விசேஷித்துக் கூறுகின்றார்.

மூன்று கின்ற வவத்தையென மொழியும் புரங்கண் மூன்றுணருஞ்
சான்று யறியி லறிகின்ற தன்னில் வேறு காதவைதா
னூன்று வுணர்வே யுருவான வொளியே யுளதாய் வித்தாகித்
தோன்று நின்றுந் தோன்றாது நிகழ்வா னென்றுஞ் சுதந்தரத்தால்.

இதன் பொருள்.

மூன்றுகின்ற அவத்தையென மொழியும்—மும்மையாகிய அவத்தைகள் என்கின்ற
புரங்கள் மூன்று —சாக்கிரசொப்பன சுழுத்தியாகிய முப்புரங்களையும்
உணருஞ் சான்றுயறியில் —அறிகின்ற சாட்சியாக(த்தன்னை)ப்பார்த்தால்
அறிகின்றதன்னில் —அவ்வாறறிகின்ற தன்னைத்தவிர
அவைதான் வேறுகாது —அந்த மூன்றவத்தைகளும் பின்னமாகாது
ஊன்றுவுணர்வே யுருவான —தள்ளக்கூடாத ஞானமேரூபமாகிய
ஒளியேயுளதாய் —விளக்கமேயிருப்பதாயும்
வித்தாகித் தோன்றுநின்றும் —காரணவஸ்துவாயும் விளங்கியும்
என்றும் சுதந்தரத்தால் —எக்காலத்தும் சுதந்தரத்தினால்
தோன்றாது நிகழ்வான் —திரிசியமாகாமல் விளங்குவான்.

பதசாரம்—சிதான்மாவினால் விளங்கும் மூன்றவஸ்தைகளும் மற்றைத் திரிசியம்போல அவனிடத்தில் அத்தியாசிக்கப்பட்டதாதலால் அவனுக்கு வேறு யில்லை யென்பார், தன்னில் வேறகாதவைதான்' எனவும், பரசிவன் சுதந்திரனதலில் தன்னுடைய மாயாவிலாசத்தினால் மூன்றுபுரங்களாக ஒருகால் விளங்குகின்றானேயன்றித் தத்துவமாக அப்படி விளங்குகின்றானில்லை. ஆயினும் ஒரு பாதிகளுமின்றித்தானே விளங்குகின்றானென்பார், 'தோன்ற நின்றுந்தோன்றது நிகழ்வானென்றுஞ் சுதந்தரத்தால்' எனவும் கூறினர். (22)

அவதாரிகை.

யாதொன்று இகத்தில் அதுவே பரத்திலும், யாதொன்று பரத்தில் அதுவே இகத்திலும் என்ற சுருதியின் தாற்பரியத்தை ஈண்டு விளக்கிக் கூறுகின்றார்.

வேறு.

பரமிக மாய்நிகழ்ந் ததுப ரம்பொரு
ளொருபொருள் பிறிதிலை யுளது போற்பல
கருதுமே லவன்கணிற் காண்ப தெங்கணு
மரணமே மரணமே மறித்துஞ் சார்வதே.

இதன் பொருள்.

| | |
|---|---|
| பரம்பொருள் பரமிகமாய் நிகழ்ந்தது | பிரம்மமே பரத்திலும் இகத்திலும் இருப்பதாகி விளங்குகின்றது |
| ஒருபொருள் பிறிதில்லை | —அந்த ஒருபொருளைத்தவிர வேறொன்றுமில்லை |
| உளதுபோற் பல கருதுமேல் | —இருக்கின்றதுபோல் பலவாகக் கருதுவனேல் |
| எங்கணும் அவன்கணில் | —எங்கும் அவனிடத்தில் |
| காண்பது மரணமே | —காணப்பட்டது மரணமேதான் |
| மறித்தும் மரணமே | —மறுபடியும்பிறந்து அவனுக்கு மரணமே |
| சார்வது | —பொருந்துகின்றது |

**பதசாரம்**—யாதொரு இந்தக்காரியகாரண சமூகத்திலிருக்கின்ற சச்சிதானந்த ஏகரசமான தத்துவமோ, யாதொன்று ஜகத்காரணமாய் சர்வஞ்ஞனுய்ச் சூரியாத்மகமான பிரம்மத்தினிடத்திலுமிருக்கின்றதோ, அவ்விரண்டும் எப்போதும் ஒன்றேதான். கிஞ்சிக்யத்தன்மையும் சருவக்கியத் தன்மையுமான பேதத்தோற்றம் மாயை அவித்தை என்னுமுபாதிகளால் வந்ததாகலில் பேதம் அவர்கட்கில்லை. அங்ஙனமே சுருதியும் இந்தப்புருடனிடத்தில் இருக்கின்றவன் யாவனோ அவனேதான் ஆதித்தனிடத்திலும் இருக்கின்றவனென்று, கூறிற்றென்பதுதோன்றப் 'பரமிகமாய் நிகழ்ந்தது பரம்பொருளொருபொருள்' என்றார். (23)

அவதாரிகை.

பரமான பிரம்மத்தைக்காட்டிலும் எல்லாவுலகிற்கும் பேதமனுபவிக்கப்படுகின்றதென்று சங்கித்து உபமானத்துடன் அத்தாதான்மியத்தைக் கூறுகின்றார்.

வன்னிதா னொருவனு யிருக்க மற்றவன்
துன்னிய வுருவமாய்த் தோன்று மாறுபோ
லின்னதெ னுமலுட் புகுந்து மேகனு
யன்னிய னுகியொன் றோடு மார்ப்புறான்.

இதன் பொருள்.

| | |
|---|---|
| வன்னிதானொருவனுயிருக்க | —அக்கினியானவன் ஒருவனுயிருக்கவும் |
| மற்றவன் | —அந்த அக்கினியானவன் |
| துன்னியவுருவமாய் | —தான்பொருந்திய பொருள்களின் வடிவமாக |
| தோன்றுமாறுபோல் | —காணுந்தன்மைபோல |
| இன்னதெனுமல் | —இன்னதென்று குறிக்கப்படாமல் |
| உட்புகுந்து | —சரீரத்துட்புகுந்தும் |
| ஏகனுய் அன்னியனுகி | —ஏகசொரூபனுயும் அன்னியசொரூபங்களாயும் இருந்துகொண்டும் |
| ஒன்றோடும் ஆர்ப்புறான் | —ஒன்றோடும் சம்பந்தப்படமாட்டான். |

பதசாரம்—எப்படி ஒருவனை அக்கினியே உலகத்தையனுப்பிரவேசித்துத் தகிக்கப்படுவனவான விறகு முதலிய பேதரூபங்களிற்சென்று தகிக்கப்படும் பொருளுக்குச் சமானவுருவத்தையடைகின்றானோ அப்படியே சச்சிதானந்தரூப பரசிவனொருவனே எல்லாப்பிராணிகளுக்கும் அந்தராத்மாவாய்த் தேவமனுஷ்யாதி சரீரத்தையடைந்து அந்த அந்த ரூபங்கள் போலாகின்றான். அங்ஙனமாயினும் பிரபஞ்சத்திற்கு வேறாகத் தனக்கு ஸ்பாவமாயுள்ள நிரூபாதிக சொரூபமாயிருக்கின்றானென்பார், 'இன்னதேனும லுட்புகுந்து மேகனு யன்னியனாகி' எனவும், ஒருவனாயுள்ள ஆன்மாவே அங்கங்கே அந்தவந்த ரூபமாகியிருக்கினும் அதனாற்செய்யப்படும் சம்சாரதுக்கத்தின் அனுபவமும் அவனுக்குண்டாகாது. எப்படிச்சூரியன் எல்லாவுலகத்திற்குங் கண்ணொளியாகிக் கண்ணுக்கு உபகாரஞ்செய்து கண்ணாயிருக்கினும் அசுபமுதலியவற்றின் தரிசனத்தாலுண்டான அத்தியான்மங்களாயும் பாகியங்களாயுமுள்ள பாபதோஷங்களோடுஞ் சேராதவனாவனோ, அப்படியே ஏகனாய்ச் சர்வபூதங்களுக்கும் அந்தராத்மாவாயினும் அந்தப் பிராணி சமூகங்களைக்காட்டிலும் வேறாய் அவர்களுடைய துக்கத்தோடுஞ் சேராதவனாவான். அவித்தையால் இவ்வான்மாவிற்குச் சம்சார துக்கந் தோற்றமேயன்றிப் பரமார்த்தமான உபாதியில் இல்லை. அப்படி இல்லாததாய் இருந்தும் அனாதியான சம்சாரதுக்கத்தோடும் பரமார்த்தபூதனான ஆன்மாவிற்கு எப்படிச் சம்பந்தம் கூடுமென்பதுதோன்ற 'ஒன்றேடுமார்ப்புறன்' என்றார். (24)

அவதாரிகை.

சர்வங்களுக்கும் முக்கியனான ஆன்மா ஒருவனே. இவனுக்குச் சமானமாகவும் அதிகமாகவும் ஒருவனில்லையெனவும், எல்லாவுலகும் எங்ஙனம் இவன் வசமாகுமெனவும்,இவனுக்குச்சர்வாந்தரமான ஆன்மத்தன்மை யெங்ஙனமெனவும்,இவனை உணரவல்லார்க்கு வேதம் எப்படி உணர்த்துமெனவும் சங்கித்துக் கூறுகின்றார்.

வேறு.

எல்லாம் வசிக ரிப்பானு யெதுக்குமுள்ளா மொருவடிவைப்
பல்லா யிரங்கோ டிகளாகப் பண்ணு நிற்கும் பரம்பரனை
யல்லா தொன்று மில்லையென வனுபவத்தா லகத்துணர
வல்லார் தமக்குப் பேரின்பம் வடிவாய் மொழியு மாமறைதான்.

இதன் பொருள்.

எல்லாம் வசிகரிப்பானாய் —அனைத்தையுந் தனக்குவசப்படுத்துகின்றவனாயும்
எதுக்குமுள்ளாம் —அனைத்திற்கும் ஆந்தரமாயிருக்கின்ற
ஒருவடிவை —ஏகசொரூபத்தை
பல்லாயிரங்கோடிகளாக —பல்லாயிரங்கோடி அண்டங்களாக
பண்ணுநிற்கும் —செய்கின்ற

பாம்பானையல்லாது —பரமசிவனைத்தவிர
ஒன்றுமில்லையென —ஒன்றுமில்லையென்று
அனுபவத்தால் —சுவாநுபவத்தால்
அகத்துணரவல்லார் தமக்கு —மனத்தில் அறியவல்லவர்களுக்கு
பேரின்பம் வடிவாய் —பேரின்பமே சொரூபமாக
மாமறைதான் மொழியும் —பெருமைபொருந்திய வேதங்கள் சொல்லுகின்றன.

**பதசாரம்**—இதயாகாசத்திலிருக்கின்ற ஆன்மாவைக் குருசாஸ்திரங்களுடைய உபதேசத்தால் சாட்சாத்தாக எவர்களனுபவிக்கின்றார்களோ அவர்களே எதார்த்த அனுபவிகள். விவேகிகளாய்ப் பிரம்மசொருபமான அவர்களுக்கே நிரதிசயாபிவியத்தியாய் நித்தியமான சுகமுண்டாகுமென்பார், 'அனுபவத்தாலகத்**துணரவல்லார் தமக்குப் பேரின்பம் வடிவாய் மொழியுமாமறைதான்**' என்றார்.

**கருத்து**—மற்றையர்களான அஞ்ஞர்களுக்குச் சத்தப்பரிச முதலிய விஷயங்களாலுண்டாகிய அநித்தியமான சுகமேதான். இவ்விஷய சுகம் சுபகருமத்தாலாகிய புத்திவிருத்தியையனுசரித்துநிற்றலின் க்ஷணிகத்தன்மையுள்ளதாகும்.(25)

அவதாரிகை.

நித்தியாநித்தியங்களுக்குச் சேதனன் சேதனங்களுக்கு என்றசுருதியின் பொருளைப் பிரதிபாதித்து ஈண்டுச் சத்தை சைதன்யங்களை விளக்கிக் கூறுகின்றார்.

யாவ னறியப் படாமையினு லிவ்வே றுண்டா மிவ்வேறெத்
தேவ னாலே நிலைபெற்றுச் சேதனங்க ளாய்த் திகழு
மோவ லறவே யப்பரனை யுள்ளத் துணர்ந்தோ ருள்ளத்தே
தாவில் சாந்தி குடிகொள்ளு மல்லா தவரைச் சாராதால்.

இதன் பொருள்.

யாவனறியப் படாமையினால் —எவன் தானாகவுணரப்படாததனால்
இவ்வேறுண்டாம் —இந்தப்பின்னங்களான சகங்கள் தோன்றுகின்றன
இவ்வேறு —இச்செகங்கள்
எத்தேவனால் நிலைபெற்று —எந்தத்தேவனால் திரமாகி
சேதனங்களாய்த் திகழும் —சேதனங்களாக விளங்குகின்றன
அப்பரனை ஓவல் அறவே —அந்தப்பரசிவனை ஒழிவின்றிப்பத்தியாக
உள்ளத்துணர்ந்தோர் —மனத்தில் அறிந்தவர்களது
உள்ளத்தே —இருதயத்தின்கண்ணே
தாவில் சாந்திகுடிகொள்ளும்—குறைவில்லாத சாந்தியானது குடிகொண்டிருக்கும்
அல்லாதவரைச் சாராது —அவ்வாறுணராதவர்களிடத்தில் சாந்திபொருந்தாது.

**பதசாரம்**—துவிதப்பிரபஞ்சமானது அஞ்ஞானவசத்தால் சுயம்பிரகாசமான பிரம்மத்தில் அத்தியாசிக்கப்பட்டு விசித்திரமான வெவ்வேறு நாமரூபங்களாகத் தோன்றுகின்றதென்று தெரிவிப்பார், '**யாவனறியப் படாமையினு லிவ்வேறு ணீடாம்**' எனவும், எந்தச் சத்தையின் சம்பந்தத்தால் ஆகாசாதிகளும் வியாவகாரிகமாக நித்தியங்களாகும், எந்தச் சைதன்யத்தை அனுசரித்த பெலத்தினுல் சுராசுரர் முதலியவர்கள் சேதனர்கள் ஆகின்றார்களென்பார், '**இவ்வேறெத் தேவனுலே நிலைபெற்றுச் சேதனங்களாய்த்திகழும்**' எனவும் கூறினர். (26)

## அவதாரிகை.

குறிக்கக்கூடாத ஆன்ம சுகமானது சாதகனுக்குச் சாமானியமாய் விளங்குகின்றதா விஸ்பஷ்டமாய் விளங்குகின்றதா அல்லது விளங்குகின்றதில்லையா என்ற சங்கைக்குச் சாமானியமாய் விளங்குகின்றதும் விசேஷமாய் விளங்குகின்றதும் ஆன்மாவேயென்று உத்தரங்கூறுவார், '**அவ்விடத்திற்றுச் சூரியன் விளங்குகின்றனில்லை**' யென்ற சுருதியின்பொருளை ஈண்டுக் கூறுகின்றார்.

## வேறு.

இதுவதெென வொண்ணுத வெல்லையில்பே ரின்பத்தை
யதுவிதுவென் பர்களறிவோ வறியாமை யோவறிவே
யெதுவுமிறை யானிகழ்வ திறைநிகழ்வி லிவையொன்று
மதிபரிதி யனலொளியு மறுவில்பர னுலொளியாம்.

## இதன் பொருள்.

| | |
|---|---|
| இதுவதென வொண்ணுத | —இது அது என்று கருதக்கூடாத |
| எல்லையில் பேரின்பத்தை | —அளவில்லாத பேரானந்தத்தை |
| அதுவிது வென்பர்கள் | —(பிரம்மநிஷ்டர்கள்) அது இது என்று அனுபவித்துச் சொல்லுவார்கள் |
| அறிவோ அறியாமையோ அறிவே | (அது இப்பொழுதுள்ளவர்களுக்கு விளங்குகின்றதாக) அறியப்படுமோ (விளங்காததாக) அறியப்படாதோ எனின் அறியப்பட்டதாகும் |
| எதுவும் இறையால் நிகழ்வது | —அனைத்தும் பரமசிவத்தினுல் பிரகாசிக்கின்றது |
| இறை நிகழ்வில் | —அந்தப் பரமசிவப்பிரகாசத்தினுல் |
| இவையொன்று | —இவைகள் பொருந்தாவாம் |
| மதிபரிதி அனல் | —சந்திரன் சூரியன் அக்கினியென்னும் |
| ஒளியும் | —இவர்களது பிரகாசமும் |
| மறுவில்பரனுல் ஒளியாம் | —குற்றமற்ற பிரம்மத்தினுல் விளக்கமாகும். |

**கருத்து**—சுபாவமான விளக்கம் குற்றமற்ற பரமான்மாவிற்கேயன்றி அன்னியங்களான பௌதிகங்களெல்லாவற்றிற்கும் எப்பொழுதுமில்லை. ஆதலால் சொப்பிரகாச சிதேகரசமாய்த்தனது சொரூபமான நிரதிசயசுகமே எப்போதும் விளங்குகின்றதும் விசேஷமாய் விளங்குகின்றது மென்றுணர்க. (27)

### அவதாரிகை.

தோன்றுகின்ற காரியப்பிரபஞ்சங்களுக்குமூலமாய் ஒருகாரணமும் இல்லாமலிருக்குந்தன்மை கூடாமையால் மூலகாரணத்திற் கிருக்குந்தன்மை கூறுகின்றார்.

### வேறு.

அரசதொன் றும்பர்வே ராகிநீள் சாகைகீழ்
நிரைசெய்தெங் கணுநிறைந் தென்றுநின் றுள்ளதாற்
கரையிலண் டங்களெல் லாமதன் கண்ணதா
மொருபரம் பொருள்கடந் திடவொணு தொருவரால்.

### இதன் பொருள்.

| | |
|---|---|
| அரசதொன்று | —அரசமரம் ஒன்று |
| உம்பர்வேராகி | —ஊர்த்துவபாகத்தில் வேருடையதாகி |
| நீள்சாகை கீழ் | —நீண்டசாகைகளை அதோபாகத்தில் |
| நிறைசெய்து | —ஒழுங்காகப் பரப்பிக்கொண்டு |
| எங்கணும் நிறைந்து | —எங்கும் நிறைந்து |
| என்றும் நின்றுள்ளது | —எக்காலத்தும் நின்றுள்ளது |
| கரையிலண்டங்களெல்லாம் | —கரையில்லாத அண்டங்கள் அனைத்தும் |
| அதன் கண்ணதாம் | —அந்தமூலப் பிரம்மத்தினிடத்தில் இருக்கின்றதாம் |
| ஒருவரால் ஒருபரம்பொருள் | —ஒருவராலும் ஏகமான பிரம்மசொரூபத்தை |
| கடந்திடவொணுது | —கடக்கக்கூடாது. |

**பதசாரம்**—அவ்வியத்தமுதல் ஸ்தாவரம் வரைக்குமுள்ள சம்சாரவிருட்சத்திற்கு வேரானது சம்சாரமண்டலத்திற்கு மேலிராநின்றதாய் முன்சொல்லிய ஒருபாதியுமில்லாத பிரம்மமேயாகவின், '**அரசதோன் றும்பர்வேராகி**' எனவும், சுவர்க்க நரகங்களை குறுக்குநீட்டங்களான சாகைகளாகவின், '**சாகை கீழ்நிரை செய்து**' எனவும், இந்தச் சமுசார விருட்சத்திற்கு மூலகாரணமான பிரம்மம் சம்சாரதோஷத்தோடும் சேராததாய் அழிவில்லாத சுபாவமாயிருத்தலானும் பரமார்த்த சத்தியமான இப்பிரம்மத்தினிடத்தில் மாயாவிலாசத்தினால் எல்லா உலகங்களும் ஆசிரயித்திருக்கின்றனவாய்ப் பரமார்த்தங்கள்போலத் தோற்றுதலாலும், இங்ஙனங்கூறிய காரியமான சம்சாரவிருட்சமும் வாசாரம்பணமாய்க் கந்தருவ நகர முதலியவைபோல் பொய்யாதலானும், எல்லாவுலகிற்கும் உற்பத்தி ஸ்திதிலயங்களுக்குக் காரணமான பிரம்மத்தை ஒருவிகாரமுந்தாண்டாதென்பார், '**ஒருபரம் பொருள்கடந் திடவொணு தொருவரால்**' எனவும் கூறினர்.(28)

### அவதாரிகை.

சுருதியினால் எந்தப்பொருளின் ஞானத்தால் அமிர்தத்தன்மை சித்திக்குமென்று கூறப்பட்டதோ அதனையும் பிரம்மத்திற்குக்கூறிய அக்கினி வாயு சூரியன் முதலிய திக்குப்பாலகரின் பயஹேதுத்துவத்தையும் விரித்துக் கூறுகின்றார்.

எச்சகத் துஞ்சலிப் பிக்குமீ சானனும்
வச்சிரத் தைப்பெறு மனிதன்வீ டுறுமிவற்
கச்சமுற் றங்கிகா லர்க்கனிந் திரன்யம
னிச்சயிப் பானதந் தொழில்செயா நிற்பரால்.

இதன் பொருள்.

| | |
|---|---|
| எச்சகத்தும் சலிப்பிக்கும் | —எந்தச்சகங்களையும் சலிக்கச்செய்கின்ற |
| ஈசானனும் | —ஈசானனாகிய |
| வச்சிரத்தைப் பெறுமனிதன் | —வச்சிரத்தைப்பெறுகின்ற ஒருமனிதன் |
| வீடுறும் | —மோட்சத்தையடைவான் |
| இவற் கச்சமுற்று | —இந்தச் சிவத்தினிடத்திற் பயமுற்று |
| அங்கிகால் அர்க்கன் | —அக்கினி வாயு சூரியன் |
| இந்திரன் யமன் | —தேவேந்திரன் நமன்(என்னுமிவர்கள்) |
| நிச்சயிப்பான | —நிச்சயிக்கப்பட்டனவாகிய |
| தந்தொழிற்செயா நிற்பர் | —தங்கள் தொழில்களைச் செய்கின்றார்கள் |

**கருத்து**—அக்கினி முதலிய திக்குப்பாலர்களும் அவனிடத்திற்பயந்து தத்தந் தொழில்களில் முயற்சிசெய்துகொண் டிருக்கின்றார்களென்னில் அன்னியர்களுக்குப் பயஹேதுவாமென்று சொல்லவேண்டுவதில்லையாயிற்றென்பதாம்.

அவதாரிகை.

இவ்விடத்தில் அசக்தனாயின் எனவும், எப்படிக்கண்ணாடியிலெனவும், இந்திரியங்களுக்கு வேறுபாட்டை எனவும், கூறிய சுருதிகளின்பொருளை விளக்கித் திருக்கை யறிபவன் ஒருக்காலும் பிறந்திறந்துழலான் எனக் கூறுகின்றார்.

வேறு.

உண்ணாடி யாகத்தி னுணராத வன்றா
  னுடம்பா முடம்புக்கு ளேகாண லாகுங்
கண்ணாடி போலப் பிராணாதி கத்தைக்
  கடம்போற் கழித்துக் கழித்தற்ற பின்னைக்
கண்ணான பானன்றி வேறின்மை யாலக்
  கண்ணான வனுபூதி யாகின்ற கண்ணா
லெண்ணாரும் வேறின்மை கண்டார்க ணேரே
  யிறவாது பிறவாதெ லாமாயி ருப்பார்.

இதன் பொருள்.

ஆகத்தின் உண்ணுடி —இந்தச்சரீரத்தில் உள்ளோநாடி
உணராதவன் உடம்பாம் —தன்னையறியாதவனே உடம்பாகக்கொள்வான்
கண்ணுடிபோல உடம்புக்குள்ளே—கண்ணுடியைப்போல தனது சரீரத்துள்ளே
காணலாகும் பிராணுதிகத்தை—பார்க்கத்தக்க பிராணன் முதலியவற்றை
கடம்போற்கழித்து —கடத்தைப்போலநீக்கி
கழித்தற்ற பின்னை —(அவ்வாறு)கழித்து நீங்கியபின்பு
கண்ணுனபரனன்றி —திருக்கான பரனைத்தவிர
வேறின்மையால் —பின்னமாக ஒருவஸ்துவுமில்லாததனுல்
அக்கண்ணுனவநுபூதியாகின்ற—அத்திருக்கான அனுபவமாகிய
கண்ணுல் —நேத்திரத்தினுல்
நேரே எண்ணுரும் —அபரோட்சமாகக்கருதுகின்றவரும்
வேறின்மைகண்டார்கள் —பின்னமில்லாத தன்மையைக்கண்டவர்கள்
எலாமாய் —சகலமுர்த்தாஞகி
இறவாது பிறவாது இருப்பார்—அழியாமலும் ஜனிக்காமலும் இருப்பார்கள்.

பதசாரம்—வித்தியாதிகாரத்திற்கு யோக்கியமான இந்தச்சரீரம் இருக்கும் காலத்தே பிரத்தியகான்மாவை அனவச்சின்ன பரசிவசொரூபமாக அறிகிறதற்கு எவன் அசக்தனுகின்றுனே அவன் எல்லாவுலகங்களிலும் புண்ணியபாவங்களின் வசத்தினுல் சரீரத்தைச் சுமக்கும்பொருட்டே சிருஷ்டிக்கப்படுவான் என்பார், 'உண்ணுடியாகத்தி னுணராதவன்று னுடம்பாம்' எனவும், எப்படி அழுக்கில்லாத கண்ணுடியில் தன்னுடைய ரூபத்தை நன்ருகப்பார்க்கின்றுனே அப்படியே இந்தமானுட சரீரத்தில் சிரவணமனன முதலிய சாதன கல்பானுஷ்டானத் தால் ஆன்மாவைப் பிரம்மரூபமாகச் சாட்சாத்கரிக்கலாமன்றி மற்றை எவ்விடத் திலும் சாதனுநுஷ்டான முண்டாகாததனுல் இந்தஞானம் சுலபமன்றென்பது தோன்ற 'உடம்புக்குளே காணலாகுங் கண்ணுடிபோல' எனவுங் கூறினுர்.

கருத்து—இந்திரியங்கள் மனம் சத்துவம் ஆன்மா அவ்வியத்தம் என் னுந் தத்துவங்கள்முறையே காரணமாய்ச் சூக்குமமாதலால், ஒன்றற்கொன்று உத்தமத்தன்மையைக்கூறி இவ்வெல்லாவற்றிற்கும் சாட்சாத்தாய் வியாபகனுன புருஷன் லிங்கசரீரத்திற்கு வேருயுள்ளவனுகலிற், சகலபுண்ணியபாவங்களின் சம்பந்தமும் லிங்கசரீரத்திற்காதலால் அதை நிஷேதித்தலினுல் ஆன்மாவிற்கு சம்சார சம்பந்தமில்லையென்று வடநூலில் கூறியபொருளை இவ்வத்தியாயத்தில் 'இந்தியங்களிற் பொருள்துபரமேனும்' என்ற செய்யுளிற் காண்க. (30)

அவதாரிகை.

இந்த நிருபாதிகனுன ஆன்மாவை எப்படி அறிகின்றதென்று சங்கித்து அதற்குச் சமாதானமும், எவர்கள் இவனை அறிகின்றுர்களென்ற சுருதியின் பொருளைக்கூறி அவற்றுள் கூருததாயுள்ள மற்றைச் சுருதி வாக்கியங்களுக்குப் பொருளைத் தாற்பரியமாய் விளக்கியும் சங்கிரகித்தும் கூறுகின்றுர்.

வேறு.

ஒருவருங் கண்ணாற் காண வொண்ணும தன்றுள் ளத்தாற்
கருதவுந் துணிந்தங் கொன்றக் கடவது மலாத தைத்தான்
சுருதியா லனுப வத்தாற் றுணிந்தவர் சுக சொரூப
மருவியே மாண்டு மீண்டு வரும்வழி மறப்ப ரன்றே.

இதன் பொருள்.

| | |
|---|---|
| ஒருவருங் கண்ணால் | —யாவர்களும் நேத்திரத்தினால் |
| காணவொண்ணுமதன்று | —பார்க்கத்தக்கதல்ல |
| உள்ளத்தாற் கருதவும் | —மனத்தினால் நினைக்கவும் |
| துணிந்து அங்கு | —நிச்சயித்து அங்கு |
| ஒன்றக்கடவதும் அலாது | —பொருந்தக் கூடுவதுமல்லாதது |
| அதைத்தான் | —அந்தச்சொரூபத்தை |
| சுருதியால் அனுபவத்தால் | —சுருதியினாலும் அனுபவத்தினாலும் |
| துணிந்தவர் | —அறிந்தவர்கள் |
| சுகசொரூபமருவி | —சுகசொரூபத்தையடைந்து |
| மாண்டு மீண்டுவரும்வழி | —இறந்து திரும்பவும் பிறக்கும்வழியை |
| மறப்பர் | —மறந்துவிடுவார்கள். |

**பதசாரம்**—மனனரூபமான சம்யக்தரிசனத்தினால் என்பார், உள்ளத்தாற் **கருதவும்**' என்றார். கண்ணாற்காண வொண்ணுமதன்று என்றதனால் மற்றை இந்திரியங்களாலும் அந்தச்சொரூபத்தைக் காண்பரிய தென்பதூம்பெற்றாம்.(31)

அவதாரிகை.

இவ்வாறு கடவல்லி உபநிஷதத்தால் சச்சிதானந்த ஏகரசப் பிரமான்ம ஐக்கிய பாத்தன்மையைத் தெரிவித்து சுவேதாச்வதர உபநிஷதத்திற்கும் அத்தன் மையைச் சேஷத்தாற் கூறப்புகுந்தார், அவ்வுபநிடதத்தில் யாது ஜகத்காரணம் அதுவே பிரம்மமென்றறியும் பொருட்டுக் காலம், சுபாவம், நியதி, யதிர்ச்சை என்றது முதலியவற்றால் காலமுதலியவற்றிற்கு ஜகத்காரணத் தன்மையில்லை யென்று நிஷேதித்து தியானயோகத்தை அடைந்தவர்கள் பார்க்கின்றார்கள். தனது குணங்களால் கோப்பியமான தேவன் தன்சத்தியை, என்ற சுருதியால் மாயாசகிதனாய் சொப்பிரகாச சிதான்மாவான பிரம்மத்திற்கு ஜகத்காரணத் தன்மை உபதேசிக்கப்பட்டது. அந்தச் சத்தியோகத்தன்மையைக் கூறுகின்றார்.

வேறு.

வித்தக வேதப் பொருளதாய் ஞான விழியினால் விளங்கிடும் பொருட்கோர்
புத்தியி னாலு முள்ளவா றறியப் போயிடா தாயிருந் துள்ள
சத்தியுண் டந்தச் சத்தியோ டென்றுந் தான்பிரி வின்றிய ததுவே
சத்திய ஞான வனந்தவானந்த தத்துவ மாகியே யிருக்கும்.

இதன் பொருள்.

வித்தக வேதப்பொருளதாய் —ஞானசொரூபமாயிருக்கின்ற சுருதிப்பொருளாகி
ஞானவிழியினுல் —ஞானக்கண்ணுல்
விளங்கிடும்பொருட்கு —பிரகாசிக்கின்ற பிரம்மத்துக்கு
ஓர்புத்தியினுலும் உள்ளவாறு—ஒருபுத்தியினுலும் உள்ளவண்ணம்
அறியப் போயிடாதாயிருந்துள்ள—அறியக்கூடாததாயிருக்கின்ற
சத்தியுண்டு —ஒருசத்தியிருக்கின்றது
அந்தச்சத்தியோடு —அந்தச்சத்தியுடன்
என்றுந்தான் பிரிவின்றியது —எக்காலத்தும் தான் பிரிவில்லாமலிருப்பதாகும்
அதுவே சத்தியஞான —அந்தப்பிரம்மமே சத்தியமாயும் ஞானமாயும்
அனந்த ஆனந்த தத்துவமாகியே—முடிவில்லாத ஆனந்தசொரூபமாயும்
இருக்கும் —இருக்கின்றது.

பதசாரம்—அப்பிரம்மத்திற்குச் செய்யத்தகாதவற்றையுஞ் செய்யுமொரு சத்தியுண்டு. அங்ஙனமில்லாவிடில் சக்தியில்லாத அசத்தனுக்கு அது அக்கினியைச் சிருட்டித்தது என்றது முதலியவற்ருல் கேட்கப்படுங் காரணத்தன்மை கூடாதென்பதால்'அந்தச்சத்தியோடென்றுந்தான்பிரிவின்றியதது' என்ருர்.(32)

அவதாரிகை.

இங்குப் போக்கிய போக்தா பிரேரிதா வாகிய உண்பான் உண்ணப்படுவது ஊட்டுவான் என்று மூவிதமாக விவக்ஷிக்கப்பட்டது. அது அத்துவிதீயமான பிரம்மத்தினிடத்தில் எப்படிக்கூடுமென்றுசங்கித்ததனை விளக்கிக் கூறுகின்ருர்.

மெய்யதா முருவம் விமலமா மிறைக்கு
விளங்கிய திவ்யமா முருவம்
வையமா முருவ மற்றுமோ ருருவ
மறைமுத லாகவே விளம்பல்
செய்யும்நூ லெல்லாம் வேறுமோ ருருவஞ்
சிவனுடை வடிவிலே யிவற்றிற்
றுய்யதா முருவஞ் சொல்லிலவ் விறைக்குத்
துலங்கிய ஞானமே சொரூபம்.

இதன் பொருள்.

விமலமாமிறைக்கு —நின்மலனை பரமசிவனுக்கு
மெய்யதாமுருவம் —உடலோடுங்கூடினவனுகிய ஜீவன் ஒருவடிவமாகும்
விளங்கிய திவ்யமா முருவம் —இலங்குகின்ற ஈச்வரன் ஒருவடிவமாகும்
மற்றுமோருருவம் —பின்னுமொருவடிவமானது

வையமாமுருவம் —போக்கியமாகிய உலகவடிவமாகும்

மறை முதலாகவே —வேதங்கள் முதலாக

விளம்பல்செய்யும் நூலெல்லாம்—சொல்லுகின்ற சாஸ்திரங்கள் அனைத்தும்

வேறுமோருருவம் —மற்றும் ஒருவடிவமாகும்

சிவனுடை வடிவிலை —(இவ்வடிவங்களெல்லாம் உண்மையாகச்) சிவனுடைய வடிவமில்லை

அவ்விறைக்கு —அந்தப் பரமசிவனுக்கு

இவற்றில் —(இப்பொழுது கூறிய)இந்த வடிவங்களைக்காட்டிலும்

துய்யதா முருவஞ் சொல்லில் —சிரேஷ்டமாகிய வடிவத்தைச் சொல்லுங்கால்

துலங்கிய ஞானமே சொரூபம் —பிரகாசிக்கின்ற ஞானமே வடிவமாகும்.

**கருத்து**—சச்சிதானந்தமான பிரம்மம் சத்துவ ரஜ தமோ குணரூபமான தனது மாயையினால் கடமுதலிய உபாதிகளால் ஆகாசம்போல் பின்னபேதங்களோடுங் கூடுகின்றது. அவற்றுள் மலின சத்துவப் பிரதான மாயாவச்சின்னமான ரூபம் ஜீவனென்னும் பெயரை அடைகின்றது. தமப்பிரதான மாயாவச்சின்னமானது போக்கியசகமாகும். விசுத்தசத்துவப் பிரதான மாயாவச்சின்னமான மற்றொரு ரூபம் ஈசனென்னும் பெயருடைத்தாய்ப் போகத்தைக்கொடுக்கும். மாயாதீதமான அந்தப்பிரம்மத்திற்கு எல்லா வேதாந்தங்களாலும் பிரதிபாதிக்கும் கேவலம் சிதேகரசமாய் யாதொன்று சுத்தரூபமுண்டோ அது சோபாதிகங்களான மூன்றுருவங்களைக்காட்டிலும் விலட்சணமாகு மென்றுணர்க. (33)

## அவதாரிகை.

எல்லாருக்கும் சீவனமான பிரம்மத்திலென்ற மந்திரத்தால் சீவனுக்கு அவித்தையினால் சம்சார சக்கிரத்திற் சுற்றுதலும் வித்தையினால் பிரம்ம தாதான்மியமும் யாதென்று கூறப்பட்டதோ அதனை ஈண்டு விளக்கிக் கூறுகின்றார்.

பெரியதா யெவர்க்கு முள்ளதா யுயிராய் நிறைந்துள பிரமசக் கரத்தே
திரிதரா நிற்குஞ் சீவனிப் பரிசே திரிதரு மிவனையுந் திரிக்கும்
பரமனு முள்ள வவனையு மனனம் பண்ணியிப் படியிலே பார்ப்பா
னொருவனே செனன மரணமற் றென்று முள்ளதாய் நிகழ்ந்திட வுரியான்.

## இதன் பொருள்.

பெரியதாயெவர்க்கு முள்ளதாய்—மகத்தாயும் யாவர்க்கும் ஆந்தரமாயும்

உயிராய் நிறைந்துள —பிராணாதாரமாயும் நிறைந்திருக்கின்ற

பிரம்மசக்கரத்தே —பிரம்மத்தாலுண்டாகிய சம்சாரசக்கரத்தில்

சீவன் திரிதராநிற்கும் —சீவன் சுழலுகின்றான்

இப்பரிசே திரிதருமிவனையும் —இவ்வண்ணமே சுழல்கின்ற இந்தச்சீவனையும்

திரிக்கும் —சுழற்றுகின்ற

பரமனுயுள்ள அவனையும் —சிரேஷ்டனுயிருக்கின்ற அந்த ஈசுவரனையும்
மனனம் பண்ணி —மனனஞ்செய்து
இப்படியிலே பார்ப்பானெருவனே—இவ்வண்ணமாகப்பார்க்கின்ற ஒருவனே
செனனமரணமற்று —பிறப்பிறப்பு ஒழிந்து
என்றும் உள்ளதாய் —எக்காலத்துமுள்ள (பிரம்மமாகவே)
நிகழ்ந்திடவுரியான் —விளங்குதற்கு உரியனுவான்.

**கருத்து**—தனது அவித்தையினுல் சமுசாரசக்கரத்தில் சுற்றுகின்ற ஜீவன் தன்னுற் செய்யப்படும் புண்ணியவசத்தாலும் பரமசிவனுடைய திருவருளினுலும் சிரவணமனன முதலிய சாதன கலாபங்களையுடையவனுய்க் குருவினுலுபதேசிக்கப்பட்ட சாத்திரக்கேள்வியினுல் பிரத்தியகான்மாவையும் ஈசனையும் ஒன்ருக மனனத்தால் சாட்சாத்கரித்து மோட்சத்தை அடைகின்ருனென்றறிக. (34)

**அவதாரிகை.**

இந்த ஜீவனுக்கு ஈசனேடு பிரித்தற்குமுடியாத தாதான்மியத்தை நன்ருகப் பிரதிபாதிக்கின்ற அன்னியமந்திரத்தை ஈண்டு எடுத்துக் கூறுகின்ருர்.

**வேறு.**

அறிவனு மறியா தானு மாய் நிகழ் பரசீ வர்க்கு
மறையினுல் வடிவாற் றர்க்க வழியினு லனுப வத்தாற்
பிறிவிலை மாயை போக வேதுவாம் பிரமந் தானிங்
கறைதரு மெல்லாந் தானு யகர்த்துரு வாகி நிற்கும்.

**இதன் பொருள்.**

அறிவனும் அறியாதானுமாய் —சர்வக்கியனும் கிஞ்சிக்கியனுமாகி
நிகழ்பர சீவர்க்கு —பிரகாசிக்கின்ற சிவேசர்களுக்கு
மறையினுல் வடிவால் —வேதங்களாலும் அவர்களது சுபாவத்தினுலும்
தர்க்கவழியினுல் —தருக்கமார்க்கத்தினுலும்
அனுபவத்தால் பிறிவிலை —அனுபவத்தினுலும் பேதமில்லை
மாயை போகவேதுவாம் —மாயையானது போகத்துக்குக்காரணமாகும்
இங்கு பிரமந்தான் அறைதரும்—இவ்விடத்தில் பிரம்மமானது சொல்லுகின்ற
எல்லாந்தானுய் —அனைத்துந்தானுயும்
அகர்த்துருவாகி நிற்கும் —அகர்த்தாவாயும் விளங்குகின்றது.

**பதசாரம்**—சைதன்னியமாய் ஏகசுபாவனுன தத்பதார்த்தன் பரசிவனுவான். கர்த்தாவாய்ப்புசிப்பவனுய் ஆவரித்த ஞானனுனவன் துவம்பதார்த்தனுன ஜீவனுவான். இவ்விருவர்களும் பிரதீதியினுல் பின்னர்களாவார்களன்றிப் பரமார்த்தமாக, 'அதுநீயாகின்றய் நான் பிரம்மமாகின்றேன்' என்றது முதலான சுருதி

யினுலும் அதனையனுசரித்த யுக்தியினுலும் வித்வான்களநுபவத்தாலும் அவர்கள் அபின்னர்களே யன்றிப் பின்னர்கள் அல்ல. ஆனல் அப் பேதமும் உபாதியாலுண்டாயிற்றே யன்றி வாஸ்தவமாக வில்லையென்பதுதோன்றப், பரசீவர்க்கு மறையினல் வடிவாற் றர்க்க வழியினலனுப வத்தாற் பிறிவிலை' என்ருர்.

கருத்து—மலினசத்துவப் பிரதானமாயையினல் வசிகரிக்கப்பட்ட பிரத்தியகான்மாவன்றே கர்த்தா போக்தாவாவான். பரமான்மாவோவெனின் மாயையை சுவாதீனஞ் செய்தவனுதலால் நாநாவித ரூபனுயினும் கருத்திருத்துவ முதலிய சகல சம்சார தருமமில்லாதவனே. ஆதலால் அந்தவுபாதியை நீக்கிடில் வடிவிலும் அனுபவித்திலும் அவர்களுக்கு ஏகத்தன்மை நிச்சயமென்றறிக. (35)

## அவதாரிகை.

ஆன்மஞானத்தினல் அப்பொழுதே முத்திகாணுததனல் அதற்கு அந்தச் சாதனத்தன்மை பிரத்தியட்ச விருத்தமென்னும் பிராந்தியை நீக்கும்பொருட்டு 'அவனுடைய தியானத்தினல்' என்ற சுருதியை யுதாகரித்துக் கூறுகின்ருர்.

## வேறு.

நாசமுற்று விடு மாயைசீவ னசி யானிரண்டி னிலு நாதனு
மீசனிற்கு மிறை யைத்தியான பர னுகவந்த வியல் பாலுமே
யோகசத்தி னிலை யாலுமேக மெனு முண்மையாலு முயிர் முடிவினிற்
றேசெனத் திகழு மிங்ஙனே பிறிது செய்தமாயை சிதை வாருமால்.

## இதன் பொருள்.

| | |
|---|---|
| மாயை நாசமுற்றுவிடும் | —அவ்வியத்தமானது நாசத்தையடையும் |
| சீவன் நசியான் | —சீவனனவன் அழியமாட்டான் |
| இரண்டினிலும் | —இந்த இரண்டினிலும் |
| நாதனும் ஈசனிற்கும் | —நாதனுகிய ஈசுவரன்நிற்கின்ருன் |
| இறையை | —(நாயகனுகவிருக்கின்ற) பரமசிவனே |
| தியான பரனுகவந்த | —தியானஞ்செய்கின்றவனுகவந்த |
| இயல்பாலும் | —குணத்தினுலும் |
| யோகசத்தினிலையாலும் | —யுக்தி நிலையினுலும் |
| ஏகமெனுமுண்மையாலும் | —அத்துவிதமென்னு முண்மையினுலும் |
| உயிர்முடிவினில் | —சீவோபாதி முடியுமிடத்தில் |
| தேசெனத்திகழும் | —பிரகாசம் போற்றேன்றும் |
| இங்ஙன்பிரிதுசெய்தமாயை | —இவ்விடத்தில்துவிதத்தையுண்டாக்கியபிரகிருதியும் |
| சிதைவாரும் | —நாசத்தையடையும். |

பதசாரம்—வித்தையால் நீங்கப்படுதலால், 'நாசமுற்று விடுமாயை' என்றார். பின்னம்போலத் தோன்றுகின்ற மாயாகாரியமான பேதம் பிரம்மத்தினிடத்தில் அத்தியாசிக்கப்பட்டு அதற்கு வேறில்லாமையினால் சுயம்பிரகாசனாய் ஒருவனான பரசிவனேயுள்ளானென்பது தோன்ற 'இரண்டி லிலு நாதனா மீசனிந்தும்' என்றார்.

கருத்து—இதனால் 'க்ஷரம்மாயை' யென்ற மந்திரத்தின் பொருள் கூறப்பட்டதாம். ஒருபேதமும் இல்லாத சிதானந்தரசமான பிரம்மத்தினுடைய தியானமாய் தோற்றுகின்ற எல்லாம் பிரம்மமன்றோ என்னுந் தடஸ்தஞானத்தினால் பேதப்பிரபஞ்சமாத்திரம் நீங்காநிற்கும். அந்தப்பொருளேயே நான் பிரம்மமாகின்றேனென்று தானாக யுக்தியால் மனனத்தால் பிரத்தியக்குக்குப் பிரம்மத் தன்மையில்லையென்று எண்ணும் மாயைநீங்கும். திரும்பவும் அந்த ரூபத்தினுடைய பாவனையான நிதித்தியாசனத்தால் பிரம்மவிஷயமான அபரோட்ச ஞானமுண்டாகும். அதனால் மாயை தனது காரியத்தோடு நீங்குமாயினும் அதனாலுண்டாகிய வாசனை பிராரப்தகருமபலம் க்ஷயமாகும்வரைக்கும் தொடராநிற்கும். வித்துவானுக்கு அதுவரைக்கும் தேகயாத்திரை முதலிய விவகாரம் விரோதமாகாது. திரும்பவும் பிராரப்த கரும பலபோகம்முடிந்து விதேக கைவல்யத்தையடையுங்காலத்தில் தனது வாசனையோடுங்கூட எல்லா மாயையும்நீங்கும்.

அவதாரிகை.

இங்ஙனங்கூறிய தியான முதலியவற்றிற்கும் அவற்றால் சேரப்படுவனவாகிய பலத்தைக்கூறுகின்ற சுருதியைச் சங்கிரகித்துக் கூறுகின்றார்.

வேறு.

ஈசனை யறிந்த வந்த விடத்திலே யெண்ணு மெல்லாப்
பாசமு நசித்த றானும் பணியறப் பவத்தின் றீர்வுங்
காசுறு மகில மாயக் கங்குலின் கழிவுந் தானே
யாசறு மகண்ட ரூபி யாகையு மனைத்து மெய்தும்.

இதன் பொருள்.

ஈசனையறிந்த அந்தவிடத்திலே—பரமசிவனை அறிந்த அந்தவிடத்தின்கண்ணே
எண்ணுமெல்லாப் பாசமும் —கருதுகின்ற பந்தமனைத்தும்
நசித்தல் தானும் —நசிப்பதுவும்
பணியறப்பவத்தின் தீர்வும் —தொழில்கள் ஒழியும்படி பிறவியின் அழிவும்
காசுறும் அகிலமாய —குற்றம்பொருந்திய உலகமாயையாகிய
கங்குலின் கழிவும் —இருட்டினது தீர்வும்
தானே ஆசறும் —தானே குற்றமில்லாத
அகண்டரூபியாகையும் —அகண்ட சொரூபனாதலும்
அனைத்தும் எய்தும் —மற்றனைத்தும் சித்திக்கும்.

**கருத்து**—மலம், மாயை, கருமம் என்னுமிவை முதலிய பாசங்களும் அவித்தை முதலிய ஐந்து கிலேசங்களும் நீங்குமெனவும், அதினுடைய தியானத்தால் மூன்றுந்தேக நீங்குமென்று சுருதி கூறியபடி அத்துவிதப் பிரம்மசாட்சாத்காரத்தால் மூலாஞ்ஞானம் நீங்கினவளவில் ஒன்றையும் அபேக்ஷிக்கவேண்டுவதில்லாத கேவல ஆத்மா வஸ்தான லட்சணமான ஈச்வரத்துவத்தையடைகின்றான். (37)

அவதாரிகை.

ஆப்தகாமனாய் மாயாசக்திவசத்தால் மூவகைப்பட்ட ஜகத்தை யொழித்துவிட்டு ஆன்மாவைத்தவிர ஒன்றுமின்றென உறுதிப்பட்டு உண்மையாய் அபின்னமான கைவல்யரூபப் பிரம்மமே சாட்சாத்கரிக்கத் தக்கதென்று கூறுகின்றார்.

மேவிய தன்பா லுள்ள மெய்ப்பொரு ளொன்று மன்றி
யாவுமிங் கறிய வேண்டா வருந்துமிப் பொருளு மாகிச்
சீவனு யுண்பா னாகிச் சிவனென வூட்டு வானாய்
மூவித மாகி நிற்கு மூலமாம் பிரமந் தானே.

**இதன் பொருள்.**

மேவிய தன்பாலுள்ள —பொருந்திய தன்னிடத்திலிருக்கின்ற
மெய்ப்பொருளொன்றுமன்றி —உண்மைப்பொருளாகிய ஆன்மாவைத்தவிர
யாவுமிங்கறிய வேண்டா—வேறொன்றினையும் இவ்விடத்தில் அறியவேண்டாம்
அருந்துமிப்பொருளுமாகி —புசிக்கின்ற இந்தப்போக்கிய வஸ்துவாயும்
சீவனுயுண்பானாகி —போக்தாவாகிய சீவனாயும்
சிவனென வூட்டுவானாய் —பிரேரிதர்வாகிய ஈச்வரனாயும்
மூலமாம் பிரம்மந்தானே —காரணமாகிய பிரம்மமே
மூவிதமாகி நிற்கும் —மூன்றுபிரிவாக நிற்கின்றது.

**பதசாரம்**—இப்பிரம்மத்துக்கு வேறானது பொய், என்ற சுருதியின்படி பிரம்மத்திற்கு வேறான தத்துவமில்லையால் 'யாவுமிங்கறியவேண்டா' என்றார்.

அவதாரிகை.

இங்ஙனங்கூறிய பிரமஞானமுண்டாவதற்கு உபாயத்தைப் போதிக்கும் பொருட்டு 'அக்கினியினுடைய' மூர்த்தி என்ற சுருதிப்பொருளைக் கூறுகின்றார்.

வேறு.

தீமரந் தொறு மடைந் தழிவுறுது தெரிவா
காமைநின் றாணி யால்வடிவு காணு மதுபோ
லாமுடம்பி லழிவின்றி மறைகின்ற வமல
னேமெனும்பொரு ளுணர்ந்திட வுடம்பில் வெளியாம்.

இதன் பொருள்.

| | |
|---|---|
| தீமரந்தொறுமடைந்து | —அக்கினியானது மரங்கள்தோறுமிருந்து |
| அழிவுறு து | —அழியாமல் |
| தெரிவாகாமை நின்று | —கண்ணுக்குப் புலப்படாமல் நின்றும் |
| அரணியால் | —கடைதலால் |
| வடிவுகாணுமதுபோல் | —அதன் வடிவங் காணப்படுதல்போல |
| ஆம் உடம்பில் அழிவின்றி | —உண்டாகிய சரீரத்தின்கண் நாசமில்லாமல் |
| மறைகின்ற அமலன் | —மறைந்திருக்கின்ற ஆன்மாவானவன் |
| ஓமெனும் பொருளுணர்ந்திட | —பிரணவப் பொருளையறிந்திட |
| உடம்பில் வெளியாம் | —சரீரத்தில் தெரியவரும். |

கருத்து—அந்தப் பிரம்மமும் இதயதாமரையில் தியானிக்கத்தக்கதாயும் அறியத்தக்கதாயும் பரம் அபரமென்று இருவகையாக இருந்துவிளங்கும். இதயம் அதராரணியும் பிரணவம் உத்தராரணியும் பிரணவத்திற்கு அபிதேயமாயும் ஆலம்பனமாயும் இருக்கின்ற பரம் அபரமென்னும் இருவகையான பிரம்மத்தினுடைய தியானம் மதனமுமாகும். அதனுடைய அப்பியாசமும் சாட்சாத்காரம் உண்டாகும்வரைக்கும் செய்யவேண்டும். இந்த உபாயத்தால் நிருபாதிகமாய்ச் சுயம்பிரகாசமான ஆன்மசொரூபத்தை, எப்படி விறகில் தெரியாதிருக்கின்ற அக்கினியை அதரோத்தரங்களாகிய அரணிகளால் விடாதுகடைதலினல் அடைகின்ருரோ அப்படியே சாட்சாத்கரிக்கத் தெரிந்தடைவானென்றுணர்க. (39)

அவதாரிகை.

இவ்வாறு ஆன்மாவைத் தரிசிக்கவேண்டுமென்று அனேக திருஷ்டாந்தங்களாற் கூறிச் சத்துவ முதலிய சாதனங்களையும் ஈண்டு உபதேசிக்கின்ருர்.

உலத்தலின்றி யொழிவற்ற பொருளுண்மை யதுதான்
சலித்தலின்றி யதவத்தி னவர்தங்க ணெதிரே
திலத்திலெண்ணெ யரணிக்க னறநித்தி கழுகெய்
நிலத்தினீ ரென நிகழ்ந்து வெளியாகி நிலையாம்.

இதன் பொருள்.

| | |
|---|---|
| உலத்தலின்றி | —நாசமில்லாமல் |
| ஒழிவற்ற பொருளுண்மையது | —நீங்குதலில்லாத வஸ்துவானது |
| சலித்தலின்றிய | —சலனமில்லாத |
| தவத்தினவர் தங்கணெதிரே | —தவத்தையுடையவர்களது கண்ணுக்குமுன்பாகவே |
| திலத்திலெண்ணெய் | —எள்ளில் எண்ணெய்போலும் |
| அரணிக்கனல் | —அரணியில் அக்கனிபோலும் |

| | |
|---|---|
| ததித்திகழு நெய் | —தயிரில் விளங்குகின்ற நெய்போலும் |
| நிலத்தில் நீரென | —பூமியிற் சலம்போலும் |
| நிகழ்ந்துவெளியாகி நிலையாம் | —அந்த ஆன்மாவிளங்கி வெளிப்பட்டு நிலையாகும். |

**கருத்து**—எண்ணெய் முதலியவை திலமுதலியவற்றில் அவிவேகத்தால் அறியப்படாதனவாயினும் ஆட்டுதல் குடைதல் கடைதல் தொடுதல் முதலியவற்றால் விவேகத்தால் அடையப்படுவனபோல், நிருபாதிகனான இவ்வான்மாவைச் சத்தியவசனனுய்க் கிருச்சிரசாந்திராயண முதலிய விகித வருணாச்சிரமமான ஸ்வ தருமங்களையுடைய சாதகன் எவனோ அவனே சிரவணமனன முதலியவற்றால் பக்குவமான மனத்தால் சாட்சாத்கரிக்க வேண்டுமென்றுணர்க. (40)

## அவதாரிகை.

இவ்வாறு பாலிற் காரணரூபமாகவிருக்கும் நெய்யைப் பால் வியாபித்திருக்கின்றதுபோல் காரணமான ஆன்மாவினால் காரியமான எல்லாவுலகும் வியாபிக்கப்படுமென்றும், அத்துவிதமான பிரம்மத்திற்குத் தனது சக்திவசத்தால் புசிப்பவன் போக்கியம் போகப்பிரதனென்னும் மூவகையான ஸ்திதியும், அபரிச்சின்ன சிதானந்த ஏகரச நிருபாதிக ஆன்மஞானத்தால் மோட்சமும் என்றும், எல்லா உபநிஷதங்களின் பொருளையும் சங்கிரகித்துக்கூறுஞ் சூத்திர பூதமான சுவேதாச்வதரத்தின் முதலத்தியாயத்தையுரைசெய்து, மற்றைய வைந்தத்தியாயங்களும் இங்ஙனங் கூறியவற்றையே விரித்தலினால் அதனை ஈண்டுச் சுருக்கிக் கூறுகின்றார்.

## வேறு.

ஆகு ஞானநற் றவமறை மீறறை யருத்தமு மதுவல்லா
லியாக தானபுண் ணியங்களா லியோகம்வந் தெய்தும்வந் தெய்துற்ற
யோக ஞானமுள் புகுத்துமெய் யுணர்வுதா னுள்ளவா றுளவாறே
யேக மானவீ டளித்திடுங் கருமத்தா லின்பவீ டெய்தாதே.

## இதன் பொருள்.

| | |
|---|---|
| நற்றவம் ஆகும் ஞானம் | —நல்ல தபோபலத்தால் ஞானம் உண்டாகும் |
| மறையீறு | —உபநிஷதங்கள் |
| அறை அருத்தமுமது | —சொல்லுகின்ற தாற்பரியமும் அதுவாகும் |
| அல்லால் | —இதுவன்றியும் |
| யாகதான புண்ணியங்களால் | —எக்கியதான முதலிய புண்ணியங்களால் |
| யோகம் வந்தெய்தும் | —யோகஞ் சித்திக்கும் |
| வந்தெய்துற்றயோகம் | —வந்துபொருந்திய யோகமானது |
| ஞானம் உள்புகுத்தும் | —அபரோட்ச ஞானத்தை இருதயத்தில் உண்டாக்கும் |
| மெய்யுணர்வுதான் | —அந்த அபரோட்சமானது |
| உள்ளவாறு உளவாறே | —எப்படியிருக்கின்றதோ அப்படியே |

ஏகமான வீடு அளித்திடும் —அத்துவித முத்தியைக் கொடுக்கும்
கருமத்தால் —கருமங்களால்
இன்பவீடு எய்தாது —பிரமானந்தமாகிய மோட்சம் கிடைக்காது.

**கருத்து**—பரமேசனுக்கு அர்ப்பணஞ்செய்யும் புத்தியால் அனுஷ்டிக்கின்ற நித்தியநைமிக கருமங்களால் 'மூன்றங்க முன்னதமாய்ச் சரீரம் சமனாய்' என்று சுருதிகூறிய யோகமுண்டாகும். இவ்வாறு ஒருமைப்படு மனத்தையுடையவனுக்குச் சிரவண முதலிய அனுஷ்டானத்தால் வருத்தமின்றிப் பிரமான்ம ஐக்கிய ஞானமுண்டாகும். அதனால் சகல சங்கற்பங்களும் நசித்துப்பூரணமான முத்தியுண்டாகுமென்பதே ஐந்தத்தியாயங்களுக்குந் தாற்பரியமென்றறிக. (41)

அவதாரிகை.

பிரம்மவித்தையைக் கோபனம் பண்ணும்பொருட்டு அத்தியாச் சிரமிகளுக்கென்று அதிகாரியின் இலக்கணத்தைச் சுருதிகூறியபடி உபதேசிக்கின்றார்.

மிக்க சாந்தராய் நீற்றினுத் தூளணம் புண்டரம் விளங்கச்செய்
பக்கு வர்க்கிது பகரலா மல்லது பகர்ந்திடப் படாதென்றுந்
தக்க நற்குர வன்றனைச் சிவனெனத் தானினைந் திடுவாருட்
புக்க லாகுமிங் குரைத்தமெய்ப் பரம்பொருள் புரணமாய் வெளியாக.

இதன் பொருள்.

மிக்க சாந்தராய் —மிகுந்த சாந்தர்களாகி
நீற்றினுத்தூளணம் —விபூதி யுத்தூளணம்
புண்டரம் —திரியக்குத் திரிபுண்டரமும்
விளங்கச்செய் —விளங்கும்படி தரித்துக்கொள்ளுகின்ற
பக்குவர்க்கு —பக்குவமுடைய அதிகாரிகளுக்கு
இதுபகரலாமல்லது —இந்தப்பொருளை உபதேசஞ்செய்யலாமேயன்றி
என்றும் —எக்காலத்திலும்
பகர்ந்திடப்படாது —(மற்றையர்களுக்கு) உபதேசஞ்செய்யக்கூடாது
தக்கநற்குரவன்றனை —தகுந்த நல்ல குருவை
சிவனெனத்தானினைந்திடுவார் —சிவனென்றே கருதுகின்ற மகாத்மாக்களது
உள் இங்குரைத்த —இருதயத்தில் இவ்விடத்திற் கூறிய
மெய்ப்பரம்பொருள் —உண்மையாகிய பரம்பொருள்
புரணமாய் வெளியாக புக்கலாகும்—பிரகாசமாயும் அபரோட்சமாயும் செல்லும்.

**பதசாரம்**—எது அத்தியாச்சிரமம் எவன் யோகாதிகாரி என்னில் ஜாபாலத்தில் உபதேசித்த பிரகாரம் விபூதியுத்தூளணம் திரிபுண்டரதாரணம் சிவமந்திர ஜபம் சிவபூஜை இவை முதலியவையே அத்தியாச்சிரமம். இவ்வனுஷ்டான

முடையவன் அதிகாரியென்பதுதோன்ற, 'மிக்க சாந்தராய் நீற்றினுத் தூளணம் புண்டரம் விளங்கச்செய் பக்தவர்க்கிது பகரலாம்' எனவும், சிவபக்திபோல் குருபக்தியும் ஞானேத்பத்திக்கு அந்தரங்க சாதனமென்பதுதோன்ற, 'தக்க நற்குரவன்றனைச் சிவனெனத் தானினைந் திடுவான்' எனவுங் கூறினர். (42)

அவதாரிகை.

பிரதிபாதிக்கப்பட்ட உபநிஷதத்தின் பொருளை முடித்துக் கூறுகின்றார்.

அரிய மாமறை வாக்கினு லுங்களுக் கறியவு மறைந்தேனன்
தெரியு மாகின்மற் றவன்றெரி யாமையைக் கடந்துபோய்ச் சிந்தைக்குப்
பிரிய மாகிய பாப்பிர மத்தையே பெற்றுமேற் பிறவாமைக்
குரிய னுகுமென் றுரைத்தன னுணர்வினு லுலகெலாம் படைத்திட்டான்.

இதன் பொருள்.

| | |
|---|---|
| நான்அரிய | —நான் அரிதாகிய |
| மாமறைவாக்கினுல் | —பெருமை பொருந்திய சுருதி வசனங்களால் |
| உங்களுக்கறியவும் அறைந்தேன் | —உங்களுக்கு அறியும்படி உபதேசித்தேன் |
| தெரியுமாகில் | —அறியப்படில் |
| அவன் தெரியாமையை | —அந்த விவேகி அஞ்ஞானத்தை |
| கடந்துபோய் | —தாண்டிப்போய் |
| சிந்தைக்குப் பிரியமாகிய | —உள்ளத்திற்குப் பிரியமாயிருக்கின்ற |
| பாப்பிரமத்தையேபெற்று | —சிவத்தையே யடைந்து |
| மேற்பிறவாமைக்கு | —இனிப் பிறவாமலிருப்பதற்கு |
| உரியனுகுமென்று | —உரியவனுவானென்று |
| உணர்வினுல் | —ஞானத்தினுல் |
| உலகெலாம் படைத்திட்டான் | —உலகமனைத்தையும் சிருட்டித்த பிரம்மதேவர் |
| உரைத்தனன் | —சொன்னுர். |

பதசாரம்—நிரதிசயானந்த ரூபமாகலின், 'பிரியமாகிய பாப்பிரமத்தை' என்றும் அறிவார் பிறவாராதலால் 'பிறவாமைக் குரியனுகும்' என்றும் கூறினர்.

பதினேன்றவது கடவல்லியோடு சுவேதாச்சுவதா முரைத்த
அத்தியாயம் முற்றிற்று.



ஆகத் திருவிருத்தம் 504.

## பனிரண்டாவது

## சர்வ சாஸ்திரார்த்த சங்கிரகம் உரைத்த அத்தியாயம்

### அவதாரிகை.

இவ்வாறு ஐதரேயக முதலிய எல்லாச்சாகைகளின் உபநிஷதங்களுக்கும் உரைசெய்து, அடையுஞ் சவுகரியத்தின்பொருட்டு எல்லா உபநிஷதங்களினும் பொதிந்துகிடக்கும்பொருள்களையும் ஈண்டுச் சங்கிரகமாகக் கூறுகின்றார்.

வகுத்து நானுமக் குரைத்த நான்மறை களின் பொருளைத்
தொகுத்து நான் சொலக் கேண்மினென் றின்னவா சொன்னான்
உகத்த நான்கையு மொன்றதா யிரமொரு பகலான்
முகத்தி னாற்பொரு ணான்குநான் மறையினான் மொழிவான்.

### இதன் பொருள்.

ஒன்றதாயிரம்உகத்த நான்கையும்—ஓராயிரம் சதுர்யுகங்களையும்

| | |
|---|---|
| ஒருபகல் | —ஒருபகலாகக்கொண்டு |
| நான்முகத்தினால் | —நான்கு முகங்களாலும் |
| பொருள் நான்கும் | —நான்கு மகாவாக்கியப்பொருள்களையும் |
| நான்மறையினால் | —நான்கு வேதங்களால் |
| மொழிவான் | —உரைசெய்த பிரம்மதேவரானவர் |
| வகுத்து நானுமக்குரைத்த | —நான் உங்களுக்கு வகுத்துச்சொல்லிய |
| நான்மறைகளின் பொருளை | —நான்குவேதங்களின் தாற்பரியத்தை |
| நான் தொகுத்து | —நான் சுருக்கி |
| சொலக்கேண்மினென்று | —சொல்லக்கேளுங்களென்று |
| இன்னவாசொன்னான் | —இவ்வாறு உபதேசம்செய்தார். (1) |

### அவதாரிகை.

எல்லா உபநிஷதங்களுக்கும் சம்மதமானபொருள் பிரத்தியக்குப் பிரமதாதான்மியமென்று ஆயிரம் சதுர்யுகங்களை ஓர் பகலாக்கொண்ட சதுர்முகன் கூறுகிறார்.

### வேறு.

பாடுகின்ற வெக்கலையும் பயனுந் தெரிந்து பகர்கின்றேன்
ஓடுகின்ற சிந்தையொழித் தொருப்பட் டெவருங் கேண்மினுரை
யாடுகின்ற நானென்னு முரைக்கு மறிவுக்கு மறிவாய்
நாடுகின்ற உணர்வொன் றுண் டதுவே யான்மா நமக்கெல்லாம்.

## இதன் பொருள்.

| | |
|---|---|
| பாடுகின்ற எக்கலையின் பயனுந் தெரிந்து பகர்கின்றேன் | சொல்லுகின்ற எல்லா நூல்களின் பொருளுந் தெரிந்து யான் உபதேசஞ்செய்கின்றேன் |
| ஓடுகின்ற சிந்தையொழித்து | —பொறிவழிச்செல்கின்ற மனத்தைவிடுத்து |
| ஒருப்பட்டெவருங் கேண்மின் | —ஒற்றுமைப்பட்டு எல்லோரும் கேளுங்கள் |
| உரையாடுகின்ற | —சொல்லுகின்ற |
| நானென்னுமுரைக்கும் | —அகமென்னும் சொல்லுக்கும் |
| அறிவுக்கும் அறிவாய் | —ஞானத்திற்கும் ஞானமாய் |
| நாடுகின்ற வுணர்வொன்றுண்டு | —கருதுகின்ற ஞானசொரூபம்ஒன்றிருக்கின்றது |
| அதுவே | —அந்தப் பிரம்மசொரூபமே |
| நமக்கெல்லாம் ஆன்மா | —நம்போலிகட்கெல்லாம் ஆன்மாவாகும். |

**பதசாரம்**—'அதுவேயான்மா நமக்கெல்லாம்' என்றதனால், காரியகாரணமான தேகத்தோடுங்கூடிய சைதன்யம் நான் என்னுஞ்சொல்லுக்கு வாச்சியமாய் ஆன்மாவாகத்தோற்றிடினும், தேகமுதலியவை கடம்போல் அனான்மாவாய்ச் சடங்களாதலால் ஆய்ந்து ஆய்ந்து தேய்ந்து ஓய்ந்து அளாவினும் சருவாந்தரசாட்சியான சின்மாத்திரரூபனே ஆன்மாவன்றி மற்றவையன்றென்பது பெற்றாம்.(2)

## அவதாரிகை.

சம்சாரித்தன்மைக்குச் சொரூப ஞானமில்லாமையே மூலமாகலிற் பிரம்மத்தையடையும் விஷயத்தில் ஞானத்தைக்காட்டிலும் வேறொன்றை இச்சிக்கத்தக்கதில்லை. அந்த ஞானமும் இந்த முறையால் சித்திக்குமென்று கூறுகின்றார்.

மாச தில்லாப் பரனாகி யிருக்கத் தனது மாயையினா
லீச னென்ப தறியாம லிறந்தான் பிறந்தான் போலிருக்கும்
பாசம் விடுமா நினைவுறுவான் பாரம் பரியத் தாற் பண்ணு
மாசின் மறையா லாசையெலா மறலாற் சாந்தி யாதியினால்.

## இதன் பொருள்.

| | |
|---|---|
| மாசதில்லாப் பரனாகியிருக்க | —குற்றமில்லாத பிரம்மமாகியிருக்கவும் |
| தனது மாயையினால் | —தன்னுடைய மாயையினாலே |
| ஈசனென்பதறியாமல் | —(தான்)ஈச்வரனென்பது தெரியாமல் |
| இறந்தான் பிறந்தான் | —ஜனனமரணங்களையடைந்தவன் |
| போலிருக்கும் | —போலிருக்கின்றான் |
| பாசம்விடுமா நினைவுறுவான் | —அந்தப்பாசங்களைநீக்க நினைவுகொண்டவன் |
| பாரம் பரியத்தாற்பண்ணும் | —குருபாரம்பரியமாக (அத்தியயனஞ்)செய்கின்ற |

| | |
|---|---|
| ஆசில் மறையால் | —வழுவில்லாத வேதங்களாலும் |
| ஆசையெலா மறலால் | —ஈஷணாத்திரயங்களும் நீங்குதலாலும் |
| சாந்தியாதியினல் | —சாந்தி முதலியவற்ருலும். |

**பதசாரம்**—எல்லாவற்றிலும் வியாபித்திருக்கின்ற சிவனே எல்லாப் பிராணிகளிலும் அவ்வவ்வுபாதிவசத்தால் ஜீவபாவத்தையடைந்து பரிச்சின்னன்போலத் தோற்றுகின்ருன். அங்ஙனமே சுருதியும், '**இந்த ஜீவான்மாவாக அனுப்பிரவேசித்து நாமரூபங்களைச் செய்கின்றன்**' என்று கூறிற்று. அங்ஙனமாயினும் தனக்குச் சம்சாரியான பிரம்மரூபத் தன்மையை அந்தக்கரணத்தை முன்னிட்டு மறைத்துக்கொண் டிருக்கின்ற அஞ்ஞானத்தால் சம்சாரிபோலத் தோன்றுகின்ருன் என்பார், '**மாச தில்லாப் பானுகி யிருக்கத் தனது மாயையினு லீசனென்ப தறியாம லிறந்தான் பிறந்தான் போலிருக்கும்**' என்ருர். (3)

இதுவுமது—வேறு.

பத்தியாற் குரவன் பாதம் பணிந்துவே தாந்தம் பன்னுஞ்
சுத்தமா வாக்கி யத்தாற் றுணிந்தவப் பொருளைத் தூய
புத்தியாற் றுணிந்து கொண்டப் பொருளனு போகமாகச்
சித்தியா நிற்கு மைக்யஞ் சிவபதந் தனையே சேரும்.

இதன் பொருள்.

| | |
|---|---|
| பத்தியால் | —பிரேமையினுலும் |
| குரவன்பாதம்பணிந்து | —சற்குருவினது திருவடிகளைவணங்கி |
| வேதாந்தம் பன்னும் | —உபநிஷதங்கள் சொல்லுகின்ற |
| சுத்தமாவாக்கியத்தால் | —பரிசுத்தமாகிய மகாவாக்கியங்களால் |
| துணிந்த அப்பொருளை | —நிச்சயித்த அந்தப்பிரம்மத்தை |
| தூயபுத்தியால் துணிந்துகொண்டு | —தூய்மையுடைய புத்தியினுல் நிச்சயித்து |
| அப்பொருளனுபோகமாக | —அந்தப்பொருள் சுவானுபோகமாகுங்கால் |
| ஐக்யம் சித்தியாநிற்கும் | —ஐக்கியமானது சித்திக்கும் |
| சிவபதந்தனையே சேரும் | —(அதனுல்)சிவபதத்தையே அடைகுவான். (4) |

இதுவுமது—வேறு.

ஊனிலொரு பற்றுமுள னன்றியுட னிற்கும்
நானெனவி ளம்புதனை நற்சிவம தாகத்
தானறியு மாகிலொரு வன்றனுரு வாகும்
ஞானபரி பூரணந லந்தனை யடைந்தான்.

இதன் பொருள்.

| | |
|---|---|
| ஒருவன் ஊனிலொருபற்று முளனன்றி | ஒருவன் சரீரத்தினுல் ஒருபற்றுமுடையவனுகாமல் |

உடல் நிற்கும் —இவ்வுடலின்கண்ணே நிற்கின்ற
நானென விளம்புதனை —நானென்று சொல்லுகின்ற தன்னை
நற்சிவமதாகத்தான் அறியுமாகில்—நல்லசிவமாகவேதான் அறிவானேல்
தன் உருவாகும் —தனது சொருபமாகும்
ஞானபரிபூரணநலந்தனை —பரிபூரணஞானமாகிய நன்மையை
அடைந்தான் —அடைந்தவனாவான்.

**பதசாரம்**—சாந்தி தாந்திகளாலும் சிரவணமனனாதிகளாலும் உண்டான ஞானத்தினால் சாட்சி சின்மாத்திரரூபமாயும் சுகதுக்கமுதலிய எல்லாத் துவிதங்களும் நீங்கினதாயும், நீ நான் என்னுஞ் சொற்களால் குறிக்கப்பட்டதாயுமுள்ள அபரிச்சின்னமான பரசிவசொரூபத்தை சாட்சாத்கரிக்கின்ற காலத்திற்றானே, தனக்குப் பரிபூரணத்தன்மையை யடைகின்றான். அங்ஙனமே சுருதியும், அந்த இதனையறிந்து வாமதேவர் சொல்லுகின்றார் நான் மனுவானேனென்று' கூறிற்றென்பார், 'நானென விளம்புதனை நற்சிவம தாகத் தானறியு மாகிலொரு வன்றனுரு வாகும், ஞானபரி பூரணந லந்தனை யடைந்தான்' என்றார். (5)

அவதாரிகை.

பாவாபாவாத்மகமான அனைத்தும் அவித்தையினால் கற்பிதமாகலானும் அவ்வித்தையும் தோற்றுதல் மாத்திரமான ரூபமுடையதாய்ச் சதசத்திற்கு விலட்சணமாகலானும், இவ்விரண்டும் வித்தையால் நீங்கினவளவில் கேவலம் பிரம்மமே சேஷிக்கின்றதன்றிப் பாவாபாவாத்மகமான எதுவுமில்லையென்று கூறுகின்றார்

வேறு.

செறிவா யெங்குந் திகழ்ந்துள்ள சிவனா னென்னுந் திகழ்வுற்றா
னெறியா னிகழு நிகழ்வெல்லா நிமல மாயே நிகழ்ச்சிதரு
மறிவா யறியா மையுமாகி யறிவிப் பவனா யறிவானாய்ப்
பிறிவா யுளதா யிலதாயும் பிரம மொன்று மேபிறழும்.

இதன் பொருள்.

செறிவா யெங்குந் திகழ்ந்துள்ள—எங்கும் நிறைந்து விளங்குகின்ற
சிவன் நான் என்னும் —சிவனே நானென்னும்
திகழ்வுற்றான் —விளக்கமுடையவனுக்கு
நெறியால் நிகழும் நிகழ்வெல்லாம்—கிரமமாக விளங்குகின்ற விளக்கமனைத்தும்
நிமலமாயே நிகழ்ச்சிதரும் —நின்மலமாகவே விளங்கும்
அறிவாய் அறியாமையுமாகி —ஞானமாயும் அஞ்ஞானமாயும்
அறிவிப்பவனாய் அறிவானாய் —அறிவிப்பவனாயும் அறிபவனாயும்
பிறிவாய் உளதாய் இலதாயும்—பின்னமாயும் இருக்கின்றதாயும் இல்லாததாயும்
பிரம்மம் ஒன்றுமே பிறழும் —பிரம்மம் ஒன்றுமாத்திரமே விளங்கும். (6)

அவதாரிகை.

அந்த அவத்தையில் அவித்தியாநிவிர்த்தி இருக்கின்றதா? இல்லையா? இல்லையெனில் அவித்தை இருக்கின்றதென்றுவரும். அங்ஙனமாயின் எவ்வாறு கேவல பரிசேஷஞ் சித்திக்கும். இருக்கின்றதெனில், அந்த நிவிர்த்தியுஞ் சேஷிக்குமென்று சங்கித்து மாயையின் திரிசிய கற்பனு சதசத்தை விளக்கிக் கூறுகின்றார்.

வேறு.

அடையவும் பிரமமே யெனவ றிந்துளோ
னடைவதங் கதனையே யாகு மன்றியே
யிடையிலோர் மாயையுண் டென்ன வெண்ணுமேற்
கடையதே யாமவன் கற்ற கல்வியே.

இதன் பொருள்.

அடையவும் பிரமமேயென —அனைத்தும் பிரம்மமேயென்று
அறிந்துளோன் —உணர்ந்தவன்
அடைவதங்கதனையேயாகும் —அடைவதும் பிரம்மத்தையேயாகும்
அன்றியே இடையிலோர் மாயை—இவ்வாறன்றி இடையில் ஒருமாயை
உண்டென எண்ணுமேல் —இருக்கின்றதென்று கருதுவானுயின்
அவன்கற்ற கல்வி —அவன் அப்பியாசித்த வித்தையெல்லாம்
கடையதேயாம் —இழிந்ததேயாகும்.

**கருத்து**—விவகார திருஷ்டியினுல் அவித்தையும் அதன் ஒழிவும் அன்றிப் பரமார்த்த திருஷ்டியினுல் இரண்டுமில்லை. சுபாவதிருஷ்டியினுல் மற்றியாது விளங்குகின்றதெனில், பாவாபாவாதி பேதாத்மகமான எல்லாவுலகும் காரணமான பாரமார்த்திகப் பிரம்மரூபமாகவே விளங்குகின்றதென்றுகொள்க. (7)

அவதாரிகை.

இங்ஙனம் வித்தை அவித்தை குருசிஷ்யன் பாவம் அபாவம் என்னும் இப் பேதங்களாகப் பிரம்மமே விளங்குகின்றதென்று வடநூலில் விரித்துக்கூறிய அனைத்தும் ஐந்தாவது அத்தியாயத்தில் சொல்லிக்கிடந்தனவென்று கருதி ஈண்டு சுருக்கிக்கூறி 'ஆன்மாவில் நின்றும் ஆகாசம் உண்டாயிற்று' என்பது முதலான சிருஷ்டியைக்கூறுகின்ற சுருதி பேத சகத்தை முறையே ஈண்டு எதற்காகச் சொல்லிற்று என்று சங்கித்து அவற்றை விளக்கிக் கூறுகின்றார்.

வேறு.

மாயையென் றொன்றுண்டாக மதிப்பது மனமேயல்ல
வாயினு மகண்டஞான வங்கமா மிந்தஞானங்
காயம்வே றுருமென்கை காரண மாகவித்தைத்
தூயநான் மறைகளோதுந் துவந்துவந் நீக்கைசுட்டி.

இதன் பொருள்.

| | |
|---|---|
| மாயையென்று | —மாயையென்று |
| ஒன்றுண்டாகமதிப்பது | —ஒன்று இருக்கின்றதாகக்கருதுவது |
| மனனமல்ல | —மனனமன்றாகும் |
| ஆயினும் இந்த ஞானம் | —அவ்வாறாயினும் இந்த ஞானமானது |
| அகண்டஞானம் அங்கமாம் | —அகண்டஞானத்திற்கு அங்கமாகும் |
| காயம் வேறாகுமென்கை | —தேகம் பின்னமாகுமென்பதும் |
| காரணமாக | —பிரம்மத்தையடைதற்குக் காரணமாக |
| துவந்துவந்தீர்க்கை சுட்டி | —துவிதத்தை நீக்குவது குறித்து |
| இத்தை | —இதனை |
| தூயநான் மறைகளோதும் | —புனிதமாகிய நான்கு வேதங்களுஞ் சொல்லும். |

**கருத்து**—எல்லாச் சகவிஷய ஞானமும் பிரம்மரூபமாக அறிவது பிரம்மத்தை அடைதற்குச் சாதனமாகும். அதற்கு வேறானஞானம் வேறொன்றாயுள்ளதனை வேறொன்றாயறிதலின் அஞ்ஞானமாகும். ஆயினும் சகத்திற்கு ஆரோப அபவாதங்களொப்புங்கால் நிஷ்பிரபஞ்சமாய், அத்துவிதமாய் விளங்கும் பிரம்மத்தை அடையக்கூடும். ஆதலால் அதனையடைதற்கு உபகாரமாமென்பது கருதியே துவித சகத்து அத்துவிதத்தை நீக்குதலின் பொருட்டுப் பிரதிபாதனமென்று அறிக. (8)

அவதாரிகை.

சகம் பொய்யானால் 'சரீரத்தோடிருத்தும் வரைக்கும் அக்கிநிஹோத்திரம் செய்யத்தக்கது. அந்த இவனை வேதாநுவசனத்தால் பிராமணர்கள் அறிதற்கு இச்சிக்கின்றார்கள்' என்னுஞ் சுருதிகளால் சாத்தியசாதன பாவ முதலியவற்றை என் சொல்லுகின்றதென்று சங்கித்து அவற்றை ஈண்டு விளக்கிக் கூறுகின்றார்.

யாதொரு படியிற் றோன்று மியல்பினாற் சகத்துக் குண்மை
யோதிய துபநி டந்தா னோர்விடத் துண்மை யாகப்
பேதமா முலகு தோன்றிற் பிறப்பதற் கேது வாகு
மீதெலா மில்லை யென்ன லின்பத்துக் கேது வாகும்.

இதன் பொருள்.

| | |
|---|---|
| யாதொருபடியிற்றோன்றும் | —எவ்வாறு தோன்றுகின்றதோ |
| இயல்பினால் உபநிடந்தான் | —அத்தன்மையைக் கொண்டே உபநிடதம் |
| சகத்துக்கு | —சகத்தினுக்கு |
| உண்மையோதியது | —சத்தியத்தன்மையைக் கூறிற்று |
| ஓர்விடத்து | —கருதுமிடத்தில் |
| உண்மையாக | —எதார்த்தமாக |

பேதமாமுலகுதோன்றில் —பின்னமாகிய உலகந்தோன்றினுல்
பிறப்பதற்கு ஏதுவாகும் —ஜனிப்பதற்குக் காரணமாகும்
ஈதெலாம் இல்லையென்னல் —இவையனைத்தும் இல்லையென்பதுவே
இன்பத்துக்கேதுவாகும் —பேரின்பத்திற்குக் காரணமாகும்.

**பதசாரம்**—வியாவகாரிக சத்தியமாகச் சகத்தையொப்பி அந்தச்சுருதி சாத்தியசாதன பலமானவற்றைக் கூறியதேயன்றி அதற்குப் பாரமார்த்திக சத்தியத் தன்மையைச் சொல்லவில்லையென்பார், 'யாதொரு படியிற் றேன்று மியல்பினுற் சகத்துக் குண்மை யோதியது' எனவும், பாரமார்த்திக சத்தியமாக யாதொரு சகஞானமுண்டோ அது மித்தையான ஞானமாதலால் சம்சாரத்திற்கேதுவாகும் என்றும் உலகம் அசத்தியமென்பது பரமார்த்தமாதலால் சம்சாரநிவிர்த்திக்கு ஏதுவாகுமென்றுங் கூறுவார், 'பேதமா முலகுதோன்றிற் பிறப்பதற் கேதுவாகும், ஈதெலா மில்லை யென்ன லின்பத்துக் கேதுவாகும்' எனவுங் கூறினர். (9)

இதுவுமது—வேறு.

ஆகையாலகி லத்தையே மாயையென் றுகமெய் யாய்வந்த
மோகமாற்றுதற் பொருட்டோரோ விடத்திலே மொழிந்தது முதுவேதம்
பாகமாகிய சித்தரைக் குறித்துமெய்ப் பரம்பொரு ளாகின்ற
வேகமேநிகழ் கின்றதெல் லாமென வியம்பிய திதயத்தால்.

இதன் பொருள்.

ஆகையால் மெய்யாய்வந்த —ஆதலால் மெய்யாகப்பொருந்திய
மோகமாற்றுதற்பொருட்டு —மோகத்தை மாற்றும்பொருட்டு
அகிலத்தையே மாயையென்றுக—உலகத்தை மாயையென்று
ஓரோவிடத்திலே —ஒவ்வோரிடத்திலும்
முதுவேதமொழிந்தது —புராதனமாகிய வேதம்கூறிற்று
பாகமாகிய சித்தரைக்குறித்து —பரிபக்குவ சித்தமுடையவரைக்குறித்து
நிகழ்கின்றதெல்லாம் —விளங்குகின்ற அனைத்தும்
மெய்ப்பரம் பொருளாகின்ற —மெய்ப்பரம் பொருளாகிய
ஏகமேயென —பிரம்மமேயென்று
இதயத்தால் இயம்பியது —இருதயத்தினுல் கூறிற்று.

**கருத்து**—மாயையாகப் பிரகிருதியையும் மாயியாக மகேசனையும் அறியத் தக்கதெனவும், இந்தத்துவிதம் மாயமாத்திரமாமெனவும், எல்லாம் பிரம்மமென வும், இச்சகமனைத்தும் இவ்வான்ம சொரூபமெனவும், உபதேசித்த சுருதிகள் எல்லாவுலகிற்கும் அகண்டைகரசப் பிரம்மத்தன்மையையே போதிக்கின்றன. ()

இதுவுமது.

மெய்மை நாடின்மெய்ப் பரமலால் விச்சையு மவிச்சையும் வேறேயோ
வைய மானது மற்றொரு பொருள்களு மில்லையாம் மனனஞ்செய்
தூய்ய யோகிமு னெப்படி யெப்படித் தோற்றுகின்றது தோற்றஞ்
செய்யு மியாவையுஞ் சிவன்வடி வாகவே திகழ்ந்திடுந் திடமாக.

இதன் பொருள்.

மெய்மை நாடில் —உண்மையைக் கருதுங்கால்
மெய்ப்பரமலால் —மெய்யாகிய பிரம்மத்தைத்தவிர
விச்சையு மவிச்சையும் வேறேயோ—வித்தையும் அவித்தையும் வேறே
வையமானதும் —உலகமும்
மற்றொருபொருள்களும் இல்லை—வேறொரு பொருள்களும் (வேறாக) இல்லை
இம்மனனஞ்செய் —இந்த மனனஞ்செய்கின்ற
தூய்யயோகி முன் —பரிசுத்தமுடைய சிவயோகி முன்பு
எப்படி யெப்படித்தோற்றுகின்றது—எவ்வெவ்வண்ணமாகத் தோன்றுகின்றதோ
தோற்றஞ்செய்யு மியாவையும் —அவ்வண்ணம்தோற்றுகின்ற அனைத்தும்
திடமாக —உறுதியாக
சிவன்வடிவாகவே திகழ்ந்திடும்—சிவசொரூபமாகவே விளங்கும். (11)

அவதாரிகை.

சருவசகத்தோற்றமாக யாதொன்றுண்டோ அது சிவனேயென்று உண்டான புத்தியும், பூருவ வாசனையால் சகத்தோற்றமிருந்ததெனினும் அதுவும் நீங்கும் பொருட்டாதலால் அந்தப் புத்தியுஞ் சிவயோகிக்கில்லையென்று கூறுகின்றார்.

வேறு.

யாதொரு படியிற் றோற்ற மென்றியம் பியதுமுன்னை
வாதனை யதனைப் பற்றி யல்லது மற்றொன் றில்லை
போதமே யுள்ள தென்றும் பூரண னாகை யாலே
போதமில் வேலை போலு மொழிவற நிறைந்த யோகி.

இதன் பொருள்.

யாதொருபடியிற்றோற்றம் —எவ்வாறு விளங்குகின்றதோ
என்றியம்பியதும் —என்று சொல்லியதும்
முன்னைவாதனை யதனைப்பற்றியல்லது—பூருவவாசனையைப்பற்றியேயன்றி
மற்றொன்றில்லை —வேறொன்றில்லை
பூரணனாகையால் —பரிபூரணனாதலால்

என்றும் போதமேயுள்ளது — எக்காலத்தும் ஞானசொரூபமே இருக்கின்றது
ஒழிவற நிறைந்தயோகி —இடைவிடாமல் எங்கும்நிறைந்த யோகியானவன்
ஓதமில் வேலைபோலும் —அலையில்லாத சமுத்திரம்போல்வான்.

**பதசாரம்**—சிவயோகியானவன் விக்ஷேபத்திற்கேதுவான துவிதமில்லாததனால் நிருவிகற்பமாய்ச் சிதேகரச ஸ்வபாவமாய்ச் சலனமில்லாதவனாய் விளங்குவானென்பார், 'ஓதமில் வேலை போலு மொழிவற நிறைந்த யோகி' என்றார்.(12)

அவதாரிகை.

சுயம்பிரகாசப் பிரமான்மரூபமாய் விளங்குகின்ற வித்துவான் ஞானத்திற்கு ஏதுவான அந்தக்கரணாதிகள் அவித்தியாகாரியங்களாதலால், வித்தையால் அவித்தை நீங்குதலின் அந்த அவஸ்தையைக்கரும கர்த்திருபாவமாக அறிகின்றானில்லை.

அப்படி யிருந்த யோகி யனுபவத் தன்மை தானு
மெப்படி யென்று காணா னீசன்மா னானுங் காணோம்
செப்பிட வறியா வேதா கமங்களுஞ் சிவனார் மேனி
யெப்படி யென்னின் மற்றப் படியிலே யிருந்த தென்னும்.

இதன் பொருள்.

அப்படியிருந்த யோகி —அவ்வாறிருந்த யோகியானவன்
அனுபவத்தன்மை —சுவாநுபவத்தன்மையை
தானும் எப்படியென்றுகாணான்—எவ்வாறென்று தானும் அறியமாட்டான்
ஈசன்மால் நானும் காணோம்—ஈசுவரனும் விஷ்ணுவும் யானும் காணமாட்டோம்
வேதாகமங்களும் —வேதங்களும் ஆகமங்களும்
செப்பிடவறியா —சொல்ல அறியாதனவாகும்
சிவனார் மேனி —சிவசொரூபம்
எப்படியென்னில் —எவ்வண்ணம் இருக்கின்றதென்றால்
மற்றப்படியிலே யிருந்ததென்னும் } அவ்வண்ணமேயிருக்கின்றதென்று (அவ்வேதாகமங்கள்)சொல்லும் (13)

அவதாரிகை.

பரசிவனே நித்திய சித்தஞானவானென்று உறுதியுறக் கூறுகின்றார்.

வேறு.

அம்பி காபதி யறியுமிவ் வனுபவ மவனரு ளாகுமக்
கொம்ப னாளறிந் திடுந்திரு வருளையே கோலமாய்க் கொண்டந்த
வெம்பி ரானரு ளாலறி நாம்பிற ரியாவரு மறிவோமத்
தம்பி ரானறிந் தமையெவ ராலெனச் சங்கையுந் தகுமோதான்.

### இதன் பொருள்.

இவ்வனுபவம் —இந்தச் சுவானுபவத்தை
அம்பிகாபதியறியும் —உமாபதியாகிய சிவபெருமான் அறிவன்
அவனருளாரும் —அவரது திருவருளே வடிவமாகிய
அக்கொம்பனாள் அறிந்திடும் —அந்தப்பார்வதி தேவியும் அறிவாள்
திருவருளையே கோலமாய்க்கொண்டு—திருவருளையே அழகாக அடைந்து
அந்த எம்பிரானருளால் —அந்த எம்பெருமானது திருவருளால்
அரி நாம் —விஷ்ணுவும் யாமும்
பிறர்யாவரும் அறிவோம் —மற்றெல்லாரும் அறிவோம்
அத்தம்பிரானறிந்தமை —அந்தச்சிவபெருமான் உணர்ந்தது
எவராலெனச் சங்கையும் —யாராலென்று சங்கிக்குஞ் செய்கையும்
தகுமோ —கூடுமோ. (14)

### அவதாரிகை.

பலங்களெல்லாம் புசிக்கப்பட்டுப் புண்ணியபாவங்கள் ஒழியுங்கால் பரமான்மாவே குருமூர்த்தியாக ஒருவற்கு வெளிவந்தருள்செய்வாரென்று கூறுகின்றார்.

ஞான மாகிய விழியினாற் குருபர நயந்து நோக்கிட வுண்டா
மானு பூதியா தொன்றது வேசிவ னுவதப் படியுள்ள
மேனி தான்வினை யொத்தவப் பொழுதிலே வெளிப்படும் வெளிகாண
லான தேசிகன் றன்னையப் பரம்பொரு ளென்னவா தரஞ்செய்வான்.

### இதன் பொருள்.

ஞானமாகிய விழியினால் —ஞானமாகிய நேத்திரத்தினால்
குருபரனயந்து நோக்கிட —தேசிகர் கருணைகூர்ந்து கடாக்ஷித்தலினால்
உண்டாம் ஆனுபூதி —உண்டான சுவானுபூதி
யாதொன்று —யாதொன்றுண்டோ
அதுவே சிவனுவது —அதுவே சிவசொரூபமாகும்
அப்படியுள்ள மேனிதான் —அச்சிவமாயிருக்கின்ற திருமேனியானது
வினையொத்தவப் பொழுதிலே—புண்ணியபாபங்கள் ஒத்தகாலத்தில்
வெளிப்படும் —வெளியாகும்
வெளிகாணலான தேசிகன்தன்னை—வெளியிற்காணும்படி தோற்றிய தேசிகரை
அப்பரம் பொருளென்ன —அந்தச் சிவபெருமானேயென்று
ஆதரஞ்செய்வான் —(ஒருவன்)அன்புசெய்யக்கடவன். (15)

### அவதாரிகை.

இன்பமேயாயினும் துன்பமேயாயினும் குருமூர்த்தியின் திருவுள்ளப்படியே நடந்துகொள்ள மாணவன் கடமைப்பட்டவன் என்பதைக் குறிப்பிடுகின்றார்.

நேச நெஞ்சினாற் றனக்கது நினைவல வாயினு நெறியென்றே
தேசி கன்றிரு வுள்ளமே செய்குவான் செனித்திடுங் குலத்துக்கு
மாச தாயினு மாச்சிர மத்திலே வழுவினு முலகெல்லா
மேசி வீடினு மறம்புகழ் தனம்பிற விழப்பினு மிடரேனும்.

### இதன் பொருள்.

| | |
|---|---|
| செனித்திடுங் குலத்துக்கு | —தான்பிறந்த குலத்துக்கு |
| மாசதாயினும் | —களங்கம்வருவதாயிருக்கினும் |
| ஆச்சிரமத்திலே வழுவினும் | —ஆச்சிரமத்தில் நின்றும்நழுவினாலும் |
| உலகெல்லாம் | —உலகத்தோர்களெல்லாரும் |
| ஏசிவீடினும் | —நிந்தித்துத் தள்ளிவிடுத்தாலும் |
| அறம் புகழ்தனம் | —தருமத்தையும் கீர்த்தியையும் திரவியங்களையும் |
| பிற இழப்பினும் | —மற்றனைத்தையும் இழந்தாலும் |
| இடரேனும் | —துன்பமாயிருந்தாலும் |
| தனக்கது நினைவலவாயினும் | —தனக்கு அவ்வாறிருப்பது கருத்து அன்றாயினும் |
| நேச நெஞ்சினால் | —அன்புபொருந்திய மனத்தினால் |
| நெறியென்றே | —இதுவே நமக்கு நல்லவழியென்று |
| தேசிகன்றிருவுள்ளமே | —பரமதேசிகரது திருவுள்ளம்போலவே |
| செய்குவான் | —செய்யக்கடவன். (16) |

### அவதாரிகை.

ஜீவபிரம ஐக்கியநிலையை உபதேசித்தருளுந்திருமேனிகொண்ட ஆசிரியன் பொருட்டு அபசாரமாக நடக்கும் மாணவனடையும் அதோகதியை அறிவிக்கிறார்.

தேசிகன்றிரு வுள்ளமுண் டாகவச் சிவன்றிகழ்ந் திடுகின்றான்
ஈசனிங்கருள் செய்யவந் திருக்கின்ற விடமிவன் திருமேனி
மாசதொன்றிவ னளவிலே செயிலெரி வாய்நர கினிற்பூத
நாசமெவ்வள வவ்வளவுஞ்செல நண்ணு நன்னெறி நண்ணான்.

### இதன் பொருள்.

| | |
|---|---|
| தேசிகன்றிருவுள்ளம் | —சற்குருவினது கருணைமிகுந்த திருவுள்ளம் |
| உண்டாக | —(ஒருவனிடத்தில்) உண்டானால் |
| அச்சிவன் | —(அவனுக்கு) அந்தச் சிவபெருமான் |
| திகழ்ந்திடுகின்றான் | —விளங்குகின்றான் |

| | |
|---|---|
| ஈசனிங்கருள்செய்ய | —சிவபெருமான் இவ்விடத்தில் திருவருள்செய்ய |
| வந்திருக்கின்ற இடம் | —வந்தமர்கின்ற இடம் |
| இவன் திருமேனி | —இந்தச்சற்குருவினுடைய திருமேனியேயாகும் |
| மாசதுவொன்று | —ஒருகுற்றமாயினும் |
| இவனளவிலே செயில் | —இந்தத்தேசிகனிடத்தில் செய்தால் |
| பூதநாசம் | —பூதங்களெல்லாம் அழிவதற்கு |
| எவ்வளவு | —எத்தனை காலம் இருக்கின்றதோ |
| அவ்வளவுஞ்செல | —அத்தனை காலமுஞ் செல்லும்வரைக்கும் |
| எரிவாய் நரகில் நண்ணும் | —ரௌரவாதி நரகங்களில் அடைந்துகிடப்பான் |
| நன்னெறி நண்ணான் | —நல்லமார்க்கத்தில் வரவேமாட்டான். (17) |

அவதாரிகை.

அரூபமாகிய சிவபிரான் திருவருளைப் பார்க்கிலும் உரூபமாகிய தேசிகன் திருவருளே அச்சிவபிரான் அருள்பெறச் சிறந்ததென்று சித்தாந்தப்படுத்துகிறார்.

வேறு.

அருவெனு மமலன்று னருளில னெனினுஞ்சார்
குருபர னருளுண்டே யெனிலொரு குறையுண்டோ
திருவடி தரவந்தார் திருவுள மிலரென்று
லொருவரு மிலர்கண்டீ ருறுதுயர் களைகின்றார்.

இதன் பொருள்.

| | |
|---|---|
| அருவெனுமமலன்றான் | —அரூபமாகிய சிவபிரான் |
| அருளிலன் எனினும் | —திருவருள் செய்யாவிட்டாலும் |
| சார்குருபரன் | —பொருந்திய தேசிகரது |
| அருளுண்டே எனில் | —திருவருள் உண்டென்னில் |
| ஒரு குறையுண்டோ | —ஒரு தாழ்வுண்டுகொலோ |
| திருவடிதரவந்தார் | —திருவடி சூட்ட எழுந்தருளியதேசிகர் |
| திருவுளமிலரென்றால் | —திருவுளமிரங்கிக் கருணைசெய்கிலரெனில் |
| உறுதுயர்களைகின்றார் | —உற்றதுன்பங்களை யொழிப்பார் |
| ஒருவருமிலர் கண்டீர் | —வேறொருவருமில்லை பாருங்கள். (18) |

அவதாரிகை.

முமுட்சுத்துவம் அடையவிரும்பும் மாணவன் ஆசானுக்குத்தன் மனோ வாக்குக்காயங்கள் மூன்றையுமே சமர்ப்பிக்கவேண்டுமென்று வலியுறுத்துகிறார்

உறுவது தனில்வேறு யுளதல வதுநேரே
பெறவருள் பெரியோனே பெருகிய குருவாவா
னெறியுட லுளநாவா னிலைபெற வழிபாடே
செறிபவ னருளாலே சிவகதி யடைவானல்.

இதன் பொருள்.

| | |
|---|---|
| உறுவது | —தான் அடையும் பொருள் |
| தனில் வேறுயுளதல | —தன்னைக்காட்டிலும் வேறாயிருக்கின்றதல்ல |
| அதுநேரேபெற அருள் | —அதனை அபரோட்சமாக அடையும்படி அருள்கின்ற |
| பெரியோனே | —உயர்ந்தவனே |
| பெருகிய குருவாவான் | —(அருள்)பெருகிய குருமூர்த்தியாவன் |
| நெறி | —ஒழுங்காக |
| உடல் உளம் நாவால் | —காயத்தினாலும் மனத்தினாலும் வாக்கினாலும் |
| நிலைபெற | —ஸ்திரமாக |
| வழிபாடே செறிபவன் | —பணிவிடை (சமீபத்தில்) நெருங்கிச்செய்பவன் |
| அருளால் | —தேசிகரது திருவருளால் |
| சிவகதியடைவான் | —மோட்சத்தையடைவான். (19) |

வேறு.

இந்த விடும்பை யுடம்புறு மேதுத்
தந்தை யெனப்புகழ் கின்றிலர் தக்கோ
ரந்த மிலாத வகண்டமு நம்முட்
டந்தவர் தந்தை யெனச்சமை வுற்றார்.

இதன் பொருள்.

| | |
|---|---|
| தக்கோர் இந்த இடும்பை | —அறிஞர் இந்தத் துன்பமாகிய |
| உடம்புறும் ஏது | —சரீரமுண்டாவதற்குக் காரணமாகிய |
| தந்தையெனப் புகழ்கின்றிலர் | —தந்தையைக் குருவென்று புகழமாட்டார்கள் |
| அந்தமிலாத அகண்டமும் | —முடிவில்லாத அகண்டசொரூபத்தை |
| நம்முள் | —நமது இருதயத்தின்கண்ணே |
| தந்தவர் | —(விளங்கும்படி)அருள்செய்தவரே |
| தந்தையெனச் சமைவுற்றார் | —குருவென்று கருதியிருக்கின்றார். |

பதசாரம்—'இந்தவிடும்பை யுடம்புறுமேதுத் தந்தையெனப் புகழ்கின்றிலர்' என்றதனால், அஷ்ட ஐஸ்வரியங்களையும், கந்தருவாதி பதங்களையும் சார்வ பௌமபதவியையும், மந்திர தந்திர முதலியவற்றையும் லௌகிகமான உபாயங்களையும் கொடுப்பவர்கள் குரவர்கள் அல்லரென்பது பெறப்பட்டது. (20)

வேறு.

உண்டுபோற் றோன்று முலகெலா முண்மை
யன்றென வுணர்த்தி யெப்பொருளுங்
கண்டசான் றதனைக் காட்சிய தறவே
கண்டிடக் கரியெனக் காட்டும்
பண்டைவே தாந்த வாக்கியஞ் சொன்ன
படியிலே பரமனோ டொன்றாய்
விண்டிடா வண்ண முணர்த்துவான் றன்னை
வியன்குரு வென்றிடும் வேதம்.

இதன் பொருள்.

உண்டுபோற்றோன்றும் —இருக்கின்றதுபோலத் தோற்றுகின்ற
உலகெலாம் —சகங்களெல்லாம்
உண்மையன்றென உணர்த்தி —மெய்யல்லவென்றறிவித்து
எப்பொருளுங்கண்ட —எல்லாப்பொருள்களையுங் காண்கின்ற
சான்றதனை —சாட்சியை
காட்சியதறவே கண்டிட —திரிசியமில்லாமல் காணும்படி
கரியெனக்காட்டும் —சாட்சியாகத் தெரிவிக்கின்ற
பண்டை வேதாந்தவாக்கியம் —புராதனமாகிய வேதாந்த மகாவாக்கியம்
சொன்னபடியிலே —கூறிய வண்ணமே
பரமனோடொன்றாய் —பிரம்மத்தினோடு ஏகமாகி
விண்டிடாவண்ணம் —பிரியாதபடி
உணர்த்துவான்றன்னை —உபதேசிப்பவனையே
வேதம் —சுருதியானது
வியன்குரு வென்றிடும் —பெருமை பொருந்திய குருவென்று சொல்லும்.

கருத்து—எல்லாத் துன்பங்களையும் ஒழிப்பதாயும் நிரதிசயானந்த மளிப்பதாயுமுள்ள பரமபுருஷார்த்தத்தையடையச் செய்பவனே மேலான குருவாம்.(21)

காட்சியை யெல்லாங் கண்ணதாய்க் கரைத்துக்
கண்ணொழிந் தொருபொரு ளில்லா
மாட்சியை யளிக்க வல்லவன் குருவா
மாரிபோன் மாறுவேண் டாதே
மீட்சியில் பதத்தைக் கருணையா லளிக்கும்
வித்தகக் குரவனே யெவருந்
தாழ்ச்சிசெய் தேத்தற் குரியதத் துவமாஞ்
சங்கர னென்றிடத் தகுவான்.

## இதன் பொருள்.

காட்சியையெல்லாம் —திரிசியங்களை யெல்லாம்
கண்ணதாய்க்கரைத்து —திருக்காரும்படி செய்து
கண்ணொழிந்து —திருக்கைத்தவிர
ஒரு பொருளில்லா —வேறொரு பொருளுமில்லாத
மாட்சிமையளிக்க வல்லவன் —பெருமையைக் கொடுக்கும் திறமுடையவனே
குருவாம் —குருவாவான்
மாரிபோல் மாறுவேண்டாதே—மேகங்களைப்போல கைம்மாறு கருதாமல்
மீட்சியில்பதத்தை —திரும்புதலில்லாத பதவியை
கருணையால் அளிக்கும் —திருவருளால் கொடுத்தருள்கின்ற
வித்தகக்குரவனே —ஞானசிரியரே
எவரும் தாழ்ச்சிசெய்து —எல்லாரும் தாழ்ந்து
ஏத்தற்குரிய தத்துவமாம் —துதித்தற்குரிய தத்துவ சொரூபியாகிய
சங்கரனென்றிடத் தகுவான் —சங்கரனென்று சொல்லத்தகுவான். (22)

வருபிறப் பறவே வேண்டினன் மறையீ
றென்னுமம் புயத்தினை மலர்த்தற்
கிரவியாய் நெஞ்சிற் கிசைந்தநற் குருவை
யாதொரு வழியினு லிறைஞ்சி
யருள்சுரந் திடுவோர்க் காவதே செய்வா
னருமறை முடிவெலா மறையும்
பொருளினே ராக வுமக்கெனக் கீசன்
புகன்றவப் படியிலே புகன்றேன்.

## இதன் பொருள்.

வருபிறப்பறவே —மறுபடியும் நண்ணுகின்ற பிறவி நீங்க
வேண்டினன் —கருதியவன்
மறையீறு என்னும் அம்புயத்தினை—வேதாந்தமென்னுந் தாமரையை
மலர்த்தற் கிரவியாய் —மலர்த்துதற்குச் சூரியனாகி
நெஞ்சிற்கிசைந்த நற்குருவை —உள்ளத்திற்கிசைந்த சற்குருவை
யாதொரு வழியினுலிறைஞ்சி —எந்தமார்க்கத்தாலும் வணங்கி
அருள் சுரந்திடுவோர்க்கு —கருணைபொழிகின்ற அந்தத்தேசிகருக்கு
ஆவதே செய்வான் —வேண்டிய பணிவிடையே செய்யக்கடவன்
அருமறை முடிவெலாம் —உபநிஷதங்களெல்லாம்

அறையும்பொருளை நேராக —விளம்புகின்ற பொருளை ஒழுங்காக
எனக்கு ஈசன்புகன்ற —எனக்குச் சிவபிரான் உபதேசித்தருளிய
அப்படியிலே —அவ்வண்ணமே
உமக்குப் புகன்றேன் —உங்களுக்குச் சொன்னேன். (23)

வேறு.

எல்லா மறிவா னுயில்லா தில்லா னுகி யெல்லாந்தான்
வல்லா னுகித் தீங்கொன்று மருவா னுகி வடிவருளை
யல்லா திலனு மிறையுண்மை யன்றிச் சொல்லா னப்பொருளிற்
சொல்லா தில்லை யுங்கட்குச் சொன்னே னெல்லாஞ் சுருக்காக.

இதன் பொருள்.

எல்லாம் அறிவானுய் —சருவக்கியனுயும்
இல்லாதில்லானுகி —தனக்கில்லாதன இல்லாதவனுயும்
எல்லாந்தான் வல்லானுகி —சருவவல்லவனுயும்
தீங்கொன்றுமருவானுகி —ஒருதீங்கும் இல்லாதவனுயும்
அருளை வடிவுஅல்லாது —திருவருளை சொரூபமன்றி
இலனும் இறை —வேறில்லாதவனுயும் (விளங்குகின்ற)சிவபெருமான்
உண்மையன்றிச் சொல்லான் —சத்தியார்த்தமன்றி (வேறென்றினை எனக்கு) உபதேசஞ்செய்யமாட்டான்
உங்கட்கு அப்பொருளில் —(நான்)உங்களுக்கு அந்த அருத்தத்தில்
சொல்லாதில்லை —சொல்லாததில்லை
சுருக்காக எல்லாம் —சங்கிரகமாக அனைத்தையும்
சொன்னேன் —உபதேசித்தேன். (24)

வேறு.

போதவடி வாயகண்ட பூரணனுஞ் சிவனுக்கு
யாதுமுளங் கைக்கனியா மிவனருளின் படியொழிய
வேதமுடி யிற்பொருடாம் வேண்டியவா விளம்பியிடும்
பாதகர்போ யேறவொண்ணுப் பாழ்ங்கிணற்றில் வீழ்வர்களால்.

இதன் பொருள்.

போதவடிவாய் —ஞானமே சொரூபமாகி
அகண்டபூரணனுஞ் சிவனுக்கு —அகண்டபரிபூரணனுகிய சிவபிரானுக்கு
யாதும் உளங்கைக்கனியாம் —எல்லாம் கரதலாமலகம்போல் விளங்கும்
இவன் அருளின்படியொழிய —இந்தச்சிவபிரானுரைத்தருளியவண்ணமன்றி

| | |
|---|---|
| வேதமுடிவில் | —உபநிஷதங்களில் |
| தாம் வேண்டியவா | —தாங்கள் கருதியவாறு |
| பொருள்விளம்பியிடும் பாதகர் | —தாற்பரியஞ் சொல்லுகின்ற பாவிகள் |
| போய் ஏறவொண்ணா | —சென்று கரையேறமுடியாத |
| பாழ்ங்கிணற்றில் | —(பாவமாகிய) பாழ்த்த கிணற்றில் |
| வீழ்வர்கள் | —விழுவார்கள். (25) |

வேறு.

ஆதிவே தாந்தப் பொருளையத் துவித
மாம்படிக் ககிலநா யகனுஞ்
சோதிபா தப்போ திரண்டையுந் தொட்டுச்
சூழுகே னென்றயன் சொல்லிக்
காதலாற் பிறவிக் கவுடத முக்கட்
கடவுளைக் கருத்தில்வைத் தவன்றன்
பாதமே பணிந்து பாவியிப் பரிசே
பத்தியாற் பரவச னானான்.

இதன் பொருள்.

| | |
|---|---|
| ஆதிவேதாந்தப் பொருளை | —ஆதியாகிய வேதாந்த அருத்தத்தை |
| அத்துவிதமாம்படிக்கு | —அத்துவிதமாக |
| அகில நாயகனுஞ்சோதி | —சர்வேசனாகிய சிவபிரானுடைய |
| பாதப்போது இரண்டையும் | —திருவடித்தாமரைகள் இரண்டையும் |
| தொட்டு | —பிடித்துக்கொண்டு |
| சூழுகேனென்று | —கருதிச்சொல்லுகின்றேனென்று |
| அயன்சொல்லி | —பிரம்மதேவர்கூறி |
| காதலால் பிறவிக்கு | —பிரேமையால் ஜன்மமாகிய நோய்க்கு |
| அவுடத | —அவுஷதம்போன்ற |
| முக்கட்கடவுளை | —திரிநேத்திரங்களையுடைய பரமசிவனை |
| கருத்தில்வைத்து | —மனத்தில் தியானித்து |
| அவன்றன் | —அந்த எம்பிரானது |
| பாதமே பணிந்துபரவி | —திருவடிகளைப்பணிந்து துதித்து |
| இப்பரிசே பத்தியால் | —இவ்வாறே சிவபத்தியினால் |
| பரவசனானான் | —பரவசரானார். |

வேதார்த்தம்பரமாத்துவிதமில்லையாயின் இன்றைக்கே என் சிரம்வெடித்து அற்றுச்சிதறுக. இதற்குமாறாக வேதவாக்கியங்களுக்கு அருத்தமுண்டென்று சங்கைகொள்வீராயின் உங்கள் சிரங்களும் அவ்வாறேயாகுக என்று கூட்டுக. (26)

தேவருந் தேவ தேவர்க்குந் தேவாந்
திரியம்ப கன்றனைத் தொழுது
பூவிலே விழுந்து போற்றியே யுருகிக்
கிடந்தவப் பொழுதிலே புத்தேண்
மூவரு மறியா முதல்வனு மிறைவன்
மூர்த்தியாய் முழுந்திய வருளாற்
காவியங் கண்ணி பங்கனாய் வந்து
தோன்றினான் கண்ணினாற் காண.

இதன் பொருள்.

| | |
|---|---|
| தேவரும் | —(அப்பொழுது)தேவர்களெல்லோரும் |
| தேவ தேவர்க்குந்தேவாம் | —தேவாதி தேவர்களுக்குந் தேவராகிய |
| திரியம்பகன்றனை | —திரிநேத்திரமுடைய மகாதேவரை |
| தொழுது பூவிலே | —பூமியின்கண்ணே வணங்கி |
| விழுந்துபோற்றி | —பணிந்துபோற்றி |
| உருகிக்கிடந்த | —மனமுருகி யெழுந்திராமற்கிடந்த |
| அப்பொழுதிலே | —அக்காலத்திலே |
| புத்தேண் மூவரும் அறியா | —திரிமூர்த்திகளாலும் அறியக்கூடாத |
| முதல்வனும் இறைவன் | —அதிபராகிய மகாதேவர் |
| முழுந்திய அருளால் | —பரிபூரணமாகிய திருவருளால் |
| கண்ணினாற்காண | —(அத்தேவர்கள்)நேத்திரங்களால் தெரிசிக்கும்படி |
| மூர்த்தியாய் | —மூர்த்தியாகி |
| காவியங்கண்ணி பங்கனாய் | —நீலோற்பலம்போன்ற அழகிய கண்களை யுடைய உமையை ஒருபாகத்திலுடையவராய் |
| வந்துதோன்றினான் | —வந்து ஆவிர்ப்பவித்தருளினார். |

மாலு மவ்விடத்தே திருவொடுங் கூட
மகிழ்தரு மனத்தொடும் வந்தா
னாலுதிக் கிலும்பூ மாரியாய்ப் பொழிய
நாமசங் கீர்த்தன நாத
மேலெடுத் தெங்கும் விளங்குமப் பொழுதில்
விளங்கிய பிரமன்மா லவனுஞ்
சாலுமெய்ப் பத்தி யோடுமர்ச் சித்தார்
சங்கர னம்புயத் தாளில்.

இதன் பொருள்.

| | |
|---|---|
| மாலும் அவ்விடத்தே | —விஷ்ணுவும் அவ்விடத்தில் |
| திருவொடுங்கூட | —திருமகளுடனே |
| மகிழ்தரு மனத்தொடும்வந்தான் | — சந்தோஷ சித்தனாகிவந்தான் |
| நாலுதிக்கிலும் | —நான்குதிக்கினும் |
| பூமாரியாய்ப்பொழிய | —புஷ்பவருஷமாய் வருஷிக்க |
| நாமசங்கீர்த்தன நாதம் | —சிவநாம சங்கீர்த்தனஞ்செய்கின்ற நாதமானது |
| மேலெடுத்தெங்கும் | —அண்டகடாகங்களெங்கும் |
| விளங்குமப்பொழுதில் | —நிறைந்துவிளங்குகின்ற அக்காலத்தில் |
| விளங்கிய பிரமன் மாலவனும் | —ஒளிர்கின்ற பிரம்மதேவரும் விஷ்ணுவும் |
| சாலுமெய்ப் பத்தியோடும் | —மிகுந்த உண்மையான பிரேமையோடும் |
| சங்கரன் அம்புயத்தாளில் | —சங்கரரது திருவடித்தாமரைகளில் |
| அர்ச்சித்தார் | —வணங்கி அருச்சித்தார்கள். (28) |

வேறு.

தெரியில்வடி வேது மொருபொழுதி லாத சிவனுமருண் மேனி திகழவே
யரியதனை நாடி யறியுமத னாலவ் வதிசயமொ டாடி யருளினா
னுரியவனு பூதி யுடையவிழி யாலவ் வுமையுமப ராதி யுணரவே
யருள்செய்தன னீச னரியதிரு மேனி யமரரெதிர் காண வருளினால்.

இதன் பொருள்.

| | |
|---|---|
| தெரியில் வடிவேதும் | —பார்க்குங்கால் பிராகிருதமான ஒருவடிவும் |
| ஒருபொழுதிலாத சிவனும் | —ஒரு பொழுதினுமில்லாத மகாதேவரும் |
| அருள்மேனி திகழவே | —அருள்வடிவம் விளங்கும்படி |
| அரியதனைநாடி | —(ஒருவராலும் அறிதற்கு)அரியதன்னைக்கருதி |
| அறியுமதனால் | —அறியுந் தன்மையினால் |
| அவ்வதிசயமொடு | —அந்தவதிசயத்துடனே |
| ஆடியருளினான் | —திருநடனஞ் செய்தருளினார் |
| உரிய அனுபூதியுடைய | —உரிமையாகிய சுவானுபூதியையுடைய |
| விழியால் | —நேத்திரத்தினால் |
| அவ்வுமையும் | —அந்தப்பார்வதி தேவியும் |
| ஈசன்அரிய திருமேனி | —சிவபிரானது அருமையான திருமேனியை |

அருளினுல் —பிரசாதத்தால்
அயனுதி அமரர் —பிரம்மதேவர் முதலியதேவர்கள்
எதிர்காண —நேரே தரிசிக்கவும்
உணர அருள்செய்தனள் —அறியவும் திருவருள்செய்தாள். (29)

அந்தமறை யீறு தந்தபர ஞான வங்கணத னுலு மன்றியே
யிந்தவிழி யாலு மந்தவிமை யோர்க ளெங்கள்பெரு மானை யெய்தினுர்
சந்தமறை பாடி நின்றனர்க ளாதி சம்புதிரு நாம மாமெழுத்
தைந்துமுறை யாடி யன்பினெடு பூசை யங்குநனி மேவி யண்டர்தாம்.

இதன் பொருள்.

அந்தமறை யீறுதந்த —அந்த உபநிஷதங்கள்தந்த
பரஞான —பிரம்மஞானமாகிய
அங்கண் அதனுலும் அன்றி —அழகியவிழியினுல் பார்ப்பதும் அன்றி
இந்த விழியாலும் —இந்த ஊனக்கண்ணினுலும்
அந்த இமையோர்கள் —அந்தத்தேவர்கள்
எங்கள் பெருமானை —எங்கள் நாயகராகிய மகாதேவரைத்(தரிசித்து)
எய்தினுர் —நெருங்கினவர்களாகி
சந்தமறைபாடி —அழகிய வேதங்களைச்சொல்லி
ஆதிசம்பு திருநாமமாம் —முதல்வராகிய சங்கரருடைய திருநாமமாகிய
எழுத்தைந்து முறையாடி —பஞ்சாட்சரங்களையுஞ் சொல்லித்துதித்து
அன்பினெடு —பக்தியோடு
பூசைஅங்கு நனிமேவி —அவ்விடத்தில் மிகவும் பூசனைசெய்து பொருந்தி
அண்டர்தாம் நின்றனர்கள் —அத்தேவர்கள் நின்ருர்கள். (30)

வேறு.

அமையா வன்பாய் நின்ருேரைப்பார்த் தையம்போய்
நமையே யெய்தப் பெற்றீ ரேயென் றனுதை
னுமையென் னருளால் வந்ததி தேயென் றுரைசெய்தா
னிமையோ ரெல்லா மென்புரு கிக்கொண் டின்புற்ருர்.

இதன் பொருள்.

அமையாவன்பாய் —ஒருநாளும் பொருந்தாத பேரன்போடு
நின்ருேரைப்பார்த்து —நின்ற தேவர்களைக்கடாட்சித்தருளி
நாதன் —நாயகராகிய சம்புவானவர்
ஐயம்போய் —சந்தேகம்நீங்கி

நமையேயெய்தப் பெற்றீரே —நம்மையே அடையப்பெற்றீர்கள்
என்றனன் —என்று திருவாய் மலர்ந்தருளினார்
உமை என்னருளால் —பார்வதிதேவியும் நமதுதிருவருளால்
வந்ததிதே யென்று —இந்தப்பாக்கியம் உங்களுக்கும் கிடைத்ததென்று
உரைசெய்தாள் —திருவாய்மலர்ந்தருளினாள்
இமையோரெல்லாம் —(இந்தவார்த்தையைக்கேட்ட)தேவர்களெல்லாரும்
என்புருகிக்கொண்டு —எலும்புகளெல்லாம் உருகி
இன்புற்றார் —பேரின்பம் அடைந்தார்கள். (31)

வேறு.

தொல்லை வேதமுஞ் சொல்லுதற் கரியவித் தோன்ற
னல்ல னாயின னுமக்கென நாரண னவின்றா
னெல்லை தீர்கரு ணாகர னாகிய விறைவன்
சொல்லு வானருள் கீதையின் பலமெலாந் தொகுத்து.

இதன் பொருள்.

தொல்லை வேதமும் —அநாதியாகிய வேதங்களும்
சொல்லுதற்கரிய இத்தோன்றல்—விளம்பமுடியாத இந்தமகாதேவர்
உமக்கு நல்லனாயினன் என—உங்களுக்கு நல்லவராய் வெளிவந்தருளினரென்று
நாரணனவின்றான் —மகாவிஷ்ணுவானவர் சொன்னார்
எல்லைதீர் கருணாகரனாகிய —அளவில்லாத கிருபாகரராகிய
இறைவன் —மகாதேவர்
அருள்கீதையின் —(தாம்)அருளிய பிரம்மகீதையின்
பலமெலாம் —பலமனைத்தையும்
தொகுத்துச்சொல்லுவான் —சுருக்கித் திருவாய்மலர்ந்தருள்செய்வார். (32)

பரமமா மிந்தக் கீதை படிப்பவன் பாரின் மீதே
திருவினான் முகுந்த னெக்குந் தேசினா விரவி யொக்கு
மருவுமா மெனியே வந்து மாசிலா விஞ்சை யாகு
முருவமா முமையு மென்று மவனுளத் துறையா நிற்கும்.

இதன் பொருள்.

பரமமாமிந்தக்கீதை —சிரேஷ்டமாகிய இந்தப் பிரம்மகீதையை
படிப்பவன் —படிக்கின்றவன்
பாரின்மீதே —புவியின்கண்ணே
திருவினால் முகுந்தனெக்கும் —அழகினால் விஷ்ணுவுக்குச் சமானமாவான்

| | |
|---|---|
| தேசினல் இரவியொக்கும் | —ஒளியினல் சூரியன்போல்வான் |
| எனையேவந்து மருவுமாம் | —(அவன்)என்னைவந்து அடைவான் |
| மாசிலா விஞ்சையாகும் | —குற்றமில்லாத வித்தியாசொரூபியாகிய |
| உருவமாம் உமையும் | —உருவத்தோடுகூடிய பார்வதிதேவியும் |
| என்றும் அவனுளத்து | —எக்காலத்தும் அவனுள்ளத்தின்கண்ணே |
| உறையாநிற்கும் | —விளங்குவாள். (33) |

வேறு.

பிரமனு னீங்கள் பெற்றவிக் கீதை பேசியகீதைகட் கெல்லாம்
பரமமாய் வேதா காரமா தலினுற் படிக்கலா மறையவர் தமக்கே
சுருதியா தலினுற் சூத்திரா திகளாற் சொல்லலா காதென வருளிப்
புரணமா யெல்லாக் காரணமுங் கடந்த போதவின் பத்தினுட் புக்கான்.

இதன் பொருள்.

| | |
|---|---|
| பிரமனுல் நீங்கள்பெற்ற | —பிரம்மதேவரால் உமக்கு உபதேசிக்கப்பட்ட |
| இக்கீதை | —இந்தக் கீதையானது |
| பேசிய கீதைகட்கெல்லாம் | —சொல்லிய மற்றுள்ள கீதைகளனைத்திற்கும் |
| பரமமாய் வேதாகாரம் ஆதலினுல் | —உயர்வாயும் வேதசொரூபமாயும் இருத்தலால் |
| மறையவர்தமக்கே படிக்கலாம் | —வேதியர்கட்கே வாசிக்க உபயோகமாகும் |
| சுருதியாதலினுல் | —வேதமே இக்கீதையாதலால் |
| சூத்திராதிகளாற் சொல்லலாகாதென அருளி | —சூத்திரர் முதலானவர்களால் சொல்லக்கூடாதென்று திருவாய்மலர்ந்தருள்செய்து |
| புரணமாய் | —பரிபூரணமாய் |
| எல்லாக்காரணமுங் கடந்த | —எல்லாக்காரணங்களையுங் கடந்திருக்கின்ற |
| போதவின்பத்தினுட் புக்கான் | —ஞானனந்தத்துள்ளே மறைந்தருளினர். (34) |

மாலுமா துடனே வானவர்க் கருளி
மகிழ்ந்துவை குண்டமே யடைந்தான்
மேலவா னவரை நீத்தயன் பரமன்
மேனியே நோக்கிமீண் டிருந்தான்
ஞாலமால் விட்டு ஞானதற் பராய்
நான்முகன் றன்முனே தண்டம்
போலவே பணிந்து வானவர் தாந்தம்
பொன்னகர் நோக்கியே போந்தார்.

இதன் பொருள்.

வானவர்க்கருளி —தேவர்களுக்கருள்செய்து
மாலுமாதுடனே —விஷ்ணுவும் திருமகளோடு
மகிழ்ந்துவைகுண்டமேயடைந்தான்—மகிழ்வுற்று வைகுண்டத்துக்கேகினர்
மேலவானவரை நீத்தயன் —மேன்மையாகிய தேவர்களைவிடுத்து பிரம்மதேவர்
பரமன்மேனியே —சிவபிரானது திருமேனியையே
நோக்கி —(தெவிட்டாமல்)பார்த்து
மீண்டிருந்தார் —திரும்பியிருந்தார்
வானவர்தாம் ஞாலமால்விட்டு—தேவர்கள் புவிமயக்கத்தைவிட்டு
ஞானதற்பரராய் —ஞானபரராகி
நான்முகன்றன் முனே —பிரம்மதேவர் முன்பாக
தண்டம்போலவே பணிந்து —சாஷ்டங்கமாக வணங்கி
தம் பொன்னகர்நோக்கி —தங்களுடைய தேவலோகத்தைக் கருதி
போந்தார் —போனார்கள். (35)

வேறு.

உத்தம மான கீதை யுரைத்தன னுவகை யோடும்
பத்தியாற் கேட்பார்க் கென்றும் பகர்ந்திடப் படுமீ தென்று
சுத்தவே தியர்க்குச் சொல்லிச் சூதனு ஞானக் கண்ணான்
முத்தியா முருவே நோக்கி மோனமே யடைந் திருந்தான்.

இதன் பொருள்.

உத்தமமான கீதை —உயர்வாகிய பிரம்மகீதையை
உவகையோடும் உரைத்தனன்—சந்தோஷத்துடனே சொன்னேன்
பத்தியாற் கேட்பார்க்கு என்றும்—அன்புடன் கேட்பவர்களுக்கு எக்காலத்தும்
ஈதுபகர்ந்திடப்படும் என்று —இது சொல்லக்கூடுமென்று
சுத்தவேதியர்க்குச்சொல்லி—புனிதராகிய முனிவர்களுக்கெல்லாம் உபதேசித்து
சூதனும் —சூதமகாமுனிவரும்
ஞானக்கண்ணால் —ஞானநேத்திரத்தினல்
முத்தியாம் உருவே —மோட்சமாகிய சொருபத்தையே
நோக்கி —அபரோட்சமாகப்பார்த்து
மோனமே அடைந்திருந்தான் —மௌனத்தையே அடைந்திருந்தார். (36)

இனியனு யெல்லாந் தன்பா லிறைவனின் னருளாற் பெற்ற
முனிவனை முனிவ ரெல்லா முடியுற வணங்கி யேத்தி
நனிமிக நானென் கின்ற பதப்பொரு ணாடி வேறோ
ரனியமில் பிரம மாக வறிந்ததி சயித்திருந்தார்.

இதன் பொருள்.

| | |
|---|---|
| இறைவன் இன்னருளால் | —இனிய பரமசிவப்பிரசாதத்தினால் |
| இனியனாய் | —மேன்மையுடையவராகி |
| எல்லாந் தன்பாற்பெற்ற | —அனைத்துந் தன்னிடத்தேபெற்ற |
| முனிவனை முனிவரெல்லாம் | —சூதமுனிவரை மாதவரனைவரும் |
| முடியுறவணங்கி யேத்தி | —தலையாற்பணிந்து துதித்து |
| நனிமிக நான் என்கின்ற பதப்பொருள் நாடி | மிகவும் அகமென்னும் சொல்லுக்கு லட்சியார்த்தமான சிவத்தைக்கருதி |
| வேறு ஓர் அனியமில் | —வேறொரு பின்னப்பொருளில்லாத |
| பிரமமாக | —பிரம்மசொருபமாகவே |
| அறிந்து அதிசயித்திருந்தார் | —உணர்ந்து அதிசயமடைந்திருந்தார்கள் (37) |

சருவசாஸ்திரார்த்த சங்கிரகமுரைத்த அத்தியாயம் முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

பிரம்மகீதை முற்றுப்பெற்றது.



ஆகத் திருவிருத்தம் 541.



# பிரமகிதை பாட்டு முதற் குறிப்பகராதி.

பிரமகீதை பாட்டு முதற்குறிப்பு

அகராதி முற்றிற்று.



# பிழை திருத்தம்.

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 4 | 3 | பாப | பாவ |
| 15 | 24 | ஏகனுய | ஏகனுய் |
| ,, | 28 | மாதியு | மாதியு |
| 16 | 3 | தாஙகியும் | தாங்கியும் |
| 21 | 5 | தாதலாலு | தாதலாலு |
| 24 | 6 | அவைவககள் | அவைகள் |
| 30 | 22 | ஏதம் | ஏத |
| 37 | 15 | பாமன் | பிரமன் |
| 63 | 16 | கிரமாக | கிரமமாக |
| 72 | 13 | தானுவே | தானுகவே |
| 85 | 22 | மண்ணு | மன்னு |
| 96 | 5 | பிரேரி | பிரேரேபி |
| 101 | 36 | குருவும் | குருவம் |
| 106 | 5 | இல்லை | அல்ல |
| 119 | 1 | கேனோபப | கேனோப |
| 121 | 4 | பாரமாத்திக | பாரமார்த்திக |
| 123 | 22 | அனுவி | அனுபவி |
| 124 | 8 | பேதமும்பே | பேதமுமபே |
| 147 | 3 | வோண்ணு | வொண்ணு |
| ,, | 11 | பெரரு | பொரு |
| 148 | 30 | பரமாத்துவ | பரமாத்துவித |
| 158 | 18 | மன்னப் | மனனப் |
| ,, | 19 | மன்னம் | மனனம் |
| 164 | 7 | காரிசத்தை | காரியசத்தை |
| 187 | 18 | பிறகக | பிறக்க |
| 194 | 14 | போக | போகா |
| 196 | 3 | போகா | போகா |
| 204 | 19 | தூஷன | தூஷண |
| 211 | 31 | மில்வா | மில்லா |
| 212 | 7 | லொத்தவ் | லொத்தொவ் |
| 215 | 8 | முடைவர் | முடையவர் |
| 216 | 19 | பிரத | பிரதான |
| 218 | 7 | சத்துவ | தத்துவ |
| 221 | 3 | யன்று | யென்று |
| 230 | 14 | இவ்வண்ண | இவ்வண |
| 231 | 28 | வரணெழு | வரனெழு |
| 235 | 3 | சிலர் ஓடினார்கள் | சிலவர் ஓடினார் |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 243 | 6 | அந்துப் | அந்தப் |
| 244 | 8 | ொால்லு | சொல்லு |
| 248 | 12 | உன்ள | உள்ள |
| 252 | 28 | கமாகம | கமனாகமன |
| 262 | 22 | சுழிக்கி | சுழுக்கி |
| 264 | 10 | ணிவனொர் | ணிவனோர் |
| 266 | 15 | ணற்றன் | ணன்றன் |
| 267 | 30 | கின்றானும் | கின்றான்றானும் |
| 270 | 11 | மெனமே | மெனவே |
| ,, | 14 | பிறவரர் | பிறவார் |
| ,, | 31 | யுளவொளி | யுளதொளி |
| 272 | 27 | வனுபமே | வனுபவமே |
| 273 | 20 | எரிகதிர் | எறிகதிர் |
| 277 | 17 | அறியப்பட | அறியப்பட் |
| 279 | 24 | தத்தவந் | தத்துவந் |
| ,, | 28 | ருவு | ருருவு |
| 286 | 19 | உப | உபா |
| 288 | 32 | காலு | காலு |
| 291 | 28 | முதவிய | முதவிய |
| 292 | 22 | புராணம் | புராணை |
| 308 | 26 | இலங்கியா | இலங்கிய |
| 311 | 29 | கொடுக்ககும் | கொடுக்கும் |
| 320 | 34 | பிராணை | பிராணை |
| 325 | 5 | சொரூனானை | சொரூபனானை |
| ,, | 28 | புசிக்கன் | புசிக்கின் |
| 329 | 24 | பிருப்ப | பிருப்ப |
| 338 | 24 | னல்லெனப் | னல்லனெப் |
| 342 | 3 | வழியும் | வறியும் |
| 350 | 33 | கமாகமங்கள் | கமனாகமனங்கள் |
| 351 | 11 | ஷை | ஷை |
| 360 | 12 | பிரமாவினது வாகின்ற | பிரமாவினது |
| 365 | 6 | சொரூபமே | சொரூபமே |
| ,, | 8 | ஞேயமாக | ஞேயமாக |
| 376 | 4 | கான | காணை |
| 389 | 4 | மகத்துவம் | மகதத்துவம் |
| ,, | 7 | ,, | ,, |
| 399 | 14 | நிறை | நிரை |